உ

சிவமயம்.

அருணந்தி சிவாசாரியர் அருளிச்செய்த

# சிவஞானசித்தியார் சுபக்கம்

மூலமும்

---


கொழும்பு

மு. திருவிளங்கம் அவர்கள்


இயற்றிய

பதவுரை குறிப்புரை முதலியனவும்.




யாழ்ப்பாணம், கொக்குவில்

சோதிடப்பிரகாச யந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.





1925.


விலை ரூபா ஐந்து.

ஆருறு தத்துவமும், ஆணவமும், வல்வினையும்
நீருக முத்தி நிலை நிற்போற்குப்—பேருகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
யோர்விருத்தப் பாதி போதும்.

# PREFACE.

---

## SIVAGNANA SIDDHIYAR OF ARUL NANDI SIVACHARIYA.

Sivagnana Siddhiyar is the second and the most elaborate of the fourteen Siddhanta Shastras. ITS reputed author, Arul Nandi Sivachariya or Sakalagama Pandithar was the disciple of the great Meikanda Deva and the second of the linear instructors or Santana Achariyas of the Saiva Church. Siddhiyar stands unrivalled as the most learned and lucid contribution in the field of Saiva Siddhanta and Umapathy Sivachariya includes this work among the six best books which Tamils could be proud of, the other five being Tirukkural, Tiruvachakam Tolkapiyam and Perimalayan's commentary and Periapuranam. Sivagnana Siddhiyar is composed of two main parts viz: Para-paksham and Supaksham. The first part deals entirely with the pros and cons of the arguments of other schools of thought. The second part establishes the par exellence of the Siddhanta philosophy and is more widely read than the first. There are six learned commentaries for this part but they are all too high for an ordinary present-day student. A commentary meeting the modern requirements has therefore been a long felt desideratum. To supply this want, the present commentary which is now placed before the public was written by the late lamented Murugesa Mudaliyar Tiruvilangam, my revered father. The first two parts were issued prior to his death on the 22nd of February 1922. The third, fourth and fifth parts are now published from the manuscripts left by him and under instructions given by him prior to his death. My most sincere thanks are due to Pandit K. Chidambaranathan, Proctor and Notary of Ratnapura for his kindness in going through the manuscripts and for his unflinching cooperation in getting these parts through the press.

I must also thank Mr. R. S. Ragunatha Iyer of Sothida Prakasa Press, Jaffna for the pains he has taken in the printing of this work.

I have in conclusion to bespeak the indulgence of the public for the very many imperfections that may be noticed in the work due to the death of the commentator and trust that it may yet be found to have attained in a moderate degree the object which the commentator had in view in undertaking it viz: that it may help all who desire to be helped along this certainly difficult road

May the Grace of Arul Nandi descend on all!

*"Svarna" Campbell Place,*
Colombo, 13th January 1925. } *H. T. RAMACHANDRA.*

சிவமயம்

சைவசித்தாந்த மகோத்தாரணரும்

சைவபோதம், திருவட்பயனுரை ஆதிய நூலாசிரியரும்

யாழ்ப்பாணம் திருநெல்வேலி

பரமேசுவரவித்தியாலய உதவித்தலைமையாசிரியருமாகிய

திரு. சு. சிவபாதசுந்தரம்பிள்ளை பீ. ஏ.

அவர்கள் எழுதிய

# முன்னுரை.

---

சிவபெருமானது திருவருளை நுகர்ந்து வீட்டின்பத்தைப் பெறுதற் குரிமையுடையனவாகிய உயிர்கள் பலவேறுவகைப்பட்ட நிலையினவாம். இந்த நிலைவேற்றுமை ஆணவப்பற்றினளவினதாம். ஒவ்வொரு வகையி லுள்ள உயிர்களும் தம்முள் வேற்றுமையுறுதல் கூறாதேயமையும். ஆணவப் பற்றின் இயல்பான மென்மைவன்மையினால் வீடுற்றவை வீடுறுபவையென அவை யிருபாலானதுமன்றி, வீடுறுபவையுமின்னாளில் நிலைவேறுபாடுள்ள னவாய் வாழும். இவற்றுள் ஆராயுமாற்றல் மிகவுடைய மக்கட்பிறவி முத லியவற்றைப் பெற்ற உயிர்கள் ஊணுறக்கமுதலிய நான்கினோடு நில்லாது தம்மையுயர்த்துவதிலும் நாட்டமுடைமையின், அவ்வேற்றத்திற்குத் துணை யாகச் சமயங்களெண்ணிலாதன தோன்றின. இவை அவ்வவ்வுயிர்களின் காட்சியெல்லையினளவினவாம். ஒருவனது காட்சியெல்லையெதுவோ அதுவேயவனது சமயமாவது. மனிதர்முதலிய பிறவிகள் படைப்புகள் யாவற்றிலுமுண்மையாலும் படைப்புத்தொடர்புக்குத் தொடக்கமின்மை யாலுஞ் சமயங்கள் தொடக்கமில்லாதன எனத்தகும்.

எண்ணிலாதவிச்சமயங்கள் இருபத்தைந்தாக வகுக்கப்படும். அவை யாவன:—புறப்புறச்சமயம் ஆறு, புறச்சமயம் ஆறு, அகப்புறச்சமயம் ஆறு, அகச்சமயம் ஆறு, சுத்தாத்துவித சைவசித்தாந்தம் ஒன்று. உலகாயதன் வாயுதத்துவத்தையும், பாஞ்சராத்திரன் மூலப்பிரகிருதியையும், மாயாவாதி புருடதத்துவத்தையுங் காட்சியெல்லையாகவுடையர். பிறருமிவ்வாறே. சைவ சித்தாந்தசமயம் முப்பத்தாறுதத்துவங்களையுங் கீழ்ப்பொருள்களாகக்காட்டி மெய்ப்பொருளாகிய சிவத்தோடு உயிர்களைச் சேர்ப்பது. புறப்புறச்சமயம், புறச்சமயம் முதலியன சைவசமயமாகிய பேராற்றின் கிளையாறுகளாக

அவற்றிலுள்ள நீரெல்லாம் இதனைச்சேர்ந்தே கடலாகியசிவத்தையடையுமா தலால், உயிர்கள் மெய்யறிவு வளர வளர,

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

இச்சமயங்கள் சைவசமயத்தின் படிகளாதலின் அதைச்சேர்ந்தனவே யாம். ஆயினும் அவைகள் அவ்வந்நிலைக்கேற்ற தொடர்புண்மைகளன்றி நிலையான உண்மைகளாகா. நிலையான இறுதியுண்மைகூறி உயிரைச் சிவத்தோடு சேர்க்கும் வழியையுந் துணையையுங் குறைவறவுடையது சித்தாந்தசைவமே.

சித்தாந்தசைவம் இறை உயிர் வினை மாயை இருள் ஆகிய ஐந்துமே நிலையான பொருள்களென்றும், இவற்றுள் உயிர்க்கு நிலையான பேறு சிவப் பேறொன்றேயென்றுங் கூறும். இதற்கு முதனூல்கள் வேதமுஞ் சிவாகமு மாம். இவைகள் சிவபெருமானிடத்தே தோன்றிப் பரம்பரையாக அபரமுத் தர், பதமுத்தர், தேவர், முனிவர், மனிதராமேனோர்க்கு உணர்த்தப்பட்டு வந் தன. காண்டல்கருதற்கெட்டா வாய்மைகளின் நிறைவும், மலைநிகர் பொரு ளெல்லாம தினைபுரை மொழியிலடங்கலும், இவை இறைவனது திருவருண் மொழியெனக்காட்டும். ஆகமம இறைவனூலென்பதை வியாசபாரதம் முத லியனவுங் கூறும். *

ஆகமமுறைப்படி கட்டப்பட்ட கோயில்களின் பழைமையும் அதன் முதுமையைக் குறிக்கும். வேதம் கிரியாகாண்டம் உபாசனாகாண்டம் ஞான காண்டம் என வகுக்கப்படுவதுபோல ஆகமம் தந்திரகலை மந்திரகலை உப தேசகலையெனக் கூறுபடும். இவைகள் முறையே சரியை கிரியைகளையும் யோகத்தையும் ஞானத்தையுங் கூறுவன. இவற்றுட் சிவபுண்ணியங்கள் வேறுபடினும் ஞானகாண்டமும் உபதேசகலையும் வாய்மைகளையே கூறுத லால் எவ்வுலகினும் எந்நாளிலும் ஒரே தன்மையன.

சிவாகமங்களுள் ஒன்றாகிய இரௌரவ ஆகமத்தின் (எங-வது) பாச விமோசன படலத்தில் கஉ-வது அத்தியாயமாகிய சிவஞானபோதமானது பன்னிருசூத்திரங்களிற் சித்தாந்தசைவவுண்மைகளனைத்தையுமடக்கியது. முதனூலைத் தமிழ்மக்கட்கூட்டுமாறு மெய்கண்டதேவநாயனார் இதனை மொழிபெயர்த்து விளக்கிச் சிவஞானபோதமென்னுந் தமிழ்நூலையியற்றி

* காமிகாத்யாகமாநாம்து யதாதேவோ மஹேச்வர|
அஷ்டாதசபுராணாநாம் கர்த்தா சத்யவதீசுத||.

யருளினர். இவரது மாணக்கருஞ் சகலாகமபண்டிதருமாகிய அருணந்தி சிவாசாரியர் சிவஞானபோதப் பொருளைப் பன்னிரண்டு சூத்திரத்தில் ௩௨அ- செய்யுட்களால் விரித்தருளினர். இது சிவஞானத்தைச் சித்திக்கச் செய்தலாற் சிவஞானசித்தியாரெனப்பட்டது. இதற்குறுப்பாகப் புறச் சமயமறுப்பாகிய பரபக்கத்தையும் அளவையிலக்கணத்தையுஞ் சேர்த்தருளி னர். பன்னிரு சூத்திரங்களுள் முதலாறும் உயிர்க்குவேண்டிய மெய்யறி வையும் மற்றைய ஆறும் அதற்கு வேண்டிய செயல்பேறுகளையுங் கூறும். இவை முறையே பொதுவியல் சிறப்பியல் எனப்படும். முதல் மூன்று சூத் திரங்களும் முறையே இறை, கட்டு, உயிராகிய முப்பொருள்களின் உண்மை தன்மைகளையும், மற்றைய மூன்றும் உயிர்களின் நிலைதொழில்களையும் அவற்றை இறைவன் வருவிக்கு முறைமையையும், முப்பொருட்டொடர்பு களையும், முறையே கூறும். இரண்டாங்கூற்றின் முதல் மூன்றும் (எ—க) உயிர் இறையடிபெறுமருமையையும், வழியாகிய தீக்ஷைநாற்பாதங்களையும், ஞானநிலையினர் ஒழுக்கத்தையும், மற்றைய மூன்றும உயிரினது தற் கேட்டையும், சிவமாகி வீடுற்றோர் நிலையையும், அவரது வாழ்வையும், முறையே உணர்த்தும். இந்நூலின் கருத்தைச் சுருக்கிக் காட்டுதும்.

உலகிலுள்ள பொருள்கள் தோற்றி நின்று மாய்ந்து மாறுகின்றன. உல கங்களுமிவ்வாறே. இம்மாற்றத்துக்குக் காரணமாகிய பொருள் உலகங் களின் வேறாதல் வேண்டும். அப்பொருள் கடவுளே. உலகிற்கு முதற் கார ணம் மாயை; அணு காரியப்பொருளாதலிற் காரணமாகாது. கடவுள் உருபி யல்லர், அருபியல்லர், உருபாருபியுமல்லர். அவர் இப்பண்புக்கப்பாற்பட் டவர். திருவருள் ஞானத்தை அவருக்கு வடிவமாகக் கொள்வதுமுண்டு. அவ ரதுமுபற்சியொன்றின்றிச் சந்நிதியளவில் உலகின்றோற்றவொடுக்கங்கள் நடைபெறும். அவர் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளலென் னும் ஐந்தொழில்களையும் உயிரின் மலமகற்றித் தாளுக்கி மலரடிக்கீழ் வைத் தற்காகச் செய்தருளுவர். பெயர்கள் பல உளவேனும் கடவுள் ஒருவரே. (சூ-க.)

இறைவனும் உயிரும் ஒன்றோ இரண்டோ என்னும் அரிய வினவுக்கு ஒன்றுமல்ல இரண்டுமெல்ல என்றெதிர்மறையால் விடையளிப்ப. பொருளா லேனும் கருத்தாலேனும் பிரிக்கப்படத்தக்க பொருள்களையே யிரண்டெனல் பொருந்தும். இறையும் உயிரும் கருத்திற்கெட்டாதனவாதலின் அவர் களின் தொடர்பும் எட்டாததே. ஆதலால் இரண்டென்பதை மறுப்பர். ஒன் றாயின் இரண்டனுள் ஒன்று இல்பொருளாதல்வேண்டும், ஆதலின் அவை கள் ஒன்றென்பதையும் மறுப்பர். இதனுண்மை சிவஞானத்தால்மாத்திரம் உணரத்தக்கது. இவ்வருமை விளங்காதார் ஒன்றெனவும் இரண்டெனவும் மலைவர்.

இன்பதுன்பத்துக்கு வேர் பழைய வினை. வினை நல்வினை தீவினை யென இருவகைத்து. உயிருக்கு நன்மையாவது நல்வினை, தீமையாவது தீவினை. இவையன்றி, உயிர்களினின்று வினை செய்விக்கும் நிலையானகட்

டும் வினையாம். நல்வினைப்பயன் இன்பம். தீவினைப்பயன் துன்பம். வினைப் பயனைக் கடவுள் ஊட்டுவர். அதனால் வினைகள் தீர்வதோடு இருளேயுங் குன்றும். வினைகளுட் சிவநல்வினை மெய்யறிவையூட்டலான் மேலாயது. கடவுளல்லாதார் வணங்கப்படின் அவ்வினைக்குரிய பயனையும் ஏனைய வினைகளின் பயனைப்போலக் கடவுள்கொடுப்பர். நல்வினை தீவினைகள் செயலாலன்றி நோக்கத்தாலும் அளவிடப்படும். சண்டேசர் செய்த கொலை நல்வினையாயதும், தக்கன் வேள்வி தீவினையாயதும் காண்க.

மாயை சுத்தமாயை அசுத்தமாயையென இருகூறும். இவற்றிலிருந்து உயிர்களின் மூலவை உடல்களும் வாழ்விற்குரிய உலகங்களும் நுகரப்படும் பொருள்களுந் தோன்றும். உடம்புகளிலுள்ள பொறி புத்தி முதலியவற்றால் அறிவும் வினைப்பயனுகர்ச்சியும், கர்மேந்திரியம் முதலியவற்றால் தொழிலும் ஆவன. மாயை இருள்வலியைக் கெடுத்தற்குத் துணைப்பொருள். (செ-௧௬௯.)

சுத்தமாயையிலிருந்து சிவதத்துவங்களும் (௫) அசுத்தமாயையிலிருந்து வித்தியாதத்துவங்களும் (௭) ஆன்மதத்துவங்களும் (௨௪) தோன்றும். சிவதத்துவங்களில் திருவருட்சத்தியின் இச்சா ஞானக் கிரியாசத்திகள்உள்ளன. வித்தியாதத்துவங்கள் உயிரின் தொழிலறிவு வேண்டல்களைச் சிவதத்துவங்களின் றுணைகொண்டு விளக்குவன. ஆத்துமதத்துவங்களாவன:—அந்தக்கரணம் (௪) ஞானேந்திரியம் (௫) கர்மேந்திரியம் (௫) தன்மாத்திரை (௫) பூதங்கள் (௫). அந்தக்கரணம் (=உட்கருவி) மனம் புத்தி முதலியன. ஞானேந்திரியங்கள் வெளிக்கருவிகளாகிய கண் காது முதலியவற்றால் வருவனவற்றை உயிருக்குக்காட்டுவன. கர்மேந்திரியங்கள் வெளியுடலின் பகுதிகளைக்கொண்டு தொழில் செய்விப்பன. தன்மாத்திரைகள் உள்ளுடம்புக்கும், பூதங்கள் வெளியுடம்புக்கும் முதற்காரணப்பகுதிகள். * இருள் ஒரே பொருள்; அளவில்லாத வன்மையுடையது, மெய்யறிவைத் தடுத்துத் தன்னையும் பிறபொருள்களையும் மறைப்பது. அது என்றுமுளதாதலின் அழியாது. நிலக்கவர்ச்சியுள்ளதாகவும் பறவைகள் மேற்செல்வதுபோல, இருளுளதாகவும் மெய்யறிவு அதன்வலியைத் தடுத்து உயிரையுயர்த்திவிடும்.

மூலவைக் கட்டின் றன்மையையுங் கூறிய ஆக்கியோர் இவற்றினின்றும் நீங்க முயற்சிசெய்வதெங்கடனெனவும் இம்முயற்சி செய்யாதார்

---

* மனமும் பூதங்களுந் தோற்றவகையால் ஓரினப் பொருள்களே. வெளிப்பொருள்கள் வெளிக்கருவிகளிற் றொடர்புற்று மூளையையடைந்து ஞானேந்திரியத்தாற் பெறப்பட்டு மனம் புத்திகளால் நிச்சயிக்கப்பட, வித்தியாதத்துவம் உயிரினறிவை விளக்க, உயிர் அப்பொருள்களை அறியும். மேனாட்டு அறிவுநூலாளர் இவ்வுண்மையை யுணராது மனதுக்கும் பூதங்களுக்குமுள்ள தொடர்பை ஈராயிரம் ஆண்டுகளாக ஆராய்ச்சிசெய்து இன்றும் மயங்குவர். பொருள்களை உயிர் அறியும் வகையும் அவர்க்கின்னும் புலப்பட்டிலது.

பிணைத்தைபொப்பாரெனவும், செய்தோர் வாஞடாாலும் வணங்கப்படுவ ரெனவுந் தெருட்டிச் சூத்திரத்தைமுடித்தனர். (சூ-உ.)

உயிரெனப்படுவதுடம்பின்வேறாய், அறிவு தொழில் வேண்டலாகிய வன்மையும், மலமறைப்பும், விழிப்பு கனு உறக்கம் ஒடுக்கம் ஒடுக்கமிகை என்னும் ஐந்து நிலைகளும் உடைய அறிவுப்பொருளாம். (சூ-ங.)

சிவதத்துவங்கள் வித்தியாதத்துவங்களை இயக்க, இவ்விருவகைத்தத்து வமும் மனம் முதலியவற்றை ஏவ, உயிர் அறிவு தொழில் வேண்டல்களை உறும். (சூ-ச).

மாயைப்பொருள்கள் உயிரை அறியா. உயிர்கள் இறையை அறியா இறை உயிரின் நிலைக்கேற்ப அறிவைக்கொடுப்பர். ஐந்தொழில் திருவரு ளின் சந்நிதியிலாவன (சூ-ரு.)

இறை சிவஞானத்தாலறியப்படுவர். (சூ-சு.)

உயிர் இறையை அதனுலறியத்தக்கது; ஆதலால் அதனை அறிய முய லல் வேண்டும். (சூ-எ.)

அதற்குரிய முயற்சியால் உயிர் நல்வழியுறின்வேடர்சேரியிற் பிறந்த வேந்தர்மகவு தன் குடிப்பெருமையையும் தந்தையினுயர்வையுமுணராது வேடனென நினைத்து வேடரதேவல்செய்துலையுநாளில் வேந்தன் புதல் வனை வேடரிற்பிரித்து இளவரசுப்பட்டஞ் சூட்டியதுபோல, சிவபெருமான் குருவடிவினின்று தீக்ஷைசெய்து மும்மல வைம்புலவேடரிற்பிரித்துச் சிவ மாக்கிவைப்பர். சமயதீக்கைபெற்ருேர் சரியைக்கும் விசேடதீக்கைபெற்ருேர் கிரியாயோகங்களுக்கும் நிர்வாணதீக்கைபெற்ருேர் ஞானத்துக்குமுரி யர். (சூ-அ.)

உலக இன்பங்கள் பொய்யெனவும் இறைவனது திருவருளே மெய் யெனவுங்கண்டு தன்னையும் மறந்து தீக்ஷையிற்பெற்ற திருவைந்தெழுத்தை முறைப்படி உச்சரிக்கச் சிவஞானப்பேறுண்டாம். மனம் முதலியவற்ருற் பிரபஞ்சத்தையறிதல் பாசஞானம். சுத்தவித்தையால் உயிரையறிதல் பசு ஞானம். திருவருளினறிவால் இறைவனை அறிதல் சிவஞானம். (சூ-கூ.)

சிவஞானத்தைப்பெற்ருேன் தன்செயலின்றிச் சிவன்செயலாக வினை செய்யும்போது வினைப்பயன் அவனையடையாது. (சூ-க0.)

அவன் பரமுத்தியிலே சிவாநந்தத்தை நுகர்ந்து நிற்பன். எங்கும் சிவத் தைக் காண்பனன்றிப் பிற பொருள்களைக் காணுன். வினை அவனை ஒருகால மும் பற்ருது. இறையும் உயிரும் அறிவுப்பொருளாயின் அவற்றுள் வேற் றுமையெவையெனின், சிவமானது அருள், பிறப்பிறப்பு, சிற்றின்பம் பேரின்பம் அறிவு ஆகிய இவற்றைக்கொடுப்பது. உயிர் இவற்றை எற்பது புத்தி தத்துவம் அறியத்தக்கதாயினும் அது உயிராகாதவாறு உயிரும் சிவ மாகாது. (சூ-கக.)

சீவன்முத்தர்கள் கோயில்களிலும் மெய்யடியாரோடும் பொழுதுபோக்கி ஏனைய உயிர்களை நல்வழிப்படுத்துவர். ஆதலால் அவர்க்குத் தொண்டு செய்து அவரால் இறையருளைப் பெறுதல் எங்கடனாம். (சூ. ௧௨.)

இவ்வரிய நூற்கு முன்னாளில் உரைசெய்தோர் மறைஞானதேசிகர் சிவாக்கிரயோகியர் ஞானப்பிரகாசர் நிரம்பவழகியார் சிவஞானயோகியர் சுப்பிரமணியதேசிகர் ஆவர். மறைஞானதேசிகர் திருஞானசம்பந்தசுவாமிகளின் அடியார்கள் அறுபத்துநான்மருளொருவராகிய ஆளவந்தவள்ளலின் பரம்பரையிலுள்ளவர். வேறு நூல்களுக்கு முறையும் பரமததிமிரபானு என்னும் நூலுமியற்றியவர். சிவாக்கிரயோகியர் நிகம ஆகம சைவபரிபாலன சதாசிவயோகீந்தரரின் மாணாக்கர். சூரியனார்கோயில் மடத்து முதற்றலைவர். சிவஞானபோதத்திற்குப் பன்னீராயிரம் சுலோகங்கள் உரையாக எழுதியவர். சைவபரிபாஷை முதலிய பன்னிரு நூல்கள் செய்தவர். இதற்குச் செய்தவுரை அகலமிக்கதாய் ஆகமமேற்கோணிறைந்துள்ளது. ஞானப்பிரகாசர் யாழ்ப்பாணத்திலே திருநெல்வேலியிலே தோன்றியவர். திருவண்ணாமலையில் ஆகமநூல்களையோதியுணர்ந்தவர். பௌஷ்கராகமவிருத்தி சிவஞானபோதவிருத்தி சித்தாந்தசிகாமணி பிரமாணதீபிகை பிரசாததீபிகை அஞ்ஞானவிவேசனம் சிவயோகசாரம் சிவயோகரத்நம் முதலிய நூல்களை வடமொழியிலியற்றியவர். சிதம்பரத்திலேயுள்ள ஞானப்பிரகாசக்குளத்தைக் கட்டுவித்தவர். சிவஞானயோகியர் திருவாவடுதுறையாதீனத்தைச் சேர்ந்தவர். சிவஞானபோதத்திற்குப் பேருரையுஞ் சிற்றுரையும் எழுதியவர். இலக்கணவிளக்கச்சூறாவளி முதலிய இலக்கணநூல்களும், காஞ்சிப்புராண முதற்காண்டம் முதலிய இலக்கியங்களும் வேறு பிறநூல்களும் இயற்றியவர். சுப்பிரமணியதேசிகர் திருவாவடுதுறை ஆதீனத் தலைவர்களுள் ஒருவர். இவர் சிவஞானயோகியரது பொழிப்புரையைப் பதவுரையாக்கியவர்.

பழையவுரைகளைக் கற்றற்கு இலக்கியவிலக்கணவளவைநூலுணர்வும் நுண்ணறிவும் வேண்டப்படலால் இந்நாட்களிற் பெரிதும் பயன்படாமை கண்டு எளிதான நடையுள்ள ஓருரை இன்றியமையாதெனவுணர்ந்து கொழும்புநகர் திருவிளங்கதேசிகர் இவ்வுரையை எழுதத்தொடங்கினர். இவர் தமிழ் ஆங்கிலம் ஆகிய இரண்டும் நன்குகற்றுக் கட்டளைச்சட்ட அறிவிலும் தீரம்போனவர். சிவப்பற்றிலும் உள்ளத்தூய்மையிலும் பிறர்நலவிருப்பிலும் சிறந்தவராய்ச் சமயநூல்கட்குரையெழுதித் தருவதே தமது முழுமுயற்சியாகவும் சிவதொண்டாகவும் பின்னாட்களில் மேற்கொண்டவர். திருப்புகழ்த்திரட்டுக்கும் கந்தரலங்காரத்துக்கும் சிவப்பிரகாசத்துக்கும் அரிய உரை இயற்றியவர்.

இந்நூற்கெழுதிய உரை ஐவருரையின் திரட்டாதலுமன்றிப் பிறநூல்களிலுள்ள அரிய கருத்துகளைச் சேர்த்துப் பொருளை அங்கமுறைப்படுத்தி

வகுத்துக்காட்டுவது. சூத்திரங்கள் அதிகரணங்களாக* வகுக்கப்பட்டு அதிகரணங்கள் பிரிவுகளாக வகுக்கப்பட்டன. ஒவ்வோரதிகரணப்பகுதியின் முடக்கத்திலுள்ள வகைகளை வாசிக்கின் இந்நூலின் பொருள் ஒருவாறு புலப்படும். செய்யுள்களுக்குப் பதவுரை குறிப்புரை பெரும்பாலும் அகல மிக்கது. சமயவறிவுக்கின்றியமையா வாய்மைகள்யாவும் இதிற் காணலாம். பலகிரியைகள் விளக்கப்பட்டுள்ளன. பிறர் கொள்கையும் அவற்றின் மறுப்பும் அவ்வவ்விடங்களில் தெளிவாகநிலவும். அளவையிலக்கணமும் உரையும் அளவைநூலாகத் தனியே வெளியிடத்தக்கவை. அறுவகைச்சமயங்களின் கொள்கைகளும் (உ) †, வீட்டிடங்களும் (கசுரு, உசுச), தீக்கைவகையும் (உடுடு), கலைகள் புராணங்களின் வகையும் (உசுரு), நாற்பாதத்தன்மையும் (உசுசு. உஎ0), சிவபூசையின் அகலமும் (உஎஉ, ௩0க), ஐந்தெழுத்து சந்தியாவந்தனங்களின் முறையும் விளக்கமும் (உகக) வேண்டிய அளவு விரிவாகக்காட்டப்பட்டன. தத்துவம் தீக்கை அத்துவா ஆகிய மூன்றும் படத்திலும் விளக்கப்பட்டன. (கசுரு, உடுஎ, உசுஉ), உரை நூட்பங்களுள் அசுத்தமாயை சுத்தமாயையோடு தோன்றியதாகப் பொருள் கூறப்பட்டது. (௩க) உஅஎ-ம்செய்யுளில் உம்மையை எதிர்மறையாகக்கொண்டது சாலஇனியது. அதைச் சிறப்பும்மையாகக் கொள்வோர் சிலர் பேரறிவாளரிற் கூடாவொழுக்கத்தை ஏற்றித் தம்மை யளற்றில் விழுத்துவர். இச்செய்யுட்கிவ்வுரை எழுதலே இந்நூற்குரை செய்தற்குப் போதிய ஏதுவெலென்று தேசிகர்கூறியுள்ளார். உரையானது சென்று தேய்ந்திறுது இளம்பிறை நிறைநிலாவாகியவாறு இறுதிவரையும் வளர்ந்து வந்தது. தேசிகர் சித்தாந்தசைவத்துக்குச் செய்த பேருழியம் எவ்விடத்து மெந்நாளும் பாராட்டத்தக்கது.

"நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க"

யாழ்ப்பாணம், புலோலி
இரத்தாக்ஷிஞு ஆவணிமீ கஎஉ

சு. சிவபாதசுந்தரம்.

---

* தன்னாற் கூறப்படும் பொருளும் அதன்கண் ஐயப்பாடும் அதற்குப் பிறர் கூறும் பக்கமும் அதனை மறுத்துக்கூறுஞ் சித்தாந்ததுணிபும், இயைபும், என்னும் இவற்றுக்கு நிலைக்களம் ஈண்டு அதிகரணமெனப்படும். (சிவஞானபாடியம்)

† இலக்கங்கள் செய்யுளைக்குறிப்பன.

சிவமயம்.

# சூத்திர அதிகரண அட்டவணை.

## உரையிற்கண்ட நூல்களின் அட்டவணை.

சிவஞானசித்தியார்பரபக்கம் (சி-சி-பர)
சிவஞானசித்தியாருரை, சிவஞானமுனிவர் (சிவஞா-சிவஞான)
சிவஞானசித்தியாருரை, சிவாக்கிரயோகியர் (சிவாக்-சிவாக்கிர)
சிவஞானசித்தியாருரை, சுப்பிரமணியதேசிகர் (சுப்பிர)
சிவஞானசித்தியாருரை, ஞானப்பிரகாசர் (ஞானப்-ஞானப்பிர)
சிவஞானசித்தியாருரை, நிரம்பவழகியார் (நிரம்ப)
சிவஞானசித்தியாருரை, மறைஞானதேசிகர் (மறை-மறைஞா)
சிவஞானசித்தியாருரை, மொழிபெயர்ப்பு நல்லசாமிப்பிள்ளை (நல்ல- சித்-மொழி)
சிவஞானபோதமாபாடியம், சுவாமிநாதபண்டிதர்பதிப்பு (சி-போ-பா)
சிவஞானபோத மாபாடியம், விசுவநாதபிள்ளை பதிப்பு (சி-ஞா-பா)
சிவஞானபோதம் (சி-போ)
சிவஞானபோதம் பாண்டிப்பெருமாள்விருத்தி (சி-போ-பாண்)
சிவதருமோத்தரம் (சிவதரு)
சிவப்பிரகாசம், புத்துரை (சிவப்பிர-சிவப்)
சைவசமயநெறி (சைவசம)
சைவவினாவிடை, ஆறுமுகநாவலர் உ-ம் பாகம் (சைவவினு)
தத்துவப்பிரகாசம் (தத்)
தத்துவப்பிரகாசம், கந்தப்பிள்ளைஉரை (தத்-உரை)
தமிழ்ச்சொல்லகராதி, கதிரைவேற்பிள்ளை (த-சொ-அகராதி)
தாயுமானவர்பாடல் (தாயுமா)
திருக்குறள் (குறள்)
திருமந்திரம் (திருமந்)
திருக்கோவையார் (திருக்)
திருவாசகம் (திருவா)
திருவாதவூரர்புராணம் (திருவாத)
　　ஷை வேற்பிள்ளையுரை (திருவாத-உரை)
தேவாரம் திருஞானசம்பந்த மூர்த்திநாயனர் (தேவா-திருஞா)
தேவாரம்திருநாவுக்கரசுநாயனர் (தேவா-திருநா)
தேவாரம் சுந்தரமூர்த்திநாயனர் (தேவா-சுந்த)
பட்டினத்தார் பாடல் (பட்டின)
பௌஷ்கராகமம் (பௌஷ்)
மண்டோக்கிய உபநிடதம் (மண்டோக்கிய)
மிருகேந்திராகமம் (மிருகேந்திரா).

## சூத்திர அதிகரண அட்டவணை.



---

## உரையிற்கண்ட நூல்களின் அட்டவணை.

---

உ

சிவமயம்.

# சிவஞானசித்தியார் சுபக்கம்.

## பாயிரம்.

விஷயங்கள்:—

1. விநாயகவணக்கம் (1)
2. பரசிவவணக்கம் (2)
3. நூலின்வழி (3)
4. நுதலியபொருளும் கேட்போரும் பயனும் (4)
5. அவையடக்கம் (5—6)

### 1. விநாயகவணக்கம்.

1. ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த
 னல்வாயைங் கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
 றருமொருவா ரணத்தின் றாள்கள்
உருகோட்டன் பொடும் வணங்கி யோவாதே
 யிரவுபக லுணர்வோர் சிந்தைத்
திருகோட்டு மயன்றிருமால் செல்வமுமொன்
 றோவென்னச் செய்யுந் தேவே.

(இதன்பொருள்). ஆறு - கங்கையையும்,—கோட்டம் தருபிறை-வளைவு பொருந்திய பிறையையும்,—இதழி - கொன்றைமாலையையும் அணிந்த,—தாழ் சடையான் தரும் - தாழ்ந்த சடையையுடைய சிவபெருமான் தந்தருளிய,—ஒருகோட்டன் - ஒருகொம்பை யுடையவரும்,—இரு செவியன்-இரண்டு செவிகளையுடையவரும்,—மும்மதத்தன் - மூன்று மதங்களை யுடையவரும்,—நால்வாய் ஐங்கரத்தன் - தூங்குகின்ற வாயையும் ஐந்து கைகளையுமுடையவரும் ஆகிய,—ஒருவாரணத்தின் தாள்கள் - ஒப்பற்ற யானைமுகம் போலும் முகத்தையுடைய விநாயகக் கடவுளுடைய திருவடிகள்,—உருகு ஒட்டு அன்பொடும் வணங்கி - பேரன்போடு தம்மை வணங்கி,—ஓவாதே இரவுபகல் உணர்வோர்-இடைவிடாமல் இரவும்பகலும் தியானிப்பவரது,-

சிந்தைத் திருகு - அறிவிற் பொருந்திய மலக் குற்றத்தை,—ஓட்டும்-நீக்கும். அதுவுமன்றி,- அயன் திருமால் செல்வமும் ஒன்றே என்ன - பிரமவிட்டுணுக்களுடைய வாழ்வும் ஒருபொருளோ என்று அதனை வெறுக்கும்படி,- தேவு செய்யும் - தெய்வத்தன்மைப் பெருவாழ்வையும் தரும்.

குறிப்பு. 1. ஒரு கோட்டன் என்பது பரஞானபதி என்பதையும், இருசெவியன் என்பது சர்வஞ்ஞத்துவமும் சர்வகர்த்திருத்துவமு முடையவர் என்பதையும், மும்மதத்தன் என்பது இச்சா ஞானக் கிரியைகளையுடையவர் என்பதையும், ஐங்கரன் என்பது பஞ்சகிருத்தியபதி என்பதையுங் குறிக்கும் என்பர். நால்வாய் - தூங்குகின்றவாய். நாலுதல் - தூங்குதல்.

2. ஆறு என்பது அகங்காரத்தை அடக்கும் வல்லமையுடையவர் என்பதைக் குறிக்கும் என்றும், பிறை சரணடைந்தோருக்கு உயர்நிலையை அருளுபவர் என்பதையும், ஞானவடிவினர் என்பதையும் சர்வஞ்ஞத்துவர் என்பதையும் குறிக்கும் என்றும், இதழியும் சடையும் முறையே உபாங்கமும் அங்கமும் எனப்பட்டுத் திருவருளைக் குறிக்கும் என்றுஞ் சொல்லப்படும்.

3. வாரணம் - யானைமுகம். ஆகுபெயர். யானைமுகம் பிரணவ சொரூபம் என்பதைக் குறிப்பது.

4. தாள்கள் - ஞானசத்தி கிரியாசத்திகளைக் குறிப்பன. இச்சத்திகள் மலத்தை நீக்கி ஞானத்தை அடையச் செய்வனவாதலால், "சிந்தைத் திருகு ஓட்டும்" என்றும், "தேவே செய்யும்" என்றுங் கூறினர். திருகு - மாறுபாடு, குற்றம். தேவு - தெய்வத்தன்மை.

5. உருகு ஓட்டு அன்பு:—உருகு - உருகுதல். ஓட்டு - ஓடுதல். உருகு ஓட்டு என்பன முதனிலைத் தொழிற்பெயர்கள். ஓடு என்பது ஓட்டு எனப் பகுதிவிகாரப்பட்டது.

6. மலக்கோணை ஒழித்துச் சிவப்பேற்றைத் தரவல்ல திருவடிகளுக்கு இடையூற்றை நீக்கி இந்நூல் இனிது முடிவுபெறச் செய்தல் அருமையன்று என்பது கருத்து.

பொழிப்பு. விநாயகக்கடவுளுடைய திருவடிகள், பேரன்போடு தம்மை வணங்கி இடைவிடாது தியானிப்பவரது மலக்குற்றத்தை நீக்கிச் சிவத்தைத் தரும்.

## 2. பரசிவவணக்கம்.

2. அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

(இ - ள்). அறுவகைச் சமயத்தோர்க்கும் - தனித்தனி அறுவகைப்பட்ட புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னும் சமயங்களில் நிற்போருக்கும்,—அவ்வவர் பொருளாய் - அவ்வச் சமயத்தவர் கொண்ட முதற்பொரு

ளாயும்,—வேறும் குறியது உடைத்தாய் - சித்தாந்த சைவருக்கு அச்சமயத்தவர் கூறும் இலக்கணங்களுக்கு வேறுய இலக்கணத்தை யுடையதாயும்,—வேதாகமங்களின் குறி இறந்து - வேதாகமங்களின் கருத்துக்கு எட்டாததாயும்,—அறிவினில் அருளால் மன்னி - அறிவினுக்கறிவாகியும்,—அங்கு அம்மையோடு அப்பன் ஆகி - அவ்வறிவின்கண் வியாபக அறிவைப் பயப்பிக்கும் சத்தியும் சிவமும் ஆகியும்,—செறிவு ஒழியாது நின்ற - எங்கும் செறிந்து வியாபகமாகி நின்ற,—சிவன் அடி சென்னி வைப்பாம் - சிவபெருமானது திருவடியைச் சிரசின்மேற் சூடிக்கொள்வாம்.

குறிப்பு. 1. அறுவகைச் சமயத்தோர் - புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னுஞ் சமயத்தவர்.

புறப்புறச்சமயத்தார் - உலோகாயதர், மாத்தியமிகர் யோகாசாரர் சௌத்திராந்திகர் வைபாடிகர் என்னும் நால்வகைப் பௌத்தர், ஆருகதர் என்னும் அறுவருமாவர்.

புறச்சயமத்தார் - தார்க்கிகர், மீமாஞ்சகர், ஏகான்மவாதிகள், சாங்கியர், யோகமதத்தினர், பாஞ்சராத்திரிகள் என்னும் அறுவருமாவர்.

அகப்புறச்சமயத்தார் - பாசுபதர், மாவிரதர், காபாலர், வாமமதத்தினர், வைரவமதத்தினர், ஐக்கவாதசைவர் என்னும் அறுவருமாவர்.

அகச்சமயத்தார் - பாடாணவாதசைவர், பேதவாதசைவர், சிவசமவாதசைவர், சிவசங்கிராந்தவாதசைவர், ஈசுவரவவிகாரவாதசைவர், சிவாத்துவிதசைவர் என்னும் அறுவருமாவர்.

2. அவ்வவர்பொருளாய்:—(a). உலோகாயதர், பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு பூதங்களுமே முதற்பொருள் என்றும், அவை நித்தப்பொருள் என்றும் கூறுவர்.

(b). நால்வகைப் பௌத்தரும் புத்தக்கடவுளே முதற்பொருள் என்றும், அக்கடவுள் பஞ்சகந்தங்கள் கூடிப் பலவுணர்வுண்டாகிக் கணபங்கப்படுவதின்றி முத்திசொரூபமாயிருப்பவர் என்றும் கூறுவர்.

(c). ஆருகதர், அருகக்கடவுளே முதற்பொருள் என்றும், அவர் அநந்தஞானம் அநந்ததரிசனம் அநந்தவீரியம் அநந்தசுகம் நிர்நாமம் நிர்க்கோத்திரம் நிராயுஷ்யம் சம்மியதாபாவம் என்னும் எண்குணங்களையுமுடையர் என்றும் கூறுவர். சம்மியதாபாவம் - அழிவின்மை.

(d). தார்க்கிகர், நிலம் நீர் தீ வளி ஆகாயம் காலம் திசை ஆன்மா மனம் எனத் திரவியம் (பொருள்) ஒன்பது வகைப்படும். அவற்றுள் நிலம் முதலிய நான்கும் அநித்தப்பொருள்கள். இவற்றின் காரணமாகிய நிலவணு நீரணு தீயணு வளியணு என்னும் நால்வகைப் பரமாணுக்களும் ஆகாயம் முதலிய ஐந்தும் நித்தப்பொருள்கள். பரமாணுக்கள் கன்மத்துக்கேதுவாகப் பிரபஞ்சமாய்த் தோன்றி நின்று ஒடுங்கும். ஆன்மா பரமான்மா சீவான்மா

என இருவகைப்படும். பரமான்மா முற்றுணர்வுடையவன். எல்லாம் வல்லவன். பிரபஞ்சத் தோற்ற ஒடுக்கங்களுக்குக் கன்ம காலங்கள் போலப் பரமான்மா ஒரு காரணமேயன்றிப் பிறிதில்லை என்பர்.

(*e*). மீமாஞ்சகர் வேதமே பிரமம் என்றும், அது நித்தப்பொருள் என்றும் கூறுவர்.

(*f*). ஏகான்மவாதிகள், பாற்கரியன் மாயாவாதி சத்தப்பிரமவாதி கிரீடாப்பிரமவாதி என நான்குவகைப்படுவர். இவருள், பாற்கரியர் பிரமம் ஒன்றே பரமார்த்தத்தில் மெய்ப்பொருள் என்றும், சுரர் நரர் விலங்கு முதலிய சடசித்துக்களெல்லாம் பிரமத்தின் பரிணாமம் என்றும், இந்தப் பிரமம் சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் இருக்கும் என்றும், இதுவே ஈசன் என்றும் சொல்வர்.

மாயாவாதிகள், முன்சொன்ன பிரமமே பரமார்த்தத்தில் மெய்ப்பொருள் என்றும், ஏனைய எல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினாற் காணப்படுவனவாகலிற் பொய் என்றும் கூறுவர். விவர்த்தனம் - விருத்தி, வர்த்திப்பு.

சத்தப்பிரமவாதிகள், பிரமமே முதற்பொருள். அது பிரளயகாலத்தில் சத்தவடிவாயிருக்கும். சடமுஞ் சித்துமாய்த் தோன்றி அழியும் எல்லாப் பொருளும் சத்தத்தினது விகாரம் என்பர்.

கிரீடாப்பிரமவாதிகள், பிரமமே முதற்பொருள். இந்தப் பிரமத்திலே முக்குணம் ஆரோபித்தலால் மும்மூர்த்திகளுமுண்டாவர். இவராற் சிருட்டி திதி சங்காரம் நடைபெறும் என்பர்.

(*g*). சாங்கியர், இருபத்தைந்தாந் தத்துவம் புருடன். அதுவே முதற்பொருள். அது நித்தமாய் வியாபகமாய் அருவாய்ச் சுத்தமாய் நாநாபேதமாய் முற்றுணர்வுந் தொழிலுமின்றி அறிவுமாத்திரமாய் இருப்பது என்றும், ஆன்மாக்களுக்கு வேறாய் ஈசுரன் ஒருவன் இல்லை என்றும் கூறுவர்.

(*h*). யோகமதத்தினர், இருபத்தாறாந் தத்துவம் ஈசுரன். அவனே முதற்பொருள். அவன் முற்றுணர்வுடையவன். எல்லாவற்றையும் அதிட்டித்து நின்று செய்பவன். ஆன்மாக்களுக்கு ஞானத்தை அறிவுறுப்பவன் என்பர்.

(*i*). பாஞ்சராத்திரிகள், வாசுதேவனே பரம்பொருள். அந்தப் பரம்பொருளினின்றும் கிருட்டிணன் அநிருத்தன் மகரத்துவசன் இரௌகிணேயன் என்னும் நான்கு வியூகர்கள் தோன்றினர். இவராற் சடமும் சித்துமாகிய எல்லாம் படைக்கப்பட்டன. ஆதலால் எல்லாம் வாசுதேவனது பரிணாமமே என்பர்.

(*j*). பாசுபதர், திருநீறுஞ் சடையுந் தரித்த மூர்த்தியாகிய சிவனே முதற்பொருள் என்பர்.

(*k*). மாவிரதர், என்புமாலை தரித்த மூர்த்தியாகிய சிவனே முதற்பொருள் என்பர்.

(*l*). காபாலர், காபாலத்தையுடைய மூர்த்தியாகிய சிவனே முதற் பொருள் என்பர். காபாலம் - தலையோட்டாலாகிய பாத்திரம்.

(*m*). வாமமதத்தர், அக்கினியும் உபவீதமுந் தரித்த மூர்த்தியாகிய சிவனே முதற்பொருள் என்பர். உபவீதம் - பூணுநூல்.

(*n*). வைரவமதத்தர், தமருகமும் சிலம்பும் தரித்த மூர்த்தியாகிய சிவனே முதற்பொருள் என்பர்.

(*o*). ஐக்கவாதசைவர், பதியே முதற்பொருள். அது சிவன் சதாசிவன் மகேசுவரன் என்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவம் என்னும் இலக்கணங்களையுடையது என்பர். இவர் ஆணவமலத்தினுண்மை கொள்ளாராதலின், அகப்புறச்சமயத்தாரோடு வைத்து எண்ணப்படுவர்.

(*p*). பாடாணவாதசைவர் முதலிய அகச்சமயத்தவர் அறுவரும் பதி, சிவன் சதாசிவன் மகேசுவரன் என்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவம் என்னும் இலக்கணங்களை யுடையது என்பர்.

3. வேறுங்குறியது உடைத்தாய் - சித்தாந்த சைவராற் கூறப்படும் சொரூபலக்கணத்தையுடையதாய். இவர் சச்சிதானந்த வடிவினதாகிய சொரூபசிவமே முதற்பொருள் என்றும், அச்சொரூபசிவம் ஆன்மாக்கள் பொருட்டு ஐந்தொழிலுஞ் செய்தற்கு இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்று தடத்தவடிவங் கொள்ளும் என்றுஞ் சொல்வர்.

4. வேதாகமங்களின் குறியிறந்து - வேதத்தை ஓதுவதினுற் பாசஞானமுண்டாம். அப்பாசஞானத்தாற் சிவன் அறியப்படாதவர். சிவாகமங்களை ஓதுவதினுல் அபரஞானமுண்டாம். சிவன் அபரஞானத்தால் அறியப்படுவரேனும், பரஞானம் ஒன்றுலே அனுபவமாய் அறியப்படுவராதலின், "வேதாகமங்களின் குறியிறந்து" என்றார். (செ. 6, 293). குறி - எண்ணம், கருத்து.

5. அறிவினில் அருளால் மன்னி - ஆன்ம அறிவின்கண் திருவருளோடு பொருந்தி, உயிருக்குயிராகி.

6. அங்கு அம்மையோ டப்பணுகி நிற்றல் - சத்தியும் சிவமும் ஆன்ம அறிவைப் பொருந்தி நின்று அதன் ஏகதேச அறிவை நீக்கி வியாபக அறிவை உண்டாக்கும் என்பது.

7. சிவனடி - சிவனது ஞானக்கிரியா சொரூபம், சத்திசொரூபம்.

பொழிப்பு. அறுவகைச் சமயத்தோருக்கும் அவ்வவர் கொண்ட முதற் பொருளாயும், சித்தாந்தசைவருக்குச் சச்சிதானந்த சொரூபியாயும், பரஞானத்தால் அறிந்தனுபவிக்கப்படுவதாயும், உயிர்க்குயிராயும், உயிர்களுக்கு வியாபக அறிவைப் பயப்பிப்பதாயும், எங்கும் வியாபகமாயிருக்கும் பரமசிவனது திருவடியைச் சிரத்தின்மேற் சூடிக்கொள்வாம்.

## 3. நூலின்வழி.

3 என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி னாலே தாளிணை தலைமேற் சூட்டும் [னூல்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண் டா
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றும்.

(இ - ள்). இப்பவத்தில் சேராவகை - இப்பிறவிக் கடலில் அழுந்தாத படி,—அருளினால் என்னை எடுத்து - கருணையாகிய கையினால் என்னை எடுத்து,—என்சித்தத்தே தன்னை வைத்து - எனது அறிவிலே தமது சொரூபம் விளங்கும்படி செய்து,—தாள் இணை தலைமேல் சூட்டும்-திருவடிகள் இரண்டினையும் சென்னியிற் சூட்டித் தீக்கைசெய்தருளிய,—மின் அமர் பொழில் சூழ் வெண்ணெய் மேவி வாழ் மெய்கண்டான் - மின்னல் பொருந்திய மேகம் தங்குகின்ற சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் விருப்பமுற்று வாழ்கின்ற மெய்கண்டதேவர் அருளிச்செய்த,—நூல் - சிவஞான போதம் என்னும் நூலை,—சென்னியில் கொண்டு - மற்றைய பிரமாணநூல்களுக்கெல்லாம் சிரத்தானமாகக் கொண்டு,—சைவத்திறத்தினைத் தெரிக்கல் உற்றும் - சைவசித்தாந்தத்தின் உண்மையை யாம் விளக்குவாம்.

குறிப்பு. 1. சித்தத்தே தன்னை வைத்து - எனது அறிவை அருளுருவாக்கி.

2. மின் என்பது அதனையுடைய மேகத்துக்கு ஆகுபெயராயிற்று.

3. திறம் - தன்மை, இயல்பு. "கூறு" எனப் பொருள் கொண்டு சைவாகமத்திற் சொல்லும் பதி பசு பாசக் கூறுகளை எனினும் அமையும்.

பொழிப்பு. மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞானபோத நூலை முதனூலாகக்கொண்டு இச்சிவஞானசித்தியைக் கூறுகின்றும்.

## 4 நுதலியபொருளும், கேட்போரும், பயனும்.

4. பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றும்.

(இ - ள்.) பண்டை நல் தவத்தால் - முன்செய்த நல்ல தவத்தினாலே,—தோன்றி-சாமுசித்தராய்ப் பிறந்து,—பரமனைப் பத்தி பண்ணும் தொண்டரை - பரமசிவனை அன்பு மாத்திரையால் வழிபடுகின்ற அடியவர்களை,—தானே தூய கதியினில் தொகுப்பன் - அப்பரமசிவன் தாமாகவே சிவகதியிற் சேர்ப்பர்; ஆகையால் அச்சாமுசித்தருக்கு நூல் வேண்டப்படுவதில்லை,—மார்க்கர் கண்டநூல் ஓதி - ஞானிகள் பிரமாணம் என்றறிந்து

கைக்கொண்ட நூல்களைப் படித்து,—வீடு காதலிப்பவர்கட்கு - அந்நூல்கள் வழியால் முத்திபெற விரும்பும் வைநயிகருக்கு;—ஈசன் புண்டரிகத்தாள் சேரும் பரிசினை - சிவபெருமானுடைய செந்தாமரை மலர் போன்ற திருவடிகளை அடையும் முறைமையினை,—புகலல் உற்றும் - இங்கே வகுத்துக் கூறுகின்றோம்.

குறிப்பு. 1. பண்டைநற்றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணும் தொண்டர் - சாமுசித்தராவார் முற்பிறவியிலே சரியை கிரியை யோகங்களைச் செய்து சித்தசுத்தியுடையராய் வாழ்ந்து, மீளப் பிறக்கும்பொழுதும் அந்த ஞானத்துடனே பிறந்து சிவனைப் பாவனைபண்ணுவோர். சம்சித்தம் என்பதினின்றுவந்த தத்திதமாகிய சாம்சித்தர் என்பது தமிழிற் சாமுசித்தர் என்றாயிற்று. ஸம் - நன்றாக. சித்தம் - முடிவுபெற்றது. வைநயிகராவார் விநயசீலராய் ஞானசாத்திரத்தை ஓதி அறிந்து முத்தியடைய விரும்புவோர். வைநயிகர் - விநயமுடையவர். இது விநயம் என்பதைப் பகுதியாகவுடைய தத்திதபதம். விநயம் - ஒழுக்கம், வழிபாடு. பிராகிருதராவார் முத்தியில் விருப்பின்றி விபரீதஞானமுடையவராய்த் தேகாதிகளை ஆன்மா என்றும், பிரகிருதியிலுண்டான போக போக்கியங்களைப் பரம் என்றும் எண்ணுபவர். பிராகிருதர் - பிரகிருதியிலே தோன்றியவைகளைக் கொள்பவர், அறிவில்லாதவர். இதுவும் தத்திதம்.

2. தானே தூயகதியினிற் றெருகுப்பன் - பரமசிவன் சாமுசித்தருக்கு அநுக்கிரகஞ்செய்வது விஞ்ஞானகலர் பிரளயாகலருக்கு அனுக்கிரகஞ் செய்வதுபோலாம். விஞ்ஞானகலருக்கு அறிவுக்கறிவாய் நின்று உணர்த்துவர். பிரளயாகலருக்கு மான் மழு சதுர்ப்புயம் காளகண்டம் திரிநேத்திரம் முதலிய உறுப்புக்களோடு உருவடிவுகொண்டு முன்னின்றுணர்த்துவர். அதுபோலச் சாமுசித்தருக்கும் அறிவுக்கறிவாய் நின்றேனும் முன்னிலையில் வெளிப்பட்டேனும் உணர்த்தியருளுவர்.

3. மார்க்கர் - சன்மார்க்கர், ஞானிகள். சன்மார்க்கர் என்பது மார்க்கர் எனத் தலைக்குறையாயிற்று.

4. இச்செய்யுளால் நுதலியபொருளும் கேட்போரும் பயனும் கூறப்பட்டன. நுதலியபொருள் - திருவடியை அடையும் முறைமை. கேட்போர் - வைநயிகர். பயன் - திருவடிகூடுதல்.

பொழிப்பு. சிவபெருமானுடைய திருவடியை அடையும் முறைமையை வைநயிகராயினோர்க்கு இந்நூலிற் கூறுகின்றோம்.

## 5. அவையடக்கம்.

5. மறையினு லயனுன் மாலான் மனத்தினல் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவி னுலுங் கூறெணு தாகி நின்ற
இறைவனுர் கமல பாத மின்றியா னியம்பு மாசை
நிறையினர் குணத்தோர்க் கெல்லா நகையினை நிறுத்து மன்றே

(இ - ள்). மறையினல் - வேதங்களினலும்,—அயனல் - பிரமனலும்,- மாலால் - விட்டுணுவினலும்,—மனத்தினல் - மனத்தினலும்,—வாக்கால் - வாக்கினலும்,—மற்றும் குறைவிலா அளவினலும் - வேறுங் குறைவில்லாத பிரமாணங்களாலும்,—கூற ஒண்ணது ஆகி நின்ற - அளவிட்டறிந்து சொல்லுதற்கு அரிதாகி நின்ற,—இறைவனர் கமலபாதம் - சிவபெருமானது செந்தாமரை மலர்போலும் திருவடிகளின் இயல்பை,—இன்று யான் இயம்பும் ஆசை - இப்போது யான் சொல்லுதற்குக் காரணமாய் நின்ற புல்லிய ஆசையானது,—நிறையின் ஆர் குணத்தோர்க்கு எல்லாம் - நிறைந்த குணத்தினையுடைய பெரியோர் எல்லார்க்கும்,—நகையினை நிறுத்தும் - சிரிப்பினை உண்டாக்கும்.

குறிப்பு. 1. மறையினல் - வேதம் பாசஞானமாதலாலும், சிவன் அப்பாசஞானத்தால் அறியப்படாதவராதலாலும், "மறையினல் கூறெணுதாகி" என்றார்.

2. அயனன் மாலால் - பிரம விட்டுணுக்களிருவரும் நாம் பிரமம் என்னும் பசுஞானத்தாற் சிவபிரானுடைய அடிமுடிகளைத் தேடியும் அறிந்திலராதலின், "அயனன் மாலால் கூறெணுதாகி" என்றார்.

3. மனத்தினல் வாக்கால்:—மனம் பசுஞானத்தையும், வாக்கு பாசஞானத்தையுங் குறித்து நின்றன. ஆன்மபோதத்தால் அறிவது பசுஞானம். பிருதிவி முதல் நாதமீருகிய தத்துவங்களாலுண்டாகும் ஞானம் பாசஞானம். சிவன் இப்பசுஞான பாசஞானங்களால் அறியப்படாதவராதலின் "மனத்தினல் வாக்கால் கூறெணுதாகி" என்றார்.

4. இறைவனர் கமலபாதம் - இறைவனரியல்பு. பாதம் - திருவருள், சிவஞானம்.

பொழிப்பு. முதல்வனது இயல்பு கூறற்கரிதாயினும், எனது ஆசை மிகுதியினலே அதனைக் கூறத்தொடங்கினேன்.

## இதுவுமது.

**6.** அருளினு லாக மத்தே யறியலா மளவி னுலும்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே.

(இ - ள்). (சிவபெருமானது இயல்பு கூறுதற்கரிதாயினும்) சிவனை - அச்சிவபெருமானை,—ஆகமத்தே - சிவாகமங்களிடத்து,—அருளினல் அறியலாம் - தேசிகரது உபதேசத்தாற் கேட்டறியலாம்,—அளவினலும் தெருளலாம் - கேட்டதனை அதற்கனுகூலமான பிரமாணங்களாலும் தெளிய அறியலாம். அங்ஙனமன்றியும்,—ஞானச்செய்தியால் - ஞானசாரியரது உபதேசத்தால்,—மருள் எலாம் நீங்க - மயக்கம் எல்லாம் ஒழிய,—சிந்தையுள்ளே

கண்டு வாழலாம் - தனது அறிவின்கண்ணே அறிந்து சிட்டைகூடி அனுபவிக்கலாம்.—பிறவிமாயா இருள் எலாம் இரிக்கல் ஆகும் - அதனுற் பிறவி ஒழியாமைக்கேதுவாகிய மலங்களை நீக்கலாம்,—அடியரோடு இருக்கலாம்- சிவனடியாரோடு கூடி வாழலாம்.

குறிப்பு. மேற்செய்யுளிற் கூறியவாறு, சிவன் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாதவராயினும், சிவஞானமொன்றினுல் அறியப்படுவர். அது பரஞானம் அபரஞானம் என இருவகை. பரஞானம் ஆன்மாவின் மலவிருளை நீக்குந் திருவருளாம். அபரஞானம் அத்திருவருளைத் தெளிய உணர்த்தும் சிவாகமங்களாம். ஆதலால், சிவாகமங்களை ஓதி உணர்தலால் உண்டாகும் அபரஞானத்தாலும் திருவருளாகிய பரஞானத்தாலும் சிவனை அறியலாம் என்பது பொருள்.

பொழிப்பு. சிவாகமங்கள் வாயிலாகவும் பரஞானத்தாலும் சிவனை அறியலாம்.

---

## அளவையிலக்கணம்.

விஷயங்கள்:—

1. மூவகை அளவை, (7).
2. மூவகை அளவையின் இலக்கணம், (8).
3. நிருவிகற்பம் முதலிய நால்வகைக் காட்சிகளின் இலக்கணம், (9).
4. காட்சிமுதலிய மூவகைப் பிரமாணங்களின் பாகுபாடும், பிரமேயங்களின் பாகுபாடும், (10).
5. சிறப்பியல்பு பொதுவியல்புகளின் இலக்கணம், (11).
6. இந்திரியக்காட்சி மானதக்காட்சிகளின் இலக்கணம், (12).
7. தன்வேதனைக்காட்சி யோகக்காட்சிகளின் இலக்கணம், (13).
8. தன்பொருட்டனுமானம் பிறர்பொருட்டனுமானம் என்பவற்றின் இலக்கணம், (14).
9. மூவகைப்பக்கங்களின் இலக்கணம், (15).
10. மூவகை ஏதுக்களும் அவற்றின் இலக்கணமும், (16).
11. அன்னுவய வெதிரேகச் சொற்களின் இலக்கணம், (17).
12. வேறு மூவகை அனுமானங்களின் இலக்கணம், (18).
13. மூவகை ஆகமப்பிரமாணங்களின் இலக்கணம், (19).
14. அனுமானப்போலி, (20).

### 1. மூவகை அளவை.

**7.** அளவை காண்டல் கருதலுரை யபாவம்பொருளொப்பாறென்பர்
அளவை மேலு மொழிபுண்மை யைதி கத்தோ டியல்பென நான்
களவை காண்ப ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லாம்
அளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே.

(இ-ள்.) அளவை - பிரமாணமாவது,—காண்டல் - காட்சி,—கருதல்- அனுமானம்,—உரை - ஆகமம்,—அபாவம் - இன்மை,—பொருள் - அருத்தாபத்தி,—ஒப்பு-உவமை என,—ஆறு என்பர் - அறுவகைப்படும் என்பர்,—அளவை மேலும் - அவ்வறுவகைப் பிரமாணங்களின்மேலும்,—ஒழிபு - பாரிசேடமும்,—உண்மை - சம்பவமும்,—ஐதிகத்தோடு - உலகவாதமும்,—இயல்பு என - சகசமும் என,—நான்கு அளவை காண்பர் - நான்கு பிரமாணம் உண்டென்று அறிவர்,—அவையிற்றின்மேலும் - அப்பத்துப் பிரமாணங்களின் மேலும்,—அறைவர் - பிரமாணங்கள் உள என்று கூறுவர்,—அவை எல்லாம் அளவை - அவையெல்லாம் பிரமாணங்களேயாயினும்,—காண்டல் - காட்சியும்,—கருதல் - அனுமானமும்,—உரை - ஆகமமும்,—என்ற இம் மூன்றின் - என்று சொல்லப்படும் இம் மூன்று பிரமாணங்களுள்,—அடங்கிடும் - அடங்குவனவாம்.

குறிப்பு 1. அளவை - பிரமாணம். உலகத்துப் பதார்த்தங்களை எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என்னும் நால்வகை அளவினுல் அளந்தறியுமாறுபோலப் பதி முதலிய பொருள்களை அளந்தறிதற்குக் கருவியாதலினுற் பிரமாணம் அளவை எனப்பட்டது. பதி முதலிய பொருள்கள் பிரத்தியட்சமாகக் காணப்படாதனவாதலால், அவை ஆகமம் அனுமானம் என்னும் இரண்டு கருவிகளாலும் ஆன்மசிற்சத்தியால் அளந்தறியப்படுவனவாம். ஆதலால், ஆன்மசிற்சத்தியே பிரமாணமாம். ஆகமம் அனுமானம் காட்சி என்னும் மூன்றும் ஆன்மசிற்சத்திக்கு அறிவைத் தோற்றுவிக்கும் துணைக் கருவிகள். ஆதலின், அவையும் பிரமாணங்கள் என உபசாரமாகக்கொள்ளப்படும். பிரமாணம்: பிர - உபசர்க்கம். மா - அளத்தல். நம் - விகுதி. நகரம் ணகரமானது வடமொழி விதி.

2. காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப்பு:—

காண்டல் ஒன்றுமே பிரமாணம் என்பவர் உலோகாயதர்.

காண்டல் கருதல் என்னும் இரண்டும் பிரமாணம் என்பவர் வைசேடிகரும் பௌத்தரும்.

காண்டல் கருதல் உரை என்னும் மூன்றும் பிரமாணம் என்பவர் சாங்கியர்.

காண்டல் கருதல் உரை ஒப்பு என்னும் நான்கும் பிரமாணம் என்பவர் நையாயிகர்.

காண்டல் கருதல் உரை ஒப்பு அருத்தாபத்தி என்னும் ஐந்தும் பிரமாணம் என்பவர் பிரபாகரர்.

காண்டல் கருதல் உரை ஒப்பு அருத்தாபத்தி அபாவம் என்னும் ஆறும் பிரமாணம் என்பவர் மீமாஞ்சகர்.

இவற்றுள், காண்டல் கருதல் உரை என்னும் மூன்றின் இயல்பும் வருஞ் செய்யுளிற் கூறப்படுகின்றது.

(*a*). ஒப்பு (உவமை, உபமானம்) - எவையாயினும் இரண்டு பொருள்களின் தன்மை உணர்ந்தானொருவன், அவற்றுள் ஒன்றை அறிந்தானுக்கு மற்றதையும் அவனறிந்த பொருளின் தன்மையோடு சார்த்திக்காட்டலாம். ஆமா என்னுஞ் சொற்குப் பொருளறியாதான், பசுவினையொக்கும் ஆமா எனக் கேட்டுக், காட்டிற் சென்று ஆமாவைக்கண்டு அது பசுப்போன்றிருத்தலை நோக்கி, இஃது ஆமா என நிச்சயித்தறிதல். ஆமா - காட்டுப்பசு.

(*b*). பொருள் (அருத்தாபத்தி) - "இவ்வூரிற் கொடுப்பவர் இவர்" எனின், அதனைகொண்டு கொடாதாருமுண்டென்னும் பொருள் பெறுதல். "பகலுண்ணான் பருத்துமிருக்கின்றான்" என்றவிடத்து இரவில் உண்பவன் என்னும் பொருள்பெறுதலும் அது. அருத்தம - பொருள். ஆபத்தி - பெறுதல், அடைதல்.

(*c*). அபாவம் (இன்மை) - பொறிக்கு இலக்காகாத உள்பொருளின் நிலைமை. அ - எதிர்மறை. பாவம் - உள்ளது. இது பிராகபாவம் பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம் அந்நியோந்நியாபாவம் என நான்குவகை.

பிராகபாவம் - முன்னின்மை. சங்காரம் முடிந்தகாலத்து இலதாய உலகம் படைப்புக்காலதது உளதாதல். பிராக் - முன். அபாவம - இன்மை. பிராக் என்பது ஓரவ்வியயசசொல். அவ்வியயசசொல் - இடைச்சொல்.

பிரத்துவம்சாபாவம் - பின்னின்மை, உள்ளதன் அபாவம். படைப்பு முடிந்தகாலத்து உளதாய உலகம் சங்காரகாலத்து இலதாதல். பிரத்துவம்சம் - அழிவு. அபாவம் - இன்மை.

அத்தியந்தாபாவம் - முழுதுமின்மை, என்றும் அபாவம். முயலுக்குக் கொம்பு முக்காலத்தும் நிகழக்காணமை. அத்தியந்தம் - முழுதும. அபாவம் - இன்மை.

அந்நியோந்நியாபாவம் - ஒன்றிலொன்றின்மை. இறைவனை வினைதொடுதலில்லை. வினையை இறைவன் தொடுதலில்லை.

3. அளவை மேலுமொழிபுண்மை யைதிகத்தோடியல்பென நான்கு:—

(*a*). ஒழிபு - பாரிசேடம். ஐந்துபூதங்களுள்ளும் ஓசைக்குப் பற்றுக்கோடாவது யாது என ஆராயுமிடத்து, நாறறத்திற்குப் பிருதிவியும் சுவைக்கு அப்புவும ஒளிக்குத் தேயுவும் ஊற்றிற்கு வாயுவும் பற்றுக்கோடாதல் இனிது அறியப்படுதலின், இவையொழிந்த ஆகாயமே ஓசைக்குப் பற்றுககோடு என அறிதல். பாரிசேடம் என்பது பரிசேடம என்பதினின்று வந்த தத்திதம். பரிசேடம் - மிஞ்சியது.

(*b*). உண்மை (சம்பவம்) - முழுப்பொருளைச் சொன்னவிடத்து அதனுள் அதனுறுப்பும் அடங்கிக்கிடத்தல. ஆயிரம என்று சொல்லுமிடத்து அதனுள் நூறும் அடங்கிக்கிடத்தல். சம்பவம் - உளதாயிருப்பது. சம் - உபசர்க்கம். பவம் - பிறத்தல்.

(c). ஐதிகம் - காட்சியில் அறியப்படாததாய்ப் பரம்பரைக் கேள்வியி னால் அறியப்படுவது. ஐதிகம் என்பது இதிகம் என்பதினின்று வந்த தத்தி தம். இதிகம் - பரம்பரையுபதேசம். இந்த ஆலமரத்திற் பேயுண்டு, இப்புற் றிற் பாம்புண்டு என்பனபோல்வது.

(d). இயல்பு (சகசம், சுபாவம்) - உலகவழக்காலும் செய்யுள் வழக்கா லும் அந்தந்தக் காலத்துக்கேற்றபடி பலபொருட்குப் பொதுச்சொல் ஒரு பொருளையே சிறப்புறத்தருவது. குதிரைமேலிருந்த ஒருவன் கோல் தா என்றால் தடியைக் கொடாது குதிரைச்சம்மட்டியைக் கொடுத்தல். இது சிறப்பியல்பு பொதுவியல்பு என இருவகை. (செய். 11. பார்).

4. காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றினடங்கிடும் - மேற்கூறிய அபாவம் முதலிய பிரமாணங்களெல்லாம் காட்சிமுதலிய மூன்றனுள்ளும் அடங்கும். எவ்வாறெனின், அபாவமும் இயல்பும் காட்சியில் அடங்கும். பொருள் ஒப்பு ஒழிபு உண்மை என்னும் நான்கும் கருதலில் அடங்கும். ஐதிகம் உரையில் அடங்கும்.

பொழிப்பு. அளவை, பிரத்தியட்சம் அனுமானம் ஆகமம் என மூவ கைப்படும்.

## 2. மூவகையளவையின் இலக்கணம்.

8. மாசறு காட்சி யையந் திரிவின்றி விகற்ப முன்னா
ஆசற வறிவ தாகு மனுமான மவினா பாவம்
பேசுறு மேதுக் கொண்டு மறைபொருள் பெறுவ தாகும்
காசறு முரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும்.

(இ - ள்.) மாசு அறு காட்சி - குற்றமற்ற காட்சிப் பிரமாணமாவது,— ஐயம் திரிவு இன்றி - நிருவிகற்பமாகத் தோன்றிய ஒரு பொருளைச் சந்தேக விபரீதவுணர்வின்றி,—விகற்பம் முன்னா - விகற்ப உணர்வை முன்னாகக் கொண்டு,—ஆசு அற அறிவது ஆகும் - குற்றமற நேரே அறியும் ஆன்மசிற் சத்தியாம்,—அனுமானம் - அனுமானப் பிரமாணமாவது,—மறைபொருள் - நேரே அறியப்படாது மறைந்துநின்ற பொருளை,—அவினாபாவம் பேசுறும் எதுக்கொண்டு - அதனை விட்டு நீங்காது உடனிகழ்வதாகச் சொல்லப்படும் எதுவைக்கொண்டு,—பெறுவது ஆகும் - அறியும் ஆன்மசிற்சத்தியாம்,—காசு அறும் உரை - குற்றமற்ற ஆகமப்பிரமாணமாவது,—இம்மானத்து அடங் கிடாப் பொருளை - காட்சி அனுமானம் என்னும் இவ்விரண்டு பிரமாணங்க ளாலும் அறியப்படாத பரலோகம் பாதாளலோகம் முதலிய பொருள்களை,— காட்டும் - ஆப்தவாக்கியங்கொண்டு அறியச்செய்யும் ஆன்மசிற்சத்தியாம்.

குறிப்பு. 1. மாசறு காட்சி - சவிகற்பக்காட்சி. ஒரு விடயத்தைக் காணு மிடத்து முதலிலே நிருவிகற்பவுணர்வும், அதன்பின் ஐயவுணர்வும், அதன் பின் விபரீதவுணர்வும் நிகழுதலுண்டாம். இம்மூன்றினாலும் அவ்விடயத் தை உள்ளபடியறிதல் கூடாதாகலின், இவை குற்றம்பொருந்திய காட்சிக ளாகும். பெயர் சாதி குணம் கன்மம் பொருள் என்னும் ஐந்து வேறுபாடு

களுடன் அவ்விடயத்தை அறியும் ஆன்மசிற்சத்தியே குற்றமற்ற காட்சிப் பிரமாணம் என இங்கே கூறப்பட்டது.

அனுமானப்பிரமாண ஆகமப்பிரமாணங்களிலும் இவ்வாறு முன்னர் நிருவிகற்பக்காட்சியும், பின் ஐயக்காட்சியும் விபரீதக்காட்சியும் அதன்பின் சவிகற்பக்காட்சியும் நிகழும். சவிகற்பமாக அறியும் ஆன்மசிற்சத்தியே பிரமாணமாம்.

2. விகற்பமுன்னு - சவிகற்பமாக.

3. அவிநாபாவம் - புகையும் நெருப்பும்போல விட்டு நீங்காது உடனிகழுந்தன்மை. அ - எதிர்மறை. விநா - நீங்குதல். பாவம் - இருத்தல்.

பொழிப்பு. ஒருபொருளைச் சவிகற்பமாக நேரே அறியும் ஆன்மசிற்சத்தி காட்சிப்பிரமாணமாம். நேரே அறியப்படாது மறைந்து நின்ற பொருளை உடனிகழும் ஏதுவைக்கொண்டு அறியும் ஆன்மசிற்சத்தி அனுமானப் பிரமாணமாம். இவ்விரண்டு பிரமாணங்களாலும் அறியப்படாத பொருள்களை ஆத்தவாக்கியங்கொண்டு உணரும் ஆன்மசிற்சத்தி ஆகமப்பிரமாணமாம்.

### 3. நிருவிகற்பம் முதலிய நால்வகைக் காட்சிகளின் இலக்கணம்.

9. கண்ட பொருளை யிரட்டுறவே கருத லையந் திரியவே, கொண்ட றிரிவாம் பெயர்சாதி குணங் கன்மம் பொருளென வைந், துண்ட விகற்ப வுணர்வினுக்குப் பொருளி னுண்மை மாத்திரத்தின், விண்ட லில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்சியே.

(இ - ள்.) விண்டல் இல்லா - பெயர் சாதி முதலியவற்றாற் பகுத்தறிதலின்றி,—பொருளின் உண்மை மாத்திரத்தின் அறிவு - இஃதொன்று தோன்றுகின்றதெனப் பொதுவகையிற் பொருளுண்மையை மாத்திரம் அறியும் ஆன்மசிற்சத்தி,—விகற்பமில்லாக் காட்சி ஆகும் - நிருவிகற்பக்காட்சி எனப்படும்;—கண்ட பொருளை - அங்ஙனம் அறிந்த பொருளை,—இரட்டுறவே கருதல் - இஃது யாதோ என்று ஒன்றிலே துணிவு பிறவாது ஆராயும் ஆன்மசிற்சத்தி,—ஐயம் - ஐயக்காட்சி எனப்படும்,—திரியவே கொண்டல் - அதனை அதற்குச் சமமாயிருக்கும் மற்றொரு பொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஆன்மசிற்சத்தி,—திரிவு ஆம் - விபரீதக்காட்சி எனப்படும்,—பெயர் சாதி குணம் கன்மம் பொருள் என் ஐந்து - பெயரும் சாதியும் குணமும் கன்மமும் பொருளும் ஆகிய ஐந்தும் அப்பொருளினிடத்து நன்றாக விளங்க உணர்தல்,—அ விகற்ப உணர்வினுக்கு உண்டு - அந்தச் சவிகற்பக் காட்சிக்கு உண்டாம்.

குறிப்பு. 1. பொருளினுண்மை மாத்திரத்தின் விண்டலில்லா வறிவாகும் விகற்பமில்லாக் காட்சி - காணப்படும் ஒரு பொருளைப் பெயர் சாதி குணம் கன்மம் பொருள் என்னும் வேறுபாடுகளோடு அறியாது, யாதோ ஒன்று தோன்றுகின்றது எனப் பிண்டமாக அறியும் அறிவு நிருவிகற்பக்

காட்சியாம். நிருவிகற்பம் - விகற்பமில்லாதது. விகற்பம் - வேறுபாடு. விண்டல்: விள்ளுதல் - பிரிதல்.

2. கண்டபொருளை யிரட்டுறவே கருதலையம் - இரண்டுபொருள்களுக்குப் பொதுவாயுள்ள அடையாளத்தை ஒன்றினிடத்திலே கண்டு இஃது எதுவோ என்று ஒன்றிலே துணிவு பிறவாது சந்தேகப்படுதல் ஐயக்காட்சியாம். (உ-ம்). பிண்டமாகக் கண்டபொருளை இது கட்டையோ கள்வனோ என்று ஐயப்படுதல். இரட்டுற - இரண்டாக.

3. திரியவே கொண்டல் திரிவாம் - ஒன்றை மற்றொன்றாகக் கருதல் விபரீதக்காட்சியாம். (உ-ம்). கட்டையோ கள்வனோ என்று ஐயப்பட்டுப், பின் கட்டையைக் கள்வன் என்றும் கள்வனைக் கட்டை என்றும் மாறுபடக் கொள்ளல்.

4. பெயர் சாதி குணமே கன்மம் பொருளென வைந்துண்டவிகற்பவுணர்வினுக்கு - பெயர் சாதி குணம் கன்மம் பொருள் என்னும் ஐந்து வேறுபாடுகளோடு அப்பொருளை அறிதல் சவிகற்பக்காட்சியாம். சவிகற்பம் - வேறுபாட்டோடு கூடியது.

தாண்டவன் என்பது பெயர். பிராமணன் என்பது சாதி. சிவப்பன் என்பது குணம். தேவபூசகன் என்பது கன்மம் (தொழில்). இவன் என்பது பொருள். இன்னும், மா என்பது பெயர். விருட்சம் என்பது சாதி. வண்ணம் வடிவு முதலியன குணம். அசைதல் நிற்றல் பூத்தல் முதலியன கன்மம். மரம் என்பது பொருள்.

5. அவிகற்பவுணர்வு - சவிகற்ப அறிவு. அ - அந்த. மேலே சொன்ன விகற்பவுணர்வைச் சுட்டிநின்றது.

பொழிப்பு. ஒருபொருளைப் பொதுவகையாகக் காணும் ஆன்மசிற்சத்தி நிருவிகற்பக்காட்சியாம். அதனை இன்னதென்று துணியாது ஆராயும் ஆன்மசிற்சத்தி ஐயக்காட்சியாம். அதனை மற்றொன்றாகக் கருதும் ஆன்மசிற்சத்தி விபரீதக்காட்சியாம். பெயர் முதலிய வேறுபாடுகளோடு அறியும் ஆன்மசிற்சத்தி சவிகற்பக்காட்சியாம்.

### 4. காட்சி முதலிய மூன்று பிரமாணங்களின் பாகுபாடும், பிரமேயங்களின் பாகுபாடும்.

**10.** காண்டல் வாயின் மனந்தன்வே தனையோ டியோகக் காட்சியென, ஈண்டு நான்கா மனுமானந் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டாம், மாண்ட வுரைதந் த்ரமந்திரத்தோ டுபதே சச்சொ லெனமூன்றும், பூண்ட வளவைக் கெதிர்புலன்றன் னியல்பு பொதுவென் றிரண்டாமே.

(இ-ள்). காண்டல் - காட்சிப்பிரமாணம்,—வாயில் - இந்திரியக்காட்சியும்,—மனம் - மானதக்காட்சியும்,—தன்வேதனையோடு - தன்வேதனைக்

காட்சியும்,—யோகக்காட்சி - யோகக்காட்சியும் என,—ஈண்டு நான்காம் - இவ்வாறு நான்குவகைப்படும்,—அனுமானம் - அனுமானப்பிரமாணம்,—தனக்கும் பிறர்க்கும் என்று - தன்பொருட்டனுமானமும் பிறர்பொருட்டனுமானமும் என,—இரண்டாம் - இரண்டுவகைப்படும்,—மாண்ட உரை - மாட்சிமையுடைய ஆகமப்பிரமாணம்,—தந்த்ரம் - தந்திரகலையும்,—மந்திரத்தோடு - மந்திரகலையும்,—உபதேசச் சொல் என - உபதேசகலையும் என,—மூன்றும் - மூன்றுவகைப்படும்,—பூண்ட அளவைக்கு எதிர்புலன் - சொல்லப்பட்ட இப்பிரமாணங்களால் அளந்தறியப்படும் பிரமேயமாகிய பொருள்கள்,—தன்னியல்பு பொது என்று இரண்டாம் - சிறப்பிலக்கணமுடையது பொதுவிலக்கணமுடையது என இரண்டுவகைப்படும்.

குறிப்பு. 1. பிரமேயம் - பிரமாணத்தால் அளக்கப்படும் பொருள். பிர - உபசர்க்கம். மேயம் - அளக்கப்படுவது. மா + ய=மேய. மா - அளத்தல். ய - ஒரு விகுதி.

2. வாயிற்காட்சி மானதக்காட்சிகளின் இயல்பு. (செ. 12. பார்)

3. தன்வேதனைக்காட்சி யோகக்காட்சிகளின் இயல்பு, (செ. 13. பார்)

4. தன்பொருட்டனுமான பிறர்பொருட்டனுமானங்களின் இயல்பு. (செ. 14. பார்)

5. தந்திர மந்திர உபதேச கலைகளின் இயல்பு, (செ. 19. பார்)

6. பொதுவியல்பு சிறப்பியல்புகள், (செ. 11. பார்)

பொழிப்பு. காட்சி, இந்திரியக்காட்சி மானதக்காட்சி தன்வேதனைக்காட்சி யோகக்காட்சி என, நான்குவகைப்படும். அனுமானம், தன்பொருட்டனுமானம் பிறர்பொருட்டனுமானம் என, இருவகைப்படும். ஆகமம், தந்திரகலை மந்திரகலை உபதேசகலை என, மூவகைப்படும். இப்பிரமாணங்களால் அறியப்படும் பொருள்கள் சிறப்பு பொது என்னும் இருவகை இலக்கணங்களையுடையன.

## 5. சிறப்பியல்பு போதுவியல்புகளின் இலக்கணம்.

11. அன்னிய சாதி யுந்தன் சாதியு மகன்று நிற்றல்
தன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்தல்
துன்னிய பொதுவி யற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவு மடங்கிடு மான முற்றால்.

(இ - ள்). அன்னிய சாதியும் - ஒருபொருள் வேற்றுச்சாதிப்பொருளின் தன்மையும்,—தன்சாதியும் - தன்சாதிப்பொருளின் தன்மையும்,—அகன்று - நீங்கி,—நிற்றல் - தனக்குமாத்திரமுரிய தன்மையோடு நிற்றல்,—தன்னியல்பு - சிறப்பியல்பாம்,—அன்னியத்தைத் தவிர்ந்து - வேற்றுச்சாதிப்பொருளை நீங்கி,—தன்சாதிக்கு ஒத்தல் - தன்சாதிப் பொருளுக்கு ஒத்துநிற்றல்,—துன்னிய பொது இயற்கை - பொருந்திய பொதுவியல்பாம்,—மானம் உற்றால் - காட்சி முதலிய பிரமாணங்களால் அளந்தறியுமிடத்து,—மன்

னிய பொருள்கள் யாவம் - பொருந்திய பிரமேயப்பொருள்களெல்லாம்,— சொன்ன இவ்விரண்டினுள்ளே அடங்கிடும் - சொல்லப்பட்ட இந்த இரண்டு இயல்பினுள் அடங்குவனவாம்.

குறிப்பு. 1. சாதி - ஓரினத்துப் பலபொருளுக்குப் பொதுவாயதோர் தன்மை.

2. சிறப்பியல்பு பொது வியல்பு - தேமா என்னுமிடத்துப் பலா தென்னைமுதலியவைகள் அன்னியசாதியாம். மா தன்சாதியாம். வேற்றுச்சாதியாகிய பலா முதலியவற்றின் இயல்பையும் தன்சாதியாகிய மாவின் இயல்பையும் அகன்று தேமா எனத் தனக்குமாத்திரமுரிய தன்மைகளோடு நிற்றல் சிறப்பியல்பு. மா எனப் பொதுவாகக் கூறுமிடத்து வேற்றுச்சாதியாகிய பலா முதலியனவற்றை ஒழித்துத் தன்சாதிக்கெல்லாம் ஒப்ப மாமரம் எனப் பொதுப்பெயர் பெற்று நிற்றல் பொதுவியல்பாம். தேமா - தித்திப்பான கனிகளையுடைய மாமரம்.

இந்நூலிற் கூறப்படும் பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களுள், பதியாகிய பொருளுக்குப் பசுவும் பாசமும் அன்னியசாதியாம். சிவன் சதாசிவன் மகேசுவரன் என்னும் சத்திபேத வடிவங்கள் மூன்றும் தன்சாதியாம். பசு பாசங்களின் இயல்பையும் தன்சாதியாகிய சத்திபேத வடிவங்களின் இயல்பையும் அகன்று நிற்றல் சொரூபசிவம் எனப்படும் சிறப்பியல்பாம். பசு பாசங்களை ஒழித்துத் தன்சாதியாகிய சத்திபேத வடிவங்களோடு சமமாய் நிற்றல் பொதுவியல்பாம்.

பசுவர்க்கத்துள், சகலருக்குப் பதியும் பாசமும் அன்னியசாதியாம். விஞ்ஞானகலர் பிரளயாகலர்கள் தன்சாதியாம். பதிபாசங்களின் இயல்பையும் விஞ்ஞானகலர் பிரளயாகலர்களின் இயல்பையும் நீங்கி நிற்றல் சகலருக்குச் சிறப்பியல்பாம். பதிபாசங்களை ஒழித்துத் தன்சாதியாகிய விஞ்ஞானகலர் பிரளயாகலர்களுக்குச் சமானமாய்ப் பசு என நிற்றல் பொதுவியல்பாம். இங்ஙனம் விஞ்ஞானகலர் பிரளயாகலராகிய ஏனைய பசுவர்க்கத்துக்குங் கண்டுகொள்க.

மலமாயை கன்மங்களுள், மலத்துக்குப் பதியும் பசுவும் அந்நியசாதியாம். மாயையும் கன்மமும் தன்சாதியாம். பதி பசுக்களின் இயல்பையும் தன்சாதியாகிய மாயா கன்மங்களின் இயல்பையும் அகன்று நிற்றல் மலத்தின் சிறப்பியல்பு. பதிபசுக்களை ஒழித்துத் தன்சாதியாகிய மாயாகன்மங்களுக்குச் சமானமாய் நிற்றல் அதன் பொதுவியல்பாம். இங்ஙனம் மாயா கன்மங்களாகிய ஏனைய மலங்களுக்குங் கண்டுகொள்க.

3. இச்செய்யுள் சூசிகடாக நியாயம்பற்றி முன்வைக்கப்பட்டது.

பொழிப்பு. ஒருபொருளுக்குமாத்திரமே உரியதாய் நிற்குந் தன்மை சிறப்பியல்பாம். தன்சாதிப் பொருட்கெல்லாம் ஒப்ப நிற்குந் தன்மை பொதுவியல்பாம். பிரமாணங்களாற் பிரமேயங்களை அறியும்பொழுது அவைகள் இவ்விரண்டு இயல்புகளுள் ஒன்றுபற்றி அறியப்படும்.

## 6. இந்திரியக்காட்சி மானதக்காட்சிகளின் இலக்கணம்.

12. உயிரினோ டுணர்வு வாயி லொளியுரு வாதி பற்றிச்
செயிரொடு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞான மைம்புலன் சார்ந்து யிர்க்கண்
மயர்வற வந்த ஞான மானதக் காண்ட லாமே.

(இ - ள்). உயிரினோடு - அளப்பவனாகிய ஆன்மாவோடு,—உணர்வு - அறிவாகிய சிற்சத்தி,—வாயில் - மனம் என்னும் அந்தக்கரணத்தாற் செலுத்தப்படும் கண்முதலிய ஞானேந்திரியங்களையும்,—ஒளி (ஆதி) - தேயு முதலிய பூதங்களையும்,—உரு (ஆதி) - உருவம் முதலிய தன்மாத்திரைகளையும்,—பற்றி - பொருந்தி,—செயிர் ஒடு விகற்பம் இன்றி - சந்தேக விபரீதக்குற்றங்களும் பெயர் சாதி முதலிய விகற்பமுமின்றி,—தெரிவது - பஞ்சவிடயங்களையும் அறியும் அறிவு,—இந்திரியக்காட்சி - இந்திரியக்காட்சியாம்,—ஐம்புலன் சார்ந்து - அங்ஙனம் பஞ்சவிடயங்களையும் பொருந்தி அறிந்த,—அயர்வு இல் இந்திரிய ஞானம் - நிருவிகற்ப அறிவாகிய இந்திரியக்காட்சி அறிவு,—உயிர்க்கண் - புத்திதத்துவத்தின்கண்,—மயர்வு அற - சந்தேக விபரீதக் குற்றங்களாகிய மயக்கமின்றி,—வந்த ஞானம் - பெயர் சாதி முதலிய விகற்பத்தோடு வருதலினால் உண்டாகும் சவிகற்ப அறிவு,—மானதக்காண்டலாம் - மானதக்காட்சியாம்.

குறிப்பு. 1. உயிரினோடுணர்வு - உயிர் - பிரமாதா, அளப்பவன். உணர்வு - பிரமாணம், அளவை. விடயங்கள் - அளக்கப்படும்பொருள்கள், பிரமேயப்பொருள்கள்.

2. ஒளியாதி - ஆன்மசிற்சத்தி ஞானேந்திரியங்களைக் கருவிகளாகக்கொண்டு விடயங்களை அறியும்பொழுது, அவ்விந்திரியங்களுக்கு ஆகாயம் முதலிய பஞ்சபூதங்கள் துணையாய் வலிசெய்து உடன் நிற்குமாதலால் அங்ஙனம் கூறப்பட்டது.

3. உருவாதி - உருவம் முதலிய தன்மாத்திரைகள். இவை அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் அவற்றைவிட்டு நீங்காது உடனாய் நிற்கும்.

4. இந்திரிய விடயசம்பந்தம் விடயபேதத்தினால் (a) சையோகம் (b) சையுத்தசமவாயம் (c) சையுத்தசமவேத சமவாயம் (d) சமவாயம் (e) சமவேதசமவாயம் (f) விசேடண விசேடியபாவம் என அறுவகைப்படும். சம்பந்தமெனினும் சந்நிகர்ஷமெனினும் ஒக்கும்.

(a). சையோகம்:—கண்ணாற் குடத்தைக் காணுங்காற் கண்ணுக்குங் குடத்துக்குமுள்ள சம்பந்தம்போல்வது சையோக சம்பந்தமாம். சையோகம்-புணர்ச்சி, இயைபு. சம்யோகம் என்பது சய்யோகம் எனவிகாரப்பட்டுத் தமிழிற் சையோகம் என வரலாயிற்று. சம் - உபசர்க்கம். யோகம்-புணர்ச்சி.

(*b*). சையுத்தசமவாயம்: - கண்ணொடு புணர்ந்ததாகிய குடத்தின்கணுள்ள கருமை முதலிய உருவத்தைக் காணுங்காற், கண்ணுக்கும் உருவத்துக்குமுள்ள சம்பந்தம்போல்வது சையுத்த சமவாய சம்பந்தமாம். சையுத்தம் - புணர்ந்தது. சமவாயம் - ஒற்றுமை.

(*c*). சையுத்தசமவேதசமவாயம்: - கண்ணொடு புணர்ந்த குடத்திலே ஒன்றியதாயிருக்கும் உருவத்தின் தன்மையைக் காணுங்காற் கண்ணுக்கும் உருவத்தன்மைக்குமுள்ள சம்பந்தம் போல்வது சையுத்த சமவேத சமவாய சம்பந்தமாம். சையுத்தம் - புணர்ந்தது. சமவேதம் - ஒன்றியது.

(*d*). சமவாயம்: - செவித்துளையிலிருக்குஞ் சுரோத்திர விந்திரியத்தாலே சத்தத்தை உணருங்கால் சுரோத்திரத்துக்கும் சத்தத்துக்குமுள்ள சம்பந்தம் போல்வது சமவாயசம்பந்தமாம். சமவாயம் - ஒற்றுமை. சுரோத்திரவிந்திரியம் ஆகாயமாதலால் ஆகாயமாகிய குணிக்கும் அதன் குணமாகிய சத்தத்துக்கும் ஒற்றுமையுண்மை அறிக.

(*e*). சமவேதசமவாயம்: - சுரோத்திரவிந்திரியத்தாலே சத்தத்தன்மையை உணருங்கால், சுரோத்திரத்துக்கும் சத்தத்தன்மைக்குமுள்ள சம்பந்தம்போல்வது சமவேதசமவாய சம்பந்தமாம். சமவேதம் - ஒன்றியது.

(*f*). விசேடணவிசேடியபாவம்: - அபாவத்தைக் காணுங்கால் விசேடணத்தன்மையும் விசேடியத்தன்மையுமாகிய சம்பந்தம் கொள்ளப்படும். "குடமில்லது இப்பூதலம்" என்றவிடத்து, கண்ணொடுகூடிய பூதலத்திற் குடமின்மை விசேடணம். "பூதலத்திற் குடமில்லை" என்றவிடத்து குடமின்மை விசேடியம். சையோகம் முதலிய இவ்வாறும் சித்தாந்தத்திற்கு உடன்பாடல்லனவாயினும் பிறர்மதம்பற்றி எடுத்து வழங்கப்படுகின்றன.

5. அயர்விலிந்திரிய ஞானம் - விகற்பமாய் அறிதலின்றி நிருவிகற்பமாய் அறியும் இந்திரியக்காட்சி. அயர்வு - அகலம், விரிவு.

6. மானதக்காட்சி, மானதம் - மன்சம்பந்தமுடையது.

பொழிப்பு. ஞானேந்திரியம் பூதங்கள் தன்மாத்திரைகள் ஆகிய இவற்றைப் பொருந்திச் சத்தாதிவிடயங்களை நிருவிகற்பமாய் அறியும் அறிவு இந்திரியக்காட்சியாம், சவிகற்பமாய் அறியும் அறிவு மானதக்காட்சியாம்.

### 7. தன்வேதனைக்காட்சி யோகக்காட்சிகளின் இலக்கணம்.

13. அருந்தின்பத் துன்ப முள்ளத் தறிவினுக் கராக மாதி
தருந்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேச கால வியல்பகல் பொருள்க ளெல்லாம்
இருந்துணர் கின்ற ஞான மியோகநற் காண்ட லாமே.

(இ - ள்). அராகம் ஆதி தரும் - அராகம் முதலிய ஐந்து தத்துவங்களாலுஞ் செலுத்தப்பட்டு,—அருந்து இன்பத்துன்பங்கள் - அனுபவிக்கப்ப

டும் இன்பத்துன்பங்கள்,—உள்ளத்து அறிவினுக்கு - ஆன்மாவின் அறிவிற்கு விடயமாதல்,—தன் வேதனைக்காட்சி ஆம் - தன் வேதனைக்காட்சி எனப்படும்,—மலங்கள் - மலசத்திகளை,—சமாதியான் வாட்டி - இயமம் நியமம் முதலிய அட்டாங்கயோக சமாதியாற் கெடுத்து,—இருந்து - ஓரிடத்திருந்து,—பொருந்திய தேசம் காலம் இயல்பு அகல் பொருள்கள் எல்லாம் - பொருந்திய மூவிடத்தும் முக்காலத்தும் இயல்பாக விரிந்த பொருள்களெல்லாவற்றையும்,—உணர்கின்ற ஞானம் - காண்கின்ற அறிவு - நல்யோகக் காண்டல் ஆம் - நல்லயோகக் காட்சியாம்.

குறிப்பு. 1. அருந்தின்பத் துன்பமுள்ளத் தறிவினுக்கராகமாதி தருந் தன்வேதனையாங் காட்சி: - புத்திதத்துவத்திற் சவிகற்பமாய்ப் பொருந்திய மானதக்காட்சி உணர்வு, முக்குணங்களுள்ளே சாத்துவிக குணத்தோடு கூடுதலால் இன்பமாகவும், தமோகுணத்தோடு கூடுதலால் துன்பமாகவுந் தோன்றும். அவ்வின்பத்துன்ப உணர்வைப் புருடன் அனுபவிக்கும்படி கலை காலம் நியதி வித்தை அராகம் என்னும் ஐந்து தத்துவங்களும் பொருத்தும். பொருத்திய அவ்வின்பத் துன்பங்களைப் புருடனது அறிவு அறிவது தன்வேதனைக்காட்சியாம். இந்திரியங்களின் சகாயம் வேண்டாது தன் சுக துக்காதி அனுபவங்களை அறிவிற் காண்டலால் தன்வேதனைக்காட்சி எனப்பட்டது. தன் - தன்னுடைய. வேதனை - சுக துக்கம் முதலிய அநுபவம்.

2. சமாதியான் மலங்கள் வாட்டி.........: - ஆன்மசிற்சத்தி மூவிடத்தும் முக்காலத்தும் விரிந்த பொருள்களைக் காணுமியல்புள்ளதாயினும், அவ்வாறு காணவொட்டாது தடைசெய்து நிற்பன மலசத்திகளாம். அம்மல சத்திகளைச் சிவசத்தி கலை முதலிய தத்துவங்களாற் சிறிதே நீக்கி ஆன்ம சிற்சத்தியை ஏகதேசமாக விளக்க, அந்நிலையில் இந்திரியக்காட்சி மானதக் காட்சி தன்வேதனைக்காட்சி என்னும் இவை நிகழும். மலசத்திகளை நீக்கி ஆன்மசத்தியை விளக்குதற்குக் கலையாதி தத்துவங்கள் வியஞ்சகமாகும்.

யோகசமாதியில் அவ்வாறின்றி மலசத்திகள் வாட்டமுறுதலால், ஆன்மசிற்சத்தி ஏகதேசமாதலின்றி மூவிடத்தும் முக்காலத்தும் விரிந்தபொருள்களைக் காணும் வல்லமை பெறும். அதனால் யோகக்காட்சி நிகழும். மூவிடம் - மேலும் கீழும் நடுவுமாகிய மூன்றிடத்துமுள்ள உலகங்கள். முக்காலம் - இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் மூன்று காலங்கள்.

யோகக்காட்சியில், நிருவிகற்பஞானம் ஞானானந்த அநுபவ சுபாவமாக நிற்றலும், சவிகற்பஞானம் மூவிடத்தும் முக்காலத்தும் விரிந்த பொருள்களைக் காணுதலுமாம். (சிவாக்கிர.)

பொழிப்பு. இன்பத் துன்ப அனுபவங்களை அறியும் அறிவு தன்வேதனைக்காட்சியாம். மூவிடத்தும் முக்காலத்துமுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் யோகசமாதியில் அறியும் அறிவு யோகக்காட்சியாம்.

## 8. தன்பொருட்டனுமான பிறர்பொருட்டனுமானங்களின் இலக்கணம்.

**14.** பக்க மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்து ணரத், தக்க ஞானந் தன்பொருட்டாம் பிறர்தம் பொருட்டா மனு மானந், தொக்க விவற்றாற் பிறர்தெளியச் சொல்ல லாகு மச்சொல் லும், மிக்க வன்னு வயத்தினொடு வெதிரே கச்சொல் லெனவிரண் டாம்.

(இ-ள்) மூன்று ஏது உடைய பொருளை - இயல்பு காரியம் அநுபலத்தி என்னும் மூன்று ஏதுக்களுள் ஓர் ஏதுவுடைய பொருளை,—பக்கம் மூன்றின் - பக்கம் சபக்கம் விபக்கம் என்னும் மூன்றில் வைத்து,—பார்த்து உணரத்தக்க ஞானம் - அவிநாபாவம்பற்றி ஆராய்ந்து அறியத்தக்க அறிவு,—தன்பொருட்டு (அனுமானம்) ஆம் - தன்பொருட்டனுமானமாம்,—பிறர் தம் பொருட்டாம் அனுமானம் - பிறர்பொருட்டனுமான மெனப்படுவது,—தொக்க இவற்றால் பிறர் தெளியச் சொல்லல் ஆகும் - பக்கத்தொடு கூடிய ஏது மூன்றாலும் பிறர் அறியப் போதிக்கும் அறிவாகும்,—அச்சொல்லும் - அங்ஙனம் போதிக்கும் வாக்கியமும்,—மிக்க அன்னுவயத்தினோடு வெதிரேகச்சொல் என - மேலான உடம்பாட்டு வாக்கியமும் எதிர்மறை வாக்கியமும் என,—இரண்டு ஆம் - இரண்டுவகைப்படும்.

குறிப்பு 1. பக்கம் மூன்று. (செ. 15 பார்).

2. ஏது மூன்று (செ. 16 பார்).

3. தன்பொருட்டனுமானம் (சுவார்த்தானுமானம்)- மூன்றேதுக்களில் ஓர் ஏதுவுடைய பொருளைப் பக்கம் மூன்றிலும் வைத்து ஒருவன் உணரும் உணர்ச்சி. (உ-ம்.) அடுக்களை முதலியவற்றிற் பலமுறையும் நெருப்பினிடத்துப் புகையுண்டாதலைக் கண்டு, நெருப்புள்ளவிடத்திற் புகையுமுண்டென அறிந்த ஒருவன் மலையினிடத்துச் சென்றவிடத்து அங்கே புகையைக் கண்டு, எங்கே புகையுண்டு அங்கே நெருப்புமுண்டு என்று நினைக்கிறான். அதன் பின்பு இம்மலையிலும் நெருப்புண்டென்று அநுமிக்கிறான். இவ்வுதாரணத்தில், பக்கம் - மலை: சபக்கம் - அடுக்களை; நெருப்பில்லை என்றறிதலினாலே தடாகம் விபக்கம். ஏது - புகை. இது காரியவேது. அநுமித்தல் - ஆராய்ந்தறிதல்.

4. பிறர்பொருட்டனுமானம் (பரார்த்தானுமானம்) - தான் தெரிந்த ஒன்றைப் பிறர் தெரியுமாறு உரைக்குமது. இவ்வனுமானம் (a) அன்னுவயச் சொல் (உடம்பாட்டுச்சொல்) (b) வியதிரேகச்சொல் (எதிர்மறைச்சொல்) என இருவகையாம். இவ்விரண்டும் (a) பிரதிஞ்ஞை, (b) ஏது, (c) திருட்டாந்தம் (உதாரணம்), (d) உபநயம் (ஏற்றல்), (e) நிகமனம் (முடிவு) என

ஐந்து உறுப்புக்களாற் பாகுபடுத்தியும் உரைக்கப்படும். இவற்றின் விரிவை 17-ம் செய்யுட் குறிப்புரையிற் காண்க.

5. தொக்கவிவற்றால் - பக்கம் மூன்றாலும் ஏது மூன்றாலும். தொக்க- கூடிய.

பொழிப்பு. மூன்றேதுக்களில் ஓர் ஏதுவுடைய பொருளைப் பக்கம் மூன்றிலும் வைத்து உணரும் உணர்ச்சி தன்பொருட்டனுமானமாம். அவ் வேது முதலியவற்றாற் பிறர் அறியும்படி உரைக்கும் அறிவு பிறர்பொருட் டனுமானமாம். பிறர் அறியும்படி உரைக்கும் சொல் உடம்பாட்டுச்சொல் எதிர்மறைச்சொல் என இருவகைப்படும்.

## 9. மூவகைப்பக்கங்களின் இலக்கணம்.

**15.** மூன்று பக்கம் பக்கநிகர் பக்க நிகரில் பக்கமெனத், தோன் றும் பக்கந் துணிபொருளுக் கிடமா மூவமை நிகர்பக்கம், ஆன்ற பொருள்சென் றடையாத விடமா நிகரில் பக்கமுதல், என்ற விர ண்டும் பொருளுண்மைக் கிடமா மொன்று பொருளின்றாம்.

(இ - ள்.) பக்கம் மூன்று - மேற்கூறிய பக்கம் மூன்றும்,—பக்கம் நிகர்பக் கம் நிகரில் பக்கம் எனத் தோன்றும் - பக்கமும் சபக்கமும் விபக்கமும் எனக் காணப்படும்,—பக்கம் துணிபொருளுக்கு இடம் ஆம் - அவற்றுட் பக்கமா வது சந்தேகித்துத் துணியப்படுவதாகிய பொருளிருக்கும் இடமாம்,—நிகர் பக்கம் உவமை - சபக்கமாவது துணியப்படுவதாகிய பொருளுக்கு உதாரண மாகக் காட்டப்படும் பொருளிருக்கும் இடமாம்,—ஆன்ற பொருள் சென்று அடையாத இடம் நிகரில் பக்கம் ஆம் - மாட்சிமையான அப்பொருள் போய்ப் பொருந்தாத இடம் விபக்கம் எனப்படும்,—முதல் என்ற இரண் டும் - இம்மூன்றனுள் முதலிற் சொல்லப்பட்ட பக்கம் சபக்கம் இரண்டும்,— பொருள் உண்மைக்கு இடம் ஆம் - பொருள் உண்டென அறிதற்கு இட மாம்,—ஒன்று - மற்றைய விபக்கம்,—பொருள் இன்று ஆம் - அப்பொருள் இல்லையென்றறிதற்கு இடமாவதாம்.

குறிப்பு 1. "இம்மலை நெருப்புடைத்து; எதனால், புகையுடைமையான்; எதுபோல, அடுக்களைபோல" என்னும் உதாரணத்தில், ஐயுற்றுத் துணி யும் பொருள் நெருப்பு. அது இருக்குமிடம் மலை. மலை - பக்கம். காட்சியி னாலே துணிந்த பொருளாகிய நெருப்பு இருக்குமிடம் அடுக்களை. அடுக் களை-சபக்கம். துணிந்த பொருளில்லாதவிடம் தடாகம். தடாகம்-விபக்கம்.

ஒருபொருளை அனுமித்தறிதற்குப் பக்கம் சபக்கம் விபக்கம் என்னும் மூன்றின் உணர்ச்சியும் வேண்டப்படும்.

2. நிகர்பக்கம் நிகரில்பக்கம்—சமபக்கம் என்பது நோக்கி நிகர்பக்கம் எனவும், விஷமபக்கம் என்பது நோக்கி நிகரில் பக்கம் எனவும் கூறினார், சமம் - நிகர். விஷமம் - நிகரின்மை. பக்கம் - சார்பு.

பொழிப்பு. பக்கம் சபக்கம் விபக்கம் எனப் பக்கம் மூன்றுவகைப்படும். அவற்றுள், கருத்தினாலே துணியப்படும் பொருளிருக்குமிடம் பக்கம் எனப்படும். அதற்கு உதாரணமாய்க் காட்டப்படுவதாய்க் காட்சியினாலே துணிந்த பொருளிருக்குமிடம் சபக்கம் எனப்படும். துணிந்தபொருளில்லாதவிடம் விபக்கம் எனப்படும். முன்னைய இரண்டும் பொருளுண்மையைச் சாதிக்கும், பின்னையதொன்றும் அஃதில்லையென்றறிதற்கிடமாம்.

## 10. மூவகையேதுக்களும் அவற்றின் இலக்கணமும்.

16 ஏது மூன்று மியல்புகா ரியத்தோ டநுப லத்தியிவை
ஓதி னியல்பு மாமரத்தைக் காட்ட லுறுகா ரியம்புகைதன்
ஆதி யாய வனல்காட்ட லாகு மநுப லத்தியது
சீத மின்மை பனியின்மை காட்டல் போலுஞ் செப்பிடினே.

(இ - ள்.) இயல்பு காரியத்தோடு அநுபலத்தி இவை ஏது மூன்றும் - இயல்பு காரியம் அநுபலத்தி என்னும் இவை மேற் கூறிய மூன்றேதுக்களுமாம்,—ஓதின் - இவற்றின் இலக்கணம் கூறப் புகின்,—இயல்பு - இயல்பேது,—மாமரத்தைக் காட்டல் (ஆகும்) - மா முதலிய சொற்கள் தமக்கு இயல்பாயுள்ள ஆற்றலால் மரம் முதலிய பொருளை உணர்த்துதலாம்,—உறுகாரியம் - பொருந்தியகாரியவேது,—புகைதன் ஆதியாய அனல் காட்டல் ஆகும் - புகை முதலிய காரியங்கள் தத்தங் காரணங்களாகிய நெருப்பு முதலியவற்றை உணர்த்துதலாகும்,—அநுபலத்தியது - அநுபலத்தியேதுவாவது,—செப்பிடின் - சொல்லுமிடத்து,—சீதம் இன்மை பனி இன்மை காட்டல் - குளிரின்மையாகிய காரியவின்மை பனியின்மையாகிய காரணவின்மையையும் பனியின்மையாகிய காரணவின்மை குளிர் வாராமையாகிய காரியவின்மையையும் உணர்த்துதலாம்.

குறிப்பு. 1. இயல்பு - இயற்கை. காரியம் - காரணத்தாலாயது, ஆக்கப்பட்டது. அநுபலத்தி - அறியாமை, இல்லை என்றறியும் அறிவு. அநுபலத்தி: அந் - எதிர்மறை. உபலத்தி - அறிதல். உப - சமீபம், கிட்ட. லப்தி - பெறுதல், அடைதல்.

2. மா என்னுஞ் சொல் மரமாகிய பொருளை உணர்த்துதலும், புகையாகிய காரியம் நெருப்பாகிய காரணத்தை உணர்த்துதலும், குளிரின்மை பனியின்மையை உணர்த்துதலும் போல உணர்ச்சி மூவகைப்படுதலின், ஏதுவும் மூவகைப்பட்டன.

3. ஆற்றல் - இச்சொல் இப்பொருளை உணர்த்தும் என்னும் இறைவனியமம். சொற்கும் பொருளுக்குமுளதாகிய சம்பந்தம் என்பாருமுளர்.

4. அநுபலத்தியது. அது - பகுதிப்பொருள் விகுதி. போலும் - அசை.

பொழிப்பு. இயல்பேது காரியவேது அநுபலத்தியேது என ஏது மூன்றுவகைப்படும். மா என்னுஞ் சொல்லில் இயல்பாயுள்ள ஆற்றல் மாமரமாகிய பொருளை உணர்த்துதல் இயல்பேதுவாம். புகையாகிய காரியம் நெருப்பாகிய காரணத்தை உணர்த்துதல் காரியவேதுவாம். குளிரின்மையாகிய காரியவின்மை பனியின்மையாகிய காரணவின்மையையும், பனியின்மையாகிய காரணவின்மை குளிர் வாராமையாகிய காரியவின்மையையும் உணர்த்துதல் அநுபலத்தியேதுவாம்.

## 11. அன்னுவய வேதிரேகச் சொற்களின் இலக்கணம்.

**17.** புகையா லனலுண் டடுக்களைபோ லென்னப் புகற லன்னுவயம், வகையா மனலி லாவிடத்துப் புகையின் றுகு மலரினெடு, முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரே கச்சொலிவை, தொகையா றுறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாரு முளர் துணிந்தே.

(இ-ள்). (மேற்கூறிய அன்னுவயச்சொல் வெதிரேகச்சொல் என்னும் இரண்டனுள்) புகையால் அனல் உண்டு - புகையுள்ள இடத்திலே நெருப்புண்டு,—அடுக்களைபோல் என்னப்புகறல் - அடுக்களை போல என்று கூறுஞ்சொல்,—அன்னுவயம் - உடம்பாட்டுச்சொல்லாம்,—வகையாம் அனல் இலா இடத்துப் புகை இன்றாகும் - விளக்கமாகிய நெருப்பில்லாதவிடத்துப் புகையில்லையாம்,—மலரினொடு முகை ஆர் நீரில் போல் என்று மொழிதல் - மலரும் அரும்பும் நிறைந்த தாமரைத் தடாகத்தைப்போல என்று கூறுஞ் சொல்,—வெதிரேகச்சொல் - எதிர்மறைச் சொல்லாம்,—இவை - இந்த இரண்டுவகைச் சொற்களையும்,—தொகை ஆர் ஐந்து உறுப்பொடும் கூட - தொகைபொருந்திய மேற்கோளும் ஏதுவும் திருட்டாந்தமும் உபநயமும் நிகமனமும் என்னும் ஐவகை உறுப்புக்களோடும் இணங்கவைத்து,—துணிந்து சொல்வாரும் உள்ர் - தெளியக்கூறுவாருமுளர்.

குறிப்பு 1. அந்நுவ்யம் - உடன்பாடு, உண்மை, காரணத்தைக் காரியந் தொடர்தல், பின்போதல். அநு + அயம் = அந்வயம். அநு - பின். அயம் - போதல். தமிழில் அந்நுவயம் என்றாயிற்று.

2. வெதிரேகம் - எதிர்மறை, இன்மை, மீட்சி. வியதிரேகம் என்னும் வடமொழி வெதிரேகம் எனத் தற்பவமாயிற்று.

3. பக்கம் முதலிய மூன்றில் வைத்து ஏதுக்கள் மூன்றனுள் ஒரேதுவைக்கொண்டு ஒருவன் தான் அனுமித்தறிந்ததைப் பிறருக்குப் போதிக்கும்பொழுது உடம்பாட்டுச்சொல்லாலும் எதிர்மறைச்சொல்லாலும் உணர்த்துதல் சித்தாந்த சைவரது முறையாம். அஃதாவது, எங்கே புகையுண்டு, அங்கே நெருப்புண்டு; எதுபோலவெனின், அடுக்களை போல என உடம்பாடு பற்றியும், அவ்வுணர்வை வலியுறுத்தற்பொருட்டு, எங்கே நெருப்

பில்லை, அங்கே புகையில்லை, எதுபோலவெனின், தடாகம் போல என மறுதலைபற்றியும் உணர்த்துதலாம்.

இவ்வுதாரணத்தில் மேற்கோள் ஏது திருட்டாந்தம் என்னும் மூன்று உறுப்புகள் அடங்கியிருக்கின்றன. எப்படியெனின், இம் மலை நெருப்புடைத்து (மேற்கோள்), புகையுடைமையான் (ஏது), அடுக்களைபோல (திருட்டாந்தம்). இம் மலை புகையுடைத்தன்று (மேற்கோள்), நெருப்பின்மையால் (ஏது), தடாகம் போல (திருட்டாந்தம்). இங்ஙனம் மூன்று உறுப்புகளால் விளக்கும் இவற்றைத் தார்க்கிகர் முதலியோர் ஐந்து உறுப்புக்களைக் கொண்டும் விளக்குவர்.

4. இவை தொகையாருறுப்பைந்தொடுங் கூடச் சொல்வாருமுளர் துணிந்தே:-மேற்கூறியவாறு மூன்று உறுப்புக்களால் விளக்கும் இவற்றைத் தார்க்கிகர் முதலியோர் ஐந்து உறுப்புக்களைக்கொண்டு விளக்குவர். அஃதாவது:—

அந்நுவயவாக்கியம்.

(*a*). இம்மலை நெருப்புடைத்து (பிரதிஞ்ஞை).

(*b*). புகையுடைமையான் (ஏது).

(*c*). யாது யாது புகையுடைத்து, அது அது நெருப்புடைத்து. அடுக்களைபோல (திருட்டாந்தம்).

(*d*). இதுவும் அங்ஙனம் (உபநயம்).

(*e*). ஆதலின் இங்ஙனம் (நிகமனம்).

இங்கே "இம்மலை நெருப்புடைத்து" என்னும் வாக்கியம், மலையைக் கருத்தினாலே துணியப்பட்ட பொருளாகிய நெருப்புடையதாக அறிவித்தலாற் பிரதிஞ்ஞையாயிற்று. பிரதிஞ்ஞையாவது பக்கத்தைத் துணிபொருளுடையதாக அறிவிக்கும் வாக்கியம். பிரதி - நிச்சயம். ஞை - அறிதல்.

"புகையுடைமையான்" என்னும் வாக்கியம் நெருப்போடும் உடனிகழும் குறியாகிய புகையை அறிவித்தலால் ஏதுவாயிற்று. ஏதுவாவது ஆல் ஆன் இன் என்னும் வேற்றுமையுருபுகளுள் ஒன்றீறாக நின்று துணிபொருளின் குறியை அறிவிப்பது. ஏது - காரணம்.

"அடுக்களைபோல" என்னும் வாக்கியம் நெருப்பும் புகையும் உடனிகழ்தலை நேரேகாண அறிவித்தலாலே திருட்டாந்தமாயிற்று. திருட்டாந்தமாவது துணிபொருளுக்கும் ஏதுவுக்குமுள்ள உடனிகழ்ச்சியை நேரே காட்டுவது. திருட்ட - காணப்பட்ட; அந்தம் - முடிபு.

"இதுவும் அங்ஙனம் என்னும் வாக்கியம் இம்மலையும் அடுக்களைபோலப் புகையுடையது என ஏதுவைப் பக்கத்திற் கொண்டுபோய் முடித்தலை அறிவித்தலால் உபநயமாயிற்று. உபநயமாவது ஏதுவைப் பக்கத்திலே கொண்டுபோய் முடித்தல். உப-கிட்ட. நயம்-கொண்டுபோதல்.

"ஆதலின் இங்ஙனம்" என்னும் வாக்கியம், புகையுடையதாதலின் இம்மலையும் நெருப்புடையதே என முடிந்தது முடித்தலாகிப், பிரதிஞ்ஞை யின் தடையிலா வலிமையை அறிவித்தலால், நிகமனமாயிற்று. நிகமனமாவது, பிரதிஞ்ஞையை நிச்சயிப்பது. நிகமனம் - முடிபு, நிச்சயம்.

### வெதிரேகவாக்கியம்.

உதாரணம்.

(*a*). இம்மலையில் நெருப்பில்லை (பிரதிஞ்ஞை).
(*b*). புகையின்மையான் (ஏது).
(*c*). தடாகம்போல (திருட்டாந்தம்).
(*d*). இம்மலையிலும் தடாகம்போலப் புகையில்லை (உபநயம்).
(*e*). புகையில்லையாதலின் இம்மலையிலும் நெருப்பில்லை (நிகமனம்).

பொழிப்பு. அன்னுவயமாவது புகையுள்ளவிடத்தில் அனலுண்டு, அடுக்களைபோல, எனச்சொல்லுதலாம். வெதிரேகச்சொல்லாவது நெருப் பில்லாதவிடத்துப் புகையில்லை, தடாகத்திற்போல், எனச்சொல்லுதலாம். இச்சொற்களைத் தார்க்கிகர் முதலியோர் பிரதிஞ்ஞையும் ஏதுவும் திருட் டாந்தமும் உபநயமும் நிகமனமும் என ஐந்து உறுப்புகள் கொண்டு தெளி வாகச் சொல்வர்.

## 12. அனுமானத்தில் அடங்கும் பிற அளவைகளின் இலக்கணம்.

13, போது நாற்றத் தாலறிதல் பூர்வக் காட்சி யனுமானம்
ஓது முறைய லறிவினள வுணர்தல் கருத லனுமானம்
நீதி யான்முற் கன்மபல நிகழ்வ திப்போ திச்செய்தி
ஆதி யாக வரும்பயனென் றறித லுரையா லனுமானம்.

(இ - ள்). நாற்றத்தால் போது அறிதல் - வாசனையாகிய ஏதுவைக் கொண்டு பூவாகிய பொருளை அறியும் அறிவு,—பூர்வக்காட்சி அனுமானம்- பூர்வக்காட்சியநுமானமாகும்,—ஓதும் உரையால் அறிவின் அளவு உணர் தல்,—ஒருவன் சொல்லும் வார்த்தையினுல் (அவனுடைய அறிவின் திறத்தை அநுமானித்து) அதனுல் அறிவினெல்லையை அநுமானித்து அறியும் அறிவு,—கருதல் அனுமானம் - கருதலநுமானமாகும்,—இப் போது நீதியான் நிகழ்வது முன் கன்மபலம் - இப்போது முறையோடு வந்து நிகழுஞ் சுகதுக்கமோகங்களின் அனுபவம் முற்பிறவியிற் செய்த புண் ணியபாவ கன்மங்களின் பயன் (என்று ஆகமங்கள் சொல்லுதலால்),—இச்

செய்தி ஆதியாக பயன் வரும் என்று அறிதல் - இப்பிறவியிற் செய்யும் இப் புண்ணியபாவ கன்மங்கள் காரணமாக அவற்றின் பயன்களாகிய சுகதுக்க மோகங்கள் மறுமையிற் சுவர்க்க நரகங்களிலும் பூமியிலும் வந்து பொருந்தும் என்று அந்த ஆகமவாக்கியங்கொண்டு அநுமானித்து அறியும் அறிவு,— உரையால் அனுமானம் - உரையநுமானமாகும்.

குறிப்பு. 1. போது நாற்றத்தாலறிதல் பூர்வக்காட்சியனுமானம்:-முன்னொருகால் தாழம்பூவையும் அதனோடு பிரிவின்றி நிகழும் பரிமளத்தையும் கண்டான் ஒருவன், தாழம்பூ வெளிப்படாதிருக்கவும் அதன் பரிமளம் வெளிப்பட்டு வீசுதலை நோக்கி "இங்கே தாழம்பூ இருக்கின்றது" என்று முன்னைக் காட்சியினால் அநுமித்து அறிவதுபோல்வது பூர்வக்காட்சியநுமானம். இது முன்னைக்காட்சிகொண்டு அநுமானித்தலாற் பூர்வக்காட்சியநுமானம் எனப்பட்டது. இது பிரத்தியக்ஷாநுமானம் என்றும், தன்மாநுமானம் என்றும், திருட்டாநுமானம் என்றும் சொல்லப்படும்.

2. ஓதுமுரையால் அறிவினளவுணர்தல் கருதலனுமானம்: - ஒருவன் சொல்லும் வார்த்தையினால் அறிவின்திறத்தை அநுமானித்து, அவ்வநுமானத்தால் அவன் அறிவின் உயர்ச்சியெல்லையை அநுமானித் தறியும் அறிவு கருதலநுமானம் என வருவித்துரைக்க. (ஞானப்). ஒருவன் சொல்லும் வார்த்தையினால் அறிவொடுபடச் சொல்லாமையை அநுமானித்து அவ்வநுமானத்தால் அவனறிவின் குறைவை அநுமானித்தல் எனக்கூறலும் இயையும் போலும். இது அநுமானநுமானம் எனவுஞ்சொல்லப்படும்.

3. உரையால் அனுமானம்: - வேதாகமங்களுள்ளே சொல்லியது கொண்டு சொல்லாத பொருள்களையும் அநுமானித்துத் துணிவது. உரை - வேதாகமம். இது ஆகமாநுமானம் எனவும், வசனலிங்காநுமானம் எனவும் சொல்லப்படும். (சிவாக்கிர).

4. "அவையிற்றின்மேலுமறைவர்" (7-ம் செய்யுள்) என்பதனாற் பெறப்பட்ட அளவைகள் பூர்வக்காட்சி முதலாகிய மூன்றும் எனக்காட்டி, அவை அநுமானத்துள்ளே அடங்கும் என்பது இங்கே காட்டப்பட்டது.

பொழிப்பு. நாற்றமாகிய ஏதுவைக்கொண்டு பூவினை அறிவதுபோல்வது பூர்வக்காட்சியநுமானம். ஒருவன் சொல்லும் வார்த்தைகொண்டு அவனறிவின் அளவுணர்தல்போல்வது கருதலநுமானம். இப்போது நிகழும் சுகதுக்கமோகங்கள் முற்பிறவியிற் செய்த கன்மங்களின் பயன்என்று ஆகமங்கள் சொல்லுதலால், இப் பிறவியிற் செய்யும் ஆகாமிய கன்மங்கள் காரணமாகச் சுகதுக்கமோகங்கள் மேலைக்கு வரும் என்று அநுமானித்தறிதல் போல்வது உரையநுமானமாம்.

## 13. மூவகை ஆகமப்பிரமாணங்களின் இலக்கணம்.

**19.** அநாதியே யமல ஞய வறிவனூ லரக மந்தான்
பிஞதிமா றின்றிப் பேண றந்திர மந்தி ரங்கண்
மஞதிக ளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையாகுந்
தஞதியீ றிலாதான் றன்மை யுணர்த்துத லுபதே சந்தான்.

(இ - ள்). அநாதியே அமலன் ஆய அறிவன் நூல் ஆகமம் தான் - அநாதியே மலத்திஞற் பந்திக்கப்படாத முற்றறிவுடைய முதல்வன் அருளிச் செய்த நூல்கள் வேதாகமங்களாம். அவை கருமகாண்டம் உபாசஞகாண்டம் ஞானகாண்டம் என மூவகைப்படும்,—பின் ஆதி மாறு இன்றிப் பேணல் - அவற்றுள் கருமகாண்டம் பற்றிப் பின் முன் மாறுபாடின்றிக் கிரியைகள் அனுட்டித்தலைத் தெரிவது,—தந்திரம் - தந்திரவுரையளவை எனப்படும்,—மஞதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை - உபாசஞகாண்டம்பற்றி மனம் முதலிய கருவிகளை அடக்கிக் கடவுளை உபாசிக்கும் முறைமையினைத் தெரிவது,—மந்திரங்கள் ஆகும் - மந்திரவுரையளவை எனப்படும்,—தன் ஆதி ஈறு இலாதான் தன்மை உணர்த்துதல் - ஞானகாண்டம் பற்றித் தனக்கு முதலும் முடிவும் இல்லாத முதல்வனது இலக்கணங்களையும் பசுபாசங்களின் இலக்கணங்களையும் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் தெரிவது,—உபதேசம் தான் - உபதேசவுரையளவை எனப்படும்.

குறிப்பு. 1. அறிவன் - சர்வஞ்ஞன், எல்லாம் அறிபவன், முற்றறிவுடையோன்.

2. ஆகமந்தான் - ஆகமம் என்பது வேதத்தையும் உணர்த்தும். வேதாகமங்களை ஆப்தவாக்கியம் என்றும் அவற்றை அருளிய சிவனைப் பரமாத்தன் என்றுஞ் சொல்வர். ஆப்தன் - உள்ளது கூறுவோன். வாக்கியம்-பதங்களின் கூட்டம்.

பொழிப்பு. வேதாகமங்களின் கருமகாண்டத்திற் சொல்லப்படுங் கிரியைகளை அனுட்டிக்கும் வகையைத் தெரிவது தந்திரவுரையளவையாம். உபாசஞகாண்டத்திற் சொல்லப்படும் கடவுள் வழிபாட்டைத் தெரிவது மந்திரவுரையளவையாம். ஞானகாண்டத்திற் சொல்லப்படும் பதி பசு பாசங்களின் இயல்பைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் தெரிவது உபதேசவுரையளவையாம்.

## 14. அனுமானப் போலி.

**20.** ஈண்டு பக்கப் போலிநான் கேதுப்போலி யொரு மூன்ருய்
வேண்டு மெழுமூன் ருகும்விளங் குவமைப் போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண் டிருபத் திரண்டாங்கருதிலிவை
ஆண்டு மொழிவ ரவையெல்லா மளக்கி லறுபத் தைந்தாகும்.

(இ - ள்). ஈண்டு பக்கப்போலி நான்கு - அநுமானவுறுப்பாகச் செறிந்த பக்கப்போலி நான்குவகையாகும்,—ஏதுப்போலி ஒரு மூன்றாய் வேண்டும் ஏழு மூன்றாகும் - ஏதுப்போலி மூவகைப்பட்டு விரியினாலே வேண்டப்படுகின்ற இருபத்தொன்றாகும்,—விளங்கு உவமைப் போலி ஈரொன்பான் காண்டும் - விளங்குகின்ற உவமைப்போலி பதினெட்டாகக் காண்போம்.—தோல்வித்தானம் இரண்டு இருபத்திரண்டாம் - தோல்வித்தானம் வகையால் இரண்டாகி விரியால் இருபத்திரண்டாகும்.—கருதில் இவை ஆண்டு மொழிவர் - ஆராயுங்கால் இவைகளை வாதம் நிகழ்ந்துங்கால் எடுத்துச் சொல்லுவர்,—அளக்கில் அவை எல்லாம் அறுபத்தைந்து ஆகும் - அளக்குமிடத்தில் அவைகளெல்லாம் அறுபத்தைந்தாகும்.

குறிப்பு. 1. ஈண்டுதல் - நெருங்குதல், செறிதல்.

2. பக்கப்போலியாவது பக்கத்துக்குரிய இலக்கணத்திலே குறைவுடையதாயிருந்து ஒருபுடை யொத்துப் பக்கம்போலத்தோன்றுவது. இதனை வடநூலார் பக்காபாசம் என்பர். பக்கம் - சார்பிடம், துணிந்தபொருளிருக்குமிடம். போலி - போன்றிருப்பது, பொய், ஆபாசம்.

3. ஏதுப்போலியாவது ஏதுவிலக்கணத்திற் குறைவுடையதாயிருந்தும் ஏதுப்போலத் தோன்றுவது. இதனை வடநூலார் ஏத்துவாபாசம் என்பர். ஏது + ஆபாசம் = ஏத்துவாபாசம். ஏது - காரணம்.

4. உவமைப்போலியாவது உவமையிலக்கணம், இல்லதாயிருந்தும் உவமைபோலத் தோன்றுவது. இதனை வடநூலார் திருட்டாந்தாபாசம் என்பர். திருட்டாந்தம் - உவமை, உதாரணம்.

5. தோல்வித்தானமாவது தருக்கவாதத்திலே தோல்விபெறும் இடம். இதனை வடநூலார் நிக்கிரகத்தானம் என்பர். நிக்கிரகம் - கண்டனம். தானம் - இடம். கண்டிக்கப்பெறுமிடம் என்க. (சிவாக்).

## பக்கப் போலி.

பக்கப்போலி நான்குவகைப்படும். அவை (1) அப்பிரசித்தவிசேடணம் (2) அப்பிரசித்தவிசேடியம் (3) அப்பிரசித்தோபயம் (4) அப்பிரசித்தாசம்பந்தம் என்பன.

1. அப்பிரசித்த விசேடணமாவது பக்கவிசேடணம் அறியப்படாததாயிருப்பது. அது பௌத்தன் சாங்கியனை நோக்கிச் "சத்தம் அநித்தியம்" என்பது போல்வது. இங்கே சத்தம் என்பது பக்கம். அநித்தியம் என்பது அதன் விசேடணம். சாங்கியன் எல்லாப்பொருளும் நித்தியம் என்பவனாதலின் அநித்தியம் என்னும் விசேடணம் அவனால் அறியப்படாததாயிற்று. அப்பிரசித்தம் - அறியப்படாதது. விசேடணம் - விசேடிப்பது, அடை.

2. அப்பிரசித்தவிசேடியமாவது விசேடியம் அறியப்படாததாய் இருப்பது. அது வைசேடிகன் பௌத்தனை நோக்கி "ஆன்மா அறிவுள்ளது" என்பது போல்வது. இங்கே பக்கமாய் நிற்கும் ஆன்மா என்பது விசேடியம். அறிவுள்ளது என்பது விசேடணம். பௌத்தன் ஆன்மா என ஒன்று இல்லை என்பவனாதலின், ஆன்மா என்னும் விசேடியம் அவனால் அறியப்படாததாயிற்று. விசேடியம் - விசேடிக்கப்படுவது, அடைகொளி.

3. அப்பிரசித்தோபயமாவது விசேடியம், விசேடணம் என்னும் இரண்டும் அறியப்படாதனவாயிருப்பது. அது வைசேடிகன் பௌத்தனை நோக்கி "ஆன்மா சுகதுக்ககாரணம்" என்பது போல்வது. இங்கே ஆன்மா என்பது விசேடியம். சுகதுக்க காரணம் என்பது விசேடணம். இவையிரண்டும் பௌத்தனாற் கொள்ளப்படாமையின் அறியப்படாததாயிற்று. அப்பிரசித்தம் - உபயம், இரண்டு.

4. அப்பிரசித்தாசம்பந்தமாவது விசேடியத்துக்கும் விசேடணத்துக்குமுள்ள சம்பந்தம் முன்னரே அறியப்பட்டதாயிருப்பது. அது சாங்கியன் பௌத்தனை நோக்கி "சத்தம் அநித்தியம்" என்பது போல்வது. இங்கே சத்தம் என்பது விசேடியம். அநித்தியம் என்பது விசேடணம். இவ்விரண்டின் சம்பந்தமும் அவன் கொள்பவனாதலின், அஃது அவனால் அறியப்பட்டதாயிற்று. ஒருவனாலே முன்னர் அறியப்பட்டதற்குப் பின்னர் அநுமானங் கூறுதல் வீண் ஆதலிற் போலியாயிற்று. அப்பிரசித்தம் - அறியப்படாதது. அசம்பந்தம் - சம்பந்தமின்மை. சம்பந்தமின்மை அறியப்படாதது எனவே சம்பந்தமுண்மை அறியப்பட்டதென்றதாம்.

இவை பாண்டிப்பெருமாளுடைய சிவஞானபோதவிருத்தியை அநுசரித்து எழுதியன. மறைஞானதேசிகர் இவைகளையும் அங்கீகரித்து வேறு நால்வகையுங் கூறுவர். அவை பக்ஷாபாசம், அநுமானபாசம், பிரதிஞ்ஞாபாசம், வசனபாசம் என்பன.

### ஏதுப் போலி.

ஏதுப்போலி ஒரு மூன்றுவன (1) அசித்தம், (2) விருத்தம், (3) அநைகாந்திகம் என்பன. அவற்றுள் அசித்தம் பன்னிரண்டுவகை. விருத்தம் இரண்டுவகை. அநைகாந்திகம் ஏழுவகை. ஆக ஏதுப்போலி இருபத்தொன்று.

### I. அசித்தம்.

அசித்தமாவது பக்கத்திலே இருக்கையில்லாத ஏது. இதனைச் சிவஞானமுனிவர் துணியப்படாதது என்பர். அசித்தம் - சித்தமாகாதது. அ - இன்மை. சித்தம் - துணிந்தது, முடிந்தது.

#### அசித்தவகை.

1. சொரூபாசித்தம்.
2. வியாத்தியதிகரணாசித்தம்.
3. விசேடியாசித்தம்.
4. விசேடணாசித்தம்.

5. பாகாசித்தம்.
6. ஆசிரயாசித்தம்.
7. ஆசிரயைகதேசாசித்தம்.
8. வியர்த்தவிசேடியாசித்தம்.
9. வியர்த்தவிசேடணுசித்தம்.
10. சந்தேகாசித்தம்.
11. சந்தித்த விசேடியாசித்தம்.
12. சந்தித்தவிசேடணுசித்தம்.

1. சொருபாசித்தமாவது, சொரூபம் பக்கத்திலே இருக்கையில்லாத எது. இதனைச் சிவஞானமுனிவர் சொரூபமில்லது என்பர். சுவரூபம் என்னும் வடமொழி சொரூபம் எனத் தற்பவமாயிற்று. சுவரூபம் - தன்வடிவு, இயல்பு. உ-ம். சத்தம் அநித்தியம், காணப்படுகையான் என்க. இங்கே காணப்படுகை என்னும் சொரூபம் பக்கத்திலே இல்லாமை அறிக. சத்தம்- கேட்கப்படுவது.

2. வியாத்தியதிகரணுசித்தமாவது வியாத்தி அறிதற்கு அதிகரணமாகிய சபக்கமும் விபக்கமும் இல்லாமையான் முடிவுபெறாத எது. வியாத்தி- உடனிகழ்ச்சி. அதிகரணம் - இடம். உ-ம். எல்லாம் அநித்தம், அறியப்படுதலான் என்க. இங்கே எல்லாம் என்பது பக்கமாய் நின்று முழுதையும் அடக்கலாற், சபக்கமும் விபக்கமும் இல்லையாயிற்று.

3. விசேடியாசித்தமாவது தன்பாலுள்ள விசேடியம் பக்கத்திலே இருக்கையில்லாத எது. உ-ம். வாயு காட்சிப்பொருள், பரிசத்தோடு கூடிய உருவமுடைமையான் என்க. இங்கே பரிசத்தோடு கூடிய என்னும் விசேடணத்தாலே விசேடிக்கப்பட்ட விசேடியமாகிய உருவமுடைமை, வாயுவாகிய பக்கத்திலே இல்லாமை அறிக.

4. விசேடணுசித்தமாவது தன்பாலுள்ள விசேடணம் பக்கத்திலே இருக்கையில்லாத எது. உ-ம். சத்தம் அநித்தியம், காணப்படும் பொதுமையுடைமையான் என்க. இங்கே விசேடணமாகிய காணப்படுகை, சத்தமாகிய பக்கத்திலே இல்லாமை அறிக.

5. பாகாசித்தமாவது பக்கத்திலே ஒருபங்கிலே இருக்கையில்லாத எது. பாகம் - பங்கு. உ-ம். உயிருமுடம்பும் நித்தியம், காரியமாகையான் என்க. இங்கே காரியமாகை என்னும் எது, உயிருமுடம்பும் என்னும் பக்கத்திலே ஒருபங்காகிய உயிரிலே இருத்தலின்மை அறிக.

6. ஆசிரயாசித்தமாவது ஆசிரயமின்மையான் முடிவுபெறாத எது. ஆசிரயம் - சார்பு. உ-ம். ஆகாயத்தாமரை மணமுடையது: தாமரைத் தன்மையான் என்க. இங்கே மணமுடைமைக்கு ஆசிரயமாகிய ஆகாயத்தாமரை என்பது இல் பொருளாதலாலே, தாமரைத்தன்மை என்னும் எதுவும் பக்கத்திலிருந்து முடிதல் இல்லதாயிற்று.

7. ஆசிரயைகதேசாசித்தமாவது ஆசிரயத்தின் ஒருபாகம் இன்மையான் முடிவுபெறாத எது. எகதேசம் - ஒருசார், சிலவிடம். உ-ம். பிரகிருதியும் ஈசுரனும் ஆன்மாவும் நித்தியம், காரியமாகாமையின் என்க என்று

தார்க்கிகனை நோக்கிச் சொல்வது. நித்தியம் என்னுந் துணி பொருளுக்கு ஆசிரயமாகக்கொண்ட பிரகிருதி ஈசுரன் ஆன்மா என்னும் பக்கத்திலே ஒருபாகமாகிய பிரகிருதி என்பது தார்க்கிகனுக்கு இல் பொருளாதலாற், காரியமாகை என்னும் ஏதுவும் பக்கத்திலிருந்து முடிதலில்லதாயிற்று.

8. வியர்த்தவிசேடியாசித்தமாவது பயனிலதாகிய விசேடியமுடைமையான் முடிவுபெறாத ஏது. வியர்த்தம் - பயனிலது. உ - ம். சத்தம் அநித்தியம், காரியமான சாமானியமுடைமையின் என்க. இங்கே சாமானியம் என்னும் விசேடியம் வியர்த்தம்.

9. வியர்த்த விசேடணாசித்தமாவது பயனிலதாகிய விசேடணமுடைமையான் முடிவுபெறாத ஏது. உ - ம். சத்தம் அநித்தியம், சாமானியமான காரியமாதலின் என்க. இங்கே சாமானியம் என்னும் விசேடணம் வியர்த்தம்.

10. சந்தேகாசித்தமாவது சந்தேகமுடைமையான் முடிவுபெறாத ஏது. உ - ம். இம்மலை நெருப்புடையது, பனியோ புகையோ தோன்றா நின்றது ஆகையான் என்க. இங்கே பனி என்றும் புகை என்றும் ஐயப்பட நிற்றலால், ஏது சந்தேகமுடையதாயிற்று.

11. சந்திக்த விசேடியாசித்தமாவது ஐயப்பட்ட விசேடிய முடைமையான் முடிவுபெறாத ஏது. சந்திக்தம் - ஐயப்பட்டது. உ - ம். கபிலர் இப்பொழுது விருப்பு வெறுப்புக்களோடு கூடினவர், புருடத்துவத்தோடு கூடின தத்துவஞானமில்லாத புருடராதலின் என்க. இங்கே புருடத்துவத்திற்கு விசேடியமாய் நின்ற தத்துவஞானமின்மை என்னும் ஏது ஐயப்பாடுடையதாயிற்று.

12. சந்திக்த விசேடணாசித்தமாவது ஐயப்பட்ட விசேடணமுடைமையான் முடிவுபெறாத ஏது. உ - ம். கபிலர் இப்பொழுது விருப்பு வெறுப்புக்களோடு கூடினவர், தத்துவஞானமில்லாத புருடத்துவமுடைய புருடராதலின் என்க. இங்கே புருடத்துவத்தை விசேடித்து நின்ற தத்துவஞானம் என்னும் விசேடணம் ஐயப்பட்டதாயிற்று.

இந்த ஏதுப்போலி பன்னிரண்டும் மறைஞானதேசிகர் கூறியது. சிவாக்கிரயோகிகள் பலவற்றை இவற்றின் வேறுபட்டுக் கூறுவர்.

## II. விருத்தம்.

விருத்தமாவது சாத்தியத்தின் அபாவத்திலே வியாபிக்கும் ஏது. சாத்தியத்துக்கு மாறான சாத்தியத்தை முடிக்கும் ஏது எனினுமாம். பௌட்கரம் பக்கத்திலும் விபக்கத்திலும் இருக்கும் ஏது என்று கூறும். விருத்தம் - முரணியது, மாறுபட்டது. (1) பக்க விபக்க வியாபகம், (2) பக்கவிபக்கைகதேசவிருத்தி என அதன்வகை இரண்டு என்று மறைஞானதேசிகர் கூறுவர்.

1. பக்கவிபக்கவியாபகமாவது பக்கத்திலும் விபக்கத்திலும் வியாபிக்கும் ஏது. உ-ம். சத்தம் நித்தியம், காரியமாதலின் என்க. இங்கே காரியமாதல் என்னும் ஏது, சத்தம் என்னும் பக்கத்திலும் குடம் என்னும் விபக்கத்திலும் வியாபித்தலும், நித்தியம் என்னும் சாத்தியத்துக்கு மாறான அநித்தியம் என்னும் சாத்தியத்தைச் சாதித்து முடித்தலும் அறிக.

2. பக்கவிபக்கைகதேசவிருத்தியாவது பக்க விபக்கங்களிலே ஏகதேசத்திலே வியாபியாமல் ஏகதேசத்திலே வியாபிக்கும் ஏது. உ-ம். சத்தம் நித்தியம், முயற்சியின் பின்னே தோன்றலான். இங்கே முயற்சியின் பின்னே தோன்றல் என்னும் ஏது, பக்கமாகிய சத்தத்தின் ஏகதேசமாகிய வாயு சத்தம் முதலியவைகளிலும், விபக்கத்தின் ஏகதேசமாகிய புல்லு முதலியவைகளிலும் இல்லாமை அறிக.

## III. அநைகாந்திகம்.

அநைகாந்திகமாவது நியமமின்மையுடைய ஏது. இதனைச் சிவஞான முனிவர் ஒருதலைப்படாத ஏது என்பர். அநைகாந்திகம் - பிறழ்ச்சியுடையது, பலமுடிவுடையது. அந்-இன்மை. ஐகாந்திகம் - ஒருமுடிவுடையது. அது (1) பக்கத்திரய வியாபகம், (2) பக்க வியாபக சபக்க விபக்கைக தேசவிருத்தி, (3) பக்க சபக்க வியாபக சபக்கைக தேச விருத்தி, (4) பக்க விபக்க வியாபக சபக்கைக தேசவிருத்தி. (5) பக்கத்திரயைக தேசவிருத்தி, (6) பக்க சபக்கைக தேசவிருத்தி, விபக்கவியாபகம், (7 பக்க விபக்கைக தேசவிருத்தி சபக்கவியாபகம் என ஏழாகும்.

1. பக்கத்திரய வியாபகமாவது பக்கம், சபக்கம், விபக்கம் என்னும் மூன்றிடத்திலும் வியாபிக்கும் ஏது. திரயம் - மூன்று. உ-ம். சத்தம் அநித்தியம், அறியப்படுகையான்; குடம்போல என்க. இங்கே அறியப்படுகை என்னும் ஏது, சத்தம் என்னும் பக்கத்திலும், குடம் என்னும் சபக்கத்திலும், ஆகாயம் என்னும் விபக்கத்திலும் வியாபகமாதல் அறிக.

2. பக்கவியாபக சபக்கவிபக்கைக தேசவிருத்தியாவது பக்கத்திலே முற்றவியாபித்துச் சபக்க விபக்கத்திலே ஏகதேசத்திலிருக்கும் ஏது. உ-ம். சத்தம் நித்தியம், உருவமின்மையின்; பரமாணுவும் ஆகாயமும் போலஎன்க. இங்கே உருவமின்மை என்னும் ஏது, சத்தமாகிய பக்கத்திலே முற்றவியாபித்தலும், பரமாணுவும் ஆகாசமுமாகிய சபக்கத்திலே ஏகதேசமாகிய (ஓரிடம்) ஆகாயத்திலே வியாபித்தலும், விபக்கமாகிய குடம் முதலியவைகளின் ஏகதேசங்களிலே வியாபித்தலும் அறிக.

3. பக்க சபக்க வியாபக விபக்கைக தேசவிருத்தியாவது பக்கத்திலும் சபக்கத்திலும் வியாபித்து விபக்கத்திலே ஏகதேசத்தில் வியாபிக்கும் ஏது. உ-ம். இது பசு, கொம்புடைமையான்; கொம்புடைய இப்பசுக்கள் போல என்க. இங்கே கொம்புடைமை என்னும் ஏது, இது என்று சுட்டிய

பொருளாகிய பக்கத்திலும், கொம்புடைய இப்பசுக்கள் என்னும் சபக்கத்திலும் முற்றவியாபித்தலும், யானை குதிரை முதலியனவான விபக்கத்தில் ஏகதேசங்களிலே வியாபித்தலும் அறிக.

4. பக்க விபக்க வியாபக சபக்ஷைகதேச விருத்தியாவது பக்கத்திலும் விபக்கத்திலும் முற்றவியாபித்துச், சபக்கத்திலே ஏகதேசத்தில் வியாபிக்கும் ஏது. உ-ம். இது பசுவன்று, கொம்புடைமையான்; யானை குதிரை முதலியன போல என்க. இங்கே கொம்புடைமை என்னும் ஏது, இது என்று சுட்டப்பட்ட பொருளாகிய பக்கத்திலும், கொம்புடைய பசுக்களாகிய விபக்கத்திலும் முற்றவியாபித்தலும், சபக்கமாகிய யானை குதிரை முதலியவற்றின் ஏகதேசமாகிய யானை முதலிய கொம்புடையவற்றிலே வியாபித்தலும் அறிக.

5. பக்கத்திரயைகதேசவிருத்தியாவது பக்கம், சபக்கம், விபக்கம் என்னும் மூன்றிலும் ஏகதேசத்திலே வியாபிக்கும் ஏது. உ-ம். பூமி நித்தியம், அழிவு காணப்படாமையான்; அணுக்கள்போல என்க. இங்கே அழிவுகாணப்படாமை என்னும் ஏது, பக்கமாகிய பூமியின் ஏகதேசமாகிய பரமாணுவினிடத்திலும், சபக்கமாகிய அணுக்களுள்ளே ஏகதேசமாகிய பரமாணுக்களிலும், விபக்கத்தின் ஏகதேசமாகிய ஆன்மா முதலியவற்றிலும் வியாபித்தல் அறிக.

6. பக்க சபக்ஷைகதேசவிருத்திவிபக்ஷவியாபகமாவது பக்க சபக்கங்களிலே ஏகதேசத்தில் வியாபித்து, விபக்கத்திலே முற்றவியாபிக்கும் ஏது. உ-ம். திக்கு காலம் மனம் என்பன திரவியம், உருவமின்மையான்; பிருதிவி அப்பு தேயு வாயு என்பனபோல என்க. இங்கே உருவமின்மை என்னும் ஏது, பக்கத்தின் ஏகதேசமாகிய திக்குக் காலம் என்பவற்றிலே வியாபித்தலும், சபக்கத்தின் ஏகதேசமாகிய வாயு என்பதிலே வியாபித்தலும், விபக்கமாகிய ஆன்மாவிலும் ஆகாசத்திலும் வியாபித்தலும் அறிக. மனம் பரமாணுரூபம் என்பர்.

7. பக்கவிபக்ஷைகதேச விருத்தி சபக்கவியாபகமாவது பக்க விபக்கங்களிலே ஏகதேசத்தில் வியாபித்துச், சபக்கத்திலே முற்றவியாபிக்கும் ஏது. உ-ம். திக்கு காலம் மனம் என்பன திரவியமல்ல, உருவுடைமையான்; பிருதுவியும் தேயுவும் போல என்க. இங்கே உருவுடைமையாகிய ஏது, பக்கத்தின் ஏகதேசமாகிய மனம் என்பதிலே வியாபித்தலும், விபக்கத்தின் ஏகதேசமாகிய அப்புவிலே வியாபித்தலும், சபக்கமாகிய பிருதுவி தேயுக்களிலே வியாபித்தலும் அறிக.

### உவமைப் போலி.

1. சாத்தியவிகலம்.
2. சாதனவிகலம்.
3. உபயவிகலம்.
4. ஆச்சிரயகீநம்.

| | |
|---|---|
| 5. அவ்வியாத்தியபிதானம். | 12. விபரீதவியாத்தியபிதானம். |
| 6. விபரீதவியாத்தியபிதானம். | 13. சந்தித்த சாத்தியம். |
| 7. சாதனுவ்வியாவிருத்தம். | 14. சந்தித்தசாதனம். |
| 8. சாத்தியாவ்வியாவிருத்தம். | 15. சந்தித்தவுபயம். |
| 9. உபயாவ்வியாவிருத்தம். | 16. சந்தித்தவாச்சிரயம். |
| 10. ஆச்சிரயவிகீநம். | 17. சந்தித்தசாத்தியாவ்வியாவிருத்தம் |
| 11. வியாத்தியநபிதானம். | 18. சந்தித்தசாதனுவ்வியாவிருத்தம். |

1. சாத்தியவிகலமாவது சாத்தியமானது தன்னியல்பிலே இல்லாத உவமை. சாத்தியம் - துணிபொருள். விகலம் - இயற்கையிலில்லாதது, குறைவு. உ - ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான்; பரமாணுப்போல என்க. இங்கே பரமாணு என்னும் இந்த உவமையிலே அநித்தியம் என்னும் சாத்தியத்தன்மை இல்லாமை அறிக. பரமாணு நித்தியம்.

2. சாதனவிகலமாவது சாதனமானது தன்னியல்பில் இல்லாத உவமை. சாதனம் - ஏது. உ - ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான்; கன்மம்போல என்க. இங்கே கன்மம் என்னும் உவமையிலே உருவமுடைமை என்னும் சாதனம் இல்லாமை அறிக.

3. உபயவிகலமாவது சாத்தியம் சாதனம் என்னும் இரண்டும் தன்னியல்பிலே இல்லாத உவமை. உபயம் - இரண்டு. உ - ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான்; ஆகாயம்போல என்க. இங்கே ஆகாயம் என்னும் உவமையிலே அநித்தியம் என்னும் சாத்தியமும் உருவமுடைமை என்னும் சாதனமும் இல்லாமை அறிக. ஆகாயம் நித்தியம் என்பர்.

4. ஆச்சிரயகீனமாவது சாத்திய சாதனங்களுக்குச் சார்பில்லாத உவமை. ஆச்சிரயம் - சார்பு, பற்றுக்கோடு. ஹீனம் - இல்லாதது. உ-ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான்; ஆகாயப்பூப்போல என்க. இங்கே ஆகாயப்பூ என்பது இல்பொருளாயிருத்தலால், அநித்தியம் என்னும் சாத்தியத்துக்கும் உருவமுடைமை என்னும் சாதனத்துக்குஞ் சார்பில்லதாயிற்று.

5. அவ்வியாத்தியபிதானமாவது வியாத்திவாசகஞ் சொல்லப்படாத உவமை. அ - இன்மை. வியாத்தி - உடனிகழ்ச்சி. அபிதானம் - சொல்லல். உ - ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான்; குடம்போல என்க. இங்கே "யாது உருவமுடையது அஃது அநித்தியம்" என்னும் வியாத்தி வாசகம் சொல்லப்படாமை அறிக.

6. விபரீதவியாத்தியபிதானமாவது விபரீதமாக வியாத்தி சொல்லப்பட்ட உவமை. விபரீதம் - முறைதவறுதல். உ - ம். இம்மலை நெருப்புடையது, புகையுடைமையான். யாது நெருப்புடையது, அது புகையுடையது; அடுக்களைபோல என்க. இங்கே யாது புகையுடையது, அது நெருப்புடையது, என முறைபெறக் கூறாது, வியாத்தியுணர்வுக்குத் தடையாகச் சாத்தியத்தை முன்வைத்துக் கூறியது விபரீதம் என்க.

7. சாதனுவ்வியாவிருத்தமாவது உடன்பாட்டிலுள்ள சாதனம் நீங்காதிருக்கும் எதிர்மறையுவமை. சாதனம் - ஏது. அவ்வியாவிருத்தம் - நீங்காதிருத்தல். உ - ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான்; குடம்போல. யாது அநித்திய மன்று, அது உருவமுடையது மன்று; பரமாணுப் போல என்க. இங்கே உருவமுடைமை என்னும் ஏது எதிர்மறையுவமையாகிய பரமாணுவிலும் இருத்தல் அறிக.

8. சாத்தியாவ்வியாவிருத்தமாவது உடன்பாட்டிலுள்ள சாத்தியம் நீங்காதிருக்கும் எதிர்மறையுவமை. உ - ம். மனம் அநித்தியம், உருவமுடைமையான். யாது நித்தியமன்று, அஃது உருவமுடையது மன்று; கன்மம் போல என்க. இங்கே அநித்தியம் என்னுஞ் சாத்தியம் கன்மம் என்னும் எதிர்மறையுவமையிலும் இருத்தல் அறிக.

9. உபயாவ்வியாவிருத்தமாவது உடன்பாட்டிலுள்ள சாதனசாத்தியங்களிரண்டும் நீங்காதிருக்கும் எதிர்மறையுவமை. உ - ம். மனம் அநித்தியம், உருவுடைமையான். யாது அநித்தியமன்று, அஃது உருவுடையது மன்று; குடம்போல என்க. இங்கே குடம் என்னும் எதிர்மறையுவமையிலே உருவுடைமை என்னும் சாதனமும், அநித்தியம் என்னும் சாத்தியமுமாகிய இரண்டும் நீங்காதிருத்தல் அறிக.

10. ஆச்சிரயவிகீனமாவது சாத்தியசாதனங்களுக்குப் பற்றுக்கோடில்லாத எதிர்மறையுவமை. விகீனம் - இல்லாதது. உ - ம். மனம் அநித்தியம், உருவுடைமையான். யாது நித்தியமன்று, அஃது உருவமுடையது மன்று; ஆகாயப்பூப்போல என்க. இங்கே அநித்தியம் உருவுடைமை என்னும் சாத்திய சாதனங்களுக்கு, ஆகாயப்பூ என்னும் எதிர்மறையுவமை இல்பொருளாதலால், ஆச்சிரயமில்லதாயிற்று.

11. வியாத்தியநபிதானமாவது வியாத்திவாசகஞ் சொல்லப்படாத எதிர்மறையுவமை. வியாத்தி - அநபிதானம் - சொல்லப்படாதது. உ - ம். மனம் அநித்தியம், உருவுடைமையின்; ஆகாயம்போல என்க. இங்கே யாது அநித்தியமன்று, அஃது உருவுடையது மன்று; ஆகாயம்போல என வியாத்திசொல்லப்படாமை அறிக.

12. விபரீத வியாத்தியபிதானமாவது விபரீதமாக வியாத்திசொல்லப்படும் எதிர்மறையுவமை. உ - ம். இம்மலை நெருப்புடையது, புகையுடைமையான். யாது புகையில்லது, அது நெருப்புமில்லது; மடுப்போல என்க. இங்கே எதிர்மறையிலே முன்னர்க் கூறவேண்டிய சாத்தியத்தினின்மையைப் பின்னர்க் கூறியபடியால், இது விபரீதமாயிற்று.

13. சந்தித்தசாத்தியமாவது ஐயத்துக்கிடனான சாத்தியமுடைய உவமை. சந்தித்தம் - ஐயப்பட்டது. உ - ம். இவன் அரசனாய் வருவான், சோழராசன் மகனாதலின்; அரசியற்குரிய அரசகுமாரன்போல என்க. இங்கே அரசகுமாரனிலே அரசனாய் வருவான் என்ற சாத்தியம் ஐயப்பட்டதாதல் அறிக.

14. சந்திக்தசாதனமாவது ஐயப்பட்ட சாதனமுடைய உவமை. உ-ம். இவன் முற்றறிவில்லாதவன், விருப்புவெறுப்புக்களோடு கூடினவனுதலின்; தெருவிற்செல்லும் புருடன்போல என்க. இங்கே தெருவிற்செல்லும் புருடன் என்னும் உவமையிலே, விருப்பு வெறுப்புக்களோடு கூடியிருத்தல் என்னும் சாதனம் ஐயப்பட்டதாதல் அறிக.

15. சந்திக்தோபயமாவது ஐயப்பட்ட சாத்திய சாதனங்களையுடைய உவமை. உ-ம். இவன் தேவுலகம் போவான், பூர்வபுண்ணியமுடையவனுகையான்; தேவதத்தன்போல என்க. இங்கே தேவதத்தன் என்னும் உவமையிலே தேவுலகம் போதலாகிய சாத்தியமும், பூர்வபுண்ணியமுடைமையாகிய சாதனமும் ஐயமுடையனவாதல் அறிக.

16. சந்திக்தவாச்சிரயமாவது ஐயப்பட்ட ஆச்சிரயமுடையதாய் நிற்கும் உவமை. ஆச்சிரயம் - சார்பு. உ-ம். சூரியன் இமையாநாட்டமுடையவன், தேவனுதலின். யாவன் தேவன், அவன் இமையாநாட்டமுடையவன்; சயந்தன்மகன்போல என்க. இங்கே சயந்தன்மகன் என்னும் உவமையிலே குறித்தசாத்திய சாதனங்களுக்குச் சார்பிடமாகிய ஆச்சிரயம் ஐயப்பாடுடையது. என்னே? சயந்தனுக்கு மகனுண்டோ என ஐயம் நிகழ்கின்றது.

17. சந்திக்தசாத்தியாவ்வியாவிருத்தமாவது சாத்தியம் நீங்காமல் ஐயப்பட்டதாயிருக்கும் எதிர்மறையுவமை. சந்திக்த - சாத்திய - அவ்வியாவிருத்தம் - நீங்காதிருத்தல். உ-ம். இம்மலே நெருப்புடையது, புகையுடைமையான். யாது நெருப்பில்லது, அது புகையும் இல்லது; மழுப்போல என்க. இங்கே மழு என்னும் உவமையிலே நெருப்புடைமை என்னும் சாத்தியம் உளதோ? இலதோ? என ஐயப்பாடுடையதாயிருத்தலும் நீங்காதிருத்தலும் அறிக.

18. சந்திக்தசாதனுவ்வியாவிருத்தமாவது சாதனம் நீங்காமல் ஐயப்பட்டதாயிருக்கும் எதிர்மறையுவமை. உ-ம். பனை ஒருபுல்லு, புறக்காழுடைமையான். யாது புல்லன்று, அது புறக்காழுடையதுமன்று; முருங்கைபோல என்க. இங்கே முருங்கை என்னும் எதிர்மறையுவமையிலே புறக்காழுடைமை என்னும் சாதனம் உளதோ? இலதோ? என ஐயப்பாடுடையதாயிருத்தலும் நீங்காதிருத்தலும் அறிக.

## தோல்வித்தானம்.

தோல்வித்தானம் அப்பிரதிபத்தி, விப்பிரதிபத்தி என இருவகை என்பர். அப்பிரதிபத்தி - அறியாமை, அர்த்தந் தெரியாமை. அ-இன்மை. பிரதிபத்தி - அறிவு. விப்பிரதிபத்தி - விபரீதமாக அறிகை. விரோதமாக அறிகை வி - விரோதம். விரியான் இருபத்திரண்டு.

### தோல்வித்தான விரி.

1. பிரதிஞ்ஞாஹாநி.
2. பிரதிஞ்ஞாந்தரம்.
3. பிரதிஞ்ஞாவிரோதம்.
4. பிரதிஞ்ஞாசந்நியாசம்.

| | |
|---|---|
| 5. ஏத்துவந்தரம். | 14. அநநுபாடணம். |
| 6. அர்த்தாந்தரம். | 15. அஞ்ஞானம். |
| 7. நிரர்த்தகம். | 16. அப்பிரதிபை. |
| 8. அவிஞ்ஞாதார்த்தம். | 17. விக்கேபம். |
| 9. அபார்த்தகம். | 18. மதாநுஞ்ஞை. |
| 10. அப்பிராத்தகாலம். | 19. பரியநுயோச்சியோபேக்கணம். |
| 11. நியூநம். | 20. நிரநுயோச்சியாநுயோகம். |
| 12. அதிகம். | 21. அபசித்தாந்தம். |
| 13. புநருத்தம். | 22. ஏத்துவாபாசம். |

1. பிரதிஞ்ஞாஹாநியாவது சாதிக்கத்தக்கது என்று தன்னாற் சொல்லப்பட்ட பிரதிஞ்ஞையைச் சாதித்து முடியாமல் அதற்குக் கேடுவருமாறு சொல்லுதல். பிரதிஞ்ஞை - நிச்சயித்தபொருளையுடைய வாக்கியம், மேற்கோள். ஹாநி - கேடு.

2. பிரதிஞ்ஞாந்தரமாவது தன்னாற்சொல்லப்பட்ட பிரதிஞ்ஞை மறுக்கப்பட்டுழி, அதனைச் சாதித்து முடியாமல் வேறொரு பிரதிஞ்ஞை சொல்லல். பிரதிஞ்ஞா + அந்தரம். அந்தரம்—வேறு.

3. பிரதிஞ்ஞாவிரோதமாவது தன்னாற்சொல்லப்பட்ட பிரதிஞ்ஞைக்கு விரோதமானவைகளைச் சொல்லுதல்.

4. பிரதிஞ்ஞாசந்நியாசமாவது தன்னாற்சொல்லப்பட்ட பிரதிஞ்ஞை மறுக்கப்பட்டுழி, அதனை முற்றும் விட்டுவிடுதல். சந்நியாசம் - விடுதல்.

5. ஏந்துவந்தரமாவது தன்னாற்சொல்லப்பட்ட பிரதிஞ்ஞையின் ஏது மறுத்துரைக்கப்பட்டுழி, வேறோர் ஏதுவினைச் சொல்லுதல். ஏது + அந்தரம் = ஏத்துவந்தரம். அந்தரம்—வேறு.

6. அர்த்தாந்தரமாவது தன்பால்வருந் தோல்வியை மறைக்கும்பொருட்டு, முன்னே சொன்ன பொருளுக்கு இயைபில்லாத வேறுபொருளைச் சொல்லுதல். அர்த்தம் - பொருள். அந்தரம் - வேறு.

7. நிரர்த்தகமாவது பொருளில்லாத வார்த்தைகளை எடுத்துச் சொல்லுதல். நிர்—இன்மை. அர்த்தகம்—பொருளுடையது.

8. அவிஞ்ஞாதார்த்தமாவது பொருள் இனிது விளங்காத சொல்லுகளை எடுத்துக்கொண்டு பேசுதல். அவிஞ்ஞாத-அறியப்படாத. அர்த்தம்-பொருள்.

9. அபார்த்தகமாவது அவாய்நிலை அண்மைமுதலிய இன்மையாற், பொருள் பயவாத வாக்கியங்களைப் பேசுதல். அப - நீங்கிய. அர்த்தகம் - பொருளுடையது.

10. அப்பிராத்தகாலமாவது முன் பின் எனப்படுங் காலக்கிரமம் பெருது பிரதிஞ்ஞை ஏது முதலியவைகளை முறைதவறப் பேசுதல். அப்பிராத்வம் - அடையப்படாதது.

11. நியூனமாவது பிரதிஞ்ஞை முதலிய அவயவங்களுள்ளே சில அவயவங்கள் குறையச்சொல்லுதல். நியூனம் - குறைவு.

12. அதிகமாவது ஒன்ருன் முடியத்தக்கதாயிருக்கவும் ஏது திருட்டாந்தங்களை அதிகமாகச் சொல்லுதல். அதிகம் - மிகை.

13. புநருத்தமாவது அநுவாதத்திலன்றி முன்சொன்னதைப் பின்னுஞ்சொல்லுதல். புன - பின். உத்தம் - சொல்லப்பட்டது.

14. அநநுபாடணமாவது சொல்லப்பட்ட வாக்கியத்தை மறுத்துரைக்குங்கால் அநுவதிக்க இயலாமல் விடுதல். அந் - இன்மை. அநுபாடணம் - அநுவதித்தல்.

15. அஞ்ஞானமாவது சொல்லப்படும் வாக்கியம் மும்முறை சொல்லப்பட்டுச் சபையாராற் பொருள் அறியப்பட்டும் அறியாதிருத்தல். அ - இன்மை. ஞானம் - அறிதல்.

16. அப்பிரதிபையாவது பிரதிவாதியின் விஞ தக்கதென்றறிந்தும் மறதிவசத்தாலே மவுனமாயிருத்தல். அப்பிரதிபை - புத்தியின்மை. அ- இன்மை. பிரதிபை - புத்தி.

17. விக்கேபமாவது எமக்கு இப்போது வேறுகாரியமிருக்கின்றது என்று சொல்லி, எடுத்தவிடயத்தைத் தூரத்திலே விடுதல். விக்கேபம்-தூர விடுத்தல்.

18. மதாநுஞ்ஞையாவது பிரதிவாதி தன்பக்கத்திலே சொல்லிய குற்றங்களை மறுத்துரையாமல் உடம்பட்டு அவன்கூற்றிலே குற்றங் கூறுதல். மதம் - கொள்கை. அநுஞ்ஞை - உடன்பாடு.

19. பரியநுயோச்சியோபேக்கணமாவது சபையாருக்கு ஆட்சேபித்துக்காட்டற்குரிய தோல்வியை எடுத்துக்காட்டலிலே விருப்பின்றி இருத்தல். பரியநுயோச்சியம் - விஞவற்பாலது. உபேக்கணம் - விருப்பின்மை.

20. நிரநுயோச்சியாநுயோகமாவது தோல்வித்தானம் அடையாதவனைத் தோல்வி எய்திஞய் என்று விஞவிக்கூறுதல். நிரநுயோச்சியம் - விஞவற்பாலதல்லாதது. அநுயோகம் - விஞ.

21. அபசித்தாந்தமாவது ஒருசாத்திர சித்தாந்தத்தை அநுசரித்துப் பேசத்தொடங்கி அதற்கு மாருன சித்தாந்தத்தை அநுசரித்துப் பேசிமுடித்தல். அப - விபரீதம். சித்தாந்தம் - முடிந்தமுடிபு.

22. ஏத்துவாபாசமாவது எடுத்துக்கொண்ட பிரதிஞ்ஞைக்கு இயையாத போலியேதுக்களை எடுத்துக் கூறுதல்.

——→○←——

## முதற் சூத்திரம்.

இச்சூத்திரம், பிரபஞ்சத்தைத் தோற்றி ஒடுக்குதற்குப் பதி ஒருவன் வேண்டப்படும் என்பதும், அப்பதி அதனைத் தோற்றி ஒடுக்கும் முறைமையும் கூறுமுகத்தான், பதியுண்மையும் பதியிலக்கணமுங் கூறுகின்றது. இச்சூத்திரத்தின் முதற்செய்யுள் அவற்றைத் தொகுத்தும், ஏனைய செய்யுள்கள் வகுத்தும் கூறுகின்றன.

பதியுண்மையும் பதியிலக்கணமும் தொகுத்துக்கூறல்.

**21.** ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறை வந்து நின்று போவது மாத லாலே
தருபவ னொருவன் வேண்டுந் தான்முத லீறு மாகி
மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

(இ - ள்). ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம் - அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் கூறப்படும் சேதனசேதனப் பிரபஞ்சமெல்லாம்,—வருமுறை வந்து நின்று போவதும் ஆதலால் - தோன்றும் முறையிலே தோன்றி நின்று ஒடுங்குதலும் உடைமையால்,—தருபவன் ஒருவன் வேண்டும் - அங்ஙனம் அவற்றைத் தோற்றுவித்து நிலைபெறுத்தி ஒடுக்கும் கருத்தா ஒருவன் வேண்டப்படும்,—தான்-அக்கருத்தா,—முதல் ஈறும் ஆகி - தனக்கொரு முதல்வனின்றித் தானே எவற்றிற்கும் நிமித்தகாரணனும் சங்காரகாரணனுமாய்,—அநாதி முத்த சித்து உரு மன்னி நின்று - இயல்பாகவே பாசம் நீங்கிய ஞானமாகிய சத்திவடிவத்தைப் பொருந்தி நின்று,—மருவிடும் - அவற்றைக் காரியப்படுத்தும் இயல்புடையனும்.

குறிப்பு 1. ஒருவனோடொருத்தி......உலகமெல்லாம் - இங்கே உலகம் என்றது சடமும் சித்துமாகிய சேதனசேதனப் பிரபஞ்சத்தையாம். அசேதனப்பிரபஞ்சந் தோன்றி ஒடுங்கும் என்பது 22-ம் செய்யுள் முதல் 51-ம் செய்யுளீறாகவுள்ள முப்பது செய்யுள்களாலும், சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்கள் தோன்றி ஒடுங்கும் என்பது 52-ம் செய்யுளாலும் கூறப்படும்.

2. வருமுறை - கன்மம் பக்குவமானவிடத்துச் சேதனப்பிரபஞ்சமும், சற்காரிய முறைப்படி அசேதனப்பிரபஞ்சமும் தோன்றும் முறைமை. சற்காரியமுறை - உள்ளபொருளினின்று உள்ளதாகிய காரியந்தோன்றும் என்னும் முறைமை. சத் - உள்பொருள்.

3. வந்து நின்றுபோவதும் - உம்மை எண்ணும்மை.

4. தருபவனொருவன் வேண்டும் - கடவுள் பிரத்தியட்சமாகக் காணப்படாத பொருளாயிருத்தலினாலும், ஆகமம் எல்லாச் சமயத்தவராலும் ஒத்துக்கொள்ளப்படாதிருத்தலினாலும், அவ்விரண்டினையுமொழித்து, அனுமா

னப் பிரமாணத்தினுற் கடவுள் ஒருவர் உண்டென்பது இச்சூத்திரத்திற் சாதிக்கப்படுகின்றது. (செ. 37 பார்).

5. தான் முதலீறுமாகி:- முதல் - நிமித்தகாரணன். ஆகுபெயர். ஈறு - சங்காரகாரணன். ஆகுபெயர். (செ. 38, 52 பார்).

6. அநாதிமுத்த சித்து - சுத்தஞானம், பராசத்தி. முத்த - விடப்பட்ட. சித்து - ஞானம்.

7. மருவிடும்:-மருவுதல் - பொருந்தல். மருவுவித்தல் - பொருத்துதல், காரியப்படுத்தல். விவ்விகுதிவிகாரத்தாற் றெக்குநின்றது.

பொழிப்பு. சேதனுசேதனப்பிரபஞ்சம் தோன்றி நின்று ஒடுங்குதலால், அதனைக் காரியப்படுத்தும் ஒரு கருத்தா வேண்டும். அக்கருத்தா நிமித்தகாரணனும் சங்காரகாரணனுமாய்ச், சத்திவடிவம் பொருந்தி நின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் இயல்புடையனும்.

இச்செய்யுள் இரண்டுகூறுடையது. அவை,

1. ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலக மெல்லாம், வருமுறை வந்து நின்று போவதுமாதலாலே, தருபவனொருவன்வேண்டும்.

2. தான்முத லீறுமாகி அநாதிமுத்த சித்துரு மன்னி நின்றுமருவிடும், என்பன.

---

## முதலதிகரணம்.

"ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம், வருமுறை வந்துநின்று போவது மாதலாலே தருபவனொருவன் வேண்டும்" என்பது முதற்கூறு.

இவ்வதிகரணம் பதியுண்மைக்குப் பிரமாணங் கூறுகின்றது.

இவ்வதிகரணத்தில் அடங்கிய விஷயங்கள்:—

1. உலோகாயதர்மதம்பற்றி ஆசங்கித்து உலகம் தோற்ற நாசங்களை யுடையது என்றும், அவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்றும் சாதித்தல். (22-24).

(a). உலகம் தோற்றநாசங்களையுடையது. (22).

(b). தோற்றநாசங்களைத் தரும் கருத்தா ஒருவன் வேண்டப்படும். (23-24).

2. சௌத்திராந்திகர்மதம்பற்றி ஆசங்கித்து உலகம் சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும் என்றும், அவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்றும் சாதித்தல். (25-27).

(a). இல்பொருள் தோன்றாது உள்பொருள் தோன்றும். (25).

(c). ஒரு கருத்தாவின்றிக் காரியப்பொருள் தோன்ருது. காரியப்பொருள் காரணப்பொருள்போல உள்பொருளேயன்றி இல்பொருளன்று. (27).

3. மீமாஞ்சகர்மதம்பற்றி ஆசங்கித்து உலகம் தோற்றநாசங்களையுடையது என்பதும், அவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்பதும் சாதித்தல். (28-30).

(a). காயத்தைப்போல உலகமுந் தோன்றி அழியும. (28).

(b). ஒருகாலத்திலே தோன்றும் உலகம் பின்னொருகாலத்திலே முழுவதும் அழியும். (29).

(c). தோற்றநாசங்களுக்குக் காலம் துணைக்காரணம். நிமித்தகாரணன் வேறு வேண்டப்படும். (30).

4. தார்க்கிகர்மதம்பற்றி ஆசங்கித்து உலகிற்கு முதற்காரணம் மாயை என்பதும், அது மாயையினின்று சற்காரியமுறைப்படி தோன்றி ஒடுங்கும் என்பதும், இவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்பதும் சாதித்தல். (31-37).

(a). அணுக்கள் உலகிற்கு முதற்காரணமாகா. (31).

(b). மாயை உலகிற்கு முதற்காரணம். (32).

(c). அணுக்கள் காரியப்பொருள்களாதலான் முதற்காரணமாகா. (33).

(d). மாயை முதற்காரணம் என்பதற்குப் பிரமாணம். (34).

(e). முதற்காரணமாகிய மாயையிலிருந்து காரியமாகிய பிரபஞ்சம் சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும். (35).

(f). பிரபஞ்சம் நித்தப்பொருள். (36).

(g). பிரபஞ்சத்தின் தோற்ற ஒடுக்கங்கள் கருத்தாவினுலாகும். (37).

1. உலோகாயதர்மதம்பற்றி ஆசங்கித்து உலகம் தோற்றநாசங்களையுடையது என்பதும், அவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்பதும் சாதித்தல். (22-24).

(a). உலகம் தோற்ற நாசங்களையுடையது.

22. உதிப்பது மீறு முண்டென் றுரைப்பதிங் கென்னை முன்னோர்
மதித்துல கநாதி யாக மன்னிய தென்ப ரென்னின்
இதற்கியா னநுமா னுதி யெடேனிப்பூ தாதி யெல்லாம்
விதிப்படி தோற்றி மாயக் காணலான் மேதி னிக்கே.

(இ - ள்). உதிப்பதும் ஈறும் உண்டு என்று இங்கு உரைப்பது என்னை- உலகிற்குத் தோற்றமும் நாசமும் உண்டென்று இங்கே கூறுவது என்னை?,—முன்னோர் - உலோகாயத நூலை உணர்ந்த அறிஞர்,—மதித்து - பிரத்தியட்சமாகக் காணப்படாதனவெல்லாம் பிரமாணமன்றென நிச்சயித்து,—உலகம் அநாதியாக மன்னியது என்பர் என்னின் - இவ்வுலகம் எப்பொழுதும் நிலைபெற்றுள்ளது என்று சொல்வர் என நீ சொல்லின்,—இப்பூதம்

ஆதி எல்லாம் - இப்பூதங்களும் இவற்றின் காரியமாகிய தேகாதிப் பிரபஞ்சமெல்லாம்,—மேதினிக்கே - பூமியின்கண்ணே,—விதிப்படி - முதல்வன் நியமித்தபடி,—தோற்றி மாயக் காணலான் - தோன்றி அழியப் பிரத்தியட்சமாய்க் காணப்படுதலால், பூதங்களின் காரியமான உலகிற்கும் தோற்றமும் நாசமும் உண்டென்பது தானே போதரும். ஆதலால்,—இதற்கு - இதனைச் சாதித்தற்கு,—யான் அநுமானாதி ஏடேன் - யான் அனுமானம் முதலிய பிரமாணங்களை எடுத்துக் கூறமாட்டேன்.

குறிப்பு. 1. இம் முதலதிகரணத்தில் அசேதனப் பிரபஞ்சம் தோன்றி நின்று ஒடுங்கும் என்பதும், அது சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும் என்பதும், அத் தோற்ற ஒடுக்கங்களுக்கு மாயை முதற்காரணம் என்பதும், அவை ஒரு கருத்தாவாலாவன என்பதும் சாதிக்கப்படுகின்றன. அங்ஙனம் சாதிக்கு முகத்தான், உலோகாயதர் பௌத்தர் மீமாஞ்சகர் தார்க்கிகர் முதலியோரது கொள்கைகள் மறுக்கப்படுகின்றன.

2. உலோகாயதர் காட்சி ஒன்றுமே பிரமாணம். அதற்கு வேறாக உரைப்பனவெல்லாம் பிரமாணமாகா. உலகம் நிலைபெற்றிருத்தல் பிரத்தியட்சமாகக் காணப்படுதலானும், அதன் தோற்றமும் நாசமும் காணப்படாமையானும், இவ்வுலகம் என்றும் நிலையாயுள்ளது. தோன்றி அழியும் என்பது பொருந்தாது என்பர். அவர் உலகிற்கு முதற்காரணம் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு பூதங்கள் எனக் கொள்ளுதலாலும், இப்பூதங்கள் தோன்றி அழியக் காணப்படுதலாலும், இவற்றின் காரியமாகிய உலகமும் தோன்றி அழியும் என்பதைச் சாதித்தற்கு அனுமானம் முதலிய பிரமாணங்கள் வேண்டுவதில்லை என்பது.

அனுமானப்பிரமாணம் ஆகமப்பிரமாணம் என்னும் இரண்டும் உலோகாயதருக்கு உடன்பாடின்மையால், அவர் காட்சிவாதிகள் எனப்படுவர்.

பொழிப்பு. தோன்றுதலும் அழிதலும் பிரத்தியட்சமாகக் காணப்படாமையால், உலகம் தோன்றி அழியும் என்பது பொருந்தாது என்பர் உலோகாயதர். பூதங்களும் இவற்றின் காரியமான தேகாதிப் பிரபஞ்சமும் தோன்றி அழிதல் பிரத்தியட்சமாய்க் காணப்படுதலின், இப்பூதகாரியமான உலகமும் தோற்ற நாசங்களையுடையதாம்.

(b) தோற்றநாசங்களைத்தரும் கருத்தா ஒருவன் வேண்டப்படும்.

**23.** இயல்புகாண் டோற்றி மாய்கை யென்றிடி னியல்பி னுக்குச்
செயலதின் றியல்பு செப்தி செய்தியே லியல்ப தின்றும்
இயல்பதாம் பூதந் தானே யியற்றிடுஞ் செய்தியென்னிற்[தால்
செயல் செய்வா னொருவன் வேண்டுஞ் செயற்படு மசேதனத்

(இ - ள்). தோற்றி மாய்கை - அத்தோற்ற நாசங்கள்,—இயல்புகாண் என்றிடின் - உலகிற்கு இயல்பாயுள்ளன. அவற்றைக் காரியப்படுத்த ஒரு கருத்தா வேண்டுவதில்லை என்று நீ சொல்லின்,—இயல்பினுக்குச் செய

லது இன்று - இயற்கைக்குத் தோன்றுதலும் அழிதலும் ஆகிய விகாரம் இல்லையாம்,—இயல்பு - இயல்பாவது,—செய்தி செய்தியேல் - தோன்றி அழிதலாகிய விகாரச்செயலாகும் என்பாயாயின்,—இயல்பது இன்றாம் - இயல்பு என்பது ஒன்று இல்லையாய் முடியும்,—இயல்பதாம் பூதம் தானே,—இனி, இயல்பாயுள்ளனவாகிய நான்கு பூதங்களுமே,—செய்தி இயற்றிடும் என்னின் - தோற்ற நாசங்களாகிய விகாரத்தைச் செய்யும் என்று நீ சொல்லின்,—செயற்படும் அசேதனத்தால் - அவை தோன்றி அழிதலாகிய தொழிலைப் பொருந்தி நிற்கின்ற சடப்பொருளாயிருத்தலால்,—செயல் செய்வான் ஒருவன் வேண்டும் - அவற்றைக் காரியப்படுத்தும் ஒரு கருத்தா அவற்றின் வேறாக வேண்டப்படும்.

குறிப்பு. இயல்பதாம் பூதம் - உலோகாயதர் பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்குமே தத்துவங்கள் என்றும், அவை நித்தம் என்றும், ஒருவரால் கற்பிக்கப்படாது இயல்பாயுள்ளன என்றும் கூறுவர்.

பொழிப்பு. தோற்ற நாசங்கள் உலகிற்கு உண்டெனக் கொள்ளினும், அவை அவ்வுலகிற்கு இயல்பாயுள்ளன என்னின், அத்தோற்ற நாசங்கள் விகாரமாதலின், அவற்றை இயல்பு என்றல் பொருந்தாது. பூதம் நான்கும் இயல்பாயுள்ளன. அவை தோற்றநாசங்களைச் செய்யும் என்னின், அவை செயப்படுபொருளாயும் சடப்பொருளாயுமிருத்தலால், அவற்றைத் தொழிற்படுத்துங் கருத்தா வேறு வேண்டப்படும்.

இதுவுமது.

24. நிலம்புன லனல்கால் காண நிறுத்திடு மழிக்கு மாக்கும்
பலந்தரு மொருவ னிங்குப் பண்ணிட வேண்டா வென்னின்
இலங்கிய தோற்ற நிற்ற லீறிவை யிசைத லாலே
நலங்கிளர் தோற்ற நாசந் தனக்கிலா நாதன் வேண்டும்

(இ-ள்). பூதங்களைச் செயப்படுபொருள் என்றும் அசேதனம் என்றும் கூறுவது அமையாது,—நிலம் புனல் அனல் கால் - பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு பூதங்களும் (வினைமுதற் பொருளாய் நின்று தம்முட் கூடியும் பிரிந்தும்),—காண ஆக்கும் நிறுத்திடும் அழிக்கும் பலம் தரும் - காணும்படி பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தலும் நிறுத்துதலும் அழித்தலுமாகிய காரியத்தைச்செய்யும். ஆதலால்,—பண்ணிட இங்கு ஒருவன் வேண்டா என்னின் - இத்தோற்ற நாசங்களைச்செய்ய இவ்விடத்து ஒரு கருத்தா இப்பூதங்களுக்கு வேறாக வேண்டுவதில்லை என்னின்,—இலங்கிய இவை - விளங்கிய இந்நான்கு பூதங்களும்,—தோற்றம் நிற்றல் ஈறு இசைதலால் - தனித்தனி தோன்றல் நிற்றல் அழிதலாகிய முத்தொழிலையும் அடைதலால், இவை காரியப்படுத்தும் ஆற்றல் உடையனவல்ல. ஆதலால்,—தோற்றம் நாசம் தனக்கு இலா - இப்பூதங்கள்போலத் தோன்றிநின்று

அழிதலாகிய முத்தொழிற்படுதல் தனக்கில்லாத,—நலம் கிளர் நாதன் வேண்டும் - மேம்பாடுடைய இறைவன் வேறு வேண்டப்படும்.

குறிப்பு. 1. இவை இரண்டு செய்யுளானும் கூறிப்போந்த பொருள்:— உலோகாயதர் ஆசங்கை (a) உலகத்துக்குத் தோற்றநாசங்களுளவாயினும், அவை அதற்கு இயல்பாயுள்ளன. அது தானே தோன்றித் தானே அழியும். மறுப்பு - தோன்றுதலும் அழிதலும் விகாரமாதலின், அஃது இயல்பன்று. ஆசங்கை. (b) விகாரமாதலே இயல்பு எனப்படுவது. மறுப்பு. அங்ஙனமாயின், விகாரத்தின் வேறாய் இயல்பு என்பது ஒன்று இல்லையாய் முடியும். ஆசங்கை. (c). இயல்பாயுள்ள பூதங்கள் நான்குமே தோற்ற நாசங்களைச் செய்யும். மறுப்பு. பூதங்கள் செயப்படுபொருளாயும் சடப்பொருளாயுமிருத்தலின், அவை தாமாகத் தோற்றநாசங்களைச் செய்யமாட்டா. ஆதலால் தோற்றி அழிக்கும் கருத்தா ஒருவன் வேண்டப்படும். ஆசங்கை. (d). பூதங்களைச் செயப்படுபொருளும் சடப்பொருளும் என்பது வழு. அவை வினைமுதற் பொருளாகும். வினைமுதற் பொருளாதலின் சடப்பொருளுமாகா. மறுப்பு. தோன்றி நின்று அழிதலால் அவை வினைமுதற்பொருளாகா. தோன்றி நின்று அழியும் பொருள்கள் செயப்படுபொருளும் சடப்பொருளுமாம். ஆதலால், தோற்றி அழிக்கும் வினைமுதல் வேறு வேண்டப்படும்.

2. பலந்தருதல் - காரியப்படுத்தல். பலம் - காரியம், பயன்.

பொழிப்பு. பூதங்கள் நான்கும் வினைமுதற்பொருளாம். அவை பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நிலைபெறுத்தி அழிக்கும். ஆதலால், இத்தோற்றநாசங்களைச் செய்தற்கு இப்பூதங்களே அமையும். இவற்றின் வேறாய் ஒரு கருத்தா வேண்டுவதில்லை என்னின், இப்பூதங்கள் ஒவ்வொன்றும் தோன்றி நின்று அழிதலால் வினைமுதற்பொருளாதல் கூடாது. ஆதலால், தோற்றநாசங்களைச் செய்யும் கருத்தா ஒருவன் இவற்றின் வேறாக வேண்டப்படும்.

2. சௌத்திராந்திகர்மதம்பற்றி ஆசங்கித்து உலகம் சற்காரியமுறைப்படி தோன்றி ஒடுங்கும் என்பதும், அவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்பதும் சாதித்தல்.

(a) இல்பொருள் தோன்றாது. உள்பொருள் தோன்றும்.

**25.** சார்பினிற் றோன்று மெல்லாந் தருபவ னில்லை யென்னின்
தேரினில் லதற்கோ தோற்ற முள்ளதற் கோநீ செப்பாய்
ஓரினில் லதுவுந் தோன்றா துள்ளதே யுதிக்க வேண்டா
சோர்விலா திரண்டு மின்றி நிற்பது தோன்று மன்றே.

(இ - ள்). எல்லாம் சார்பினில் தோன்றும் - பொருள்களெல்லாம் வித்தின் அழிவில் முளைதோன்றுவது போல அவ்வச்சார்பிலே தோன்றும்,— தருபவன் இல்லை என்னின் - இவற்றைத் தோற்றுவிக்கும் கருத்தா ஒருவன் வேண்டப்படுவதில்லையென்னின்,—தேரின் தோற்றம் இல்லதற்கோ உள்ள

தற்கோ நீ செப்பாய் - ஆராயுமிடத்துச் சார்பிற் றோற்றம் இல்பொருளுக்கோ உள்பொருளுக்கோ என்பதை நீ கூறுவாயாக,—ஏரின் உள்ளதேல் உதிக்கவேண்டா - உணருமிடத்து உளதாய்த் தோன்றிநிற்கும் பொருளுக்காயின் குடம்போல அது தோன்ற வேண்டுவதில்லை,—இல்லதுவும் தோன்ருது - இல்பொருளுக்காயின் முயற்கொம்புபோல அதுவும் ஒருகாலுந் தோன்றுவதில்லை.—இரண்டும் இன்றி சோர்விலாது நிற்பது தோன்றும் - ஆதலாற் பாரிசேடவளவையால் இவ்விரண்டுமின்றி உளதாய்த், தோன்ருது சூக்குமரூபமாய் நிற்பதொருபொருள் தோன்றும்.

குறிப்பு. 1. சார்பினிற் றேன்று மெல்லாம் - உள்ளகாரணத்தினின்றும் உள்ளகாரியம் தோன்றும் என்னும் சற்காரியவாதம் சௌத்திராந்திகருக்கு உடன்பாடின்மையின், அவர் அசற்காரிய வாதிகள் எனப்படுவர். அவர், உள்பொருளுக்குத் தோற்றம் வேண்டுவதில்லையாதலின், இல்பொருள் தோன்றும். உள்பொருள் அழியும். இல்லவை தோன்றுமிடத்துச் சந்தானமாய்க் கணந்தோறும் தோன்றி, அழிவனவற்றுள் முற்கணத்தினின்றழியும் பொருள் பிற்கணத்திற் றேன்றும் பொருட்குச் சார்பாகலின், அவை அவ்வச்சார்பிலே வித்தின் அழிவில் முளைதோன்றுவதுபோலத் தோன்றும். இதற்கொரு கருத்தா வேண்டுவதில்லை எனக் கூறுவர்.

2. சோர்விலாது நிற்பது - உள்பொருளாய்ச் சூக்குமரூபமாய்த் தத்தம் காரணத்தில் அடங்கியிருக்கும் காரியப்பொருள். சோர்வு - அழிவு, அநித்தம்.

பொழிப்பு. இல்பொருள் தோன்ருது. தூலரூபமாய் வெளிப்பட்டு நிற்கும் பொருளுக்குத் தோற்றம் வேண்டுவதில்லை. ஆதலாற் சூக்குமரூபமாய் வெளிப்படாது அடங்கியிருக்கும் பொருளே தோன்றுவதாகும்.

(b). உள்ளகாரியம் உள்ளகாரணத்தினின்று ஒரு கருத்தாவினலே தோன்றும்.

**26.** உள்ளது மிலது மின்றி நின்றதொன் றுளதே லுண்டாம்
இல்லதே லில்லை யாகுந் தோற்றமு மிசையா தாகும்
உள்ளகா ரணத்தி லுண்டாங் காரிய முதிக்கு மண்ணில்
இல்லதாம் படங்க டாதி யெழிறரு மியற்று வானல்.

(இ - ள்). உள்ளதும் இலதும் இன்றி நின்றது ஒன்று - அங்ஙனம் உள்பொருளாதலும் இல்பொருளாதலுமின்றி வெளிப்படாது சூக்குமரூபமாய் நிற்கும் காரியப்பொருள்,—உளதேல் உண்டாம் - உள்பொருளாயின் அது என்றும் உளதாகும்,—இல்லதேல் இல்லையாகும் - இல்பொருளாயின் அது என்றும் இலதாகும்,—தோற்றமும் இசையாதாகும் - அன்றியும் அவ் இல்பொருளுக்குத் தோற்றமும் கூடாதாகும். ஆதலால்,—உண்டாம் காரியம் - உளதாகிய காரியப்பொருளே,—உள்ள காரணத்தில் உதிக்கும் - உளதாகிய கார

ணத்தினின்றும் ஒரு கருத்தாவால் வெளிப்பட்டுத் தோன்றும். அது,—இயற்றுவானுல் - குயவனுல்,—மண்ணில் படம் இல்லதாம் - மண்ணுகிய முதற்காரணத்தினின்றும் புடைவை முதலிய காரியம் தோன்ருது,—கடாதி எழில் தரும் - குடம் முதலிய காரியம் வெளிப்பட்டுத் தோன்றுவது போலாம்.

குறிப்பு. தோன்றி நிற்கும் பொருளுக்குத் தோற்றம் வேண்டாமையாலும், இல்பொருள் தோன்ருதாதலாலும், தோன்ருது சத்திரூபமாயிருக்கும் உள்பொருளே தோன்றுமென மேற்செய்யுளிற் கூறி, இச்செய்யுளில் அப்பொருள் அதன் காரணத்தில் அடங்கியிருந்து பின் தூலரூபமாய்ச் சற்காரிய முறைப்படி தோன்றும் காரியப்பொருள் என்பதும், அது ஒரு கருத்தாவினுல் வெளிப்பட்டுத் தோன்றும் என்பதும் கூறப்பட்டன.

பொழிப்பு. வெளிப்பட்டுத் தோன்ருது சத்திரூபமாய்த் தன்காரணத்தில் அடங்கியிருக்கும் காரியப்பொருள், பின்பு அக்காரணத்தினின்றும் சற்காரிய முறைப்படி ஒரு கருத்தாவால் வெளிப்பட்டுத் தோன்றும்.

(c). ஒரு கருத்தாவின்றிக் காரியப்பொருள் தோன்ருது.
காரியப்பொருள் காரணப்பொருள்போல உள்பொருளேயன்றி
இல்பொருளன்று.

**27**. ஒருபொரு ளொருவ னின்றி யுளதில தாகு மென்னின் [ய்
தருபொரு ளுண்டே லின்ருந் தன்மையின் றின்றே லுண்டா
வருதலின் றிலது காரிய முதலுள தாகு மென்னிற்
கருதுகா ரியமு முண்டாய்த் தோற்றமுங் கருத்தா வாலாம்.

(இ - ள்). ஒருபொருள் - மேற்கூறியவாறு கொள்ளாது ஒரு காரியப் பொருள்,—ஒருவன் இன்றி - ஒருகருத்தாவின்றி,—உளது இலது ஆகும் என்னின் - தனது காரணத்தினின்றும் தானே தோன்றித் தானே அழியும் என்னின்,—தருபொருள் உண்டேல் - அங்ஙனம் தானே தோன்றும் பொருள் ஒன்று உண்டாயின்,—இன்ருந் தன்மை இன்று - அதற்கு அழியுந்தன்மை கூடாதாம்,—இன்றேல் - தானே அழியுமாயின்,—உண்டாய் வருதல் இன்று- மீளத் தோன்றிவருதல் கூடாதாம். ஆதலால் தானே தோன்றித் தானே அழியும் என்பது பொருந்தாது,—காரியம் இலது முதல் உளதாகும் என்னின் - இனிக் காரியம் இல்லது காரணமே உள்பொருள் என்னின்,—கருது காரியமும் உண்டாய்-காரணம் உள்பொருளாகவே கருதுகின்ற காரியமும் அதனிடத்துச் சூக்குமமாய் அடங்கி நிற்கும் உள்பொருளாய்,—தோற்றமும் கருத்தாவால் ஆம் - அது பின்பு தூலரூபமாய் வெளிப்பட்டுத் தோன்றுதலும் ஒரு கருத்தாவினுலாம்.

பொழிப்பு. ஒருகாரியப்பொருள் ஒரு கருத்தாவின்றித் தானே தோன்றித் தானே அழியும் என்னின், அங்ஙனம் தோன்றுமாயின் அழியாது. அழியுமாயின், மீளத் தோன்ருது. ஆதலாற் கருத்தா ஒருவன் வேண்

டப்படும். இனி, காரியப்பொருள் அழியும், காரணம் அழியாதென்னின், காரணம் உள்பொருளாகவே அதனிடத்துச் சத்திரூபமாய் அடங்கியிருக்குங் காரியமும் உள்பொருளாகும்.

3. மீமாஞ்சகர்மதம்பற்றி ஆசங்கித்து உலகம் தோற்றநாசங்களையுடையது என்பதும், அவற்றைத் தருபவன் ஒருவன் வேண்டும் என்பதும் சாதித்தல்.

(*a*). காயத்தைப்போல உலகமும் தோன்றி அழியும்.

**28.** காயத்தி னழிவு தோற்றங் கண்டன முலகிற் காணோம்
நீயித்தை யுரைத்த வாறிங் கென்னெனி னிகழ்த்து முண்மை
மாயத்த வுலகம் பூநீர் தீவளி வான மாதி
ஆயித்தா னொன்றி னொன்று தோன்றிநின் றழித லாலே.

(இ - ள்). காயத்தின் தோற்றம் அழிவு கண்டனம் - காயத்துக்குத் தோற்றமும் நாசமும் கண்டோம்,—உலகில் காணோம் - உலகிற்குக் காண்கின்றிலம்,—நீ இங்கு இத்தை உரைத்தவாறு என்னெனின் - நீர் இவ்விடத்துத் தோற்றமும் நாசமும் உலகிற்கும் உண்டென்று கூறிய முறைமை என்னையெனின்,—மாயத்த உலகம் - மயக்கத்தைச்செய்யும் உலகம்,—பூ நீர் தீ வளி வானம் ஆதி ஆயி - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பூதங்களைத் தனக்கு முதற்காரணமாக வுடைத்தாயிருத்தலாலும்,—தான் - அப்பூதம் ஐந்தும்,—ஒன்றின் ஒன்று - ஒன்றைப்போல மற்றதும்,—தோன்றி நின்று அழிதலால் - தோன்றி நின்று அழிதலாலும்,—உண்மை நிகழ்த்தும் - தன்பாலும் தோற்றநாசங்கள் உளதாந் தன்மையை அறிவிக்கும்.

குறிப்பு. 1. காயத்தினழிவு தோற்றங் கண்டன முலகிற் காணோம் - மீமாஞ்சகர் தேகாதிகள் தோன்றி அழியும். உலகம் தோன்றி அழியாது நித்தமாயுள்ளது என்பர். உலகிற்கு முதற்காரணம் பூதங்களாதலானும், அப்பூதங்கள் ஒவ்வொன்றும் தோன்றி அழிதலானும், உலகமும் காயத்தைப்போலத் தோன்றி அழியும் என அவர் கொள்கை மறுக்கப்பட்டது.

2. ஆதி என்பது "ஆயி" என விகாரமாயிற்று.

3. ஒன்றினொன்று தோன்றி - ஒன்றினின்று ஒன்று தோன்றி எனவும் பொருள் கொள்வர். ஆன்மாவினின்று ஆகாயமும், ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவினின்று பிருதிவியும் தோன்றும் என்னும் உபநிடதச் சுருதி மீமாஞ்சகருக்குப் பிரமாணமாதலால், அதனைக்கொண்டு அவரது ஆசங்கை பரிகரிக்கப்பட்டது என்பர். சிவஞானமுனிவர், வேதத்துள் விதிவாக்கியமொழிய ஒழிந்தனவெல்லாம் மீமாஞ்சகருக்குப் பிரமாணமாகாவாதலால், இவ்வுரை பொருந்தாது என்பர்.

4. உலகம் எழுவாய். நிகழ்த்தும் பயனிலை.

பொழிப்பு. மீமாஞ்சகர் காயமே தோன்றி அழியும். உலகம் தோன்றி அழியாது என்பர். உலகிற்கு முதற்காரணம் பஞ்சபூதங்களாதலானும், அப்பூதங்கள் தோன்றி அழிதலானும், உலகமும் காயம்போலத் தோன்றி நின்று அழியும் என்பது தானேபோதரும்.

(b). ஒருகாலத்திலே தோன்றும் உலகம், பின்னொருகாலத்திலே முழுவதும் அழியும்.

**29.** ஓரிட மழியப் பின்னு மோரிட நிற்கு மொக்கப்
பாரிட மழிவ தின்றா மென்றிடிற் பயில்வித் தெல்லாங்
காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனிற்
சீருடைத் துலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும்.

(இ - ள்). (உலகம் தோன்றி அழியும் என்பது ஒக்கும். அங்ஙனமாயினும்) ஓரிடம் அழியப் பின்னும் ஓரிடம் நிற்கும் - முன்னே ஒருபக்கம் அழிந்துபோகப் பின்னும் ஒருபக்கம் அழியாது நிற்கும்,—பாரிடம் ஒக்க அழிவது இன்றாம் என்றிடின் - ஆதலால் உலகம் முழுவதும் ஒருங்கே அழிவதில்லையாம் என்று சொல்லின், அப்படியன்று,—பயில்வித்து எல்லாம் - பூமியிற் கிடக்கும் வித்துக்களெல்லாம்,—காரிடமதனில் அங்குரம் காட்டும் - கார்காலத்திலே முளைகளைத் தோற்றுவிக்கும்,—வேனில் கழியும் - அங்ஙனம் தோன்றியவை வேனிற்காலத்திலே ஒருங்கேஅழியும்,—சீர் உடைத்து உலகு - இத்தன்மையான உலகமும்,—காலம் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும் - தனக்குக் காலம் சேர்ந்தபோது நிலைகுலைந்து ஒருங்கே அழியும்.

குறிப்பு. 1. உலகம் ஒருபக்கம் அழியினும் ஒருபக்கம் அழியாது நிற்கும். அவ்வாறின்றி, அஃது ஒருங்கே அழியுமெனின், மீளத் தோன்றுதற்கு இயலாதொழியும் என்பர் மீமாஞ்சகர்.

2. பாரிடம் - பூமி, உலகம்.

3. காரிடமதனில்:- அது என்பது பகுதிப்பொருள் விகுதி. கார்காலம்- ஆவணி புரட்டாதி மாசங்கள். வேனிற்காலம் - ஆனியாடிமாசங்கள்.

4. பெயர்தல் - நிலைகுலைதல்

5. மாயைக்கு வித்தும், உலகத்துக்கு அங்குரமும் உவமைகளாம். சிவஞானபோதத்தில் "வித்துண்டாமூலம்" (சூ 1. அதி.2.) என்பதன் உரை நோக்குக.

பொழிப்பு. உலகம் ஒருங்கே அழிவதில்லை, ஒருபக்கம் அழியினும் ஒருபக்கம் அழியாது நிற்கும் என்பது பொருந்தாது. கார்காலத்திலே தோன்றும் முளைகளெல்லாம் வேனிற்காலத்திலே ஒருங்கே அழியுந்தன்மைபோல, உலகமும் ஒருகாலத்திலே தோன்றிப் பின்னொருகாலத்திலே ஒருங்கே அழியும்.

(c). தோற்றநாசங்களுக்குக் காலம் துணைக்காரணம்.
நிமித்தகாரணன் வேறு வேண்டப்படும்.

30. காலமே கடவு ளாகக் கண்டனந் தொழிலுக் கென்னிற்
காலமோ வறிவின் றுகு மாயினுங் காரியங்கள்
காலமே தரவே காண்டுங் காரணன் விதியினுக்குக்
காலமுங் கடவு ளேவ லாற்றுணைக் கார ணங்காண்.

(இ - ள்). (காலம் சேர்ந்தபோது நிலைகுலைந்து அழிதலால்) தொழிலுக்கு - அத்தோற்றக்கேடுகளுக்கு,—காலமே கடவுளாகக் கண்டனம் என்னின் - காலமே கருத்தாவாகக் கண்டோம் என்று சொல்லின்,—காலமோ அறிவின்றாகும் - காலமோ அறிவில்லாத சடப்பொருளாம். (ஆதலால் அது கருத்தா வாகாது),—ஆயினும் காரியங்கள் காலமே தரவே காண்டும் - அங்ஙனமாயினும் போக்கியப்பொருளின் தோற்றக் கேடுகளாகிய காரியங்களைக் காலமே தரக்காண்கின்றோம். ஆதலின்,—காரணன் விதியினுக்கு - நிமித்த காரணனாகிய கருத்தா செய்யுந் தொழிலுக்கு,—காலமும் - காலமும்,—கடவுள் ஏவலால் - அறிவுடைய அக் கருத்தாவின் ஆணையாற் செலுத்தப்படலால்,—துணைக்காரணம் காண் - துணைக்காரணம் என்றறிவாயாக.

குறிப்பு. ஏவல் - ஆணை. அது செநநி ஆரிணி உரோதயித்திரி என்னும் சத்திகளாக நின்று அதிட்டிக்கும். மீமாஞ்சகர் ஈசுரன் ஒருவன் இல்லை என்னும் கொள்கையுடையவர்.

பொழிப்பு. உலகத்தோற்ற நாசங்களுக்குக் காலம் துணைக்காரணமாயிருப்பினும், அது சடமாதலாலே தோற்றி ஒடுக்கும் நிமித்தகாரணன் வேறு வேண்டப்படும்.

4. தார்க்கிகர்மதம்பற்றி ஆசங்கித்து மறுத்து வருமுறை வந்து நின்று போவதும் என்பதும், தருபவனொருவன் வேண்டும் என்பதும் சாதித்தல்.

(a) அணுக்கள் உலகிற்கு முதற்காரணமாகா.

31. அழிந்தபி னணுக்க டாமே யகிலமாய் வந்து நின்று
கழிந்திடுங் கன்மத் தென்னிற் கன்மமு மணுவுங் கூட
மொழிந்திடுஞ் சடமே யாகி முடிதலான் முடியா செய்தி
ஒழிந்திடு மணுரு பங்க ளுலகெலா மொடுங்கு மன்றே.

(இ - ள்). அழிந்தபின் - உலகம் அழிந்தபின்பு,—அணுக்கள் தாமே - அழிவின்றி நித்தமாயிருக்கும் பரமாணுக்களே,—கன்மத்து - கன்மம் ஏதுவாக,—அகிலமாய் வந்து நின்று கழிந்திடும் என்னின் - உலகமாய்த் தோன்றி நின்று அழியும் என்னின், அப்படியன்று,—மொழிந்திடும் கன்மமும் அணுவும் கூட - சொல்லப்பட்ட கன்மமும் அணுவும் ஆகிய இரண்டும் கூடி

னும் - சடமே ஆகி முடிதலான் - சடமாகவே முடிதலாலும்,—உலகு எலாம் ஒடுங்கும் அன்று - உலகம் முழுவதும் ஒடுங்கும் பொழுது,—அணுரு பங்கள் ஒழிந்திடும் - உருவமுடைய அணுக்களும் ஒடுங்குமாதலாலும்,— செய்தி முடியா - அவ்வணுக்கள் உலகமாய்த் தோன்றி நின்று அழிதல் கூடாது.

குறிப்பு. 1. பிரபஞ்சத்திற்குக் காரணம் பரமாணுக்கள் என்னும் அணு காரணவாதம் தார்க்கிகருக்கேயன்றிச் சௌத்திராந்திகர் வைபாடிகர் ஆசீவகர்க்கும் ஒக்கும்.

2. தார்க்கிகர் பரமாணுக்கள் நித்தமாயிருப்பன. கன்மம் உண்டு. இறைவனுமுளன். பரமாணுக்களுக்கு மேற்பட்ட தத்துவமில்லை. கன்மத்துக் கேற்பப் பரமாணுக்கள் தம்முட் கூடி உலகமாய்த் தோன்றி நின்று அழியும். காலமும் கன்மமும் போலக் கருத்தாவின் இச்சையும் அதற்கு ஒரு துணைக் காரணமாம் என்பர். அணுக்கள் உருவப்பொருள்களாய் அவயவமுடைமையால் அழிவெய்தும். ஆதலால் அவை நித்தமாகா. அவை சடமாதலால் ஒரு கருத்தாவின்றி உலகமாய்த் தோன்றி நின்றழியா என்க.

தொழிப்பு. தார்க்கிகர் நித்தமாகிய அணுக்கள், கன்மம் காரணமாகப், பிரபஞ்சமாய்த் தோன்றி நின்று அழியும் என்பர். அவை இரண்டும் சடப் பொருள்களாதலாலும், பிரபஞ்சம் ஒடுங்கும் பொழுது அணுக்களும் ஒடுங்குமாதலாலும், அவ்வணுக்கள் பிரபஞ்சமாய்த் தோன்றி நின்றழிதல் கூடாதாம்.

(b). மாயை உலகிற்கு முதற்காரணம்.

**32.** காரண வணுக்கள் கெட்டாற் காரிய வுலகின் றென்னிற்
காரண மாயை யாகக் காரியங் காண லாகுங்
காரண மாயை யென்னை காண்பதிங் கணுவே யென்னிற்
காரண மாயை யேகாண் காரிய மணுவிற் கண்டால்.

(இ - ள்). காரண அணுக்கள் கெட்டால் - காரணமாகிய பரமாணுக்கள் அழிந்தால்,—காரிய உலகு இன்று என்னின் - அவற்றின் காரியமாகிய பிரபஞ்சம் இல்லையாகும் என்னின்,—காரணம் மாயையாக - உலகிற்கு முதற் காரணம் மாயையாயிருத்தலால்,—காரியம் காணலாகும் - அவ்வணுக்கள் அழியினும் காரியமாகிய பிரபஞ்சம் மீளத் தோன்றுவதற்கும்,—காரணம் மாயை என்னை - உலகிற்கு முதற்காரணம் மாயை என்பது என்னை,—இங்குக் காண்பது அணுவே என்னின் - இவ்விடத்து முதற்காரணமாகக் காணப்படுவது பரமாணுவே என்னின்,—காரியம் அணுவில் கண்டால் - காரியத்தன்மை பரமாணுக்களிடத்தே காணப்படுதலால் அவை உலகிற்கு முதற்காரணமாதல் கூடாது. ஆதலின்,—காரணம் மாயையே காண் - முதற் காரணம் மாயையே என அறிவாயாக.

குறிப்பு. காண்டலால் என்பது கண்டால் எனத் திரிந்தது.

பொழிப்பு. அணுக்கள் அழியிற் காரியமாகிய பிரபஞ்சம் இல்லையாய் முடியுமென்னின், மாயை காரணமாயிருத்தலால், பிரபஞ்சம் இல்லையாக மாட்டாது. அணுவே காரணமாய்க் காணப்படுவதன்றி மாயை முதற்காரணமாய்க் காணப்படுவதில்லை யெனின், அணுக்களிற் காரியத்தன்மை காணப்படுதலால், அவை காரணமாகமாட்டா. மாயையே காரணமாகும் என்பது அறியப்படும்.

(௬). அணுக்கள் காரியப்பொருளாதலால், முதற்காரணமாகா.

**33.** காரிய மென்ப தென்னை காரண வணுவை யென்னிற்
காரிய மவ்ய வத்தாற் கண்டனங் கடாதி போலக்
காரிய வுருவ மெல்லா மழிதருங் கார ணத்தாற்
காரிய வுறுப்பின் மாயை தருமெனக் கருதி டாயே.

(இ-ள்). காரண அணுவை - உலகிற்குக் காரணமாகிய பரமாணுக்களை,—காரியம் என்பது என்னை என்னின் - காரியம் என்று சொல்லுவது எப்படியெனின்,—காரியம் கடாதி போல அவயவத்தால் கண்டனம்-அணுக்கள் காரியப்பொருள் என்பது குடம் முதலியவை போல அவயவமுடைமையால் அறிந்தனம்,—காரிய உருவம் எல்லாம் - காரியமாகிய உருவப்பொருள்களெல்லாம்,—அழிதரும் காரணத்தால் - அழிந்துபோகுந் தன்மையுடைமையால்,—காரிய உறுப்பு இல் மாயை - காரியமான அவயவத்தன்மையில்லாத மாயையே முதற்காரணமாய்,—தரும் எனக் கருதிடாய் - அப்பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் என நீ அறிவாயாக.

குறிப்பு. 1. தார்க்கிகர் பிரபஞ்சத் தோற்றத்துக்கு அணுக்கள் முதற்காரணம் என்பர். அவை அவயவமுடையனவாய்க் காணப்படுதலின், காரியப்பொருளாய் அழிவனவேயன்றிக் காரணமாகா என அவர் கொள்கையை மறுத்துக், காரியத்தன்மையில்லாத மாயையே முதற்காரணமாகும் என இச்செய்யுளிற் சாதித்து, வருஞ்செய்யுளில் அவருக்கு உடன்பாடான ஆகமம் அனுமானம் என்னும் பிரமாணங்களால் அக்கூற்றை வலியுறுத்துகின்றார். தார்க்கிகருக்கு உடன்பாடான பிரமாணங்கள் பிரத்தியட்சம், அநுமானம், உபமானம் (ஒப்பு), சாப்தம் (ஆத்தவாக்கியம்) என நான்குமாம்.

2. காரியவுறுப்பு-காரியத்தன்மை. அஃது அவயவமுடைமை. உறுப்பு-அவயவம்.

பொழிப்பு. அணுக்கள் அவயவமுடைமையாற் காரியப்பொருளாம். காரியப்பொருள் அழியுந் தன்மையுடையதாதலாற் காரணமாகாது. ஆதலால், அவயவமுடைமையும் அழிவும் இல்லாத மாயையே முதற்காரணமாய்ப் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும்.

(*d*) மாயை முதற்காரணம் என்பதற்குப் பிரமாணம்.

**34.** தோற்றமு நிலையு மீறு மாயையின் றொழில தென்றே
சாற்றிடு முலகம் வித்துச் சாகாதி யணுக்க ளாக
ஏற்றதே லீண்டு நிற்கு மில்லதே லியைவ தின்றும்
மாற்றநீ மறந்தா யித்தான் மாயையை மதித்தி டாயே.

(இ - ள்). தோற்றமும் நிலையும் ஈறும் - தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலும்,—மாயையின் தொழிலது என்றே சாற்றிடும் உலகம் - மாயையினது செயலென்றே சொல்லப்படும் அறிஞர் வாக்கையும்,—வித்துசாகாதி அணுக்களாக ஏற்றதேல் - வித்தானது இலை முதலியவைகளைச் சூக்கும ரூபமாகத் தரித்து நின்றதாயின்,—ஈண்டு நிற்கும் - அவை இவ்விடத்துத் தூலரூமாய் வெளிப்பட்டு நிற்கும்,—இல்லதேல் - அவ்வாறு சூக்கும ரூபமாய் அடங்கி நிற்றல் இல்லதாயின்,—இயைவது இன்றும் மாற்றம் - அவை தூலரூபமாக வெளிப்படுதலுமின்றும் என, உடம்பாடும் எதிர்மறையுமாகக் கூறப்படும் வழக்கச்சொல்லையும்,—நீ மறந்தாய் - நீ மறந்துவிட்டாய்;—இத்தால் - காரிய வுறுப்பின்மை மாத்திரமன்றி ஆத்தவாக்கியம் வழக்கச்சொல் என்னும் இவற்றாலும்,—மாயையை மதித்திடாய் - அணுக்கள் உலகிற்கு முதற்காரணம் என்பதனைவிட்டு மாயையே முதற்காரணம் என்பதனை அறிவாயாக.

குறிப்பு. 1. உலகம் - உயர்ந்தோர், அறிஞர். அவர்வாக்கு ஆத்தவாக்கியம் எனப்படும் ஆகமப்பிரமாணமாம்.

2. வித்துச்சாகாதி யணுக்களாக வேற்றதே லீண்டு நிற்கு மில்லதேலியைவதின்றும் மாற்றம்:- சாகாதிகள் வித்தினிடத்து முன் சூக்குமரூபமாக அடங்கியிருந்தே பின் தூலரூபமாய்த் தோன்றும். அவ்வாறு அடங்கியிருந்ததில்லையாயின். பின் வெளிப்பட்டுத் தோன்று என்பது வழக்கச் சொல். இவைபோலப் பிரபஞ்சமும் மாயையிலே முன் சூக்குமரூபமாக அடங்கியிருந்து, பின் தூலரூபமாய்த் தோன்றும் என்பது சாதிக்கப்பட்டது. வித்து மாயைக்கும், சாகாதி பிரபஞ்சத்துக்கும் உவமை. வித்துச் சாகாதிகளுக்குக் காரணமாதல் போல, மாயை பிரபஞ்சத்துக்குக் காரணமாம் என்பது இதனாற் கூறப்பட்டது. இந்த உபமானப் பிரமாணம் அனுமானப் பிரமாணத்தில் அடங்குதலால், அங்ஙனம் மேலே கூறப்பட்டது. மாற்றம் - சொல்.

3. உலகிற்கு முதற்காரணம் மாயை எனவே அதன் உண்மையும் சாதிக்கப்பட்டவாறு காண்க.

பொழிப்பு. உலகிற்கு முதற்காரணம் மாயை என்பதற்கு ஆகம அநுமானப் பிரமாணங்களும் சான்றாகும்.

(e) முதற்காரணமாகிய மாயையிலிருந்து காரியமாகிய பிரபஞ்சம் சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும்.

35. மாயையி னுள்ள வஞ்சம் வருவது போவ தாகும்
நீயதிங் கில்லை யென்னி னிகழ்ந்திடு முயலிற் கோடு
போயுகு மிலைக ளெல்லா மரங்களிற் புக்குப் போதின்
ஆயிடு மதுவு மென்னிற் காரணங் கிடக்க வாமே.

(இ - ள்.) மாயையின் உள்ள வஞ்சம் - மாயையினிடத்து முன் சூக்கும ரூபமாய் ஒடுங்கியிருந்த பிரபஞ்சமே,—வருவது போவது ஆகும் - பின் தூல ரூபமாய்த் தோன்றி ஒடுங்குவதாகும்,—நீ இங்கு அது இல்லை என்னின் - நீ இவ்விடத்து உள்ளது தோன்றும் என்னும் சற்காரிய காரணங் கொள்ளாது இல்லது தோன்றும் என்பையாயின்,—முயலில் கோடு நிகழ்ந்திடும் - முயலினிடத்தும் கொம்பு தோன்றுவதாகும்,—போய் உகும் இலைகள் எல்லாம் - முதிர்ந்து உதிர்ந்த இலைகள் எல்லாம்,—மரங்களில் புக்குப் போதின் - மரங்களிலே ஒடுங்கி மீண்டும் இலைகளாகப் புறப்படுமோயின்,—அதுவும் ஆயிடும் என்னின் - பிரபஞ்சமும் நீர் கூறிய மாயையிலே ஒடுங்கி மீளத் தோன்றும் என்னின், அஃதொக்கும்,—காரணம் கிடக்க,—உதிர்ந்த இலைகள் சூக்குமரூப காரணமாய் நிலைபெற்றுப் பிருதிவியில் ஒடுங்கி மீளவும் இலை முதலியனவாய் வருதலின்,—ஆம் - பிரபஞ்சமும் அவ்வாறு மாயையிலே ஒடுங்கி மீளவும் தோன்றுவதாகும்.

குறிப்பு. 1. தார்க்கிகர் சற்காரிய காரணங் கொள்ளாத அசற்காரிய வாதிகளாதலின், முதற்காரணமாகிய மாயையிலிருந்து காரியமாகிய பிரபஞ்சம் சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும் என்பது இச்செய்யுளாற் சாதிக்கப்பட்டது.

2. வஞ்சம் - பிரவஞ்சம் என்றது வஞ்சம் எனக் குறைந்து நின்றது.

3. போயுகும் - போய் + உகும். போதல் - முதிர்தல். உகுதல் - உதிர்தல், சொரிதல்.

4. போதின் - வருமாயின். போதல் - வருதல்.

பொழிப்பு. மாயையினின்று பிரபஞ்சம் சற்காரிய முறைப்படி தோன்றி ஒடுங்கும். அது உதிர்ந்த இலைகள் சத்திரூபமாய்ப் பூமியிற் கிடந்து பின் இலை முதலியனவாய் வருதல்போலாம்.

(f) பிரபஞ்சம் நித்தப்பொருள்.

36. கருதுகா ரணமுண் டாகக் காரிய முள்ள தாகி
வருதலா லநாதி வைய மற்றெரு கடவு ளித்தைத்
தருதலா லாதி யாகச் சாற்றலு மாகு மாயைக்
கொருவனு ரென்னிங் கென்னி னுள்ளவா றுரைப்பக் கேணீ.

(இ - ள்). கருது காரணம் உண்டாக - சொல்லப்பட்ட காரணம் உள்பொருளாக,—காரியம் உள்ளதாகி வருதலால் - காரியமும் உள்பொருளாகி அதனிடத்துத் தோன்றுதலின்,—வையம் அநாதி - காரியமாகிய பிரபஞ்சமும் நித்தியப்பொருளேயாம்,—ஒரு கடவுள் இத்தைத் தருதலால் - ஒரு கருத்தா இதனைத் தோற்றி ஒடுக்குதலால்,—ஆதியாகச் சாற்றலும் ஆகும்-அழிபொருள் என்று சொல்லவும்படும்.—மாயைக்கு ஒருவன் ஆர் இங்கு என் என்னின்-அங்ஙனமாயினும் மாயையே தன்காரியமாகிய பிரபஞ்சத்தைத் தரும். அதற்குக் கருத்தா ஆர்? அவர் இவ்விடத்து எற்றுக்கெனின்,—உள்ளவாறு உரைப்ப நீ கேள்-அதனை உள்ளபடி உரைப்போம் நீ கேட்பாயாக.

குறிப்பு. 1. தோன்றுதலும் ஒடுங்குதலுமாகிய அவத்தை வேறுபாடுபெற்றிப் பிரபஞ்சம் "ஆதி" எனப்படினும், அவ்வவத்தை வேறுபாடில்லாத காரணத்தை நோக்குமிடத்து அது நித்தப்பொருளேயாம்.

2. மாயைக் கொருவனுர் - பிரபஞ்சத் தோற்றத்துக்குக் காரணம் அணுக்கள். கன்மமும் காலமும்போல, இறைவன் ஒரு துணைக்காரணமாம் என்னும் தார்க்கிகர் கொள்கையை மறுத்து, அணுக்கள் காரணமாகா, மாயையே காரணம், அதனிடத்துப் பிரபஞ்சம் தோன்றி ஒடுங்கும் என்று சாதித்தபின், அத்தோற்ற ஒடுக்கங்களுக்கு நிமித்தகாரணனாகிய ஒரு கடவுள் வேண்டப்படும் என்று கூறுகின்றார். இதனாற் பிரபஞ்சத் தோற்றத்துக்குக் கடவுள் ஒருவர் வேண்டப்படுவதில்லை என்னும் ¦சாங்கியரும் மறுக்கப்பட்டனர்.

பொழிப்பு. காரியமாகிய பிரபஞ்சமும் அதன் காரணமாகிய மாயையைப்போல உள்பொருளாயிருத்தலின், அது நித்தப்பொருளேயாம். தோன்றி ஒடுங்கும் வேறுபாடுபெற்றி அது அநித்தம் என்று சொல்லப்படினும், உண்மையிலே நித்தப்பொருளாம்.

(g) பிரபஞ்சத்தின் தோற்ற ஒடுக்கங்கள் கருத்தாவினாலாகும்.

**37.** புத்திமற் காரி யத்தாற் பூதாதி புருடன் றானும்
அத்தனு கரணம் பெற்று லறிதலா லவற்றை மாயை
உய்த்திடு மதனன் மாயைக் குணர்வொன்று மில்லை யென்றே
வைத்திடு மதனு லெல்லாம் வருவிப்பா னொருவன் வேண்டும்.

(இ - ள்). பூதாதி - பூதம் முதலிய பிரபஞ்சமெல்லாம்,—புத்திமத் காரியத்தால் - (குடம் குயவனாற் செய்யப்படும் காரியமானாற்போல) ஒரு சேதனனாற் செய்யப்படும் காரியமாயிருத்தலாலும்,—புருடன் தானும் - சேதனனாகிய புருடனும்,—அத் தனு கரணம் பெற்றுல் அறிதலால் - அப் பூதம் முதலியவற்றாலாகிய தனு கரணங்களைப் பெற்றவிடத்து அறிதலானும்,—மாயை அவற்றை உய்த்திடும் - மாயை அவற்றிற்கு முதற்காரணமாய் அவற்றைச்

செலுத்துமாயினும்,—அதனால் மாயைக்கு உணர்வு ஒன்றும் இல்லை என்றே வைத்திடும் அதனால் - அக்காரணம்பற்றி அம்மாயைக்கு அறிவு சிறிதும் இல்லையென்று கூறியிருத்தலாலும்,—எல்லாம் வருவிப்பான் ஒருவன்-(பாரிசேடப்பிரமாணத்தால்) பூதம் முதலிய பிரபஞ்சமெல்லாவற்றையும் மாயையினின்றும் தோற்றுவித்து நிலைபெறுத்தி அழிக்குங் கடவுள் ஒருவன்,—வேண்டும் - இவையெல்லாவற்றினும் வேறாய் வேண்டப்படுவன்.

குறிப்பு. புத்திமத் - புத்திமான், சேதனன். புத்திமத்-வடமொழி.

பொழிப்பு. பிரபஞ்சம் ஒரு சேதனனாற் செய்யப்படுங் காரியமாயிருத்தலாலும், புருடன் மாயாகாரியமான தனுகரணங்களைப் பெற்றாலன்றி அறியமாட்டானாதலாலும், மாயை அறிவில்லாத சடப்பொருளாயிருத்தலாலும், இவ்விரண்டிற்கும் வேறாய்ப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து நிலைபெறுத்தி ஒடுக்கும் கருத்தா ஒருவன் வேண்டப்படுவன்.



## இரண்டாமதிகரணம்.

"தான்முதலீறுமாகி அநாதிமுத்தசித்துரு மன்னிநின்று மருவிடும்"(38-90) என்பது இரண்டாங்கூறு.

இவ்வதிகரணம், பதி பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் முறைமை கூறுமுகத்தாற், பதியிலக்கணங் கூறுகின்றது. இவற்றுள்,

A. பதி பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் முறைமை, (38-57) இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுப் பொருள் கூறப்படுகின்றது.

I. தான் முதலாகி அநாதி முத்த சித்துரு மன்னி நின்று மருவிடும் (38-51).

II. தான் ஈறுமாகி அநாதி முத்த சித்துரு மன்னி நின்று மருவிடும், (52-57)

ஒவ்வொருபிரிவினும் அடங்கிய விஷயங்கள் அவ்வப்பிரிவின் முகப்பிலே காணப்படும்.



I. "தான்முதலாகி அநாதிமுத்த சித்துரு மன்னி நின்று மருவிடும்" என்பது முதற்பிரிவு. (38-51).

இப்பிரிவில் அடங்கிய விஷயங்கள்:—

1. பிரபஞ்சத்தோற்றத்துக்குச் சிவபெருமான் நிமித்தகாரணன், (38).
2. சிவபெருமான் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் முறைமை, (39).
3. சுத்தப் பிரபஞ்சமாகிய வாக்குக்களும் அவற்றின் இயல்பும்,(40-46)

(a). வைகரிவாக்கின் இலக்கணம், (40).
(b). மத்திமை வாக்கின் இலக்கணம், (41).
(c). பைசந்திவாக்கின் இலக்கணம், (42).
(d). சூக்குமைவாக்கின் இலக்கணம், (43).
(e). வாக்குக்கள் விருத்திப்படும் முறைமை, (44).
(f). அபரமுத்தருக்கு வேண்டப்படும் சுத்தாத்துவாக்களுக்கு வயிந்தவம் முதற்காரணம், (45).
(g). வாக்குக்களால் உயிர்களுக்கு அறிவு உண்டாகும், (46).

4. சுத்தாசுத்த அசுத்தப் பிரபஞ்சத்தின் இயல்பு, (47-48).

5. முதல்வன் சித்துரு மன்னி நின்று மருவிடும் முறைமையும், அதுபற்றித் தொடக்குறும் முறைமையும், (49-51).

1. பிரபஞ்சத்தோற்றத்துக்குச் சிவபெருமான் நிமித்தகாரணன்.

38 காரிய கார ணங்கள் முதறுணை நிமித்தங் கண்டாம்
பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநி மித்தந்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால னுய்நின் றுக்குவ னகில மெல்லாம்.

(இ-ள்). காரிய காரணங்கள் - ஒருகாரிய நிகழ்ச்சிக்கு வேண்டப்படுங் காரணங்கள்,—முதல் துணை நிமித்தம் கண்டாம் - முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம் என மூன்றுதலை அறிந்தாம்,—பாரில் - பூமியின் கண்ணே,—மண் திரிகை பண்ணுமவன் - குடம் முதலியவற்றைச் செய்தற்கு மண்ணும் திரிகையும் செய்வோனுகிய குயவனும்,—முதல் துணை நிமித்தம் - முறையே முதற்காரணமும் துணைக்காரணமும் நிமித்தகாரணமுமாம்,—தேரின் - ஆராயுமிடத்து,—மாயை மண் ஆக - மாயையை மண்போல முதற்காரணமாகவும்,—தன் சத்தி திரிகை ஆக - தனது சத்தியைத் திரிகை போலத் துணைக்காரணமாகவுங் கொண்டு,—ஆரியன் குலாலனுய் நின்று - சிவபெருமான் குயவன்போல நிமித்தகாரணனுகி நின்று,—அகிலம் எல்லாம் ஆக்குவன் - பிரபஞ்சமெல்லாவற்றையும் தோற்றுவிப்பன்.

குறிப்பு. 1. காரிய காரணங்கள் ஆறும் வேற்றுமைத் தொகை.

2. அகிலமெல்லாம் - சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் என்னும் காரியப் பிரபஞ்சங்கள்.

3. மாயை - சுத்தமாயை.

பொழிப்பு. பிரபஞ்சமாகிய காரியத்துக்கு வேண்டப்படுங் காரணங்கள் முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம் என மூன்றும். அவற்றுள்ளே மாயை முதற்காரணமாம். சிவசத்தி துணைக்காரணமாம். சிவபெருமான் நிமித்தகாரணனும்.

2. சிவபெருமான் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் முறைமை.

39. விந்துவின் மாயை யாகி மாயையி னவ்வி யத்தம்
வந்திடும் விந்துத் தன்பால் வைகரி யாதி மாயை
முந்திடு மராக மாதி முக்குண மாதி மூலந்
தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னி னின்றே.

(இ-ள்). விந்துவின் மாயை ஆகி - மேலே முதற்காரணம் எனப்பட்ட சுத்தமாயையினின்றும் அசுத்தமாயை விருத்தியாகி,—மாயையின் அவ்வியத்தம் வந்திடும் - அவ்வசுத்தமாயையினின்றும் பிரகிருதிமாயை தோன்றும்,—விந்துத் தன்பால் - சுத்தமாயையினின்றும்,—வைகரி ஆதி (வந்திடும்) - (ஒடுங்குமுறைபற்றி) வைகரி முதலிய நான்கு வாக்குகளுந் தோன்றும்,—மாயை-அசுத்தமாயையினின்றும்,—அராகம் ஆதி முந்திடும் - (ஒடுங்குமுறைபற்றி) அராகம் முதலிய காரணதத்துவங்கள் ஐந்தும் பிரகிருதிக்குமுன்னாகத் தோன்றும்,—மூலம் - (அராகம் முதலியவற்றிற்குப் பின்னர்த் தோன்றும்) பிரகிருதிமாயை,—முக்குணம் ஆதி தந்திடும் - (தோன்றும் முறைபற்றி) குணதத்துவம் முதலிய போக்கிய தத்துவம் இருபத்துநான்கையும் தோற்றுவிக்கும்,—சிவனவன் தன் சந்நிதிதன்னில் நின்று-இவை பரமசிவனது சத்திரூப சந்நிதியினின்றும் இங்ஙனம் காரியப்படும்.

குறிப்பு. 1. விந்துவின் மாயையாகி மாயையினவ்வியத்தம் வந்திடும் - சுத்தமாயையின் காரியமே அசுத்தமாயை என்றும், சுத்தமாயைபோல அசுத்தமாயையும் அநாதி என்றும் இரத்தினத்திரய நூலாசிரியர் கூறுவர். மாயை ஒன்றே ஊர்த்துவமாயை அதோமாயை என இருவகைப்படும் என்று அகோரசிவாசாரியர் கூறுவர். அசுத்தமாயை சுத்தமாயையின் காரியம் என்பதும், அது சுத்தமாயை போல நித்தப்பொருள் என்பதும் இந்நூலாசிரியர் கருத்தாம். (செ. 140, 143 பார்). ஊர்த்துவம் - மேனோக்கியிருப்பது. அதோ - கீழ். அதஃ என்பது அதோ என விகாரமாயிற்று.

விந்து - சுத்தமாயை, அது மலகன்மங்களோடு விரவாது சுத்தமாயிருப்பது. மாயை - அசுத்தமாயை. அது மலகன்மங்களோடு விரவி அசுத்தமுற்றிருப்பது. அவ்வியத்தம் - அசுத்தமாயையினின்றுந் தூல பரிணாமமாய்த் தோன்றும் பிரகிருதி. முக்குணங்களும் வெளிப்பட்டுத் தோன்றாதிருத்தலாற் பிரகிருதி அவ்வியத்தம் எனப்பட்டது. அவ்வியத்தம் - வெளிப்படாதது. பரிணாமம் - ஒன்று பிறிதொன்றாதல். (செ. 44. 2).

சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை என்னும் மூன்றும் பிரபஞ்சத்தோற்றத்திற்கு முதற்காரணங்களாகும். அதனால் அவற்றின் காரியமும் முறையே சுத்தப் பிரபஞ்சம் சுத்தாசுத்தப் பிரபஞ்சம் அசுத்தப்பிரபஞ்சம் என மூவகைப்படும்.

2. விந்துத்தன்பால் வைகரியாதி வந்திடும்-சுத்தமாயையிலே நாதமும், நாதத்திலே விந்துவும், விந்துவினின்று சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி

என்னும் நான்கு வாக்குக்களும் தோன்றும். இவை நான்கும் சுத்தமாயா காரியமாகிய சுத்தப் பிரபஞ்சமாம்.

3. மாயை அராகமாதி முந்திடும் - காலம் நியதி கலை வித்தை அராகம் என்னும் ஐந்து தத்துவங்களும் அசுத்தமாயையிலே தோன்றும் சுத்தாசுத்தப் பிரபஞ்சமாம். இத்தத்துவங்கள் ஐந்தும் அசுத்தமாயையினின்றும் பிரகிருதி தோன்றுதற்கு முன்னர்த் தோன்றுவனவாகையால், "முந்திடும்" என்றார். ஒடுங்கு முறையில் வைத்து "அராகமாதி" என்றார்.

4. முக்குணமாதி மூலந் தந்திடும்: - பிரகிருதிமாயையினின்று தோன்றுந் தத்துவங்கள் குணதத்துவமும், புத்தி அகங்காரம் மனம் என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும், ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும், பூதம் ஐந்தும் என இருபத்துநான்காம். இவை அசுத்தப்பிரபஞ்சமாம்.

5. சிவனவன்றன் சந்நிதிதன்னினின்று: - பரமசிவன் ஐந்தொழில்களுஞ் செய்யும்பொருட்டுச் சத்திகாரிய அருட்டிருமேனி கொண்டு, தாமே சுத்தப் பிரபஞ்சத்தையும், அநந்ததேவரை அதிட்டித்து நின்று சுத்தாசுத்தப் பிரபஞ்சத்தையும், சீகண்டரை அதிட்டித்து நின்று அசுத்தப் பிரபஞ்சத்தையும் காரியப்படுத்துவர். மூவகைப் பிரபஞ்சங்களும் சிவசந்நிதியையின்றித் தொழிற்படா என்பது அறிதற்பாலது.

பொழிப்பு. பரமசிவனது அருளாலே சுத்தமாயையிலிருந்து சூக்குமை வாக்கு முதலிய சுத்தப் பிரபஞ்சமும், அசுத்தமாயையிலிருந்து அராகமாதி சுத்தாசுத்தப் பிரபஞ்சமும், பிரகிருதிமாயையிலிருந்து குணதத்துவம் முதலிய அசுத்தப் பிரபஞ்சமும் தோன்றும்.

### 3. சுத்தப்பிரபஞ்சமாகிய வாக்குக்களும் அவற்றின் இயல்பும் (40-46).

#### (a). வைகரி வாக்கின் இலக்கணம்.

40. வைகரி செவியிற் கேட்ப தாயத்த வசன மாகி
மெய்தரு முதான வாயு மேவிட விளைந்த வன்னம்
பொய்யற வடைவு டைத்தாய்ப் புந்திகா ரணம தாகி
ஐயமில் பிராண வாயு வடைந்தெழுந் தடைவு டைத்தாம்.

(இ - ள்). வைகரி - (மேற்கூறிய வாக்கு நான்கனுள்) வைகரி வாக்கானது,—செவியில் கேட்பதாய் - தன் செவிக்கும் பிறர்செவிக்கும் கேட்கப்படுவதாயும்,—அத்தவசனமாகி - நினைத்தபொருளைச் சொல்லும் சொல்லாயும்,—புந்தி காரணமதாகி - (சொல்வானுக்கும் கேட்பானுக்கும்) சவிகற்ப உணர்வு உண்டாதற்கேதுவாயும்,—மெய்தரும் உதான வாயு மேவிடவிளைந்த வன்னம் - உடம்பின்கண் எழுகின்ற உதானவாயு பொருந்துதலினாலே

மத்திமைத்தானத்திலே சூக்குமரூபமாய்ப் பிரிந்து தோன்றிய அக்கரங்கள்,—ஐயம் இல் பிராணவாயு அடைந்து எழுந்து - சந்தேகமின்றி இயங்கும் பிராணவாயுவினாற் செலுத்தப்பட்டு எழுந்து,—பொய் அற அடைவு உடைத்தாய்-விபரீதமறப் புறத்தே தூலரூபமாய் வருதலுடையதாயுமுள்ள,—அடைவு உடைத்தாம் - இலக்கணத்தையுடையதாம்.

குறிப்பு. இங்கே கூறப்பட்ட வாக்குக்கள் நான்கும் சுத்தாத்துவாவில் வசிப்பவருக்குச் சூக்குமகாரியங்களாயும், அசுத்தாத்துவாவில் வசிப்பவருக்குத் தூலகாரியங்களாயும் இருக்கும். (சித்தா. சாரா. 70. பௌஷ். 102).

பொழிப்பு. வைகரிவாக்கு, மத்திமைத் தானத்திற் பிரிந்து தோன்றிய அக்கரங்கள் பிராணவாயுவினால் உந்தப்பட்டு எழுந்து புறத்திலே அடைவதாயும், சொல்லுவோன் தான் நினைத்த பொருளைச் சொல்லுஞ் சொல்லாயும், தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப்படுவதாயும், சவிகற்பவுணர்வு உண்டாதற்கேதுவாயுமுள்ள இலக்கணங்களையுடையதாம்.

(b). மத்திமை வாக்கின் இலக்கணம்.

41. உள்ளுணர் வோசை யாகிச் செவியினி லுறுதல் செய்யா
தொள்ளிய பிராண வாயு விருத்தியை யுடைய தன்றித்
தெள்ளிய வக்க ரங்கள் சிந்திடுஞ் செயல தின்றி
மெள்ளவே யெழுவ தாகு மத்திமை வேற தாயே.

(இ - ள்). உள் உணர்வு ஓசை ஆகி - சொல்லுவான் தன்னுள்ளே உணர்வதாயும் தனக்குக் கேட்பதாயும்,—செவியினில் உறுதல் செய்யாது - பிறர் செவியிற் கேட்கப்படாததாயும்,—ஒள்ளிய பிராணவாயு விருத்தியை உடையது அன்றி - விளங்கிய பிராணவாயுவின் தொழிற்பாடில்லாமை பற்றி,—தெள்ளிய அக்கரங்கள் சிந்திடும் செயலது இன்றி - சூக்குமரூபமாய்ப் பிரிந்து தோன்றிய அக்கரங்கள் பிரிந்து தோன்றினும் பல் இதழ் நா அண்ணங்களிற்பட்டுச் சிதறிப்போகுஞ் செயலில்லதாயும்,—மெள்ளவே எழுவது - மெல்லிதாய்க் கண்டத்திலே விளங்குவது,—வேறதாய் - பைசந்திக்கும் வைகரிக்கும் வேறாய் அறியப்படும்,—மத்திமை ஆகும் - மத்திமை வாக்காகும்.

குறிப்பு. 1. மத்திமைத்தானத்திற் பிராணவாயு தொழிற்படாது உதானவாயு மாத்திரந் தொழிற்படுதலின், "ஒள்ளிய பிராணவாயு விருத்தியையுடையதன்றி" என்றார்.

பொழிப்பு. சூக்குமரூபமாய்ப் பிரிந்து விளங்கும் அக்கரங்களாகியும், சொல்லுவான் தன்னுள்ளே உணர்வதாயும் தனக்குக் கேட்பதாயும், பிறர் செவிக்குக் கேட்கப்படாததாயும் கண்டத்திலே விளங்குவது மத்திமைவாக்காகும்.

(c) பைசந்திவாக்கின் இலக்கணம்.

42. வேற்றுமைப் பட்ட வன்னம் வெவ்வேறு விபாக மாகித்
தோற்றுத லடைவொ டுக்கிச் சொயம்பிர காச மாகிச்
சாற்றிய மயிலி னண்டந் தரித்திடுஞ் சலமே போன்றங்
காற்றவே யுடைய தாகிப் பைசந்தி யமர்ந்து நிற்கும்.

(இ-ள்). சாற்றிய மயிலின் அண்டம் தரித்திடும் சலமே போன்று - (பஞ்சவன்னங்களையும் சூக்குமரூபமாய் ஒடுக்கிக்கொண்டு தான் பிரகாசித்து நிற்பதாகக்) கூறப்பட்ட மயிலின் முட்டை தரித்திருக்கும் நீரைப்போல,— வேற்றுமைப்பட்ட வன்னம் - பலவகைப்பட்ட வன்னங்கள்,—வெவ்வேறு விபாகமாகித் தோற்றுதல் அடைவு ஒடுக்கி - வேறு வேறு பிரிவாகித் தோன்றுதலாகிய முறையை இதயத்தானத்திற் சிறிதுந் தெரியாமல் ஒடுக்கிக்கொண்டு,—சொயம்பிரகாசமாகி - தான் பிரகாசமாகி,—ஆற்றவே உடையதாகி - அவ்வன்னங்களின் சூக்குமரூபத்தை மிகவும் உடையதாகி,—பைசந்தி அங்கு அமர்ந்து நிற்கும் - பைசந்திவாக்கானது அந்த இருதயத்தானத்திலே பொருந்தி நிற்கும்.

குறிப்பு. "வேற்றுமைப்பட்ட என்பது தொடங்கிச் சொயம்பிரகாசமாகி" என்பது வரையும் மயிலினண்டசலத்துக்கும் பைசந்திக்கும் பொதுவாகப் பொருள்கொள்ளப்படும். வன்னம் என்பது நிறத்துக்கும் எழுத்துக்கும் சிலேடை.

2. விபாகம் - பிரிவு.

3. சொயம்பிரகாசமாகி - வன்னம் உள்ளடங்கிப் பிரகாசியாது நிற்கத் தான்மாத்திரமே பிரகாசித்தலாற் "சொயம்பிரகாசமாகி" என்றார். சுவயம் என்பது சொயம் எனத் திரிந்தது. சுவயம் - தான்.

பொழிப்பு. பைசந்தி வாக்காவது, எழுத்துக்கள் பிரிந்து தோன்றாது மிகவும் சூக்கும ரூபமாய்ச் சிந்தையின்கண் நிற்கும் இயல்பினையுடையதாம்.

(d). சூக்குமைவாக்கின் இலக்கணம்.

43. சூக்குமை வாக்க துள்ளோர் சோதியா யழிவ தின்றி
ஆக்கிடு மதிகா ரத்திற் கழிவினைத் தன்னைக் கண்டால்
நீக்கமி றைிவா னந்த முதன்மைநித் தியமு டைத்தாய்ப்
போக்கொடு வரவி னைப்பும் விகாரமும் புருட னின்றாம்.

(இ-ள்). சூக்குமை வாக்கது - சூக்குமை வாக்கானது,—உள் ஓர் சோதியாய் - பரசரீரத்தினுள்ளே சொல்லுதற்கரிய நிருவிகற்ப ஞானசொரூபமாய் விளங்குவதாய்,—அழிவதின்றி - ஏனைய வாக்குக்களைப் போலத் தோன்றி ஒடுங்குவதின்றி நிலைபெற்று,—ஆக்கிடும் அதிகாரத்திற்கு - கன்மத்

றாக்கிடாகப் பைசந்தி மத்திமை வைகரி வாக்குக்களைத் தோற்றுவித்து ஆன்மாவைப் பந்திக்கும் முதன்மைத் தொழிலுக்கு,—அழிவினைத் தன்னைக்கண்டால் - முடிவினையும் இவ்வாக்குக்களுக்கு வேறாக ஆன்மாவாகிய தன்னையும் காணுமிடத்து,—புருடன் - அவ்வான்மாவானது,—நீக்கம் இல் அறிவு ஆனந்தம் முதன்மை நித்தியம் உடைத்தாய் - நீங்காத பேரறிவும் பேரானந்தமும் தலைமையும் அழியாவியல்பும் உடையதாய்,—போக்கொடு வரவு - இறப்புப் பிறப்புகளும்,—இளைப்பும் விகாரமும்-இவற்றால் வரும் இளைப்பும் வேறுபாடும்,—இன்றாம் - இல்லதாகும்.

குறிப்பு. 1. பரசரீரம் - காரணசரீரம், கஞ்சுகசரீரம், குணசரீரம் என்னும் மூன்றும் பரசரீரம் எனப்படும். (செ. 211. பார்).

2. ஓர் - ஒப்பற்ற.

3. சோதி - உணர்வு, அறிவு, ஞானம். இங்கே நிருவிகற்ப ஞானத்தை உணர்த்தி நின்றது. நிருவிகற்ப ஞான சொரூபம் சூக்குமைவாக்கின் இலக்கணம். (பௌஷ். 98).

4. அதிகாரத்திற்கு அழிவினைத்தன்னைக் கண்டால் - சூக்குமை வாக்கானது பைசந்தி முதலிய வாக்குக்களாக விருத்திப்பட்டுப் புருடனுக்குச் சவிகற்பவுணர்வு உண்டாதற்குக் காரணமாயிருக்கும். அது அங்ஙனம் விருத்திப்படாது, ஆன்மா இவ்வாக்குக்களுக்கு வேறாகத் தன்னைக் காணுமிடத்து முத்திப்பேறுண்டாம் என்பது. "இந்த வாக்குக்களைப் பார்க்கினும் அதிகமான பந்தம் இல்லை. இவற்றின் விமோசனத்தைத் தவிர முத்தியானது வேறில்லை. பசுக்கள் ஒருகாலத்திலும் அந்த வாக்குக்களினின்று தங்களை வேறு பூதங்களாக எண்ணமாட்டார்கள்". (பௌஷ். 100-101). "அழிவினை தன்னைக்கண்டால்" என்றும் பாடம். இதற்கு முடிவினைக் கண்டால் என்று பொருளுரைக்க. தன்னை - அசைநிலை.

5. சூக்குமை வாக்குக்கு இடம் மூலாதாரம். இவ்வாக்கு மூலாதாரத்திலிருந்து எழுந்து நாபியை அடையும். நாபியை அடைந்து அங்கே எழுத்துக்களை வேறுவேறாகப் பிரியவிடாமல் அடக்கிக்கொண்டு மிகவுஞ் சூக்குமரூபமாய் நிருவிகற்ப உணர்விற்கு ஏதுவாயிருக்கும். இந்நிலையில் அது பைசந்தி எனப்படும். பின்பு அங்கிருந்து அவ்வாக்கு உதானவாயுவினாலே உந்தப்பட்டு இருதயத்தானத்தை அடையும். அங்கே உதானவாயுவின் தொழிலால் எழுத்துக்கள் வேறுவேறாகப் பிரிவுபட்டுச் சூக்குமரூபமாய் விளங்கி மெல்லோசையாய்ச் சொல்லுவோன் தன்னுள்ளே உணரும் சவிகற்பவுணர்விற்கு ஏதுவாய்க் கண்டத்தானம் வரையிலே நிற்கும். இந்நிலையில் அது மத்திமை எனப்படும். பின்பு அவ்வாக்குப் பிராணவாயுவினால் உந்தப்பட்டு எழுந்து பல் இதழ் நா அண்ணம் என்னும் உறுப்புக்களிற் பட்டு விகாரமடைந்து சிதறித் தன்செவிக்கும் பிறர்செவிக்கும் கேட்கப்பட்டுச் சவிகற்பவுணர்வு உண்டாதற்கு ஏதுவாயிருக்கும். இந்நிலையில் அது வைகரி எனப்படும்.

பொழிப்பு. சூக்குமை வாக்கானது பரசரீரத்தினுள்ளே ஞானவடிவாக விளங்குதலும் ஆன்ம ஞானத்தை விளக்குதலுமாகிய இரண்டு இலக்கணங்களையுமுடையதாம். இவ்வாக்கின் தொழில் கெட்டு, ஆன்மா வாக்குக்கள் நான்கினுக்கும் வேறாகத் தன்னைக் காணுமாயின், அவ்வான்மாவுக்குப் பேரறிவும் ஆனந்தமும் சுதந்திரமும் நித்தியத்துவமும் உண்டாம்.

(e). வாக்குக்கள் விருத்திப்படும் முறைமை.

44. நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதி கலையைப் பற்றித்
திகழ்ந்திடு மஞ்ச தாகச் செயல்பரி ணாம மன்று
புகழ்ந்திடும் விருத்தி யாகும் படங்குடி லானாற் போல
மகிழ்ந்திடும் பிரம மன்று மாமாயை யென்பர் நல்லோர்.

(இ - ள்). நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் - இங்ஙனங் காரியப்படும் வைகரி முதலிய நான்கு வாக்குக்களும்,—நிவிர்த்தி ஆதி கலையைப் பற்றி - நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளையும் பற்றுக்கோடாகச் சார்ந்து,—அஞ்சதாகத் திகழ்ந்திடும் - ஐவகைப்பட்டு விளங்குவனவாயிருக்கும்,—செயல் பரிணாமம் அன்று - இங்ஙனம் காரியப்படுதல் அசுத்தமாயா காரியம்போலப் பரிணாமம் அன்று,—படம் குடிலானாற் போல - புடைவை கூடாரமானதுபோல,—புகழ்ந்திடும் விருத்தியாகும் - இவை சுத்தமாயையினின்றும் புகழப்படும் விருத்தியாய்க் காரியப்படுவனவாம்.—மகிழ்ந்திடும் பிரமம் அன்று - இவ்வாக்குக்கள் சத்தப்பிரமவாதிகள் மகிழ்ந்து கூறும் பிரமம் அன்று,—நல்லோர் - சைவசித்தாந்திகள்,—மாமாயை என்பர் - சுத்தமாயாகாரியம் என்று கூறுவர்.

குறிப்பு. 1. சுத்தமாயை (விந்து), சத்தவடிவும் (சொல்வடிவும்) புவனவடிவுமாய் (பொருள் வடிவுமாய்) உள்ளது. (பௌஷ். 104). இந்த விந்து சிவசத்தியினாற் சோபிப்பிக்கப்பட்டவிடத்து நாதம் உண்டாகும். சோபிப்பித்தல் - கலக்குதல். (சித். சாரா. 55, 70). இங்ஙனம் சோபிப்பிக்கப்பட்ட இடம் சாந்தியதீதகலை என்றும், சிவதத்துவம் என்றும் சொல்லப்படும். (பௌஷ். 38; சித். சாரா. 55). இச் சிவதத்துவத்தின் விருத்தி சத்திதத்துவம் (விந்துதத்துவம்) எனப்படும். (சித். சாரா. 55; சிவப்பிர. 21). இச் சத்திதத்துவத்திலே சூக்குமை என்று சொல்லப்படும் சூக்குமநாதம் இருக்கும். (சித். பிரகா. 9). இச்சூக்குமை, பைசந்தி மத்திமை வைகரி என விருத்திப்பட்டு மந்திர பத வன்னரூப சத்தப்பிரபஞ்சமாயிருக்கும். அன்றியும், இச்சத்திதத்துவம் சாந்தியதீதகலையின் காரியமாகிய சாந்தி வித்தை பிரதிட்டை நிவிர்த்தி என்னும் கலைகள் விருத்திப்படுதற்கும் இடமாகும். (பௌஷ். 42; சித். சாரா. 70). அன்றியும், இத்தத்துவத்தினின்று சாதாக்கிய தத்துவமும், இதனினின்று மகேசுவரதத்துவமும், இதனினின்று சுத்

தவித்தியா தத்துவமும் தோன்றும். (சிவப்பிர.21). இத்தத்துவங்கள் ஐந்தும் புவனங்களுக்குக் காரணமாயிருக்கும். (மிருகேந். 116). இப்புவனங்களும் தத்துவங்களும் பஞ்சகலைகளும் பொருட்பிரபஞ்சம் எனப்படும்.

இங்ஙனம் சுத்தமாயையின் காரியம் சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம் என இருவகைப்படுதல் காண்க.

2. வாக்கு நான்கு நிவிர்த்தாதிகலையைப்பற்றித் திகழ்ந்திடு மஞ்சதாக:- சூக்குமைவாக்கு, அதிசூக்குமை சூக்குமை என இருவகைப்படும். அதிசூக்குமைவாக்குச் சாந்தியதீத கலையையும், சூக்குமைவாக்குச் சாந்திகலையையும், பைசந்தி வாக்கு வித்தியாகலையையும், மத்திமைவாக்குப் பிரதிட்டாகலையையும், வைகரிவாக்கு நிவிர்த்திகலையையும் பற்றுக்கோடாகச் சார்ந்து நிற்கும். இங்ஙனம் நான்கு வாக்குக்களும் ஐவகைப்பட்டுச் சிவதத்துவம் முதலிய ஐந்து தத்துவங்களிலுஞ் சத்தார்த்த வடிவாய் விளங்கும் என்பது.

அஞ்சதாகத்திகழ்ந்திடும் என்பதற்கு நிவிர்த்திகலையுட்பட்ட புவனவாசிகளுக்குத் தூலதமமாயும், பிரதிட்டாகலையுட்பட்ட புவனவாசிகளுக்குத் தூலதரமாயும், வித்தியாகலையுட்பட்ட புவனவாசிகளுக்குத் தூலமாயும், சாந்திகலையுட்பட்ட புவனவாசிகளுக்குச் சூக்குமமாயும, சாந்தியதீதகலையுட்பட்ட புவனவாசிகளுக்குச் சூக்குமதரமாயும இங்ஙனம் நான்கு வாக்குக்களும் ஐவகைப்படும் என்று பொருள்கூறவும்படும். (மறைஞா. சிவாக்கிர. ஞானப்பிர).

3. செயல் பரிணுமமன்று, புகழ்ந்திடும் விருத்தியாகும்: - காரியப்பாடு விருத்தி பரிணுமம் என இருவகைப்படும். அவற்றுள், விருத்தியாவது புடைவை கூடாரமாதல் போல்வது. பரிணுமம் ஏகதேச பரிணுமம் முழுப்பரிணுமம் என இருவகைப்படும். ஏகதேசபரிணுமம் நெய்யிற் புழுவுண்டாதல் போல்வது. நெய்முழுவதும் மாறிப் பரிணமியாது நெய்யின் ஏகதேசத்திற் புழுவுண்டாதலால், இஃது ஏகதேசபரிணுமம் எனப்படும். முழுப்பரிணுமம் பால் தயிராவது போல்வது. பால் முழுவதும் மாறித் தயிராதலால், இஃது முழுப்பரிணுமம் எனப்படும். பரிணுமம் - இயற்கையினின்றுந் திரிதல், உருத்திரிதல், ஒன்று பிறிதொன்ருதல். ஏகதேசம் - ஒருசார், சிலவிடம்.

விருத்திக்கும் பரிணுமத்துக்கும் அதிகபேதமின்மையால், விருத்தி சூக்குமபரிணுமம் என்று சொல்லப்படும். (ஞானப்பிர).

சுத்தமாயாகாரியம் பரிணுமமன்று, விருத்தியாம். அசுத்தமாயாகாரியம் விருத்தியன்று, பரிணுமமாம். பரிணுமமும் முழுப்பரிணுமமன்று, ஏகதேச பரிணுமமாம்.

4. மகிழ்ந்திடும் பிரமமன்று: - இவ்வாக்குக்களை ஏகான்மவாத வேதாந்திகளுள் ஒருசாராராகிய சத்தப்பிரமவாதிகள் பிரமம் என்று சொல்வர். வாக்கு (சப்தம்) விகாரியாகையினுலும் சடமாகையினுலும் அனேகமாகையினுலும், பிரமமும் விகாரியும் சடமும் அனேகமுமாய்விடுமாகையால், மகாமாயையே வாக்குவிருத்திக்கு முதற்காரணமாம். (சிவாக்கிர).

பொழிப்பு. வைகரி முதலிய நான்கு வாக்குக்களும் பஞ்சகலைகளையும் பற்றுக்கோடாகச் சார்ந்து ஐவகையாக விருத்திப்படும். இவ்வாக்குக்கள் பிரமமன்று, சுத்தமாயாகாரியமாம்.

(f). அபரமுத்தருக்கு வேண்டப்படும் சுத்தாத்துவாக்களுக்கு வயிந்தவம் முதற்காரணம்.

45. வித்தைகள் வித்தை யீசர் சதாசிவ ரென்றி வர்க்கு
வைத்துறும் பதங்கள் வன்னம் புவனங்கண் மந்தி ரங்கள்
தத்துவஞ் சரீரம் போகங் கரணங்க டாமெ லாமும்
உய்த்திடும் வயிந்த வந்தா னுபாதான மாகி நின்றே.

(இ - ள்). வித்தைகள் - மந்திரேசுரர்,—வித்தையீசர்-மந்திரமகேசுரர்,—சதாசிவர் என்ற இவர்க்கு - அணுசதாசிவர் என்று கூறப்பட்ட அபரமுத்தருக்கு,—வைத்துறும் - வேண்டப்படும்,—பதங்கள் - பதங்களும்,—வன்னம் - அக்கரங்களும்,—புவனங்கள் - புவனங்களும்,—மந்திரம் - மந்திரங்களும்,—தத்துவம் - தத்துவங்களும்,—சரீரம் - சரீரங்களும்,—போகம் - போகங்களும்,—கரணங்கள்தாம் எலாமும் - கரணங்களுமாகிய சுத்தாத்துவாக்கள் எல்லாவற்றையும்,—வயிந்தவம் தான் - சுத்தமாயாகாரியமான விந்துவே,—உபாதானமாகி நின்று உய்த்திடும் - முதற்காரணமாகி நின்று செலுத்தும்.

குறிப்பு. 1. வித்தைகள் - மந்திரேசுரர். அவர் சுத்தவித்தியா தத்துவத்திலிருக்கும் சத்தகோடி மகாமந்திரர்.

2. வித்தையீசர்-அட்டவித்தியேசுரர். அவர், அநந்தர் சூக்குமர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தர் சீகண்டர் சிகண்டி என்னும் எண்மர். இவர் ஈசுரதத்துவத்திலிருக்கும் ஈசுரனைச் சூழ்ந்திருந்து மாயையின் கீழுண்டாகிய சிருட்டி முதலிய கிருத்தியங்களைச் சிவனுடைய ஏவலாற் செய்பவர்களாய் அபரமுத்தி பெற்றிருப்பவர்.

3. சதாசிவர் - அணுசதாசிவர் என்பது சதாசிவர் எனத் தலைகுறைந்து நின்றது. அவர், பிரணவர் சாதாக்கியர் தீர்த்தர் காரணர் சுசீலர் ஈசர் சூக்குமர் காலர் தேகேசுவரர் அம்சு என்னும் பதின்மர். இவர் சாதாக்கிய தத்துவத்திலே சதாசிவமூர்த்தியைச் சூழச் சேவித்துக்கொண்டிருந்து போகங்களைப் புசிக்கும் அபரமுத்தராவர்.

இவர் மூவரும் விஞ்ஞானகலராயிருந்து அபரமுத்தரானோர். இவரை விஞ்ஞானகலர் என்று சிலர் கூறுவர். விஞ்ஞானகலர் ஒருமலமுடைய பெத்தர். இவர் மலம் நீங்கப்பெற்று, அதிகாரமலமாத்திரமுடையராய் அபரபதிகளாயிருப்பவராதலின், விஞ்ஞானகலராகார். விஞ்ஞானகலர் என்று சிலவிடங்களிற் கூறுவது இவர் முன்னிருந்த நிலையை நோக்கியன்றி இப்போதிருக்கும் நிலையை நோக்கியன்று. விஞ்ஞானகலர் எண்ணிறந்தவர்களாய் அசுத்தமாயைக்கும் சுத்தவித்தைக்கும் நடுவேயுள்ள புவனங்களில் வசிப்பவர். (ஞானப்பிர).

4. பதங்கள் வன்னம் புவனங்கள் மந்திரங்கள் - சொல்வடிவும் பொருள்வடிவுமான அத்துவாக்கள். இவை சுத்தமாயிருக்கும். பதங்கள் எண்பத்தொன்று, வன்னம் ஐம்பத்தொன்று, புவனங்கள் இருநூற்றிருபத்து நான்கு, மந்திரங்கள் பதினொன்று. (செ. 258-261 பார்).

5. தத்துவஞ் சரீரம் போகங் கரணங்கடாமெலாமும்: தத்துவம் - அபரமுத்தருக்கு வேண்டப்படுந் தனுகரண போகங்களுக்குக் காரணமாகிய காலம் முதற் பிருதிவியீறாகவுள்ள முப்பத்தொரு தத்துவங்கள். சரீரம் - சூக்குமசரீரங்கள். கரணம் - ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் அந்தக்கரணங்களும். போகம் - போக்கியப் பொருள். இவைகளெல்லாம் சுத்தமாயா காரியமாகவே தோன்றும்.

6. வயிந்தவம் - விந்துவிலே தோன்றியது. அது விந்துதத்துவம், சத்திதத்துவம்.

பொழிப்பு. வயிந்தவம் அபரமுத்தருக்கு வேண்டப்படும் சுத்தாத்துவாக்களெவற்றினுக்கும் முதற்காரணமாயிருக்கும்.

(g). வாக்குக்களால் உயிர்களுக்கு அறிவு உண்டாகும்.

**46.** மூவகை யணுக்க ளுக்கு முறைமையின் விந்து ஞானம்
மேவின தில்லை யாகில் விளங்கிய ஞான மின்றும்
ஒவிட விந்து ஞான முதிப்பதோர் ஞான முண்டேல்
சேவுயர் கொடியி னூன்றன் சேவடி சேரலாமே.

(இ-ள்). மூவகை அணுக்களுக்கும் - மேற்கூறிய வித்தைகள் வித்தையீசர் சதாசிவர்க்கன்றி விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகை உயிர்களுக்கும்,—விந்து ஞானம் - வயிந்தவ ஞானம்,—முறைமையின் மேவினது இல்லையாகில் - முறையே தூலமாயும் தூலதரமாயும் தூலதமமாயும் பொருந்தினதில்லையாயின்,—விளங்கிய ஞானம் இன்றும் - விடயங்களை அறியும் சவிகற்பஞானம் அவருக்குண்டாகாதாம்,—விந்து ஞானம் ஓவிட - வயிந்தவஞானம் நீங்க,—ஓர் ஞானம் உதிப்பது உண்டேல் - ஒப்பற்ற பதிஞானம் ஒருவனுக்கு விளங்கவரின்,—சே உயர் கொடியினன் றன் சேவடி சேரலாம் - உயர்ந்த இடபக்கொடியையுடைய சிவபிரானது சிவந்த திருவடிகளை அடையலாம்.

குறிப்பு. விந்து ஞானம் - சுத்தமாயா காரியமான நான்கு வாக்குக்களாலுமுண்டாகும் சவிகற்பஞானம்; விந்துகாரணமாயுண்டாகும் ஞானம்.

பொழிப்பு. சூக்குமை முதலிய நான்கு வாக்குக்களாலும் விஞ்ஞானகலர் முதலிய மூவகை உயிர்களுக்கும் விடயஞான முண்டாகும். இந்த ஞானம் நீங்க மெய்ஞ்ஞானம் வரின் முத்தியுண்டாகும்.

4. சுத்தாசுத்த அசுத்தப்பிரபஞ்சத்தின் இயல்பு.

**47.** அருவினி லுருவந் தோன்றி யங்காங்கி பாவ மாகி
உருவினி லுருவ மாயே யுதித்திடு முலக மெல்லாம்
பெருகிடுஞ் சுருங்கும் பேதா பேதமோ டபேத மாகும்
ஒருவனே யெல்லா மாகி யல்லவா யுடனு மாவன்.

(இ - ள்). அருவினில் உருவம் தோன்றி - சூக்குமமாகிய மாயையி னின்றும் தூலமாகிய கலையாதி தத்துவங்கள் தோன்றி,—அங்க அங்கி பாவம் ஆகி - அவை உடலும் உயிரும் போன்ற தன்மையுடையனவாய்,— உருவினில் உருவமாயே உதித்திடும் - அத்தூலங்களினின்றும் அவற்றினுந் தூலமான காரியமேயாய்த் தோன்றுவனவாகும்,—உலகம் எல்லாம் பெருகிடும் சுருங்கும் - இங்ஙனம் காரியப் பிரபஞ்சமெல்லாம் விரிவதும் ஒடுங்குவதுமாயிருக்கும்,—பேதா பேதமோடு அபேதமாகும் - விரிந்து தோன்றுதலை நோக்குமிடத்து பேதா பேதமாம். ஒடுங்குதலை நோக்குமிடத்து அபேதமாம்,—ஒருவனே - நிமித்தகாரணனாகிய முதல்வனே,—எல்லாம் ஆகி - (அநந்தர் சீகண்டர் வாயிலாக அவற்றைக் காரியப்படுத்தும்பொழுது) அவை தானேயாய்,—அல்லவாய் - அவற்றின் வேறுமாய்,—உடனும் ஆவன் - அவற்றோடு உடனுமாய் நிற்பன்.

குறிப்பு. 1. "மாயை முந்திடு மராகமாதி முக்குணமாதி மூலந் தந்திடும்" என்று 39-ம் செய்யுளிற் கூறப்பட்டதன் இயல்பு இச்செய்யுளிலே தொகுத்துக் கூறப்பட்டது.

2. அருவினி லுருவந் தோன்றி - இதனால் அநிர்வசனத்தில் உலகம் தோன்றும் என்னும் மாயாவாதம் மறுக்கப்பட்டது.

3. அங்காங்கி பாவமாகி:—அங்கியும் அங்கமும் என்பது மாயையும் அதன் காரியமான தத்துவங்களும் பேதாபேதமும் அபேதமுமாயிருத்தற்கு உவமை. அங்கி - உயிர். அங்கம் - உடல். (செ. 93. 1. பார்).

4. உலகமெல்லாம் - அசுத்தமாயையிலே தோன்றும் சுத்தாசுத்த அசுத்தப் பிரபஞ்சம்.

5. பேதாபேதமோ டபேதம். (செ. 93. பார்).

6. உடனுமாவன். (செ. 93. பார்).

7. எல்லாமாகி என்றதனாற் சுத்தமாயாவிருத்தியிலும் அவ்வாறு நிற்பன் என்பது.

பொழிப்பு. அசுத்தமாயையினின்றுந் தோன்றுங் காரியப் பிரபஞ்சமெல்லாம் ஒன்றுக்கொன்று தூலமாய்த் தோன்றியும் ஒடுங்கியும் பரிணமித்து வரும். தோன்றி வருதலை நோக்குமிடத்து மாயைக்கும் அதன் காரியத்துக்குமுள்ள சம்பந்தம் பேதாபேதமாம். ஒடுங்குதலை நோக்குமிடத்து

அபேதமாம். பரமசிவன் அவற்றைக் காரியப்படுத்தும்பொழுது அபேதமாயும் பேதமாயும் பேதாபேதமாயும் நிற்பன்.

அசுத்தமாயையினின்றும் பிரபஞ்சம் தோன்ருது என்னும் மதமும் மறுப்பும்.

48. அருவுரு வீனு தாகும் விகாரமு மவிகா ரத்தின்
வருவது மில்லை யென்னின் வான்வளி யாதி பூதந்
தருவது தன்னின் மேக சலனசத் தங்க ளோடும்
உருவமின் னுருமே றெல்லா முதித்திடு முணர்ந்து கொள்ளே.

(இ-ள்). அரு உரு ஈனுதாகும் - அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவியாது,—அவிகாரத்தின் விகாரமும் வருவதும் இல்லை என்னின் - அவிகாரமாகிய மாயையினின்றும் விகாரமாகிய பிரபஞ்சமும் தோன்றுவதுமில்லை எனின்,—வான் - உனது மதப்படி அருவமும் அவிகாரியுமாகிய ஆகாயமே.—வளி ஆதி பூதம் தருவது - உருவமும் விகாரியுமாகிய வாயு முதலிய பூதங்களை முறையே தோன்றச் செய்வது. அதுவுமன்றி,—தன்னின் - அவ்வாகாயத்தினின்றும்,—மேக சலன சத்தங்களோடும் உருவமின் உருமேறு எல்லாம் உதித்திடும் - பல முகில்களும் முகிலினிடத்துப் பல விகாரங்களும் பல சத்தங்களும் உருவமாகிய பல மின்னல்களும் பல இடியேறுகளும் இன்னும் இவைபோன்ற பலவும் தோன்றும். ஆதலால்,—உணர்ந்துகொள் - அவ்வாறு கூறுதல் உனக்கே வழுவாய்முடியும் என்பதனை அறிவாயாக.

குறிப்பு. அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவியாது என்பதும், விகாரமில்லாத மாயையிலிருந்து விகாரமாகிய பிரபஞ்சந் தோன்ருது என்பதும் மாயாவாதியின் மதம். மாயை அருவமும் அவிகாரியும் என்பது உண்மையே. சற்காரியவாதத்திலே மாயை விகாரமுற்றுப் பிரபஞ்சமாகும் என்பது கருத்தன்று. மாயை அருவமும் அவிகாரியுமாயிருக்க, அதனிடத்துப் பிரபஞ்சம் உள்பொருளாயிருந்து தோன்றி ஒடுங்கும். அதனுல் உள்ள பிரபஞ்சமே தோன்றி ஒடுங்குமென்பதன்றி, மாயை பரிணமித்துப் பிரபஞ்சமாகும் என்பது கருத்தன்று. மாயாவாதிகள் சற்காரியவாதம் கொள்பவரல்லர். ஆதலால், அருவமாகிய மாயையிலிருந்து உருவமாகிய பிரபஞ்சந் தோன்றும் என்பதை உடம்படாது மறுப்பாராயினர்.

பொழிப்பு. மாயாவாதிகள் அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவியாது எனவும், விகாரமில்லாத மாயையிலிருந்து விகாரமாகிய பிரபஞ்சந் தோன்ருது எனவும் ஆட்சேபிப்பர். அவர், அருவமும் அவிகாரியுமாகிய ஆகாயத்திலிருந்து உருவமும் விகாரியுமாகிய வாயு முதலிய பூதங்களும் முகில்களும் முகிலிற் பல விகாரங்களும் பல ஓசைகளும்

பிறவும் தோன்றும் என்பராகலால், இவ்வாறு கூறுதல் அவர் மதத்துக்கே விரோதமாய்முடியும் என்க.

5. முதல்வன் சித்துரு மன்னிநின்று மருவிடும் முறைமையும், அதுபற்றித் தொடக்குறும் முறைமையும்.

49. மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது குலால னாலே
எண்ணிய வுருவ மெல்லா மியற்றுவ னீசன் றானுங்
கண்ணுகா ரியங்க ளெல்லாங் காரண மதனிற் காண்பன்
பண்ணுவ தெங்கே நின்றிங் கென்றிடிற் பகரக் கேணீ.

(இ - ள்). மண்ணினின் - மண்ணினின்றும்,—கடாதி எல்லாம் - குடம் முதலிய காரியங்களெல்லாம்,—குலாலனாலே வருவது - குயவனாலே தோன்றுவதுபோல,—ஈசன் தானும் - முதல்வனும்,—எண்ணிய உருவம் எல்லாம் இயற்றுவன் - தான் கருதிய உருவமெல்லாவற்றையும் மாயையினின்றுந் தோற்றுவிப்பன் என்பது அமையும்,—கண்ணு காரியங்கள் எல்லாம் - ஆயினும் குயவன் தான் நினைக்கின்ற குடம் முதலிய காரியங்களெல்லாவற்றையும்,—காரணம் அதனின் (நின்று) காண்பன் - துணைக்காரணமாகிய திரிகையைப்பற்றிநின்று செய்வதுபோல,—எங்கே நின்று பண்ணுவது இங்கே என்றிடின் - நீர் கூறும் கடவுள் தனது சத்தியை எவ்வாறு பொருந்திநின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பன் என்று இங்கே கேட்பாயாயின்,—பகரக் கேள் நீ - யாம் அதற்கு விடைகூற நீ கேட்பாயாக.

குறிப்பு. 1. மாயையை மண்போல முதற்காரணமாகவும், தனது சத்தியைத் திரிகைபோலத் துணைக்காரணமாகவுங்கொண்டு, முதல்வன் குலாலன்போல நிமித்தகாரணனாகி நின்று பிரபஞ்சமெல்லாவற்றையுந் தோற்றுவிப்பன் என்று 38-ம் செய்யுளிலே தொகுத்துக் கூறி, 39-ம் செய்யுள் முதல் 48-ம் செய்யுள் ஈறாக மாயையை முதற்காரணமாகக்கொண்டு, முதல்வன் நிமித்தகாரணனாக நின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் முறைமை வகுத்துக்காட்டப்பட்டது.

இச் செய்யுள் முதல் மூன்று செய்யுளாலும் முதல்வன் தனது சத்தியைத் திரிகைபோலத் துணைக்காரணமாகக்கொண்டு பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் முறைமை வகுத்துக் கூறப்படுகின்றது.

2. எங்கே நின்று:—"எங்கே" என்றது எவ்வாறு என்னும் பொருள்பட நின்றது. அதுவே பொருள் என்பது அடுத்த செய்யுளில் வரும் "கோலம்" "நிலை" என்னும் பதங்கள்பற்றி அறியப்படும். "எங்ஙன் நின்று" என்று பாடபேதமிருப்பின், அது நன்கு பொருத்தமுடையதாகும்.

பொழிப்பு. குயவன் திரிகையைப் பற்றி நின்று கடாதிகளைச் செய்வன். முதல்வன் சத்தியைப் பொருந்தி நின்று பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பது எவ்வாறு?

இதுவுமது.

50. சீலமோ வுலகம் போலத் தெரிப்பரி ததனு னிற்குங்
கோலமு மறிவா ரில்லை யாயினுங் கூறக் கேணீ
ஞாலமே ழினையுந் தந்து நிறுத்திப்பின் னாசம் பண்ணுங்
காலமே போலக் கொண்ணீ நிலைசெயல் கடவுட் கண்ணே.

(இ - ள்). சீலமோ - அவன் தன்மையோ,—உலகம் போல தெரிப்பு அரிது - உலகப்பொருள்களின் தன்மை கூறுவதுபோலத் தெரியக் கூறுவது அரிதாம்,—அதனுல் - அதுபற்றி,—நிற்கும் கோலமும் அறிவார் இல்லை - அவன் நிற்கும் நிலையும் அறிபவரில்லை,—ஆயினும் கூற நீ கேள் - அங்ஙன மாயினும் ஒருவாறு உவமைமுகத்தாற் கூறுவோம். நீ கேட்பாயாக,—ஞாலம் எழினையும் தந்து நிறுத்திப் பின் நாசம்பண்ணும் காலமே போல - உலகமெல்லாவற்றையும் தோற்றுவித்து நிலைபெறுத்திப் பின்பு அழித்துக் காரியப்படுத்துங் காலம் தான் துணைக்காரணமாகவும் சிவசத்தி நிமித்தகாரணமாகவும் தம்முட் பிரிவின்றி நின்று அவற்றைக் காரியப்படுத்துதல் போல,—நிலை செயல் - முதல்வன் தனது சத்தியைப் பொருந்தி நிற்கும் நிலையையும் பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் முறைமையையும்,—கடவுட்கண் கொள் நீ - அம் முதல்வனிடத்தும் வைத்து அறிவாயாக.

குறிப்பு. 1. ஞாலமேழினையும் என்றது உபலக்கணம்.

2. காலம் சடப்பொருள். அது சிவசத்தியால் அதிட்டிக்கப்பட்டு நின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துதலால், சிவசத்தி நிமித்தகாரணமும் காலம் துணைக்காரணமுமாகின்றன. இவை இரண்டும் பிரிவின்றி நின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துதல்போல, முதல்வனும் சத்தியும் பிரிவின்றி நின்று காரியப்படுத்தும் என்பது.

பொழிப்பு. சிவசத்தி நிமித்தகாரணமும் காலம் துணைக்காரணமுமாகத் தம்முட் பிரிவின்றி நின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துதல்போல, முதல்வனும் தனது சத்தியுமாகிய இரண்டும் பிரிவின்றி நின்று அதனைக் காரியப்படுத்தும்.

இதுவுமது.

51. கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்
பெற்றியுஞ் சாக்கி ராதி யுயிரினிற் பிறந்தொ டுக்கம் [றும்
உற்றதும் போல வெல்லா வுலகமு முதித்தொ டுங்கப்
பற்றொடு பற்ற தின்றி நின்றனன் பரனு மன்றே.

(இ - ள்). கற்ற நூல் பொருளும் சொல்லும் - ஒருவன் கற்ற நூலின் பொருளும் அப் பொருளைக் குறிக்கும் சொல்லும்,—கருத்தினில் அடங்கித் தோன்றும் பெற்றி (போல) - ஆன்ம அறிவின்கண் அடங்கித் தோன்

றும் முறைமை போல (பொருளும் சொல்லுமாகிய பிரபஞ்சமெல்லாம் தனது சத்தியினிடமாக ஒடுங்கித் தோன்ற),—(பரனும்) - முதல்வனும்,— பற்றொடு நின்றனன் - தொடக்குறுவோனாகி நின்றனன்,—சாக்கிராதி - சாக்கிரம் முதலிய அவத்தைகள்,—உயிரினிற் பிறந்து ஒடுக்கம் உற்றது போல - ஆன்மாவிலே தோன்றி ஒடுங்கும் தன்மைபோல,—எல்லா உலகமும் உதித்து ஒடுங்க - பிரபஞ்சமெல்லாம் தன்னிடத்துத் தோன்றி ஒடுங்க,— பரனும் - முதல்வனும்,—பற்றது இன்றி நின்றனன் - தொடக்குறுதலிலனாகி நின்றனன்.

குறிப்பு. 1. கற்றநூற் பொருளுஞ் சொல்லும் - பொருளும் சொல்லும் முறையே பொருட்பிரபஞ்சத்துக்கும் சொற்பிரபஞ்சத்துக்கும் உவமை.

2. கருத்தினி லடங்கித் தோன்றும் பெற்றியும் போல:—கருத்து - ஆன்மபோதம், ஆன்ம அறிவு. அது சிவசத்திக்கு உவமை. ஆன்ம அறிவிலே சொல்லும் பொருளும் அடங்கித் தோன்றுமாறுபோலப் பிரபஞ்சமெல்லாம் சிவசத்தியினிடமாக ஒடுங்கித் தோன்றும். அங்ஙனம் சிவசத்தியிலே ஒடுங்கித் தோன்றுமிடத்து, முதல்வன் பற்றுளனாகி நிற்பன் என்பது.

3. சாக்கிராதி யுயிரினிற் பிறந்தொடுக்க முற்றதும் போல:—சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் அவத்தைகள் ஐந்தும், முதல்வன் சிவம் சத்தி சதாசிவன் மகேசுவரன் சுத்தவித்தை என்னும் ஐந்தவத்தைகளுமுறுதற்கு உவமை. உயிர் கருவிகளோடு கூடி ஐந்தவத்தைப் பட்டுக் கருவிகள் நீங்கிய கேவலநிலையிலே தான்மாத்திரமாயிருக்கும். முதல்வனும் சத்திகளைப் பொருந்தி ஐந்தவத்தையிலும்பட்டுச் சத்திகள் தொழிற்படாது நீங்கிய நிலையிலே சுத்தசிவமாயிருக்கும். அங்ஙனம் சுத்தசிவமாயிருக்கும் அவதரத்திலே தொடக்குறுதலிலனாகி நிற்பன் என்பது.

பொழிப்பு. முதல்வன் சத்திவடிவினனாய் நின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் அவதரத்திலே தொடக்குறுவோனாகியும், சத்திவடிவம் பொருந்தாது சுத்தசிவமாயிருக்கும் அவதரத்திலே தொடக்குறுதலிலனாகியும் நிற்பன்.

---

II. "தான் ஈறுமாகி அநாதிமுத்த சித்துரு மன்னி நின்று மருவிடும்" இது இரண்டாம் பிரிவு. (**52-57**).

இப்பிரிவில் அடங்கிய விஷயங்கள்:—

1. ஒடுங்கிய பிரபஞ்சத்தைச் சங்காரக்கடவுளே தோற்றுவிப்பன், (**52**).
2. முத்தொழிலுஞ் செய்தல்பற்றி முதல்வன் விகாரியாகான், (**53**).
3. முத்தொழிலுஞ் செய்யுமுரிமை சங்காரகாரணனுக்கேயுடையது, (**54-55**).
4. முத்தொழிலுஞ் செய்தற்குக் காரணம், (**56**).
5. ஐந்தொழிலும் அருட்செயல், (**57**).

1. ஒடுங்கிய பிரபஞ்சத்தைச் சங்காரக்கடவுளே தோற்றுவிப்பன்.

52. உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பா லென்னிற்
செயிருறு மலத்தி னாகுஞ் சிதைந்ததே தென்னிற் சித்தத்
தயர் வொழி காரியங்க ளழியுங்கா ரணங்கி டக்கும்
பயிறரு காரி யம்பின் பண்டுபோற் பண்ணு மீசன்.

(இ-ள்). உயிரவை ஒடுங்கி - உயிர்கள் சங்காரகாரணனிடத்திலே ஒடுங்கி,—பின்னும் அரன்பால் உதிப்பது என் என்னின் - மீளவும் அச் சங்காரகாரணனிடத்தினின்று தோன்றுவது எற்றுக்கு என்னின்,—செயிர் உறு மலத்தின் ஆகும் - குற்றம் பொருந்திய ஆணவமலம் காரணமாக மீளவுந் தோன்றுவனவாகும்,—சிதைந்தது ஏது என்னின் - (உயிர்கள் ஒடுங்கியவிடத்து ஆணவமலம் அழியாதிருக்குமாயின் அவ்வொடுக்கத்தில்) அழிந்தது யாது என்னின்,—சித்தத்து அயர்வு ஒழி காரியங்கள் அழியும் - ஆன்மாவின் அறியாமையை நீக்கும் மாயா காரியங்களாகிய தனுவாதிகள் அழிவதாகும்,—காரணம் கிடக்கும் - அவற்றின் காரணமாகிய மாயை அழியாதிருக்கும்,—பயில் தரு காரியம் - காரணரூபமாய் அம் மாயையில் ஒடுங்கிக்கிடக்கும் காரியங்களை,—ஈசன் - சங்காரகாரணன்,—பின் பண்டுபோல் பண்ணும் - மீளவும் முன்போலத் தோற்றுவிப்பன்.

குறிப்பு. 1. இச்செய்யுள் சேதனப்பிரபஞ்சமாகிய உயிர்கள் ஒடுங்கி மீளத் தோன்றுதற்குக் காரணமும், ஒடுங்கிய அசேதனப்பிரபஞ்சத்தைச் சங்காரக்கடவுளே மீளத் தோற்றுவிப்பன் என்பதும் கூறிற்று. இங்கே கூறிய ஒடுக்கம் மகாசங்காரகாலத்திலே நிகழும் ஒடுக்கமாம். அச் சங்கார காலத்திற் சடசித்துக்களெல்லாம் மாயையில் ஒடுங்கும். மாயை சத்தியிலும், சத்தி அரனிடத்தும் ஒடுங்குதலால், உயிரவை அரன்பால் ஒடுங்கும் என்றார்.

2. பின்னு முதிப்பதெ னரன்பா லென்னிற் செயிருறு மலத்தி னாகும்:- சங்காரகாலத்தில் ஆணவமலம் நீங்கினதாயின், ஆன்மாக்கள் முத்தியடையுமேயன்றி மீளத்தோன்றா. ஆணவமலம் நீங்குதலாவது தன் சத்தி வலி குன்றி நிற்றலாம். ஆதலால் அம் மலம் பரிபாகமெய்தி நீங்குதற்பொருட்டு அவ்வான்மாக்கள் தோன்றுவன என்பது.

3. சித்தத் தயர் வொழி காரியங்கள் - தேகமும் கலை முதற் பிருதிவியீறாயுள்ள தத்துவங்களும். அயர்வு - உணர்வழிவு, அறியாமை.

4. பயிறரு காரியம்:-பயிலல் - நிகழ்தல், நிலைபெற்றிருத்தல்.

5. பின் பண்டுபோற் பண்ணு மீசன் - மாயையை முதற்காரணமாகவும் சிவசத்தியைத் துணைக்காரணமாகவும் கொண்டு, முதல்வன் நிமித்தகாரணனாகி நின்று தோற்றுவிப்பன் என்பது.

பொழிப்பு. உயிர்கள் சங்காரகாரணனிடத்திலே ஒடுங்கி மீளவும் தோன்றுதற்குக் காரணம் ஆணவமலமாம். அவை ஒடுங்குமிடத்து அவற்

றேடு கூடிய தனுவாதி காரியங்கள் அவற்றின் காரணமாகிய மாயையிலே ஒடுங்கும். முதல்வன் அவற்றை மீளவுந் தோற்றுவிப்பன்.

2. முத்தொழில் செய்தல்பற்றி முதல்வன் விகாரியாகான்.

**53**. தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தரு டொழில்கண் மூன்றும், போற்றவே யுடைய னீசன் புகுந்தது விகார மென்னிற்
சாற்றிய கதிரோ னிற்கத் தாமரை யலருங் காந்தங்
காற்றிடுங் கனலை நீருங் கரந்திடுங் காசி னிக்கே.

(இ-ள்). தோற்றுவித்து அளித்துப் பின்னும் துடைத் தருள் தொழில்கள் மூன்றும் - தோன்றச்செய்து நிறுத்திப் பின்பும் அழித்தலாகிய இத் தொழில்கள் மூன்றையும்,—ஈசன் - சங்காரகாரணன்,—போற்றவே உடையன் - மெச்சும்படி உரிமையாகவுடையவனுயின்,—விகாரம் புகுந்தது என்னின் - அவனுக்கு விகாரம் வந்து பொருந்தியது என்றுசொல்லின், அப்படியன்று,—சாற்றிய கதிரோன் நிற்க - யாவராலும் புகழப்பட்ட சூரியன் தனது தானத்திலே நிற்க,—காசினிக்கே - பூமியின்கண்ணே,—காந்தம் கனலைக் காற்றிடும் - சூரியகாந்தக்கல் அக்கினியைக் கக்கும்,—தாமரை அலரும் - தாமரையும் மலரும்,—நீரும் கரந்திடும் - நீரும் சுவறும். இங்ஙனம் தனக்குரிய முத்தொழில்களுந் தன் முன்னிலையிலே நடந்தும் சூரியன் விகாரமெய்தாமைபோல முதல்வனும் விகாரியாகான்.

குறிப்பு. 1. நெருப்பைக் கக்கச்செய்தல் படைத்தலுக்கும், தாமரையை மலரச்செய்தல் காத்தலுக்கும், நீரை வற்றச்செய்தல் அழித்தலுக்கும் உவமையாயின.

2. ஒருகடவுள் முத்தொழிலையும் இடையறாது செய்வானுயின் விகாரியாவான்போலும் என்னும் புத்தருடைய ஆசங்கை இதனுற் பரிகரிக்கப்பட்டது. "தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதி தன்னி னின்றே" என 39-ம் செய்யுளிற் கூறப்பட்டது இவ்வுவமைமுகத்தால் விளக்கியவாறுங் காண்க.

பொழிப்பு. சூரியனது சந்நிதானத்திற் சூரியகாந்தக்கல்லிலிருந்து நெருப்புத் தோன்றலும், தாமரை மலர்தலும், நீர் வற்றலும் ஆகிய முத்தொழிலும் நடைபெறினும், அவற்றுற் சூரியன் விகாரமெய்தாது நிற்றல்போல, முதல்வனது சந்நிதானத்திலே தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலும் நடைபெறினும் அவற்றுன் முதல்வன் விகாரமெய்தாது நிற்பன்.

3. முத்தொழிலுஞ் செய்யுமுரிமை சங்காரகாரணனுக்கே யுடையது.

**54**. உரைத்தவித் தொழில்கண் மூன்று மூவருக் குலக மோத [ன்
வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னி
விரைக்கம லத்தோன் மாலு மேவலான் மேவி னோர்கள்
புரைத்தகி கார சத்தி புண்ணிய நண்ணலாலே.

(இ - ள்). உரைத்த இத் தொழில்கள் மூன்றும் - மேற்கூறிய இந்த மூன்று தொழில்களும்,—மூவருக்கு உலகம் ஓத - பிரமன் முதலிய தேவர் மூவருக்கும் முறையே உரியன என உலகம் சொல்ல,—இங்கு வரைத்து ஒருவனுக்கே ஆக்கி வைத்தது என்னை என்னின் - இவ்விடத்து வரைந்தெடுத்து அம் முத்தொழில்களுஞ் செய்யும் உரிமை ஒரு கடவுளுக்கே உண்டென்று சொன்னது என்னையெனின்,—விரைக் கமலத்தோன் மாலும் - வாசனைபொருந்திய கமலாசனனாகிய பிரமனும் விட்டுணுவும்,—புண்ணியம் நண்ணலாலே - விசேட புண்ணியம் உடையவராதலால்,—புரைத்த அதிகார சத்தி - முதல்வனது உயர்ந்த அதிகார சத்தியை,—ஏவலான் மேவினோர்கள் - அவனது ஏவலாற் பெற்றுடையோராவர். ஆதலால் அவர் முத்தொழில்களுக்கும் சுதந்தரரல்லர். சங்காரகாரணன் ஒருவனுக்கே அச் சுதந்தரமுண்டு.

குறிப்பு. 1. உரைத்தவித் தொழில்கண் மூன்றும் மூவருக்குலக மோத:- சிருட்டித்தொழில் பிரமாவுக்குரியதென்றும், திதித்தொழில் விட்டுணுவுக்குரியதென்றும், சங்காரத்தொழில் உருத்திரனுக்குரியதென்றும் பௌராணிகர் முதலியோர் கூறுவர். பிரமாவும் விட்டுணுவும் விசேட புண்ணியத்தாற் சிவனுடைய உயர்ந்த அதிகாரசத்தியைப் பெற்று அச்சிவனுடைய ஏவலாற் செய்பவர். அத்தொழில்கட்கு அவ்விருவரும் சுதந்தரரல்லர். ஆதலால் முத்தொழிலுஞ் செய்தற்குரிய சுதந்தரம் சிவனுக்கேயுண்டு என்று அவர் கூற்று மறுக்கப்பட்டது.

2. வரைந்து என்பது வரைத்து என நின்றது.

3. ஏவல் - ஆணைசெலுத்துகை.

4. புரைத்தல் - உயர்தல்.

5. அதிகாரசத்தி - சிருட்டியாதி அதிகாரஞ்செய்யுஞ் சாமர்த்தியம்.

பொழிப்பு. பௌராணிகர் முதலியோர் முத்தொழில்களும் அயன் மால் அரன் என்னும் மூவருக்கும் உரியனவாயிருக்க, அரனுக்கே உரியன என வரைந்தெடுத்துச் சொல்வது எப்படி என ஆசங்கிப்பர். அயன் மால் இருவரும் முன்செய்த புண்ணிய விசேடத்தால் அரனது அதிகாரசத்தியைப் பெற்றுத் தத்தம் தொழில் செய்பவரன்றி அத்தொழிற்கு அவர் சுதந்தரரல்லர். முத்தொழிலுஞ் செய்யும் சுதந்தரம் அரனுக்கே உரியதாம்.

இதுவுமது.

**55.** இறுதியாங் காலந் தன்னி லொருவனே யிருவ ருந்தம்
உறுதியி னின்று ரென்னி னிறுதிதா னுண்டா காதாம்
அறுதியி லரனே யெல்லா மழித்தலா லவனா லின்னும்
பெறுதுநா மாக்க நோக்கம் பேரதி கரணத் தாலே.

(இ - ள்). இறுதியாம் காலம் தன்னின் - சங்கார காலத்திலே,—ஒருவனே - சங்காரகாரணன் ஒருவனே அழியாது நிற்பன்,—இருவரும் தம்

உறுதியின் நின்ருர் என்னின் - மற்றைய பிரம விட்டுணுக்களுஞ் சங்கார காரணனுடன் தத்தம் வலிமையோடு அழியாது நின்ருர்கள் என்று சொல்லின்,—இறுதிதான் உண்டாகாதாம் - உலகம் சங்காரமாதல் உளதாகாது. ஆதலால் அக்காலத்தில் அவ்விருவரும் சங்கரிக்கப்படுபவராவர். அப்படியாயின் பின் சிருட்டியாதி கிருத்தியங்கள் இல்லா தொழியு மெனின்,—அறுதி இல் அரனே எல்லாம் அழித்தலால் - தனக்கு இறுதியில்லாத சங்காரக் கடவுளே எல்லாவற்றையும் அழித்தலாலும்,—பேர் அதிகரணத்தால் - அங்ஙனம் அழிக்கப்பட்டவைக்குப் பெரிய ஆதாரமாயிருத்தலாலும்,—அவனுல் இன்னும் ஆக்கம் நோக்கம் - அவனுல் இன்னும் சிருட்டியையும் திதியையும்,—நாம் பெறுதும் - நாம் பெற்றுக்கொள்வோம்.

குறிப்பு. 1. இறுதியாங் காலந் தன்னில்..........:-அயனும் மாலும் சகலருட்பட்டவர். அவருடைய முன்னை நல்வினையாகிய புண்ணியத்துக் கேற்பச் சீகண்டருத்திரர் படைப்புக்காலத்தில் அவரைப் படைத்துத், தமது படைக்குஞ் சத்தியை அயனிடத்தும் காக்குஞ் சத்தியை மாலிடத்தும் நிறுத்தி, அவரை அதிட்டித்து நின்று அவ் விருதொழில்களையுஞ் செய்வர். பின் மூலப்பிரகிருதியுட்பட்ட உலகங்களைச் சங்கரிக்கும்பொழுது அவ்வுலகங்களோடு சேர்த்து அயன் மால் இருவரையுஞ் சங்கரிப்பர். இச்சங்காரம் மத்தியப் பிரளயம் எனப்படும்.

சீகண்டருத்திரர் பிரளயாகலருள் ஒருவராயிருந்து மலபரிபாகமுடையோராய்ப் படைப்புக்காலத்திற் பரமசிவனருளாற் சீகண்டருத்திர பதத்தைப் பெற்றவர். இவர் அட்டவித்தியேசுரருள் ஒருவராகிய அநந்தேசுரரால் அதிட்டிக்கப்படுபவர். அநந்தேசுரர் விஞ்ஞாகலருள் ஒருவராயிருந்து மல பரிபாகமுடையவராய்ப் படைப்புக்காலத்திற் பரமசிவனது அனுக்கிரகத்தால் அதிகாரம் பெற்றவர். இவர் பரமசிவனது சத்தியால் அதிட்டிக்கப் பெற்று, அசுத்தமாயையிலே நடக்குங் கிருத்தியம் ஐந்தையும் இயற்றுவர். அன்றிச் சீகண்டருத்திரரை அதிட்டித்து நின்று மூலப்பிரகிருதியுட்பட்ட கிருத்தியங்களையுஞ் செய்விப்பர். இவராற் செய்யப்படுஞ் சங்காரம் அவாந்தரப்பிரளயம் எனப்படும்.

மத்தியப்பிரளயகாலத்திலே சீகண்டருத்திரர் அயன் மால் இருவரையும் ஒடுக்கிக்கொண்டு தாம் ஒடுங்காது அராகதத்துவத்திலிருப்பர். அவாந்தரப் பிரளயகாலத்தில் இந்த உருத்திரர் பரமசிவனருளினுற் பரமுத்தி அடைவர்.

பரமசிவன் இலயம் போகம் அதிகாரம் என்னும் தடத்த வடிவங்களையுடையவராய்ச் சுத்தமாயையிற் கிருத்தியம் ஐந்தையும் தாமே செய்வர். அவ்வடிவங்கள் சத்தியின் வாயிலாகக் கொள்ளப்படுவன. பரமசிவனுற் செய்யப்படும் சங்காரம் மகா சங்காரம் எனப்படும். "இறுதியாங் காலம்" என இச் செய்யுளிற் கூறிய சங்காரம் இம் மகாசங்காரமே. இச்சங்காரத்திற் பிரகிருதிமாயா காரியமாகிய அசுத்தப் பிரபஞ்சமும், அசுத்தமாயா காரியமாகிய சுத்தாசுத்தப் பிரபஞ்சமும், சுத்தமாயா காரியமாகிய சுத்தப் பிரபஞ்ச

மும் ஆகிய மூவகைப் பிரபஞ்சமும் சங்காரமாகும். அநந்தேசுரரும் பரமசிவனருளினல் இச்சங்காரத்திலே பரமுத்தி அடைவர். பரமசிவன் எல்லா உலகங்களையுஞ் சங்கரித்து ஒடுக்கிக்கொண்டு தம்மைச் சங்கரிப்பாரின்றித், தாம் ஒருவரே சொயம்பிரகாசமாய் விளங்கிக்கொண்டிருப்பர்.

பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும்பொழுதும், அம்முறையே தம்மிலொடுங்கிய சுத்தமாயாகாரியங்களைத் தாம் நேரே தோற்றுவித்து, அநந்தேசுரரைப் படைத்து அவரை அதிட்டித்து நின்று அசுத்தமாயா காரியங்களைத் தோற்றுவித்து, அம்முறையே பிறவற்றையுஞ் செய்விப்பர். அதனல் எல்லா உலகங்களையுந் தோற்றுவிப்பவரும் சங்கரிப்பவரும் அப் பரமசிவனேயாவர். அவரே மகா சங்காரகாரணர்.

2. நோக்கம் - காவல். அதிகரணம் - ஆதாரம்.

போழிப்பு. சங்காரகாலத்திலே சிவபெருமான் ஒருவரேயன்றி மற்றைய இருவரும் ஒடுங்காது தத்தம் ஆற்றலோடு நிலைபெறுவர் என்று சொல்லின், அது சங்காரமாகாது. அவர் ஒடுங்குவராயின் பின் உலகம் தோன்றுதற்கும் நிலைபெறுதற்கும் வழியில்லையெனின், ஒடுங்கிய சங்காரக்கடவுளே ஆதாரமாய் நின்று பின்னும் உலகத்தைத் தோற்றுவித்து நிலைபெறச்செய்வர்.

4. முத்தொழிலுஞ் செய்தற்குக் காரணம்.

56 சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னின்
முன்னவன் விளையாட் டென்று மொழிதலு மாமு யிர்க்கு
மன்னிய புத்தி முத்தி வழங்கவு மருளான் முன்னே
துன்னிய மலங்க ளெல்லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே.

(இ-ள்). முன்னவன் - சஙகாரக்கடவுள்;—சொன்ன இத் தொழில்கள் தோற்ற - மேற்கூறிய முத்தொழிலையுஞ் செய்தற்கு,—காரணம் என்ன என்னின் - காரணம் யாதெனின்,—விளையாட்டு என்று மொழிதலுமாம் - அவனது திருவிளையாட்டென்று சொல்லுதலுமாம். அஃதன்றி;—அருளால் - தமது கருணையால்,—உயிர்க்கு - உயிர்களுக்கு,—மன்னிய புத்தி முத்தி வழங்கவும் - அவரவர் கன்மத்துக்கேற்பப் போக முத்திகளைக் கொடுத்தற்கு என்றும்,—முன்னே துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதும் - அநாதியே அவ்வுயிர்களைப் பொருந்திய மும்மலங்களை நீக்குதற்கு என்றும்,—சொல்லலாம் - சொல்லலாம்.

குறிப்பு. 1. முன்னவன் விளையாட்டு:- "காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி" (திருவாசகம், திருவெம்பாவை. செ. 12.) என்பது முதலிய திருவாக்குக்கள்பற்றி, முத்தொழிலுக்குங் காரணம் விளையாட்டு என்று சொல்லப்பட்டது.

2. உயிர்க்கு மன்னிய புத்தி முத்தி வழங்கவும்......:-சங்காரக்கடவுள் உயிர்களைப் பிறப்பிறப்பிற்படுத்தி, இன்பத்துன்பம் நுகர்வித்து, அவ்வுயிர்கள்படுந் துன்பத்துக்கு இரங்காது வருத்துதலால், அவர் செய்யுந் தொழில்

அறமாகாது மறமாய் முடியும் என்பர் நாத்திகர். அவரவர்வினைக்கீடாக இன்பத்துன்பங்களை நுகர்வித்தல் மலங்களைநீக்கி முத்திகொடுக்கும்பொருட்டாதலால், அத்தொழிலும் அறச்செயலேயாம். வழங்குதல் - கொடுத்தல்.

பிரமம் உலகமாயும் சீவர்களாயும் ஈசுவரனாயும் வடிவுகொண்டு விளையாடும். ஆகையால் இறைவனாற் செய்யப்படுவது என்னும் அத்தொழில் வீண்தொழில் என்பர் மாயாவாதிகள். இங்ஙனம் பிரமம் விளையாடுதற்கு ஏது என்ன? என வினவின், ஒரேதுவுமில்லை என்பர். ஆதலால் வீண்தொழில் என்பது கூடாது. வீண் தொழில் - பயனில்லாத தொழில். உயிர்கள் புத்தி முத்திகளைப் பெறுதற்கேதுவாயிருத்தலால், இறைவன்தொழில் வீண்தொழிலாகமாட்டாது.

பரிணாமவாதிகள் இறைவன் செய்யுந் தொழில் தன்பொருட்டு என்பர். எங்ஙனமெனின், தேவர் மனிதர் விலங்கு முதலிய சடசித்துக்களெல்லாம் பிரமத்தின் பரிணாமமாம். சச்சிதானந்தமாகிய பிரமம் பரிணமித்து விகாரப்பட்டதை அறியாமையாற் பந்தமாயிற்று. ஈசுரன்செய்யுந் தொழிலால் அவை பரப்பிரமரூபம் என அறியும் ஞானம் உண்டாகும். அந்த ஞானத்தாலே முத்தி உண்டாம் என்பர். சச்சிதானந்தமாகிய பிரமத்திற்குப் பரிணமித்துப் பந்தமுறுதலும் வீடெய்துதலுமாகிய இவை இலக்கணமாகா. ஆதலால், தன்பொருட்டென்பது பொருந்தாது. அறியாமையாற் பந்தமுறுவனவும், தேவர் மனிதர் விலங்கு முதலியவைகளாய்ப் பிறப்பனவும் உயிர்களாம். இறைவன் செய்யும் அத்தொழிலால் உயிர்கள் அறியாமை பிறப்பிறப்புக்களினீங்கி வீடெய்தும். ஆதலால், அத்தொழில் உயிர்கள்பொருட்டுச் செய்யப்படும் அருட்டொழிலேயாம்.

பொழிப்பு. சங்காரக்கடவுளிடத்திலே சிருட்டி முதலிய தொழில்கள் தோன்றற்குக் காரணம் உயிர்களுக்குப் போகமுத்திகளைக் கொடுத்தலும், அவைகளை மலங்களினின்று நீக்குதலுமாகும்.

## 5. ஐந்தொழிலும் அருட்செயல்.

**57.** அழிப்பிளைப் பாற்ற லாக்க மவ்வவர் கன்ம மெல்லாங்
கழித்திட நுகரச் செய்கை காப்பது கன்ம வொப்பின்
தெழித்திட மலங்க ளெல்லா மறைப்பருட் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்.

(இ - ள்). அழிப்பு - தனுவாதிகளை ஒடுக்குதல்,— இளைப்பாற்றல் - பிறப்பிறப்பிற்பட்டு வருந்தும் உயிர்களுக்கு இளைப்பு நீக்குதற்பொருட்டாம்,— ஆக்கம் - தனுவாதிகளைத் தோற்றுவித்தல்,—அவ்வவர் கன்மம் எல்லாம் கழித்திட - அவரவர் செய்த கன்மங்களெல்லாவற்றையும் நீக்குதற்பொருட்டாம்,—காப்பது - தனுவாதிகளை நிறுத்துதல்,—நுகரச் செய்கை - அவரவர் செய்த கன்மங்களின் பயனைப் புசிப்பித்து அவற்றை நீக்குதற்பொருட்டாம்,— மறைப்பு - இருவினைப் பயன்களிலே நிறுத்துதல்,—கன்ம ஒப்பின் - இரு

வினையொப்பு வருவித்து,—மலங்கள் எல்லாம் தெழித்திட - மலங்களெல்லா வற்றையும் நீக்குதற்பொருட்டாம்.—அருட் செய்தி தானும் - அருட்டொழிலும்,—பந்தம் வீடு - அம் மலங்களெல்லாவற்றையும் நீக்கி முத்திகொடுத்தற் பொருட்டாம்.—பார்த்திடின் - ஆராயுமிடத்து,—எல்லாம் அருளே - இச் செயல்களெல்லாம் அருட்செயல்களேயாம். ஆதலால்,—பழிப்பு ஒழி - இவற்றுட் சில மறத்தொழில் போலும் எனப் பழித்தலை நீ விடுவாயாக.

குறிப்பு. 1. மறைத்தற்றொழில் காத்தலிலும், அருளற்றொழில் சங்காரத்திலும் அடங்குதலின், முன் முத்தொழில் என்றும், அவை தம்முள் வேற்றுமையுடையனவாதலின், இங்கே ஐந்தொழில் என்றுங் கூறினர்.

2. அழிப்பிளைப்பாற்றல் - தனுகரணங்களை ஒடுக்குதல் அழித்தற்றொழில். அது பிறந்திறந்து வினைகளைச்செய்து, வினைப்பயன்களை அனுபவித்து உழலுகின்ற உயிர்களுக்கு அதனால் வரும் இளைப்பை நீக்குதற்பொருட்டுச் செய்யப்படுவது. புசித்தற்குப் பக்குவமான கன்மம் இல்லாமையாலுமாம்.

3. ஆக்க மவ்வவர் கன்மமெல்லாங் கழித்திட - கன்மங்கள் பக்குவமானவிடத்து அவற்றின் பயனை அனுபவித்தற்பொருட்டுத் தனுகரணங்களைத் தோற்றுவித்தல் சிருட்டித்தொழிலாம். அனுபவத்தாற் கன்மங்கள் நீங்கவே ஆணவமலத்தின் வலியுங் குன்றும். ஆதலாற் சிருட்டித்தொழில் கன்மங்களை ஒழித்தற்பொருட்டும் ஆணவமலம் பரிபாக மெய்தும்பொருட்டுமாம்.

4. நுகரச் செய்கை காப்பது - தனுகரணங்களை நிறுத்துதல் திதித்தொழில். இது பக்குவப்பட்ட கன்மங்கள் அனுபவத்தால் ஒழிதற்பொருட்டுச் செய்யப்படுவதாம். கன்மம் ஒழியவே ஆணவமலமும் பரிபாகமெய்தும்.

5. கன்மவொப்பின் றெழித்திட மலங்களெல்லாம் மறைப்பு - இருவினைப் பயன்களிலே நிறுத்துதல் மறைப்பு. இது இருவினையொப்பு வருவித்து மலங்களை நீக்குதற்பொருட்டு நிகழ்வதாம். இருவினையொப்பு வருமிடத்துக் கன்மப்பயன்களில் ஒப்ப வெறுப்புண்டாகும். அதனால் ஆணவமலசத்தி வலிகுன்றும். கன்மங் காரணமான மாயாமலசத்தியும் வலிகுன்றும். ஆதலால் "மலங்களெல்லாந் தெழித்திட" என்றார். தெழித்தல் - ஒட்டுதல், நீக்குதல்.

6. அருட் செய்தி தானும் பந்தம் வீடு - மேற்கூறியவாறு இருவினையொப்பும் மலபரிபாகமும் வந்தவிடத்து, இதுகாறும் உண்ணின்று மலம் பரிபாகமெய்தும்படி வேண்டிய உபாயங்களைச் செய்துவந்த திரோதானசத்தி அருட்சத்தியாய் மாறிக் குருவடிவங்கொண்டெழுந்தருளி வந்து தீக்கைசெய்து மும்மலங்களையும் போக்கி, முத்தியைக் கொடுக்கும். பந்தம் - மலபந்தம் மாயாபந்தம் கன்மபந்தம் என்னும் மூன்றுமாம்.

7. அருளேயெல்லாம் - இளைப்பாற்றல், மலபரிபாகம் வரச்செய்தல், கன்மங்களை நீக்குதல், இருவினையொப்பு வருவித்தல், மலங்களைப் போக்கி

முத்தி கொடுத்தல் என்னும் ஐந்து தொழில்களும் உயிர்களின்மேல் வைத்த கருணையினாற் செய்யப்படுவனவாகலின் அருட்செயல்களேயாம்.

பொழிப்பு. அனுக்கிரகமொழிந்த மற்றைய நான்கு தொழில்களும் துன்பங் கொடுப்பனவாதலால், அவை மறத் தொழில்களாய் முடியும்போலு மெனின், ஒடுக்கம் இளைப்பாற்றலும், தோற்றம் மலபரிபாகம் வரச் செய்தலும், நிலை கன்மத்தை நுகர்வித்துக் கழிப்பித்தலும், மறைப்பு இருவினையொப்பு வருவித்தலும், அருள் முத்தி கொடுத்தலுமாகிய பயனை உடையனவாதலால், ஐந்தொழிலும் அருட்செயலேயாம்.

---

## B. பதியிலக்கணம், (58-90).

இது நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுப் பொருள் கூறப்படுகின்றது.

I. "தான்" எனச் சுட்டிய முதல்வனது பொதுவிலக்கணம், (58-80).

II. அநாதி முத்த சித்தாகிய சத்தியின் இலக்கணம், (81-84).

III. சித்துருவாகிய சத்திவடிவத்தின் இலக்கணம், (85-89).

IV. "தான்" எனச் சுட்டிய முதல்வனது சிறப்பிலக்கணம், (90).

ஒவ்வொருபிரிவிலும் அடங்கிய விஷயங்கள் அவ்வப்பிரிவின் முகப்பிலே காணப்படும்.

---

### I. "தான்" எனச் சுட்டிய முதல்வனது பொதுவிலக்கணம். இது முதலாம் பிரிவு, (58-80).

இப்பிரிவில் அடங்கிய விஷயங்கள்:—

1. முதல்வனது தடத்தவடிவம் அருவம் அருவுருவம் உருவம், (58).
2. முதல்வனது உருவத்திருமேனியின் இயல்பும் உண்மையும், (59-74).
   (a). உருவத்திருமேனி மாயாகாரிய வடிவமன்று அருள்வடிவம், (59-61).
   (b). உருவத்திருமேனிபற்றிவரும் ஆசங்கையைப் பரிகரித்தல், (62-66).
   (c). உருவத்திருமேனியிலே தோன்றுவனவெல்லாம் அருள்வடிவம், (67).
   (d). முதல்வன் உருவத்திருமேனிபற்றிச் சிந்திதனையினும் அசிந்திதனே, (68-69).
   (e). முதல்வன் உருவத்திருமேனி கொள்ளுதற்குக் காரணம், (70-71).
   (f). முதல்வன் உருவத்திருமேனிகொள்ளுதல் அருள்புரிதல் காரணம் என்பதனை விளக்கல், (72-73).

(*g*). உருவத்திருமேனி இன்றியமையாதது; (**74**).

3. முதல்வனது அருவத்திருமேனி அருவுருவத்திருமேனிகளின் உண்மையும் இயல்பும், (**75**).

4. முதல்வனது உபசாரத்திருமேனி, (**76-79**).

(*a*). அத்துவாவடிவம், (**76**).

(*b*). மந்திரவடிவம், (**77-78**).

(*c*). பஞ்சப்பிரம மந்திரவடிவம். (**79**).

(*d*). பிரமன் முதலிய மும்மூர்த்திகளின் வடிவங்களை முதல்வனது வடிவங்கள் என்பது உபசாரம், (**80**).

1. முதல்வனது தடத்தவடிவம் (அருவம் அருவுருவம் உருவம்).

**58** அருவமோ வுருவா ரூப மானதோ வன்றி நின்ற　　　[னின்
உருவமோ வுரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங் கென்
அருவமு முருவா ரூப மானது மன்றி நின்ற
உருவமு மூன றுஞ் சொன்ன வொருவனுக் குள்ள வாமே.

(இ - ள்). உரைக்கும் கர்த்தா வடிவு - ஐந்தொழில் செய்பவன் என்று நீர் கூறும் கர்த்தாவினது வடிவமானது,—அருவமோ உருவாரூபம் ஆனதோ அன்றி நின்ற உருவமோ - அருவாகிய வடிவமோ அருவுருவாகிய வடிவமோ அவ்விரண்டுமொகாது நின்ற உருவாகிய வடிவமோ,—எனக்கு இங்கு உணர்த்து என்னின் - எனக்கு இவ்விடத்தே அறிவிக்க வேண்டும் என்னின்,—அருவமும் உருவாரூபமானதும் அன்றி நின்ற உருவமும் மூன்றும் - அருவமும் அருவுருவமும் அவ்விரண்டுமன்றி நின்ற உருவமும் ஆகிய இம் மூன்றும்,—சொன்ன ஒருவனுக்கு உள்ளவாம் - மேற்கூறப்பட்ட சங்காரகாரணனாகிய முதல்வன் ஒருவனுக்கு உள்ள வடிவங்களாம்.

குறிப்பு. அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்றும் பரமசிவனது தடத்த வடிவங்களாம். அவை முறையே நிஷ்களம் நிஷ்களசகளம் சகளம் என்றுஞ் சொல்லப்படும். நிஷ்களத் திருமேனி கொண்டருளிய பொழுது பரமசிவன் சிவம் என்றும் சத்தர் என்றும் இலயசிவன் என்றும் நிஷ்கள சிவன் என்றும் பெயர் பெறுவர். நிஷ்களசகளத் திருமேனி கொண்டருளிய பொழுது சதாசிவன் என்றும் உத்தியுத்தர் என்றும் போகசிவன் என்றும் நிஷ்களசகளசிவன் என்றும் பெயர் பெறுவர். சகளத்திருமேனிகொண்டருளியபொழுது மகேசுவரர் என்றும் பிரவிருத்தர் என்றும் அதிகாரசிவன் என்றும் சகளசிவன் என்றும் பெயர் பெறுவர்.

பொழிப்பு. அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்று வடிவங்களும் முதல்வனுக்குத் தடத்த வடிவங்களாம்.

## 2. முதல்வனது உருவத்திருமேனியின் இயல்பும் உண்மையும், (59-74).

(a). உருவத்திருமேனி மாயாகாரிய வடிவமன்று, அருள்வடிவம்.

**59.** நண்ணிடு முருவ மென்னி னமக்குள வுருவம் போலப்
பண்ணிட வொருவன் வேண்டு மிச்சையேற் பலரு மிச்சை
கண்ணிய வுருவங் கொள்ளேம் யாம்பெருங் கடவுடானும்
எண்ணிய யோக சித்தர் போலுரு விசைப்பன் காணே.

(இ - ள்.) உருவம் நண்ணிடும் என்னின் - முதல்வனுக்கு உருவம் உண்டென்னின்,—நமக்கு உள உருவம் போல - நம்மனோருக்கு உள்ள உருவம் போல,—பண்ணிட ஒருவன் வேண்டும் - அவனுக்கும் உருவம் உண்டாக்குதற்கு ஒரு கருத்தா வேண்டும்,—இச்சையேல் - முதல்வன் தனது இச்சைப்படி வடிவங்கொள்வான் என்னின்,—பலரும் இச்சை - நம்மனோர் பலரும் இச்சைப்படி வடிவங்கொள்ளல் வேண்டும். அப்படியன்று,—யாம் கண்ணிய உருவம் கொள்ளேம் - நாம் கருதிய வடிவங்களை எடுக்கமாட்டோம்,—பெருங் கடவுள் - எல்லாம் வல்ல முதல்வன்,—யோகசித்தர் போல - யோகசித்தரைப்போல,—தானும் எண்ணிய உரு இசைப்பன் காண் - தானும் நினைந்த ஒரு வடிவத்தை எடுத்துக்கொள்வன் என்று அறிவாயாக.

பொழிப்பு. முதல்வனுக்கு உருவமுண்டென்னின், அவ்வுருவத்தை உண்டாக்க வேறொரு கடவுள் வேண்டும். தான் நினைந்த உருவங்கொள்வனென்னின், நம்மனோரும் அப்படியே கொள்ளல்வேண்டும். அப்படியன்று; நாம் நினைந்த வடிவங் கொள்ளல் இயலாது. முதல்வன் யோகசித்தரைப் போலத் தான் நினைந்த உருவத்தை எடுத்துக்கொள்வன்.

### இதுவுமது.

**60.** வித்தக யோக சித்தர் வேண்டுருக் கொள்ளு மாபோல்
உத்தமன் கொள்வ னென்னி னவர்களி லொருவ னாவன்
அத்தகை யவர்க ளெல்லா மாக்குவ தருளா லாங்கு
வைத்தது மாயை யென்னின் வடிவெலா மாயை யாமே.

(இ - ள்). வித்தக யோக சித்தர் வேண்டு உருக் கொள்ளுமா போல் - மிக்க சாதுரியமுடைய யோக சித்தர் தாம் விரும்பும் வடிவங்களை எடுத்துக் கொள்ளும் முறைமை போல,—உத்தமன் கொள்வன் என்னின் - முதல்வனும் நினைந்த உருவங்களை எடுத்துக்கொள்வான் என்னின்,—அவர்களில் ஒருவன் ஆவன் - அம் முதல்வனும் அந்த யோகசித்தரில் ஒருவனாக எண்ணப் படுவன். அப்படியன்று,—அத்தகை அவர்கள் எல்லாம் ஆக்குவது - அத்தன்மையுடைய யோகசித்தர் முதலியோர் வேண்டும் உருவங்களைக் கொள்வது,—அருளால் - முதல்வனது அருளாலாம்,—ஆங்கு வைத்தது மாயை

என்னின் - அவ்விடத்து அவருக்கு நியமித்த உருவம் மாயாகாரியம் என்னின்,—வடிவு எலாம் மாயை ஆம் - ஆக்கிய வடிவங்களெல்லாம் மாயாகாரியமாம். முதல்வன் வடிவம் மாயாகாரியமன்று.

பொழிப்பு. யோகசித்தர் விரும்பிய வடிவங் கொள்வதுபோல முதல்வனுங் கொள்வனாயின், முதல்வன் அந்த யோகசித்தரில் ஒருவனாய் முடிவனெனின். அந்த யோகசித்தர் விரும்பிய வடிவங்கொள்வது முதல்வனது அருளாலேயாம். அன்றி அவ்வடிவங்களும் மாயாகாரியங்களாம்.

இதுவுமது.

61 மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவ மாகும்
ஆயவா ணவம கன்ற வறிவொடு தொழிலை யார்க்கும்
நாயக னெல்லா ஞானத் தொழின்முத னண்ண லாலே
காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்.

(இ - ள்). மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவம் ஆகும் - அம் மாயாகாரியமான வடிவங்களெல்லாம் ஆணவமலம் காரணமாக உண்டாகும் வடிவங்களாகும்,—ஆய ஆணவம் - மலமாகிய அந்த ஆணவம்,—அகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும் - வியாபக அறிவையுந் தொழிலையும் மறைத்துச் (சிற்றறிவையும் சிறுதொழிலையுமுண்டாக்கு மாதலால் அச்சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடைய உயிர்களுக்கே அவ்வடிவங்கள் பொருத்தமுடையனவாகும்),—நாயகன் - நின்மலனாகிய முதல்வன்,—எல்லா ஞானத் தொழில் முதல் நண்ணலாலே - எல்லா அறிவும் எல்லாத்தொழிலும் எல்லா முதன்மையுமுடையவனாகையால்,—காயமோ மாயை அன்று - அவனுடைய வடிவமோ மாயாகாரிய வடிவமன்று,—சத்தி தன்னால் காண்பது - அது தனது சத்தியினால் உண்டாக்கும் வடிவமாகும்.

குறிப்பு. 1. ஆய - ஆகிய.

2. எல்லா ஞானத்தொழில் - முற்றறிவு முற்றுத்தொழில்கள்.

3. அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்று வடிவங்களும் முதல்வனுக்குத் தடத்தவடிவங்களென 58-ம் செய்யுளிற் கூறிப் பின் மூன்று செய்யுள்களாலும் உருவத்திருமேனி அருள்வடிவம் என்பது தடை விடைகளாற் சாதிக்கப்பட்டது. அவையாவன:—

(a). தடை. முதல்வனுக்கு உருவத்திருமேனி உண்டெனின், நம்மனோருக்குப்போல அவ்வுருவத்திருமேனியை உண்டாக்குதற்கு ஒரு கருத்தா வேண்டும். விடை. கருத்தா வேண்டுவதில்லை. முதல்வன் தானாகவே நினைந்த வடிவத்தை எடுத்துக்கொள்வன்.

(b). தடை. அப்படியாயின் நாமும் நினைந்த வடிவங் கொள்ளல் வேண்டும். விடை. முதல்வன் எல்லாம் வல்லவன். ஆகையால் யோகசித்தரைப் போல நினைந்த வடிவங் கொள்வன். நாம் அத்தன்மையமல்லம்.

(c). தடை. முதல்வன் யோகசித்தரைப்போல நினைந்த வடிவங் கொள்வானென்னின், அவனும் அச் சித்தரைப்போன்றவன் ஒருவனாவன். விடை. அப்படியன்று, அவர்கள் நினைந்த வடிவங்களை எடுத்துக்கொள்வது முதல்வனது அருளாலேயாம்.

(d). தடை. அப்படியாயினும், அவர் எடுத்துக்கொள்ளும் வடிவம் மாயா சரீரந்தானே. விடை. அஃது உண்மை. யோகசித்தர் முதலிய நம்மனோருக்கு உள்ள வடிவமெல்லாம் மாயா சரீரந்தான். முதல்வன் வடிவம் மாயா சரீரமன்று, சத்திகாரிய வடிவமாம்.

பொழிப்பு. மாயாகாரிய வடிவங்களுக்குக் காரணம் ஆணவமலம். அது சிற்றறிவையுஞ் சிறுதொழிலையும் உண்டாக்கும். உயிர்கள் ஆணவமலமும் சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடையன. ஆதலால் உயிர்களுக்கே மாயாகாரிய வடிவங்கள் பொருத்தமுடையன. முதல்வன் நின்மலன். முற்றறிவும் முற்றுத்தொழிலும் முற்றுமுதன்மையும் உடையவன். ஆதலால், மலமில்லாத முதல்வனுக்கு மலம் காரணமான மாயாகாரிய வடிவம் பொருந்தாது. சத்தி காரியமான வடிவமே அவனுக்கு வடிவமாம்.

(b). உருவத்திருமேனி பற்றிவரும் ஆசங்கையைப் பரிகரித்தல்.

62. சத்தியே வடிவென் றாலுந் தான்பரி ணாம மாகும்
நித்தமோ வழியு மத்தா னின்மல னருவே யென்னின்
அத்துவா மார்க்கத் துள்ளா னலனிவ னருமை தன்னைப்
புத்திதா னுடையை போல விருந்தனை புகலக் கேணீ.

(இ - ள்). சத்தியே வடிவு என்றாலும் - முதல்வனுக்குச் சத்தியே வடிவம் என்று சொல்லினும்,—தான் பரிணாமமாகும் - அவ் வடிவம் பரிணமித்த வடிவமாகும்,—நித்தமோ அழியும் - ஆதலால் அதன் நித்தியத்தன்மை அழிவெய்தும்,—அத்தால் - அக் காரணத்தால்,—நின்மலன் அருவே என்னின் - முதல்வனது வடிவம் உருவமன்று, அருவமே என்னின்,—அத்துவா மார்க்கத்து உள்ளான் அலன் - அவன் ஆறத்துவாக்களில் உட்பட்டவனல்லன்;—இவன் அருமை தன்னை - இவனுடைய அருமையை,—புத்தி தான் உடையை போல இருந்தனை - புத்தியுடையாய்போல இருந்தாய்,—புகல நீ கேள் - கூறுவோம் நீ கேட்பாயாக.

குறிப்பு. அத்துவாமார்க்கத் துள்ளானலன் - முதல்வன் அகண்டிதன் என்பது.

பொழிப்பு. முதல்வனுக்குச் சத்தியே வடிவமெனின், வடிவப்பொருள்கள் பரிணமித்து அழிவடைவன. ஆதலால், முதல்வனது வடிவம் உருவம் என்றல் கூடாது, அருவம் என்றலே பொருத்தமுடையதெனின், பரிணமித்து அழிவெய்தல் ஆறத்துவாக்களுட்பட்ட பொருள்களின் இயல்பாம்.

முதல்வன் ஆறத்துவாக்களையுங் கடந்த பொருள். ஆதலால் அக்குற்றம் அவனிடத்திற் செல்லாது.

இதுவுமது.

63. உலகினிற் பதார்த்த மெல்லா முருவமோ டருவ மாகி
நிலவிடு மொன்றொன் றாகா நின்றவந் நிலையே போல
அலகிலா வறிவன் றானு மருவமே யென்னி னாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்றாய்க் கூடுவன் குறித்தி டாயே.

(இ - ள்). உலகினில் பதார்த்தம் எல்லாம் - உலகத்திலுள்ள பொருள்களெல்லாம்,—உருவமோடு அருவம் ஆகி நிலவிடும் - உருவமும் அருவமுமாய்க் காணப்பட்டு விளங்கும்,—ஒன்று ஒன்று ஆகாநின்ற அந்நிலையே போல - அவற்றுள் ஒன்று பிறிதொன்றாகாது நிற்கும் அந்த முறைமைபோல,—அலகு இலா அறிவன் தானும் அருவமே என்னின் - அளவிறந்த ஞானத்தையுடைய முதல்வனையும் அருவப்பொருளாம் என்னின்,—குலவிய பதார்த்தத்து ஒன்றாய்க் கூடுவன் - (வேறொன்றாகமாட்டான் எனப்பட்டுச்) சொல்லப்பட்ட உலகப்பொருள்களுள் ஒன்றாய்விடுவன்,—ஆய்ந்து குறித்திடாய் - நீ இதனை ஆராய்ந்து அறிவாயாக.

குறிப்பு. உலகத்திலுள்ள பொருள்களுள்ளே ஆகாயம் முதலியவை அருவப்பொருள்கள். நிலம் முதலியவை உருவப்பொருள்கள். இவற்றுள் அருவப்பொருளாகிய ஆகாயம் முதலியன உருவியல்புடையதாகா. உருவப்பொருளாகிய நிலம் முதலியன அருவியல்புடையதாகமாட்டா. இங்ஙனம் ஒன்று மற்றொன்றின் இயல்புடையதாகமாட்டாமை காணப்படும். முதல்வன் அருவப்பொருளே என்னின், இவற்றுள் ஒன்று போன்றவனாவன். ஆதலால் அவனியல்பு அருவமாகிய ஒன்றேயாதல் அமையாது.

பொழிப்பு. உலகத்துப் பொருள்கள் உருவமும் அருவமுமாய் இருக்கும். ஒன்று மற்றொன்றின் இயல்புடையதாகமாட்டாது. ஆதலால் முதல்வன் அருவப்பொருளே என்னின், அருவுருவமும் உருவமுமாகிய இயல்புடையவனாகமாட்டானெனப்பட்டு உலகத்துப் பொருள்களுள் ஒருவனாய் முடிவன்.

இதுவுமது.

64. பந்தமும் வீடு மாய பதபதார்த் தங்க ளல்லான்
அந்தமு மாதி யில்லா னளப்பில னாத லாலே
எந்தைதா னின்ன னென்று மின்னதா மின்ன தாகி
வந்திடா னென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே.

(இ - ள்). எந்தை தான் - எமது முதல்வன்,—பந்தமும் வீடும் ஆய - ஆன்மாக்களைப் பந்திப்பனவும் விடுவனவுமாகிய,—பத பதார்த்தங்கள் அல்லான் - சொல்லும் பொருளுமாய பிரபஞ்சப்பொருள்கள் அல்லனாதலானும்,—ஆதி அந்தமும் இல்லான் - தோற்றமும் நாசமும் இல்லாதவனாதலா

னும்,—அளப்பிலன் ஆதலாலே - அளவைகளுக்கு எட்டாதவனுதலானும்,—இன்னன் என்றும் - அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்றனுள் இன்ன வடிவினன் என்றும்,—இன்னது ஆம் இன்னது ஆகி வந்திடான் என்றும் சொல்ல - இன்ன வடிவத்தைக் கொள்ளுவன் இன்ன வடிவத்தைக் கொள்ளமாட்டான் என்றும் கூறுதற்கு,—வழக்கொடு மாற்றம் இன்று - ஆசங்கையும் உத்தரமும் இல்லையாம். ஆதலால் முதல்வனது திருமேனி உருவமன்று, அருவமே என்றல் பொருந்தாது.

குறிப்பு. 1. பந்தமும் வீடுமாய பத பதார்த்தங்களல்லான்......:-பந்தமும் வீடுமாய பத பதார்த்தங்கள், சொல்லும் பொருளுமாகிய பிரபஞ்சங்கள். அவை அருவும் உருவுமாய் விளங்கும் தத்துவ தாத்துவிகங்கள். இத்தத்துவ தாத்துவிகங்கள் தோன்றி அழிதலாலும் அளந்தறியப்படுவனவாதலாலும் சடப்பொருளாய் அசத்தாம். முதல்வன் தத்துவ தாத்துவிகப்பொருள்களுள் ஒன்றுதலிலனும், தோற்ற நாசங்களிலனும், அளந்தறியப்படாதவனும் இருக்குஞ் சத்துப்பொருளாதலால், அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்றனுள் விரும்பிய ஒரு வடிவத்தை எடுக்கும் வன்மையுடையன். ஆதலால் அவனது திருமேனி உருவமன்று, அருவமே என்று கூறுதல் பொருந்தாது என்பது. இதனால் முதல்வன் சத்துப்பொருள் என்று அவனது இலக்கணங் கூறியவாறுமாம். பதம் - சொல். பதார்த்தம் - பொருள்.

2. இன்னதாம்:- ஆம் என்பது ஆகும் என்பதன் விகாரம். ஆகுதல் - உளதாதல், உண்டாதல்.

பொழிப்பு. முதல்வன் பிரபஞ்சப்பொருள்களின் இயல்புடையனல்லனுதலாலும், தோற்ற நாசங்களிலனுதலாலும், அளந்தறியப்படாதவனுதலாலும், இன்னவடிவினன் என்றும், இன்னவடிவத்தைக் கொள்ளுவன் என்றும், இன்னவடிவத்தைக் கொள்ளமாட்டான் என்றும் கூறுதல் அரிதாம். ஆதலால் முதல்வனது வடிவம் உருவமன்று, அருவமே என்றல் பொருந்தாது.

இதுவுமது.

65. குறித்ததொன் றாக மாட்டாக் குறைவில னாத லாலும்
நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமை யானும்
வெறுப்பொடு விருப்புத் தன்பான் மேவுத லிலாமை யானும்
நிறுத்திடு நினைந்த மேனி நின்மல னருளி னாலே.

(இ-ள்). குறித்தது ஒன்று ஆக மாட்டாக் குறைவிலன் ஆதலானும் - தான் நினைந்ததொன்றாக மாட்டாத குறைவிலனுதலாலும்,—நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையானும் - என்றும் ஒரு தன்மையவாக நிறைந்த ஞானமும் செயலுமுடைய தன்மையனுதலாலும்,—வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலாமையானும் - வெறுப்பு விருப்புக்கள் தன்னிடத்துப் பொருந்துதல் இலனுதலாலும்,—நின்மலன் - முதல்

வன், — அருளினால் - உயிர்கண்மாட்டுவைத்த கருணையினால், - நினைந்த மேனி நிறுத்திடும் - தான் நினைந்ததொரு திருமேனியைக் கொண்டருளுவன். ஆதலால் முதல்வனது திருமேனி உருவமன்று, அருவமே என்றல் பொருந்தாது.

குறிப்பு. 1. முற்செய்யுளிலே முதல்வன் உலகப்பொருள்களாகிய அசத்துப்பொருள்களின் தன்மையிலனாதலால், அவனது வடிவம் அருவம்மாத்திரம் என்றல் பொருந்தாதெனக் கூறி, இச் செய்யுளிலே அவன் சித்துப்பொருள்களாகிய உயிர்களின் தன்மையிலனாதலான் அவன் வடிவம் அருவமே என்றலும் பொருந்தாதெனக் கூறினார்.

2. குறித்ததொன்றாக மாட்டாக் குறைவிலன் - முதல்வனும் உயிர்களுஞ் சித்துப்பொருள்களாயினும், முதல்வன் சூக்கும சித்துப்பொருள், உயிர்கள் தூல சித்துப்பொருள்கள். குறித்த தொன்றாகமாட்டாக் குறைவாவது உயிர்கள் தாம் நினைந்த ஒன்றாக வரற்கேற்ற ஆற்றல் இலாமை. முதல்வன் சருவவல்லமை (அளவிலாற்றல்) உடையவன் என்பது.

3. நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையான் - முதல்வன் சர்வஞ்ஞத்துவம் சர்வகர்த்திருத்துவம் என்னும் முற்றறிவும் முற்றுத் தொழிலுமுடையவன். உயிர்கள் சிற்றறிவும் சிறுதொழிலுமுடையன என்பது. நெறிப்பட - என்றும் ஒரு நெறியாக.

4. வெறுப்பொடு விருப்பு - விருப்பு வெறுப்புக்களுக்குக் காரணம் ஆசை (பற்று). ஆசைக்குக் காரணம் மலம். முதல்வன் இயல்பாகவே மலத்தினீங்கினவன் (மலரகிதன், நின்மலன்). உயிர்கள் அநாதியே மலத்தோடு கூடியன (மலசகிதர்).

இங்ஙனம் முதல்வன் உயிர்களின் தன்மையிலனாதலால், அவன் நினைந்த வடிவம் எடுக்கும் இயல்புடையவன். ஆதலால் அவன்வடிவம் அருவம் ஒன்றே என்றல் பொருந்தாது.

இங்கே கூறியவற்றான் முதல்வன் சித்துப்பொருள் என்று அவனது இலக்கணம் கூறியதும் காண்க.

5. மேனியருளினால் - அருளாலாய திருமேனி, சத்திவடிவம் எனினும் பொருந்தும்.

பொழிப்பு. முதல்வன் அளவிலாற்றலும், முற்றறிவு முற்றுத்தொழில்களும், இயல்பாகவே பாசத்தினீங்கிய தன்மையும் உடையனாதலால், தான் நினைந்ததொரு திருமேனியை எடுத்துக்கொள்ளும் இயல்புடையன். ஆதலால் அவனது திருமேனி உருவமன்று, அருவமே என்றல் பொருந்தாது.

இதுவுமது.

**66.** ஆரண மாக மங்க ளருளினா லுருவு கொண்டு
காரண னருளா னாகிற் கதிப்பவ ரில்லை யாகும்
நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்
சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றி டாவே.

(இ - ள்). காரணன் - முதல்வன்,—அருளினால் உருவு கொண்டு - கருணையினாலே உருவத்திருமேனிகொண்டு,—ஆரணம் ஆகமங்கள் அருளானாகில் - வேதாகமங்களை உபதேசித்தருளானாயின்,—கதிப்பவர் இல்லையாகும் - உயிர்கள் பதி பசு பாசங்களின் இயல்பு உணர்ந்து முத்தியடைதல் இல்லையாகும்,—நாரணன் முதலாயுள்ள சுரர் - அன்றியும் திருமால் முதலிய தேவர்களுக்கும்,—நரர் - மானுடருக்கும்,—நாசர்க்கு எல்லாம் - நாகர் முதலியோர்க்கும்,—சீர் அணி குரு சந்தானச் செய்தியும் - மிக்க சிறப்புடைய குருபரம்பரையில் வைத்து உபதேசித்தலும்,—சென்றிடா - வழங்காவாம். இதுபற்றியும் முதல்வனது திருமேனி உருவமன்று, அருவமே என்றல் பொருந்தாது.

குறிப்பு. 1. ஆரண மாகமங்க ளருளினா லுருவு கொண்டு......கதிப்பவரில்லையாகும்:- முதல்வனது உருவத்திருமேனி மகேசுவரவடிவம். மகேசுவரமூர்த்தி அநந்தேசுரர்வாயிலாக விஞ்ஞானகலருக்கு அறிவுக்கறிவாய் நின்று வேதாகமங்களின் பொருளை உணர்த்துவர். அன்றியும் அநந்தர்வாயிலாக ஸ்ரீகண்டருத்திரரை அதிட்டித்து நின்று பிரளயாகலர் சகலர் என்னும் உயிர்வர்க்கங்களுக்கு உணர்த்துவர். உணர்த்துங்கால் ஸ்ரீகண்டருத்திரர் நாற்புயம் திரிநேத்திரம் நீலகண்டம் முதலிய உறுப்புக்களையுடைய வடிவோடும் பிரளயாகலருக்கு உணர்த்துவர். சகலருக்கு ஞானாசாரியரை இடமாகக் கொண்டு உபதேசிப்பர். இங்ஙனம் முதல்வன் மகேசுவர வடிவங்கொண்டு வேதாகமங்களை அருளிச்செய்யானாயின், மூவகை உயிர்களும் கதியடைதல் அரிதாகும். கதித்தல் - கதியடைதல். அருளினாலுருவுகொண்டு என்பதற்குச் சத்திவடிவம் எனினும் பொருந்தும்.

2. நாரணன் முதலாயுள்ள சுரர்......:- ஸ்ரீகண்டருத்திரர் வேதாகமங்களின் பொருளைத் திருநந்திதேவருக்கு உபதேசிக்க, அவர் கணங்களுக்கும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் உபதேசித்தருளினர். இங்ஙனம் இவை குருபரம்பரையாக உபதேசிக்கப்பட்டுவருகின்றன. முதல்வன் மகேசுவர வடிவங் கொள்ளானேல் குருபரம்பரையாக உபதேசிக்கப்பட்டு வருதலும் இல்லதாகும் என்பது.

பொழிப்பு. முதல்வன் உருவத்திருமேனிகொண்டு வேதாகமங்களை உபதேசித்திலனாயின், உயிர்கள் வீடுபேறடைதல் கூடாதாகும். அன்றியும் குருபரம்பரையாக அவை உபதேசிக்கப்பட்டுவருதலும் இல்லையாகும். ஆதலால் முதல்வனது திருமேனி அருவமே என்றல் பொருந்தாதாகும்.

(c). உருவத்திருமேனியிலே தோன்றுவன யாவும் அருள்வடிவம்.

67. உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே.

(இ-ள்). உரு அருள் - முதல்வனது திருவுரு அருள்வடிவமாதலால்,—குணங்களோடும் உணர்வு அருள் - குணங்களும் கரணங்களும் அருள் வடிவேயாம்,—உருவில் தோன்றும் கருமமும் அருள் - அத் திருவுருவிலே தோன்றுந் தொழில்களும் அருள்வடிவேயாம்,—அரன் தன் கர சரண ஆதி - அம் முதல்வனது திருக்கை திருவடி முதலிய பிரத்தியங்கங்களும்,—சாங்கம் தரும் அருள் - சூலம் மழு முதலிய சாங்கங்களும் தரப்பட்ட அருள்வடிவேயாம்,—உபாங்கம் எல்லாம் தான் அருள் - உபாங்கங்களெல்லாம் அருள் வடிவேயாம்,—அருள் உரு - இவ் வருள்வடிவெல்லாம் —தனக்கு ஒன்று இன்றி - தனக்குப் பிரயோசனமாக ஒன்றுமின்றி,—உயிருக்கு என்றே - உயிர்களின்பொருட்டென்றே,—அசிந்தன் ஆக்கினன் - முதல்வன் எடுத்துக்கொண்டனன்.

குறிப்பு. 1. உரு - அங்கம். அங்கம் - சிரசு, முகம், இருதயம் என்பன.

2. குணங்கள் - ஞானம், அருள், பொறை, வாய்மை முதலியன.

3. உணர்வு - அந்தக்கரணம்.

4. கருமம் - பஞ்சகிருத்தியம்.

5. கரசரணாதி - கண், மூக்கு, செவி, கழுத்து, மார்பு, தோள், நாபி, கை, கால், விரல் முதலியன. இவை பிரத்தியங்கங்களாம்.

6. சாங்கம் - சூலம், மழு, வாள், வச்சிரம், அபயம், நாகம், பாசம், அங்குசம், கண்டாமணி, அங்கி என்னும் ஆயுதங்கள் பத்துமாம். ஆயுதங்களுள்,

(*a*). சூலம், ஆரிணி செநநி உரோதயித்திரி என்னும் மூன்று சத்திகளையுங் குறிக்கும்.

ஆரிணி - சங்காரம் அனுக்கிரகம் என்னுங் கிருத்தியங்களைச் செய்யுஞ் சத்தி. ஹாரிணீ: ஹ்ரு - அழித்தல்.

செநநி - பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்குஞ் சத்தி. ஜந் - பிறப்பித்தல்.

உரோதயித்திரி - திதியும் திரோதானமுஞ் செய்யுஞ் சத்தி. ருத் - தடைசெய்தல், மறைத்தல்.

(*b*). மழு சத்தியத்தையும், (*c*). வாள் பிரதாபகுணத்தையும், (*d*) வச்சிரம் பிறிதொன்றாற் பேதிக்கப்படாத இயல்பையும், (*e*). அபயம் அனுக்கிரகத்தையும், (*f*). நாகம் சுத்தமாயையையும், (*g*). பாசம் அசுத்தமாயையையும், (*h*). அங்குசம் விவர்ணத்தையும், (*i*). கண்டாமணி சுத்தநாதத்தையும், (*j*). அங்கி (அக்கினி) பாசசங்காரத்தையும் குறிக்கும்.

7. உபாங்கம் - வஸ்திரம், உபவீதம், மாலை, கந்தம், ஆபரணம், ஆசனம், ஆவரணம் என்பன. (சிவாக்). ஆவரணம் - ஈட்டி. ஆசனம் - புலித்தோல் முதலிய இருக்கை.

மேற்கூறியவற்றுள், அங்கம் திருமேனி. பிரத்தியங்கம், அத்திருமேனியிலுள்ள உறுப்புக்கள். பிரதி + அங்கம் = பிரத்தியங்கம். பிரதி - எதிர். சாங்கம் - அங்கத்தோடு கூடியது. ச + அங்கம் = சாங்கம். ச - கூட. உபாங்கம் -

அங்கத்தைவிட்டு நீங்காது அதன் சமீபத்திலிருப்பது. உப + அங்கம் = உபாங்கம். உப - கிட்ட. முதல்வனுக்கு இவ்வங்கப் பிரத்தியங்க சாங்க உபாங்கங்கள் எல்லாம் சத்திகாரியமாய் உள்ளனவாம்.

8. அசிந்தன் - சிந்திக்கப்படாதவன்.

பொழிப்பு. முதல்வனது திருவுரு அருள்வடிவமாதலால், அவ்வுருவிலே தோன்றும் குணங்கள் கரணங்கள் தொழில்கள் பிரத்தியங்க சாங்க உபாங்கங்கள் யாவும் அருள்வடிவேயாம். இவையெல்லாம் தன்பொருட்டாகாது, உயிர்களின்பொருட்டாக முதல்வன் கொண்டனன்.

(*d*). முதல்வன் உருவத்திருமேனிபற்றிச் சிந்திதனாயினும் அசிந்திதனே.

68 உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரார்
உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மென்று மோரார்
உலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரார்
உலகினி லொருவ னென்ப ருருவினை யுணரா ரெல்லாம்.

(இ - ள்). அரன் உரு உலகினை இறந்து நின்றது என்பது ஓரார் - இங்ஙனம் சத்திவடிவங்கொண்டு சிந்திதனாயினும் முதல்வன் அசிந்திதனே என்பதற்கு அம்முதல்வனுடைய வடிவம் உலகினைக் கடந்துநின்ற வடிவம் என்னும் சுருதிவாக்கியத்தை உணரார்,—உலகு அவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார் - உலகம் அவன் திருவுருவிலே தோன்றி ஒடுங்கும் என்னும் சுருதிவாக்கியத்தையும் உணரார்,—உலகினுக்கு உயிருமாகி உலகுமாய் நின்றது ஓரார் - அவன் உலகிற்கு உயிராயும் உலகமாயும் நின்றனன் என்னும் சுருதிவாக்கியங்களையும் உணரார்,—உருவினை உணரார் எல்லாம் - இங்ஙனம் கூறும் சுருதிகள் சான்றாயிருக்கவும் திருமேனியின் இயல்பு உணராதவர்களெல்லாம்,—உலகினில் ஒருவன் என்பர் - உலகத்திலேயுள்ளவருள் ஒருவன் என்று சொல்லுவார்கள்.

குறிப்பு. 1. உலகினை யிறந்து நின்ற தரனுரு:- உருத்திரனுடைய உருவம் உலகினைக் கடந்து நிற்றலால், வேதத்துள் உருத்திரன் விசுவாதிகன் என்று கூறப்பட்டுளன். விசுவம் - உலகம். அதிகன் - மேம்பட்டவன். அதிகம் - மேம்பாடு. உருத்திரன் - சங்காரகாரணனாகிய முதல்வன்.

2. உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடும்:- உலகம் உருத்திரனுடைய திருவுருவிலே தோன்றி ஒடுங்குமாதலால், வேதத்துள் உருத்திரன் விசுவகாரணன் என்று கூறப்பட்டனன். திருவுரு - அருள்வடிவம்.

3. உலகினுக்குயிருமாகி நின்றது:- உலகிற்கு உயிராய் நிற்றலால், வேதத்துள் உருத்திரன் விசுவாந்தரியாமி என்று கூறப்பட்டனன். உலகிற்கு உயிராய் நிற்றலாவது முதல்வன் தான் அசைந்தவழி உலகமும் அசையும்படி எங்குமாய் நிற்றல். விசுவாந்தரியாமி = விசுவம் + அந்தரியாமி. அந்தரியாமி - உள்ளேநின்றியக்குவோன். அந்தர் - உள். யாமி - நடத்துபவன்.

4. உலகுமாய் நிற்றல் - உலகம் தானேயாய் நிற்றல். அங்ஙனம் நிற்றலால், வேதத்துள் உருத்திரன் விசுவரூபி எனப்பட்டனன். விசுவரூபி - உலகத்தை உருவமாகக்கொண்டவன்.

பொழிப்பு. முதல்வன் சிந்திதனுயினும் அசிந்திதனே என்பதற்கு, வேதத்துள் விசுவாதிகன் என்றும், விசுவகாரணன் என்றும், விசுவாந்தரியாமி என்றும், விசுவரூபி என்றுங் கூறப்படும் வாக்கியங்களே சான்றும். இஃதறியாதார் அம்முதல்வனை உலகத்தாருள் ஒருவன் என்பர்.

இதுவுமது.

69 தேவரி னொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாதர்
ஆவது முணரா ராதி யரியயற் கறிய வொண்ணு
மேவுரு நிலையு மோரா ரவனுரு விளைவு மோரார்.

(இ - ள்). திருவுருச் சிவனை - மேற்கூறப்பட்ட திருவுருவத்தையுடைய பரமசிவனை,—தேவரின் ஒருவன் என்பர் - பிரமா விட்டுணு உருத்திரன் என்னும் தேவர் மூவர்களுள் ஒருவன் என்பர். அங்ஙனம் கூறுவோர் அப்பரமசிவன்,—தேவர் மூவராய் நின்றது ஓரார் - மும்மூர்த்திகளாய் அவரை அதிட்டித்து நின்றார் என்று கூறும் புராண வசனத்தினையும் உணரார்,—முதல் உருப்பாதி மாதர் ஆவதும் உணரார் - முதல் உருவமாகிய மாகேசுரவடிவத்திலே பாதியுருவம் சிவனாகவும் பாதியுருவம் பார்வதிதேவியாகவும் இருக்கும் அர்த்தநாரீச்சுரவடிவாதலைக் கூறும் புராண வசனத்தினையும் உணரார்,—ஆதி அரி அயற்கு அறிய ஒண்ணு மேவு உரு நிலையும் ஓரார் - கடவுளராகிய அரிக்கும் அயனுக்கும் அடிமுடி அறிய இயலாத அப்பரமசிவன் கொண்டருளிய இலிங்கத் திருவுருவின்நிலை கூறும் புராண வசனத்தினையும் உணரார்,—அவன் உரு விளைவும் ஓரார் - அப்பரமசிவனது உருவமாகிய இலிங்கத்திருமேனியினின்றும் சகல பிரபஞ்சமும் தோன்றும் என்னும் புராண வசனத்தினையும் உணரார்.

குறிப்பு. 1. தேவர் மூவராய் நின்றதோரார்—"தேவர்கடேவே யோலஞ் .....மூவருமாகி நின்ற மூர்த்தியே யோலமோலம்." (கந்தபுரா).

2. ஆதி யரியயற் கறிய வொண்ணு மேவுரு நிலை:- ஞானகாரமான ஒப்பற்ற இலிங்கமாய்க் குன்றாத கோடிசூரியப் பிரகாசத்தையுடைய இலிங்கத்தின் நடுவே காண்டற்கரிய வடிவைக் கற்பித்திருக்கும் நிலை. இஃது அமூர்த்திசாதாக்கியம் என்றும், திவ்வியலிங்கம் என்றும், மூலத்தம்பம் என்றுஞ் சொல்லப்படும். இவ்விலிங்கத்திலேயே பிரபஞ்சத்தோற்றமும் ஒடுக்கமும உண்டாவதாதலால், "அவனுரு விளைவு மோரார்" என்றார். ஆதி - கடவுள்.

பொழிப்பு. முதல்வன் சிந்திதனுயினும் அசிந்திதனே என்பதற்குப், பிரமா முதலிய மும்மூர்த்திகளாய் நிற்பன் என்றும், அர்த்தநாரீச்சுரவடிவங்

கொள்ளுவன் என்றும், அயன் மால் அறிய வொண்ணு அழல்வடிவானுன் என்றும், இலிங்கத்திருமேனியினின்றுஞ் சகல பிரபஞ்சமுந் தோன்றும் என்றும் கூறும் புராண வசனங்களே சான்ரும். இஃதறியாதார் அம் முதல்வனை மும்மூர்த்திகளில் ஒருவன் என்பர்.

(e). முதல்வன் உருவத்திருமேனிகொள்ளுதற்குக் காரணம்.

70 போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகியா மூட ரெல்லா மும்பரி லொருவ னென்பர்.

(இ-ள்). போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார் - முதல்வன் போகவடிவினனுயிருந்து உயிர்களுக்குப் போகத்தைக் கொடுத்தலையும் உணரார்,—யோகியாய் யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார் - யோகவடிவினனுயிருந்து யோக முத்தி கொடுப்பதையும் உணரார், —வேகியானற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார் - கோபத்தை யுடையவனுனற்போலக் கோரவடிவினனுய் உயிர்கள் செய்த வினைகளைக் கெடுத்தலையும் உணரார்,—ஊகியா மூடர் எல்லாம் - இங்ஙனம் மாறுபட்ட வடிவங்களைக்கொள்ளும் தன்மையினை ஆராய்ந்தறியும் இயல்பில்லாத மூடர் அனைவரும்,—உம்பரில் ஒருவன் என்பர் - அம்முதல்வனைத் தேவரில் ஒரு வன் என்பர்.

குறிப்பு. போகியாயிருப்பது - உமாமகேசுவரமூர்த்தம். யோகியாயிருப்பது - தக்ஷிணமூர்த்திவடிவம். வேகியாயிருப்பது - காமாரிவடிவம். இவை முதல்வனது தடத்தவடிவங்களுள் ஒன்ருகிய மாகேசுவரவடிவபேதங்கள். மாகேசுர்வடிவங்கள் இருபத்தைந்து. அவை சபாபதி, சந்திரசேகரர், உமா மகேசர், இடபாரூடர், கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீ சுரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிர தர், கசமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்ஷிண மூர்த்தி, லிங்கோற்பவர் என்பனவாம்.

பொழிப்பு. முதல்வன்கொண்ட திருமேனிகளிற் சிலதிருமேனி போக வடிவமும், சிலதிருமேனி கோரவடிவமும், சிலதிருமேனி யோகவடிவமு மாகக் கொண்டது முறையே உயிர்களுக்குப் போகம்புரிதற்பொருட்டும், வினையினைக் கெடுத்தற்பொருட்டும், யோகமுத்தி உதவுதற்பொருட்டுமாம்.

இதுவுமது.

71. ஒன்றுடொன் றெவ்வா வேட மொருவனே தரித்துக்கொண்டு
நின்றலா னுலக நீங்கி நின்றன னென்று மோரார்
அன்றியவ் வேட மெல்லா மருள்புரி தொழிலென் ருேரார்
கொன்றது வினையைக் கொன்று நின்றவக் குணமென் ருேரார்.

(இ - ள்). ஒன்றொடு ஒன்று ஒவ்வா வேடம் ஒருவனே தரித்துக்கொண்டு நின்றலால் - அங்ஙனம் போகவடிவும் கோரவடிவும் யோகவடிவுமாகித் தம்முள்ளே மாறுபட்ட பலவடிவங்களை ஒருவனே தரித்துக்கொண்டு நிற்றலால்,—உலகம் நீங்கி நின்றனன் என்றும் ஓரார் - உலகத்திற்கு வேறாய் அப்பாற்பட்டு நின்றனன் என்பதையும் உணரார்,—அன்றி அவ் வேடம் எல்லாம் - அன்றியும் அம்மாறுபட்ட வடிவங்கள் யாவும் கொள்ளுதல்,—அருள்புரி தொழில் என்று ஓரார் - ஆன்மாக்களுக்கு அனுக்கிரகஞ் செய்தற்குக் காரணமான செயல் என்பதையும் உணரார்,—கொன்றது வினையைக் கொன்று நின்ற அக்குணம் என்று ஓரார் - கொல்லுதலாகிய தீமைசெய்வதும் அவரவர் வினையைக் கெடுத்து நன்மை பயப்பித்து நிற்கும் அவ்வருட்குணம் என்பதையும் உணரார்.

குறிப்பு. ஒன்றொடொன் றொவ்வா வேடம்:- போகவடிவமும் கோரவடிவமும் யோகவடிவமும் ஆகிய மூன்றும் ஒன்றோடொன்று மாறுபட்ட வடிவங்களாம். மாயைக்குட்பட்ட உயிர்களுட் சில போகரூபியாயும், சில கோரரூபியாயும், சில யோகரூபியாயும் இருக்குமேயன்றித் தம்முள்ளே மாறுபட்ட மூன்று தன்மையும் ஒருங்கே பொருந்திய உயிர்கள் கிடையா. ஆதலால், மாறுபட்ட இம் மூன்றுவடிவங்களுங் கொள்ளும் முதல்வன் உயிர்களின் தன்மையில்லாதவன் என்பதும், மாயைக்கு அப்பாற்பட்ட அசிந்திதன் என்பதும் பெறப்படும். அங்ஙனமாயினும், உயிர்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும்பொருட்டு அம் முதல்வன் அவ்வப்போது வேண்டப்படும் வடிவங்களைக்கொண்டு சிந்திதனுவன்.

பொழிப்பு. முதல்வன் உருவடிவங்கொள்ளுதல் உயிர்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும் பொருட்டாம். அவ்வடிவங்கள் தம்முள்ளே மாறுபட்ட வடிவங்களாயிருத்தலால், அவன் அசிந்திதன் என்பதும் பெறப்படும்.

(*f*). முதல்வன் உருவத்திருமேனிகொள்ளுதல் அருள்புரிதல் காரணம் என்பதனை விளக்கல்.

72. நாயகன் கண்ண யப்பா னாயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னார்.

(இ - ள்). நாயகன் கண் - முதல்வனது கண்களை,—நாயகி நயப்பால் புதைப்ப - முதல்வி திருவுள மகிழ்ச்சியால் மூடியவிடத்து,—எங்கும் பாய் இருள் ஆகி மூட - எவ்விடமும் பரவிய இருள் வளர்ந்து மூடவும்,—பரிந்து - கருணைகூர்ந்து,—உலகினுக்கு - உலகத்தினுள்ளார்க்கு,—தூய நேத்திரத்தினாலே - தாம் கொண்ட நெற்றிக்கண்ணினாலே,—சுடர் ஒளி கொடுத்த பண்பின் - மிகுந்த பிரகாசத்தினை அளித்த தன்மையால்,—தேயம் ஆர் ஒளிகள்

எல்லாம் - உலகின்கணுள்ள ஒளிகள் எல்லாம்,—சிவன் உருத் தேசது என்னுர் - அச்சிவபெருமானது திருமேனிப்பிரகாசமே என்று உணரார்.

குறிப்பு. முன்னொருகாலத்திலே திருக்கைலாசமலையிலுள்ள பூஞ்சோலையிலே சிவபிரானும் உமாதேவியாரும் பல திருவிளையாடல்களையுஞ் செய்து வீற்றிருக்குஞ் சமயத்திலே, உமாதேவியார் ஆனந்தமேலீட்டாலே சிவபிரானுடைய திருக்கண்களைப் புதைத்தார் என்றும், அப்பொழுது உலகமெங்கும் இருள்பரந்து மூடுதலால் உயிர்கள் வருந்துதலைச் சிவபிரான் அறிந்து நெற்றியிற்கண்ணைக்கொண்டு உலகிற்கு ஒளி கொடுத்தார் என்றும் புராணம் கூறும். முதல்வன் வடிவங்கொள்ளுதல் உயிர்களுக்கு அருள்புரிதல் காரணமாக என்றது இத் திருவிளையாட்டில்வைத்து விளக்கியவாறு காண்க. அன்றியும் முதல்வன் உலகுமாய் நின்றவாறுங் காண்க.

பொழிப்பு. உமாதேவியார் பரமசிவனது திருக்கண்களைப் புதைத்த போது உலகமெங்கும் இருள்மூடியது என்றும், நெற்றிக்கண்ணைக்கொண்டு உலகிற்கு ஒளி கொடுத்தார் என்றும் கூறும் புராணவசனம், முதல்வன் வடிவங்கொள்ளுதல் உயிர்களுக்கு அருள்புரிதற்பொருட்டாம் என்பதை விளக்கும்.

இதுவுமது.

73. கண்ணுதல் யோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறுன்
எண்ணிவேள் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந் துயிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்.

(இ - ள்). கண்ணுதல் யோகிருப்ப - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் யோகநிலையிலிருந்தபொழுது,—வேட்கைக்குக் காமன் நின்றிட - காமவேட்கைக்குக் காரணமாகி மன்மதன் இருக்கவும்,—விண் உறு தேவர் ஆதி - விண்ணுலகத்துள்ள தேவர்கள் முதலாயினோர்,—மெலிந்தமை ஓரார் - காமப்பற்றின்றி வருத்தமுற்றதையும் உணரார்,—மால்தான் எண்ணி வேள் மதனை ஏவ - விட்டுணு அத்துன்பத்தை நீக்கக் கருதி வேட்கைபொருந்திய மன்மதனை ஏவுதல் செய்ய,—எரி விழித்து - அவனை நெற்றிக் கண்ணாற் பார்த்து எரித்து,—இமவான் பெற்ற பெண்ணினைப் புணர்ந்து - இமயமலை அரசன் பெற்ற உமாதேவியைக் கலந்து,—உயிர்க்குப் பேரின்பம் அளித்தது ஓரார் - அவ்வுயிர்களுக்குப் பேரின்பம் அருளியதையும் உணரார்.

குறிப்பு. 1. சனகர் முதலிய முனீந்திரர் நால்வருக்கும் சிவபெருமான் ஞானபாதத்தை உபதேசித்தபொழுது, தமது திருமார்பின்கண்ணே ஒரு திருக்கரத்தைச் சேர்த்தி, மௌன முத்திரை காட்டி, ஒருகணம் ஒருசெயலுமின்றி யோகஞ்செய்வார்போல இருந்தார் என்றும், இங்ஙனம் இருந்தபொழுது ஆடவரையும் மகளிரையும் காமபற்றை விளைத்துப் புணர்த்தற்கு மன்மதன் நிற்கவும், அச்சிவபெருமான் போகவடிவமின்றி யோகவடிவங்

கொண்டு வீற்றிருந்தமைபற்றித், திருமால் முதலிய தேவர்களும் மனிதர்களும் மற்றைச் சீவர்களும் காமப்பற்றும் புணர்ச்சியும் இல்லாது வருத்த முற்றார்கள் என்றும் புராணங் கூறும். முதல்வன் வடிவங்கொள்வது அருள் புரிதல் காரணமாக என்பது இப்புராணவசனத்தாலும் அறியப்படும். அன்றியும் முதல்வன் உலகினுக்குயிராய் நின்ற முறைமையுங் காண்க.

2. இங்கே கூறப்பட்டவந்த உமாமகேசுவரர் தக்ஷிணாமூர்த்தி காமாரி முதலிய வடிவங்களும் பெயர்களும் அவ்வடிவங்களால் நிகழ்ந்த தொழில்களும் முதல்வனது தடத்தவடிவங்களுள் ஒன்றாகிய மாகேசுவரவடிவ பேதங்கள் இருபத்தைந்தனுள்வைத்து ஆகமங்கள் கூற, புராணங்கள் ஸ்ரீகண்டருத்திரர்மேல்வைத்துக் கூறுவது என்னையெனின், ஸ்ரீகண்டருத்திரருக்குரிய வடிவங்களும் பெயர்களுந் தொழில்களும் முதல்வனுக்கும் ஒப்ப உளவாதலினாலாம். மகேசுவரமூர்த்தம் இருபத்தைந்தின் வடிவங்களையே ஸ்ரீகண்டருத்திரருங் கொள்வரன்றி அவருக்கு வேறு வடிவமில்லை அவ்வடிவங்கள், சுத்தமாயையிலே செய்யப்படுந் தொழில்களுக்கு மகேசுவரமூர்த்திக்கும், பிரகிருதிமாயையிலே செய்யப்படுந் தொழில்களுக்கு ஸ்ரீகண்டருத்திரருக்கும், வேண்டப்படுவனவாம். மகேசுவரமூர்த்தி தமது சத்தியினால் அநந்தேசுரரை அதிட்டிக்க, அவர் ஸ்ரீகண்டருத்திரரை அதிட்டித்து நடத்துதலால், மகேசுவரருக்கும் ஸ்ரீகண்டருத்திரருக்கும் வடிவு பெயர் தொழில் ஒன்றாயின.

பொழிப்பு. முதல்வன் யோகவடிவினனாயிருந்தபொழுது தேவர்கள் முதலாயினோர் காமவேட்கையின்றித் துன்புற்றார் என்றும், பின்பு உமாதேவியாரைக் கலந்து போகவடிவினனாய் அவர்கள் துன்பத்தை நீக்கினான் என்றும் கூறப்படும் புராணவசனம், முதல்வன் வடிவங்கொள்ளுதல் அருள் புரிதல் காரணமாக என்பதை விளக்கும்.

(g). உருவத்திருமேனி இன்றியமையாதது.

**74.** படைப்பாதித் தொழிலும் பத்தர்க் கருளும்பா வனையு நூலும்
இடப்பாக மாத ராளோ டியைந்துயிர்க் கின்ப மென்றும்
அடைப்பானு மதுவு முத்தி யளித்திடும் யோகும் பாசந்
துடைப்பானுந் தொழிலு மேனி தொடக்கானேற் சொல்லொ
[ணாதே.

(இ-ள்). படைப்பு ஆதித் தொழிலும் - சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களும்,—பத்தர்க்கு அருளும் பாவனையும் - பத்தருக்கு உபதேசித்தருளும் தியானமும்,— நூலும் - வேதாகமங்களை உபதேசித்தலும்,— இடப்பாகம் மாதராளோடு இயைந்து என்றும் உயிர்க்கு இன்பம் அடைப்பானும் அதுவும் - திருமேனியின் வாமபாகம் உமாதேவியாரோடு பொருந்தியிருந்து எஞ்ஞான்றும் உயிர்களுக்குப் போகத்தைக் கொடுத்தருளும் செயலும்,—முத்தி அளித்திடும் யோகும் - முத்தியைக் கொடுக்குஞ் சிவயோகமும்,—பாசம் துடைப்

பானும் தொழிலும் - பாசத்தை நீக்குஞ் செயலும் ஆகிய இவையெல்லாம், —மேனி தொடக்கானேல் - முதல்வன் அருட்டிருமேனிகொள்ளானாயின், —சொல்ல ஒண்ணாது - உண்டென்று சொல்லக்கூடாது.

குறிப்பு. 1. படைப்பாதித்தொழில் - ஸ்ரீகண்டருத்திரராற் செய்யப் படும் பஞ்சகிருத்தியங்கள். இவை, மேற்கூறியவாறு மகேசுவரமூர்த்தி அநந் தேசுவரரை அதிட்டிக்க, அநந்தேசுவரர் ஸ்ரீகண்டருத்திரரை அதிட்டித்துச் செலுத்த நடைபெறுவன.

2. பத்தர்க் கருளும் பாவனை - ஸ்ரீகண்டருத்திரரால் உபதேசிக்கப்படுஞ் சிவத்தியானம்.

3. நூல் - ஸ்ரீகண்டருத்திரர் தக்ஷிணாமூர்த்தியாயிருந்து வேதாகமங்க ளின் பொருளை உபதேசித்தல். வேதாகமங்களை அருளுதல் எனினும் பொ ருந்தும்.

4. இடப்பாக மாதராளோ டியைந்துயிர்க் கின்பமென் றுமடைப்பானு மதுவும் - ஸ்ரீகண்டருத்திரர் உமாமகேசுவரவடிவினராயிருந்து உயிர்களுக் குப் போகம் அருளுதல்.

5. முத்தி யளித்திடும் யோகும் - ஸ்ரீகண்டருத்திரர் தக்ஷிணாமூர்த்திவடி வினராயிருந்து பக்குவருக்குச் சிவயோகத்தை அருளுதல்.

6. பாசந் துடைப்பானுந் தொழில் - ஸ்ரீகண்டர் காமாரி முதலிய வடி வினராயிருந்து பாசங்களை நீக்குதல்.

இவையெல்லாம் முதல்வன் மகேசுவரவடிவங் கொள்ளானேல் நிகழா வாம். ஆதலால் உருவத்திருமேனி வேண்டப்படும் என்பது.

பொழிப்பு. படைப்பு முதலிய பஞ்சகிருத்தியங்கள் செய்தற்பொருட் டும், பத்தர் தியானபாவனை செய்தற்பொருட்டும், வேதாகமங்களின் பொ ருளை உணர்த்தற்பொருட்டும், ஆன்மாக்களுக்குப் போகத்தைக் கொடுத்துப் பாசத்தைக் கெடுத்து முத்தியை அளித்தற்பொருட்டும், முதல்வன் உருவத் திருமேனிகொள்ளவேண்டியது இன்றியமையாததாம்.

### 3. முதல்வனது அருவத்திருமேனி அருவுருவத்திருமேனிகளின் உண்மையும் இயல்பும்.

**75.** உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது
திருமேனி யுபயம் பெற்றோஞ் செப்பிய மூன்று நந்தங்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே.

(இ - ள்). உருமேனி தரித்துக் கொண்டது என்றலும் - உருவத்திரு மேனி தரித்துக்கொண்டதென்றவளவிலே,—உரு இறந்த அருமேனி அது வும் கண்டோம் - உருவம் ஒடுங்குதற்குக் காரணமாகிய அருவத்திருமேனி

யின் உண்மையும் கண்டோம்,—அரு உரு ஆனபோது திருமேனி உபயம் பெற்றோம் - அந்த அருவம் எனப்படும் சூக்குமப்பொருள் பின் உருவம் எனப்படும் தூலநிலை அடையும்போது (அவ்விருநிலைக்கும் பொதுவாகிய தோர் நிலையும் உண்டென்பதுபற்றி) அருவுருவத்திருமேனியின் உண்மையும் பெற்றோம்,—செப்பிய மூன்றும் - இங்ஙனங் கூறிய மூன்று திருமேனியும்,—நம் தம் கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு - நமது பிறவிக்கேதுவாகிய மாயாகாரிய வுருவத்தை ஒழித்தற்கு முதல்வன் கொண்ட கருணைவடிவங்களாம்.

குறிப்பு. உருவம் எனப்படுந் தூலப்பொருள்களெல்லாவற்றிற்கும் அருவம் எனப்படுஞ் சூக்குமநிலை உண்டென்பது சற்காரியவாதம். அதனால், உருமேனி உண்டு என்பது பெறப்படவே, அதன் சூக்குமநிலையாகிய அருவத்திருமேனி உண்டென்பதும் பெறப்படும். சூக்குமப்பொருள் தூலமாகும் பொழுது, இடையிலே சூக்குமமுமாகாது தூலமுமாகாது அவ்விரண்டற்கும் பொதுவாவதோர் நிலையும் உண்டென்பது பெறப்படுதலால், அருவுருவத்திருமேனி உண்டென்பதுஞ் சித்திக்கும். இவை மூன்றும் ஒருதன்மையவேயாதலின், அருள்வடிவேயாம்.

பொழிப்பு. உருவத்திருமேனியுளதாகவே, அருவத்திருமேனியும் அருவுருவத்திருமேனியும் உண்டென்பதும், அவையும் அருள்வடிவே என்பதும் அறியப்படும்,

4. முதல்வனது உபசாரத்திருமேனி, (76-79).

(a). அத்துவாவடிவம்.

76 அத்துவா மூர்த்தி யாக வறைகுவ தென்னை யென்னின்
நித்தனாய் நிறைந்த வற்றி னீங்கிடா நிலைமை யானுஞ்
சித்துட னசித்திற் கெல்லாஞ் சேட்டித னாத லானும்
வைத்தவா மத்து வாவும் வடிவென மறைக ளெல்லாம்.

(இ-ள்). (மேற்கூறியவாறு முதல்வனுக்கு அருள்வடிவேயன்றி மாயைவடிவில்லையாயின்) மறைகள் எல்லாம் - வேதாகமங்களெல்லாம்,—அத்துவா மூர்த்தியாக அறைகுவது என்னை என்னின் - அத்துவாக்கள் ஆறும் அம்முதல்வனுக்கு வடிவமாகக் கூறுதல் என்னையெனின்,—நித்தனாய் - நித்தியனாய் அவற்றிற்கு வேறாயும்,—நிறைந்து அவற்றின் நீங்கிடா நிலைமையானும் - எங்கும் வியாபகமாய் அவற்றைவிட்டு நீங்காது ஒன்றாயும் நிற்குந் தன்மையாலும்,—சித்துடன் அசித்திற்கு எல்லாம் சேட்டிதன் ஆதலானும் - சித்துப்பொருள் சடப்பொருள்கள் எல்லாவற்றையும் உடனாய்நின்று செலுத்துபவனாதலாலும்,—அத்துவாவும் வடிவு என வைத்தவாம் - அத்துவாக்களும் வடிவு என அவ்வேதாகமங்கள் உபசாரமாகக் கூறினவாம்.

குறிப்பு. இதுவரையில், முதல்வனுக்குச் சத்திவடிவேயன்றி மாயை வடிவு இல்லை என்பது சாதிக்கப்பட்டது. வேதாகமங்களிலே மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை என்னும் அத்துவாக்கள் ஆறும் முதல்வனுக்கு வடிவமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அத்துவாக்கள் மாயாகாரியம். அத்துவாக்கள் முதல்வனுக்கு வடிவம் எனவே மாயாகாரியவடிவம் உண்டென்பது பெறப்படும். அப்படியிருக்க மாயாகாரியவடிவம் இல்லை என்பது எவ்வாறெனின், முதல்வனுடைய திரோதானசத்தி அத்துவாக்களை வியாபித்துக் கலந்துநிற்றலால் அவையாகியும், பொருட்டன்மையால் அவை சித்தாகிய முதல்வனின் வேறுபட்ட சடப்பொருள்களாதலால், முதல்வன் அவற்றிற்கு வேறாகியும், அச்சத்தி அவ்வத்துவாக்களைச்செலுத்தி உடனாகியும் நிற்றலால், அத் திரோதானசத்திக்கு அவ்வத்துவாக்களோடுள்ள சம்பந்தம் நோக்கி அவ்வத்துவாக்களை வடிவம் என்று வேதாகமங்கள் கூறும். அது உபசாரமாம். ஆதலால் முதல்வனுக்குச் சத்திவடிவேயன்றி மாயாகாரியவடிவம் இல்லை என்பது தெளியப்படும்.

அத்துவாக்களுள்ளே மந்திரம் இரத்தமாகவும், பதங்கள் மூடியாகவும், வன்னம் தோலாகவும், புவனம் உரோமமாகவும், தத்துவங்கள் எழுவகைத் தாதுவாகவும், கலை அவயவமாகவும் கூறப்படும். "மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத், தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையால், ஒத்தபுவனத் துருவே யுரோமமாத், தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த, கலையே யவயவமாக் காட்டுமத்து வாவின், நிலையே வடிவமா நின்றோய்." (கந்தர்கலிவெண்பா).

பொழிப்பு. வேதாகமங்களிலே அத்துவாக்கள் ஆறும் முதல்வனுக்கு வடிவமென்றது என்னையெனின், அவனுடைய திரோதானசத்தி அவற்றோடு கலந்து எல்லாமாகியும், பொருட்டன்மையால் வேறாகியும், செலுத்துதலால் உடனாகியும் நிற்றலால், அச்சத்திக்கு அவற்றோடுள்ள சம்பந்தம் நோக்கி உபசாரமாகக் கூறப்படுவதாம்.

(b). மந்திரவடிவம்.

77 மந்திர மத்து வாவின் மிகுத்தொரு வடிவ மாகத்
தந்ததெ னரனுக் கென்னிற் சகத்தினுக் குபாதா னங்கள்
விந்துமோ கினிமான் மூன்று மிவற்றின்மே லாகி விந்துச்
சிந்தையா தீத மான சிவசத்தி சேர்ந்து நிற்கும்.

78 சுத்தமாம் விந்துத் தன்னிற் றோன்றிய வாத லானுஞ்
சத்திதான் பிரேரித் துப்பின் றனதிட் டித்துக் கொண்டே
அத்தினாற் புத்தி முத்தி யளித்தலா லரனுக் கென்றே
வைத்தவா மந்தி ரங்கள் வடிவென மறைக ளெல்லாம்.

(இ - ள்) அரனுக்கு - முதல்வனுக்கு,—அத்துவாவின் அத்துவாக்களுள்,—மந்திரம் ஒரு வடிவம் ஆக - மந்திரத்தை ஒரு வடிவமாக,—இருந்தது என் என்னின் - சிறந்தெடுத்தோதியது என்னையெனின்,—சகத்திலுக்கு உபாதானங்கள் - உலகிற்கு முதற்காரணங்கள்,—விந்து மோகினி மான் மூன்றும் - சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை என மூன்றும்,—இவற்றின் விந்து மேலாகி - இம்மூன்றனுள்ளே சுத்தமாயை உத்தமமானதாய்,—சிந்தை ஆர் அதீதமான சிவசத்தி சேர்ந்து நிற்கும் - மனத்தினால் அறிதற்கெட்டாத சிவசத்தி அதனைப் பொருந்தி நிற்றலாலும்,—சுத்தமாம் விந்து தன்னில் - சுத்தமாயையிலே,—தோன்றிய ஆதலாலும் - தோன்றிய முதன்மையுடையனவாதலாலும்,—சத்திதான் பிரேரித்து - அச்சிவசத்தி சாதகர் கணிக்கும்படி அவற்றைச் செலுத்தி,—பின் தான் அதிட்டித்துக்கொண்டு - கணித்தபின்பு தான் அவற்றை நிலைக்களமாகக்கொண்டு நின்று,—அத்தினால் புத்தி முத்தி அளித்தலால் - அவற்றின் வாயிலாகச் சாதகருக்குப் போகம் முத்தி என்னும் இரண்டினையும் அளித்தலாலும்,—மறைகள் எல்லாம் - வேதாகமங்களெல்லாம்,—மந்திரங்கள் அரனுக்கு வடிவு என - மந்திரங்கள் முதல்வனுக்கு ஒரு வடிவம் என,—வைத்தவாம் - கூறினவாம்.

குறிப்பு. முதல்வனுக்குரிய அத்துவாவடிவங்கள் ஆறனுள்ளே, மந்திர வடிவமே மிக்கது என்று வேதாகமங்கள் சொல்லும். மந்திரங்களுள்ளே ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம், இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அத்திரம் என்னும் பதினொன்றும் முக்கிய மந்திரங்களாம். இவை முதல்வனுடைய சதாசிவமூர்த்தியுடைய சுவரூபம் என்றும், பிரிவின்றியிருக்குஞ் சத்திகள் என்றுஞ் சொல்லப்படும். (பௌஷ். பதிபட. 54).

இவற்றுள்ளே ஈசானம் முதலிய ஐந்தும் பஞ்சப்பிரமம் எனவும்படும். இவற்றின் இயல்பு வருஞ் செய்யுளிற் காண்க. ஏனைய மந்திரங்கள் ஆறனுள்ளே இருதயம் ஞானம் என்றும், சிரசு மிக்க உயர்ச்சி என்றும், சிகை வன்மையுமுடைமை என்றும், கவசம் காத்தல் என்றும், நேத்திரம் எல்லாம் அறிகை என்றும், அத்திரம் தாங்கற்கரிய பிரதாபம் என்றும் பௌஷ்கரம் சொல்லும், (பௌஷ். பதிபட. 66, 67). இனி இருதயம் முதலியவைகளுக்கு இருதயம் முதலிய அங்கங்கள் கூறுவாருமுளர். அதனால் இருதயம் முதலியன சடங்க மந்திரம் எனவும்படும். சட் + அங்கம் = சடங்கம். சட் - ஆறு.

இம்மந்திரங்கள் பதினொன்றையும் முதல்வனுடைய திரோதானசத்தி தொழில்வேறுபாட்டால் ஈசானி முதலிய பெயருடையனவாய் நின்று செலுத்தி அதிட்டித்து நடாத்தும். இந்தச் சம்பந்தம்பற்றி இம்மந்திரங்களை முதல்வனுக்கு வடிவமாகக் கூறுவது உபசாரம்.

பொழிப்பு. சிவசத்தி சேர்ந்து நிற்கும் சுத்தமாயையிலே தோன்றிய காரணத்தாலும், சிவசத்தியால் அதிட்டிக்கப்பட்டு சாதகருக்குப் போக

மோக்ஷங்கள் கொடுத்தலாலும், மந்திரங்கள் முதல்வனுக்கு வடிவம் என்று வேதாகமங்கள் கூறும்.

(c). பஞ்சப்பிரம மந்திரவடிவம்.

79. மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேணீ
முந்திய தோற்றத் தாலு மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே.

(இ-ள்). மந்திர மதனில் - மந்திரங்களுள்ளே,—பஞ்ச மந்திரம் வடிவமாக - பஞ்சப்பிரமமந்திரம் முதல்வனுக்கு வடிவமாக,—தந்திரம் சொன்ன ஆறு இங்கு என்னெனின் - ஆகமங்கள் சொல்லியநெறி இங்கே என்ன காரணமெனின்,—சாற்றக் கேள் நீ - சொல்லக் கேட்டி,—முந்திய தோற்றத்தாலும் - முற்பட்ட தோற்றத்தினாலும்,—மந்திர மூலத்தாலும் - மற்றைய மந்திரங்களுக்குக் காரணமாயிருத்தலாலும்,—அந்தம் இல் சத்தி - அழிவில்லாத சத்திகளாகிய பஞ்சப்பிரம மந்திரங்களையும்,—ஆதிக்கு இசைத்தலும் ஆகும் - முதல்வனுக்கு வடிவம் என்று சொல்லுதலும் முறையாகும்.

குறிப்பு. 1. மந்திர மதனுள் - சப்தகோடி மந்திரங்கள்.

2. பஞ்சமந்திரம் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்பன. ஈசானம் - சிரசு. தற்புருடம் - முகம். அகோரம் - இருதயம். வாமதேவம் - குஹ்யம் (இரகசியம்). சத்தியோசாதம் - பாதம். பஞ்சமந்திரம் பஞ்சப்பிரமம் எனவும் படும்.

ஈசானம் - உலகமெல்லாவற்றையும் ஆளுதல்செய்து அருள்செய்வது. ஈச் - ஆளுதல். ஆன என்பது விகுதி.

தற்புருடம் - தேவசரீரம் மனுடசரீரம் முதலிய அந்தந்தச் சரீரங்களிலே அதிட்டித்து நிற்பது. தத் - அந்த. புருஷம் - புரத்திலிருப்பது. புரம் - சரீரம்.

அகோரம் - சாந்தமாயிருப்பது. கோரம் - கடுமை. அ - இன்மை.

வாமதேவம் - அறம் பொருளின்பங்களை ஆன்மாக்களுக்குக் கொடுக்கும் ஒளிமயமானது. வாமம் - அறம் பொருளின்பம். தேவம் - ஒளியுடையது.

சத்தியோசாதம் - உடம்பை உயிர்களுக்கு உடனே தோற்றுவிப்பது. சத்திய - உடனே. சாதம் - பிறப்பு. (மிருகேந் - பதிலக்ஷண). இவற்றுள்ளே சிலவற்றிற்குப் பௌட்கரம் வேறு பொருள் கூறும். இவை ஐந்தும் போகசிவத்துக்கு முகங்களாயுமிருக்கும். (பௌஷ். பதிபட).

3. முந்திய தோற்றத்தாலும் - மந்திரங்களெல்லாவற்றிற்கும் முன்னுகச் சுத்தமாயையிலே தோன்றுதல்.

பொழிப்பு. ஈசானம் முதலிய பஞ்சமந்திரங்களும் ஏனைய மந்திரங்களுக்கெல்லாம் முன்னர்த் தோன்றினவாதலாலும், அவற்றிற்குக் காரணமாயிருத்தலாலும், அவை முதல்வனுக்கு வடிவமாகக் கூறப்பட்டன.

(d). பிரமன் முதலிய மும்மூர்த்திகளின் வடிவங்களை முதல்வனது வடிவங்கள் என்பது உபசாரம்.

80 அயன்றனை யாதி யாக வரனுரு வென்ப தென்னை
பயந்திடுஞ் சத்தி யாதி பதிதலாற் படைப்பு மூலம்
முயன்றன ரிவரே யாயின் முன்னவ னென்னை முற்றும்
நயந்திடு மவனி வர்க்கு நண்ணுவ தோரோவொன் றுமே.

(இ - ள்). அயன்தனை ஆதியாக - பிரமாவின் வடிவம் முதலாகக் கிருத்திய கர்த்தாக்களின் வடிவங்களையும்,—அரன் உரு என்பது என்னை - முதல்வன் கொண்ட வடிவங்கள் என்று வேதாகமங்கள் கூறுவது எற்றுக்கு;—பயந்திடும் சத்தி ஆதி பதிதலால் - செநநி முதலிய சிவசத்திகள் அவரிடத்தே பதிந்து நின்று செலுத்துதலால் அவ்வாறு கூறப்பட்டதாம்,—படைப்பு மூலம் இவரே முயன்றனர் ஆயின் - அங்ஙனமின்றிப் படைப்பு முதலிய தொழில்களைப் பிரமன் முதலியோரே செய்வர் என்று சொல்லின்,—முன்னவன் என்னை - முதல்வன் எதன்பொருட்டு வேண்டப்படுவன். ஆதலால், —அவன் முற்றும் நயந்திடும் - அம்முதல்வன் ஐந்தொழிலுஞ் செய்வன்,—இவர்க்கு நண்ணுவது ஒரோவொன்று ஆம் - இவர்க்கு அடையச்செய்வது ஒவ்வொரு தொழிலேயாம்.

குறிப்பு. 1. அயன்றனை யாதியாக:- மகேசுவர சதாசிவமூர்த்தங்கள் பரமசிவனது சுதந்திரவடிவங்களாதலால், இங்கே "அயன்றனையாதியாக" என்பது பிரமா விட்டுணு உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளின் உருவங்களையே குறித்து நின்றது. உருத்திரன் பிரகிருதி புவனாந்தம் சங்கரிக்குஞ் சீகண்டருத்திரன்.

2. அரனுரு - சுத்தமாயா புவனாந்தம் சங்கரிக்குஞ் சங்காரகாரணனாகிய பரமசிவனுடைய உருவம்.

3. பயந்திடுஞ் சத்தியாதி:- செநநி உரோதயித்திரி ஆரிணி என்பன. கிரியாசத்தி ஒன்றே தொழில் வேறுபாட்டால் மூன்றாக எண்ணப்படும். (செ. 81. ஞானப்பிர). செநநி பிரமனை அதிட்டித்து நின்று பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணமாயிருக்கும். உரோதயித்திரி விட்டுணுவை அதிட்டித்து நின்று ஆன்மாக்களுக்குப் போகநியமனஞ் செய்யும். திதியும் திரோதானமும் அதன் தொழில்கள். ஆரிணி உருத்திரனை அதிட்டித்து நின்று சங்காரஞ் செய்யும். சங்காரமும் அனுக்கிரகமும் அதன் தொழில்கள். இம்மூன்று சத்திகளும் சீகண்டருத்திரரிடத்திற் பதிந்து நின்று பிரகிருதிக்குட்பட்ட பஞ்சகிருத்தியங்களையும் நடத்தும். அங்ஙனமாயினும் சங்காரம் உருத்திர

னது பிரதான விருத்தியமாம். பயத்தல் - தோற்றுவித்தல். பயந்திடு சத்தி - தோற்றுவிக்குஞ்சத்தி, செநநி.

4. நண்ணுதல் - சேர்தல், பொருந்தல்.

பொழிப்பு. பிரம விட்டுணு உருத்திரர்களிடத்து முதல்வனது சத்திகள் பதிந்து நின்று செலுத்துதலால், அவர் உருவங்கள் முதல்வனுருவோடொப்பவைத்துக் கூறப்படும். அவ்வாறு சத்திகளாற் செலுத்தப்படாது பிரமன் முதலியோரே படைப்பாதி தொழில்களைச் செய்வர் என்று சொல்லின், முதல்வன் வேண்டுவதில்லை ஆதலால் முதல்வனே முத்தொழிலுஞ் செய்வன். அவனது சத்திகளால் அதிட்டிக்கப்பட்டுப் பிரமன் முதலியோர் ஒவ்வொரு தொழிலைச் செய்வர்.

---

II. அநாதி முத்த சித்தாக்ய சத்தியினது இலக்கணம். (81-84).

இப்பிரிவில் அடங்கிய விஷயங்கள்:—

1. சத்தி ஒன்று, தொழில் வேறுபாட்டாற் பல, (81).
2. சத்தியின் வடிவம், (82).
3. சத்தியின் வகை, (83).
4. சிவசமவாதிகள் ஆசங்கையும் மறுப்பும், (84).

1. சத்தி ஒன்று, தொழில் வேறுபாட்டாற் பல.

81. சத்திதான் பலவோ வென்னிற் றானொன்றே யநேக மாக
வைத்திடுங் காரி யத்தால் மந்திரி யாதிக் கெல்லாம்
உய்த்திடு மொருவன் சத்தி போல ரனுடைய தாகிப்
புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவ னினைந்த வாறாம்.

(இ - ள்). சத்திதான் பலவோ என்னின் - சத்திகள் அநேகமோ என்று கேட்கின்,—தான் ஒன்றே காரியத்தால் அநேகமாக வைத்திடும் - சத்தி ஒன்றே பிரமன் முதலியோரிடத்து நின்று செய்யுந் தொழில் வேறுபாட்டாற் செநநி முதலிய பல சத்திகளாக வைத்து எண்ணப்படும்,—மந்திரி ஆதிக்கு எல்லாம் உய்த்திடும் ஒருவன் சத்திபோல் - அது அமைச்சர் படைத்தலைவர் பாடிகாவலர் முதலாயினோரிடத்துத் தொழில் வேறுபாட்டாற் பல வகைப்பட நின்று செலுத்தும் அரசனது சத்தி ஒன்றாயிருத்தல்போலாம்,—அரனுடையதாகி - அச்சத்தி முதல்வனோடு பிரிவின்றி நின்று,—புத்தி முத்திகளை எல்லாம் புரிந்து - போக மோட்சங்களையெல்லாம் அருளி,—அவன் நினைந்தவாறு ஆம் - அம்முதல்வன் நினைந்தபடி நிற்பதாம்.

குறிப்பு. 1. மந்திரி யாதிக் கெல்லாம்.........:- அரசனுடைய சத்தி ஒன்றே மந்திரிகள் படைத்தலைவர் பாடிகாவலர் முதலாயினோரிடத்துநின்று தொழில் செய்யும்பொழுது அத்தொழில் வேறுபாட்டாற் பல வேறுவகைப்

பகின்ற தன்மை போலச், சிவசத்தி ஒன்றேயாயினும், அயனிடத்து நின்று படைத்தற்றொழில் செய்யும்பொழுது சௌநி எனவும், அரியினிடத்து நின்று காத்தற்றொழில் செய்யும்பொழுது உரோதயித்திரி எனவும், இவ்வாறு பல வேறுவகைப்படும். அவர் செய்யுஞ் செயல்கள் முதல்வன் நினைந்தபடியன்றி ஆகாமையால், அவரிடத்து நின்று நடத்துவது சிவசத்தியே என்பது பெறப்படும்.

தக்கன் வேள்விசெய்தபொழுது, அயன் மால் முதலாயினோர் அதற்குத் துணைவராய் நின்றும், முதல்வன் நினைந்தபடி அவ்வேள்வி அழிக்கப்பட்டதாயிற்று. மார்க்கண்டேயமுனிவரது வாழ்நாள் முடிவுபெற அவருயிரைக் கவர்தற்குக் காலன் முயன்றும், அவன் எண்ணப்படியாகாமல் அரன் நினைந்தவாறு நீடிய வாழ்நாள் அம்முனிவருக்கு வந்தது. அமுதம் பெறும்படி பிரமா விட்டுணு முதலாயினோர் பாற்கடலைக் கடைந்தபொழுது, அவர் நினைந்தபடி ஆகாமல் அரன் நினைந்தபடி ஆலகாலவிஷம் தோன்றிற்று. இந் நிகழ்ச்சிகளால் அரன் நினைந்தவாறன்றி வேறு ஒன்று ஆகாதென்பது இனிது புலப்படும்.

2. சௌநி முதலிய பேதங்களெல்லாம் சிவசத்திக்குத் தடத்தவடிவங்களாம்.

பொழிப்பு. அரசன் சத்தி ஒன்றே மந்திரி முதலாயினோரிடத்துநின்று செய்யுந் தொழில் வேறுபாட்டாற் பல வேறுவகைப்பட்டாற்போல, சிவசத்தி ஒன்றே அயன் முதலாயினோரிடத்து நின்று செய்யுந் தொழில் வேறுபாட்டாற், சௌநி முதலியனவாய்ப் பல வேறுவகைப்படும். அச்சத்தி முதல்வனோடு பிரிவின்றி நின்று அம்முதல்வன் நினைந்தபடி போகமோட்சங்களைக் கொடுக்கும்.

## 2. சத்தியின் வடிவம்.

82 சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகும்
உய்த்திடு மிச்சை செய்தி யிவைஞானத் துளவோ வென்னின்
எத்திற ஞான முள்ள தத்திற மிச்சை செய்தி
வைத்தலான் மறைப்பின் ஞானன் மருவிடுங் கிரியை யெல்லாம்.

(இ - ள்). சத்திதன் வடிவு எது என்னின் - சிவசத்தியின் சொரூபம் யாதெனின்,—தடை இலா ஞானம் ஆகும் - அது சுத்தஞானமாயிருக்கும், —உய்த்திடும் இச்சை செய்தி - அச்சத்தி செலுத்தும் இச்சை கிரியைகள் வேற்றுத்தொழில்களாதலால்,—இவை ஞானத்து உளவோ என்னின் - இவை அந்த ஞானத்தினின்றுந் தோன்றுவனவோ என்னின்,—ஞானம் எத்திறம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி வைத்தலான் - ஞானம் எவ்வாறு உளதோ அவ்வாறு இச்சை கிரியைகளும் உள என்று வேதாகமங்கள் சொல்லுதலால்,—கிரியை எல்லாம் - படைப்பாதி தொழில்கள்செய்யுங்

பரிபாகசத்தி முதலிய சத்திகள் யாவும்,—மறைப்பு இல் ஞானதேல் மருவிடும்-முற்கூறிய சுத்தஞானமாகிய பராசத்தியினுற் காரியப்படும்.

குறிப்பு. 1. தடையிலா ஞானம்-மறைத்தலில்லாத ஞானம், சுத்தஞானம். அதுவே பராசத்தி எனப்படும். ஆணவமலம் பாகம்வருதற்பொருட்டு உயிர்களுக்குத் தனுவாதிகளைக் கொடுத்துக் கன்மங்களை நுகர்வித்து மறைத்தற்ருெழிலைச் செய்யுஞ் சிவசத்தி தடைசெய்யும் ஞானமாகிய திரோதானசத்தியாம். அங்ஙனம் மறைத்தலின்றி மலம் பரிபாகமான ஆன்மாக்களுக்கு அனுக்கிரகம்மாத்திரம் செய்யுஞ் சிவசத்தி தடையிலாஞானமாகிய பராசத்தியாம். தடை-தடுத்தல், மறைப்பு. "சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகும்" (சிவப்பிர. செ. 75). தடையிலா ஞானம் "மறைப்பில்லாத அறிதற்ருெழிலைப் பண்ணும் அறிவு" என்று ஞானப்பிரகாசரும், "உயிர்களுக்கு அநுக்கிரகமாத்திரங் குறித்துப் பொதுவகையால் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானம்" என்று சிவஞானமுனிவருங் கூறுவர்.

2. உய்த்திடு மிச்சை செய்தி யிவை ஞானத்துளவோ வென்னின்:-மேற்செய்யுளிற் சிவசத்தி "அரனுடையதாகி அவன் நினைந்தவாறு புத்தி முத்திகளைப் புரியும்" எனக் கூறப்பட்டமையால், அச்சத்தியின் வியாபாரம் இச்சை கிரியைகள் என்பது பெறப்படும். அஃது அங்ஙனமாகவும், இச்செய்யுளில் அச்சிவசத்தியின் சொரூபம் தடையிலா ஞானம் எனவே, இந்த ஞானத்துக்கும் இச்சை கிரியைகளுக்கும் வேறுபாடுளதாதலின், இச்சை செய்தி ஞானத்துளவோ என்னும் ஆசங்கை உண்டாயிற்று. அவ்வாசங்கையைப் பரிகரித்தற்பொருட்டு "எத்திற ஞானமுள்ள தத்திற மிச்சை செய்தி" என்ருர்.

பொழிப்பு. சிவசத்தியின் சொரூபம் சுத்தஞானமாம். அதுவே பராசத்தி எனப்படும். அச்சத்தியே கிரியாசத்தி முதலிய சத்திகளனைத்தையுங் காரியப்படுத்தும்.

### 3. சத்திபேதங்களும் அவற்றின் தொழிலும்.

**83.** ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன் ருகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கரு ணேச மாகும்
நன்றெலா ஞான சத்தி யானயந் தறிவ னுதன்
அன்றருட் கிரியை தன்ஞ லாக்குவ னகில மெல்லாம்.

(இ-ள்). சத்தி ஒன்றதாய்-அப்பராசத்தியானது பொதுவகையால் ஒன்ருய்,—இச்சா ஞானக் கிரியை என்று ஒரு மூன்ருகி நின்றிடும்-ஐந்தொழிலுஞ் செய்தலைக் குறித்துச் சிறப்புவகையால் வியாபரிக்குமிடத்துத் திரோதானசத்தி என நின்று இச்சை ஞானம் கிரியை என மூவகைப்பட்டு வியாபரிக்கும்,—இச்சை-அவற்றுள் இச்சாசத்தியாவது,—(நாதன்) உயிர்க்கு அருள் நேசம் ஆகும்-முதல்வன் ஆன்மாக்களுக்கு மலத்தை நீக்கி முத்

தியைக் கொடுத்தற்பொருட்டுக் கொண்ட விருப்பமாம்,—என்று எலாம் ஞானசத்தியால் (நாதன்) நயந்து அறிவன் - அவ்வான்மாக்கள் முத்தியைப் பெறும்பொருட்டுச் செய்யவேண்டிய உபாயங்களையெல்லாம் ஞானசத்தியால் முதல்வன் விரும்பி அறிவன்,—அன்று - அங்ஙனம் அறிந்தபொழுது,—அருள் கிரியை தன்னால் - அந்த ஞானத்தின் வேறல்லாத கிரியாசத்தியால்,—அகிலம் எல்லாம் நாதன் ஆக்குவன் - பிரபஞ்சமெல்லாவற்றையும் முதல்வன் சங்கற்பித்துச் செய்வன்.

குறிப்பு. சத்தியின் வியாபாரபேதமாவது விரும்புதலும் அறிதலும் செய்தலுமாம். விரும்புதலாவது உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவத்தை அளித்தற்கணுள்ள இரக்கம். அதுவே இச்சாசத்தி எனப்படும். இரக்கங் கொண்டபின் மலத்தை நீக்குதற்குஞ் சிவத்தை அளித்தற்குஞ் செய்யவேண்டிய உபாயங்களை அறியுஞ் சத்தி ஞானசத்தி எனப்படும். உபாயங்களாவன: படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்பன. பின் அவ்வுபாயங்களைச் செய்யுஞ் சத்தி கிரியாசத்தி எனப்படும். அக்கிரியாசத்தியும் ஐந்தொழில்செய்யும்பொழுது அவ்வக்காரியபேதத்தாற் செளரி உரோதயித்திரி ஆரிணி என மூவகைப்படும்.

இரங்குதலும் உபாயங்களை அறிதலும் அவற்றைச்செய்தலும் ஆகிய மூன்றும் ஞானத்தின் வியாபாரபேதமேயன்றி வேறன்மையால், இச்சா ஞானக் கிரியாசத்திகள் முதல்வனது ஞானமாகிய பராசத்தியின் வியாபாரபேதமேயன்றி வேறல்லனவாதல் பெறப்படும். இதனாற் சத்தி ஒன்றே என்பதும், அச்சத்தியினாலே முதல்வன் உலகங்களெல்லாவற்றையுந் தோற்றுவித்து நிறுத்தி அழிப்பன் என்பதும் உணரப்படும்.

பொழிப்பு. பராசத்தியானது பொதுவகையால் ஒன்றாய், இச்சை ஞானம் கிரியை என்னும் வியாபாரபேதத்தால் மூவகைப்படும். உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவத்தை அளிக்கும்பொருட்டுப் பரமசிவன் கொண்ட கருணை இச்சாசத்தியும், அதற்குச் செய்யவேண்டிய உபாயங்களை அறியும் அறிவு ஞானசத்தியும், அவ்வுபாயங்களைச் சங்கற்பித்துச் செய்யுஞ் சங்கற்பம் கிரியாசத்தியுமாம்.

### 4. சிவசமவாதிகள் ஆசங்கையும் மறுப்பும்.

84. சீவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்
ஆவனென் றிடின நாதி மலமிவற் றினைம றைக்குங்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் றாகும்.

(இ-ள்). சீவனும் இச்சா ஞானக் கிரியையால் சிவனை ஒப்பன் ஆவன் என்றிடின் - உயிர்களும் இச்சை ஞானம் கிரியை என்னும் மூன்று சத்திகள் உடையவாதலின் முதல்வனை ஒப்பனவாவன் என்று சொல்லின்,—இவற்

றிலை அநாதிமலம் மறைக்கும் - கேவலத்தில் இச்சசத்திகளை அநாதியாயுள்ள ஆணவமலம் மறைக்கும்,—காவலன் இவன் செய் கன்மந்து அளவினில் கொடுப்ப - சகலத்தில் முதல்வன் உயிர்கள்செய்த கன்மத்தளவிற்கேற்ப இச்சாஞானக் கிரியைகளைக் கொடுக்க,—பாவி ஆம் புத்தி காண்பன் - அக் கன்மத்துக்கிடாக வரக்கடவதாகிய போகத்தை ஏகதேசமாய் அறிந்து அனுபவிப்பர்,—முத்திப் பயன் கொளும் பண்பு - சுத்தநிலையில் முத்திப்பயனை அடையும் முறையும்,—இற்று ஆகும் - இத்தன்மையதாகும்.

குறிப்பு. 1. சிவனு மிச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்பன்:- ஆன்மாக்கள் முதல்வன்போலச் சித்துப்பொருள்கள். முதல்வனுக்குள்ள ஞானம்போல ஆன்மாக்களுக்கும் ஞானம் உளது. ஞானமுளதாகவே இச்சை கிரியைகளும் உள்ளனவாம். ஆதலால் ஆன்மாக்களும் முதல்வனை ஒக்கும் என்பர் சிவசமவாதிகள்.

கேவலாவத்தையிலே உயிர்களின் இச்சாஞானக்கிரியைகளை அநாதி பந்தமாகிய ஆணவமலம் மறைக்கும். முதல்வனது ஞானம் தடையிலா ஞானமாகும். சகலத்தில் உயிர்கள் தாந்தாஞ்செய்த கன்மத்துக்கேற்ப அறிவிச்சை செயல்கள் ஏகதேசமாய் விளங்கப்பெற்று விடயபோகங்களை ஏகதேசப்பட்டு அனுபவிக்கும். ஏகதேசப்பட்டு அனுபவித்தலாவது சிற்றறிவும் சிறுதொழிலுமுடையனவாயிருந்து அனுபவித்தலாம். சுத்தநிலையில் உயிர்கள் வியாபக அறிவும் பேரானந்தமும் முதல்வன் கொடுக்கவே கொள்ளும் உரிமையுடையன. முதல்வன் நித்தியானந்த சொரூபி. முதல்வனுக்கு மலபந்தம் இல்லாமையாற் கேவலம் சகலம் சுத்தம் என்னும் அவத்தைகளுமில்லை. ஆதலால், ஆன்மாக்களுக்கு இச்சாஞானக்கிரியைகள் உளவெனினும், அவற்றிற்கும் முதல்வனுடைய இச்சாஞானக்கிரியைகளுக்கும் வேற்றுமை பெரிதாம். அதனால் ஆன்மாக்கள் சிவனோடு சமமாகா. சிவன் ஆண்டவனும் அவை அடிமைகளுமாம்.

2. பாவி - வரற்பாலது, உள்ளது.

பொழிப்பு. இச்சாஞானக்கிரியைகள் முதல்வனுக்கிருத்தல்போல உயிர்களுக்குமிருத்தலால், உயிர்களும் முதல்வனுக்குச் சமமாவர்போலுமெனின், உயிர்களுடைய இச்சாஞானக்கிரியைகள் கேவலத்திலே மூலமலத்தாலே மறைக்கப்படுதற்குரிய தன்மையும், சகலத்திற் கன்மத்துக்கேற்ப அவை ஏகதேசமாய் விளங்கப்பெற்றுக் கன்மப்பயனை ஏகதேசமாய் அறிந்து அனுபவிக்குந் தன்மையும், சுத்தத்திலே வியாபக அறிவைப்பெற்று முத்திப்பயனை அனுபவிக்குந்தன்மையும் உடையனவாதலால், இத்தன்மைகளில்லாத முதல்வனது இச்சாஞானக்கிரியைகளோடு இவற்றிற்கு வேற்றுமை பெரிதாய். ஆதலால் உயிர்கள் சிவனுக்குச் சமமாகமாட்டா.

---

III. சித்துருவாகிய சத்திவடிவத்தின் இலக்கணமும் அதனாலுண் டாய பயனும், (85-89).

இப்பிரிவில் அடங்கிய விஷயங்கள்:—

1. முதல்வனது சத்திகாரியவடிவங்கள் இலயம் போகம் அதிகாரம், (85).
2. முதல்வனுக்குச் சுத்ததத்துவங்கள் சுதந்திரவடிவம், (86).
3. முதல்வன் பேதவடிவங்கள் எய்துதல்பற்றி விகாரியாகான், (87).
4. மேலதனை உவமைமுகத்தால் விளக்கல், (88).
5. முதல்வன் சத்திவடிவமெய்தியதனு லுண்டாயபயன், (89).

1. முதல்வனது சத்திகாரியவடிவங்கள் இலயம் போகம் அதிகாரம்.

85. ஞானமே யான போது சிவன்றொழின் ஞான மொக்கின்
ஈனமில் சதாசி வன்பே ரீசனுந் தொழில தேறின்
ஊனமேற் கிரியை வித்தை யுருத்திர னிலய போகம்
ஆனபே ரதிகா ரத்தோ டதிகர ணத்த னாமே.

(இ - ள்). உருத்திரன் - சங்காரகாரணனாகிய முதல்வன்,—ஞானமே ஆன போது சிவன் - மேற்கூறிய சத்திகள் மூன்றனுள்ளே ஞானமேயாய் வியாபரிக்கும்பொழுது சிவன் எனவும்,—தொழில் (ஆன போது) ஞானம் - கிரியையேயாய் வியாபரிக்கும்பொழுது சத்தி எனவும்,—ஒக்கின் - ஞானமும் கிரியையும் ஒத்து வியாபரிக்கின்,—ஈனம் இல் சதாசிவன் - மேம்பாடுடைய சதாசிவன் எனவும்,—தொழில் அது ஏறின் பேர் ஈசனும் - ஞானம் குறைந்து கிரியை ஏறி வியாபரிக்குங்கால் மகேசுவரன் எனவும்,—கிரியை ஊனமேல் வித்தை - ஞானம் ஏறிக் கிரியை குறைந்து வியாபரிக்கின் சுத்தவித்தை எனவும் ஐவகைப்பெயர் பெற்று,—இலயம் போகம் பேர் ஆன அதிகாரத்தோடு - இலயம் போகம் பெரிதாகிய அதிகாரம் எனப் படும் மூன்று அவத்தைகளையும்,—அதிகரணத்தன் ஆம் - அவ்வவத்தைகளுக் குச் சுத்ததத்துவங்களையும் ஆதாரமாக உடையவனும்.

குறிப்பு. 1. ஞானமே யான போது சிவன்......:- இச்சை ஞானம் கிரியை என்னும் சத்திகள் மூன்றனுள், இச்சாசத்தி எப்பொழுதும் ஒரு தன்மையாய் வியாபரிக்கும். மற்றைய இரண்டு சத்திகளுந் தனித்தனியாயும் ஒத்தும் ஏறியும் குறைந்தும் வியாபரிக்கும். பரமசிவன் இச்சத்திகளுள்ளே ஞானசத்தியைப் பொருந்திநிற்கும் அவதரத்திற் சிவன் எனப்படுவர். கிரியாசத்தியைப் பொருந்திநிற்கும் அவதரத்திற் சத்தி எனப்படுவர். ஞானசத்தியையும் கிரியாசத்தியையும் சமமாகப் பொருந்திநிற்கும் அவதரத்திற் சதாசிவன் எனப்படுவர். ஞானசத்தி குறைந்தும் கிரியாசத்தி ஏறியும் இருக்கும் அவதரத்தில் மகேசுவரன் எனப்படுவர். ஞானம் ஏறிக் கிரியை

குறைந்துநிற்கும் அவதரத்திற் சுத்தவித்தை எனப்படுவர். இங்ஙனமே சத்திவியாபாரத்தாற் பரமசிவன் ஐவகைப்பெயர் பெறுவர்.

2. இலய போகமான பேரதிகாரத்தோடு:- மேற்கூறியவாறு சத்திகளின் வியாபாரமும் ஐவகைப்படுதலாற், பரமசிவனது அவத்தைகளும் ஐவகைப்படும். அவை ஐந்தும் இலயம் போகம் அதிகாரமென மூன்றாயடங்கும். சிவமும் சத்தியும் இலயமாகவும், சதாசிவம் போகமாகவும், மகேசுவரமும் சுத்தவித்தையும் அதிகாரமாகவும் அடங்கும். இம்மூன்றவத்தைகளிலேயும் முதல்வன் இலயசிவன் போகசிவன் அதிகாரசிவன் என்றும். நிஷ்களசிவன் நிஷ்களசகளசிவன் சகளசிவன் என்றும், சத்தர் உத்தியுத்தர் பிரவிருத்தர் என்றும், சிவம் சதாசிவன் மகேசுவரன் என்றும் பெயர் பெறுவன்.

3. அதிகரணத்தன்:- சுத்தமாயையிலே தோன்றுஞ் சுத்ததத்துவங்கள் ஐந்தும், முதல்வனது அவத்தைகளுக்கு இருப்பிடமாய் இருக்கும் என்பது. அதிகரணம் - ஆதாரம், இருப்பு.

4. உருத்திரன் - மகாசங்காரக்கடவுளாகிய பரமசிவன்.

பொழிப்பு. சங்காரகாரணனாகிய முதல்வன் சத்திவியாபாரத்தாற் சிவன் சத்தி சதாசிவன் மகேசுவரன் சுத்தவித்தை என ஐவகைப்பட்டு இலயம் போகம் அதிகாரம் என்னும் அவத்தைகளையும், அவ்வவத்தைகளுக்கு ஆதாரமாகச் சுத்ததத்துவங்களையும் உடையவனாவன்.

2. முதல்வனுக்குச் சுத்ததத்துவங்கள் சுதந்திரவடிவம்.

86. வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்க ளைந்துஞ்
சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்திர வடிவ மாகும்
நித்தமென் றுரைப்பர் கால நீங்கிய நிலைமை யாலே
வைத்திலர் முற்பிற் பாடு வருவித்தார் கருமத் தாலே.

(இ-ள்). வித்தையோடு ஈசர் சாதாக்கியம் சத்தி சிவங்கள் ஐந்தும் சுத்ததத்துவம் - சுத்தவித்தை மகேசுவரம் சதாசிவம் சத்தி சிவம் என்னும் ஐந்தும் சுத்ததத்துவங்களாம்,—சிவன்றன் சுதந்திர வடிவம் ஆகும் - இவை ஐந்தும் மேற்கூறியவாறு ஆதாரங்களாயிருத்தலேயன்றிப் பரமசிவனுக்குச் சுதந்திரமான திருமேனியுமாயிருக்கும்,—நித்தம் என்று உரைப்பர் - இத்தத்துவங்களை நித்தியம் என்று சொல்வர்,—காலம் நீங்கிய நிலைமையாலே - காலதத்துவத்துக்கு முன்னர்த் தோன்றி அக்காலதத்துவத்தைக் கடந்து நிற்குந் தன்மையால்,—முற்பிற்பாடு வைத்திலர் - இவற்றிற்கு முற்பிற்பாடு கூறிற்றிலராயினும்,—கருமத்தாலே (முற்பிற்பாடு) வருவித்தார் - முன்பின்னாக நிகழும் ஞானசத்தி கிரியாசத்திகளின் வியாபாரபேதம் பற்றி அவற்றிற்கு முற்பிற்பாடு கூறினர்.

குறிப்பு. 1. வித்தையோ டீசர்......:- சுத்தவித்தியாதத்துவம், மகேசுவரதத்துவம், சதாசிவதத்துவம், விந்துதத்துவம், நாததத்துவம் என்னும்

சுத்ததத்துவங்கள் ஐந்தும் முறையே சுத்தவித்தை மகேசுவரம் சதாசிவம் சத்தி சிவம் என்னும் ஐவருக்கும் திருமேனியும் புவனமுமாயிருக்கும். புவனம் - தானம், இடம், ஆதாரம். அஃது, உடம்பானது உயிருக்கு இருப்பிடமும் வடிவமுமாயிருத்தல்போலாம். மேலைச்செய்யுளில் "அதிகரணத்தன்" என்றதனால் இருப்பிடமாதலும், இச்செய்யுளிலே "சிவன்றன் சுதந்திரவடிவம்" என்றதனால், திருமேனியாதலும் கூறப்பட்டன. சிவனுக்குச் சத்தியே சுதந்திரவடிவமெனக் கூறப்பட்டிருக்கச், சுத்ததத்துவங்களும் சுதந்திரவடிவமெனக் கூறியது எவ்வாறெனின், அத்தத்துவங்கள் பரிக்கிரகசத்தி ரூபமாதலால், அங்ஙனம் உபசரித்துக் கூறப்பட்டனவாம். (ஞானப்பிர). பரிக்கிரகசத்தி - தொழிற்குக் காரணமாய்நிற்குங் கிரியாசத்தி. அது வேண்டுமிடத்து உபகாரமாவது.

2. சுதந்திரவடிவம் - அநந்ததேவர் முதலியோர்வாயிலாக அதிட்டிக்கப்படுகின்ற அசுத்தமாயாகாரியங்கள் போலன்றித் தானே அதிட்டிக்கப்படுதலின், முதல்வனுக்கு இச்சுத்ததத்துவங்கள் சுதந்திரவடிவம் எனப்பட்டன.

3. முற்பிற்பாடு - முன்பின்னாகத் தோன்றும் முறைமை. பாடு - உண்டாதல், தோற்றம்.

பொழிப்பு. சுத்ததத்துவங்களைந்தும் முதல்வனுக்குச் சுதந்திரவடிவமாம். அவை அநாதியாய் அழிவற்று நிற்பனவாம். காலதத்துவத்தைக் கடந்து நிற்பனவாதலால், அவை தோன்றும் முறைமை கூறப்படுவதன்றாயினும், முன்பின்னாக நிகழும் சத்திகளின் வியாபாரபேதம்பற்றி அவற்றிற்குத் தோற்றங் கூறப்படும்.

3. முதல்வன் பேதவடிவங்கள் எய்துதல்பற்றி விகாரியாகான்.

87. ஒருவனே யிராவ ணாதி பாவக முற்றூற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாந் தன்மையுந் திரியா னாகும்
வருவடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

(இ-ள்). ஒருவனே இராவணன் ஆதி பாவகம் உற்றாற் போல - ஒருவனே இராவணன் முதலிய பல வேடங்களைக் கட்டி நடித்தானாயினும் அவன் தனது தன்மையிற் சிறிதும் மாறுபடாததுபோல,—தருவன் இவ்வுருவம் எல்லாம் - முதல்வனும் ஐந்தொழிற்குமுரிய அருவம் அருவுருவம் உருவம் என்னும் இப்பேதவடிவெல்லாம் எய்தினும்,—தன்மையும் திரியான் ஆகும் - தனது தன்மையும் வேறுபட்டு விகாரியாவான் அல்லன்,—வரும் வடிவு எல்லாம் சத்தி - அங்ஙனம்பொருந்திய அவ்வடிவு வேறுபாடுகளெல்லாம் சத்திவடிவமாம்,—சத்திதான் - அச்சத்தி,—மரமும் காழ்ப்பும் இருமையும் போல - மரமும் வயிரமுமாகிய இரண்டும் ஒன்றோடொன்று சேர்ந்து பிரிவின்றியிருத்தல் போல,—சிவத்தினோடு மன்னி இயைந்து நிற்கும் - சிவத்தினோடு சேர்ந்து பிரிவின்றி நிற்கும்.

குறிப்பு. 1. இராவண + ஆதி = இராவணாதி எனத் தீர்க்கசந்தியாயிற்று.

2. மரமுங் காழ்ப்பும் - மரம் சத்திவடிவத்துக்கும் காழ்ப்பு சிவத்துக்கும் உவமைகளாயின. காழ்ப்பு - வைரம்.

3. இருமை - இரண்டு.

பொழிப்பு. முதல்வனாற்கொள்ளப்படும் பேதவடிவெல்லாம் சத்தியிற் காணப்படும். அதுபற்றி அம்முதல்வன் விகாரியாகான்.

4. மேலதனை உவமைமுகத்தால் விளக்கல்.

88. பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
தன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேத மெல்லாம்
நின்மலன் றானாத் தோன்றி நிலைமையொன் றாயே நிற்பன்
முன்னருட் சத்தி தன்பான் முகிழ்க்குந்தான் முளையா னன்றே.

(இ - ள்). பளிங்கு - பளிங்கானது,—பொன்மை நீலம் ஆதி வன்னம் பொருந்திட - பொன்மை நீலம் முதலிய நிறங்களைப் பொருந்தியவிடத்து,—அவற்றின் தன்மையாய் நிற்குமா போல் - அவ்வந் நிறங்களின் தன்மையாய்த் தான் தோன்றி வேற்றுமையின்றி நிற்குமாறுபோல,—நின்மலன் - முதல்வனும்,—சத்திதன் பேத மெல்லாம் - சத்தியினுடைய பேதங்களெல்லாம்,—தான் ஆத் தோன்றி - தானாகத் தோன்றி,—நிலைமை ஒன்றாயே நிற்பன் - தனது தன்மையில் வேறுபாடின்றியே நிற்பன்,—முன் அருட்சத்தி தன்பால் முகிழ்க்கும் - அப்பேதமெல்லாம் சொல்லப்பட்ட அருட்சத்தியினிடமாகத் தோன்றுவனவாம்,—தான் முளையான் - தானாக வேறு தோன்றான்.

குறிப்பு. 1. பொன்மை நீலாதி வன்னம் பொருந்திடப் பளிங்கு...... நிற்பன்:- பளிங்கு சிவத்துக்கும், பொன்மை நீலம் முதலியன முறையே ஞானசத்தி கிரியாசத்தி முதலியவற்றிற்கும் உவமை. பரமசிவன் ஞான சத்தி கிரியாசத்திகளைப்பொருந்தி அவ்வச்சத்திகளின் பேதம் தானாகத் தோன்றி நிற்பினும், தமது தன்மையில் வேற்றுமையின்றி நிற்பர் என்பது.

2. முன்னருட் சத்தி தன்பால் முகிழ்க்குந்தான் முளையான்:- பளிங்கிற்கு இயற்கையான வெண்மை நிறத்திலே பொன்மை நீலம் முதலிய நிறங்கள் தோன்றுவனவன்றிப் பளிங்கிலே தோன்றுதவாறுபோல, முதல்வனது சுயம்பான அருட்சத்தியினிடத்து ஞானசத்தி கிரியாசத்தி பேதங்களெல்லாம் தோன்றுவனவன்றி முதல்வனிடத்துத் தோன்றுவாம்.

பொழிப்பு. பளிங்கானது பொன்மை நீலம் முதலிய நிறங்களைப் பொருந்தியவிடத்து அவ்வந்நிறங்களின் தன்மையாய்த் தோன்றினுந் தான் வேற்றுமையின்றி நிற்பதுபோல, முதல்வனும் சத்தியினுடைய பேதங்களெல்லாவற்றையும் பொருந்தியவிடத்து அவ்வச் சத்தியின் தன்மையாய்த் தோன்றினுந் தான் வேற்றுமையின்றியே நிற்பன். அப்பேதமெல்லாம்

அருட்சத்தியினிடமாகத் தோன்றுவனவேயன்றி முதல்வனிடத்துத் தோன்றுவனவன்று.

5. முதல்வன் சத்திவடிவமெய்துதலாலுண்டாய பயன்.

**89.** சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முயர்குண குணியு மாக
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்.

(இ - ள்). சத்தியும் சிவமும் ஆய தன்மை - முதல்வன் இங்ஙனம் சத்தியும் சிவமும் எனத் தம்முள் இரு வேறுவகைப்பட்ட தன்மைகள் உடையனுயிருத்தலால்,—இவ்வுலகம் எல்லாம் - இப்பிரபஞ்சமெல்லாம்,—ஒத்து ஒவ்வா ஆணும் பெண்ணும் - வடிவங்களெல்லாம் ஒத்தும் குறிகள் ஒவ்வாது இரு வேறுவகைப்பட்ட ஆணும் பெண்ணுமாகவும்,—உணர் குணம் குணியும் ஆக - ஆராய்ந்து அறியத்தக்க குணமும் குணமுடைய பொருள்களுமாகவும்,—வைத்தனன் - உபகரித்தனன்,—இவ்வாழ்க்கை எல்லாம் - இவ்வாழ்வுகளெல்லாம்,—அவளால் வந்த ஆக்கம் - சிவசத்திகூடினதால் வந்த வாழ்வாம்,—இத்தையும் அறியார் - திருமேனியின் இயல்பு உணராதார் சிவசத்தி இங்ஙனம் ஆன்மாக்களை வாழ்வித்து உபகரித்தலையும் உணரார்,—பீட இலிங்கத்தின் இயல்பும் ஓரார் - பீடமும் இலிங்கமுஞ் சத்தியும் சிவமுமாய் நின்ற தன்மையும் உணரார்.

குறிப்பு. 1. ஆணும் பெண்ணு முயர்குண குணியும்:- 21-ம் செய்யுளில் "ஒருவனோ டொருத்தி யொன்று" எனப்பட்ட சடமும் சித்துமாய பொருள்கள்.

2. அவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம் - உலகமெல்லாம் ஆண் பெண் அலி என்னும் சேதனுசேதனப் பிரபஞ்சமாயிருத்தல், தோன்றி நின்று அழியும் முத்தொழிலுடையனவாயிருத்தல், முத்தொழில் செய்யுங் கருத்தாக்களையுடையனவாயிருத்தல் முதலியன முதல்வன் சத்திவடிவம் எய்தியதனுலுண்டாயின எனபது.

3. பீட லிங்கம்:- இலிங்கம் - படைத்தல் காத்தல் முதலியவற்ருல் உலகத்தைச் சித்திரிப்பதாகிய பரமேசுரப் பிரபாவம். லிங்க - சித்திரித்தல். சிருட்டி சங்காரகாலத்திலே தோற்றமும் ஒடுக்கமும் உண்டாதற்குக் காரணமாயிருத்தலால், இலிங்கம் எனப்படும் என்றுஞ் சொல்வர். லிங் - லயம். கம் - தோற்றம்.

பீடம் - இலிங்கமிருக்கும் ஆசனம். பீடலிங்கத்திலே, பீடம் சத்தியும் இலிங்கம் சிவமுமாயிருக்கும். இன்னும் இலிங்கம் ஞானசத்திவடிவமும், பீடம் கிரியாசத்திவடிவமுமாம். இலிங்கம் நாதரூபமும் பீடம் விந்துரூபமுமாம்.

விந்துசத்தி பீடரூபமாக விளங்கிச் சுத்தமாயாகாரியமும் அசுத்தமாயா காரியமும் பிரகிருதிகாரியமுமாகிய மூவகை அத்துவாக்களையும் வியாபித்து நிற்கும். ஞானசத்தி இலிங்கரூபமாய் நின்று அவ்விந்துசத்தியைக் காரியப் படுத்தும். ஞானசத்தி, விந்துசத்தியைக் காரியப்படுத்தும் இயல்பே பீட லிங்கரூபமாம். அதுபற்றியே "பீடலிங்கத்தின் இயல்பும் ஓரார்" என்று அருளிச்செய்தார்.

பொழிப்பு. சத்தி சிவம் என இருதன்மையாயிருத்தலாலன்றே உல கம் முழுவதும் ஆண் பெண் என இருவகையாயுங் குண குணிப்பொருள்க ளாயும் விளங்கவைத்தனன். இங்கே சொல்லிய வாழ்வுகளெல்லாம் சிவ சத்தியால் வந்தனவேயாம், சிவமும் சத்தியும் கொண்டருளிய பீடலிங்கவடி வமே அவ்வாறு இருவகையாய் இருப்பது என்பதற்குப் பிரத்தியட்சமான சாட்சியாம்.

---

## IV. முதல்வனது சிறப்பிலக்கணம்.

90. சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
தவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் றானே
இவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னானே.

(இ-ள்). சிவன் அரு உருவும் அல்லன் - பரமசிவன் (உயிர்கள்பொ ருட்டுத் தடத்தவடிவங்கொண்டானாயினும் உண்மையில்) அருவும் அருவுரு வும் உருவும் அல்லாதவன்,—சித்தினோடு அசித்தும் அல்லன் - சித்தாகிய சத்திவடிவமும் அசித்தாகிய அத்துவாவடிவ மந்திரவடிவங்களும் அல்லாத வன்,—பவம் முதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானும் அல்லன்,— சத்திவடிவினனாய் நின்று சிருட்டி முதலிய தொழில்கள் ஒன்றும் செய்பவ னும் அல்லாதவன்,—தவம் முதல் யோக போகம் தரிப்பவன் அல்லன் - ஆன்மாக்களுக்குப் புத்தி முத்திகளைக் கொடுக்கும்பொருட்டுத் தவம் முதலாக யோக போக வடிவங்களைக் கொள்பவனும் அல்லாதவன்,—தானே இவை பெற இயைந்தும் - தானே தடத்தலக்கணம் முதலிய இவையெல்லாம் உள வாகப் பொருந்தி நிற்பினும்,—ஒன்றும் இயைந்திடா இயல்பினன் - இவற்றி லொன்றையும்பொருந்தாத சுத்தசைதன்னிய இலக்கணத்தையுடையவனும்.

குறிப்பு. 1. சிவனரு வுருவு மல்லன் (செ. 58. பார்).
2. சித்தினோடசித்து (செ. 61, 76-79. பார்).
3. பவமுதற் றொழில்கள் (செ. 80. பார்).
4. தவமுத லியோக போகம் (செ. 70. பார்).

பொழிப்பு. முதல்வன் மேற்கூறிய தடத்தலக்கணங்களையுடையனாயி னும், இவையொன்றுமில்லாத சுத்தசைதன்னிய சொரூபலக்கணத்தை யுடையனும்.



# இரண்டாஞ் சூத்திரம்.

மேற்கூறியவாறு சேதனசேதனப் பிரபஞ்சங்களாகிய பசு பாசங்களைத் தோற்றுவிக்கும் முதல்வன், அப் பசு பாசங்களோடு அத்துவிதமாயும் அவற்றின் வேறாயும் நிற்கும் முறைமை இச் சூத்திரம் கூறுகின்றது. அங்ஙனம் கூறுமுகத்தாற், பாசங்களாகிய இருவினையுண்மை இலக்கணங்களும், மாயை மாயேயங்களின் இலக்கணங்களும், ஆணவமலத்தின் உண்மை இலக்கணங்களும், இம் மலங்கள் உயிர்களைப் பந்திக்கும் முறைமையும், உயிர்கள் அம் மலபந்தத்தினின்று நீங்கி அருள்பெறுதற்கு வாயிலுங் கூறப்படுகின்றன.

முதல்வன் பசு பாசங்களோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று அவற்றை நடத்தும் முறைமை தொகுத்துக் கூறல்.

91. உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி நின்றனன் னீங்கா தெங்கும்.

(இ-ள்). உலகு எலாம் ஆகி - மேற்கூறிய பரமசிவன் கலப்பினால் உலகுயிர்கள் அனைத்தும் தானேயாய்,—வேறாய் - பொருட்டன்மையால் அவற்றின் வேறுமாய்,—உடனுமாய் - செலுத்துந்தன்மையினால் உடனுமாய்,—ஒளியாய் ஓங்கி - சத்திவடிவாய் வியாபரித்து,—அலகிலா உயிர்கள் - எண்ணிறந்த உயிர்கள்,—கன்மத்து - இருவினைக்கீடாக (வரும் இன்பத் துன்பங்களை நுகர்தற்பொருட்டு மாயாகாரியமான தனு கரணங்களைப் பொருந்திப் பிறந்திறந்து),—ஆணையின் அமர்ந்து செல்ல - அவ்வாணையின் வழி அடங்கிச் செல்லுமிடத்து,—தலைவனாய் - அவற்றை நடத்தும் முதல்வனாய்,—இவற்றின் தன்மை தனக்கு எய்தல் இன்றி - உலகுயிர்களாகிய இவற்றின் தன்மைகள் தன்கட் பொருந்துதலின்றி,—தான் நிலவு சீர் அமலனாகி - தான் சுயம்பிரகாசமாம் இயல்புடைய நின்மலனாய்,—எங்கும் நீங்காது நின்றனன் - இவ்வுலகுயிர்களெங்கும் அத்துவிதமாய்க் கலந்து பிரிவின்றி நின்றனன்.

குறிப்பு. 1. உடனுமாய்-தலைவனாய்-அமலனாகி-இவற்றின் றன்மை தனக்கெய்தலின்றி எங்கும் நீங்காது-நின்றனன் என முடிக்க.

2. ஆணையி னமர்ந்து செல்ல - கன்மமும் அதன் பயனாகிய இன்பத் துன்பங்களும், மாயாகாரியமான தனு கரணங்களும், பிறப்பிறப்பும், முதல்வன் ஆணையாற் செலுத்தப்படுவன என்பது. (செ. 130, 112, 120 பார்). ஆணை - சிவசத்தி.

3. நீங்கா தெங்கும் - எங்கும் நீங்காது அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை ஔபச்சிலேடிக வியாபகம் எனப்படும். ஔபச்சிலேடிக வியாபகம் -

பாலின் நெய் போலவும், பழத்தின் மதுரம் போலவும், எள்ளில் எண்ணெய் போலவும், ஒருவஸ்துவிலே முழுதும் வியாபகமாய் ஒன்றுபட்டிருத்தல். ஔபச்சிலேடிகம் - அடுத்திருத்தல் அல்லது ஒன்றுபட்டிருத்தலோடு சம்பந்தப்பட்டது. உபச்சிலேஷம் என்பதினின்று வந்தது. (சிவாக்).

பொழிப்பு. முதல்வன் உலகுயிர்களோடு கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மையால் அவற்றின் வேறாயும், செலுத்துந்தன்மையால் அவற்றோடு உடனாயும் நிற்பன். எவ்வாறெனின், சத்திவடிவாய் வியாபித்துச் சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்களோடு ஒன்றாயும் உடனாயும் நின்று அவரவர் கன்மத்துக்கேற்பத் தனு கரணாதிகளைக் கொடுத்து வினைப்பயனை நுகர்வித்தும், அசேதனப் பிரபஞ்சமாகிய தனு கரணாதிகளோடு அத்துவிதமாய்க் கலந்து பிரிவின்றியும் நிற்பன். இவ்வாறாயினும், இவற்றிற்கு வேறுமாய்த் தோய்வின்றி நிற்கும் நின்மலனாம்.

இச்செய்யுள் மூன்றுகூறுடையது.

1. உலகெலா மாகி வேறா யுடனுமாய் நின்றனன், (**92-93**).

2. ஒளியா யோங்கி அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத் தலைவனாய்த், தானே நிலவுசீ ரமல னாகி நின்றனன், (**94-163**).

3. (ஒளியா யோங்கி) இவற்றின் தன்மை தனக்கெய்த லின்றி எங்கும் நீங்காது நின்றனன், (**164-186**).

---

## முதலதிகரணம்.

உலகெலா மாகி வேறா யுடனுமாய் (நின்றனன்) என்பது முதற்கூறு. (**92-93**). இது முதல்வன் உலகுயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் முறைமை உவமைமுகத்தால் விளக்குகின்றது.

இவ்வதிகரணத்தில் அடங்கிய விஷயங்கள்:—

1. முதல்வன் உலகுயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் முறைமையை உவமைமுகத்தால் விளக்கல். (**92**).

2. முதல்வன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் முறைமையை உவமைமுகத்தால் விளக்கல். (**93**).

### 1. முதல்வன் உலகுயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் முறைமை உவமைமுகத்தால் விளக்கல்.

**92** ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி
நின்றன னென்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னின்
அன்றவை பதிதா னென்றென் றறையுமக் கரங்க டோறுஞ்
சென்றிடு மகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே.

(இ-ள்). மறைகள் எல்லாம் - வேதங்களெல்லாம்,—ஒன்று என உரைத்திட - ஆன்மா ஏகன் என்று சொல்லவும்,—உயிர்கள் ஒன்றி நின்றனன் என்று - ஆன்மாக்களோடு கலந்து நிற்பன் என்று,—பன்மை நிகழ்த்துவது என்னை என்னின் - பன்மைப்படக் கூறுவது என்னையெனின்,—அன்று அவை - அநாதியான வேதங்கள்,—பதிதான் ஒன்று என்று அறையும் - பரமான்மா ஒன்றே என்று கூறுவதன்றிச் சீவான்மாக்களை அன்று,—அக்கரங்கள் தோறும் சென்றிடும் அகரம் போல - உயிரும் மெய்யுமாகிய எழுத்துக்களோடு ஒன்றாயும் அவற்றின் வேறாயும் அவற்றை இயக்குவதாயும் நிற்கும் அகரவுயிர்போல,—சிவனும் சேர்ந்து நின்றனன் - முதல்வனும் சேதனசேதனப் பிரபஞ்சங்களோடு ஒன்றாயும் அவற்றின் வேறாயும் அவற்றைச் செலுத்துபவனுமாய் நிற்பன்.

குறிப்பு. ஒன்றென மறைக ளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி நின்றன னென்று பன்மை நிகழ்த்துவதென்னை? என்பது ஏகான்மவாதிகள் ஆசங்கை.

பொழிப்பு. பதி ஒன்று. ஆன்மாக்கள் பல. அகரவுயிர் உயிரெழுத்து மெய்யெழுத்துக்களோடு நிற்றல்போல, முதல்வனும் இவ்வான்மாக்களாகிய சேதனப்பிரபஞ்சத்தோடும் அசேதனப்பிரபஞ்சத்தோடும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பன்.

2. முதல்வன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் (அபேதமாயும் பேதமாயும் பேதாபேதமாயும்) நிற்கும் முறைமையை உவமைமுகத்தால் விளக்கல்.

93. உருவொடு கருவி யெல்லா முயிர்கொடு நின்று வேறாய்
வருவது போல வீச னுயிர்களின் மருவி வாழ்வன்
தருமுயி ரவனே யாகா வுயிரவை தானு மாகான்
வருபவ னிவைதா னாயும் வேறுமாய் மன்னி நின்றே.

(இ-ள்). உயிர் - உயிரானது,—உருவொடு கருவி எல்லாம் - உடம்பையும் ஐம்பொறிமுதலிய கருவிகளையும்,—கொடு நின்று - பற்றிக்கொண்டு அபேதமாய் நிற்பினும்,—வேறாய் வருவது போல - அவ்வுடம்புக்கும் கரணங்களுக்கும் வேறாய் நின்று அவற்றைச் செலுத்துதல் போல,—ஈசன் - முதல்வனும்,—உயிர்களின் மருவி வாழ்வன் - உயிர்களோடு கலந்து அபேதமாய் நிற்பனாயினும்,--தரும் உயிர் அவனே ஆகா - தரப்பட்ட உயிர்கள் அம்முதல்வனாகமாட்டா,—தானும் உயிர் அவை ஆகான் - அம்முதல்வனும் அவ்வுயிர்களாகமாட்டான். (ஆதலால்),—இவை தானாயும் வேறுமாய் - அம்முதல்வன் இவ்வுயிர்களேயாயும் (அபேதமாய்) இவற்றின் வேறுமாய் (பேதமாய்),—மன்னி நின்று வருபவன் - இவற்றோடு (பேதாபேதமாய்) ஒன்றி நின்று செலுத்துவோனும்.

குறிப்பு. இச்செய்யுள் முதல்வன் உயிர்களோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்கும் முறைமையை ஓர் உவமையில் வைத்து விளக்கிற்று. அஃதாவது (a). சாத்தன் என்பவனை அவனுடைய உடம்பிற்கிட்ட பெயரால் அழைத்தவிடத்து, அவ்வுடம்போடு கூடிய உயிர் என்னை என்று வருதற்குக் காரணம், அவ்வுயிர் உடம்பு வேறு தான் வேறு என்னும் வேற்றுமையின்றி நிற்றலாலாம். இது முதல்வன் உயிர்களோடு கலந்து ஒன்ருய் (அபேதமாய்) நிற்றற்கு உதாரணம். (b). இங்ஙனம் உயிர் உடம்போடு கலந்து நிற்பினும் உயிர் உயிரே. உடம்பு உடம்பே. உயிர் உடம்பாகமாட்டாது. உடம்பு உயிராகமாட்டாது. இது முதல்வனும் உயிர்களும் அபேதமாய் நிற்பினும், முதல்வன் வேறு உயிர்கள் வேறு (பேதம்) என்பதற்கு உதாரணம். (c). உயிர் உடம்போடு ஒற்றித்து நின்று அதனை இயக்கினுலன்றி உடம்பு இயங்கமாட்டாதவாறுபோல, முதல்வன் உயிரோடு ஒற்றித்து நின்று அதனை இயக்கினுலன்றி உயிர் இயங்காதாம். இது முதல்வன் உயிர்களோடு உடனுய் (பேதாபேதமாய்) நிற்றற்கு உதாரணம். முதல்வன் உயிர்களோடு இவ்வாறு நிற்கும் நிலை உருக்கிய அரக்கும் அதனோடு சேர்த்த கற்பொடியும்போலெனச் சிவஞானபோதம் ஓர் உவமையில் வைத்து விளக்கியவாறுங் காண்க. (சி. போ. சூ. 2. அ. 1). சிவப்பிரகாசம், முதல்வன் உயிர்களிடத்தே கலப்பினுல் உடலும் உயிரும்போல ஒன்ருய் (அபேதமாய்), பொருட்டன்மையாற் கண்ணும் ஆதித்தனும்போல அவ்வுயிர்களின் வேறுமாய் (பேதமாய்), உயிர்க்குயிராதற்றன்மையாற் கண்ணொளியும் ஆன்மபோதமும்போல உடனுமாய் நிற்பன் எனக் கூறும். (சிவப்பிர. செ. 7).

இங்ஙனம் கூறியதனுல் முதல்வனும் உயிர்களும் பொன்னும் பணியும்போல அபேதமாம் என்னும் மாயாவாதிகளும், ஒளியும் இருளும்போலப் பேதமாம் என்னும் மாத்துவரும், சொல்லும் பொருளும்போலப் பேதாபேதமாம் என்னும் பாஞ்சராத்திரிகளும் மறுக்கப்பட்டனர்.

பொழிப்பு. முதல்வன் உயிரும் உடலும்போல உயிர்களோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும் நின்று அவற்றைச் செலுத்துவன்.

---

## இரண்டாமதிகரணம்.

ஒளிபா(யோங்கி அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத் தலைவனுய்த் தானே நிலவுசீ ரமலனுகி (நின்றனன்) என்பது இரண்டாங் கூறு. (95-163).

இவ்வதிகரணம், முதல்வன் சத்திருபமாய் வியாபரித்துச் சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்களோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று தனுகரணங்களைக் கொடுத்து இருவினைப்பயனை நுகர்விக்கும் முறைமை கூறுமுகத்தான், இருவினையுண்மையும், இருவினைப்பயனை உயிர்கள் நுகரும் முறைமையும், இருவினையிலக்கணமும், தனுகரணங்களின் இயல்பும், அம்முதல்வன் தலைவனாயும் அமலனாயும் நிற்கும் முறைமையுங் கூறுகின்றது.

இது ஐந்து பிரிவுகளாகப் பிரித்துப் பொருள் கூறப்படுகின்றது.

I. இருவினையுண்மை, (95-98).
II. இருவினைப்பயனை உயிர்கள் நுகரும் முறைமை, (99-128).
III. இருவினையிலக்கணம், (129-130).
IV. தனுக்களின் இயல்பு, (131-140).
V. கரணங்களின் இயல்பு, (141-163).

ஒவ்வொருபிரிவிலும் அடங்கிய விஷயங்கள் அவ்வப்பிரிவின் முகப்பிலே காணப்படும்.

---

இருவினைப்பயனை உயிர்கள் நுகரும் முறைமை
தொகுத்துக் கூறல்.

94. இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவ தாகு மன்னிய வினைப்ப யன்கள்
தருமரன் றரணி யோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்மப் பலன்களு மறுமைக் கண்ணே.

(இ - ள்). இருவினை - முற்பிறவிகளிற் செய்யப்பட்டுக்கிடந்த புண்ணிய பாவங்களின் பயனாகிய,—இன்பத் துன்பத்து - இன்பத்துன்பங்களை நுகரும் பொருட்டு,—இவ்வுயிர் பிறந்து இறந்து வருவது போவது ஆகும் - மேற் கூறப்பட்ட உயிர்கள் இப்பூமியிற் பிறந்து இறந்து மீண்டும் பூமிக்கு வருதலும் சுவர்க்க நரகங்களுக்குச் செல்லுதலுமுடையவாயிருக்கும்,—மன்னிய வினைப்பயன்கள் - அவ்வாறு நிலைபெற்றுள்ள புண்ணிய பாவங்களின் பயன்களை,—தரணியோடு தராபதி போல - மருத்துவனும் அரசனும் போல,— அரன் தரும் - முதல்வன் தனது ஆணையாற் கூட்டுவன்,—கன்மப் பலன்களும் வடிவும் - இவ்வாறன்றிப் புண்ணிய பாவங்களின் பயனும் அதனை அனுபவித்தற்கு வேண்டப்படும் உடலும்,—தாமே மறுமைக்கண் மருவிடா - தாமாக மறுபிறவிகளில் வந்து உயிர்களைப் பொருந்தா.

குறிப்பு. 1. இருவினை:-கன்மம், மனம் வாக்குக் காயங்களினுற் செய்யப்படுவது. அப்பொழுது அஃது ஆகாமியம் எனப்படும். பின்பு அக்கன்மம் பக்குவமாகுமளவுஞ் சூக்குமமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடக்கும். அப்பொழுது அது புண்ணிய பாவங்கள் எனவும் சஞ்சிதம் எனவும்படும். இப்புண்ணிய பாவங்களின் பயனாகிய இன்பத்துன்பங்களைத் தரும்பொழுது அது பிராரத்தம் எனப்படும். இங்கே இருவினை என்றது புண்ணிய பாவங்களாகிய சஞ்சிதவினையையாம்.

2. மன்னிய வினை - புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடக்கும் சஞ்சிதவினை. மன்னுதல் - நிலைபெறுதல்.

3. தரணியோடு தராபதி போலத் தருதல் — (செ. 120-125 பார்). தரணி - மருத்துவன். நோயைக் கடப்பித்தலின், அது மருத்துவனுக்காயிற்று. தரணம் - கடத்தல். இ - விகுதி.

4. இச்செய்யுளிலே தொகுத்துக் கூறப்பட்ட விஷயங்களாவன:—(I). வினைப்பயனை நுகர்தற்பொருட்டு உயிர்கள் உடல்களைப் பொருந்தி இப்பூமியிற் பிறந்திறந்து மீண்டும் இப்பூமிக்கு வருவதும் சுவர்க்க நரகங்களுக்குச் செல்லுவதுமாயிருக்கும், (2). வினைப்பயனை அரன் தரும். வடிவுங் கன்மப்பலன்களும் தாமே மருவிடா. (3). வினைப்பயனை அரன் தரணியொடு தராபதிபோலத் தருவன் என்பன. இவை பின்னர் வகுத்துக் கூறப்படுகின்றன. (செ. 99-128).

---

## I. இருவினையுண்மை, (95-98).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. இன்பத்துன்பங்கள் இயல்பாகா. அவற்றிற்குக் காரணம் இருவினை, (95-96).
2. இன்பத்துன்பங்களுக்குக் காரணம் இருவினை, முயற்சியன்று, (97-98).

### 1, இன்பத்துன்பங்கள் இயல்பாகா, அவற்றிற்குக் காரணம் இருவினை.

95. இருவினை யென்னை யின்பத் துன்பங்க ளியல்ப தென்னின்
ஒருதன்மை யியல்புக் குள்ள தொருவனுக் கிரண்டு செய்தி
வருவதென் மலருந் தீயு மருவலின் வாசம் வெம்மை
தருவதென் னீரென் செய்து தானியல் பாகு மன்றே.

96. தன்னியல் பொழியப் பூவுந் தழலும்வந் தணைய நீரின்
மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையி னுனும்
உன்னிய வின்பத் துன்ப முறுமுயி ருணர்வில் லாத
துன்னிய வசித்தை யின்பத் துன்பங்கள் சூழ்ந்தி டாவே

(இ - ள்). இருவினை என்னை - இன்பத்துன்பங்களுக்குக் காரணம் இருவினை என்பது என்னை,—இன்பத்துன்பங்கள் இயல்பது என்னின் - இன்பத்துன்பங்கள் உடலுக்கு இயல்பாகவே உள்ளவை என்னின்,—இயல்புக்கு உள்ளது ஒருதன்மை - இயல்பினுக்கு உள்ளது ஒருதன்மையே,—ஒருவனுக்கு இரண்டு செய்தி வருவது என் - அவ்வாறின்றி ஒருவனுக்கு இன்பமும் துன்பமும் எனத் தம்முள்ளே மாறுபட்ட இரண்டு தன்மை வருதற்குக் காரணம் யாது,—மலரும் தீயும் மருவலின் - பூவும் அக்கினியும் பொருந்துதலால்,—வாசம் வெம்மை நீர் தருவது என் - வாசனையும் சூடும் நீரினிடத்து உண்டாதற்குக் காரணம் யாது,—(நீர்) என் செய்து - அந்த நீர் யாது கன்மம் செய்து அவை உண்டாயின? இயல்பாக உண்டாவனவேயன்றி வேறு காரணமின்மையால்,—தான் இயல்பு ஆகும் - அவ்வின்பத்துன்பங்களும் உடலெடுத்தவன்றே அவ்வுடலுக்கு இயல்பாக உள்ளனவாம்.

பூவும் தழலும் வந்து அணைய - பூவும் தீயும் வந்து பொருந்துதலால்,—தன் இயல்பு ஒழிய - தனக்கு இயற்கையாயுள்ள குளிர்ச்சித்தன்மை நீங்க,—இரண்டு செய்தி நீரில் மன்னியது - வாசமும் சூடும் ஆகிய இரண்டு செயற்கைத்தன்மை நீரிலே வந்து பொருந்திற்று. அதுபோல.—வரும் இருவினையினாலும் - வந்து கூடும் இருவினை காரணமாக,—உன்னிய இன்பத்துன்பம் உயிர் உறும் - கருதப்பட்ட இன்பத்துன்பங்கள் உயிரிலே வந்து பொருந்தும்,—துன்னிய உணர்வில்லாத அசித்தை - அஃதன்றிக் கன்மத்துக்கிடாகப் பொருந்திய சடமாகிய உடலை,—இன்பத்துன்பங்கள் சூழ்ந்திடா - அந்த இன்பத்துன்பங்கள் பொருந்தாவாம்.

குறிப்பு. 1. "இருவினை யென்னை" என்னும் செய்யுள்முதல் நான்கு செய்யுளால், இன்பத்துன்பங்களாகிய காரியவேதுவைக்கொண்டு இருவினையுண்மை சாதிக்கின்றார்.

2. மலரும் தீயும் நல்வினை தீவினைகளுக்கு உவமை. வாசமும் வெம்மையும் இன்பத்துன்பங்களுக்கு உவமை. நீர் உயிருக்கு உவமை.

3. இவ்விரண்டு செய்யுளாலும் உலோகாயதர்மதம்பற்றி ஆசங்கித்து, இன்பத்துன்பங்களுக்குக் காரணம் இருவினை என்பதும், அவை உயிரையே பொருந்தும் என்பதும் வலியுறுத்தப்பட்டன.

உலோகாயதர் ஆசங்கை. 1. இன்பத்துன்பங்களுக்குக் காரணம் இருவினையன்று. அவை உடலுக்கு இயல்பாயுள்ளன. விடை. இயல்பாயின், இயல்புக்கு ஒருதன்மையே உண்டு. அவ்வாறின்றி, இன்பமும் துன்பமும் எனத் தம்முள்ளே மாறுபட்ட இருதன்மைகள் காணப்படுதலின், அவற்றிற்கு ஒரு காரணம் வேண்டப்படும்.

ஆசங்கை. 2. பூவும் தீயும் நீரைப்பொருந்துதலால், வாசனையும் சூடும் அதனிடத்து இயல்பாகத் தோன்றுவதுபோல, இன்பமும் துன்பமும் உடலிடத்து இயல்பாகத்தோன்றுவனவாம். விடை. பூவும் தீயும் பொருந்தியவிடத்து நீரின் இயற்கைத்தன்மை நீங்கி, வாசமும் சூடும் ஆகிய இரண்டு

செயற்கைத்தன்மையும் அதனைப் பொருந்துதல்போல, நல்வினை தீவினைகள் காரணமாக இன்பமும் துன்பமும் உயிரைப் பொருந்துமேயன்றி உடலைப் பொருந்தா.

பொழிப்பு. உலோகாயதர் நீரினிடத்துப் பூவுந் தீயும் பொருந்துதலால் வாசனையும் சூடும் இயல்பாய் உண்டாவதுபோல, உடலுக்கு இன்பத் துன்பங்கள் இயல்பாயுள்ளன, அவற்றிற்குக் காரணம் இருவினையன்று என்பர். பூவுந் தீயும் பொருந்துதல் காரணமாக வாசமும் சூடும் நீரைப் பொருந்துதல்போல, புண்ணிய பாவங்களாகிய இருவினை பொருந்துதல் காரணமாக இன்பத்துன்பங்கள் உயிரைப் பொருந்தும். ஆதலால் அவர் கூற்றுப் பொருந்தாது.

2. இன்பத்துன்பங்களுக்குக் காரணம் இருவினை, முயற்சியன்று.

97. இம்மையின் முயற்சி யாலே யிருநிதி யீட்டி யின்பம்
இம்மையே நுகர்வர் செய்தி யிலாதவர் பொருளு மின்றி
இம்மையே யிட ரு ழப்பர் வேறிரு வினைய துண்டேல்
இம்மையின் முயற்சி யின்றி யெய்திட வேண்டு மிங்கே.

98. இருவினைச் செயல்கா ணிம்மை யிரும்பொரு ளின்பம் வேண்டி
வருவினை செய்யுங் காலை மடிவரு மடியு மின்றித்
தருவினை யதனி லத்தந் தானறுந் துயருந் தங்கும்
ஒருவினை செய்யா தோரு முடையரிவ் வுலகத் துள்ளே.

(இ - ள்). இம்மையின் முயற்சியாலே இருநிதி ஈட்டி - இப்பிறவியின் முயற்சியாலே மிக்க பொருள்களைச் சம்பாதித்து,—இன்பம் இம்மையே நுகர்வர் - இன்பத்தையும் இப்பிறவியிலேதானே அனுபவிப்பர்,—செய்தி இலாதவர் - முயற்சி இல்லாதவர்,—பொருளும் இன்றி இம்மையே இடர் உழப்பர் - பொருள் சம்பாதித்தலுமின்றி இப்பிறப்பிலே துன்பத்தை அனுபவிப்பர்,—வேறு இருவினையது உண்டேல் - இம்முயற்சிக்கு வேறாக இருவினை எனப்படும் ஒருகாரணம் உளதாயின்,—இம்மையில் முயற்சி இன்றி - இப்பிறப்பிலே யாதொரு முயற்சியின்றியும்,—இங்கே எய்திட வேண்டும் - இவ்விடத்தே பொருள் வந்து சேரவேண்டும்.

இம்மை இரும் பொருள் இன்பம் வேண்டி - இப்பிறப்பிலே மிக்கபொருளையீட்டி இன்பத்தை அனுபவித்தல் விரும்பி,—வருவினை செய்யுங்காலை - அப்பொருள் வருதற்கேற்ற முயற்சி செய்யும்பொழுது,—மடிவரும் - சோர்வுண்டாகும்,—மடியும் இன்றித் தருவினை அதனில் - சோர்வும் வராமற்செய்யும் அம்முயற்சிக்கண்,—அத்தம் தான் அறும் - பொருளும் இல்லாமற்போகும்,—துயரும் தங்கும் - அதனாலே துன்பமுஞ் சேரும்,—இவ்வுலகத்துள்ளே - இப்பூமியின்கண்,—ஒருவினை செய்யாதோரும் - யாதொருமுயற்சியும் செய்யாதாரும்,—உடையர் - பொருளுடையராய் வாழ்கின்றனர். இங்ஙனம்

பயன் மாறுபடுதலால் அம்முயற்சி காரணமாகாது. ஆதலால்,—இருவினைச் செயல்காண் - இன்பத்துன்பங்கள் இருவினை காரணமாக வருவன என்பதை அறிவாயாக.

குறிப்பு. இன்பத்துன்பங்களுக்குக் காரணம் முயற்சி என்னும் உலோகாயதர் கொள்கையை மறுத்து, இருவினையே அவற்றிற்குக் காரணம் என்பது இவ்விரண்டு செய்யுளாலும் வலியுறுத்தப்பட்டது.

பொழிப்பு. உலோகாயதர், இன்பத்துன்பங்களுக்குக் காரணம் இருவினையன்று, முயற்சியாம். முயற்சியுள்ளவர் பொருள் சம்பாதித்து இன்பம் அனுபவிப்பர். முயற்சியில்லாதவர் பொருள் சம்பாதித்தலுமின்றித் துன்பத்தை அனுபவிப்பர். இருவினை காரணமாயின், முயற்சியின்றியும் பொருள்வந்து சேரவேண்டும் என்பர். மறுப்பு. இம்மையிலே பொருளையீட்டி இன்பத்தை அனுபவிக்க விரும்பி இடையறாது முயற்சிசெய்யும்பொழுது தளர்வுண்டாகின்றது; தளர்வின்றி முயற்சிசெய்யும்பொழுதும் பொருள் வராமற் போகின்றது. அதனாலே துன்பமும் வருகின்றது. ஒரு முயற்சியின்றியும் செல்வராதல் காணப்படுகின்றது. இங்ஙனம் முயற்சி காரணம் என்பது மாறுபடலால், மாறுபடாத காரணம் வேறுண்டென்பது பெறப்படும். அதுவே இருவினையாம்.

---

II. இருவினைப்பயனை உயிர்கள் நுகரும் முறைமை, (99-128). இது நான்கு பிரிவுகளாகப் பிரித்துப் பொருள் கூறப்படுகின்றது.

1. இன்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவதாகும், (99-102).

2. மன்னியவினைப் பயன்கள் அரன் தரும். வடிவுங் கன்மப்பலன்களும் மறுமைக்கண் தாமே மருவிடா, (103-119).

3. தரணியோடு தராபதிபோலத்தரும், (120-125).

4. இன்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து போவதாகும், (126-128).

ஒவ்வொரு பிரிவிலும் அடங்கிய விஷயங்கள் அவ்வப்பிரிவின் முகப்பிலே காணப்படும்.

---

1. இன்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவதாகும். (99-102).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

(*a*). உயிர்கள் வினைப்பயனை அனுபவித்தற்குப் பிறந்திறந்துவரும் (99).

(*b*). உடலும் கன்மமும் பிரவாகாநாதி, (100).

(*c*). இருவினை விளையும் முறைமை, (101).

(*d*). மேலதனை உவமை முகத்தால் விளக்கல், (102).

(a). உயிர்கள் வினைப்பயனை அனுபவித்தற்குப் பிறந்திறந்துவரும்.

99. பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்ட தவ்விதி யனுப வத்தால்
ஏறிடு முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது
தேறுநீ யினிச்செய் கன்ம மேலுடற் சேரு மென்றே.

(இ-ள்). பேறு இழவு - இப்பிறவியிலே செல்வம் கல்வி நற்சாதி முதலியவற்றைப் பெறுதலும், அவற்றைப் பெறாதிருத்தலும்,—இன்பமோடு பிணி - இன்பமும் துன்பமும்,—மூப்புச் சாக்காடு - நீடிய ஆயுளும் குறுகிய ஆயுளும்,—என்னும் ஆறும் - ஆகிய ஆறும்,—முன் கருவுள் பட்டது - பிறக்கு முன் சூக்குமமாய்க் கருவினுள் அமைந்து கிடந்தனவாம்.—அவ்விதி அனுபவத்தால் ஏறிடும்-அங்ஙனம் அமைக்கப்பட்டவை முயற்சியோடு கூடிய அனுபவத்தால் பின் தூலமாய் வந்து பொருந்தும்,—முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது - முற்பிறவியிலே செய்யப்பட்ட நல்வினை தீவினைகள் இப்பிறவியிலே அனுபவிக்கப்படும் பேறிழவு முதலிய ஆறினுக்கும் காரணமாம்,—இனிச் செய் கன்மம் - இப்பிறவியிற் செய்யப்படும் நல்வினை தீவினைகள்,—மேல் உடல் சேரும் என்று நீ தேறு - மறுபிறவிகளிலே எடுக்கப்படும் உடம்பைப் பொருந்தி அவ்வாறுவகைக்கும் காரணமாயிருக்கும் என்று நீ அறிவாயாக.

குறிப்பு. 1. இச்செய்யுள்முதல் 119-ம் செய்யுளீறாகவுள்ள இருபத்தொரு செய்யுள்களில் அவ்வவ்விடங்களில் வரும் ஆசங்கைகளும் மறுப்புகளும் மீமாஞ்சகர் மதம்பற்றியன என அறிக.

2. பேறிழ வின்பமோடு பிணி மூப்புச் சாக்காடு:—பேறிழவு முதலிய ஆறும், சாதி ஆயுள் போகம் என்னும் மூன்றனுள் அடங்கும். "கன்ம நெறி திரிவிதகற் சாதியாயு போகக் கடனதென வரும்" (சிவப்பிர. 29).

3. அனுபவத்தாலேறிடும் - முயற்சியோடு கூடிய அனுபவத்தாற் பின் தூலமாய் வந்து பொருந்தும். முயற்சி - உற்சாகம், பிரயத்தினம். அது விருப்பு வெறுப்புக்களாலுண்டாகி, இதமகிதங்களாக முற்றுப்பெறும். முயற்சியோடு கூடிய அனுபவம் - விருப்பு வெறுப்புக்களாலுண்டாகும் இதமகிதங்களோடு கூடிய அனுபவம். போகம் தூலமாய் அனுபவத்துக்கு வருமுன், அப்போகத்தில் ஆசை நிகழும். அந்த ஆசை விருப்பு வெறுப்புக்களாம். விருப்பு வெறுப்புக்களுண்டானபோது, அவற்றை முற்றுவித்தற்பொருட்டு முயற்சி செய்யப்படும். அம்முயற்சிகள் இதமகிதங்களாய் முடிவு பெறும். இதமகிதங்கள் ஆகாமியவினை எனப்படும். இங்ஙனம் ஒரு போகம் அனுபவிக்கப்படும்பொழுது விருப்பு வெறுப்புக்கள் காரணமான இதமகிதங்கள் உடனிகழ்தல் காண்க.

பொழிப்பு. பேறிழவு முதலிய ஆறும் பிறக்குமுன் கருவிலே அமைக்கப்பட்டுப் பிறந்தபின் அனுபவத்துக்கு வரும். இவற்றிற்குக் காரணம் முற்

பிறவியிற் செய்தவினையாம். இப்பிறப்பிற் செய்யும்வினை மறு பிறப்பை உண்டாக்கிப் பேறிழவு முதலிய பயனைத்தரும்.

(b). உடலும் கன்மமும் பிரவாகாநாதி.

**100.** உடற்செயல் கன்ம மிந்த வுடல்வந்த வாறே தென்னின்
விடப்படு முன்னு டம்பின் வினையிந்த வுடல்வி ளைக்குந் [தின்
தொடர்ச்சியாயொன் றுக்கொன் றுதொன் றுதொட்டநாதிவித்
இடத்தினின் மரம ரத்தின் வித்தும்வந் தியையு மாபோல்.

(இ-ள்). கன்மம் உடல் செயல் - கன்மமானது உடலைப் பொருந்தி நின்று செய்யப்படுவதாயின்,—இந்த உடல் வந்தவாறு ஏது என்னின்-இந்த உடல் வந்த முறைமை யாதெனின்,—முன்விடப்படும் உடம்பின்வினை - முற்பிறவிகளில் விட்டு நீங்கிய உடம்பின்கண் நின்று செய்யப்பட்ட நல்வினை தீவினைகள்,—இந்த உடல் விளைக்கும் - இந்த உடலை உண்டாக்கும்,—வித்தின் இடத்தினின் மரம் - வித்தினிடத்து மரமும்,—மரத்தின் வித்தும் வந்து இயையுமாபோல் - மரத்தினின்று வித்தும் வந்து பொருந்துமாறுபோல,—ஒன்றுக்கு ஒன்று தொடர்ச்சியாய் - உடலும் வினையும் ஒன்றுக்கொன்று காரண காரிய தொடர்புடையதாயிருத்தலின்,—தொன்று தொட்டு அநாதி-தொன்றுதொட்டுப் பிரவாகாநாதியாய் வருவனவாம்.

குறிப்பு. உடற் செயல் கன்மம் - உடம்பைப் பொருந்திநின்று செய்யப்படும் வினை, பிராரத்தம் அனுபவமாகும் பொழுது செய்யப்படும் நல்வினை தீவினைகள்.

வினை உடம்போடு கூடிநின்று செய்யப்படுமாயின், உடம்பு உண்டாதற்குக் காரணம் யாது என்பது வினா. விடை. முற்பிறவியிலே செய்யப்பட்ட கன்மம் இவ்வுடம்புக்குக் காரணமாம். அவ்வுடம்பிற்குக் காரணம் யாதெனின், அதற்கு முந்திய உடம்பினின்று செய்யப்பட்ட கன்மமாம். இப்படியே வித்துக்கு மரமும் மரத்துக்கு வித்தும் காரணமாதல்போல, ஒன்றுக்கொன்று காரணமாயிருக்கும். இதனைத் தாலபீச நியாயம் என்பர். இப்படி எது முதல் உண்டாகிவருமெனல் கூடாதாய்த் தொன்றுதொட்டு வருமென்க. இப்படி வருதல் பிரவாகாநாதியாம். பிரவாகம் - நீர்ப்பெருக்கு. ஆற்றுநீர் ஓடும் பொழுது ஒன்றுபோக ஒன்ருய்ப் பெருக்குவந்துகொண்டிருக்கும். அதுபோல, உடம்பும் வினையும் ஒன்றுபோக ஒன்ருய்த் தொன்றுதொட்டு அநாதியாக வந்துகொண்டிருக்கும். அநாதிக்கும் இப்பிரவாகாநாதிக்கும் வேற்றுமை என்னவெனின், தொடக்கமும் ஈறுமின்றி என்றும் ஒருதன்மையாயிருப்பது அநாதி. தோன்றி அழிந்து தொடர்பாய்வருதல் பிரவாகாநாதியாம்.

இங்கே சொல்லப்பட்டது தூலவுடம்பையும் அதற்குரிய வினையையுமாம். தூலவுடம்புக்கு மூலமாகச் சூக்குமவுடம்பு வேறுண்டு. அச்சூக்குமவு

டம்பு சிருட்டியாரம்பத்திலே கிடைத்துச் சங்காரகாலம் வருமளவும் நிலைபெற்றிருக்கும். அதனால் இது தாலபீசநியாயம் போல வரம்பின்றி அநவத்தையாகாது. தாலபீசநியாயமாவது பனைமுந்தியதோ? பனைவித்து முந்தியதோ? என ஆராயும் நெறி. அநவத்தை - நிலையின்மை, முடிவின்மை. அந் - எதிர்மறை. அவத்தை - நிலை, முடிவு.

சிருட்டியாரம்பத்திலே சூக்குமவுடம்பும் அதிலிருந்து தூலவுடம்பும் உண்டாதற்குக் காரணம் என்னவெனின், முந்திய சிருட்டியிலே செய்யப்பட்டுக் கிடந்தவினையேயாம். அந்தச் சிருட்டியிலும் உடலும் வினையும் பிரவாகாநாதியாயிருக்கும். சூக்குமவுடம்பு அவ்விரண்டற்கும் மூலமாயிருக்கும். இப்படிச் சிருட்டிதோறும் வருமாயின், ஆதியில் அவை எப்படியுண்டாயின என்னின், அவற்றிற்கு ஆதி என்பது ஒன்றில்லை. ஆன்மா அநாதியேயுள்ளது. அதுவுள்ளவன்றே ஆணவமலமும் அதனோடு சகசமாயுள்ளது. அம்மலமுள்ள அன்றே, மாயையும் கன்மமும் ஆன்மாவோடு கூடியிருக்கும். "மும்மல நெல்லினுக்கு முளையொடுதவிடுமிப்போல் (சி. சி. செ. 176) என்றபடி, நெல்லினிடத்து உமியும் தவிடும் முளையும் நெல் உள்ள அன்றே சகசமாயிருத்தல்போல, ஆன்மாவில் அவையும் அநாதியாகவேயிருக்கும். அது, வினையோ வன்றிச், சொல்லிவரு மாயையோ வணுவை முந்தச் சூழ்ந்ததெனு முரைமுதலோர் தொடக்கி லார்பால், ஒல்லைவரு மெனிலுளதா முயிருண் டாவே யுளதுமல மலமுளதா வொழிந்த வெல்லா, நெல்லின்முளை தவிடுமிபோ லநாதி யாக நிறுத்திடுவர்" என்னும் சிவப்பிரகாசச் செய்யுளாலும் உணரப்படும். (சிவப்பிர. செ. 25). மாயை அநாதியேயுள்ளதாகச் சிருட்டிகாலத்தில் அம்மாயையிலிருந்து சூக்குமவுடம்பும் அதிலிருந்து தூலவுடம்பும் வினையுந் தோன்றிப் பிரவாகாநாதியாய் மாறிமாறி வந்துகொண்டிருக்கும். இந்நிகழ்ச்சி அநாதிதொட்டு நிகழ்வனவாம்.

பொழிப்பு. உடலும் வினையும், வித்தும் மரமும் போலக் காரணகாரியமாய்த் தொன்றுதொட்டுப் பிரவாகாநாதியாய் வரும்.

(c). இருவினை விளையும் முறைமை.

**101.** முற்செயல் விதியை யிந்த முயற்சியோ டனுப வித்தால்
இச்செயல் பலிக்கு மாறெ னிதமகி தங்கண் முன்னர்
அச்செய லானு லிங்கு மவைசெயின் மேலைக் காகும்
பிற்செயா தனுப விப்ப தின்றுபின் றொடருஞ் செய்தி.

(இ - ள்). முன் செயல்விதியை - முற்பிறவியிற் செய்யப்பட்ட இதமகிதங்களின் பயனாகிய பேறிழவு முதலியனவற்றை,—இந்த முயற்சியோடு அனுபவித்தால் - இப்பிறவியில் இந்த இதமகிதங்களைச் செய்து அனுபவித்தால்,—இச்செயல் பலிக்கும் ஆறு என் - இவ்விதமகிதங்கள் பயன்தரும் முறைமை எங்ஙனமெனின்,—இதம் அகிதங்கள் முன்னர் அச்செயல் ஆனால் - முற்பிறவிகளிற் செய்யப்பட்ட இதமகிதங்கள் இப்பிறவியில் அவற்றின் பயனைத் தருதற்கும் அப்பயனை நுகருமிடத்துச் செய்யப்படும் இதமகிதங்க

[illegible] - உருவாகிய; அவ்வுருவை
இலிங்கத்தின் பரமார்த்தத்தை யுணரு
நம் அறிவு. இலிங்கம் - அருவுரு
வின் உருவி. ஆதலான், அவ்விலிங்
கம் அருவுருவப்பிரமாணமெனப் படும்.
பரமார்த்தம் - ஆதாரப்பொருள்.

இலிங்கமாவது வியாத்தி வலி
யால் மறைந்த பொருளை யுணர்த்து
வது. வியாத்தி - வியாபித்தல், செறிதல்,
உடனிகழ்ச்சி.

வியாத்தியாவது காரண காரியங்
க - ளுடைய பிரியாமை [illegible]. காரணம் -
ஆக்குவது! காரியம் - ஆக்கப்படுவது.

வியாப்பிய வியாபகங்களின்
இயைபைப் பற்றியே வியாத்தி யென்
றுணரற்பாலது. வியாப்பியம் - வியாபிக்கப்
படுவது; அடங்கியிருப்பது. வியாபகம் - வியா
பிப்பது. நிறைந்திருப்பது.

ளுக்கும் காரணமாயிருக்கும் என்பது உனக்கு உடம்பாடாதலின்,—இங்கும் அவை செய்யின் - இப்பிறவியிலும் இதமகிதங்களைச் செய்யின்,—மேலைக்கு ஆகும் - அவை மறுபிறவியிற் பயன் தருதற்கும் அப்பயனை அனுபவிக்குமிடத்துச் செய்யப்படும் இதமகிதங்களுக்கும் காரணமாயிருக்கும்,—பின் செயாது அனுபவிப்பது இன்று - பின்பு இதமகிதங்களைச் செய்யாது முன் வினைப்பயனை அனுபவித்தல் இல்லையாதலின்,—செய்தி பின் தொடரும் - இதமகிதங்கள் பிறவிதோறும் தொடர்ந்து வரும்.

பொழிப்பு. இப்பிறவியிற் செய்யப்படும் இருவினைகள் மறுபிறப்பில் அவற்றின் பயனைத் தருவதாயும், அப்பயனை அனுபவிக்குமிடத்துச் செய்யப்படும் நல்வினை தீவினைகளாயும் விளையும்.

(*d*). மேலதனை உவமை முகத்தால் விளக்கல்.

**102.** மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவு மாகி
ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லாம்
ஏலத்தான் பலமாய்ச் செய்யு மிதமகி தங்கட் கெல்லாம்
மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை யோடே.

(இ - ள்). விளைந்தவை - ஒருவன் விதைத்து விளைந்த தானியம் முதலியன,—மேலைக்கு உணவுமாகி வித்துமாகி ஞாலத்து வரும் ஆபோல - பின்னர் உணவுமாய் வித்துமாய் இவ்வுலகத்திலே உபயோகத்துக்கு வருமாறு போல,—நாம் செய்யும் வினைகள் எல்லாம் - நாம் என்னும் முனைப்போடு செய்யப்படும் நல்வினை தீவினைகளெல்லாம்,—ஏலத்தான் - புண்ணியபாவங்களாய் விளைதலினால்,—பலமாய் - பின்னர் இன்பத்துன்பப் பயனையும்,—செய்யும் இதம் அகிதங்கட்கு எல்லாம் மூலத்தது ஆகி - அவ்வின்பத்துன்பங்களை அனுபவிக்குமிடத்துச் செய்யப்படும் நல்வினை தீவினைகளுக்கெல்லாம் காரணமாகியும்,—என்றும் முறையோடு வந்திடும் - எக்காலமும் முறைபிறழாது வந்து நம்மைப் பொருந்தும்.

குறிப்பு. 1. மேலைக்கு - வரும் வருடத்துக்கு, பின்னர்.

2. நாஞ்செயும் வினைகளெல்லாம்......:- மனம் வாக்குக் காயங்களால் நாம் என்னும் முனைப்போடு செய்யும் நல்வினை தீவினைகள் ஆகாமியம் எனப்படும். பின்பு அவ்வினைகள் பக்குவமாகுமளவும் சூக்குமமாய்ப் புத்தி தத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடக்கும். அப்பொழுது அது புண்ணிய பாவங்கள் எனவும் சஞ்சிதம் எனவும் சொல்லப்படும். இச் சஞ்சித வினை பக்குவமாகி மறுபிறவியிற் செய்யப்படும் நல்வினை தீவினைகளுக்குக் காரணமாயும், இன்பத்துன்பங்களாய் அனுபவத்துக்கு வருவதாயுமிருக்கும். இன்பத்துன்ப அனுபவம் பிராரத்தம் எனப்படும்.

3. என்றும் வந்திடும் முறைமை யோடே:- தொன்றுதொட்டு வருதலின் "என்றும் வந்திடும்" என்றும், பக்குவமானாலன்றி அனுபவத்திற்கு வாராதாதலின், "முறையோடே" என்றும் கூறினார்.

4. ஏலத்தான்-ஏலுதல் - பொருந்துதல். "தான்" என்பதை அசை யாகக் கொள்ளினும் பொருந்தும்.

பொழிப்பு. உணவின்பொருட்டு விளைந்த தானியம் முதலியவை பின்பு உணவுமாய் வித்துமாய்ப் பிரயோசனப்படுதல்போல, நாம் என்னும் முனைப் போடு செய்யப்படும் இதமகிதங்கள், புண்ணிய பாவங்களாய் விளைந்து பின் னர் இன்பத்துன்பப் பயன்களைத் தருவதாயும், அவற்றை அனுபவிக்கு மிடத்து உண்டாகும் இதமகிதங்களுக்குக் காரணமாயும் இருக்கும்.

---

2. மன்னிய வினைப் பயன்கள் அரன் தரும். வடிவுங் கன்மப்பலன்க ளும் மறுமைக்கண் தாமே மருவிடா, (**103-119**).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

(*a*). வினைப்பயனை முதல்வனே தருவன், (**103-111**).

இருவினைகளையும் ஏற்றுப் பயன் கொடுப்பவன் முதல்வனே, (**103**).

இருவினைகளையும் ஏற்றற்குக் காரணம் கருணை. அவற்றின் பயன் அனுக்கிரக நிக்கிரகங்கள், (**104**).

அனுக்கிரக நிக்கிரகங்கள் இரண்டும் கருணையே, (**105**).

நிக்கிரகமும் கருணை என்பதை உவமை முகத்தால் விளக்கல், (**106**).

வினையே பயன்தரும் என்பதை மறுத்தல், (**107**).

வினை, கெட்டுப் பயன்தரும் என்பதை மறுத்தல், (**108**).

வினை கெட்டு மறுமையிற் பயன்தரும் என்பதை மறுத்தல், (**109**).

வினை, செய்தவர் புத்தியிலே கிடந்து பயன்தரும் என்பதை மறுத் தல், (**110**).

வினைப்பயன் தருபவன் முதல்வனே என்பதை வலியுறுத்தல், (**111**).

(*b*). வினைப்பயன்களையும் தனு கரணுதிகளையும் முதல்வன் தனது ஆணையால் உயிர்களுக்கு அணைப்பன், (**112**).

(*c*). ஈனமில் செய்தி யீசனிடம் பணியா மாறும், இவை நாம் செய்தால் நூனங்களதிகம் நோக்கி நுகர்விக்கு மாறும், (**113-119**).

இயமநியமங்கள் புண்ணிய கருமம். அவற்றின் பயன் முதல்வனே தருவன், (**113**).

இச்சித்த தெய்வம் வழிபடல் புண்ணிய கருமம். அதன் பயன் முதல்வனே தருவன், (**114**).

எத்தெய்வத்தை வழிபடினும் முதல்வனே பயன் கொடுப்பன் என் பதற்கு ஏது, (**115**).

மேலதனை உவமை முகத்தால் விளக்கி வலியுறுத்தல், (**116**).

சிவனை வழிபடல் மேலான புண்ணியம், (**117**).

சிவனை வழிபடும் முறைமை, (**118**).

சிவனடிக் கன்பு செய்கை மாண்பறம் என்பதனை உவமை முகத்தால் விளக்கல், (**119**).

(*a*). வினைப்பயனை முதல்வனே தருவன், (**103-111**).

இருவினைகளையும் ஏற்றுப் பயன் கொடுப்பவன் முதல்வனே.

**103.** இதமகி தங்க ளென்ப திகன்மன வாக்குக் காயத்
திதமுயிர்க் குறுதி செய்த லகிதமற் றதுசெய் யாமை
இதமகி தங்க ளெல்லா மிறைவனே யேற்றுக் கொண்டிங்
கிதமகி தத்தா லின்பத் துன்பங்க ளீவ னன்றே.

(இ - ள்). இதம் அகிதங்கள் என்பது - இதம் அகிதம் என்று சொல்லப்படும் இரண்டும்,—இகல் மனம் வாக்குக் காயத்து - மாறுபட்ட மனத்தின் நினைவாலும் வாக்கின் செயலாலும் காயத்தின் தொழிலாலும் வருவதாம்,—இதம் உயிர்க்கு உறுதி செய்தல் - அவற்றுள் இதமாவது மனம் வாக்குக் காயங்களினால் உயிர்க்கு நன்மைசெய்தல்,—அகிதம் அது செய்யாமை - அகிதமாவது அங்ஙனம் நன்மைசெய்யாது தீமைசெய்தலாம்,—இதம் அகிதங்கள் எல்லாம் இறைவனே ஏற்றுக்கொண்டு - இதம் அகிதங்களாகிய அவ்விரண்டினையும் முதல்வனே ஏற்றுக்கொண்டு,—இங்கு இதம் அகிதத்தால் - இங்கே அந்த இதம் அகிதங்களுக்கேற்ப,—இன்பத் துன்பங்கள் ஈவன் - அவற்றின் பயனாக இன்பத் துன்பங்களைக் கொடுப்பன்.

குறிப்பு. 1. இதமகி தங்க ளென்ப திகன்மன வாக்குக் காயத்து—(*a*). மனத்தின் நினைவாலுண்டாகும் இதங்கள்:—அருளுடைமை, பொறை, பிறர்பொருள் விரும்பாமை, செய்ந்நன்றி மறவாமை, வஞ்சகமின்மை, நடுநிலை நிற்றல், அபிமானம் பேணல், அழுக்காறின்மை, அவாவறுக்கை, பிறர் துயர்கண்டிரங்கல் முதலியன. இவைக்கு மாறான நினைவுகள் அகிதங்கள். (*b*). வாக்கினாலுண்டாகும் இதங்கள்—தருமம்போதித்தல், புறங்கூறாமை, உண்மை பேசுதல், இனியன சொல்லுதல், கடுஞ்சொல் விலக்கல், வேதாகமங்களை ஓதல் முதலியன. இவைக்கு மாறாயின அகிதங்கள். (*c*). காயத்தினாற் செய்யப்படும் இதங்கள்—அரிய தவங்களைச் செய்தல், பூசைகள் ஓமங்கள் செய்தல், பகுத்துண்ணல், நந்தவனம் சோலைகள் உண்டாக்குதல், பிறர் மனை விழையாமை, குளந் தோண்டல், கூவல் தோண்டல், ஆதுலர்சாலை, வித்தியாசாலை, திருக்கோயில், மடங்கட்டுவித்தல் முதலியன. இவைக்கு மாறாயின அகிதங்கள்.

2. உறுதிசெய்தல் - நன்மைசெய்தல். உறுதி - நன்மை.

பொழிப்பு. உயிர்களுக்கு நன்மை செய்தல் இதம். தீமை செய்தல் அகிதம். அவ்விரண்டனையும் அறியவல்ல முதல்வனே அவற்றிற்கேற்ப இன்பத்துன்பங்களாகிய பயனைத் தருவன்.

இருவினைகளையும் ஏற்றற்குக் காரணம் கருணை.
அவற்றின் பயன் அனுக்கிரக நிக்கிரகங்கள்.

**104.** இறைவனிங் கேற்ப தென்னை யிதமகி தங்க ளென்னின்
நிறைபர னுயிர்க்கு வைத்த நேசத்தி னிலைமை யாகும்
அறமலி யிதஞ்செய் வோருக் கநுக்கிர கத்தைச் செய்வன்
மறமலி யகிதஞ் செய்யி னிக்கிர கத்தை வைப்பன்

(இ - ள்). இறைவன் - முதல்வன்,—இதம் அகிதங்கள் - ஆன்மாக்கள் செய்த நல்வினை தீவினைகளை,—இங்கு ஏற்பது என்னை என்னின் - இங்ஙனம் ஏற்றுக்கொள்ளுதற்குக் காரணம் யாதெனின்,—நிறைபரன் - எங்கும் வியாபகமாயிருக்கும் அம்முதல்வன்,—உயிர்க்கு வைத்த நேசத்தின் நிலைமை ஆகும் - ஆன்மாக்கள் முத்தியடைதற்பொருட்டு அவர்கள்மேல்வைத்த கருணையின் தன்மையாகும். ஆதலால்.—அறம் மலி இதம் செய்வோருக்கு - புண்ணியமாய் மிகுந்த நல்வினை செய்வோருக்கு,—அநுக்கிரகத்தைச் செய்வன் - அருளைப் புரிவன்,—மறம் மலி அகிதம் செய்யின் - பாவமாய் மிகுந்த தீவினையைச் செய்வோருக்கு,—நிக்கிரகத்தை வைப்பன் - தண்டனையைச் செய்வன்.

பொழிப்பு. முதல்வன் இதமகிதங்களை ஏற்றுக்கொள்ளுதற்குக் காரணம் உயிர்கள் முத்தியடைதற் பொருட்டு அவர்கள்மேல்வைத்த கருணையாம். இதஞ்செய்வோருக்கு அநுக்கிரகத்தையும் அகிதஞ் செய்வோருக்கு நிக்கிரகத்தையுஞ் செய்வன்.

அநுக்கிரக நிக்கிரகங்கள் இரண்டுங் கருணையே.

**105.** நிக்கிர கங்க டானு நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்ற மடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
இக்கிர மத்தி னாலே யீண்டற மியற்றி டென்பன்
எக்கிர மத்தி னாலு மிறைசெய லருளே யென்றும்.

(இ - ள்). ஈசன் - முதல்வன்,—நிக்கிரகங்கள் தானும் செய்வது - அநுக்கிரகஞ் செய்தலேயன்றி அகிதஞ் செய்தவரைத் தண்டித்தலும்,—நேசத்தால் - அவர்கள்மேல் வைத்த கருணையினாலாம்,—அக்கிரமத்தாற் குற்றம் - நீதிதவறிச் செய்யப்பட்ட குற்றங்களை,—அடித்துத் தீர்த்து அச்சம்பண்ணி - கண்டித்து நீக்கி அச்சமுண்டாகச் செய்து,—இக்கிரமத்தினாலே ஈண்டு அறம் இயற்றிடு என்பன் - இம்முறைமைப்படி இங்கே அறத்தைச் செய்வாயாக என உணர்த்துவன்,—எக் கிரமத்தினாலும் - எந்தமுறையானும்,—

இறை செயல் என்றும் அருளே - முதல்வனது செயல் எப்பொழுதும் கருணையேயாம்.

பொழிப்பு. அகிதஞ்செய்தாரைக் கண்டித்தல் நல்வழிப்படுத்தற்பொருட்டேயாகலின், அதுவும் முதல்வனது கருணையேயாம்.

நிக்கிரகமும் கருணை என்பதை உவமை முகத்தால் விளக்கல்.

**106.** தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடினு றுக்கி வளாரினு லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ வீசனார் முனிவு மென்றும்.

(இ - ள்). தந்தை தாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் - தந்தை தாயர்கள் பெறப்பட்ட தம்முடைய புதல்வர்கள்,—தம் சொல் ஆற்றின் வந்திடாவிடின் - தம்முடைய சொல்லின் வழியில் நடவார்களாயின்,—உறுக்கி வளாரினல் அடித்து - அதட்டிச் சிறு கம்பினல் அடித்து,—தீய பந்தமும் இடுவர் - கொடிய விலங்குமிடுவர்,—பார்த்திடின் - ஆராயுமிடத்து,—எல்லாம் பரிவே ஆகும் - இச் செயல்களெல்லாம் வெகுளிபோலத் தோன்றினும் அவர்கள்மேற்கொண்ட அன்பு காரணமான செயல்களாம்,—ஈசனார் முனிவும் - முதல்வன் செய்யும் நிக்கிரகமும்,—என்றும் இந்த நீர் முறைமை அன்றோ - எக்காலமும் இத்தன்மைபோலும் முறைமையையுடையதன்றோ.

குறிப்பு. 1. பந்தம் - விலங்கு. விலங்கிடுதல் அக்காலத்து வழக்கம்.

2. அன்றோ என்பது நிச்சயம் என்னும் பொருளுணர்த்தும் ஓரிடைச் சொல்.

பொழிப்பு. தந்தை தாயர் தம் சொல்லின்வழி ஒழுகாத புதல்வரைக் கண்டித்தல்போல, முதல்வன் நிக்கிரகஞ்செய்தல் செயல்வகையால் வெகுளி போலத் தோன்றினும் கருத்துவகையால் அருளேயாம்.

வினையே பயன் தருமென்பதை மறுத்தல்.

**107.** செயல்களே பலத்தைச் செய்யுந் தெய்வம்வேண் டாவிங் கெ
முயலுமிச் செயல்க ளிங்கே முழுவது மழியு மெங்கே [ன்னின்
பயனளிப் பனவ ழிந்தே பலன்களைப் பண்ணுங் கெட்டே
வயலிடுந் தழையுந் தின்னு மருந்தும்பின் பலிக்கு மாபோல்.

(இ - ள்). செயல்களே பலத்தைச் செய்யும் - இதமகிதங்களாகிய வினைகளே தத்தம் பயனைத் தரும்,—இங்கு தெய்வம் வேண்டா என்னின் - இப்பயனைத் தருதற்கு முதல்வன் வேண்டுவதில்லை என்னின்,—முயலும் இச் செயல்கள் இங்கே முழுவதும் அழியும் - செய்த இவ்வினைகள் செய்தபொழுதே இவ்விடத்து முழுதுங் கெட்டொழிவனவாகலின்,—எங்கே பயன் அளிப்

பன - எவ்விடத்து நின்று அவை பயனைத் தரும்?,—வயல் இடும் தழையும் தின்னும மருந்தும் - வயலில் இட்ட தழைகளும் உண்ணப்பட்ட மருந்தும்,— கெட்டே பின் பலிக்கும் ஆபோல் - கெட்டுப் பின் பயன் தருமாறுபோல,— அழிந்தே பயன்களைப் பண்ணும் - இவ்வினைகளும் கெட்டே பின் பயன்தருவனவாம்.

பொழிப்பு. மீமாஞ்சகர் வினைகளே தத்தம் பயனைத் தரவல்லன. அதற்கு முதல்வன் வேண்டியதில்லை என்பர். செய்தவினை அப்பொழுதே கெட்டொழிதலால் பின் நின்று பயன்தரும் என்பது பொருந்தாது. இன்னும் அவர் வயலிலிட்ட தழைகள் கெட்டுப் பின் பயன்தருமாறுபோல, அவ்வினைகளும் கெட்டே பயன்தரும் என்பர்.

வினை, கெட்டுப் பயன்தரும் என்பதை மறுத்தல்.

108. செய்க்கிடுந் தழையுந் தின்னுந் திரவிப மதுவும்போல [னின்
உய்த்திடுஞ் செய்தி கெட்டே யுறுவிக்கும் பலத்தை யென்
வைத்திடுஞ் சோறும் பாக்கு மருந்தினர் வயிற்றின் மாய்ந்தான்
மெய்த்திடும் பல்மு னக்கு மலமலான் வேறு முண்டோ.

(இ - ள்). செய்க்கு இடும் தழையுந் தின்னும் திரவியம் அதுவும் போல- வயலின்கண் இட்ட தழையும் உண்ணப்பட்ட மருந்தும் கெட்டுப் பின் பயன் தருமாறுபோல,—உய்த்திடும் செய்தி - செய்யப்பட்ட வினைகளும்,—கெட்டே பலத்தை உறுவிக்கும் என்னின் - கெட்டே பின் பயனைப் பொருந்தச் செய்யுமெனின்,—வைத்திடும் சோறும் பாக்கும் - உண்ணுதற்காக வைக்கப்பட்ட சோறு முதலிய உணவுகளும் பாக்கு வெற்றிலை முதலியனவும்,— அருந்தினர் வயிற்றின் மாய்ந்தால் -உண்டவர் வயிற்றிலே அழியப்பெற்றால், —உனக்கு மெய்த்திடும் பலன் - உனக்குப் பிரத்தியட்சமாகக் காணப்படும் பலன்,—மலம் அலால் வேறும் உண்டோ - மலம் அல்லாது வேறில்லை. ஆதலால் வினை கெட்டுப் பயன்தருமென்பது எவ்விடத்தும் பொருந்தாது.

குறிப்பு. 1. "செய்க்கிடுந் தழையும்.........பலத்தையென்னின்" என்பது அனுவாதம்.

2. மெய்த்திடல் - மெய்யாதல்.

பொழிப்பு. ஒருவனுக்கு இட்ட அன்னம் உண்டவன் வயிற்றிலே அழியப்பெற்றால், அதனால் அன்னம் உண்டவனுக்கேயன்றி இட்டவனுக்கு ஒரு பயனுமின்மையால், வினை கெட்டுப் பயன்தரும் என்பது, எவ்விடத்தும் பொருந்தாது.

வினை கெட்டு மறுமையிற் பயன்தரும் என்பதை மறுத்தல்.

109. திரவிய முவமை யன்று செய்திக்கட் டிரவி யங்கள்
விரவிய விடத்தே வீந்து பலந்தரு மிம்மை யம்மை
பரவினீ பார்நீ ரங்கி பாத்திரத் திட்ட வெல்லாங்
கரவிடு மிங்கே யங்கே பலன்கொளக் கருதி னாயே.

(இ-ள்). திரவியங்கள் - தழையும் மருந்தும் என்று முன்னே கூறப் பட்ட பொருள்கள்,—விரவிய இடத்தே வீந்து - தாம் கிடந்த இடத்திலே அழிந்து,—பலன் தரும் - பயன் தருதலாலும்,—இம்மை அம்மை - இம்மை யிற்செய்த வினை மறுமையிற் பயன்தருமென்பது உனது கொள்கையாதலா லும்,—திரவியம் செய்திக்கண் உவமை அன்று - அப்பொருள்கள் வினை கெட்டுப் பயன் தரும் என்பதற்கு உவமை ஆகா,—பரவி நீ பார் - இம்மையிற் செய்த வினை மறுமையிற் பயன் தரும் என்று நீ கூறுவதை ஆராய்ந்து பார்ப்பாயாக,—நீர் அங்கி பாத்திரத்து இட்ட எல்லாம் - நீ நீரிலிட்ட திலதானமும் யாககுண்டத்தின் அக்கினியிலிட்ட நெய்முதலியனவும் சற் பாத்திரமாயுள்ளவருக்குக் கொடுத்த அன்ன பானாதி தானமும் ஆகிய இவை எல்லாம்,—இங்கே கரவிடும் - இம்மையிலே கெட்டொழிவனவாதலின்,—எங்கே பலன் கொளக் கருதினாய் - வேறெங்கே இவற்றின் பயனை அனுப விக்க எண்ணினாய்? ஆதலால், வினை கெட்டு மறுமையிற் பயன் தரும் என் பதை ஒழித்துவிடுவாயாக.

பொழிப்பு. நீரிலிட்ட திலதானம் முதலியன இம்மையிலே கெட் டொழிதலால், வினை கெட்டு மறுமையிலே தானாகப் பயன் தரும் என்பது பொருந்தாது.

வினை, செய்தவர் புத்தியிலே கிடந்து
பயன் தரும் என்பதை மறுத்தல்.

110. செய்தவர் மனத்தே யெல்லாச் செய்தியுங் கிடந்து பின்னர்
எய்தவே பலன்க ளீனு மென்றிடி னிருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து போந்த
தையனே யழகி துன்சொ லிந்திர சால மாய்த்தே.

(இ-ள்). செய்தவர் மனத்தே - வினை செய்தவர் மனத்தின்கண்ணே,—எல்லாச் செய்தியும் கிடந்து - எல்லா வினைகளும் தங்கி,—பின்னர் எய்தவே பலன்கள் ஈனும் என்றிடின் - பின் சுவர்க்கம் முதலிய இடங்களைப் பொருந் தவே பயன் தரும் என்று சொல்லின்,—இரும் சுவர்க்கம் பொய்யர்வாழ் நரகம் பூமி - பெரிய சுவர்க்கம் பொய்யர் வாழ்கின்ற நரகம் பூமி என்னும் இடங்களில் அனுபவிக்கப்படும் பயன்கள்,—புந்தியில் கிடந்து போந்தது - உனது புத்தியிலே கிடந்து தோன்றினவாகும்,—ஐயனே உன் சொல் அழகிது - ஐயனே உன் சொல் அழகினையுடையது,—இந்திரசாலம் ஆய்த்து - இந்திரசாலமாய் முடிந்தது.

குறிப்பு. 1. இந்திரசாலம் - மந்திரம் மருந்து முதலியவற்றால் ஒன்றினை மற்றொன்றாகக் காட்டும் வித்தை.

2. மேற்கூறிய நான்கு செய்யுளாலும் போந்த பொருள்:—மீமாஞ்சகர் ஆசங்கை. (a). வினையே பயன் தரும். அதற்கொரு கடவுள் வேண்டுவ தில்லை. மறுப்பு. வினை செய்தபொழுதே அழிந்து போதலால், அது பயன்

தருதல் கூடாது. ஆசங்கை. (b). வினை கெட்டே பயன் தரும். தழை முதலியன கெட்டுப் பயன் தருமாறுபோல. மறுப்பு. ஒருவன் புசித்தற்கு நீ கொடுத்த உணவு அவன் வயிற்றிற் சீரணமாகிக் கெட்டவிடத்து, உணவு கொடுத்த உனக்கு அதனுல் வரும் பயன் யாதுமின்மையால், வினை கெட்டுப் பயன் தரும் என்பது எவ்விடத்தும் பொருந்தாது. அன்றியும் தழை முதலியன கிடந்தவிடத்தே கெட்டுப் பயன் தருதலாலும், நீ இம்மையிற் செய்த வினை மறுமையிற் பயன் தரும் என்று சொல்வதினுலும், அவ்வுவமை உனக்குப் பொருத்தமன்று. ஆசங்கை. (c). அங்ஙனமாயின், இம்மையிற் செய்த வினை மறுமையிற் பயன் தரும் என்பதே அமையும். மறுப்பு. நீ செய்யுந் தானங்கள் இங்கே கெட்டொழிதலால், அவை மறுமைக்கண் பயன் தருதல் கூடாவாம். ஆசங்கை. (d). அப்படியன்று. வினை செய்தவரும் அதன் பயனை ஏற்பவரும் இம்மையிலும் மறுமையிலும் ஒருவராதலால், செய்த வினை கெட்டுச் செய்தவர் புத்தியிலே கிடந்து, பின்பு சுவர்க்க நரகங்களிலே பயன் தரும். மறுப்பு. மூவுலகங்களிலும் அனுபவித்தற்குரிய வினைப்பயனுகிய போகங்கள், வினை செய்தவர் புத்தியிலே கிடந்து, பின்பு அவ்வவ்வுலகங்களில் அனுபவத்துக்கு வரும் என்பது சொல்லளவேயன்றிப் பொருளாகமாட்டாது.

பொழிப்பு. வினைக்குப் பயனுவன சுவர்க்கம் நரகம் பூமி என்பவற்றிலுள்ள பல வேறுவகைப் போகங்களாம். இவையெல்லாம் புத்தியிற் கிடந்து தோன்றுமென்றல் சொன்மாத்திரமாய் முடியுமன்றிப் பொருளாகமாட்டாது.

வினைப்பயன் தருபவன் முதல்வனே என்பதை வலியுறுத்தல்.

**111.** தானஞ்செய் பொருட ரித்தோர் செய்தவர் தக்க செய்தி
ஊனம்பின் னுறவே காண்டும் பலமுறு விப்பான் வேண்டும்
ஈனமில் செய்தி யீச னிடும்பணி யிவைநாஞ் செய்தால்
ஞானங்க ளதிக நோக்கி நுகர்விப்பன் வினைநோய் தீர.

(இ-ள்). தானம் செய் பொருள் - மேற்கூறியவாறு தானம் செய்யப்பட்ட பொருள்களும்,—தரித்தோர் - அவற்றை ஏற்றவரும்,—செய்தவர் - அத்தானத்தைச் செய்தவரும்,—தக்க செய்தி - அந்த நற்கருமமும்,—பின் ஊனம் உறவே காண்டும் - பின்னர் நிலைபேறின்றிக் கெட்டுப்போகவே காண்கின்றோம். ஆதலால்,—பலம் உறுவிப்பான் வேண்டும் - இவற்றின் பயனைப் பொருத்துகின்ற நிலைபேறுன ஒரு கடவுள் வேண்டப்படும்,—ஈனம் இல் செய்தி ஈசன் இடும் பணி - தானம் முதலிய நற்கருமங்கள் முதல்வன் வேதாகமங்களிலே நியமித்த விதிகளாம்,—இவை நாம் செய்தால் - இவற்றை நாம் செய்யின்,—ஞானங்கள் அதிகம் நோக்கி - அவற்றுலாய பாவ புண்ணியங்களை அறிந்து,—வினை நோய் தீர - அப் பாவ புண்ணியங்களாகிய நோய் தீரும்படி,—நுகர்விப்பன் - அவற்றின் பயனைக் கொடுத்துப் புசிப்பிப்பன்.

குறிப்பு. 1. ஈனமில் செய்தி - இழிவில்லாத கருமம், உயிர்க்கு உறுதியைப் பயப்பிக்கும் புண்ணிய கருமங்கள். தானம் முதலியவை மற்றை உயிர்களுக்குத் தீமை வருவியாது செய்யப்படின் புண்ணிய கருமமாயும் ஈசனிட்ட பணியாயுமிருக்கும். அவ்வாறின்றி ஆடு மாடு முதலிய மற்றை உயிர்களை வதைத்து அவற்றிற்குத் தீமை செய்து செய்யப்படுமாயின், அவை ஈசனிட்ட பணியாகாது பாவச்செயல்களாகும். இதனை விளக்குதற்கே "ஈனமில் செய்தி" என்றார்.

2. நூனம் - குறைவு. அதிகம் - ஏற்றம்.

பொழிப்பு. தானம் செய்யப்படும் பொருள்களும், அப்பொருள்களை ஏற்பவரும், அத்தானத்தைச் செய்பவரும், தானமாகிய அந்த நற்கருமமும் பின்னர் அழிந்துபோகக் காணப்படுதலின், அங்ஙனம் அழிவின்றி நின்று இவற்றின் பயனை அளிக்கும் ஒரு முதல்வன் வேண்டப்படும். தானம் முதலிய கருமங்கள் முதல்வனால் விதிக்கப்பட்ட விதிகளாம். இவற்றை நாம் செய்யுமிடத்து அவற்றாலாய புண்ணிய பாவங்களை அறிந்து அப் புண்ணிய பாவங்களின் பயனை முதல்வனே தருவன்.

(b). வினைப்பயன்களையும் தனுகரணாதிகளையும் முதல்வன் தனது ஆணையால் உயிர்களுக்கு அணைப்பன்.

112. உலகுடல் கரணங் கால முறுபல நியதி செய்தி
பலவிவை கொண்டு கன்மம் பண்ணுவ துண்ப தானல்
நிலவிடா திவைதாஞ் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா வறிவ னாணை யணைத்திடு மருளி னாலே.

(இ - ள்). உலகு - கன்மம்செய்தற்கு வேண்டப்படும் இடமும்,—உடல் - உயிர் தங்குதற்கிடமாகிய சரீரமும்,—கரணம் - இந்திரியங்கள் முதலிய கருவிகளும்,—காலம் - முக்காலங்களுளொன்றாகிய நிகழ்காலமும்,—உறுபலம் - அக்காலத்தினாற் பொருத்தப்படும் விடய போகமும்,—நியதி - அவ்விடய போகத்தைக் கன்மத்துக்கீடாக ஏறுமற் குறையாமல் வரையறுத்து நிற்கும் நியதியும்,—செய்தி - மனம் வாக்குக் காயங்களினாற் செய்யப்படும் செயலும் ஆகிய,—இவை பல கொண்டு - இவை பலவற்றையும் தனக்குத் துணையாகக்கொண்டு,—கன்மம் பண்ணுவது உண்பது ஆனல் - கன்மம் செய்யப்படுவதும் அவற்றின் பயன் நுகரப்படுவதும் என்பது எல்லார்க்கும் பொருத்தமுடைமையின்,—இவை தாம் சென்று நிலவிடா - உலகுடல் முதலிய இவை சடமாதலால் மறுமைக்கண் தாமாகச் சென்று உயிரைப் பொருந்தா,—உயிர் நினைந்து நிறுத்திக்கொள்ளாது - தனு கரணங்களையின்றி அறியமாட்டாத சிற்றறிவுடைய உயிர் தானாக அவற்றை அறிந்து கூட்டிக்கொள்ள மாட்டாது. ஆகையால்,—அலகு இலா அறிவன் - அளவிட்டறிதற்கரிய சுதந்திர அறிவையுடைய முதல்வன்,—அருளினல் - உயிர்கள்மேற்கொண்ட கருணை காரணமாக,—ஆணை அணைத்திடும் - தனது சத்தியால் உலகுடல் முதலியவற்றை அவ்வுயிர்களுக்குப் பொருத்துவன்,

பொழிப்பு. வினைப்பயன்களையும், தனு கரணாதிகளையும் முதல்வன் தனது ஆணையால் உயிர்களுக்குக் கூட்டுவன்.

(c). ஈனமில் செய்தி ஈசனிடம் பணியா மாறும், இவை நாஞ்செய்தால் நானங்களதிகம் நோக்கி நுகர்விக்கு மாறும், (**113-119**).

இயமநியமங்கள் புண்ணிய கருமம். அவற்றின் பயன் முதல்வனே தருவன்.

**113.** ஒழுக்கமன் பருளா சார முபசார முறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவ டக்க மறிவொடர்ச் சித்த லாதி
இழுக்கிலா வறங்க ளானு லிரங்குவான் பணிய றங்கள்.

(இ - ள்). ஒழுக்கம் - உயர்ந்தாரோடு பொருந்தநடத்தலுடைமை,—அன்பு - யாவரிடத்தும் அன்புடைமை,—அருள் - கருணையுடைமை,—ஆசாரம் - தத்தம் குலத்திற்குரிய கிரியைகளை அனுட்டித்தலுடைமை,—உபசாரம் - தக்கோரிடத்துச் செய்யும் உபசரிப்புடைமை,—உறவு - யாவரிடத்தும் நண்புடைமை,—சீலம் - நற்குணமுடைமை,—வழுக்கு இலாத் தவம் - ஐம்பொறி அடக்கல் விரதங்காத்தல் முதலிய வழுவுதலில்லாத தவமுடைமை,—தானங்கள் - தக்கோர்மாட்டு உவகையோடு செய்யும் தானங்களுடைமை,—வந்தித்தல் - தன்னின் மூத்தோரிடத்து வழிபாடுடைமை,—வணங்கல் - வணங்குதலுடைமை,—வாய்மை - மெய்ம்மையுடைமை,—அழுக்கு இலாத் துறவு - பிறர்மனை விழையாமை வரைவின் மகளிரை விழையாமை முதலிய குற்றமில்லாத ஆண்டகைமையுடைமை,—அடக்கம் - தீநெறிக்கட் செல்லாது அடங்குதலுடைமை,—அறிவொடு - தக்கன இவை தகாதன இவை எனப் பகுத்தறிதலுடைமை,—அர்ச்சித்தல் ஆதி - தன்னின் மூத்தார்மாட்டு அர்ச்சித்தலுடைமை முதலியன,—இழுக்கு இலா அறங்கள் ஆனால் - குற்றமில்லாத அறங்கள் என்பது உனக்கு உடம்பாடாயிருத்தலின்,—இரங்குவான் பணி அறங்கள் - அவை கருணைகூர்ந்து அருள்செய்யும் முதல்வன் விதித்த விதிகளாகும்.

குறிப்பு. ஒழுக்கம் முதலியன அறஞ்செய்வார் யாவர்க்கும் வேண்டப்படும் பொதுநன்மைகள். இவை இயமநியமங்கள் என்னும் இரண்டிலும் அடங்கும்.

பொழிப்பு. ஒழுக்கம் முதலிய நன்மைகளை ஒருவன் அனுட்டித்துவரின், முதல்வன் அவற்றைத் தன் பணியாக ஏற்றுப் பயனளிப்பன்.

இச்சித்த தெய்வ வழிபாடு புண்ணியகருமம். அதன் பயனை முதல்வனே தருவன்.

**114.** மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கும்
முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே.

(இ - ள்). சினம் முதல் அகற்றி - மேற்கூறிய ஒழுக்கம் முதலிய நன்மைகளை அனுட்டித்து அவற்றிற்குமாறாய கோபம் முதலிய தீமைகளை நீக்கி,—அங்கு இச்சித்த தெய்வம் - தன் கருத்துக்கு இயைந்த ஒரு கடவுளை,—மனமது நினைய - மனத்தால் நினைந்து,—வாக்கு வழுத்த - வாக்காலே துதித்து,—மந்திரங்கள் சொல்ல - மந்திரங்களை உச்சரித்து,—கையில் இன மலர் கொண்டு போற்றி - கைகளால் இனமாகிய மலர்களை எடுத்து அர்ச்சித்து வணங்கி,—வாழும் செயல் அறம் ஆனல் - வாழ்கின்ற செயல் அறம் என்பது உனக்கு உடம்பாடாதலின்,—யார்க்கும் முனம் ஒரு தெய்வம் - எல்லாத் தெய்வங்களுக்கும் முன்னுள்ள ஒப்பற்ற பரமசிவனே,—செயற்கு - அச்செயலுக்கு,—எங்கும் முன்னிலையாம் - அத் தெய்வத்தினிடமாக முன்னின்று பயனளிப்பன்.

குறிப்பு. சினமுதல் - கோபம் கொலை களவு கள் காமம் முதலிய பாவச்செயல்கள். காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் எனினுமாம்.

பொழிப்பு. பாவத்தை ஒழித்துப் புண்ணியத்தைச் செய்யும் ஒருவன் தான் விரும்பிய ஒரு தெய்வத்தை வழிபட்டு வாழும் செயலை உடையவனாயின், சிவபெருமான் அத் தெய்வத்தினிடமாக நின்று அச் செயலை ஏற்றுப் பயனளிப்பன்.

எத்தெய்வத்தை வழிபடினும் முதல்வனே பயன்கொடுப்பன்
என்பதற்கு ஏது.

115 யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யும்
ஆதலா னிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே.

(இ - ள்). யாதொரு தெய்வம் கொண்டீர் - நீர் யாதொரு தெய்வத்தைப் பொருளாகக்கொண்டு வழிபட்டீரோ,—அத் தெய்வமாகி - அத்தெய்வமாகி,—மாது ஒரு பாகனார்தாம் - தேவியை ஒருபாகத்திலுடைய சிவபிரானே,—ஆங்கே வருவர் - அவ்விடத்து எழுந்தருளிவந்து நின்று உமது வழிபாட்டை ஏற்றுப் பயனளிப்பர். ஏனெனின்,—மற்று அத் தெய்வங்கள் - சொல்லப்பட்ட அத்தெய்வங்கள்,—வேதனைப்படும் - துக்கங்களை அடையும்,—இறக்கும் பிறக்கும் - இறத்தலும் பிறத்தலும் செய்யும்,—மேல் வினையும் செய்யும் - அன்றியும் நல்வினை தீவினைகளையுஞ் செய்யும்,—ஆதலால் - ஆகையால்,—இவை இலாதான் - இவைகளொன்றுமில்லாத அச் சிவபிரானே,—அறிந்து அருள் செய்வன் - ஆன்மாக்களின் செயல்களை அறிந்து அருள் செய்வார்.

குறிப்பு. யோனிவாய்ப்பட்டுப் பிறப்பவை எவையோ அவையெல்லாம் உயிர்கள். அப்படிப் பிறத்தல் இல்லாதது யாதோ அது பதிப்பொருள்.

“எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ், சொல்லாற் றெளிந்தோஞ் சோணேச—னில்லிற், பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண், டிறந்தகதை யுங்கேட்டி லேம்” என்று அருணகிரியந்தாதியிற் கூறியபடி, சிவபிரானையொழிந்த ஏனைத் தேவர்களெல்லாம் பிறந்திறந்து வேதனைப் பட்ட கதையும், மேலே சார்தற்குரிய வினைகளைச்செய்த கதையும், அவ்வத் தேவர்களது இயல்பு கூறும் நூல்களால் அறியப்படுகின்றன. ஆதலால் அவர் உயிர்வர்க்கத்தவரே என்பது தானே விளங்கும். அவரிடத்துப் பதித் தன்மை இல்லாமையால், அவர் பிறர்செய்யும் வழிபாட்டை அறிந்து ஏற் றற்கும் பயன் அளித்தற்கும் வல்லவராகார். பிறந்திறவாப் பெருவாழ்வா கிய சிவபெருமான் ஒருவரே பதித்தன்மையுடையவர். ஆதலால், அவரே அவ்வத் தேவர்களிடமாக நின்று அவரவர் செய்யும் வழிபாட்டை அறிந்து பயனளிக்க வல்லவராவர்.

பொழிப்பு. ஏனைத் தேவர்கள் வினை வயப்பட்டுப் பிறந்திறக்கும் உயி ரியல்புடையோர். அவர் உயிர்கள் செய்யும் வழிபாட்டை ஏற்றுப் பயனளிக்க வல்லவராகார். சிவபெருமான் ஒருவரே வினைவயத்தராதலின்றி அவ்வத் தேவர்களிடமாக நின்று உயிர்கள் செய்யும் வழிபாட்டை ஏற்றுப் பயன ளிக்க வல்லவராவர்.

மேலதனை உவமைமுகத்தால் விளக்கி வலியுறுத்தல்.

**116.** இங்குநாஞ் சிலர்க்குப் பூசை யியற்றினு லிவர்க ளோவந்
தங்குவான் றருவா ரன்றே லத்தெய்வ மத்த னைக்காண்
எங்கும்வாழ் தெய்வ மெல்லா மிறைவனு ணையினு னிற்ப
தங்குநாஞ் செய்யுஞ் செய்திக் காணைவைப் பால ளிப்பன்.

(இ - ள்). சிலர்க்கு இங்கு நாம் பூசை இயற்றினுல் - பசு பிராமணர் தந்தை தாய் முதலாயினேருக்கு இம்மையிலே நாம் பூசை செய்து வழிபட் டால்,—இவர்களோ வந்து அங்கு வான் தருவார் - இவர்களோ வந்து மறு மைக்கண்ணே பயன் தருபவர்,—அன்றேல் - இவரல்லராயின்,—அத் தெய் வம் அத்தனைக் காண் - அத் தேவர்களும் அவ்வளவேயன்றிப் பயன் கொடுக்க வல்லவரல்லர் என அறிவாயாக,—எங்கும் வாழ் தெய்வம் எல்லாம் நிற் பது - எவ்விடத்துமுள்ள தேவர்கள் யாவும் நிற்பது,—இறைவன் ஆணையி னுல் - சிவபெருமானது சத்தியால் அதிட்டிக்கப்பட்டேயாம்,—அங்கு நாம் செய்யும் செய்திக்கு - அவரிடத்து நாம் செய்யும் வழிபாட்டுக்கு,—ஆணை வைப் பால் அளிப்பன் - அச்சிவபெருமான் அச்சத்திவழியாகப் பயன் தருவன்.

குறிப்பு. அத்தனை - அவ்வளவு. தனை - அளவு.

பொழிப்பு. தெய்வங்களெல்லாம் சிவபெருமானது சத்தியால் அதிட் டிக்கப்பட்டு நிற்பவராதலால், அவைகளிடத்து நாம் செய்யும் வழிபாடுகளுக் குச் சிவபெருமானே தனது சத்திவழியாகப் பயன் கொடுப்பன்.

சிவனை வழிபடல் மேலான புண்ணியம்.

**117.** காண்பவன் சிவனே யானு லவனடிக் கன்பு செய்கை
மாண்பற மரன்றன் பாத மறந்துசெ யறங்க ளெல்லாம் [ன்
வீண்செய லிறைவன் சொன்ன விதியறம் விருப்பொன் றில்லா
பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே.

(இ-ள்). காண்பவன் சிவனே ஆனுல் - இங்ஙனம் எனைக் கடவுளரிடத்துச் செய்யும் வழிபாடுகளை அறிந்து அவற்றிற்குப் பயன் அளிப்பவன் சிவபெருமான் என்பது பெறப்படுதலின்,---அவன் அடிக்கு அன்பு செய்கை - அவன் திருவடியை அன்பினுல் வழிபடுதல்,—மாண்பு அறம் - சிறந்த புண்ணியமாம்,—அரன்றன் பாதம் மறந்து செய் அறங்கள் எல்லாம் - அம்முதல்வனது திருவடியை மறந்து செய்கின்ற புண்ணியங்கள் யாவும்,—வீண் செயல் - பயனற்ற செயல்களாகும்,—அறம் இறைவன் சொன்ன விதி - அறமாவது முதல்வன் வேதாகமங்களிற் கூறிய விதிகளாதலாலும்,—விருப்பு ஒன்று இல்லான் பூண்டனன் - அவ்விதிகள்வழி ஒழுகுவோருக்கு ஒன்றினும் விருப்பிலனுகிய அம்முதல்வன் பயனளிக்க விருப்பங்கொண்டனனுதலாலும்,—வேண்டல் செய்யும் பூசனை புரிந்துகொள் - அவனது திருவடிக்கு அன்புசெய்யும் வழிபாட்டை நீ செய்வாயாக.

குறிப்பு. பாவங்களை ஒழித்து ஒழுக்கம் முதலிய புண்ணியங்களைச் செய்தல் யாவர்க்கும் பொதுவாயுள்ள அறங்களாம். அப் புண்ணியங்களைச் செய்தலோடு இச்சித்த தெய்வம் போற்றுதல் அவற்றினும் சிறந்த புண்ணியமாம். சிவபெருமானை வழிபடல் அதனினும் சிறந்த புண்ணியமாம். என்னை? எல்லாவழிபாடுகளையும் ஏற்றுப் பயனளிப்பவர் அவரேயாதலின் என்க. புண்ணியங்களைச் செய்யும்பொழுதும், சிவபிரானை மறந்து செய்யின் அவை வீண்செயல்களாம். என்னை? வேதாகமங்களில் விதித்த விதிகளே புண்ணியங்களாதலால், அவற்றைச்செய்து, அவற்றை விதித்த இறைவனை மறந்தால், ஏற்றற்கும் பயன் தருதற்கும் ஒருவர் இல்லையாதலின் என்க.

பொழிப்பு. மற்றைக் கடவுளரிடத்துச் செய்யும் வழிபாடுகளையும் ஏற்றுப் பயனளிப்பவர் சிவபெருமானேயாதலால், அவரை வழிபடுதலே விசேட புண்ணியமாம். ஆதலால், அவர் திருவடிப்பூசையே செய்யத்தக்கதாம்.

சிவனை வழிபடும் முறைமை.

**118.** தாபர சங்க மங்க ளென்றிரண் டுருவி னின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்
நீபரன் றன்னை நெஞ்சி னினைவையே னிறைந்த பூசை
ஆய்பரம் பொருளை நாளு மர்ச்சிநீ யன்பு செய்தே.

(இ-ள்). தாபர சங்கமங்கள் என்ற இரண்டு உருவில் நின்று - சிவலிங்கம் சிவனடியார் என்று சொல்லப்பட்ட இரண்டு திருமேனிகளையும் ஆகார

மாகக்கொண்டு நின்று.—மாபரன் - மாட்சிமையுடைய பரமசிவன்,—பூசை கொண்டு - ஆன்மாக்கள் பத்தியோடு புறத்தே செய்யும் பூசையை ஏற்று,—மன் உயிர்க்கு அருளை வைப்பன் - நிலைபெற்ற அவ்வான்மாக்களுக்கு அருள் செய்வன்,—நீ பரன் தன்னை நெஞ்சில் நினைவையேல் - நீ அப் பரமசிவனை அகத்தே தியானிப்பாயாயின்,—நிறைந்த பூசை - அதனைப் பரிபூரண பூசையாக அவ்வகத்தே உயிரிடமாகக்கொண்டு நின்று ஏற்று அருள்செய்வன். ஆதலால்,—ஆய் பரம் பொருளை - இவ்வாறு அறியப்படும் அப் பரமசிவனை,—நாளும் நீ அன்பு செய்து அர்ச்சி - நாடோறும் நீ பத்திசெய்து வழிபடுவாயாக.

பொழிப்பு. முதல்வன் புறத்தே சிவலிங்கமாகிய திருமேனியும் சிவனடியாரும் ஆதாரமாகக்கொண்டு நின்றும், அகத்தே உயிரிடமாகக்கொண்டு நின்றும் இங்குள்ளவர் செய்யும் பூசைகொண்டருளுவனாதலால், அவனை அவ்விடங்களில் வழிபடுக.

சிவனடிக் கன்பு செய்கை மாண்பறம் என்பதை
உவமைமுகத்தால் விளக்கல்.

**119.** அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே.

(இ - ள்). அரன் அடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறமது ஆகும் - பரமசிவனது திருவடிகளுக்கு அன்புடையார் செய்யும் பாவச்செயல்களும் அறங்களாய் முடியும்,—பரன் அடிக்கு அன்பு இலாதார் புண்ணியம் பாவம் ஆகும் - பரமசிவனது திருவடிகளுக்கு அன்பிலாதவர் செய்யும் புண்ணியச் செயல்கள் பாவங்களாய் முடியும். அது,—வரம் உடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை ஆகி - தேவரில் வரங்கள் பெற்றுடைய தக்கன் செய்த பெரிய யாகமாகிய புண்ணியம் பாவமாகியும்,—நரரினில் பாலன் செய்த பாதகம் நன்மை ஆய்த்து - மானுடரிற் சிறுபிள்ளையாகிய சண்டேசநாயனார் செய்த கொலைப்பாதகம் புண்ணியமாகவும் முடிந்தது என்பதனால் அறியப்படும். ஆதலால் மாண்பறமாகிய திருவடிப்பூசனை புரிந்துகொள்வாயாக.

குறிப்பு. 1. புண்ணிய பாவங்கள் பயன் தருவது செய்பவரது வன்மை மென்மை பற்றியன்று. செய்யப்பட்ட வினைகளின் வன்மை மென்மை பற்றியுமன்று. கொள்வாரது வன்மை மென்மைபற்றியேயாம்.

2. வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி - தக்கன் பிரமாவின் புத்திரன். சகல வேதங்களையும் ஓதி உணர்ந்தவன். படைக்குந்தொழில் செய்யும் வன்மையும் பெற்றவன். பிரமன் விட்டுணு முதலிய தேவரும் சகல முனிவரும் அஞ்சத்தக்க ஆற்றலும் பெற்றவன். இத்துணைப் பெருமையுடைய தக்கன் வேதத்தில் விதிக்கப்பட்ட புண்ணியங்களுள் ஒன்றாகிய

வேள்வியை அவ் வேதவிதிப்படி தவறாது செய்தும், அவ்வேள்வியை விதித்த தலைவராகிய சிவபெருமானை மறந்து செய்தமையால், அது சிவத்துரோக மாகிய பாவமாகி அழிக்கப்படுவதாயிற்று. இதனாற் செய்பவனது வன்மை பற்றிப் புண்ணியகருமம் பயன் தருவதன்று என்பது பெறப்படும்.

3. நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்து - சண்டேசநாய ஞர் மாநுடர். பாலிய பருவமுள்ளவர். அவர் செய்தது கொலைப்பாதகம். ஆயினும், அப் பாதகம் தனது வன்மையால் அவருக்குப் பயனளிக்க இயலாததாயிற்று. எல்லாம் வல்ல சிவபெருமான் அவரன்பின் செயலை அறிந்து புண்ணியமாகக்கொண்டு, அதற்குப் பயனாகச் சண்டேசபதத்தை அருளினர். இதனாற் பாவகருமம் செய்பவனது மென்மைபற்றியன்று, கொள்பவனது மென்மைபற்றிப் பயன்தரும் என்பது பெறப்படும்.

பொழிப்பு. புண்ணிய பாவங்கள் பயன் தருவது செய்பவர் அல்லது செய்த வினைகளின் வன்மை மென்மைபற்றியன்று. கொள்பவரது வன்மை மென்மைபற்றியேயாம். அதற்குத் தக்கனும் சண்டேசநாயனருமே சான்ருவர். ஆதலால், சிவபிரானுடைய திருவடிப்பூசையே அன்போடுஞ் செய்யற்பாலது.

---

3. தரணியோடு தராபதி போலத் தரும், (120-125).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

(a). முதல்வன் வினைப்பயனைத் தராபதிபோலத் தருவன், (120-122).
- உயிர்கள் யாவுக்கும் இன்பத்துன்பங்கள் முதல்வன் ஆணையால் அணையும், (120).
- மேலதனை உவமைமுகத்தால் விளக்கல், (121).
- அரசன்செயலும் முதல்வன் ஆணைவழிப்பட்டது, (122).

(b). முதல்வன் வினைப்பயனைத் தரணிபோலத் தருவன், (123-125).
- முதல்வன் தரணிபோல இன்பத்துன்பங்களை நுகர்வித்து இருவினையைப் போக்குவன், (123).
- முதல்வன் தரணிபோலத் துன்பத்தை நுகர்வித்துப் பாவத்தைப் போக்கும் முறைமையை விளக்கல், (124).
- முதல்வன் தரணிபோல இன்பத்துன்பங்களை நுகர்வித்துப் புண்ணிய பாவங்களைப் போக்கும் முறைமையை விளக்கல், (125).

(a). முதல்வன் வினைப்பயனைத் தராபதிபோலத் தருவன், 120-122).

உயிர்கள் யாவுக்குட் இன்பத்துன்பங்கள் முதல்வன் ஆணையால் அணையும்.

120. மறைகளீ சன்சொ லச்சொல் வழிவரா வுயிரை வைக்குஞ்
சிறைகண்மா நிரய மிட்ட பணிசெய்வோர் செல்வத் தோடும்
உறையுமா பதிக ளும்ப ருலகங்கள் யோநிக் கெல்லாம்
இறைவனா ணையினா லின்பத் துன்பங்க ளியைவ தாகும்.

(இ - ள்). மறைகள் ஈசன் சொல் - வேதாகமங்கள் சிவபெருமான் அருளிய வாக்குகளாம்,—அச்சொல் வழிவரா உயிரை வைக்கும் சிறைகள் - அவ்வாக்குகளின்படி நடவாத உயிர்களைத் தண்டித்தற்பொருட்டு அவனால் அமைக்கப்பட்ட சிறைச்சாலைகள்,—மா நிரயம் - பெரிய நரகங்களாம்,—இட்ட பணி செய்வோர் - அவ் வேதாகமங்களில் விதித்த விதிகளின்படி நடப்போர்,—செல்வத்தோடும் உறையும் மா பதிகள் - செல்வத்தோடும் வாழ்கின்ற மேன்மையுடைய இடங்கள்,—உம்பர் உலகங்கள் - மேலுள்ள சுவர்க்கம் முதலியனவாம்,—யோநிக் கெல்லாம் - இச் சுவர்க்க நரகங்களை அடையும் உயிர்களுக்கேயன்றி எல்லா உயிர்களுக்கும்,—இன்பத் துன்பங்கள் - இன்பமும் துன்பமும்,—இறைவன் ஆணையினால் இயைவது ஆகும் - முதல்வன் ஆணையினால் வந்து கூடுவதாகும்.

குறிப்பு. யோநிக் கெல்லாம் - இன்பத் துன்பங்கள் முதல்வன் ஆணையினால் இயைவது, சுவர்க்க நரகவாசிகளுக்கேயன்றி, 112-ம் செய்யுளிற் கூறியவாறு இவ்வுலகத்தோருக்கும் ஏனையோருக்குமாம் என்பார் "யோநிக் கெல்லாம்" என்றார். யோநிக் கெல்லாம் - யோநிகளையுடைய எல்லா உயிர்களுக்கும். யோநி - தேகம், சரீரம். அவை பூதபரிணாம பூதசார பூதசரீரங்கள். (செ. 126 பார்).

பொழிப்பு. வேதாகமங்கள் முதல்வன் அருளிய வாக்குகள். அவ்வாக்குகளின்படி ஒழுகாதார் தண்டிக்கப்படுஞ் சிறைச்சாலைகள் நரகங்களாம். அவற்றின்படி ஒழுகுவோர் சுகம்பெற்று வாழ்கின்ற இடம் சுவர்க்கம் முதலிய மேலுலகங்களாம். இச்சுவர்க்க நரகவாசிகளுக்கேயன்றி எல்லா உயிர்களுக்கும் இன்பத்துன்பங்கள் முதல்வன் ஆணையாற் பொருந்துவனவாம்.

மேலதனை உவமைமுகத்தால் விளக்கல்.

121. ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய் யாரை
ஆணையிற் றண்டஞ் செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்பன்
ஆணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வ நல்கி
ஆணையும் வைப்ப னெங்கு மாணையே யாணை யேகாண்.

(இ - ள்). அவனி மன்னன் - பூமியில் வாழும் அரசன்,—ஆணையால் - தனது அதிகாரசத்தியால் அமைத்த,—அருமறை முறை செய்யாரை - அரிய விதிப்படி நடவாதவரை,—ஆணையின் தண்டம் செய்தும் அரும் சிறை இட்டும் வைப்பன் - தனது அதிகாரசத்தியாலே தண்டித்தும் பொறுத்தற்கரிய சிறைச்சாலையிலிட்டும் வைப்பன்,—ஆணையின் வழி செல்வோருக்கு - அவ்விதியின்வழி நடப்போருக்கு,—அரும்பதி செல்வம் நல்கி - கிடைத்தற்கரிய ஊர்களும் செல்வமும் கொடுத்து,—ஆணையும் வைப்பன் - தன்கீழ் அதிகாரம் செய்யவும் வைப்பன்,—எங்கும் ஆணையே ஆணையே காண் - இராச்சியமெங்கும் அவ்வதிகாரசத்தியே யாவரையும் வாழ்விப்பதும் தண்டிப்பதுமாகும். அதுபோல முதல்வனிடத்தும் கண்டுகொள்க.

குறிப்பு. அரசன் வாழ்வித்தலுந் தண்டித்தலுந் தனது அதிகாரசத்தியினாற் செய்வதுபோல, முதல்வனும் இன்பத்துன்பங்களைத் தனது ஆணையினால் ஊட்டுவன் என்பது. அரசனது அதிகாரசத்தி முதல்வனது ஆணைக்கு உவமையாகும்.

பொழிப்பு. கட்டளைப்படி நடவாதவரை அரசன் தனது அதிகாரசத்தியினாலே தண்டிப்பன். கட்டளைப்படி நடப்போரை அவ்வதிகாரசத்தியினாலே வாழ்விப்பன். இராச்சியமெங்கும் இவ்வதிகாரசத்தியினால் யாவரையும் வாழ்வித்தலுந் தண்டித்தலுஞ் செய்வன். முதல்வனும் அதுபோலவே செய்வன்.

அரசன்செயலும் முதல்வன் ஆணைவழிப்பட்டது.

122. அரசனுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற் றீய தண்டலில் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமு நீர்மை யீதாம்.

(இ - ள்). அரசனும் செய்வது - அரசன் மேற்கூறியவாறு அரும்பதி செல்வம் முதலியவற்றைக் கொடுத்தலன்றித் தண்டித்தலும்,—ஈசன் அருள் வழி - முதல்வனது அருள்வழிப்பட்டதாம். அஃதெங்ஙனமெனின்,—தரையுளோர் அரும் பாவங்கள் செய்யின் - இப்பூமியிலுள்ளோர் அரிய பாவங்களைச் செய்யின்,—தீய தண்டலில் வைத்து - அரசனானவன் கொடிய தண்டனை செய்து,—தண்டத்து உரை செய்து தீர்ப்பன் - அங்ஙனம் தண்டிக்குமிடத்து மேலும் பாவஞ்செய்யின் இன்னும் கொடிய தண்டஞ் செய்வன் எனச் சொல்லி அப்பாதகங்களை ஒழிப்பன்,—தூயோர் பின்பு சொல்வழி நடப்பர் - அறிவுடையோர் பின்பு விதிப்படி நடந்து,—நிரயமும் சேரார் - நரகத்தையும் அடையார்,—அந்த நிரயமும் ஈது நீர்மை ஆம் - அந்த நரகதண்டமும் இந்த அரசதண்டத்தன்மையதாயிருக்கும்.

குறிப்பு. 1. அரசன் இவ்வுலகத்திற் குற்றஞ்செய்தவரை அக்குற்றத்தின்பொருட்டுத் தண்டித்துச் சிறையிட்டும்வைப்பன். அதனால் அவர் செய்த பாவம் இம்மையிலே தீர்ந்து பின் நரகத்தை அடையமாட்டார். ஆதலால் அரசன்செய்வதும் முதல்வன் ஆணைவழிப்பட்டது என்று இங்கே சொல்லப்பட்டது. அப்படியாயின், இம்மையிற்செய்த பாவம் இம்மையிற்றானே பலிக்குமோவெனின், சில பாவகன்மங்கள் இம்மையிலே பக்குவப்பட்டு இந்தச் சரீரத்திற்றானே அவற்றின் பயனை அனுபவிக்கவேண்டியனவாய் வரும். அப்படிவருபவைகளை இம்மையிலேயே அனுபவித்து ஒழித்தலுங் கூடும். அவ்வினை ஒழிந்தமையாற் பின்பு அதன்பொருட்டு நரகத்துன்பம் வரமாட்டாது. அவ்வாறே இப்பொழுது பக்குவமாகாமல் மறுமையிற் பக்குவமாகுமாயின், அது மறுமையில் அனுபவமாம். இம்மையிற் பக்குவமாகி இம்மையில் அனுபவத்துக்கு வரும் வினை திருஷ்ட ஜன்மோப போக்கிய கன்மம் எனப்படும். இம்மையிற் செய்த வினை மறுமையிற் பக்குவமாகி

மறுமையில் அனுபவத்துக்குவரின், அது அதிருஷ்ட ஜன்மோப போக்கிய கன்மம் எனப்படும். இவ்விருவகையுமின்றி இன்னகாலத்திற் பக்குவமாம் என்றும், இன்னகாலத்தில் அனுபவத்துக்கு வரும் என்றும் சொல்லுதற்கிடமின்றிநின்று, காலாந்தரத்திற் பக்குவமுற்று, ஏதேனும் ஒரு சன்மத்தில் அனுபவத்துக்குவர நிற்கும் கன்மம், அநியத காலோப போக்கிய கன்மம் எனப்படும். இப்படி நல்வினை தீவினைகள் அனுபவத்துக்குவருதல் மூவகையாகி நிகழும்.

2. "பாவங்கள் செய்யிற் றீய தண்டலில் வைத்துத் தண்டத் துரைசெய்து தீர்ப்பன், அந்த நிரயமு நீர்மை யீதாம்" எனவே புண்ணியஞ்செய்யினும் அதற்குரிய வரிசையில் வைத்துத் தீர்ப்பன், அந்தச் சுவர்க்கமு நீர்மை யீதாம் என்பதும் பெறப்படும்.

பொழிப்பு. இப்பூமியிலே செய்யும் பெரிய பாவங்கள் அரசதண்டனையினால் ஒழிதலாலும், பின்பு அப்பாவங்களுக்கு நரகதண்டனையில்லாமையாலும், நரகதண்டனையும் அரசதண்டனையைப்போன்றிருத்தலாலும், அரசன் செய்யும் தண்டனையும் முதல்வன் அருள்வழிநின்று செய்வதாம்.

(*b*). முதல்வன் வினைப்பயனைத் தரணிபோலத் தருவன், **(123-125)**.

முதல்வன் தரணிபோல இன்பத்துன்பங்களை நுகர்வித்து இருவினையைப் போக்குவன்.

**123.** அருளினா லுரைத்த நூலின் வழிவரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க டீர்க்கு மருந்திவை வயித்திய னாதன்.

(இ-ள்). அருளினால் உரைத்த நூலின்வழி வராது - முதல்வன் கருணையினால் உரைத்தருளிய வேதாகம நூல்வழி நடவாது,—அதன்மம் செய்யின் - பாவஞ் செய்யின்,—இருள் உலாம் நிரயத் துன்பத்து இட்டு - இருள் நிறைந்த நரகத்திற் செலுத்தித் துன்பத்தினை நுகர்வித்து,—இரும் பாவம் தீர்ப்பன் - பெரிய பாவத்தினை ஒழிப்பன்,—பொருள் உலாம் சுவர்க்கம் ஆதி போகத்தால் - அந்நூல்வழி நின்று புண்ணியஞ்செய்யின் இன்பத்துக்கேதுவாகிய பொருள்கள்தங்கிய சுவர்க்கம்முதலிய இடங்களில் வைத்து இன்பத்தை நுகர்வித்தலால்,—புணியம் தீர்ப்பன் - அப்புண்ணியத்தை ஒழிப்பன்,—இவை - இன்பத்துன்பங்களாகிய இவை,—மருள் உலாம் மலங்கள் தீர்க்கும் மருந்து - மயக்கத்தைத்தரும் புண்ணிய பாவங்களாகிய நோய்கள் இரண்டினையும் தீர்த்தற்குரிய மருந்தாம்,—நாதன் வயித்தியன் - முதல்வன் வயித்தியனாவன்.

பொழிப்பு. பாவஞ்செய்யின் முதல்வன் துன்பத்தைக் கொடுத்து அப்பாவத்தை ஒழிப்பன். புண்ணியஞ்செய்யின், இன்பத்தைக் கொடுத்து அப்

புண்ணியத்தைத் தீர்ப்பன். இவ்வின்பத்துன்பங்கள் வினைநோய்க்கு மருந்தாகும். முதல்வன் வயித்தியனாவன்.

முதல்வன் தரணிபோலத் துன்பத்தை நுகர்வித்துப் பாவத்தைப் போக்கும் முறைமையை விளக்கல்.

**124.** மருத்துவ னுரைத்த நூலின் வழிவரிற் பிணிகள் வாரா
வருத்திடும் பிணிக டப்பிற் றப்பிய வழியுஞ் செய்யத்
திருத்துவன் மருந்து செய்யா துறும்பிணி சென்றுந் தீர்ப்பன்
உரைத்தநூற் சிவனு மின்னே யுறுங்கன்ம மூட்டித் தீர்ப்பன்.

(இ - ள்). மருத்துவன் உரைத்த நூலின் வழிவரின் - வைத்தியன் சொன்ன சாத்திரமுறைப்படி ஒழுகிவரின்,—பிணிகள் வாரா - வியாதிகள் உண்டாகா,—தப்பின் பிணிகள் வருத்திடும் - அங்ஙனம் ஒழுகாது தவறின் வியாதிகள் உண்டாகி வருத்தும்,—தப்பிய வழியும் செய்யத் திருத்துவன் - அங்ஙனம் தவறியவிடத்தும் மருந்துசெய்து அவ்வியாதியை மாற்றுவன்,—மருந்து செய்யாது சென்றும் உறும் பிணி தீர்ப்பன் - ஒருமருந்தும் செய்யாது சென்றும்பொருந்திய அவ்வியாதியைச் சாந்திமுதலியவற்றாலும் மாற்றுவன்,—உரைத்த நூல் சிவனும் - சொல்லப்பட்ட வேதாகமங்களை அருளிய சிவனும் அவ்வேதாகமங்களின்படி ஒழுகாதவிடத்து,—உறும் கன்மம் - வந்து பொருந்திய பாவ கன்மத்தை,—இன்னே ஊட்டித் தீர்ப்பன் - இத்தன்மையாகவே நுகர்வித்துத் தீர்ப்பன்.

குறிப்பு. 1. மருத்துவ னுரைத்த நூலின் வழிவரிற் பிணிகள் வாரா, வருத்திடும் பிணிக டப்பின் - வாகடநூலிற் கூறியபடி நடந்துவரிற் பிணிகள் வரா. அங்ஙனம் நடக்கத் தவறிற் பிணிகளுண்டாகித் துன்பத்தைத் தரும். அதுபோல, வேதாகமங்களிற் கூறிய விதிப்படி ஒழுகிவரின், பாவகன்மங்கள் பொருந்தா. அங்ஙனம் ஒழுகாதவிடத்துப் பாவகன்மங்களுண்டாகி அவற்றின் பயனாகிய துன்பம் அனுபவத்துக்கு வரும். அத்துன்பமும் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆத்தியான்மிகம் என மூவகைப்படும். ஆதிதைவிகம் - தெய்வந் தானே காரணமாக வருவது. ஆதிபௌதிகம் - பஞ்சபூதங்கள் வாயிலாக வருவது. ஆத்தியான்மிகம் - உயிர்களால் வருவது. பிணிகள் - பாவ கன்மம்.

2. தப்பிய வழியுஞ் செய்யத் திருத்துவன் - வாகடநூலின்படி நடவாது பிணியுண்டாகியவிடத்தும் வைத்தியன் மருந்தைக் கொடுத்து அப் பிணியைத் தீர்ப்பன். அதுபோல, வேதாகமங்களின்படி ஒழுகாது பாவகன்மம் பயன்தருமிடத்து. முதல்வன் துன்பத்தை அனுபவிக்கச்செய்து அப் பாவ கன்மத்தை ஒழிப்பன். செய்து என்பது ''செய்ய'' எனத் திரிந்து நின்றது.

3. மருந்து செய்யா துறும்பிணி சென்றுந் தீர்ப்பன் - துன்பத்தை அனுபவிக்கவிடாது சாந்தி முதலியவற்றாலும் அப்பாவகன்மத்தை நீக்குவன் என்பது. ''உற்றதொழி னினைவுரையி லிருவினையு முளவாம்.'' என்னும் சிவப்பிரகாசச் செய்யுளை நோக்குக. (சிவப்பிர. செ. 31).

பொழிப்பு. வாகட நூலின்வழி ஒழுகுமிடத்துப் பிணிகளுண்டாகா. அந்நூலின்வழி ஒழுகாதவிடத்துப் பிணிகளுண்டாகித் துன்பத்தை வருவிக்கும். அப்பிணிகளை வைத்தியன் மருந்துகொடுத்து மாற்றுவன். ஒரு மருந்துங் கொடாது சாந்தி முதலியவற்றைச் செய்வித்தும் மாற்றுவன். அதுபோல, வேதாகமவிதிப்படி ஒழுகுமிடத்துப் பாவகன்மங்கள் வந்து பொருந்தா. அங்ஙனம் ஒழுகாதவிடத்துப் பாவகன்மங்கள் பொருந்தித் துன்பத்தை வருவிக்கும். முதல்வன் அப்பாவகன்மங்களால் வருந் துன்பத்தை அனுபவிக்கச் செய்து அவற்றை ஒழிப்பன். துன்பத்தை அனுபவிக்கவிடாது சாந்தி முதலியவற்றாலும் அப்பாவகன்மங்களை நீக்குவன்.

முதல்வன் தரணிபோல இன்பத்துன்பங்களை நுகர்வித்துப் புண்ணிய பாவங்களைப் போக்கும் முறைமையை விளக்கல்.

125. மண்ணுளே சிலவி யாதி மருத்துவ னருத்தி யோடுந்
திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாங்
கண்ணிய கட்டி பாலுங் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலு மின்பத் துன்ப மருத்தியே வினைய றுப்பன்.

(இ - ள்). மருத்துவன் - வைத்தியன்,—மண்ணுளே சில வியாதி - இவ்வுலகத்திலே சில் வியாதிகளை,—அருத்தியோடும் திண்ணமாய் - ஆதரவும் உறுதியுமுடையனாய்,—அறுத்துக் கீறித் தீர்த்திடும் - சத்திரமிட்டு அறுத்துக் கீறித் தீர்த்திடுவன்,—சில நோய் எல்லாம் - சில வியாதிகளையெல்லாம்,—கண்ணிய கட்டி பாலும் உடன்கலந்து கொடுத்துத் தீர்ப்பன் - கருதப்பட்ட சர்க்கரையும் பாலும் மருந்துடன் கலந்து கொடுத்துத் தீர்ப்பன். அதுபோல,—அண்ணலும் - முதல்வனும்,—இன்பத்துன்பம் அருத்தியே வினை அறுப்பன் - இன்பத்துன்பங்களாகிய மருந்தை நுகர்வித்து இருவினையாகிய நோயைத் தீர்ப்பன்.

பொழிப்பு. வைத்தியன் சில நோய்களை அறுத்துக் கீறியும், சில நோய்களைச் சர்க்கரையும் பாலும் மருந்தோடு கலந்து கொடுத்துந் தீர்ப்பன். அதுபோல, முதல்வனும் இன்பத்துன்பங்களாகிய மருந்தைக் கொடுத்து இருவினைநோயை மாற்றுவன்.

---

4. இன்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து போவதாதும், (126-128). இதில் அடங்கிய விஷயங்கள்:—

(*a*). உயிர்கள் சுவர்க்க நரகங்களில் இன்பத்துன்பங்கள் நுகரும் முறைமை, (**126**).

(*b*). பூதனுசரீரம் போனால் உயிர்கள் சரீரங்களை எடுக்கும் முறைமை, (**127**).

(*c*). சுவர்க்க நரகங்களுக்குச் செல்லும் உயிர்களின் நிலைமையை உவமை முகத்தால் விளக்கல், (**128**).

(a). உயிர்கள் சுவர்க்க நரகங்களில் இன்பத்துன்பங்கள் நுகரும் முறைமை.

126. பூதனா சரீரம் போனாற் புரியட்ட ரூபந் தானே
யாதனா சரீர மாகி யின்பத்துன் பங்க ளெல்லாம்
நாதனா ராணை யுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்துத்
தீதிலா வணுவா யோனி சேர்ந்திடுஞ் சீவ னெல்லாம்.

(இ-ள்). பூதனாசரீரம் போனால் - மேற்கூறியவாறு பூமியிலே இன்பத் துன்பங்களை நுகர்தற்பொருட்டுப் பொருந்திய பூதபரிணாம சரீரமாகிய இத் தூலவுடம்பு நீங்கியவிடத்து,—புரியட்டரூபம் தானே - சூக்கும சரீரமே,— யாதனா சரீரமாகி - பூதசாரவுடம்பு பூதவுடம்புகளாகக் காரியப்படுதலால்,— சீவன் எல்லாம் - உயிர்கள் எல்லாம்,—நாதனார் ஆணை உய்க்க - முதல்வனது ஆணை செலுத்த அவ்வுடம்புகளோடு சென்று,—சுவர்க்கமொடு நரகு இன் பத் துன்பங்கள் எல்லாம் துய்த்து - சுவர்க்க நரகங்களில் யாதனா சரீரத் தோடு இன்பத் துன்பங்களெல்லாவற்றையும் அவ்வவற்றின் வினைக்கேற்ப நுகர்ந்து,—தீது இலா அணுவாய் - பின்பு அவ்வினைச்சேடம் அனுபவித்தற் குக் குற்றமில்லாத சூக்குமவுடம்போடு பூமியிற் சென்று,—யோனி சேர்ந் திடும் - பூதனாசரீரத்தைப் பொருந்தும்.

குறிப்பு. 1. பூதனா சரீரம் - பஞ்சபூதங்களும் பரிணமித்து உண்டாகிய சரீரம், அது பூமியில் எடுக்குந் தூலவுடம்பு. பரிணமித்தல் - ஒன்று பிறி தொன்றாதல்.

2. புரியட்டரூபம் - சூக்குமவுடம்பு. அது தன்மாத்திரை ஐந்தும் மனம் புத்தி அகங்காரம் என்னும் மூன்றும் ஆகிய எட்டுங் கூடிய உடம்பு. அணு வளவு பரிமாணமுள்ளது. சிருட்டிகாலம் முதற் சங்காரகாலமளவும் நிலை பெற்றுத் தூலசரீரங்கள் தோன்றுதற்குக் காரணமாயிருப்பது.

3. யாதனாசரீரம் - பூதவுடம்பு. பூதவுடம்பு - பஞ்சபூதங்களாலுமாக்கப் பட்டவுடம்பு. அது, நரகத்திலே துன்பத்தை அனுபவித்தற்குரிய தூல வுடம்பு. யாதனை - வேதனை, துன்பம். சுவர்க்கத்திலே அனுபவிக்கப்படும் இன்பமும் பிறவித்துன்பத்துக்கு ஏதுவாதலால், இங்கே யாதனா சரீரம் என்பது சுவர்க்க இன்பத்தை அனுபவித்தற்குரிய பூதசாரவுடம்பையுங் குறித்துநின்றது. பூதசாரவுடம்பு - பஞ்சபூதங்களின் சாரங்களாலாக்கப் பட்ட தூலசரீரம். இங்ஙனம் பூமி சுவர்க்கம் நரகம் என்னும் மூன்றிடங் களிலும் இன்பத்துன்பங்களை அனுபவித்தற்கு வேண்டப்படும் சரீரம் தூல சரீரமேயாம்.

4. "அணுவாய் யோனி சேர்ந்திடும்" எனவே உயிர் இவ்வுலகத்துக் குச் சூக்குமசரீரத்தைப்பற்றி வரும் என்பதும், "பன்னகம் துன்னு தோல் துறந்து செல்வதுபோல உயிர்கள் தூலவுடல்விட்டு வானினூடும் மன்னி டும்" (செ. 128.) எனவே, உயிர் சுவர்க்க நரகங்களுக்கு யாதனா சரீரத்தைப் பற்றிச் செல்லும் என்பதும் பெறப்படும்.

பொழிப்பு. இத்தூலவுடம்பு நீங்கியவிடத்துச் சூக்குமவுடம்பினின்றும் பூதசாரவுடம்பு பூதவுடம்புகளுண்டாம். உயிர்கள் அவ்வுடம்புகளோடு முதல்வன் ஆணை செலுத்தச் சென்று சுவர்க்க நரகங்களில் இன்பத்துன்பங்களை அனுபவித்து, அவற்றையும்விட்டு மீளவும் சூக்குமவுடம்போடு பூமியை அடைந்து பிறக்கும்.

(*b*). பூதஞசரீரம்போனல் உயிர்கள் சரீரங்களை எடுக்கும் முறைமை.

**127.** உடல்விடா யோனி பற்றி யுதிப்பினு முதிக்கு மொன்றிற்
படர்வுறு துறும்பா வத்தாற் பாடாணம் போற்கி டந்து
கடனதாங் காலஞ் சென்ருற் கடுநர கதனில் வீழ்ந்தங்
கிடருறு முருவங் கன்மத் தளவினி லெடுக்கு மன்றே.

(இ-ள்). உடல் விடா யோனி பற்றி - (மேற்கூறியவாறு பூதஞசரீரம் போனவிடத்து யாதனுசரீரத்தையும், யாதனுசரீரம் போனவிடத்துப் பூதனுசரீரத்தையும் எடாது) பூதஞசரீரமாகிய இத்தூலவுடம்பினைவிட்டு மற்ருெரு தூலவுடம்பைப் பொருந்தி,—உதிப்பினும் உதிக்கும் - பிறக்கினும் பிறக்கும்,—ஒன்றில் படர்வு உருது - ஒரு யோனியிலும் செல்லாது,—உறும் பாவத்தால் - மிகுந்த பாவத்தால்,—பாடாணம் போல் கிடந்து - அது பக்குவமாகுமளவும் கல்லுப்போல உணர்வின்றிக்கிடந்து,—கடனதாம் காலம் சென்ருல் - அங்ஙனங்கிடத்தற்குரிய காலம் சென்று பக்குவமானவிடத்து,—கடு நரகு அதனில் வீழ்ந்து - கொடிய நரகத்தின்கண் வீழ்ந்து,—அங்கு இடர் உறும் - அவ்விடத்துத் துன்புறுதலுமுண்டு,—கன்மத்து அளவினில் - பக்குவமான வினைக்கிடாக,—உருவம் எடுக்கும் - உயிர்கள் சரீரங்களை எடுக்கும்.

குறிப்பு. 1. உறும் பாவத்தால்:—உறுதல் - மிகுதல்.

2. பாடாணம்போற் கிடந்து கடனதாங் காலஞ்சென்ருல் - பாவம் பக்குவப்பட்டு அதன் பயனை அனுபவிக்குங் காலம் வருமளவும் உயிர் கல்லுப்போற்கிடக்கும் என்பது. எனவே, இனம்பற்றிப் புண்ணியப்பயனும் அவ்வாருதல் பெறப்படும்.

3. உருவங் கன்மத்தளவினி லெடுக்கும்:—வினைகள் பல பக்குவமுற்றுச் சுவர்க்கத்தையும் நரகத்தையும் இப்பூமியையும் ஒரேகாலத்திலே தரத்தக்கனவாயிருக்கும். அங்ஙனமாயினும், முதல்வனது ஆணையாகிய சிவசத்தி வினைகளின் வன்மை மென்மை நோக்கி, மெலியவினையை நிறுத்தி வலிய வினையின் பயனைக் கொடுத்தற்பொருட்டு, அதற்கேற்ற பிறவியிற் செலுத்தும். அஃதாவது, ஒரேகாலத்திற் சுவர்க்கத்தையும் நரகத்தையும் அடைதற்குரிய புண்ணியமும் பாவமும் பக்குவமாகிப் புண்ணியம் சுவர்க்கத்துக்கும் பாவம் நரகத்துக்கும் இழுக்க நேர்ந்தால், உயிர் இரண்டிடத்தும் ஒரேகாலத்திற் செல்லமாட்டாமையால், சிவசத்தி அவ்விருவகை வினையின் வன்மை மென்மை நோக்கி, மெலிய வினையை நிறுத்தி, வலிய வினையைக்

கொடுத்து, அதற்கேற்ற பிறவியிற் செலுத்துதல். மெலிய வினை அரியத காலோப போக்கிய கன்மமாய்த் தங்கி நிற்கும். (பௌஷ். பசுபட. 35).

போழிப்பு. இத்தூலவுடம்பு நீங்கியவுடனே, வினைக்கேற்ப யாதனு சரீரத்தை எடாது, மற்றுமோர் தூலவுடம்பை எடுத்தலுமுண்டு. யாதனு சரீரம் நீங்கியவுடனே அதுபோல மற்றொரு யாதனு சரீரத்தை எடுத்தலுமுண்டு. இவையெல்லாம் இடைவிடாது நிகழ்தலுமுண்டு. இடைவிட்டு நிகழ்தலுமுண்டு.

(c). சுவர்க்க நரகங்களுக்குச் செல்லும் உயிர்களின் நிலைமையை உவமைமுகத்தால் விளக்கல்.

**128.** பன்னக மண்ட சங்கள் பரகாயந் தன்னிற் பாய்வோர்
துன்னுதோல் முட்டை யாக்கை துறந்துசெல் வதுவே போல
உன்னிய வுயிர்க ளே வுடல்விட்டு வானி னூடும்
மன்னிடு நனவு மாறிக் கனவினை மருவு மாபோல்.

(இ-ள்). பன்னகம் - பாம்பு,—துன்னு தோல் (துறந்து செல்வதுவே போல) - தான் பொருந்திய முன்னைய தோலைவிட்டு மற்றொரு தோலோடு செல்லுதல்போலவும்,—அண்டசங்கள் முட்டை (துறந்து செல்லுவதுவே போல) பறவைகள் முட்டையாகிய முன்னைய இடத்தினைவிட்டு மற்றோரிடத்துக்குச் செல்லுதல்போலவும்,—பரகாயம் தன்னில் பாய்வோர் யாக்கை துறந்து செல்வதுவே போல - பரகாயப்பிரவேசிகள் முன்னைய சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்திற் செல்லுதல்போலவும்,—உன்னிய உயிர்கள் - கருதப்பட்ட உயிர்கள்,—தூல உடல் விட்டு - தூலவுடலாகிய முன்னைய உடம்பினைவிட்டு மற்றோருடம்போடு,—வானின் ஊடும் மன்னிடும் - சுவர்க்க நரகங்களைச் சேர்ந்திடும்,—நனவு மாறிக் கனவினை மருவும் ஆபோல் - நனவுணர்வுமாறிக் கனவுணர்வை எய்தும் முறைமைபோல அறிவு வேறுபட்டு.

குறிப்பு. 1. பன்னகம் - பாம்பு முன்னைய தோலைவிட்டு மற்றொரு தோலோடு செல்லுதல், உயிர் இத்தூலவுடம்பைவிட்டு மற்றொரு தூலவுடம்போடு செல்லுதலாகிய உடல் வேறுபாட்டுக்கு உவமை.

2. அண்டசங்கள் - பறவை முன்னையவிடமாகிய முட்டையை விட்டு மற்றோரிடத்திற் செல்லுதல், உயிர் தூலவுடம்பைவிட்டுச் சுவர்க்க நரகங்களிற் செல்லுதலாகிய இடவேறுபாட்டுக்கு உவமை.

3. பரகாயந் தன்னிற் பாய்வோர் - பரகாயப்பிரவேசிகள் முன்னைய உடம்பைவிட்டுக் கிளி முதலிய மற்றோருடம்பைப் பற்றுதல், உயிர் இத்தூலவுடம்பைவிட்டுப் பூதசாரவுடம்பு பூதவுடம்புகளைப் பற்றுதலாகிய அச்சு வேறுபாட்டுக்கு உவமை.

4. நனவு மாறிக் கனவினை மருவுமாபோல் - நனவு மாறிக் கனவினை மருவுதல், அவ்வச்சுவேறுபாட்டால் முன்னே நிகழ்ந்தவை எல்லாவற்றை

யும் மறந்து சுவர்க்க நரகங்களில் உயிர் அறிவு வேறுபட்டிருத்தலுக்கு உவமை. இப்பூமியிலே நிகழ்ந்தவற்றை உயிர் சுவர்க்க நரகங்களில் அறியா திருக்கும் என இச்செய்யுளிற் கூறியதனாலும், "கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து" எனச் சிவஞானபோதத்திற் கூறியதனாலும் (சூ. 2. அதி. 3), இப்பூமியிலே நிகழ்ந்தவற்றை உயிர் சுவர்க்க நரகங்களில் அறியாது என்பதும், சுவர்க்க நரகங்களிலே நிகழ்ந்தவற்றை இப்பூமியில் அறியாது என்பதும் பெறப்படும்.

5. வானினூடும் என்னும் உம்மையால், நரகமும் என்றது வருவித்து உரை கூறப்பட்டது. ஊடு - இடம்.

6. மன்னிடும்:—மன்னுதல் - சேருதல், அடைதல்.

பொழிப்பு. முன்னைய தோலாகிய உடலைவிட்டு மற்றொரு தோலாகிய உடலினைப்பற்றும் பாம்பு போலவும், முட்டையாகிய முன்னைய இடத்தினைவிட்டுச் சென்று மற்றோரிடத்தினைப்பற்றும் பறவைகள் போலவும், முன்னை அச்சினைவிட்டு மற்றோர் அச்சினைப்பற்றும் பரகாயப்பிரவேசிகள் போலவும், உயிர் தான் வேறாகாது தூலவுடலாகிய முன்னை உடலைவிட்டு மற்றோருடம்போடு சென்று சுவர்க்க நரகங்களை அடையும். நனவின்கட் கண்டவற்றைக் கனாக்காணுங் காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற் போல, முன்னே நிகழ்ந்தவற்றையெல்லாம் மறந்து இச் சுவர்க்க நரகங்களில் அறிவு வேறுபட்டிருக்கும்.

---

## III. இருவினையிலக்கணம், (129-130).

**129.** தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து
நன்மைதீ மையினு மின்பத் துன்பினு நாடிக் காண
முன்னமே யான்மா வின்றன் மும்மலத் தொன்ற தாகிக்
கன்மமு மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்.

(இ - ள்). கன்மமும் - ஆன்மாவினாற் செய்யப்படும் இருவினைகளும்,—தன்மமோடு அதன்மமாகி - புண்ணிய பாவ வடிவாகி,—தான் இரு பயனும் தந்து - தான் இன்பத்துன்பங்களாகிய இருபயனையும் தருவதாய்,—நன்மை தீமையினும் இன்பத்துன்பினும் நாடிக் காண - நன்மை தீமைகளைச் செய்யும்பொழுதும் இன்பத்துன்பங்களை அனுபவிக்கும்பொழுதும் ஆராய்ந்து அறியப்படுவதாய்,—முன்னமே ஆன்மாவின் தன் மும்மலத்து ஒன்றது ஆகி - அநாதியே ஆன்மாவைப் பொருந்திய மும்மலங்களுள் ஒன்றாய் எண்ணப்பட்டு,—மூலம் காட்டிக் காமிய மலமாய் நிற்கும் - தனக்கு முதற்காரணம் உண்டென்பது காட்டிக் காமியமலம் எனப்பட்டு நிற்கும்.

குறிப்பு. 1. கன்மம் - ஆன்மாவினாற் செய்யப்படும் நல்வினை தீவினைகளாகிய ஆகாமியமும், பின் புண்ணிய பாவ வடிவாகுஞ் சஞ்சிதமும், பின்

இன்பத்துன்பங்களாக வரும் பிராரத்தமும் ஆகிய மூவினைகளுமே இங்கே கன்மம் என்றும் இருவினை என்றும் பொதுவாகக் கூறப்பட்டுள்ளன.

2. கன்மமும் தன்மமோ டதன்ம மாகித் தானிரு பயனுந் தந்து நிற்கும்:—நல்வினை தீவினை எனப்படும் கன்மம், செய்யப்படும்பொழுது மந்திரம் பதம் வன்னம் தத்துவம் புவனம் கலை என்னும் ஆறு அத்துவாக்களு மிடமாக மனம் வாக்குக் காயங்களினுற் செய்யப்பட்டு, தூலகன்மமாய் ஆகாமியம் எனப் பெயர் பெறும். இவ்வாகாமிய கன்மம் புத்திபூருவம் அபுத்திபூருவம் என இருவகைப்படும். அவையும் புத்திபூருவ நல்வினை தீவினை, அபுத்திபூருவ நல்வினை தீவினை என ஒவ்வொன்றும் இவ்விரண்டாய் நான்குவகைப்படும்.

பின்பு அக்கன்மம் பக்குவப்படுமளவும் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கட்டுண்டு சூக்கும ரூபமாயிருக்கும். இச்சூக்கும கன்மம் புண்ணிய பாவங்கள் எனவும், சஞ்சிதம் எனவும், அபூருவம் எனவும் பெயர் பெறும். சமஸ்காரரூபமாய் நின்று பலன் கொடுத்தலால் அபூருவம் எனப்படும். சமஸ்காரம் - மறைந்திருத்தல். இன்னும், இப்புண்ணிய பாவங்கள் சாதி ஆயுள் போகம் என்னும் மூன்றற்கும் காரணமாய் முறையே சனகம் தாரகம் போக்கியம் என மூவகைப்படும். அஃதாவது, சாதி ஆயுள் போகம் எனவும், பேறு இழவு இன்பம் பிணி மூப்புச் சாக்காடு (செ. 99) எனவும் சொல்லப்படுவனவாயும், இன்னும் பலவாயும் அனுபவிக்கப்படும் எல்லாவற்றிற்கும் இச் சஞ்சித கன்மம் ஏதுவாயிருத்தல். சனகம் - காரணமாய் நின்று சரீரம் முதலியவைகளைப் பிறப்பிப்பது. சநகம் - பிறப்பிப்பது. தாரகம் - சரீரரூபமாய் நின்று ஆன்மாவைத் தரித்திருப்பது. போக்கியம் - விடய வடிவாய் நின்று அனுபவிக்கப்படுவது.

மேற்கூறிய புண்ணிய பாவங்கள் அவற்றின் பயனாகிய இன்பத்துன்பங்களைத் தந்து பயன்படுங்கால், ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலவகைப்பட்டு, பிராரத்தம் எனப் பெயர்பெறும். ஆதிதைவிகம் - தெய்வம் காரணமாக வரும் இன்பத்துன்பங்கள். ஆத்தியான்மிகம் - உயிர்கள்வாயிலாக வரும் இன்பத்துன்பங்கள். ஆதிபௌதிகம் - பூதங்கள் வாயிலாக வரும் இன்பத்துன்பங்கள்.

இன்னும் இந்த நல்வினை தீவினைகள் உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என ஐவகைப்படும். அவற்றுள் உலகவினை, கிணறு குளம் தண்ணீர்ப்பந்தல் அன்னசத்திரம் முதலியன செய்தல். வைதிகவினை வேள்வி முதலியன செய்தல். அத்தியான்மிகவினை சிவபூசை முதலியன செய்தல். அதிமார்க்கவினை யோகஞ் செய்தல். மாந்திரவினை மந்திரஞ் செபித்தல், ஞானநூல் ஓதல் முதலியன. இவ்வைந்தும் ஒன்றற்கொன்று ஏற்றமுடையன. உலகவினை நிவிர்த்திகலையிலும், வைதிகவினை பிரதிட்டாகலையிலும், அத்தியான்மிகவினை வித்தியாகலையிலும், அதிமார்க்கவினை சாந்திகலையிலும், மாந்திரவினை சாந்தியதீதகலையிலும் அடங்கும். உலகவினையும் வைதிகவினையும் அசுத்தபோகங்களையும், அத்தியான்மிக

வினையும் அதிமார்க்கவினையும் மிச்சிரபோகங்களையும், மாந்திரவினை சுத்த போகங்களையுந் தரும். இந்த நல்வினைக்கு மாறுபட்டவை, தீவினையாய் ஐவகைப்படும்.

3. நன்மை தீமையினு மின்பத் துன்பினு நாடிக் காண நிற்கும்:—இப் பிறவியில் ஒருவன் நன்மை தீமைகளைச் செய்யும்பொழுதும், செல்வம் வறுமை முதலிய இன்பத்துன்பங்களை அனுபவிக்கும்பொழுதும், அவற்றிற் குக் காரணம் முற்பிறவியிற் செய்த நல்வினை தீவினைகள் என அனுமித்தறி யும்படி நிற்பது இக் கன்மம் என்றபடி.

4. முன்னமே யான்மா வின்றன்......காமிய மலமாய் நிற்கும்:—கன் மம் செயப்படுபொருளாதலின், அதற்கு முதற்காரணமுண்டென்பது பெறப் படும். அக்காரணம் மூலகன்மம் எனப்பட்டு மும்மலங்களுள் ஒன்றாய் அநாதிசித்தமாயிருக்கும். அம் மூலகன்மத்தின் காரியமாகிய இருவினையும் மும்மலங்களுள் ஒன்றாய் எண்ணப்படினும், அது ஆதியும் அந்தமும் உடைய தாதலின் பிரவாகாநாதி என்றும், காமியமலம் என்றும் சொல்லப்படும். மூலகன்மமாவது ஆன்மாவின் இச்சாசத்தியின் காரியமாகிய விருப்பு வெறுப்புக்களாம். பிரவாகாநாதி - இடையறாதோடும் நீர்ப்பெருக்குப்போ லத் தொடர்ச்சியாய்த் தொன்றுதொட்டு வருவது. கான்மியம் - மூலகன்மத் தின் சம்பந்தமாய் நிகழும் இருவினைகள். கான்மியம் என்பது காமியம் என மரீஇயிற்று.

பொழிப்பு. கன்மம் நல்வினை தீவினைகளாகச் செய்யப்பட்டுப், புண் ணிய பாவங்களாகி, இன்பத்துன்பங்களைத் தருவதாய், நன்மை தீமைகள் நிகழும் பொழுதும் இன்பத்துன்பங்களை அனுபவிக்கும்பொழுதும் அனுமித் தறியப்படுவதாய், மும்மலங்களுள் ஒன்றாய் எண்ணப்பட்டுத், தனக்கு முதற்காரணம் ஒன்றுண்டென்று காட்டிக் காமியமலம் எனப்பட்டு நிற்ப தொன்றாம்.

இதுவுமது.

**130.** இருவினை யநாதி யாதி யியற்றலா னுகர்வா லந்தம்
வருமலஞ் சார்ந்து மாயா வுருவுகண் மருவி யார்த்துத்
தருசெயன் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி
அருவதாய் நின்ற ரன்ற ஞணையி னமர்ந்து செல்லும்.

(இ - ள்). இருவினை - நல்வினை தீவினை எனப்படும் கன்மம்,—இயற்ற லால் ஆதி - மனம் வாக்குக் காயங்களினாற் செய்யப்படுதலின் தொடக்க முடையதாயும்,—நுகர்வால் அந்தம் வரும் - இன்பத்துன்பங்களாக அனுப விக்கப்பட்டொழிதலின் நாசமுடையதாயும் சந்தானமாய் வருதலின்,— அநாதி - பிரவாகாநாதியாம்,—மலம் சார்ந்து - ஆணவமலத்தைப் பொருந்தி, —மாயா உருவுகள் மருவி - மாயாகாரியமான சரீரங்களைத் தோற்றுவித்து, —ஆர்த்து - உயிர்களைப் பந்தித்து,—தருசெயல் முறைமையாலே - நிற்கும்

காரியத்தன்மையுடையதாயிருத்தலினாலே,—தான் பல பேதம் காட்டி - தான் பல வேறுவகைப்பட்ட யோநிகளைத் தோற்றுவித்து;—அருவதாய் நின்று - சூக்குமமாய் நின்று,—அரன்தன் ஆணையின் அமர்ந்து செல்லும் - முதல்வனது ஆணையின்வழியே அடங்கிச் செல்லும் இயல்புடையதாம்.

குறிப்பு. 1. மலஞ் சார்ந்து - கன்மம் பலன்கொடுத்தற்கு முதல்வனது திரோதானசத்தியையும் ஆணவமலம் முதலானவற்றையும் வேண்டி நிற்றலால், "மலஞ் சார்ந்து" என்றார். (சிருகேந். கன்ம. 3).

2. மாயா வுருவுகள் மருவி:—மருவி - மருவுவித்து, தோற்றுவித்து.

3. அருவதாய் நின்று - தூலமாய்ச் செய்யப்பட்ட கன்மம், பின் புண்ணிய பாவரூபமாயிருக்கும் சூக்குமநிலை. சஞ்சிதம் எனப்படுவதும், அபூருவம் எனப்படுவதும் இதுவே.

பொழிப்பு. இருவினை எனப்படுவது உற்பத்தியும் நாசமுமுடையதாய்த் தொன்றுதொட்டு வருதலின், பிரவாகாநாதியாம். அது திருவருளாற் செலுத்தப்பட்டு மலத்தோடு கூடிச் சூக்குமவடிவாய் நின்று உயிர்களுக்குப் பல வேறுவகைப்பட்ட யோநிகளைத் தோற்றுவிக்கும்.

---

## IV. தனுக்களின் இயல்பு, (131-140).

இது இருபிரிவுகளாகப் பிரித்துப் பொருள் கூறப்படுகின்றது.

1. வினைக்கீடாகப் பலவகைத் தூலவுடம்புகள் தோன்றும் முறைமை, (131-136).
2. தூலவுடம்புகள் தோன்றி ஒடுங்கும் முறைமையும், அவற்றின் மூலகாரணமும், (137-140).

### 1. வினைக்கீடாகப் பலவகைத்தூலவுடம்புகள் தோன்றும் முறைமை, (131-136).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

(*a*). உயிர்கள் அச்சுமாறாது என்னுங் கொள்கையும் மறுப்பும், (131-132).
(*b*). உயிர்கள் அச்சு மாறும் என்பதற்கு உதாரணம், (133).
(*c*). யோநியும் அச்சும் மாறும் என்பதற்கு உதாரணம், (134).
(*d*). யோநியும் அச்சும் முதல்வன் விதிப்படி மாறும், (135-136).

(*a*). உயிர்கள் அச்சு மாறாது என்னுங் கொள்கை.

**131.** சங்கமந் தாவரங்க டத்தங்கன் மத்துக் கீடா
அங்குரு யோநி மாறு மச்சுமா றாதிங் கென்னின்
இங்குமா நுடரி யற்றும் புண்ணியத் தின்ப வீட்டம்
அங்குவான் சுரர்க ளாயோ நரர்களா யருந்து வாரோ.

(இ - ள்). சங்கமம் தாவரங்கள் - சரமும் அசரமும் எனப்படும் உயிர்கள்,—தத்தம் கன்மத்துக்கு ஈடா - தங்கள் தங்கள் கன்மத்துக்கீடாக,—அங்கு - அவ்வப் பிறவியிலே,—உரு யோனி மாறும் - உடம்பாகிய யோனி மாறிப் பிறக்கும்,—இங்கு - இங்ஙனம் மாறிப் பிறக்குமிடத்து,—அச்சு மாறாது என்னின் - அச்சு மாறாது பிறக்கும் என்று சொல்லின்,—இங்கு மானுடர் இயற்றும் புண்ணியத்து இன்ப ஈட்டம் - இவ்வுலகத்திலே மானுடர்செய்யும் புண்ணியத்தின் பயனாகிய இன்ப மிகுதியை,—அங்கு வான் - அந்தச் சுவர்க்கத்திலே,—சுரர்களாயோ நரர்களாயோ அருந்துவார் - தேவர்களாயோ மானுடராயோ அனுபவிப்பார்?

குறிப்பு. 1. சங்கமம் - சரம், இயங்கியற்பொருள். தாவரம் - அசரம், இயங்குந்தன்மையில்லாத பொருள், மரம் முதலியன.

2. உரு யோனி மாறு மச்சு மாறாது - மீமாஞ்சகரில் ஒருசாரார், சீவர்கள் பிறந்திறக்கும்பொழுது சரீரங்கள் மாறும், அச்சு மாறாது என்பர். அச்சு மாறாதென்பது தேவர் முதலிய எழுவகைப் பிறப்புக்களுள் அடங்கிய உயிர்கள் அவ்வப் பிறப்பிலே பிறப்பதன்றித் தேவர் மனிதராயும் மனிதர் தேவராயும் இவ்வாறு மாறிப் பிறத்தல் கூடாதென்பது. அச்சு - மூலரூபம்.

பொழிப்பு. உயிர்களின் வினைக்கீடாகப் பிறவிகடோறும் சரீரங்கள் மாறுமன்றி அச்சு மாறாதெனின், புண்ணிய பாவங்களின் பயனை அனுபவிப்பதெப்படி?

மறுப்பு.

132. நரர்களாய்த் துய்ப்ப ரென்னி னரர்பதி சுரரு லோகஞ்
சுரர்களாய்த் துய்ப்ப ரென்னிற் சொன்னவச் சழியு மாகுஞ்
சுரர்களாய்ப் பலன்க டுய்த்துத் தாமிங்குத் தோன்றும் போது
நரர்களாய்ப் பிறப்பர் ஞாலத் தமரராய் நண்ணி டாரே.

(இ - ள்). சுரர் உலோகம் நரர்களாய்த் துய்ப்பர் என்னின் - சுவர்க்க லோகத்திலே மானுட வடிவாகி அனுபவிப்பரெனின்,—நரர்பதி - அது பூலோகமேயாம்,—சுரர்களாய்த் துய்ப்பர் என்னின் - தேவர்களாகி அனுபவிப்பரெனின்,—சொன்ன அச்சு அழியும் ஆகும் - நீ அழியாதென்று சொல்லிய அச்சு அழிவதுடைத்தாம். ஆதலின்,—சுரர்களாய்ப் பலன்கள் துய்த்து - தேவர்களாய்ப் பயன்களை அனுபவித்துத் தொலைத்து,—தாம் இங்குத் தோன்றும்போது - தாம் மீளவும் இவ்வுலகத்திலே தோன்றும்பொழுது,—நரர்களாய்ப் பிறப்பர் - மானுடவடிவாய்ப் பிறப்பர்,—அமரராய் ஞாலத்து நண்ணிடார் - தேவராய் இவ்வுலகத்தின்கண்ணே பொருந்திடார்.

பொழிப்பு. புண்ணியப் பயனைச், சுவர்க்கத்திலே தேவர்களாயிருந்தே அனுபவிக்கவேண்டுதலாலும் இவ்வுலகத்திலே மனிதராயிருந்து அனுபவிக்க வேண்டுதலாலும், அச்சுமாறுதல் உண்டென்பது இனிது விளங்கும்.

(*b*). உயிர்கள் அச்சுமாறும் என்பதற்கு உதாரணம்.

133. வண்டுக ளாகி மாறு மயிர்க்குட்டி மற்றோர் செந்துப்
பண்டைய வுருவந் தானே வேட்டுவ னுய்ப்பி றக்குங்
கண்டுகொள் யோனி யெல்லாங் கன்மத்தான் மாறு மென்றே
கொண்டன சமய மெல்லா மிச்சொனீ கொண்ட தெங்கே.

(இ - ள்). மயிர்க்குட்டி வண்டுகளாகி மாறும் - மயிர்க்குட்டிகள் வண்டுகளாகி அச்சு மாறும்,—மற்றோர் செந்துப் பண்டைய வடிவம் தானே - வேறோர் புழு தன் பழைய வடிவமே,—வேட்டுவனாய்ப் பிறக்கும் - அச்சு மாறி வேட்டுவனாகித் தோன்றும்,—கண்டுகொள் - இவற்றை நீ கண்கூடாக அறிவாயாக,—யோனி எல்லாம் கன்மத்தான் மாறும் என்றே - உடம்பும் அச்சும் கன்மத்துக்கேற்ப மாறும் என்றே,—சமயம் எல்லாம் கொண்டன - எல்லாச் சமயங்களும் கூறியிருக்க,—இச் சொல் நீ எங்கே கொண்டது - யோனி மாறும் அச்சு மாறாது என்னும் இந்தச் சொல்லை நீ எங்கே கற்றனை?

குறிப்பு. 1. மயிர்க்குட்டிகள் வண்டுகளாகி மாறுதலும், புழு வேட்டுவனாகிப் பிறத்தலும் அச்சு மாறுதற்கு உதாரணம். இங்கே அச்சு மாறுதலாவது மயிர்க்குட்டிவர்க்க உயிர்கள் வண்ணப்பறவை வர்க்க உயிர்களாகவும், புழுவர்க்க உயிர்கள் வேட்டுவாளிவர்க்க உயிர்களாகவும் மாறுதலாம். வேட்டுவன் - குளவி.

2. யோனியெல்லாம் - யோனியும் அச்சும்.

பொழிப்பு. உயிர்களின் கன்மத்துக்கேற்ப அச்சு மாறும்.

(*c*). யோனியும் அச்சும் மாறும் என்பதற்கு உதாரணம்.

134. அகலிகை கல்ல தானு ளரிபல பிறவி யானன்
பகலவன் குலத்திற் றோன்றிப் பாரெலா முழுது மாண்டு
நிகரிலா வரச னாகுஞ் சிலந்திநீ டுலகம் போற்றச்
சகமதி லெலிதா னன்றோ மாவலி யாய்த்துத் தானே.

(இ - ள்). அகலிகை - அகலிகையானவள்,—கல்லது ஆனாள் - கௌதம முனிவரிட்ட சாபவயத்தால் உருவும் அச்சும் அழிந்து கல்லானாள்,—அரி - விட்டுணு,—பல பிறவியானான் - பிருகுமுனிவரிட்ட சாபவயத்தால் உருவும் அச்சும் அழிந்து மச்சம் முதலிய பல பிறவிகளை அடைந்தான்,—சிலந்தி - சிலந்திப்பூச்சியானது உருவும் அச்சும் அழிந்து,—பகலவன் குலத்தில் தோன்றி - சூரிய வமிசத்தில் உதித்து,—நிகர் இலா அரசன் ஆகும் - ஒப்பில்லாத அரசனாயிற்று,—எலிதான் அன்றோ - எலியானது உருவும் அச்சும் மாறியே,—சகம் அதில் - பூமியின்கண்ணே,—நீடு உலகம் போற்ற - மூவுலகத்தோரும் துதிக்கும்படி,—மாவலி யாய்த்து - மகாபலிச்சக்கரவர்த்தியாயிற்று.

பொழிப்பு. உயிர்கள் யோநியும் அச்சும் மாறிப் பிறக்கும் என்பதற்கு அகலியை கல்லானதும், விட்டுணு பல பிறவிகளை அடைந்ததும், சிலந்திப் பூச்சி அரசனானதும், எலி மகாவலிச்சக்கரவர்த்தியானதும் சான்றுகளாம்.

(*d*). யோநியும் அச்சும் முதல்வன் விதிப்படி மாறும்.

**135.** செப்பினாய் மாற வேறு சிலர்விதி யாலே கன்மால்
வைப்புறும் யோநி யெல்லா மாறிவந் திடாவிங் கென்னின்
எப்படி யானுஞ் செய்திக் கிறைகரி யாவ னென்றே
முற்பட மொழிந்தே னெல்லா முதல்வன்றன் விதியே யாகும்

(இ-ள்). வேறு சிலர் விதியாலே மாறச் செப்பினாய் - (சிலர் கன்மத் துக்கீடாகவும்) வேறு சிலர் சாபத்தினாலும் உருவும் அச்சும் மாறினார் என்று நீர் சொன்னீர்.—கன்மால் வைப்புறும் யோநி எல்லாம் மாறி வந் திடா இங்கு என்னின் - ஆயினும் கன்மம் காரணமாக அமைந்துள்ள உரு வும் அச்சும் மாறித் தோன்றா என்று இங்கே நீ சொல்லின்,—எப்படியா னும் - எவ்வகையாலும்,—செய்திக்கு இறை கரி ஆவன் என்றே - உயிர் செய்யும் கன்மங்களுக்கு முதல்வன் சாட்சியாவன் என்றே,—முற்பட மொழிந்தேன் - முன்னே சொன்னோம். ஆதலின்,—எல்லாம் முதல்வன் தன் விதியே ஆகும் - சாபவயத்தாலாதல் கன்மத்துக்கீடாகவாதல் உருவும் அச்சும் மாறுதல் முதல்வன் சங்கற்பித்தபடியே உண்டாவதாகும்.

குறிப்பு. 1. கன்மால் - கன்மத்தால் என்பது கன்மால் என விகாரமா யிற்று.

2. செய்திக்கு இறை கரியாவன் - உயிர்கள் செய்யும் கன்மங்களை அறி ந்து அவற்றின் பயனை அளிப்பவன் முதல்வன் என்பது. (செ. 103, 104, 111, 114–116 பார்).

பொழிப்பு. யோநி அச்சுக்கள் எக்காரணத்தால் மாறினும், அவை முதல்வன் விதிப்படி வருவனவாம்.

இதுவுமது.

**136.** அவ்வவ யோநி தோறு மவ்வவ வுலகந் தோறும்
செவ்வித னறிந்து கன்மஞ் சேர்ந்திடா சீவன் சேரா
இவ்வகை தம்மிற் சேர்வு மிறைசெய லானுற் செய்த
எவ்வுரு வுந்தங் கன்மான் மாற்றுவ னிறைவன் றானே.

(இ-ள்). கன்மம் - வினைகள் (சடமாதலின்),—அவ்வவ யோநி தோறும் அவ்வவ உலகம் தோறும் - அவ்வவ் வினைக்கேற்ற சரீரங்களையும் அவ்வவ் வினைக்கேற்ற புவனங்களையும்,—செவ்விதின் அறிந்து சேர்ந்திடா - நேராக அறிந்து அணையமாட்டா,—சீவன் சேரா - உயிர்களும் அறிவுடைப் பொருள் களாயினும் தமக்கென அறிவின்மையாலே அம் மாயாகாரியமான சரீரங்

களைத் தாமாகப்பொருந்திக் கன்மப்பயனை அனுபவிக்கமாட்டா. ஆதலால், —இவ்வகை தம்மில் சேர்வும் - இம் மாயாகாரியங்களும் கன்மமும் உயிர்களும் தம்முட் சேர்ந்து காரியப்படுதலும்,—இறைவன் செயல் ஆனல் - முதல்வன் செயலால் என்பது பாரிசேடவளவையாற் பெறப்படுதலின்,—செய்த எவ்வுருவும் - முதல்வன் செய்த எவ்வகைச் சரீரங்களையும்,—தம் கன்மால் - அவரவர் வினைக்கேற்ப,—இறைவன்றனே மாற்றுவன் - முதல்வனே மாற்றிக் கொடுப்பன்.

பொழிப்பு. மாயையையும் கன்மத்தையும் காரியப்படுத்தி அக்காரியங்களை உயிர்களுக்குச் சேர்ப்பவன் முதல்வனே என்பது பெறப்படுதலின், முதல்வன் செய்த எவ்வகைச் சரீரங்களையும் அம் முதல்வனே மாற்றுவன்.

---

3. தூலவுடம்புகள் தோன்றி ஒடுங்கும் முறைமையும்; அவற்றின் மூல காரணமும், (137-140).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

(*a*). பல தூலவுடம்புகள் ஒரு சூக்குமவுடம்பினின்று தோன்றும், (137).

(*b*). தூலவுடம்புகள் சூக்குமவுடம்பிலே சத்திரூபமாயிருந்து தோன்றும், (138).

(*c*). சூக்குமவுடம்பிலே தூலவுடம்புகள் தோன்றி ஒடுங்கும் முறைமையை உவமைமுகத்தால் விளக்கல், (139).

(*d*). தூலவுடம்புகளுக்கு முதற்காரணம் மாயை, (140).

(*a*). பல தூலவுடம்புகள் ஒரு சூக்குமவுடம்பினின்று தோன்றும்.

**137.** மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென்னிற்
கூறிய சூக்கு மத்தா முருவெனிற் குறியொன் றென்னின்
வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியு மாகுந்
தேறநீ யொருவ னலிச் செயலெலாஞ் சிவனு லாகும்.

(இ-ள்). இவ்வுருவம் எல்லாம் மாறி வருவது எங்கே நின்று என்னின் - இப் பலவகை உடம்புகளெல்லாம் மாறித் தோன்றுவது எங்கே நின்று என்று கேட்பாயாயின்,—கூறிய சூக்குமத்து ஆம் - மேற்கூறிய சூக்குமவுடம்பினின்றும் உண்டாம்,—உரு எனின் - தூலவுடம்புகள் பலவகை என்றும்;—குறி ஒன்று என்னின் - அவற்றின் காரணமாகிய சூக்குமவுடம்பு ஒன்று என்றும் கூறுதல் சற்காரியவாதத்திற்குக் கூடாது என்று சொல்லின்,—வேறு ஒரு குறியாம் ஆரம் வீரசங்கிலியும் - (ஒரே பொன்னினின்றும்) வேறு தனித்தனிக் குறிகளுடைய மாலை வீரசங்கிலி முதலிய பல ஆபரணங்கள்,—ஒருவனல் ஆகும் - செய்பவனது ஆற்றலால் மாறித்

தோன்றுமாறுபோல,—சிவனால் - முதல்வனது ஆற்றலால்,—இச் செயல் எலாம் ஆகும் - ஒரு சூக்குமவுடம்பினின்று பலவகைத் தூலவுடம்புகளும் மாறித் தோன்றும். ஆதலால்,—நீ தேறு - சற்காரியவாதத்திற்கு இழுக் கில்லை என்பதனை நீ தெளிவாயாக.

குறிப்பு. 1. மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேனின் றென்னிற், கூறிய சூக்கு மத்தாம்:—(செ. 126 பார்).

2. உருவெனிற் குறியொன் றென்னின்:—ஒரு சூக்குமவுடம்பினின்று பல தூலவுடம்புகள் எங்ஙனந் தோன்றும் என்பது சற்காரியவாதிகள் ஆசங்கை. அஃதாவது ஒரு காரணத்திலிருந்து பல காரியங்கள் தோன்ரு என்பது. விடை. தன்மாத்திரைகள் ஐந்தும் மனம் புத்தி அகங்காரம் என் னும் மூன்றும் சேர்ந்தது சூக்குமவுடம்பு. அவற்றுள், சத்தம் பரிசம் உரு வம் இரதம் கந்தம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் சூக்கும பூதங்கள் எனப்பட்டுப் பிருதிவி முதலிய ஐந்து பூதங்களுக்கும் காரணமாயிருக்கும். இத் தூலபூதங்களாலுண்டாவன தூலசரீரங்கள். இத் தூலசரீரங்கள் அழி யும்பொழுது சூக்குமவுடம்போடு கூடிய சூக்குமபூதங்களிலிருந்து தூலபூதங் களுண்டாகி, இவற்ருல் வேறு பல தூலவுடம்புகளுண்டாகுமாதலினால், ஒரு சூக்குமவுடம்பினின்று பல தூலவுடம்புகள் தோன்றும் என்பது சற் காரியவாதத்துக்கு மாறன்று.

பொழிப்பு. ஒரு பொன், ஆரம் வீரசங்கிலி முதலிய பலவகை ஆபர ணங்கள் தோன்றுதற்குக் காரணமாயிருத்தல்போல, ஒரு சூக்குமவுடம்பு பலவகைத் தூலவுடம்புகள் தோன்றுதற்குக் காரணமாயிருக்கும்.

(b). தூலவுடம்புகள் சூக்குமவுடம்பிலே சத்திரூபமாயிருந்து தோன்றும்.

**138**. சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா சூக்கு மத்தின்
ஆக்கியோ ருடல்கி டப்ப தின்றுட லாக்குந் தன்மைக்
கோக்கிய சத்தி யுண்டா யுடறருங் கால முற்று
நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்து மாபோல்.

(இ - ள்). (சூக்குமவுடம்பினின்றும் தூலவுடம்புகள் தோன்றுமாறு எங் ஙனமெனின்) சூக்குமம் கெட்டுத் தூலம் தோன்றிடா - அச் சூக்குமவுடம்பு கெட்டுத் தூலவுடம்புகள் தோன்றுவன அல்ல,—சூக்குமத்தின் ஆக்கி ஓர் உடல் கிடப்பது இன்று - சூக்குமவுடம்பின்கண் உண்டாக்கப்பட்டு ஒரு தூல வுடம்பு கிடந்து தோன்றுவதுமின்று,—உடல் ஆக்குந் தன்மைக்கு - சூக்கும வுடம்பினின்றும் தூலவுடம்புகளை உண்டாக்கும் தன்மைக்கு உவமை யாதெ னின்,—மரம் காலம் உற்று நீக்கிட - மரம் இறுதிக்காலம் வருதலால் வெட் டப்பட,—பின் வேர் ஓர் நீள் மரம் நிகழ்த்தும் ஆ போல் - பின்பு அம் மர வேர் மற்றொரு நீண்ட மரத்தை உண்டாக்குதல்போல,—ஒக்கிய சத்தி உண் டாய் உடல் தரும் - சூக்குமவுடம்பிலே இயைபுள்ள ஒரு சத்தி உளதாய் அத் தூலவுடம்புகளைத் தோற்றுவிக்கும்.

குறிப்பு. 1. சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா - வித்திலே மரம் உண்டானபோது அவ் வித்து அழிந்தாற்போல, சூக்குமவுடம்பு அழிந்து தூலவுடம்புகள் தோன்றுவனவல்ல என்பது.

2. உடலாக்குந் தன்மைக் கோக்கிய சத்தியுண்டாய்:—சூக்குமவுடம்பிலே தூலசரீரங்கள் சத்திரூபமாயிருக்கும் என்பதற்கு மரத்தின் வேர் உவமை. ஒக்கியம் - யோக்கியம், இயைபு, தகுதி. ஒக்கிய சத்தி - தூலவுடம்புகள் தோன்றுதற்கு இயைபுள்ள சத்திரூபம்.

பொழிப்பு. வெட்டப்பட்ட மரத்தின் வேரிலே மற்றொரு மரம் சத்திரூபமாயிருந்து தோன்றுதல்போல, சூக்குமவுடம்பிலே தூலவுடம்புகள் சத்திரூபமாயிருந்து தோன்றும்.

(c). சூக்குமவுடம்பிலே தூலவுடம்புகள் தோன்றி ஒடுக்கும் முறைமையை உவமைமுகத்தால் விளக்கல்.

139. விதிப்படி சூக்கு மத்தே யுருவரும் வினையா லிங்கே
உதித்திடா வுருவ மாக வுருவரு மரங்கள் வித்திற்
கதித்தெழு மரமும் வித்துங் கழியும்பின் னழியுஞ் சூக்க
மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே.

(இ - ள்). வினையால் - வினைக்கேற்ப,—விதிப்படி - முதல்வனுணையால்,—சூக்குமத்தே உருவரும் - சூக்குமவுடம்பினின்றும் தூலவுடம்புகள் தோன்றும்,—உருவமாக இங்கே உதித்திடா - சூக்குமவுடம்பு இல்லாதவிடத்து அவ்வுடம்புகள் தூலமாக இங்கே தோன்றிடா,—உரு வரும் மரங்கள் - அது, உருவமாக விளங்கும் மரங்கள்,—வித்தில் கதித்து எழும் - வித்தினின்று பருத்து எழும்புதல்போலாம்,—மரமும் வித்தும் கழியும் - அப்படியாயின் மரம் அழிய அதன் மூலமாகிய வித்தும் அழிதல்போல,—பின் சூக்கம் அழியும்-தூலவுடம்பு அழியப்பின் சூக்குமவுடம்பும் அழியும் என்னின், அப்படியன்று. சூக்குமத்திலே தூலம் தோன்றுதன் மாத்திரைக்கே வித்தும் மரமும் உவமையன்றி முற்றுவமையன்று. அதற்குவமை யாதெனின்,—மதிக்கு எழு கலைகள் போல வருவது போவதாம் - சந்திரனுக்குள்ள கலைகள் பதினாறிற் காரணமாகிய ஒருகலை அழியாது நிற்க மற்றக் கலைகள் தோன்றுதலும் ஒடுங்குதலும்போல மூலமாகிய சூக்குமவுடம்பு அழியாது நிற்க அதினின்று தூலவுடம்புகள் தோன்றி ஒடுங்கும்.

பொழிப்பு. சந்திரகலைகள் பதினாறிற் காரணமாகிய ஒருகலை அழியாது நிற்க, மற்றக் கலைகள் தோன்றுதலும் ஒடுங்குதலும்போல, மூலமாகிய சூக்குமவுடம்பு அழியாது நிற்க அதினின்று தூலவுடம்புகள் தோன்றி ஒடுங்கும்.

(d). தூலவுடம்புகளுக்கு முதற்காரணம் அசுத்தமாயை.

140. தூலமா முருவி னுக்குச் சூக்கும முதல தற்கு
மூலமா னதற்கு மூல மோகினி யதன்மு தற்றான்
மேலதாம் விந்து சத்தி சிவமிவை மிசையா மெல்லாஞ்
சாலவின் றாகு மான்மாச் சிவத்தினைச் சார்ந்த போது.

(இ-ள்). தூலமாம் உருவினுக்குச் சூக்குமம் முதல் - தூலவுடம்பிற்குச் சூக்குமவுடம்பு முதற்காரணமாம்,—அதற்கு மூலம் மான் - அச் சூக்குமவுடம்பிற்கு முதற்காரணம் மூலப்பிரகிருதி,—அதற்கு மூலம் மோகினி - அம் மூலப்பிரகிருதிக்கு முதற்காரணம் அசுத்தமாயை,—அதன் முதல் தான் மேலதாம் விந்து - அவ்வசுத்தமாயையின் முதற்காரணம் மேலான சுத்த மாயையாம்,—சத்தி சிவம் இவை மிசையாம் - சத்தியும் சிவமும் ஆகிய இரண்டும் இவை அனைத்திற்கும் மேலாம்,—எல்லாம் - இச் சுத்தமாயாகாரியங்களும் அவ்வசுத்தமாயா பிரகிருதிமாயாகாரியங்களுமாகிய எல்லாம்,—ஆன்மா சிவத்தினைச் சார்ந்த போது - ஆன்மா சிவத்தினை அடைந்த பொழுது,—சால இன்று ஆம் - அவ்வான்மாவைப் பந்தியாது முற்றும் நீங்குவனவாம்.

குறிப்பு. 1. தூலமா முருவினுக்குச் சூக்கும்முதல்:—தூலவுடம்பு தூல பூதங்களாலாவது. தூலபூதங்களுக்குக் காரணம் சூக்குமபூதங்கள் எனப் படுந் தன்மாத்திரைகளாம். தன்மாத்திரைகள் சூக்குமவுடம்பின் கூறு. ஆதலால், சூக்குமவுடம்பு தூலவுடம்புகளுக்குக் காரணம் எனப்பட்டது.

2. அதற்கு மூலம் மான் - மூலப்பிரகிருதியின் காரியமான மனம் புத்தி அகங்காரமும் தன்மாத்திரைகளும் கூடியது சூக்குமவுடம்பாதலின், பிரகிருதி சூக்குமவுடம்புக்குக் காரணம் எனப்பட்டது.

3. அதற்கு மூலம் மோகினி - அசுத்தமாயையிலே தோன்றும் கலையிலிருந்து பிரகிருதி தோன்றுதலால், அசுத்தமாயை பிரகிருதிக்குக் காரணம் எனப்பட்டது.

4. அதன்முதற்றான் மேலதாம் விந்து - சுத்தமாயை அசுத்தமாயைக்குக் காரணம் என்பது. "விந்துவின்மாயையாகி" (செ. 39 பார்).

5. சத்தி சிவமிவை மிசையாம் - "அலகிலாவுயிர்கள் கன்மத்துக் கீடாகத் தனுக்களைப் பொருந்தி ஆணையி னமர்ந்து செல்லத் தலைவனாய் நின்றனன்" என்பது இச்செய்யுளால் வகுத்துக் காட்டப்பட்டது. (செ. 91 பார்).

6. சாலவின் றாகும் ஆன்மாச் சிவத்தினைச் சார்ந்தபோது - ஆன்மா திருவருளைப் பெற்று நிற்கும் அருணிலையில் இம் மாயாகாரியங்கள் அவ்வான்மாவைப் பந்தியாது நீங்கும் என்பது பொருள்.

பொழிப்பு. தூலவுடம்புகள் மாயாகாரியம். சிவன் இம் மாயாகாரியங்களுக்கும் இவற்றின் காரணமான மாயைக்கும் அதீதனாய் நின்று இவற்றைக் காரியப்படுத்துவோனும்.

### V. கரணங்களின் இயல்பு.

இஃது உயிர்கள் வினைப்பயனை நுகரும்பொருட்டு மாயாகாரியமான கரணங்களைப் பொருந்திப் பிறந்திறந்து வருமிடத்து முதல்வன் அவற்றோடு அத்துவிதமாய் நிற்கும் முறைமை கூறுமுகத்தான், மாயை கரணங்களின் இலக்கணங் கூறுகின்றது. மாயையின் உண்மை 34-ம் செய்யுளிற் கூறப் பட்டமையால், அதனை இங்கே கூருதொழிந்தார்.

இப்பிரிவில் அடங்கிய விஷயங்கள்:—

1. முதல்வன் தனுகரணுதிகளைக் கொடுத்தல் உயிர்களின் மலத்தை நீக்குதற்பொருட்டு, (**141-142**).
2. அசுத்தமாயையின் இலக்கணம், (**143**).
3. அசுத்தமாயையின் காரியம், (**144-158**).

   (*a*). காலதத்துவம் தோன்றும் முறைமையும், அதன் தொழிலும், (**144**).

   (*b*). நியதி கலை வித்தைகள் தோன்றும் முறைமையும், அவற்றின் தொழிலும், (**145**).

   (*c*). அராகதத்துவம் தோன்றும் முறைமையும், அதன் தொழிலும், புருடதத்துவமும் அதன் இயல்பும், (**146**).

   (*d*). மூலப்பிரகிருதி தோன்றும் முறைமையும், அதன் இயல்பும் தொழிலும், (**147**).

   (*e*). மூலப்பிரகிருதியின் தொழிலும், புத்திதத்துவம் தோன்றும் முறைமையும் அதன் தொழிலும், (**148**).

   (*f*). அகங்காரதத்துவம் தோன்றும் முறைமையும், அதன் தொழிலும் வகையும், (**149**).

   (*g*). மனம் ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் தோன்றும் முறைமையும், மனத்தின் தொழிலும், (**150**).

   (*h*). ஞானேந்திரியங்களும் அவற்றின் தொழிலும், (**151**).

   (*i*). கன்மேந்திரியங்களும் அவற்றின் தொழிலும், (**152**).

   (*j*). ஆன்மாவுக்கு விடயவறிவை உண்டாக்குங் கருவிகளின் வகை, (**153**).

   (*k*). தன்மாத்திரைகள் தோன்றும் முறைமையும், அவற்றின் தொழிலும், புரியட்டகவுடம்பும், (**154**).

   (*l*). பஞ்சபூதங்கள் தோன்றும் முறைமையும், அவற்றின் குணங்களும், (**155**).

(*m*). புறப்பூதங்களின் குணமும் தொழிலும், (**156**).
(*n*). புறப்பூதங்களின் வடிவும் நிறமும் பீசாக்கரமும், (**157**).
(*o*). புறப்பூதங்களின் குறியும் அதிதெய்வமும், (**158**).

4. தத்துவங்களின் தொகையும் அவற்றின் இயல்பும், (**159**).
5. தத்துவங்களின் வகை, (**160**).
6. பிரபஞ்சமனைத்துந் தத்துவசொரூபம், (**161**).
7. பிரபஞ்சமனைத்தும் ஒடுங்கும் முறை, (**162-163**).

(*a*). தத்துவங்கள் ஒடுங்கும் முறை, (**162**).
(*b*). உயிர்கள் ஒடுங்கும் முறை, (**163**).

1. முதல்வன் தனுகரணாதிகளைக் கொடுத்தல் உயிர்களின் மலத்தை நீக்குதற்பொருட்டு.

**141** அரன்விதி யருள தென்றே யறைந்தன னதுவு முன்னே
தரைநர கருந்து றக்கந் தநுகர ணாதி யெல்லாம்
வருவதுஞ் செய்த நாதி மலங்களிம் மருந்தாற் றீர்த்துப்
பரகதி யதுவுந் தந்து பாதபங் கயமுஞ் சூட்டும்.

(இ - ள்). அரன் விதி - முதல்வன் செய்யுஞ் செயல்கள்,—அருளது என்று அறைந்தனன் - கருணையே என்று மேலே கூறினும்,—அதுவும் - அக்கருணையும்,—முன்னே தரை நரகு அரும் துறக்கம் - முன்பு பூமி நரகும் அரிய சுவர்க்கம் முதலியவற்றிலே.—தனுகரணாதி எல்லாம் - (உயிர்கள் வினைப்பயனை நுகர்தற்கு வேண்டப்படும்) தனு கரண புவன போகங்களை யெல்லாம்,—வருவதும் செய்து - மாயையினின்றுந் தோற்றுவித்து,--அநாதி மலங்கள் - அவ்வுயிர்களைப்பொருந்திய அநாதியாய மல கன்மங்கள் என்னும் நோய்களை,—இம் மருந்தால் தீர்த்து - இத் தனுகரணாதிகளாகிய மருந்துகளினாலே தீர்த்து,—பரகதி அதுவும் தந்து - பின்னர்ப் பரஞானத்தையும் அருளி,—பாத பங்கயமும் சூட்டும் - செந்தாமரை மலர்போலும் திருவடியையுந் தரும்.

குறிப்பு. 1. அரன்விதி யருள தென்றே யறைந்தனன். (செ. 105 பார்)

2. தனுகரணாதி - தனு கரண புவன போகங்கள். உயிர்கள் தனுகரணங்களைப்பொருந்திப் பூமி நரக சுவர்க்கங்களிலே இன்பத்துன்பங்களை நுகரும் முறைமையும், தனுக்களின் இயல்பும் இவ்வதிகரணத்தின் இரண்டாம் நான்காம் பகுதிகளிற் கூறி, கரணங்களின் இயல்பு இவ்வைந்தாம்பகுதியிற் கூறுகின்றார். கரணங்கள் மாயேயம் எனப்படும். கரணங்கள் - கருவிகள், தத்துவங்கள்.

3. பரகதி - மேலானகதி. கதி - ஞானம்.
4. பாதம் - திருவடி, சிவப்பேறு, முத்தி.

பொழிப்பு. உயிர்களைப் பொருந்திய மல கன்மங்கள் நீங்குதற்பொருட்டு முதல்வன் தனுகரணாதிகளைக் கொடுப்பன். அம் மல கன்மங்கள் நீங்கியவிடத்துப் பரஞானத்தை விளக்கி முத்தியைக் கொடுப்பன்.

மேலதனை உவமைமுகத்தால் விளக்குதல்.

**142.** எழுமுடல் கரண மாதி யிவைமல மலம லத்தாற்
கழுவுவ னென்று சொன்ன கார ணமென்னை யென்னிற்
செழுநவ வறுவை சாணி யுவர்செறி வித்த ழுக்கை
முழுவதுங் கழிப்பன் மாயை கொடுமல மொழிப்பன் முன்னோன்.

(இ-ள்). எழும் உடல் கரணம் ஆதி இவை மலம் - மாயையினின்று தோன்றுகின்ற தனுகரணங்கள் முதலிய இவை மலமாகும்.—மலம் மலத்தால் கழுவுவன் என்று சொன்ன காரணம் என்னை என்னின் - மல கன்மங்களை மாயாமலத்தாலே நீக்குவன் என்று சொன்ன காரணம் யாதெனின்,—செழு நவ அறுவை சாணி உவர் செறிவித்து - வண்ணான் அழகிய கோடிப்புடைவையிற் சாணியும் உவர்மண்ணுமாகிய அழுக்குப் பொருள்களை நன்கு பொருத்தி,—அழுக்கை முழுவதும் கழிப்பன் - முன்னிருந்ததும் பின் வந்ததுமாகிய இருவகை அழுக்கையும் முற்றாகப் போக்குவன். அதுபோல,-முன்னோன் மாயை கொடு மலம் ஒழிப்பன் - முதல்வனும் மாயா மலத்தின் காரியமான தனுகரணாதிகளைக்கொண்டு மலங்களை நீக்குவன்.

பொழிப்பு. அழுக்கைக்கொண்டு அழுக்கை நீக்கும் வண்ணானைப்போல, முதல்வனும் மல கன்மங்களை மாயேய மலத்தாலே நீக்குவன்.

2. அசுத்தமாயையின் இலக்கணம்.

**143.** நித்தமா யருவா யேக நிலையதா யகிலத் துக்கோர்
வித்துமா யசித்தா யெங்கும் வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகந் தனுகர ணமுமு யிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே.

(இ-ள்). மாயை - அசுத்தமாயையானது,—நித்தமாய் - நித்தமாயும்,—அருவாய் - உருவமற்றதாயும்,—ஏக நிலையதாய் - ஒன்றாயும்,—அகிலத்துக்கு ஓர் வித்துமாய் - உலகம் உண்டாதற்கு ஒரு வித்தாயும்,—அசித்தாய் - சடமாயும்,—எங்கும் வியாபியாய் - எவ்விடத்தும் வியாபகமாயும்,—விமலனுக்கு ஓர் சத்தியாய் - முதல்வனுக்கு ஒரு பரிக்கிரக சத்தியாயும்,—புவன போகம் தனு கரணமும் உயிர்க்காய் வைத்ததோர் மலமாய் - புவனமும் போகமும் தனுவும் கரணமுமாக உயிர்களின்பொருட்டு விரிந்ததோர் மலமாயும்,—மயக்கமும் செய்யும் - விபரீதவுணர்வை உண்டாக்குவதாயுமிருக்கும் இலக்கணங்களையுடையதாம்.

குறிப்பு. 1. நித்தமாய் - மாயை எல்லாக் காரியங்களுக்குங் காரணமாயிருத்தலின், நித்தம் எனப்பட்டது. காரிய காரணங்கள் இரண்டும் அநித்தியம் என்றும், உலகம் சார்பினிலே தோன்றும் என்றும் கூறும் சௌத்திராந்திகர் மதம் இதனால் மறுக்கப்பட்டது.

2. அருவாய் - பூதங்கள் உருவாய் நித்தமாயுள்ளன. அப் பூதங்களில் உலகம் தோன்றும் என்னும் உலோகாயதர் மதமும், உருவாயிருக்கும் பரமாணுவே உலகிற்குக் காரணம் என்னும் நையாயிகர் முதலியோர் மதமும் இதனுல் மறுக்கப்பட்டன.

3. ஏக நிலையதாய் - முக்குணங்களிலே உலகம் தோன்றும் என்னும் சாங்கியர் மதம் இதனுல் மறுக்கப்பட்டது.

4. அகிலத்துக்கோர் வித்துமாய் - உலகத்திற்குக் காரணம் சூனியம் என்னும் மாத்தியமிகர் மதம் இதனுல் மறுக்கப்பட்டது.

5. அசித்தாய் - சிற்சத்தியே உலகமாயிருக்கும் என்னும் சிவாத்துவித சைவர் மதம் இதனுல் மறுக்கப்பட்டது.

6. எங்கும் வியாபியாய் - தன்னிடத்து நின்றுந் தோன்றிய காரியப் பொருள்களெல்லாவற்றிலும் மாயை வியாபித்து நிற்கும் என்பது. "விரிவாயதன் செயலின் வியாபியாய்." (சிவப்பிர. செ. 22). பரமாணுக்கள் வியாபகமாயுள்ளன. அவை உலகிற்குக் காரணம் என்னும் வைசேடிகர் மதம் இதனுல் மறுக்கப்பட்டது.

7. விமலனுக்கோர் சத்தியாய் - பிரமம் ஏகமாயுள்ளது. அப் பிரமத்தின் பரிணமமாய் உலகம் தோன்றும் என்னும் பாற்கரியர் மதம் இதனுல் மறுக்கப்பட்டது. மாயை சடமாயினும், உயிர்களின் மலத்தை நீக்குதற்கு மருந்தாய்ச் சிற்சத்தியைப்போல ஒரு துணைக்காரணமாயிருத்தலின், அது உபசாரமாகச் சத்தி எனப்படும். இதற்குஞ் சிற்சத்திக்கும் பேதங்காட்டுதற்கு இது பரிக்கிரகசத்தி எனப்படும். பரிக்கிரகசத்தி - தொழிற்குக் காரணமாயும், வேண்டும்போது உபகாரப்படுவதாயுமிருக்கும் வைப்புச்சத்தி.

8. புவன போகந் தநுகரணமு முயிர்க்காய் வைத்ததோர் மலமாய் - மாயை அநிர்வசனம் என்று கூறும் மாயாவாதிகள் மதம் இதனுல் மறுக்கப்பட்டது.

9. மயக்கமுஞ் செய்யும் - சைவருள் ஒருசாரார் மாயை ஆணவமலம் போல, மயக்கம் செய்யும் என்பர். அவரை மறுத்தற்பொருட்டு "மயக்கமும்" என்ருர். மயக்கம் - நான்சுகி நான்துக்கி என்று வரும் விபரீதவுணர்வு. உம்மை மாயையின் பொதுவியல்பை உணர்த்தி நின்றது, சிறப்பியல்பையன்று.

பொழிப்பு. உலகிற்கு முதற்காரணம் எனப்படும் மாயை நித்தமாதல் முதலிய இலக்கணங்களையுடையதாம்.

### 3. அசுத்தமாயாகாரியம் (மாயேயம்) (144-159).

(a). காலதத்துவம் தோன்றும் முறைமையும், அதன் தொழிலும்.

**144.** மாயையிற் கால மோடு நியதியின் கலாதி தோன்றும்
ஆயவக் கால மூன்ரு யாக்கியு மளித்தும் போக்கிக்
காயமோ டுலகுக் கெல்லாங் காலசங் கையினைப் பண்ணி
நாயக னணை யாலே நடத்திடுஞ் சகத்தை யெல்லாம்.

(இ-ள்). மாயையின் - மேற்கூறிய அசுத்தமாயையினின்றும்,—கால மோடு நியதி - காலதத்துவமும் நியதிதத்துவமும்,—பின் கலாதி தோன்றும் - பின்னர்க் கலைமுதலிய தத்துவங்களும் முறையே தோன்றும்,—ஆய அக் காலம் - தோன்றிய அக் காலதத்துவமானது,—மூன்றாய் - இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என முத்திறப்பட்டு,—ஆக்கியும் அளித்தும் போக்கி - தனக்குக் கீழுள்ள பிரபஞ்சமனைத்தையும் தோற்றுவித்தும் நிலைபெறுத்தியும் ஒடுக்கியும்,—காயமோடு உலகுக்கு எல்லாம் காலசங்கையினைப் பண்ணி - உடலுயிர்கள் அனைத்திற்கும் காலவரையறையைச் செய்தும்,—நாயகன் ஆணையாலே - முதல்வனது சத்தியாலே,—சகத்தை எல்லாம் நடத்திடும் - சடமுஞ் சித்துமாகிய பிரபஞ்சமனைத்தையும் நடாத்தும்.

குறிப்பு. 1. அசுத்தமாயாகாரியம் - தனுகரண புவன போகங்கள். அவை மாயேயம் எனப்படும். இச்செய்யுள்முதல் 158-ம் செய்யுளீறாக அசுத்தமாயா காரியமான கரணங்கள் (தத்துவங்கள்) தோன்றும் முறைமையும் அவற்றின் இலக்கணமுங் கூறப்படுகின்றன. மாயேயம் - மாயாகாரியம். மாயா - பகுதி. ஏய - விகுதி.

2. மாயையிற் காலமோடு நியதிபின் கலாதி தோன்றும்:—அசுத்த மாயையினின்று காலம் நியதி கலை என்னும் தத்துவங்களும், கலையினின்று வித்தை என்னும் தத்துவமும் பிரகிருதிமாயையும், வித்தையினின்று அராகம் என்னும் தத்துவமும் தோன்றும். இது சிருட்டிக்கிரமம். மாயையிலிருந்து கலையும் காலமும் நியதியும், கலையிலிருந்து வித்தைமுதலியனவுந் தோன்றும் எனச் சில நூல்கள் கூறும். அது பிரவிருத்திக்கிரமம்பற்றியது. பிரவிருத்திக்கிரமம் - ஆன்மாக்களுக்குப் போகநுகர்ச்சியைச் செய்யுங் கிரமம்.

3. ஆய அக் காலம் மூன்றாய் - காலம் நித்தியம் என்பது சிலர் கொள்கை. அதனை மறுத்தற்பொருட்டு இறந்தகாலம் முதலியனவாக மூன்றாய் என்றார். அசேதனப்பொருள் அனேகமாயின், அஃது அழிவுடைத்தாகும் என்பது சித்தாந்தம். ஆய - ஆகிய, தோன்றிய.

4. கால சங்கையினைப் பண்ணுதல் - உடலுயிர்கள் தோன்றுங் காலத்தையும், நிற்குங் காலத்தையும், அழியுங் காலத்தையும் வரையறைசெய்தல்.

5. நாயகனாணையாலே நடத்திடுஞ் சகத்தையெல்லாம் - காலம் சடமாதலால், முதல்வனது சத்தியால் அதிட்டிக்கப்பட்டு மேற்கூறியவாறு பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் என்பது.

பொழிப்பு. அசுத்தமாயையினின்றுங் காலம் முதலிய தத்துவங்களுளவாம். அவற்றுள், காலமானது இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என முத்திறப்பட்டுத் தனக்குக் கீழுள்ள பிரபஞ்சமனைத்தையுந் தோற்றுவித்து நிறுத்தி ஒடுக்கியும், உடலுயிர்களுக்குக் காலவரையறைசெய்தும், முதல்வனுணையினுலே அதிட்டிக்கப்பட்டு, இங்ஙனம் பிரபஞ்சமனைத்தையுஞ் செலுத்தாநிற்கும்.

### (ங). நியதி கலை வித்தைகள் தோன்றும் முறைமையும், அவற்றின் தொழிலும்.

145. நியதிபின் ரோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும்
அயர்விலாக் கலைபின் ரோன்றி யாணவ மொதுக்கிச் சித்தின்
செயல்புரி கிரியா சத்தி தெரிவிக்குஞ் சிறிதே வித்தை
உயர்கலை யதனிற் ரோன்றி யறிவினை யுதிக்கப் பண்ணும்.

(இ-ள்). நியதி பின் தோன்றி - நியதிதத்துவம் காலதத்துவத்தின் பின்னாக மாயையினின்றும் முதல்வன் ஆணையாலே தோன்றி,—கன்ம நிச்சயம் பண்ணி நிற்கும் - அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகருமாறு நியமிக்கும்,—பின் அயர்வு இல்லாக் கலை தோன்றி - அதன்பின் அம் மாயையினின்றும் சோர்வில்லாத கலாதத்துவம் தோன்றி,—ஆணவம் (சிறிதே) ஒதுக்கி - ஆணவமலத்தைச் சிறிதே நீக்கி,—சித்தின் செயல்புரி கிரியா சத்தி சிறிதே தெரிவிக்கும் - ஆன்மாவின் தொழில்செய்யும் கிரியாசத்தி விடயங்களைப்பொருந்தும்படி அதனை ஏகதேசமாய் விளக்கி நிற்கும்,—வித்தை - வித்தியாதத்துவம்,—உயர் கலை யதனில் தோன்றி - மேலான அக் கலையினின்றுந்தோன்றி,—அறிவினை உதிக்கப்பண்ணும் - அவ்வான்மாவின் ஞான சத்தியை விளக்கி அப் போகங்களை அறியச்செய்யும்.

குறிப்பு. 1. நியதிதத்துவம் கன்மத்தை வரைந்து அதன்பயனை ஆன்மா தப்பாது அனுபவிக்கச்செய்யும். அஃதாவது, ஒருவர் செய்த கன்மத்தின் பயன் வேறொருவரை அடையாமலும், அவரவர் செய்த கன்மத்தின் பயன் அவரவரை விட்டு நீங்காமலும், ஏறாமலும், குறையாமலும் பொருந்தச் செய்தலாம்.

2. கலாதத்துவம் ஆணவமலத்தைச் சிறிதே நீக்கி, ஆன்மாவின் கிரியா சத்தியை விளக்கி, வினைக்கீடாக வரும் போகங்களைப் பொருந்தும்படி அப் போகங்களிற் செலுத்தி நிற்கும். ஆணவமலத்தைச் சிறிதே நீக்கி ஆன்மா வின் கிரியாசத்தியை விளக்குதலும் விடயபோகங்களிற் செலுத்துதலும் கலையின் தொழிலாம்.

3. வித்தியாதத்துவம் ஆன்மாவுக்கும் புத்திக்கும் இடையிலே நின்று புத்தியின்வாயிலாகவந்த விடயபோகங்களை ஆன்மாப்பொருந்தும்படி அவ் வான்மாவுக்கு அறிவை உதிக்கச்செய்யும். ஆன்மாவின் ஞானசத்தியைச் சிறிதே விளக்கிப் போகங்களை அறியச்செய்தல் வித்தையின் தொழிலாம்.

பொழிப்பு. அசுத்தமாயையினின்று காலதத்துவம் தோன்றியபின், அம் மாயையினின்றும் நியதிதத்துவம் தோன்றி, அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகரும்படி நியமிக்கும். அதன்பின், அவ் வசுத்தமாயையினின்று கலை தோன்றி ஆணவமலத்தைச் சிறிதே நீக்கி ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்கி விடயங்களைப் பொருந்தச்செய்யும். அக் கலையினின்றும் வித்தை தோன்றி ஆன்மாவின் ஞானசத்தியை விளக்கி விடயங்களை அறியச்செய்யும்.

(c). அராகதத்துவம் தோன்றும் முறைமையும் அதன் தொழிலும், புருடதத்துவமும் அதன் இயல்பும்.

146. விச்சையி னராகந் தோன்றி வினைவழி போகத் தின்கண்
இச்சையைப் பண்ணி நிற்குந் தொழிலறி விச்சை மூன்றும்
வைச்சபோ திச்சா ஞானக் கிரியைமுன் மருவி யான்மா
நிச்சய புருட னாகிப் பொதுமையி னிற்ப னன்றே.

(இ - ள்). விச்சையின் அராகம் தோன்றி - மேற்கூறிய வித்தையினின்றும் முதல்வனுணையால் அராகதத்துவம் தோன்றி,—வினைவழி போகத்தின்கண் இச்சையைப் பண்ணி நிற்கும் - (ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்கி) வினைக்கீடாகவரும் போகங்களிலே இச்சையை உண்டாக்கி நிற்கும்,—தொழில் அறிவு இச்சை மூன்றும் வைச்சபோது - இங்ஙனம் கலை முதலிய மூன்றும் ஆன்மாவின் கிரியாசத்தி ஞானசத்தி இச்சாசத்தி மூன்றனையும் விளக்கியவிடத்து,—இச்சா ஞானக் கிரியை முன் மருவி;- அவ்விச்சா ஞானக் கிரியைகள் போகங்களில் உன்முகமாகி,—ஆன்மா - ஆன்மாவானது,—நிச்சய புருடனாகி - அப்போகங்களை அறியத்தக்க வல்லமையுடையதாய்ப் புருடதத்துவம் எனப் பெயர்பெற்று,—பொதுமையில் நிற்பன் - அவற்றைப் பகுத்தறிந்து நுகருந்தன்மையின்றிப் பொதுத்தன்மையுற்றிருக்கும்.

குறிப்பு. 1. முன் மருவி - உன்முகமாய், மேனோக்கி. உன்முகமாதல் - மேனோக்கல், விடயத்திலே சிந்தையாயிருத்தல்.

2. ஆன்மா நிச்சய புருடனாகி:—ஆன்மா - பஞ்சகஞ்சுகனாய்ப் போகங்களில் உன்முகமாய் நிற்கும் உயிர். அஃது, கன்மத்தை வரையறுத்து நியமித்து நிற்கும் காலநியதிகளையும், இச்சா ஞானக் கிரியைகளை விளக்கி நிற்கும் அராகம் வித்தை கலைகளையும் பொருந்துதலினாற், பஞ்சகஞ்சுகன் எனப்படும். பஞ்சகஞ்சுகன் - ஐந்து சட்டையுடையவன். இத் தத்துவங்களைந்தையும் பொருந்திப் போகங்களில் உன்முகமாயும், அவற்றை அறியத்தக்க வல்லமையுடையதாயுமிருக்கும் அவ்தரத்தில், ஆன்மா புருடதத்துவம் எனப்படும். நிச்சயித்தல் - அளவிடுதல், மட்டிட்டறிதல். புருடன் - பௌருஷமுடையவன். பௌருஷம் - வல்லமை. "கலாதிதத்துவங்களோடும் அவித்தையாதிகளோடுங்கூடிப் பிரகிருதியைப் புசித்தற்கு உத்தியுக்தனாயிருக்கிறவன் புருடன் என்று சொல்லப்படுவன்." (பௌஷ். 402). நிச்சயம் புருடனாகி என்றும் பாடம். இதனைக்கொள்ளுமிடத்துப் போகங்களை நிச்சயம்பண்ணும் வல்லமையுடையனாய் என்று பொருளுரைக்க.

3. பொதுமையி னிற்பன் - கலாதிகளைக் கூடுதலினாற் கர்த்திருத்துவமும், அவித்தையாதிகளைக் கூடுதலினாற் போத்திருத்துவமும் புருடனுக்குண்டாகும். (பௌஷ். 404). போத்திருத்துவமின்றிக் கலாதிகளைக் கூடிக் கர்த்திருத்துவம்மாத்திரம் அடைதலினால், "பொதுமையி னிற்பன்"

என்றார். அவித்தையாதி - அவித்தை, அகங்காரம், அவா, ஆசை, கோபம் என்பன. இவை பஞ்சக்கிலேசம் என்றும், ஐவகைக் குற்றங்கள் என்றுஞ் சொல்லப்படும். அவித்தை - அஞ்ஞானம். (குறள். அதி. 36). கர்த்திருத்துவம் - செய்பவன் தன்மை. போத்திருத்துவம் - உண்பவன் தன்மை, போக நுகர்ச்சிக்கு வினைமுதலாந்தன்மை.

பொழிப்பு. வித்தையினின்றும் அராகதத்துவந்தோன்றி ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்கிப் போகங்களில் இச்சையை உண்டாக்கும். இங்ஙனம் கலையாதிதத்துவங்களினால் இச்சா ஞானக் கிரியைகள் விளங்கப்பெற்றுப், போகங்களில் உன்முகமாயும் அவற்றை அறியத்தக்க வல்லமையுடையதாயுமிருக்கும் ஆன்மா, புருடதத்துவம் எனப் பெயர்பெறும்.

(*d*). மூலப்பிரகிருதி தோன்றும் முறைமையும்,
அதன் இயல்பும் தொழிலும்.

147. வருங்குண வடிவாய் மூலப் பிரகிருதி கலையிற் றோன்றித்
தருங்குண மூன்றா யொன்றிற் றான்மூன்றாய் மும்மூன் றாகும்
இருங்குண ரூப மாகி யியைந்திடு மெங்கு மான்மாப்
பெருங்குண வடிவாய்ப் போக சாதனம் பெத்த மாமே.

(இ - ள்). மூலப்பிரகிருதி - அதன்பின் மூலப்பிரகிருதியானது,—வரும் குணவடிவாய் - தன்னிடத்துத் தோன்றுங் குணங்களின் அவ்வியத்த வடிவாய்,—கலையின் தோன்றி - சீகண்டருத்திரரின் அருளாற் கலையினின்று தோன்றி,—தரும் குணம் மூன்றாய் - தன்னால் வியத்தமாகத் தரப்படுங் குணங்கள் சாத்துவிகம் இராசதம் தாமதம் என மூவகையாய்,—ஒன்றின் தான் மூன்றாய் - ஒவ்வொன்றிலுந் தான் மூவகையாய்,—மும்மூன்றாகும் - ஒன்பதுவகையாகும்,—இரும் குண ரூபமாகி எங்கும் இயைந்திடும் - அம் மூலப்பிரகிருதி பெரிய குணவடிவாகி எவ்விடத்தும் கலந்து நிற்கும்,—ஆன்மாப் பெருங் குணவடிவாய்ப் போகசாதனம் பெத்தமாம் - அதனால் ஆன்மாவும் பெரிய குணவடிவினதாய் அதன் போகத்திற்குச் சாதனமாயுள்ள தத்துவங்களும் போக்கியப்பொருள்களும் பந்திக்கப்பட்டு நிற்கும்.

குறிப்பு. 1. வருங்குண வடிவாய் மூலப் பிரகிருதி கலையிற் றோன்றித் தருங்குண மூன்றாய்:—மூலப்பிரகிருதியானது அரும்பினிடத்து மணம் விளங்காமல் அடங்கி நின்றாற்போலத் தன்னிடத்துண்டாகிய குணங்கள் சிறிதும் விளங்காமல் அவ்வியத்த குணவடிவாயுள்ளது. அவ்வியத்தம் - வெளிப்படாதது. அ - இன்மை. வியத்தம் - வெளிப்பட்டது. இக்குணங்கள் வியத்தமாயும், பிரிந்து தோன்றாது சமமாயுமிருக்கும் நிலையிற் குணதத்துவம் என்னப்படும். "அவ்வியத்தமாயுள்ள குணங்களின் சாமியம் பிரகிருதி என்றும், வியத்தமாயுள்ள குணங்களின் சாமியம் குணதத்துவம்" என்றும் பௌஷ்கரம் கூறும் (பௌஷ். புங்ஸ்த்வ.). சாமியம் - சமநிலை. இங்ஙனம்

குணதத்துவம் பிரகிருதியினின்று தோன்றினும் இவை இரண்டிற்கும் சொரூபத்தால் வேறுபாடின்மையின் (பௌஷ். 428), இவற்றைப் பகுக்காது ஒரு தத்துவமாகக்கொண்டனர் இந்நூலாசிரியர் என்பது, 160-ம் செய்யுளிற் "புமான்கீழெண்மூன்றாய தத்துவம்" என்பதனாலும், வருஞ் செய்யுளில் "புத்தியவ்வியத்திற்றோன்றும்" என்பதனாலும் அறியப்படும்.

2. ஒன்றிற்றொன்மூன்றாய் மும்மூன்றாகும்:—சாத்துவிகத்திற் சாத்துவிகம் இராசதம் தாமதம், இராசதத்திற் சாத்துவிகம் இராசதம் தாமதம், தாமதத்திற் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்பன. மூக்குணங்களும் ஆன்மாக்களைப்பொருந்தி அவரவர் கன்மத்துக்கிடாக வருவிக்குஞ் செயல்களாவன:—சாத்துவிககுண விருத்திகள் பதினாறு. அவை (a). தைரியம் (அசையாது நிற்றல்) (b). மனம் உறுதியாய் நிற்றல் (c). சாமர்த்தியம் (d). மென்மை (e). நொய்ம்மை (f). மகிழ்ச்சி (g). நேர்மை (h). சுத்தி (i). புண்ணியமுயற்சி (j). பொறுமை (k). கிரகித்ததை மறவாதிருத்தல் (l). போதுமென்றமைந்த நன்மனமுடைமை (m). முத்திபெற வேண்டுமென்னும் மேலான இச்சை (n). புறக்கரணங்களை அடக்குதல் (o) அகக்கரணங்களை அடக்குதல் (p). பெருங்கருணை என்பன. (பௌஷ். 430).

இராசதகுண விருத்திகள் ஒன்பது:—(a). யான் எனது என்னும் அபிமானம் (b). வீரத்தன்மை (c). கொடுமை (d). பெருமுயற்சி (e). வஞ்சனை (f). திடமுடைமை (g). இரக்கமின்மை (h). போகமுடைமை (i). இடம்புமுடைமை என்பன. (பௌஷ். 431).

தாமதகுண விருத்திகள் ஒன்பது:—(a). பிரியமின்மை (b). சோம்பல் (c). உலோபமுடைமை (d). கோட்சொல்லல் (e). தன்னைக் கௌரவமாயெண்ணல் (f). அதிக நித்திரை (g). கர்வத்தால்வருஞ் சோம்பல் (h). கேடுசெய்தல் (i). மூடத்தன்மை. (பௌஷ். 432).

முன்சொல்லிய ஒன்பது குணங்களும் இம் முப்பத்துநான்கு விகற்பங்களுள் அடங்கும். இங்ஙனம் மூன்று குணங்களும் ஒன்பதாகவும், முப்பத்துநான்காகவும், இன்னும் பலவாகவும் விரியும்.

3. இருங் குணம் - அளவில்லாத குணங்கள்.

4. எங்கும் இயைந்திடும் - மூலப்பிரகிருதி தன்னிடத்துத் தோன்றிய தத்துவங்கள் போக்கியப்பொருள்கள் என்பவற்றோடும், ஆன்மாக்களோடும் இயைந்து நிற்கும் என்பது.

5. போகசாதனம் பெத்தமாம்:—முக்குணங்களும் புத்திமுதற் பிருதிவியீறான தத்துவங்களையும் போக்கியப்பொருள்களையும் வியாபித்து அவற்றோடு கலந்து நிற்கும் என்பது. "முக்குணங்களால் வியாபிக்கப்படாமலும், கலந்த ஒரு குணமாவதில்லாமலும் யாதொரு சடபதார்த்தமும் இவ்வுலகத்தில்லை. (மிருகேந். 84). சாதனம் - துணைக்காரணம்.

பொழிப்பு. மூலப்பிரகிருதி கலையிலே தோன்றும். அஃது அவ்வியத்த குணவடிவாயுள்ளது. முக்குணங்களைத் தோற்றுவிக்கும். இக்குணங்கள் ஒவ்

வொன்றும் மூவகையாய் ஒன்பதாகும். அஃது பெரிய குணவடிவாகி நின்று ஆன்மாக்களையும் தத்துவங்களையும் போக்கியப்பொருள்களையும் பந்திக்கும்.

### (e). மூலப்பிரகிருதியின் தொழிலும், புத்திதத்துவம் தோன்றும் முறைமையும் அதன் தொழிலும்.

**148**. சித்தமா மவ்வி யத்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும்
புத்தியவ் வியத்திற் றோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து
வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப்
பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும்.

(இ - ள்). சித்தமாம் அவ்வியத்தம் - மேற்கூறியவாறு குணவடிவாயன்றிச் சித்தவடிவாயும் நிற்கும் மூலப்பிரகிருதி,—சிந்தனை அதுவும் செய்யும் - ஆன்மாக்களைப் பந்தித்தலேயன்றி அவற்றிற்குப் போகசிந்தனையையும் உண்டாக்கும்,—புத்தி அவ்வியத்தில் தோன்றி - புத்திதத்துவம் பிரகிருதியிலே தோன்றி,—புண்ணிய பாவம் சார்ந்து - அவ்வவ்வுயிர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ப,—வத்து நிச்சயமும் பண்ணி - விடயங்களை இது அது என்று தீர்மானித்தும்,—வருஞ் சுக துக்க மோகப் பித்தினின் மயங்கி - அவ்விடயங்களால் வரும் சுக துக்க மோகங்களாகிய மயக்கத்தில் அழுந்தி,—ஞானக் கிரியையும் பேணி நிற்கும் - ஆன்மாவின் அறிவையும் தொழிலையும் விருத்திசெய்து நிற்கும்.

குறிப்பு. 1. சித்தமா மவ்வி யத்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும்:—மூலப்பிரகிருதி குணவடிவாய் நிற்றலேயன்றிச் சித்தவடிவாயும் நிற்கும். குணவடிவாய் நின்று முக்குணங்களையுந் தோற்றுவிக்க, ஆன்மா அவற்றைப் பொருந்தி அக்குணங்களின் மயமாய் நிற்கும். அது சித்தவடிவாய் நின்று போக சிந்தனையை உண்டாக்கக், குணங்களின் மயமாய் நிற்கும் ஆன்மா, விடயபோகங்களை அறிந்து இச்சித்து அவற்றில் அழுந்தும். சாத்துவிக குணம் விடயபோகங்களை அறியச்செய்யும். தமோகுணம் அப்போகங்களில் இச்சையை உண்டாக்கும். இராசதகுணம் அப்போகங்களைப் பற்றச்செய்யும். மேற்கூறியவாறன்றி, அவ்வியத்தத்தினின்று சித்தம் தோன்றும் எனப் பொருள்கூறின், புருடதத்துவத்துக்குக் கீழுள்ள தத்துவங்கள் இருபத்து நான்கு என நூலாசிரியர் கூறுதலாலும் (செ. 160), புரியட்டகவுடம்பிற்குக் காரணமாயுள்ள தத்துவங்களுள் "சித்தம்" சேர்க்கப்படாமையாலும் (செ. 154), "சிந்தைநினை வையம் வந்துதரு மனமொழிய வகுப்பொணுதே" எனப் புடைநூலாசிரியர் கூறுதலாலும் (சிவப்பிர. செ. 43), "சிந்தனை யதுவுஞ் செய்யும்" என்றதனுல், உம்மைபற்றிச் சித்தத்திற்கு வேறுமொரு தொழிலுளதாகப் பெறப்படுதலாலும், அது பொருந்தாது.

2. புத்தியவ் வியத்திற் றோன்றி - புத்தி குணதத்துவத்திலே தோன்றுமென்று பௌஷ்கரம் கூறும். இந்நூலாசிரியர் பிரகிருதியையும் அதனிடத்

துத் தோன்றுங் குணங்களையும் ஒரு தத்துவமாகக் கொண்டனராதலின் "புத்தி அவ்வியத்திற் றோன்றும்" என்றார். அவ்வியத்தத்தில் என்பது அவ்வியத்தில் என விகாரமாயிற்று.

3. ஞானக் கிரியையும் பேணி நிற்கும் - இந்திரியங்கள்வாயிலாக வரும் விடயங்களைப் புத்தி நிச்சயித்துத், தனக்கும் ஆன்மாவுக்கும் இடையே நிற்கும் வித்தையின்வாயிலாக, அவை ஆன்மாவின் அறிவு தொழில்களுக்கு அனுபவமாகும்படி செய்யும் என்பது. வித்தை - ஆன்மாவுக்கு அறிவை எழுப்பும் வித்தியாதத்துவம். பேணுதல் - வளர்த்தல், விருத்திசெய்தல்.

பொழிப்பு. மூலப்பிரகிருதி சித்தரூபமாய் நின்று புருடனுக்குப் போக சிந்தனையையும் உண்டாக்கும். புத்திதத்துவம் பிரகிருதியிலே தோன்றி, உயிர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாக விடயங்களை நிச்சயித்து அவற்றிலே மயங்கி, அவை ஆன்மாவின் அறிவு தொழில்களுக்கு விடயமாம்படி செய்யும்.

### (*f*). அகங்காரதத்துவம் தோன்றும் முறைமையும், அதன் தொழிலும் பிரிவும்.

**149.** ஆங்கார மபுத்தி யின்க ணுதித்தகந் தைக்கு வித்தாய்
ஈங்கார்தா னென்னோ டொப்பா ரென்றியா னென்ன தென்றே
நீங்காதே நிற்குந் தானு மூன்றதாய் நிகழு மென்பர்
பாங்கார்பூ தாதி வைகா ரிகந்தைச தந்தா னென்றே.

(இ-ள்). புத்தியின்கண் ஆங்காரம் உதித்து - மேற்கூறிய புத்திதத்துவத்தினின்றும் அகங்காரதத்துவம் தோன்றி,—அகந்தைக்கு வித்தாய் - அகந்தையுறுதற்கு மூலகாரணமாய்,—ஈங்கு ஆர்தான் என்னோடு ஒப்பார் என்று - இப்பூமியில் யாவர்தாம் என்னோடு ஒப்பவர்? ஒருவருமில்லை என்று செருக்குற்றும்,—யான் என்னது என்று - யான் எனது என்று அபிமானித்தும்,—நீங்காதே நிற்கும் - ஆன்மாவைவிட்டு நீங்காது நிற்கும்,—தானும் - அவ்வகங்காரமும்,—பாங்கு ஆர் பூதாதி - (குணவேற்றுமைபற்றிப்) பகுப்பினையுடைய பூதாதியகங்காரமும்,—வைகாரிகம் - வைகாரியகங்காரமும்,—தைசதம் என்று - தைசதவகங்காரமும் என்று,—மூன்றதாய் நிகழும் என்பர் - முத்திறப்பட்டு விளங்கும் என்பர் பெரியோர்.

குறிப்பு. 1. அகந்தை - செருக்கு, அபிமானம். செருக்கு - யானலது பிறரொருவர் என்னையொப்பார் இப்புவியிலில்லை என்னும் இயல்பு. (சிவப்பிர. 43). அபிமானம் - யான் எனது என்னுந் தன்மை. அது இந்திரியங்கள் வாயிலாக வந்த விடயங்களிலொன்றைப் புத்தி நிச்சயிக்குமிடத்து நான் அறிந்தேன் அல்லது எனது பொருள் என மதித்தல். அகம் - நான். தா - தன்மை. செருக்குறுதலும் அபிமானித்தலும் அகங்காரத்தின் தொழிலாம். "ஈங்கார்தா னென்னோ டொப்பார் என்றும் யான் எனது என்றும் செருக்

குற்று'' எனப் பொருள்கொள்ளினும் அமையும். செருக்கு - மயக்கம். யான் எனது என்னும் செருக்கு - யான் என்றும் எனது என்றும் பகுத்துணரும் மயக்கவுணர்வு.

2. நீங்காது நிற்றல் - ஆன்மாவை முத்திபரியந்தம் விட்டு நீங்காது நிற்றல்.

3. பாங்கு - பங்கு, பகுப்பு.

4. பூதாதி வைகாரிகந் தைசதம்:—பூதாதி தாமசகுணத்தான் மிக்கிருப்பது. வைகாரிகம் இராசதகுணத்தான் மிக்கிருப்பது. தைசதம் சாத்துவிக குணத்தான் மிக்கிருப்பது. (பௌஷ். பும்ஸ்த்வ. 140).

பொழிப்பு. புத்திதத்துவத்தில் அகங்காரதத்துவந் தோன்றும். அஃது ஆன்மாவோடு வேற்றுமையின்றி நின்று செருக்குறுதலையும் அபிமானித்தலையுஞ் செய்யும். அதுவும் பூதாதியகங்காரம் வைகாரிகாகங்காரம் தைசதவகங்காரம் என முத்திறப்படும்.

(g). மனமும் அதன் தொழிலும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் தோன்றும் முறைமையும்.

**150.** மனமது தைச தத்தின் வந்தொரு பொருளை முந்தி
நினைவதுஞ் செய்தங் கைய நிலைமையி னிற்கு மாங்கே
யினமலி சோத்தி ராதி கன்மவிந் திரிய மெல்லாம்
முனமுரை செய்த வைகா ரிகந்தரு மென்பர் முன்னோர்.

(இ - ள்). மனமது - மன்மானது,—தைசதத்தின் வந்து - தைசதவகங்காரத்தினின்றுந் தோன்றி,—ஒரு பொருளை முந்தி நினைவதும் செய்து - எதிர்ப்பட்ட ஒரு விடயத்தை இஃது யாதோ என முன்னர்ச் சித்தரூபமாய் நின்று சிந்தித்தும்,—அங்கு ஐய நிலைமையில் நிற்கும் - பின்பு அவ்விடயத்தில் நிச்சயம் பிறவாது ஐயமடைந்து நிற்கும்,--ஆங்கே - அத் தைசதவகங்காரத்தினின்றே,—இனம் மலி சோத்திராதி - இனம் மிகுந்த சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்νுவை ஆக்கிராணம் என்னும் ஐந்தும் தோன்றும்,—கன்ம இந்திரியம் எல்லாம் - வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும்,—முனம் உரை செய்த வைகாரிகம் தரும் என்பர் முன்னோர் - முன்னர்க்கூறிய வைகாரிகாகங்காரத்தினின்று தோன்றும் என்பர் பெரியோர்.

குறிப்பு. மனமது தைசதத்தின் வந்து......ஐய நிலைமையி னிற்கும்:—மனம் எதிர்ப்பட்ட ஒரு பொருளை இஃது யாதோ எனச் சிந்தித்து நிற்கும் நிலை சித்தம் எனப்படும். அந்த மனம் அவ்வாறு சிந்தித்தபின் அப்பொருளின்கண் அதுவோ இதுவோ என்று ஐயப்பட்டு நிற்கும் நிலை மனமாம். இங்ஙனம் மனம் என்னும் தத்துவம் ஒன்றே தொழில்வேறுபாட்டால் இருவகையாதல் காண்க. இவ்வாறன்றிச் சித்தம் என்று ஒரு தனித் தத்துவமில்லை. ''இச்சைதானுருவாய்ச் சங்கற்பசுதாகதியுந் தந்து மானதமானது

நிற்கும். சிந்தைநினை வையம் வந்துதரு மனமொழிய வகுப்பொணுதே.'' (சிவப்பிர. 43). ''மனமது தைசதத்தின் வந்தொரு பொருளைப்பற்றி'' என்றும் பாடம்.

பொழிப்பு. தைசதவகங்காரத்தினின்று மனம் தோன்றும். அஃது எதிர்ப்பட்ட ஒருபொருளை இஃது யாதோ என்று சித்தரூபமாய் நின்று சிந்தித்தும், பின் அதன்கண் துணிவுபெறுமல் அதுவோ இதுவோ என்று ஐயுற்றும் நிற்கும். அவ்வகங்காரத்தினின்று பின் ஞானேந்திரியங்கள் தோன்றும். வைகாரிகவகங்காரத்தினின்றுங் கன்மேந்திரியங்கள் தோன்றும்.

(*h*). ஞானேந்திரியங்களும், அவற்றின் தொழிலும்.

**151.** நற்செவி துவக்குக் கண்ணு நாசியைந் தினையு நல்லோர்
புத்தியிந் திரிய மென்று புகன்றன ரிவைத மக்குச்
சத்தநற் பரிசரூப விரதகந் தங்க ளைந்தும்
வைத்தனர் விடய மாக வடைவினின் மருவு மென்றே.

(இ-ள்). நல் செவி துவக்குக் கண் நா நாசி ஐந்தினையும் - நன்மையாகிய சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் என்னும் ஐந்தினையும்,—நல்லோர் - அறிவுடையோர்,—புத்தி இந்திரியம் என்று புகன்றனர் - ஞானேந்திரியங்கள் என்று சொல்வினர்,—இவை தமக்கு விடயமாக - இவற்றிற்கு விடயமாக,—அடைவினின் - முறையே,—சத்த நல்பரிச ரூப இரத கந்தங்கள் ஐந்தும் - சத்தமும் நல்ல பரிசமும் உருவமும் இரதமும் கந்தமுமாகிய பூதகுணம் ஐந்தும்,—மருவும் என்று வைத்தனர் - பொருந்தும் என்று வைத்தனர்.

குறிப்பு. செவிக்கு விடயஞ் சத்தம்; துவக்குக்கு விடயம் பரிசம்; கண்ணுக்கு விடயம் உருவம்; நாவிற்கு விடயம் இரதம்; நாசிக்கு விடயம் கந்தம். சத்தம் முதலிய ஐந்தும் விடயதன்மாத்திரைகள் என்றும், காரிய தன்மாத்திரைகள் என்றும், பூதகுணங்கள் என்றுஞ் சொல்லப்படும்.

சத்தாதி விடயங்களை அறிவதே ஞானேந்திரியங்களின் தொழிலாம்.

சுரோத்திரம் ஆகாயம் பற்றுக்கோடாகச் செவிகளைப் பொருந்திநின்று சத்தத்தை அறியும்.

துவக்கு வாயு பற்றுக்கோடாகச் சரீரத்தைப் பொருந்திநின்று பரிசத்தை அறியும்.

சட்சு தேயு பற்றுக்கோடாகக் கண்களைப் பொருந்திநின்று உருவத்தைக் காணும்.

சிங்குவை அப்பு பற்றுக்கோடாக நாவைப் பொருந்திநின்று இரதத்தை அறியும்.

ஆக்கிராணம் பிருதிவி பற்றுக்கோடாக மூக்கைப் பொருந்திநின்று கந்தத்தை அறியும்.

பொழிப்பு. சுரோத்திரம் முதலிய ஐந்தும் ஞானேந்திரியங்கள் எனப்படும். சத்தம் முதலிய ஐந்தும் இவற்றிற்கு விடயங்களாம்.

(i). கன்மேந்திரியங்களும், அவற்றின் தொழிலும்.

152. வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்த மைந்தும்
நீக்கினர் முன்னே கன்மேந் திரியங்க ளெனநி னைந்தே
ஆக்கிய வசன கமன தானமும் விசர்க்கா னந்தம்
ஊக்கமா ரைந்து மைந்தின் றொழிலென வோதி னரே.

(இ - ள்). வாக்கொடு பாதம் பாணி பாயுவோடு உபத்தம் ஐந்தும் - வாக்கும் பாதமும் பாணியும் பாயுவும் உபத்தமும் ஆகிய ஐந்தும்,—கன்ம இந்திரியங்கள் என நினைந்து முன்னே நீக்கினர் - தொழில் செய்யுங் கருவிகள் எனக் கருதி முன்னே அவற்றை ஞானேந்திரியங்களினின்று வேறாக வைத்தனர்,—ஆக்கிய வசன கமன தானமும் விசர்க்க ஆனந்தம் - இவற்றால் உண்டாக்கப்பட்ட வசனமும் கமனமும் தானமும் விசர்க்கமும் ஆனந்தமுமாகிய,—ஊக்கம் ஆர் ஐந்தும் - உள்ளக்கிளர்ச்சி பொருந்திய ஐந்தும்,—ஐந்தின் தொழில் என ஓதினர் - வாக்கு முதலிய இவ்வைந்தின் தொழில்கள் என்று சொல்லினர்.

குறிப்பு. வாக்கின் தொழில் வசனம் (பேசுதல்); பாதத்தின் தொழில் கமனம் (போதல்); பாணியின் தொழில் தானம் (கொடை); பாயுவின் தொழில் விசர்க்கம் (மலம் கழித்தல்); உபத்தத்தின் தொழில் ஆனந்தம் (சந்தோஷித்தல்).

வாக்கு ஆகாயத்தைப் பற்றுக்கோடாகக்கொண்டு நின்று வசனிக்கும்.
பாதம் வாயுவைப் பற்றுக்கோடாகக்கொண்டு நின்று கமனத்தைப் பண்ணும்.
பாணி தேயுவைப் பற்றுக்கோடாகக்கொண்டு நின்று இடுதல் ஏற்றல்களைச் செய்யும்.
பாயு அப்புவைப் பற்றி நின்று மலத்தைக் கழிக்கும்.
உபத்தம் பிருதிவியைப் பற்றி நின்று ஆனந்தத்தைப் பண்ணும்.

பொழிப்பு. வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னும் ஐந்தும் கன்மேந்திரியங்களாம். வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம் என்னும் ஐந்தும் முறையே அவற்றின் தொழில்களாம்.

(j). ஆன்மாவைப் பந்திக்குங் கருவிகளின் வகை.

153. வாயாதி சோத்தி ராதி புறத்துவாழ் கருவி யாகும்
ஓயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகும்
ஆய்வார்கட் கராக மாதி யவற்றினுட் கருவி யென்பர்
மாயாடன் வயிற்றி வற்றாற் றொடக்குண்டு வாழு மான்மா.

(இ-ள்). வாயாதி சோத்திராதி - வாக்கு முதலிய கன்மேந்திரியங்களும் சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்களும்,—புறத்து வாழ் கருவி ஆகும் - உடம்பின் புறத்தே தொழிற்படும் புறக்கருவிகளாகும்,—ஓயாத மனாதி - ஒழிவில்லாது சலனப்படும் மனம் முதலாயின,—காயத்து உணரும் உட்கருவி ஆகும் - அவ்வவ் விந்திரியங்களாலே தரப்பட்ட விடயங்களை உடம்பின் அகத்தே நின்று விடயிக்கும் உட்கருவிகளாகும்,—ஆய்வார்கட்கு - ஆராய்வார்களுக்கு,—அராகம் ஆதி - அராகம் முதலியன,—அவற்றின் உட்கருவி என்பர் - அவ் வந்தக்கரணங்களின் உள்ளந்தக்கரணங்களாம் என்பர்,—மாயாள் தன் வயிற்று இவற்றால் - மாயையினிடத்துண்டாகிய இம் முத்திறக் கருவிகளாலும்,—ஆன்மாத் தொடக்குண்டு வாழும் - உயிர் பந்திக்கப்பட்டு நிற்கும்.

குறிப்பு. 1. அராக மாதி யவற்றினுட் கருவியாகும் - அந்தக்கரணங்களால் விடயிக்கப்பட்டவற்றை அராகம் முதலியன ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளுக்குப் பொருத்துவனவாதலின், அவை உள்ளந்தக்கரணம் எனப்பட்டன.

2. மாயாடன் வயிறு - மாயையிற் கலக்குண்டபாகத்தை வயிறாக உருவகஞ்செய்தார். அதுவே அசுத்தமாயாதத்துவம் எனப்படும்.

பொழிப்பு. கன்மேந்திரிய ஞானேந்திரியங்கள் உடம்பின் புறத்தே நின்று தொழிற்படும் புறக்கருவிகளாம். மனம் முதலிய அந்தக்கரணங்கள் இந்திரியங்களாலே தரப்பட்ட விடயங்களை உடம்பின் அகத்தே நின்று விடயிக்கும் உட்கருவிகளாம். அராகாதிகள் அவ்வாறு விடயிக்கப்பட்டுவந்த பயனை ஆன்மாவின் அறிவிற் பொருத்தும் உள்ளந்தக்கரணங்களாம். இம் முத்திறக் கருவிகளாலும் உயிர் பந்திக்கப்பட்டு நிற்கும்.

(k). தன்மாத்திரைகள் தோன்றும் முறைமையும் அவற்றின் தொழிலும், புரியட்டகவுடம்பும்.

**154.** ஓசைநற் பரிச ரூப விரதகந் தங்க ளென்று
பேசுமாத் திரைக ளைந்தும் பிறக்கும்பூ தாதி கத்தில்
நேசவிந் திரியங் கட்கு நிகழறி விதனாற் காண்டும்
ஆசைசேர் மனாதி தன்மாத் திரைபுரி யட்ட கந்தான்.

(இ-ள்). ஓசை நல் பரிச ரூப இரத கந்தங்கள் என்று பேசும் மாத்திரைகள் ஐந்தும் - சத்தம் நல்ல பரிசம் உருவம் இரதம் கந்தம் என்று சொல்லப்படுந் தன்மாத்திரைகள் ஐந்தும்,—பூதாதிகத்தில் பிறக்கும் - பூதாதியகங்காரத்தினின்று தோன்றும்,—நேச இந்திரியங்கட்கு நிகழ் அறிவு இதனால் காண்டும் - விரும்பப்பெற்ற இந்திரியங்களுக்கு உண்டாகும் விடய ஞானம் இத் தன்மாத்திரைகளினால் உண்டாதலைக் காண்போம்,—ஆசை சேர் மனாதி தன்மாத்திரை - இச்சாரூபமாகிய மனம் புத்தி அகங்காரம் மூன்றும் தன்மாத்திரைகள் ஐந்தும் ஆகிய எட்டுங்கூடியது,—புரி அட்டகம் - புரியட்டகவுடம்பாம்.

குறிப்பு. 1. ஓசைநற் பரிசரூப விரத கந்தங்கள்:—சத்தம் முதலிய ஐந்தும் தத்தம் குணவிசேடங்களைக் காட்டாமற் சூக்குமங்களாயிருப்பதனுல் தன்மாத்திரை என்னும் பெயருடையனவாயிற்று. மிருகேந் 102. தத்+மாத்திரை=தன்மாத்திரை. தத் - அது. மாத்திரை - அளவு. இவை காரண தன்மாத்திரை எனவும், சூக்குமபூதம் எனவும்படும்.

2. நேசவிந்திரியங் கட்கு நிகழறிவிதனுற் காண்டும்:—தன்மாத்திரைகள் ஐந்தும் பஞ்சபூதங்களுக்குக் காரணமாயும், இந்திரியங்கள் அப் பஞ்சபூதங்களைப் பற்றுக்கோடாகக்கொண்டு நின்று விடயங்களை விடயிக்குமாறு துணை செய்வதாயும் நிற்கும்.

பொழிப்பு. பூதாதியகங்காரத்தினின்று சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்துந் தோன்றும். அவை இந்திரியங்கள் விடயங்களை விடயிக்கும்படி ஊக்கஞ்செய்வித்து அவற்றோடு உடன் நிற்கும். இத் தன்மாத்திரைகள் ஐந்தும் அந்தக்கரணம் மூன்றுமாகிய எட்டுங்கூடியது புரியட்டகவுடம்பாம்.

(l). பஞ்சபூதங்கள் தோன்றும் முறைமையும்;
அவற்றின் குணங்களும்.

**155.** சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னுத் [ன்றங்
தோற்றும்வான் வளிதீ நீர்மண் டொடக்கியே யொன்றுக் கொ
கேற்றமா மோசை யாதி யிருங்குண மியைந்து நிற்கும்
ஆற்றவே விடய பூத மங்காங்கி பாவத் தாமே.

(இ - ள்). சத்தம் முன்னு சாற்றிய பஞ்ச தன்மாத்திரைகளின் - சத்தம் முதலியவாக மேற்கூறிய தன்மாத்திரைகள் ஐந்திலும்நின்று,—வான் வளி தீ நீர் மண் தோற்றும் - முறையே ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி என்னும் ஐந்து சூக்கும பஞ்சபூதங்களும் தோன்றும்,—அங்கு - ஆகாயம் முதலிய அப் பூதங்களிடத்து,—தொடக்கியே ஒன்றுக்கு ஒன்று ஏற்றமாம் ஓசை ஆதி இரும் குணம் இயைந்து நிற்கும் - தொடர்ச்சியாய் ஒன்றற்கொன்று அதிகமாயிருக்கும் சத்தம் முதலிய பெருங் குணங்கள் பொருந்தி நிற்கும்,—விடய பூதம் - விடயவடிவான தூல பஞ்சபூதங்கள்,—ஆற்றவே - மிகவுந் தூலமாகவே,—அங்க அங்கி பாவத்து ஆம் - தேகமும் தேகியும்போல அக் குணங்களோடு பிரிப்பின்றி நிற்கும் தன்மையுடையனவாம்.

குறிப்பு. 1. சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற்... ..வான் வளிதீ நீர் மண் - பஞ்சபூதங்கள் அகப்பூதம் அகப்புறப்பூதம் புறப்பூதம் என மூவகைப் படும். இவற்றுள் அகப்பூதம் சூக்கும பஞ்சபூதம் எனப்படும். இவைகள் ஞானேந்திரியங்களிடத்திலே வரும் ஐந்து புலன்களையும் ஆன்மாக்கள் அனுபவிக்கும்படி ஆகாயம் செவியிலும், வாயு மெய்யிலுந், தேயு கண்ணிலும், அப்பு நாவிலும், பிருதிவி நாசியிலும் அவ் விந்திரியங்களுக்கு ஆதாரமாகிச் சூக்குமவடிவாய் உட்பூதங்களாய் நிற்பன.

அகப்புறப்பூதங்கள் சரீரத்திலே உள்ளும் புறம்புமாயிருக்கும் தூல பூதங்கள். சரீரத்திலே எலும்பு தசை முதலியன பிருதிவி; இரத்தம் வேர்வை முதலியன அப்பு; அன்னபானாதிகளைச் சீரணிக்கச்செய்வதும், தேககாந்தி நித்திரை முதலியவற்றை உண்டாக்குவதுந் தேயு; வியானன் சமானன் முதலிய தசவாயுக்கள் வாயு; இருதயம் முதலிய தானங்களிலும் எல்லாநாடிகளிலும் வாய் முதலிய துவாரங்களிலும் தசவாயுக்களுக்கும் இடங்கொடுப்பதாயிருப்பது ஆகாயம்.

புறப்பூதங்கள் புறத்தே காணப்படும் மண் நீர் முதலிய ஐந்துமாம். இவை அகப்புறப்பூதங்களினுந் தூலமாயிருப்பன.

இவை தோன்றும் முறை - சத்ததன்மாத்திரையில் ஆகாயமும், பரிச தன்மாத்திரையில் வாயுவும், உருவதன்மாத்திரையிலே தேயுவும், இரததன்மாத்திரையில் அப்புவும், கந்ததன்மாத்திரையிற் பிருதிவியும் தோன்றும். இவ்வாறன்றி ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும், தேயுவிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து பிருதிவியுமாகப் பஞ்சபூதங்களும் ஒன்றினொன்று தோன்றும் என்னும் மாயாவாதிகள் கூற்றுப் பொருத்தமுடையதன்று. என்னை? ஆகாயம் சத்த குணம் ஒன்றேயுடையது. வாயு, பரிசமும் சத்தமுமாகிய இருகுணமுள்ளது. ஆதலால், இருகுணமுள்ள வாயுவுக்கு ஒருகுணமுள்ள ஆகாயம் காரணமாகமாட்டாது. இங்ஙனம் இரண்டு குணமுள்ள வாயு மூன்று குணமுள்ள தேயுவுக்கும், மூன்று குணமுள்ள தேயு, நான்கு குணமுள்ள அப்புவுக்கும், நான்கு குணமுள்ள அப்பு ஐந்து குணமுள்ள பிருதிவிக்குங் காரணமாகமாட்டா.

2. தொடக்கியே யொன்றுக் கொன்றங் கேற்றமா மோசை யாதி யிருங் குண மியைந்து நிற்கும்:—ஆகாயத்துக்குச் சத்தம் என்னும் ஒரு குணமும், வாயுவுக்குப் பரிசம் சத்தம் என்னும் இரு குணங்களும், தேயுவுக்கு உருவம் பரிசம் சத்தம் என்னும் மூன்று குணங்களும், அப்புவுக்கு இரதம் உருவம் பரிசம் சத்தம் என்னும் நான்கு குணங்களும், பிருதிவிக்குக் கந்தம் இரதம் உருவம் பரிசம் சத்தம் என்னும் ஐந்து குணங்களும் உள. வாயுவுக்குப் பரிசம் அசாதாரணகுணம், சத்தம் சாதாரணகுணம். தேயுவுக்கு உருவம் அசாதாரணகுணம், ஏனைய சாதாரணகுணம். அப்புவுக்கு இரதம் அசாதாரணகுணம், ஏனைய சாதாரணகுணம். பிருதிவிக்குக் கந்தம் அசாதாரண குணம், ஏனைய சாதாரணகுணம். அசாதாரணகுணம் - சிறப்புக்குணம். சாதாரணகுணம் - பொதுக்குணம். இக்குணங்கள் ஆகாயம் முதலிய சூக்கும பஞ்சபூதங்களோடும் பிரிப்பின்றிக் கலந்து நிற்கும். தொடக்கு - தொடர்ச்சி, தொடர்பு.

3. ஆற்றவே விடய பூத மங்காங்கி பாவத் தாம்:—விடயபூதம் - விடய வடிவான அகப்புறப்பூதங்களும் புறப்பூதங்களும். பஞ்சேந்திரியங்களால் விடயங்களை அறிதல்போல இவையும் அறியப்படத்தக்கனவாதலின், "விடய பூதம்" என்றார். ஆற்றவே - மிகவும். ஆற்ற - மிக. அங்காங்கி பாவம் - உடலும் உயிரும் பிரிப்பின்றி நிற்றல் போல இப்பூதங்களும் சத்தாதிகுணங்களும் பிரிப்பின்றி நிற்கும் தன்மை. பாவம் - தன்மை.

பொழிப்பு. சத்தம் முதலிய தன்மாத்திரைகளினின்று முறையே ஆகாயம் முதலிய சூக்குமபஞ்சபூதங்கள் தோன்றும். அவை ஒன்றற்கொன்றேற்றமாகிய சத்தம் முதலிய குணங்களைப் பொருந்தியிருக்கும். அகப்புறப்பூதங்களும் புறப்பூதங்களும் இக்குணங்களை மிகவுந் தூலமாய்ப் பொருந்தி அவற்றோடு பிரிப்பின்றி நிற்கும்.

(ங). புறப்பூதங்களின் குணமும் தொழிலும்.

**156.** இரந்தர மாகி வான்ற னிடங்கொடுத் திடுஞ்ச லித்துப்
பரந்தவை திரட்டுங் காறீச் சுட்டொன்று வித்தல் பண்ணும்
நிரந்தரங் குளிர்ந்து நின்று பதஞ்செயு நீர்மண் டானும்
உரந்தருங் கடின மாகித் தரித்திடு முணர்ந்து கொள்ளே.

(இ - ள்). வான் தான் - பூதங்களுள் ஆகாயமானது,—இரந்தரமாகி இடம் கொடுத்திடும் - வெளியாயிருத்தலாகிய குணமும் இடங்கொடுத்தலாகிய தொழிலும் உடையதாம்,—கால் - வாயுவானது,—சலித்துப் பரந்தவை திரட்டும் - சலித்தலாகிய குணமும் பரந்தவற்றைத் திரட்டுதலாகிய தொழிலும் உடையதாம்,—தீ - தேயுவானது,—சுட்டு ஒன்றுவித்தல் பண்ணும் - சுடுதலாகிய குணமும் ஒன்றுவித்தலாகிய தொழிலும் உடையதாம்,—நீர் - அப்புவானது,—நிரந்தரம் குளிர்ந்து நின்று பதம் செய்யும் - இடைவிடாது குளிர்தலாகிய குணமும் பதஞ்செய்தலாகிய தொழிலும் உடையதாம்,—மண்தானும் - பிருதிவியும்,—உரம் தரும் கடினமாகித் தரித்திடும் - வலி தருதற்கு ஏதுவாகிய கடினமாதலாகிய குணமும் தரித்திடுதலாகிய தொழிலும் உடையதாம்,—உணர்ந்துகொள் - இவற்றினை அறிவாயாக.

பொழிப்பு. புறப்பூதங்களுள், ஆகாயத்துக்குக் குணம் வெளியாயிருத்தல், தொழில் இடங்கொடுத்தல். வாயுவுக்குக் குணம் சலித்தல், தொழில் பரந்தவற்றைத் திரட்டுதல். தேயுவுக்குக் குணம் சுடுதல், தொழில் ஒன்றுவித்தல். அப்புவுக்குக் குணம் குளிர்தல், தொழில் பதஞ்செய்தல். பிருதிவிக்குக் குணம் கடினமாதல், தொழில் தரித்தல்.

(ச). புறப்பூதங்களின் வடிவும் நிறமும் பீசாக்கரங்களும்.

**157.** மண்புன லனல்கால் வான்பால் வடிவுநாற் கோண மாகுந்
தண்பிறை மூன்று கோணந் தகுமறு கோணம் வட்டம் [ணம்
வண்பொன்மை வெண்மை செய்மை கறுப்பொடு தூமம் வண்
எண்டரு மெழுத்துத் தானும் லவரய வவ்வு மாமே.

(இ - ள்). மண் புனல் அனல் கால் வான் பால் - நிலம் நீர் தீ வளி வெளி என்னும் புறப்பூதங்கள் ஐந்துக்கும்,—நாற்கோணம் தண் பிறை மூன்றுகோணம் தகும் அறுகோணம் வட்டம் - முறையே நாற்கோணமும் குளிர்ந்த பிறைபோலும் இருகோணமும் முக்கோணமும் தக்க அறு

கோணமும் வட்டமும்,—வடிவு ஆகும் - வடிவங்களாகும்,—வண் பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூமம் வண்ணம் (ஆம்) - அழகுபொருந்திய பொன்மையும் வெண்மையும் செம்மையும் கருமையும் புகைமையும் முறையே நிறங்களாம்,—எழுத்துத் தானும் எண்தரும் லவரய அவ்வும் ஆம் - இவற்றிற்குப் பீசங்கள் வலியுடைய லகார வகார ரகார யகார ஹகாரங்களாம்.

பொழிப்பு. பிருதிவிக்கு வடிவு நாற்கோணம், நிறம் பொன்மை, பீசாக்கரம் லகாரம். அப்புவுக்கு வடிவு இருகோணம், நிறம் வெண்மை, பீசாக்கரம் வகாரம். தேயுவுக்கு வடிவு முக்கோணம், நிறம் செம்மை, பீசாக்கரம் ரகாரம். வாயுவுக்கு வடிவு அறுகோணம், நிறம் கருமை, பீசாக்கரம் யகாரம். ஆகாயத்துக்கு வடிவு வட்டம், நிறம் புகைமை, பீசாக்கரம் ஹகாரம்.

(o). புறப்பூதங்களின் குறியும், அதிதெய்வமும்.

**158.** குறிகள்வச் சிரத்தி னோடு கோகந தஞ்சு வத்தி
அறுபுள்ளி யமுத விந்து வதிதெய்வ மயன்மா லாதி
செறிபுக ழீச னோடு சதாசிவம் பூத தெய்வம்
நெறிதரு கலையைந் திற்கு நிகழ்த்துவ ரிந்த நீர்மை.

(இ-ள்). குறிகள் - இப்பூதங்களுக்கு அடையாளங்கள்,—வச்சிரத்தினோடு கோகநதம் சுவத்தி அறுபுள்ளி அமுதவிந்து - முறையே வச்சிரமும் தாமரைப்பூவும் சுவத்திகமும் அறுபுள்ளியும் அமுதவிந்துவுமாம்,—அதிதெய்வம் - அதிதெய்வங்கள்,—அயன் மால் ஆதி செறி புகழ் ஈசனோடு சதாசிவம் - பிரமாவும் விட்டுணுவும் உருத்திரனும் மிக்க புகழினையுடைய மகேசுவரனும் சதாசிவமுமாம்,—பூத தெய்வம் - இப் பூதங்களின் அதிதெய்வங்களை,—இந்த நீர்மை - இந்த முறையிலே,—நெறிதரு கலை ஐந்திற்கும் - மந்திரம் முதலிய அத்துவாக்களை அடக்கி நிற்கும் முறைமையுடைய நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளுக்கும் அதிதெய்வங்கள் என்று,—நிகழ்த்துவர் - பெரியோர் கூறுவர்.

குறிப்பு. குறிகள் - அடையாளங்கள். வச்சிரம் - வச்சிராயுதம். கோகனதம் - தாமரைப்பூ. சுவத்தி - இருதலைமேழி. சுவத்திகம் என்பது சுவத்தி என நின்றது.

பொழிப்பு. பிருதிவிக்கு அடையாளம் வச்சிரம், அதிதெய்வம் பிரமா. அப்புவுக்கு அடையாளம் தாமரைப்பூ, அதிதெய்வம் விட்டுணு. தேயுவுக்கு அடையாளம் சுவத்திகம், அதிதெய்வம் உருத்திரன். வாயுவுக்கு அடையாளம் அறுபுள்ளி, அதிதெய்வம் மகேசுவரன். ஆகாயத்துக்கு அடையாளம் அமிர்தவிந்து, அதிதெய்வம் சதாசிவம். நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளுக்கும் முறையே பிரமா முதலியோர் அதிதெய்வங்களாம்.

புறப்பூதங்களுக்குரிய குணம் முதலியவற்றின் அட்டவணை.

| புறப் பூதங்கள் | குணம் | வடிவு | நிறம் | பீசாக் கரம் | குறி | அதி தெய்வம் |
|---|---|---|---|---|---|---|
| பிருதிவி | கடினம் | நாற்கோணம் | பொன்மை | ல | வச்சிரம் | பிரமா |
| அப்பு | குளிர்தல் | இருகோணம் | வெம்மை | வ | தாமரைப்பூ | விட்டுணு |
| தேயு | சுடுதல் | முக்கோணம் | செம்மை | ர | சுவத்திகம் | உருத்திரன் |
| வாயு | சலித்தல் | அறுகோணம் | கருமை | ய | அறுபுள்ளி | மகேசுவரன் |
| ஆகாயம் | வெளி | வட்டம் | புகைமை | ஹ | அமிர்தவிந்து | சதாசிவன். |

4. தத்துவங்களின் தொகையும், அவற்றின் இயல்பும்.

159. சுத்ததத் துவங்க ளென்று முன்னமே சொன்ன வைந்தும்
இத்தகை மையினி யம்பு மிவைமுப்பத் தொன்று மாகத
தத்துவ முப்பத் தாறுஞ் சைதன்னி யங்க ளைந்து
சித்தசித் தான்மா வொன்று முப்பது மசித்தே செப்பின்.

(இ-ள்). சுத்த தத்துவங்கள் என்று முன்னமே சொன்ன ஐந்தும் - சுத்த தத்துவங்களென்று முற்சூத்திரத்திலே கூறப்பட்ட வித்தையோ டீசர் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் ஐந்தும்,—இத்தகைமையின் இயம்பும் இவை முப்பத்தொன்றும் ஆக - இந்த முறைமையிலே கூறிய அசுத்தமாயா தத்துவம் முதற் பிருதிவி ஈறாக அசுத்ததத்துவங்கள் முப்பத்தொன்றுமாக,—தத்துவம் முப்பத்தாறும் - தத்துவங்கள் முப்பத்தாறும்,—செப்பின் - சொல்லுமிடத்து,—ஐந்து சைதன்னியங்கள் - இவற்றுள் சுத்ததத்துவங்கள் ஐந்தும் சடமாயினும் சிவத்துக்குச் சுதந்திரவடிவாகலின் சித்து எனப்படும்,—ஆன்மா ஒன்று சித்தசித்து - புருடதத்துவம் ஒன்றும் சார்ந்ததன்வண்ணமாய் நிற்றலின் சித்தசித்து எனப்படும்,—முப்பதும் அசித்தே - ஏனைய முப்பது தத்துவங்களும் அசித்தாம்.

குறிப்பு. 1. முன்னமே சொன்ன வைந்தும் - (செ. 86 பார்).

2. சித்தசித்து - சித்தும் அசித்தும். சித்து - அறிவுடையது. அசித்து - அறிவில்லது.

பொழிப்பு. சுத்ததத்துவங்கள் ஐந்தும் அசுத்ததத்துவங்கள் முப்பத்தொன்றுஞ் சேர்ந்து தத்துவங்கள் முப்பத்தாறும். இவற்றுள், சுத்ததத்துவங்கள் சித்து எனப்படும். புருடதத்துவம் சித்தசித்து எனப்படும். மற்றைய முப்பதும் அசித்து எனப்படும்.

5. தத்துவங்களின் வகை.

160. ஐந்துசுத் தத்தின் கீழேழ் சுத்தாசுத் தம்ம சுத்தந்
தந்திடும் புமான்கீ ழெண்மூன் றுயதத் துவஞ்சீ வர்க்கு
வந்திடும் பிரேர காண்ட மருவுபோ சயித்தி ரத்தோ
டந்தமி லணுக்க ளுக்குப் போக்கிய காண்ட மாமே.

(இ-ள்). (மேற்கூறிய ஐந்து சுத்ததத்துவங்களும்),—ஐந்து சுத்தத்தின் கீழ் ஏழ் சுத்தாசுத்தம் - அவ்வைந்து சுத்ததத்துவங்களின் கீழாகவுள்ள அசுத்தமாயாதத்துவம் முதலிய ஏழு சுத்தாசுத்தங்களும்,—அசுத்தம் தந்திடும் புமான் கீழ் எண்மூன்றுய தத்துவம் - அசுத்தமாயையிலே தோன்றும் புருடதத்துவத்துக்குக் கீழாகவுள்ள இருபத்துநான்கு அசுத்ததத்துவங்களும்,—சீவர்க்கு வந்திடும் - உயிர்களுக்கு வந்து பொருந்தும்,—அந்தம் இல் அணுக்களுக்கு - அம் மூவகைத் தத்துவங்களும் எண்ணில்லாத உயிர்களுக்கு,—பிரேர காண்டம் - பிரேரககாண்டமும்,—மருவு போசயித்திரத்தோடு போக்கிய காண்டமாம் - உயிர்களைப்பொருந்தும் போசயித்திருகாண்டமும் போக்கியகாண்டமுமாம்.

குறிப்பு. 1. ஐந்து சுத்தம்:—சுத்தவித்தைமுதற் சிவதத்துவமீறாகவுள்ள ஐந்தும் அங்குள்ள ஆன்மாக்களுக்குச் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவங்களை உண்டாக்குகின்றமையாற் சுத்ததத்துவம் எனப்படும். சுத்தாசுத்த த்துவங்களைப் பிரேரிக்கையாற் பிரேரககாண்டம் எனப்படும். பிரேரித்தல் - சிவசத்தி சுத்ததத்துவங்கள்வாயிலாகச் சுத்தாசுத்ததத்துவங்களைக் காரியப்படுத்தல். பிரேரகம் - ஏவுதல், செலுத்துதல். காண்டம் - கொத்து, கூட்டம். இவை சுத்தாத்துவா என்றுஞ் சொல்லப்படும்.

2. சுத்தத்தின் கீழேழ் சுத்தாசுத்தம் - அசுத்தமாயாதத்துவம், காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என்பன. இவை சுத்தாசுத்தம் என்றும், போககாண்டம் என்றும், போசயித்திருகாண்டம் என்றும், மிச்சிரம் என்றும், மிச்சிராத்துவா என்றும், வித்தியாதத்துவம் என்றுஞ் சொல்லப்படும். இவை ஆன்மாக்களுக்குச் சிற்றறிவு சிறுதொழில்களை (கிஞ்சிஞ்ஞத்துவம், கிஞ்சித்கர்த்திருத்துவம்) விளக்குதற்குச் சாதனமாகையாற் சுத்தமாயும், சூக்குமதேகத்தின் வழியாகக் குணரூபமாகிய சுகதுக்க மோகங்களை உண்டாக்குவதற்குச் சாதனமாகையால் அசுத்தமாயுமிருத்தலால், சுத்தாசுத்தம் எனப்படும். சுத்ததத்துவங்களாலே பிரேரிக்கப்படுகையாலும், அசுத்தமாயிருத்தலாலும் சுத்தாசுத்தம் எனப்படும் என்றுஞ் சொல்வர். ஆன்மாக்களுக்குப் போகத்தைக் கொடுத்துப் புசிப்பிக்கையாற் போககாண்டம் எனப்படும். ஆன்மாக்களுக்குச் சகாயமாய் நின்று போகத்தை உண்டாக்குதலாற் போசயித்திருகாண்டம் எனப்படும். ஆன்மாக்களுக்குச் சிற்றறிவை எழுப்புந் தத்துவங்களாதலால் வித்தியாதத்துவம் எனப்படும். போசயித்திரு - புசிப்பிப்பவன். மிச்சிரம் - கலப்பு. சுத்தமும் அசுத்தமுங் கலந்தது.

3. புமான்கீழெண்மூன்ருயதத் துவம்:—பிரகிருதி, புத்தி, அகங்காரம், மனம், ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், தன்மாத்திரை, பூதங்கள் என்பன. பிரகிருதியிலே குணதத்துவம் தோன்றும் என்பதும் சித்தம் தோன்றும் என்பதும் இவ்வாசிரியர் கருத்தன்று என்பது, இதனுல் உணரப்படும். இத் தத்துவங்கள் இருபத்துநான்கும் அசுத்தம் என்றும், போக்கியகாண்டம் என்றும், அசுத்தாத்துவா என்றும், ஆன்மதத்துவம் என்றுஞ் சொல்லப்படும். இவை ஆன்மாக்களுக்குச் சாத்துவிகம் முதலிய குணங்களினுலே சுக துக்க மோகங்களை உண்டாக்குதலால் அசுத்தம் எனப்படும். புசிக்கப்படும் பொருள்களாயிருத்தலாற் போக்கியகாண்டம் எனப்படும். போக்கியம் - புசிக்கப்படும்பொருள். ஆன்மாவோடு சம்பந்தப்பட்டிருத்தலால் ஆன்மதத்துவம் எனப்படும்.

பொழிப்பு. சுத்ததத்துவங்கள் ஐந்தும் சுத்தம். மாயைமுதற் புருடதத்துவமீருகவுள்ளன மிச்சிரம். பிரகிருதிமுதற் பிருதிவியீருகவுள்ளன அசுத்தம். இவை முறையே பிரேரககாண்டம் போசயித்திருகாண்டம் போக்கியகாண்டம் எனவும்படும்.

### 6. பிரபஞ்சமனைத்தும் தத்துவசொரூபம்.

161. தத்துவ ரூப மாகுந் தருமரு வுருவ மெல்லாந்
தத்துவந் தூல சூக்க பரங்களு மாகி நிற்குந்
தத்துவந் தன்னிற் சாரு மணுக்கள்சா தாக்கி யத்தில்
தத்துவ சத்தஞ் சாருஞ் சகலமுந் தத்து வங்காண்.

(இ-ள்). தரும் அரு உருவம் எல்லாம் - மாயையினுலே தரப்பட்ட அருவும் உருவும் அருவுருவுமாயுள்ள காரியப்பிரபஞ்சமனைத்தும்,—தத்துவ ரூபமாகும் - இந்தத் தத்துவங்களின் வடிவேயாம்,—தத்துவம் தூல சூக்க பரங்களும் ஆகி நிற்கும் - இம் முப்பத்தாறு தத்துவங்களும் தூலதத்துவம் சூக்குமதத்துவம் அதிசூக்குமதத்துவம் எனத் தனித்தனி மூவகைப்பட்டும் நிற்கும்,—தத்துவம் தன்னில் சாரும் அணுக்கள் - இத்தன்மையவான தத்துவங்களைப்பொருந்தி நிற்கும் ஆன்மாக்கள்,—சாதாக்கியத்தில் தத்துவ சத்தம் சாரும் - சாதாக்கிய தத்துவமீருக அவ்வத் தத்துவப்பெயர் பொருந்தும்,—சகலமும் தத்துவம் காண் - ஆதலாற் சடமும் சித்துமாய பிரபஞ்சமனைத்தும் தத்துவரூபமென அறிவாயாக.

குறிப்பு. அணுக்கள் - மூவகை உயிர்களும், அணுபக்கத்து அதிதெய்வங்களும்.

பொழிப்பு. காரியப்பிரபஞ்சமனைத்துந் தத்துவவடிவேயாம். இத் தத்துவங்கள் முப்பத்தாறும் தூலம் சூக்குமம் அதிசூக்குமம் எனத் தனித்தனி மூவகைப்படும். இத் தத்துவங்களைப்பொருந்தும் உயிர்களும் அவ்வத் தத்துவங்களின் பெயர்பெறும். ஆதலாற் பிரபஞ்சமனைத்துந் தத்துவசொரூபமாம்.

### 7. பிரபஞ்சமனைத்தும் ஒடுங்கும் முறை.

#### (a). தத்துவங்கள் ஒடுங்கும் முறை.

162. தத்துவ மெண்மூன் றுஞ்சென் றான்மதத் துவத்தொடுங்கும்
வித்தையி லொடுங்கு மாறுஞ் சிவத்தினி லொடுங்கு மூன்றும்
நித்தமதத் துவமிம் மூன்று மென்பர்க ளிரண்டு நின்ற
சுத்தமாஞ் சிவத்தொ டுங்குந் தோற்றமு மிதுபோ லாகும்.

(இ-ள்). தத்துவம் எண்மூன்றும் சென்று - சங்காரகாலத்திலே பிருதிவிமுதற் பிரகிருதி ஈறாகிய இருபத்துநான்கு தத்துவங்களுஞ்சென்று,—ஆன்மதத்துவத்து ஒடுங்கும் - ஆன்மதத்துவங்களுக்கு அதிதெய்வமாகிய சீகண்டருத்திரனால் ஒடுங்கும்,—ஆறும் வித்தையில் ஒடுங்கும் - அராகம் முதல் மாயையீறாகவுள்ள ஆறும் வித்தியாதத்துவங்களுக்கு அதிதெய்வமாகிய அநந்தரால் ஒடுங்கும்,—மூன்றும் சிவத்தினில் ஒடுங்கும் - சுத்தவித்தை முதற் சாதாக்கியம் ஈறாகவுள்ள மூன்று தத்துவங்களும் இலய சிவனால் ஒடுங்கும்,—இம் மூன்றும் நித்ததத்துவம் என்பர்கள் - இம் மூன்று தத்துவங்களையும் நித்தியம் என்று சொல்வர்,—நின்ற இரண்டும் - ஏனைய சத்தி தத்துவம் சிவதத்துவம் இரண்டும்,—சுத்தமாம் சிவத்து ஒடுங்கும் - சுத்தசிவனால் ஒடுங்கும்,—தோற்றமும் இதுபோல் ஆகும் - இத் தத்துவங்கள் தோன்றும் முறைமையும் ஒடுங்கிய இந்த முறைபோலவாகும்.

குறிப்பு. 1. மேற்செய்யுளிலே "தத்துவந் தன்னிற் சாரு மணுக்கள் தத்துவ சத்தஞ் சாரும்" என்று கூறியதனால், இங்கே ஆன்மதத்துவம் என்பது அதனை அதிட்டித்து நிற்கும் சீகண்டருத்திரரைக்குறித்து நின்றது.

2. வித்தை, புருடன் நீங்கலாக வித்தியாதத்துவங்கள் ஆறையும் அதிட்டித்து நிற்கும் அநந்ததேவரைக் குறித்து நின்றது. உயிர்கள் தத்துவங்களிலும், தத்துவங்கள் அவற்றை அதிட்டிக்கும் கருத்தாக்களிலும் ஒடுங்குதல் பற்றி, புருடனை நீக்கி "ஆறும்" என்றார்.

3. நித்ததத் துவமிம் மூன்றும்:—சுத்தவித்தை முதலிய மூன்றும் நித்தியம் என்றும், அவற்றின் மூர்த்திகளாகிய உருத்திரர் மகேசுவரர் சதாசிவர் என்பவர்களும் நித்தியர் என்றும் சைவருட் சிலர் கூறுவர். அது சித்தாந்தமன்று. (சிவாக்கிர)

4. சுத்தமாஞ் சிவத்தொடுங்கும்: "அலகிலாவுயிர்கள் கன்மத்துக்கீடாகக் கரணங்களைப்பொருந்தி ஆணையினமர்ந்து செல்லத் தலைவனாய் நிலவுசீரமலனாகி நின்றனன்" என்னுங் கூற்றில், முதல்வன் தலைவனாய் நிற்கும் முறைமை கூறியவாறு காண்க.

பொழிப்பு. சங்காரகாலத்திலே ஆன்மதத்துவங்கள் இருபத்துநான்கும் சீகண்டருத்திரரால் ஒடுங்கும். அராகம் முதலிய ஆறும் அனந்தரால் ஒடுங்கும். சுத்தவித்தை முதலிய மூன்றும் இலயசிவனால் ஒடுங்கும். சத்தி சிவம் இரண்டும் சுத்தசிவனால் ஒடுங்கும். தோற்றமும் இவ்வாறாகும்.

(b). உயிர்கள் ஒடுக்கும் முறை.

**163.** மொய்தரு பூத மாதி மோகினி யந்த மாகப்
பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்பு கன்ற
மெய்தரு சைவ மாதி யிருமூன்றும் வித்தை யாதி
எய்துதத் துவங்க ளேயு மொன்றுமின் றெம்மி றைக்கே.

(இ - ள்). பொய்தரு சமயம் எல்லாம் - பொய்ப் பயனைத் தருகின்ற உலோகாயதம் முதல் ஐக்கியவாத சைவம் ஈறாகவுள்ள புறப்புறச்சமயம் புறச்சமயம் அகப்புறச்சமயம் என்னும் முக்கூற்றுச் சமயத்தவர் அனைவரும்,—மொய்தரு பூதம் ஆதி மோகினி அந்தமாகப் புக்கு நின்றிடும் - நெருங்கிய பூதம் முதல் அசுத்தமாயாதத்துவம் ஈறாகவுள்ள ஒவ்வொரு தத்துவங்களிற் சென்று நிலைபெறுவர்,—புகன்ற மெய்தரு சைவம் ஆதி இரு மூன்றும் - சிவாகமங்களுட் கூறப்படும் பதி பசு பாசங்களின் உண்மைத்தன்மையை விளக்குகின்ற சைவம் முதற் சிவாத்துவிதசைவம் ஈறாகவுள்ள அறுவகைச் சமயத்தோரும்,—வித்தை ஆதி எய்து தத்துவங்கள் ஏயும் - மந்திரேசுரர் முதலியோர் பொருந்தியிருக்கும் சுத்தவித்தை முதலிய தத்துவங்கள் ஒவ்வொன்றைப் பொருந்துவர்,—எம் இறைக்கு ஒன்றும் இன்று - சித்தாந்த சைவத் தெய்வமாகிய எமது சுத்தசிவன் இத் தத்துவங்களுக்கு அதீதப்பட்டு நிற்கும் நின்மலனும்.

குறிப்பு. 1. இவை இரண்டு செய்யுள்களாலும் உயிர்கள் தத்துவங்களிலும், தத்துவங்கள் அவற்றை அதிட்டிக்கும் அதிதெய்வங்களாலும், அதிதெய்வங்கள் இலயசிவனாலும், இலயசிவன் சுத்தசிவனாலும் ஒடுங்கும் என்பதும், இத் தத்துவங்களும் உயிர்களும் சடமும் சித்துமாகிய பிரபஞ்சமனைத்துமாம் என்பதும் கூறியவாறு.

2. மொய்தரு பூத மாதி மோகினி யந்த மாகப் பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்:—புறப்புறச்சமயத்தவருள் (a) உலோகாயதர், பிருதிவி அப்பு தேயு வாயு என்னும் நான்கு பூதங்களுமே மெய்ப்பொருளென்பர். தேகாந்தத்திலே அவர் பெறும் பயன் இப் பூதங்களை அடைதலாம்.

(b). பௌத்தர் பிருதிவிமுதற் புத்திதத்துவம் ஈறாகத் தத்துவம் இருபத்து மூன்று என்பர். அவர் தேகாந்தத்திற் புத்திதத்துவத்தை அடைவர்.

(c). சமணர் பிருதிவிமுதற் குணதத்துவம் ஈறாகத் தத்துவம் இருபத்து நான்கு என்பர். அவர் தேகாந்தத்திற் குணதத்துவத்தை அடைவர்.

(d). தார்க்கிகருக்குப் பதார்த்தஞானமே பொருள். அது புத்தியின் விருத்தியாதலால், அவரும் புத்திதத்துவத்தை அடைவர்.

(e). மீமாஞ்சகருக்குக் கன்மம் பொருள். அது புத்தியின் விருத்தியாதலால், அவரும் புத்திதத்துவத்தை அடைவர்.

(*f*). ஏகான்மவாதிகளுள், மாயாவாதிகள் மாயைக்கு வேறாகிய பிரம ரூபமே யான் என வேதாந்த ஞானத்தால் அறிவதே முத்தி என்பராதலால், அவர் புருடதத்துவத்தை அடைவர்.

(*g*). சாங்கியருக்குப் பிரகிருதியையும் புருடனையும் விவேகித்தறிதலே முத்தியாதலால், அவரும் புருடதத்துவத்தை அடைவர்.

(*h*). பாதஞ்சலருக்கு முத்தி சாங்கியருக்குப்போலவாதலால், அவரும் புருடதத்துவத்தை அடைவர்.

(*i*). பாஞ்சராத்திரிகளுக்குத் தத்துவம் இருபத்து நான்கு. அவர் பிரகிருதியை அடைவர்.

(*j*). பாசுபதர் மாயாதத்துவத்தை அடைவர்.

(*k*). மாவிரதர் வித்தியாதத்துவத்தை அடைவர்.

(*l*). காபாலர் காலதத்துவத்தை அடைவர்.

3. சைவ மாதி யிருமூன்றும்-சுத்த சைவம் முதலாக ஆறு. அகச்சமயம்-பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்தவாதம், ஈசுவர வவிகாரவாதம், சிவாத்துவிதசைவம் என்னும் ஆறெனவுமாம். பாடாணவாதத்திற்கும் பேதவாதத்திற்குந் தம்முள் வேறுபாடு சிறிதாகலின், அவ்விரண்டினையும் ஒன்றாகவைத்தெண்ணிச், சுத்தசைவத்தையுமுடன்கூட்டி அகச்சமயம் ஆறெனக்கொள்ளப்பட்டது.

4. வித்தை யாதி எய்துதத் துவங்கள்:—வித்தை - மந்திரேசுரர். "வித்தைகள் வித்தையீசர் சதாசிவரென் றிவர்க்கு" (செ. 45 பார்).

5. ஒன்றுமின் றெம்மி றைக்கு-முதல்வன் அமலனாய் நிற்கும் முறைமை கூறியவாறு.

பொழிப்பு. புறப்புறம், புறம், அகப்புறம் என்னும் முக்கூற்றுச் சமயத்தவர் பூதம் முதல் அசுத்தமாயாதத்துவம் வரையிலுள்ள தத்துவங்கள் ஒவ்வொன்றில் நிலைபெறுவர். அகச்சமயத்தவர் அறுவரும் சுத்தவித்தை முதலிய தத்துவங்களை அடைவர். சித்தாந்தத் தெய்வமாகிய சுத்தசிவம் முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து நிற்கும்.

## தத்துவப்படம்.




* ஞானேந்திரியம் - சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்கிராணம்.

§ கன்மேந்திரியம் - வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்.

## மூன்றுமதிகரணம்.

"(ஒளியா யோங்கி) இவற்றின் தன்மை தனக்கெய்தலின்றி எங்கும் நீங்காது நின்றனன்" என்பது மூன்றாங்கூறு, (164-186).

இவ்வதிகரணம், முதல்வன் சத்திரூபமாய் வியாபரித்து, மேற்கூறிய வாறு சேதனப்பிரபஞ்சத்தோடன்றி, அசேதனப்பிரபஞ்சத்தோடும் அத்து விதமாய்க் கலந்து எங்கும் நீங்காது நிற்பன் என்பதும், அவ்வாறாயினும் அவற்றின் தன்மை எய்தாது நிற்பன் என்பதும் கூறுமுகத்தானே, ஆணவ மலத்தின் இலக்கணமும் உண்மையும், உயிர்கள் மலங்களாற் பந்திக்கப்பட் டுப் பிறப்பிறப்பிற்படும் முறைமையும், அம் மலங்களைப் போக்கி வீடடை தற்கு வாயிலும் உபாயமுங் கூறுகின்றது.

I. ஒளியா யோங்கி எங்கும் நீங்காது நின்றனன். இவற்றின் தன்மை தனக்கெய்தலின்றி நின்றனன், (164-169).

II. ஆணவமலத்தின் இலக்கணமும் உண்மையும், உயிர்கள் மலங் களாற் பந்திக்கப்பட்டுப் பிறப்பிறப்பிற்படும் முறைமை யும், அம் மலங்களைப் போக்கி வீடடைதற்கு வாயிலும் உபாயமும், (170-186).

---

I. ஒளியா யோங்கி எங்கும் நீங்காது நின்றனன். இவற்றின் தன்மை தனக்கெய்தலின்றி நின்றனன், (164-169).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. சிவபேதங்கள், (164).
2. சத்திபேதங்கள், (165).
3. பிரபஞ்சமனைத்துஞ் சத்திசிவமயம், (166).
4. சிவமும் சத்தியும் பிரபஞ்சமனைத்தோடுந் தோய்வின்றி நிற்கும், (167).
5. தத்துவவுணர்ச்சி இன்றியமையாதது, (168).
6. தத்துவங்கள் உயிர்களைப் பொருந்துதற்குக் காரணம், (169).

### 1. சிவபேதங்கள்.

**164.** சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னென்றி னென்றாய்ப்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்றாம்
நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர்.

(இ-ள்). சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன் உவந்து அருள் உருத்திரன்தான் மால் அயன் - சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் விளங்குகின்ற மகேசுவரன் விரும்பி அருள்புரியும் உருத்திரன் விட்டுணு

பிரமன் என்னும் இப் பேதங்கள்,—ஒன்றின் ஒன்ருய்ப் பவம் தரும் - ஒன்றின் ஒன்ருகத் தோன்றும்,—இங்கு - இந்நிலையில்,—அருவம் நால் - அருவத்திருமேனி சிவம் சத்தி நாதம் விந்து என நான்காம்,—உருவம் நால் - உருவத்திருமேனி மகேசுவரன் உருத்திரன் விட்டுணு பிரமா என நான்காம்,—உபயம் ஒன்ரும் - அருவுருவத்திருமேனி சதாசிவம் என ஒன்ரும்,—நவம் தரு பேதம் - இம் முத்திறத்து ஒன்பது பேதவடிவங்களையுங்கொண்டு,—ஏக நாதனே நடிப்பன் என்பர் - இறைவன் ஒருவனே பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்வன் என்று பெரியோர் சொல்லுவர்.

குறிப்பு. 1. சிவஞ்சத்தி நாதம் விந்து......ஒன்றி னொன்ருய்ப் பவந்தரும்:—பரமசிவத்தோடு பிரிவின்றியிருக்கும் பராசத்தியிற் சிவமும், சிவத்திற் சத்தியும், சத்தியிலே நாதமும், நாதத்தில் விந்துவும், விந்துவிற் சதாசிவனும், சதாசிவனிலே மகேசுவரனும், மகேசுவரனில் உருத்திரனும், உருத்திரனில் விட்டுணுவும், விட்டுணுவிற் பிரமாவுமாக ஒன்பது பேதமும் ஒன்றினொன்று தோன்றும்.

பராசத்தியிற் சிவம் தோன்றுதல்:—பரமசிவம் புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய் நிற்கும் நிலையிற் சுத்தசிவம் எனப்படும். புறப்பொருளாவன உயிர்கள். அவ்வுயிர்களை நோக்கி நிற்கும் நிலையிற் சத்தி எனப்படும். அச் சிவசத்தி உயிர்களின்பொருட்டு வியாபரிக்குங்கால் ஞானசத்தியாய் வியாபரிக்கும். பரமசிவன் அந்த ஞானசத்திவடிவாய் நிற்கும் நிலையிற் சிவம் எனப்படும். பரநாதம் எனப்படுவதும் இதுவே.

அந்த ஞானசத்தி கிரியாசத்தியைத் தோற்றுவிக்கும். அது சத்தி எனவும் பரவிந்து எனவும்படும். அக் கிரியாசத்தி சுத்தமாயையைக் கூடியவிடத்து நாதந் தோன்றும். நாதத்தினின்று விந்து தோன்றும். இவை முறையே அபரநாதம் அபரவிந்து எனப்படும். சிவம் சத்தி என்று கூறுதலுமுண்டு. இலயசிவன் எனப்படுவதும் சத்தர் எனப்படுவதும் இச் சிவமேயாம்.

2. அருவம் நால் உருவம் நால்:—சிவம் சத்தி நாதம் விந்து என்னும் நான்கும் பரமசிவனுக்கு நிஷ்களவடிவமாம். மகேசுவரன் உருத்திரன் மால் அயன் என்னும் நான்கும் சகளவடிவமாம். சதாசிவன் ஒன்றும் நிஷ்களசகளவடிவமாம்.

3. நவந்தரு பேதம்:—இங்கே கூறப்பட்ட நவபேதங்களுள், சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவத்திருமேனி நான்கும் முறையே சிவபேதமும் சத்திபேதமுமாம். சிவம் சத்தி நாதம் விந்து என்னும் சிவபேதம் நான்கினேடு சதாசிவன் முதலிய ஐந்தையுங் கூட்டிச் சிவபேதம் ஒன்பது எனவும், சிவம் சத்தி நாதம் விந்து என்னும் சத்திபேதம் நான்கினேடு மனேன்மனி முதலிய ஐந்தையுங் கூட்டிச் சத்திபேதம் ஒன்பது எனவும் சொல்வதுமுண்டு.

4. ஏக நாதனே நடிப்பன் - ஒருவனே யிராவணுதி பாவக முற்ருற்போல (செ. 87), முதல்வன் ஒருவனே இந்த நவபேதமுமாகி வேறு வேறு தொழில் செய்தலால், "நடிப்பன்" என்ருர்.

பொழிப்பு. ஒன்றுமின்றி அதனுய் நிற்கும் பரமசிவனே சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் மகேசுவரன் உருத்திரன் மால் அயன் என்னும் ஒன்பது பேதவடிவங்களையும் பொருந்தி நின்று பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்வன்.

2. சத்திபேதங்கள்.

165. சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மணிதா னாகி
ஒத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகும்
எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்.

(இ-ள்). வைத்துறும் சிவாதிக்கு - மேற்கூறிய சிவம் முதலிய பேதம் ஒன்பதுக்கும்,—சத்தியாய் - சிவம் சத்தி நாதம் என்னும் சத்திகளாயும்,—விந்து சத்தியாய் - விந்து சத்தியாயும்,—மனோன்மனி தானுகி - மனோன் மணியாயும்,—ஒத்துறும் மகேசையாகி - இயைந்து நிற்கும் மகேசையாயும்,—உமை திரு வாணி ஆகி - உமையாயும் இலக்குமியாயும் சரசுவதியாயும்,—இங்ஙன் வரும் சத்தி ஒருத்தி ஆகும் - இவ்வாறு ஒன்பது பேதங்களாய் வருஞ் சத்தி ஒருத்தியாகிய பராசத்தியேயாம்.—ஈசன் எத்திறம் நின்றான் அத்திறம் அவளும் நிற்பள் - முதல்வன் சிவபேதம் ஒன்பதிலும் எவ்வாறு நின்று நடாத்துகின்றானே அவ்வாறே சத்திபேதம் ஒன்பதிலும் அப் பராசத்தியும் நின்று நடாத்துவள்.

இவை இரண்டு செய்யுளாலும் ஒளியா யோங்கி நிற்கும் முறைமை கூறப்பட்டது.

குறிப்பு. சத்தியாய் - (செ. 164. கு. 3 பார்).

பொழிப்பு. சிவபேதம் ஒன்பதுக்குமுரிய சத்திபேதமும் ஒன்பது வகைப்படும். அவை சிவம் சத்தி நாதம் விந்து மனோன்மணி மகேசை உமை இலக்குமி சரசுவதி என்பனவாம். இப் பேதமெல்லாம் பராசத்தி ஒன்றுலாவதாம். முதல்வன் எத்திறமாகி நிற்பனோ அப் பராசத்தியும் அத் திறமாகவே நிற்பள்.

3. பிரபஞ்சமனைத்துஞ் சத்திசிவமயம்.

166. சத்திதா னாத மாதி தானாகுஞ் சிவமு மந்தச்
சத்திதா னாதி யாகுந் தரும்வடி வான வெல்லாஞ்
சத்தியுஞ் சிவமு மாகுஞ் சத்திதான் சத்த னுக்குச்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்தி தானே.

(இ-ள்). சத்திதான் நாதம் ஆதி தான் ஆகும் - அப் பராசத்தியானது மேற்கூறியவாறு ஒன்பதுவகையாய் நாதம் முதற் பிருதிவியீறான தத்துவங்களோடு இயைந்து நிற்கும்,—சிவமும் அந்தச் சத்தி தான் ஆதி ஆகும் - பரமசிவனும் அந்தச் சத்தி முதலியவற்றை அதிட்டித்து அவற்றோடு இயைந்து நிற்கும். ஆகலால்,—தரும் வடிவான எல்லாம் சத்தியும் சிவமும் ஆகும் -

அச் சத்தியாற் சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்ச வடிவமெல்லாம் சத்திமயமும் சிவமயமுமாயிருக்கும்,—சத்திதான் சத்தனுக்கு சத்தியாம் - அச் சத்தியே சத்தனாகிய பரமசிவனுக்குத் தேவியுமாமாகலின்,—சத்தன் வேண்டிற்றெல்லாம் சத்திதான் ஆம் - பரமசிவன் சங்கற்பித்தனவெல்லாம் அச் சத்தியாலாவதாம்.

குறிப்பு. முதல்வன் சேதனப்பிரபஞ்சத்தோடன்றி அசேதனப்பிரபஞ்சத்தோடும் அத்துவிதமாய்க் கலந்து எங்கும் நீங்காது நிற்கும் முறைமை இச்செய்யுளாற் கூறப்பட்டது.

பொழிப்பு. பராசத்தி நாதம் முதற் பிருதிவியீறான தத்துவங்களோடு இயைந்து நிற்கும். பரமசிவனும் அந்தச் சத்தி முதலியவற்றை அதிட்டித்து அவற்றோடு இயைந்து நிற்பர். ஆதலாற் சத்தியாற் சிருட்டிக்கப்பட்ட வடிவங்களெல்லாம் சத்திமயமும் சிவமயமுமாயிருக்கும்.' பரமசிவன் சங்கற்பித்தவற்றையெல்லாம் அச் சத்தியே உண்டாக்கும்.

4. சிவமும் சத்தியும் பிரபஞ்சமனைத்தோடுந் தோய்வின்றி நிற்கும்.

**167.** சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் றெரியு மன்றே.

(இ - ள்). சிவம் சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும் - மேற்கூறியவாறு சிவம் சத்தியைத் தோற்றுவித்தும் சத்தி சிவத்தைத் தோற்றுவித்தும்,—உவந்து - ஆன்மாக்களின் ஈடேற்றத்தை விரும்பி,—இருவரும் புணர்ந்து - இருவருங் கூடி,—இங்கு உலகு உயிர் எல்லாம் ஈன்றும் - இவ்விடத்துச் சடமும் சித்துமாகிய பிரபஞ்சமெல்லாவற்றையும் தோற்றுவித்துப் பஞ்சகிருத்தியம் நடத்துவரெனினும்,—பவன் பிரமசாரி ஆகும் - சிவபெருமான் பிரமசாரியாவன்,—பால்மொழி கன்னி ஆகும் - பால்போலும் இனிய மொழியையுடைய பராசத்தி கன்னிகையாவள்,—தவம் தரு ஞானத்தோர்க்கு - விசேடதவத்தாலுண்டாகும் திருவருளைப்பெற்ற ஞானிகளுக்கு,—இத் தன்மைதான் தெரியும் - சிவமுஞ் சத்தியும் உலகுயிர்களோடு தோய்வின்றி நிற்கும் முறைமை விளங்கும்.

குறிப்பு. 1. சிவம் சத்தி தன்னை யீன்றும்......:—164-ம் செய்யுளிற் கூறியபடி பரமசிவத்தினின்று பராசத்தியும், பராசத்தியினின்று ஞானசத்தியும் (சிவம்), ஞானசத்தியினின்று கிரியாசத்தியுமாக இங்ஙனம் ஒன்றினொன்று தோன்றுதல்.

2. இருவரும் புணர்ந்து இங்குலகுயிரெல்லா மீன்றும்:—ஞானசத்தியும் கிரியாசத்தியும் சமமாகக் கூடிய நிலை சதாசிவமூர்த்தம். அம் மூர்த்தி பிரபஞ்சமெல்லாவற்றையுந் தோற்றுவித்துப் பஞ்சகிருத்தியத்தையும் நடாத்துவர் என்பது.

3. பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகும் - சிவமும் சத்தியும் உலகுயிரனைத்தையுந் தோற்றுவித்து உயிர்களைக் கன்மத்துக்கீடாக ஐந்தொழிற்படுத்தினும், இவற்றின் தன்மை பொருந்தாது தோய்வின்றிநிற்கும் என்பது. பவன் - தானுயுண்டானவன், சிவன்.

பொழிப்பு. பரமசிவனும் பராசத்தியும் பிரபஞ்சமனைத்தையுந் தோற்றுவித்துப் பஞ்சகிருத்தியங்களுஞ் செய்வரெனினும், அவற்றின் தன்மை சிறிதும் எய்தாது நிற்பர்.

5. தத்துவவுணர்ச்சி இன்றியமையாதது.

168. தனுகரண புவன போகந் தற்பரம் பந்தம் வீடென்
றணுவினோ டெல்லா மாகி யடைந்திடுந் தத்து வங்கள்
இனிதறிந் திவைநி வர்த்தி முதற்கலை யிடத்தே நீக்கி,
நனிபர முணர்ந்தோ னந்தத் தத்துவ ஞானி யாவன்.

(இ-ள்). தனு கரண புவன போகம் - அசுத்தமாயாகாரியமான தனு கரண புவன போகங்களும்,—தற்பரம் - அவ்வசுத்தமாயைக்கு மேலான சுத்தமாயாகாரியங்களும் ஆகிய இவைகள்,—பந்தம் வீடு என்று - முறையே ஆன்மாக்களைப் பந்திப்பன என்றும் அவ்வான்மாக்களுக்கு அபரமுத்தித் தானங்கள் என்றும் சொல்லப்பட்டு,—எல்லாம் ஆகி - அவ்வான்மாக்கள் கன்மப்பயனை நுகர்தற்கு இன்றியமையாது வேண்டப்படும் பொருள்கள் யாவுமாகி,—அணுவினோடு அடைந்திடும் தத்துவங்கள் - அவ்வான்மாக்களைப் பொருந்தும் தத்துவங்களாகும்,—இனிது அறிந்து - இவற்றின் இயல்பைத் தெளிய அறிந்து,—இவை நிவர்த்தி முதல் கலை இடத்தே நீக்கி - இவற்றை நிவர்த்தி முதற் சாந்தியதீதை ஈறாகவுள்ள பஞ்சகலைகளிடத்தும் வைத்துக் கழித்து,—பரம் நனி உணர்ந்தோன் - அச் சாந்தியதீத கலைக்கு மேலாய சிவனை நன்குணர்ந்தோன்,—அந்தத் தத்துவஞானி ஆவன் - (பவன் பிரம சாரியும் பான்மொழி கன்னியுமாம் என்னும்) அவ்வுண்மை அறிவுடையனவன்.

குறிப்பு. 1. இச்செய்யுள், "தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியும்" என்றதனைத் தெரித்துணர்த்திற்று.

2. தனு கரண புவன போகந்......தத்துவங்கள்:—தத்துவங்கள் அசுத்த மாயாகாரியமும் சுத்தமாயாகாரியமுமாம். அசுத்தமாயாகாரியங்கள் தனு கரண புவன போகங்கள். இவை ஆன்மாக்களைப் பந்தித்து நிற்கும். சுத்ததத்துவங்கள் ஆன்மாக்களுக்கு அபரமுத்தித்தானங்கள். இத் தத்துவங்கள் உயிர்களோடு பொருந்துவனவன்றிச் சத்தி சிவங்களோடு பொருந்தா. என்னை? சத்தி சிவங்கள் தத்துவாதீதராதலினாலும் அத் தத்துவங்களோடு தோய்வின்றி நிற்றலாலுமாம். தத்துவங்கள் உயிர்களைப் பொருந்துதற்குக் காரணம் வருஞ் செய்யுளிற் சொல்லப்படும்.

3. நிவிர்த்தி முதற் கலையிடத்தே நீக்கி - அத்துவசுத்திசெய்து. அத்துவ சுத்தி ஞானாசாரியராற் செய்யப்படுவது. அத்துவசுத்தியாவது அத்துவாக்கள் ஆறிலுஞ் சஞ்சிதமாயிருந்த கன்மங்களையெல்லாம் நசிப்பித்தலாம். கன்மம் நசியவே மாயையும் நீங்கும். ஆணவமலத்தின் தடையும் ஒழியும். அத்துவ சுத்தி செய்வது எப்படியெனின், மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவ னங்கள் தத்துவங்கள் கலைகள் என்னும் அறுவகை அத்துவாக்களுள், மந் திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம் கலையிலும் அடங்க ஒடுக்கிக், கலையைத் திரோ தானசத்தியிலும், திரோதானசத்தியைச் சிவத்திலும் ஒடுக்குவதாம்.

4. தத்துவஞானி - உண்மை அறிந்தோன். தத்துவம் - உண்மை.

பொழிப்பு. அசுத்தமாயாகாரியங்கள் தனு கரண புவன போகங்களாம். இவை ஆன்மாக்களைப் பந்திப்பனவாம். சுத்ததத்துவங்கள் ஐந்தும் சுத்த மாயாகாரியங்கள். இவை அபரமுத்தித்தானங்களாம். இத் தத்துவங்களெல் லாம் ஆன்மாக்களின் கன்மநுகர்ச்சிக்கு வேண்டப்படுவனவாய் அவ்வான் மாக்களைப் பொருந்தியிருக்கும். இவற்றின் இயல்பை உள்ளபடி அறிந்து, இவற்றினீங்கிச் சிவத்தை அறிந்தவன் தத்துவஞானியாம்.

6. தத்துவங்கள் உயிர்களைப் பொருந்துதற்குக் காரணம்.

169. எல்லாமாய்த் தத்து வங்க ளியைந்ததென் னணுவுக் கென்னின்
தொல்லாய கன்ம மெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற் கும்பி
னில்லாமை முற்று வித்து நீக்கவுங் கூடி நின்ற [ன்
பொல்லாத வாண வத்தைப் போக்கவும் புகுந்த தன்றே.

(இ - ள்). தத்துவங்கள் எல்லாமாய் அணுவுக்கு இயைந்தது என் என்னின் - தத்துவங்கள் அங்ஙனம் தனு கரண புவன போகங்களாகி ஆன் மாக்களைப் பொருந்தினதற்குக் காரணம் யாது என்னின்,—தொல்லாய கன்மம் எல்லாம் துய்ப்பித்துத் துடைத்தற்கும் - பழமையாகிய இருவினை களையும் நுகர்வித்து நீக்குதற்பொருட்டும்,—பின் நில்லாமை முற்றுவித்து நீக் கவும் - அதனாற் பக்குவமடைந்தவிடத்து அவ்வினைகள் மேற்பிறவிகளுக்கு வித்தாகாமல் அவற்றை முதிர்வித்துத் தீக்கையாற் கழித்தற்பொருட்டும்,— கூடி நின்ற பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் - ஆன்மாக்களோடு சகச மாய் நின்று எல்லாத் தீங்குகளுக்குங் காரணமாயுள்ள ஆணவமலத்தைப் போக்குதற்கும்,—புகுந்தது - அடைந்ததாம்.

குறிப்பு. தொல்லாய கன்மம் - சஞ்சிதவினை.

பொழிப்பு. தனுவாதிகள் ஆன்மாக்களை அடைதற்குக் காரணம் யாதெ னின், அவ்வான்மாக்களின் கன்மங்களை அனுபவவாயிலாலும் தீக்கையா லும் நீக்குதற்கும், அவ்வான்மாக்களோடு சகசமாயுள்ள ஆணவமலத்தைப் போக்குதற்குமாம்.

II. ஆணவமலத்தினிலக்கணமும் உண்மையும், உயிர்கள் மலங்களாற் பந்திக்கப்பட்டுப் பிறப்பிறப்பிற்படும் முறைமையும், அம் மலங்களைப் போக்கி வீடடைதற்கு வாயிலும் உபாயமும், (170-186). இது மூன்று பிரிவுகளாக்கப்பட்டுப் பொருள் கூறப்படுகின்றது.

1. ஆணவமலத்தினிலக்கணமும் உண்மையும், (170-175).
2. உயிர்கள் மலங்களாற் பந்திக்கப்பட்டுப் பிறப்பிறப்பிற்படும் முறைமை, (176-178).
3. மலங்களைப் போக்கி வீடடைதற்கு வாயிலும் உபாயமும், (179-186).

---

1. ஆணவமலத்தினிலக்கணமும் உண்மையும், (170-175).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

(a). ஆணவமலத்தினிலக்கணம், (170).
(b). ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகளை மறைப்பது மாயா காரியமன்று, ஆணவமலம், (171-174).
(c). ஆணவமலம் உயிரின் குணமன்று, (175).

(a). ஆணவமலத்தினிலக்கணம்.

**170.** ஒன்றதா யநேக சத்தி யுடையதா யுடனு யாதி
அன்றதா யான்மா வின்ற னறிவொடு தொழிலை யார்த்து [ய்ந்
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச்செம் பினிற்க ளிம்பே
தென்றுமஞ் ஞானங் காட்டு மாணவ மியைந்து நின்றே.

(இ - ள்). ஆணவம் - மேற்கூறிய ஆணவமலமானது,—ஒன்றதாய் - ஒன்றாய்,—அநேக சத்தி உடையதாய் - எண்ணிறந்த சத்திகளையுடையதாய்,—உடனாய் - ஆன்மாக்களோடுகூடி நிற்பதாய்,--ஆதியன்றதாய் - அநாதியே யுள்ளதாய்,—ஆன்மாவின் தன் அறிவொடு தொழிலை ஆர்த்து நின்று - கேவலத்திலே அவ்வான்மாக்களின் அறிவையுந் தொழிலையும் மறைத்து நின்று,—போத்திருத்துவத்தை நிகழ்த்தி - சகலத்திற் போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதற்றன்மையை உண்டாக்கி,—செம்பினில் களிம்பு ஏய்ந்து இயைந்து நின்று - செம்பிற்பொருந்திய களிம்பை ஒத்து அவ்வான்மாக்களோடு விரவி நின்று,—என்றும் அஞ்ஞானம் காட்டும் - கேவலம் சகலம் என்னும் இரண்டிலும் அஞ்ஞானத்தை நிகழ்த்தும்.

குறிப்பு. 1. ஆணவமலம்:—ஆன்மாவை அணுத்தன்மைப்படுமாறு செய்தலினாலே ஆணவமலம் என்னும் பெயர் உண்டாயிற்று. அணுத்தன்மைப் படுத்தல் - சிற்றறிவும் சிறுதொழிலுமுடையதாக்குதல். அணு - சிறுமை.

2. ஒன்றதா யநேக சத்தி யுடையதாய் - ஆணவமலம் ஒன்றே. அதன் சத்திகள் எண்ணிறந்தன. மலம் ஒன்றே அவ்வெண்ணிறந்த சத்திகளால் எண்ணிறந்த உயிர்களை மறைக்கும். அவ்வாறன்றிப் பலவாய் ஒவ்வொரு மலம் ஒவ்வோர் உயிரைப் பொருந்தி நிற்பதன்று. சத்திகளும் பலவாய் ஒவ்வொரு சத்தி ஒவ்வோர் உயிரைப் பொருந்தி நின்று மறைப்பனவல்ல. ஒவ்வோர் உயிரையும் பல சத்திகள் மறைக்கும். கன்மத்துக்கேற்பச் சில ஆன்மாக்களைச் சத்தி கூடியும், சில ஆன்மாக்களைச் சத்தி குறைந்தும் பந்திக்கும்.

விஞ்ஞானகலரை மறைக்கும் மலசத்தி சூக்குமமாயும், பிரளயாகலரை மறைக்கும் மலசத்தி தூலமாயும், சகலரை மறைக்கும் மலசத்தி தூலதரமாயுமிருக்கும்.

3. உடனாய் - சகசமாய். சகசம் - கூடப்பிறந்தது. ஆன்மா என்றுள்ளதோ அன்றே ஆணவமலமும் அதனோடு சகசமாயுள்ளது என்பது. மலம் ஆன்மாவுக்குச் செயற்கை என்னின், செயற்கை இடையில்வந்து கூடுவது. இடையில் வந்தது முத்தியடைந்த பின்னும் ஆன்மாவை வந்து பொருந்தும். ஆதலால் அது பொருந்தாது. மலம் ஆன்மாவுக்கு இயற்கைக்குணம் என்னின், பாலிலுள்ள வெண்மைக்குணமும் கரியிலுள்ள கருமைக்குணமும் அழிந்தவிடத்து அக் குணிகளும் அழியுமாதலின், அதுவும் பொருந்தாது. ஆதலால் ஆணவமலம் அநாதி செயற்கை எனப்படும்.

4. ஆன்மாவின் றனறிவொடு தொழிலை யார்த்து:—மலம் ஆன்மாவை மறைக்கும் என்பதற்கு மலசத்தி ஆன்மசத்தியை மறைக்கும் என்பது பொருள். கேவலத்தில் மலசத்தி ஆன்மாவின் அறிவையும் தொழிலையும் ஒருங்கே மறைக்கும். அந்நிலையில் ஆன்மா இருளிடைப்பட்ட கண்போல ஒன்றையும் அறிய இயலாதிருக்கும். இங்ஙனம் மறைக்குஞ் சத்தி ஆவாரக சத்தி எனப்படும். ஆவாரகம் - மறைப்பு. சகலத்தில் ஆன்மா, விளக்கின் துணைபெற்ற கண்போல; ஏகதேசவிளக்கம் பெற்று அவ்வறிவைக்கொண்டு போகம் நுகரும்பொழுது, அம் மலசத்தி அவ்வான்மாவின் அறிவை விபரீதமாக்கி, இப் போகத்தை நுகர்பவன் நானே என எண்ணச்செய்யும். இவ்வாறு செய்யுஞ் சத்தி அதோநியாமிகாசத்தி எனப்படும். அதோநியாமிகா சத்தி - ஆன்மாக்களுக்குப் போகநுகர்ச்சியை விளைவிக்கும் ஆணவமலசத்தி. அதஃ—கீழ். நியாமிகா - நியமிப்பவள். சத்தி - வல்லமை. போத்திருத்துவம் - போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதற்றன்மை. போத்திரு - உண்பவன். த்வம் - தன்மை. விபரீதமாக்குதல் - மயக்கி வேறாக்குதல். வினைமுதல் - கருத்தா.

5. செம்பினிற் களிம்பேய்ந்து இயைந்து நின்று:—செம்பிற் களிம்பு ஆன்மாவோடு மலம் விரவி நிற்றற்கு உவமை. களிம்பு செம்புடன் உள்ளும் புறம்புங் கலந்து வெட்டுவாய்தோறும் நின்றாற்போல, மலமும் ஆன்மாவோடு கலந்து நிற்கும் என்பது. இவ்வுவமை ஆன்மாவுக்கும் ஆணவமலத்துக்குமுள்ள சம்பந்தம் அநாதி என்பது விளக்குதற்கும் உபயோகிக்கப்படும். "செம்பிலுறுகளிம்பேய்ந்து நித்தமூலமலமாய்" (சிவப்பிர. செ. 20).

6. அஞ்ஞானம் - ஞானமின்மை, அறியாமை. அது மெய்ப்பொருளுணர்ச்சியின்மை.

பொழிப்பு. ஆணவமலம் ஒன்றே. அஃது எண்ணில்லாத சத்திகளை யுடையதாய், உயிர்களோடு சகசமாய் அநாதியேயுள்ளதாய், கேவலத்தில் அவ்வுயிர்களின் அறிவு தொழில்கள் விளங்காமல் முழுதும் மறைத்துச், சகலத்தில் ஏகதேசமாக விளங்கிய அறிவை விபரீதவறிவாக்கி அவ்வுயிர் களோடு விரவிநின்று கேவலஞ் சகலம் இரண்டிலும் அஞ்ஞானத்தை உண் டாக்கும்.

(b). ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளை மறைப்பது மாயாகாரியமன்று, ஆணவமலம்.

**171.** மலமென வேறொன் றில்லை மாயாகா ரியமதென்னின்
இலகுயிர்க் கிச்சா ஞானக் கிரியைக ளெழுப்பு மாயை
விலகிடும் மலமி வற்றை வேறுமன் றதுவே றாகி
உலகுடல் கரண மாகி யுதித்திடு முணர்ந்து கொள்ளே.

(இ - ள்). மலம் என ஒன்று வேறு இல்லை - ஆணவமலம் என்று ஒரு பொருள் வேறாக இல்லை,—அது மாயாகாரியம் என்னின் - உயிர்களின் அறிவையும் தொழிலையுங் மறைப்பது மாயாகாரியம் என்னின், அப்படி யன்று,—மாயை - மாயையானது,—இலகு உயிர்க்கு - விளங்காநின்ற உயிர் களுக்கு,—இச்சா ஞானக் கிரியைகள் எழுப்பும் - இச்சை அறிவு செயல்களை விளக்கும்,—மலம் இவற்றை விலகிடும் - ஆணவமலம் இவ்விச்சை அறிவு செயல்களைத் தடுக்கும்,—வேறும் அன்று - அன்றியும் இந்த ஆணவமலம் உயிர்களுக்கு வேறாயிருப்பதுமன்று,—அது வேறாகி - அந்த மாயை உயிர்க ளுக்கு வேறாயிருப்பதாய்,—உலகு உடல் கரணம் ஆகி - உலகும் உடலும் கரணமுமாய்,—உதித்திடும் - தோன்றுவதாகும்,—உணர்ந்துகொள் - உயிர்க ளோடு கலந்து நின்று அவற்றின் இச்சா ஞானக் கிரியைகளை மறைக்கும் ஆணவமலத்திற்கும் உயிர்களின் வேறாக நின்று அவ்விச்சா ஞானக் கிரி யைகளை விளக்கும் மாயைக்கும் வேற்றுமை அறியாது, தனு கரண புவன போகங்களாகத் தோன்றும் மாயாகாரியமே உயிர்களை மறைக்கும் என்பது போலிமதம் என அறிவாயாக.

குறிப்பு. ஐக்கியவாதி பாசுபதி முதலியோர் ஆணவமலம் என ஒன் றில்லை, மாயையே தனு கரண புவன போகங்களாகி நின்று ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளை மறைக்கும் என்பர். இச்செய்யுள் முதல் நான்கு செய்யுள்களால் அவர் கூற்றை மறுத்து ஆணவமலமே மறைப்பது என்ப தைச் சாதிக்குமுகத்தான் அம் மலத்தின் உண்மை சாதித்தவாறுங் காண்க.

பொழிப்பு. மலம் என ஒன்றில்லை, மறைப்பது மாயாகாரியம் என் னின், மாயை உயிர்களுக்கு வேறாக நின்று அவற்றின் இச்சாஞானக்கிரி யைகளை விளக்கும். ஆணவமலம் உயிர்களோடு ஒற்றித்து நின்று அவ்விச்சா ஞானக்கிரியைகளை மறைக்கும். இவை இரண்டுக்குமுள்ள வேற்றுமை அறியாது, உலகுடல் கரணமாய் நிற்கும் மாயையே மறைத்தற்றொழிலைச் செய்யும் என்பது போலியாம்.

இதுவுமது.

172. மாயையே யான்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்குந்
தூயவப் பரிதி தன்னிற் சுடர்முகின் மறைத்தாற் போல
போய்முகி லகலச் சோதி புரிந்திடு மதுவே போலக்
காயமு மகல ஞானத் தொழில்பிர காச மாமே.

173 பரிதியை முகின்ம றைப்பப் பாயொளி பதுங்கி னாற்போல்
உருவுயிர் மறைக்கின் ஞானக் கிரியைக ளொளிக்கு மாகுங்
கருதிடு மிச்சா ஞான காரியங் காயம் பெற்றால்
மருவிடு முயிர்க்குக் காயம் வந்திடா விடின்ம றைப்பே.

(இ - ள்). தூய அப் பரிதி தன்னிற் சுடர் முகில் மறைத்தாற்போல - தூயதாகிய அந்த ஆதித்தனின் ஒளியை மேகம் வேறாய் நின்று மறைத்தாற் போல,—மாயையே ஆன்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்கும் - மாயையே உலகு உடல் கரணமாய் நின்று ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை மறைக்கும்,—முகில் போய் அகலச் சோதி புரிந்திடும் அதுவே போல - மேகம் அகன்று நீங்க ஆதித்தனது ஒளி வெளிப்பட்டுத் தோன்றுமாறு போல,—காயமும் அகல ஞானத் தொழில் பிரகாசமாம் - உடலாகிய மாயையும் நீங்க அவ்விச்சா ஞானக் கிரியைகள் விளங்கித் தோன்றும் என்று சொல்லின்,—பரிதியை முகில் மறைப்பப் பாய் ஒளி பதுங்கினாற்போல் - ஆதித்தனை மேகம் மறைத்தவளவில் பரந்து நின்ற ஆதித்தவொளி மறைந்தாற்போல,—உயிர் உரு மறைக்கின் - ஆன்மாவை உடலாகிய மாயை மறைக்கின்,—ஞானக் கிரியைகள் ஒளிக்கும் ஆகும் - அதன் இச்சா ஞானக் கிரியைகளும் மறைவனவாகும். அங்ஙனமின்றி,—காயம் பெற்றால் - ஆன்மா உடம்பைப்பெற்றவிடத்து,—கருதிடும் இச்சா ஞான காரியம் மருவிடும் - கருதப்படும் இச்சா ஞானக் கிரியைகள் நிகழ்தலாலும்,—உயிர்க்குக் காயம் வந்திடாவிடின் மறைப்பு - ஆன்மா உடம்பைப் பெறாதவிடத்து அவ்விச்சா ஞானக் கிரியைகள் நிகழாவாதலாலும் உனது கூற்றுப் பொருந்தாது.

பொழிப்பு. சூரியனது ஒளியை மேகம் மறைத்தாற்போல, மாயை உலகு உடல் கரணமாய் நின்று ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை மறைக்கும் என்றும், மேகம் நீங்கச் சூரியனது ஒளி வெளிப்பட்டுத்தோன்றுமாறுபோலக் காயமாகிய மாயை நீங்க அவ்விச்சா ஞானக் கிரியைகள் பிரகாசமாம் என்றும் சொல்லின், சூரியனை மேகம் மறைக்க ஒளி மறைந்தது போல, ஆன்மாவை மாயை மறைக்க அதன் இச்சா ஞானக் கிரியைகள் நிகழாதிருக்கவேண்டும்; அங்ஙனமின்றி ஆன்மா உடம்பைப்பெற்றவிடத்து இச்சா ஞானக் கிரியைகள் விளங்குதலும், உடம்பைப்பெறாதவிடத்து அவை மறைதலுங் காணப்படுதலால், அக்கூற்றுப் பொருந்தாது.

இதுவுமது.

174. போதகா ரியம றைத்து நின்றது புகன்ம லங்காண்
ஓதலாங் குணமு மாக வுயிரினுள் விரவ லாலே
காதலா லவித்தை சிந்தத் தருங்கலை யாதி மாயை
ஆதலா லிரண்டுஞ் சோதி யிருளென வேறு மன்றே.

(இ-ள்). போத காரியம் மறைத்து நின்றது புகல் மலம் காண் - மேற் கூறியவற்றால் ஆன்மாவின் அறிவு தொழில்களை மறைத்து நின்றது சொல்லப்பட்ட ஆணவமலம் என அறிவாயாக,—உயிரினுள் விரவலாலே குணமும் ஆக ஓதலாம் - உயிரோடு விரவிநிற்றலால் அதனை அவ்வுயிரின் குணம் போன்ற ஒன்றதாகவும் கூறலாம்,—அவித்தை சிந்த - ஆயினும் ஆணவமலம் கெடும்படி,—மாயை காதலால் கலை ஆதி தரும் ஆதலால் - மாயையானது விருப்பத்தோடு கலை முதலிய தத்துவங்களைத் தோற்றுவிக்குமாதலால்,—இரண்டும் இருள் சோதி என வேறும் - ஆணவம் மாயை என்னும் இரண்டும் இருளும் ஒளியும்போலத் தம்முள் வேற்றுமையுடையனவாம்.

குறிப்பு. சோதி யிருள் - ஆணவமலம் உயிரோடு கலந்து நின்று அதன் இச்சா ஞானக் கிரியைகளை மறைக்கும். மாயை தனு கரண புவன போகங்களாய் உயிருக்கு வேறாய் நின்று அதன் இச்சா ஞானக் கிரியைகளை விளக்கும். ஆதலாற் சோதி யிருள் என்றார்.

பொழிப்பு. ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை மறைப்பது ஆணவமலமேயாம். அஃது ஆன்மாவோடு இயைந்து நிற்றலால், அவ்வான்மாவின் குணம்போன்ற ஒன்றதாகச் சொல்லலாம். ஆயினும் ஆணவ விருள் நீங்கும்படி மாயாகாரியங்கள் தோன்றுவனவாதலால், ஆணவமும் மாயையும் ஆகிய இரண்டும் இருளும் ஒளியும்போல வேற்றுமை பெரிதுடையனவாம்.

(c). ஆணவமலம் உயிரின்குணம் அன்று.

175. புருடன்றன் குணம வித்தை யெனிற்சடம் புருட னாகுங் [ய்
குருடன்றன் கண்ணின் குற்றங் கண்ணின்றன் குணமோ கூறு
மருடன்றன் குணம தாகி மலமசித் தாகி நிற்குந்
தெருடன்றன் குணம தாகிச் சித்தென நிற்குஞ் சீவன்.

(இ-ள்). அவித்தை புருடன்றன் குணம் எனின் - ஆணவமலம் உயிரின்குணம் என்று சொல்லின்,—புருடன் சடம் ஆகும் - சித்தாகிய புருடன் சடமாகும்,—குருடன்றன் கண்ணின் குற்றம் கண்ணின்றன் குணமோ கூறாய் - அன்றியும் குருடனது கண்ணிலே அதன் ஒளியை மறைத்துநிற்கும் படலமாகிய குற்றம் கண்ணினது குணமோ நீ கூறுவாயாக. அவ்வாறன்றாதலின், ஆன்ம அறிவை மறைக்கும் மலமும் ஆன்மாவின்குணமாயிருத்தல் கூடாதாம்,—மலம் மருள் தன்றன் குணமதாகி அசித்தாகி நிற்

கும் - மலமானது அஞ்ஞானத்தைத் தனது குணமாகக்கொண்டு குணிப்பொருளாகிய தான் சடமாயிருக்கும்,—சிவன் தெருள் தன்றன் குணமதாகிச் சித்து என நிற்கும் - உயிரானது அறிவைத் தனது குணமாகக்கொண்டு குணிப்பொருளாகிய தான் சித்துப்பொருளாய் விளங்கும்.

குறிப்பு. அவித்தை - ஆணவமலம். மருள் - அஞ்ஞானம், அறியாமை.

பொழிப்பு. பாடாணவாதிகள் ஆணவமலம் உயிரின்குணம் என்பர். அங்ஙனமாயின், ஆன்மா சடம் எனப்பட்டு வழுவாம். அன்றியும், கண்ணொளியை மறைக்கும் படலம் கண்ணின் குணமாகாதவாறுபோல, ஆன்ம அறிவை மறைக்கும் மலம் ஆன்மாவின்குணமாகாது. மலம் சடப்பொருள். அறியாமை அதன்குணம். உயிர் சித்துப்பொருள். அறிவு அதன் குணம்.

---

2. உயிர்கள் மலங்களாற் பந்திக்கப்பட்டுப் பிறப்பிறப்பிற்படும் முறைமை, (**176-178**).

(*a*). மும்மலங்களும் உயிரைப் பந்திக்கும் முறைமை, (**176**).
(*b*). மாயேயம் திரோதாயி என்னும் இருமலங்களின் இயல்பு, (**177**).
(*c*). உயிர் பஞ்சமலங்களாற் பந்திக்கப்பட்டுப் பிறந்திறந்து உழலும், (**178**).

(*a*). மும்மலங்களும் உயிரைப் பந்திக்கும் முறைமை.

**176**. மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்
மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மல மூன்றி னோடு மிருமல மிசைப்ப னின்னும்.

(இ - ள்). மும்மலம் - மேற்கூறிய கன்மம் மாயை ஆணவம் என்னும் மூன்று மலங்களும்,—நெல்லினுக்கு முளையொடு தவிடு உமிப்போல் மம்மர் செய்து - நெல்லுக்கு முளையும் தவிடும் உமியும்போல உயிருக்கு மயக்கத்தைச்செய்து,—அணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று - அதுபற்றி அவ்வுயிரின் சொரூபத்தை மறைத்து நின்று,—பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத்துவங்கள் பண்ணும் - முறையே பொய்யான போகத்தையும் பந்தத்தையும் போத்திருத்துவத்தையும் உண்டாக்கும்,—இம் மலம் மூன்றினோடும் - இந்த மூன்று மலங்களோடும்,—இன்னும் இருமலம் இசைப்பன் - மேலும் இரண்டு மலங்களைக் கூறுவாம்.

குறிப்பு. 1. மும்மலம் - 129-ம் செய்யுளிற் கூறப்பட்ட கன்மமலமும், 143-ம் செய்யுளிற் கூறப்பட்ட மாயாமலமும், 170-ம் செய்யுளிற் கூறப்பட்ட ஆணவமலமும் ஆகிய மூன்றுமாம்.

2. நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போன் மம்மர்செய் தணுவி னுண்மை வடிவினை மறைத்து நின்று:—உமி தவிடு முளைகள் அரிசியின்

உண்மைவடிவை மறைத்திருத்தல்போல, ஆணவம் மாயை கன்மங்கள் உயிரின் உண்மைவடிவை மறைத்திருக்கும் என்பது. நெல்லு மலங்களோடு கூடிய உயிருக்குவமை. உமி ஆணவமலத்துக்கும், தவிடு மாயைக்கும், முளை கன்மத்துக்கும் உவமைகளாம். உமி அரிசியின் சொரூபந் தெரியவொட்டாது அதனை முழுதும் மறைத்தல்போல, ஆணவமலமும் ஆன்மாவின் சொரூபந் தெரியவொட்டாது அதனை முழுதும் மறைக்கும். தவிடு அரிசியின் சொரூபத்தைச் சிறிது விளக்குதல்போல, மாயையும் ஆன்ம அறிவைச் சிறிது விளக்கி ஏகதேசவறிவை உண்டாக்கும். முளை தோன்றுமிடத்து அரிசியின் சொரூபம் விளங்காத்வாறுபோல, கன்மமாகிய நல்வினை தீவினைகள் செய்யப்படுமிடத்து, ஆன்மா அவ்விருவினையிலே மதிமயங்கியிருத்தலால், அதன் சொரூபம் விளங்காதிருக்கும். மம்மர் - மயக்கம். அது ஆன்மாவின் உண்மைவடிவு தெரியாத கலக்கநிலை. உண்மைவடிவு - சர்வஞ்ஞத்துவமும் சர்வகர்த்திருத்துவமும்.

இவ்வுவமை மும்மலங்கள் ஆன்மாவோடு அநாதியே கூடிநிற்குந் தன்மையை விளக்குதற்கும் உபயோகிக்கப்படும். "நெல்லின்முளை தவிடுமிபோலநாதியாக நிறுத்திடுவர்." (சிவப்பிர. செ. 25); "மூன்றும் நெல்லுக்குத் தவிடுமியு முளையும்போல் அநாதியாய் நிற்கும்." (தத்துவ. பிரகா. பாசவிலக். செ. 35).

3. போகபந்த போத்திருத்துவம்:—போகம் - இன்பத்துன்பங்கள். பந்தம் - தனுகரணாதிகள். போத்திருத்துவம் - வினைமுதலாந் தன்மை. இவை மூன்றும் ஆன்மாவைப் பந்திப்பனவாம். பந்தப்படுத்தும் வேறுபாட்டால் இவை முறையே அநுபந்தம் சம்பந்தம் பிரதிபந்தம் எனப்படும். அநுபந்தம் - பின்வந்த பந்தம். அநு - பின். தனு கரணங்களைப் பெற்றபின் இன்பத்துன்பங்கள் உயிரைப்பொருந்திப் பந்தப்படுத்தலால், கன்மமலம் அநுபந்தம் எனப்படும். சம்பந்தம் - சம் - கூட. தனு கரணங்கள் உயிரோடு கூடிநின்று அதனைப் பந்தப்படுத்தலால், மாயாமலம் சம்பந்தம் எனப்படும். பிரதிபந்தம் - தடை. பிரதி - எதிர். ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை மறைத்தலால், ஆணவமலம் பிரதிபந்தம் எனப்படும்.

4. இருமலம் - மாயேயம், திரோதானசத்தி.

பொழிப்பு. மும்மலங்களும் உயிரை மயக்கி அதன் சொரூபத்தை அறியவொட்டாது செய்யும். அன்றியும் பொய்ப்போகத்தையும் பந்தத்தையும் போத்திருத்துவத்தையும் உண்டாக்கும்.

(b). மாயேயம் திரோதாயி என்னும் இருமலங்களின் இயல்பு.

**177.** மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயும்ம் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்
தூயவன் றனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வரிம் மலங்க ளைந்து மணுக்களை யணைந்து நிற்கும்.

(இ - ள்). மாயையின் காரியத்தை மாயேயமலம் அது என்றும் - மாயா காரியக்கூட்டத்தை மாயேயமலம் என்றும்,—ஏயும் மும்மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும் - ஆன்மாக்களைப் பொருந்திய மும்மலங்களும் தத்தந் தொழிலைச் செய்யும்படி செலுத்தாநின்ற,—தூயவன் தனது ஓர் சத்தி - சிவனுடைய ஒப்பற்ற சத்தியை,—திரோதான கரி அது என்றும் - மறைத்தலைச்செய்யும் திரோதாயி என்றும்,—ஆய்வர் - ஆராய்ந்து கூறுவர்,— இம் மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும் - சொல்லப்பட்ட இந்த ஐந்து மலங்களும் ஆன்மாக்களைப் பொருந்தியிருக்கும்.

குறிப்பு. 1. மாயையின் காரியத்தை மாயேய மலமதென்றும்:—மாயையின் காரியம் - காலதத்துவம் முதற் பிருதிவியீறான தத்துவங்களும் புவனங்களும் புவனத்துப்பொருள்களும். "தேகமுறு கரணமொடு புவனபோகச் செயலாரு மாமாயைத் திரட்சி" எனச் சிவப்பிரகாசம் கூறும் இவை மாயையிலே அடங்குமாயினும், பந்தப்படுத்தும் வேற்றுமைபற்றி வேறுவைத்தெண்ணப்பட்டன. மாயை ஆன்ம அறிவை மயக்கும். மாயாகாரியம் அம் மயக்கத்திற்கு முன்னிலைப்பொருளாயிருக்கும். மாயேயம் - மாயாகாரியம். மாயா-பகுதி. ஏய - தத்தித விகுதி. சுத்தமாயாகாரியங்கள் மலம் விரவாது சுத்தமாயிருத்தலின், மலங்களுள் வைத்து எண்ணப்படாவாயின.

2. மும்மலங்கள்......திரோதான கரியதென்றும்:—திரோதானகரி - திரோதானத்தைச்செய்வது. திரோதானம் - மறைப்பு. கரி - செய்வது. ஆன்மாவின் இச்சா ஞானக்கிரியைகளை மறைக்கும் மலசத்திகளை அதிட்டித்து நிற்றலால், சிவசத்தி திரோதானசத்தி எனப்படும். அத் திரோதான சத்தி மும்மலங்களையும் அதிட்டித்து நின்று தத்தந் தொழிலிற்படுத்திப் பாகம் வருவித்தலால், மலம் என்று உபசாரமாகச் சொல்லப்படும்.

பொழிப்பு. அசுத்தமாயாகாரியம் மாயேயமலம் எனப்படும். மும்மலங்களையுந் தொழிற்படுத்திப் பாகம் வருவிக்குஞ் சிவசத்தி திரோதாயி எனப்படும். இவ்வைந்து மலங்களும் உயிர்களைப் பொருந்தியிருக்கும்.

(c). உயிர் பஞ்சமலங்களாற் பந்திக்கப்பட்டுப் பிறந்திறந்து உழலும்.

**178.** மலமாயை கன்ம மாயே யந்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பிற் றங்கியித் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத் தின்கண்
அலமாரு மிறைவ னாணை யாலுயிர் நடக்கு மன்றே.

(இ - ள்). உயிர் - ஆன்மாவானது,—மலம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி மன்னி - ஆணவம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி என்னும் ஐந்து மலங்களையும் பொருந்தி,—சலம் ஆரும் பிறப்பு இறப்பில் தங்கி - போக்கு வரவுடைய பிறப்பிறப்புக்களிற்பட்டு,—இத்தரை கீழ் மேலும் - இப்பூமி நரகம் சுவர்க்கம் என்னும் மூவுலகங்களிலும்,—நிலையாத கொள்ளி

வட்டம் சுறங்கு என - நிலையில்லாத கொள்ளிவட்டமுங் காற்றாடியும்போல, —நிமிடத்தின்கண் அலமாரும் - கணப்பொழுதிற் சுழன்று திரிந்து,—இறைவன் ஆணையால் நடக்கும் - முதல்வன் ஆணைப்படி நடக்கும்.

குறிப்பு. அலமரும் என்றது அலமாரும் என்றாயிற்று. அலமரல் - சுழலல்.

பொழிப்பு. உயிர் பஞ்சமலங்களையும்பொருந்திப் பிறப்பிறப்பிற்பட்டுக் கொள்ளிவட்டமுங் காற்றாடியும்போல மூவுலகங்களிலுஞ் சுழன்று சிவாஞ்ஞைப்படி திரியும்.

---

3. மலங்களைப் போக்கி வீடடைதற்கு வாயிலும் உபாயமும், (179-186).

(*a*). மாநுடப் பிறப்பெய்தல் அரிது, (179).

(*b*). உத்தமதேசத்திலே பிறத்தல் அரிது. உத்தமசாதியிற் பிறந்து புறச்சமயம் சாராது நிற்றல் அதனினும் அரிது, (180).

(*c*). சைவசித்தாந்த நெறியை அடைதல் மிகவும் அரிது. மலங்களைப் போக்கி வீடடைதற்குச் சித்தாந்தநெறி வாயில், சிவனை வழிபடல் உபாயம், (181).

(*d*). சிவபெருமானை வழிபடுதற்காகவே மானுடப்பிறவி கொடுக்கப்பட்டது, (182).

(*e*). தேகம் அநித்தியம். அது உள்ளபோதே சிவபெருமானை வழிபடவேண்டும், (183).

(*f*). விடயபோகம் அநித்தியம், (184-185).

(*g*). பொருட்செல்வம் அநித்தியம், அருட்செல்வம் நித்தியம், (186).

(*a*). மாநுடப்பிறப்பெய்தல் அரிது.

179. அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிச்சஞ் சராயு சத்தோ
டெண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தாய்
உண்டுபல் யோனி யெல்லா மொழித்துமா நுடத்து தித்தல்
கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்.

(இ-ள்). அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சராயுசத்தோடு எண்தரு நால் - அண்டசமும் சுவேதசமும் உற்பிச்சமும் சராயுசமும் ஆக எண்ணப்படும் நான்கிலுந் தோற்றியிடும் எழுவகைப் பிறப்புக்களிலே,—எண்பத்து நான்கு நூறு ஆயிரத்து ஆய் உண்டு - எண்பத்துநான்கு நூறாயிரபேதமுடையதாய் யோனிகள் உள்ளன,—பல்யோனி எல்லாம் ஒழித்து - அவற்றுள்

பலவாகிய யோநிபேதங்கள் எல்லாவற்றையும் ஒழித்து,—மாநுடத்து உதித்தல் கண்டிடின் - மாநுடப் பிறவியிற் பிறத்தலை எய்தப்பெறின்,—கடலைக் கையால் நீந்தினன் காரியம் காண் - அது சமுத்திரத்தைக் கையாலே நீந்திக் கரையேறினவன் செயல் போன்றதாம்.

குறிப்பு. 1. அண்டசம் - முட்டையிலே தோன்றுவன. அவை மீன் பறவை பல்லி முதலியன. அண்டம் - முட்டை. ஜம் - பிறந்தது.

2. சுவேதசம் - வேர்வையிலே தோன்றுவன. அவை பேன், விட்டில், கிருமி முதலியன. சுவேதம் + ஜம் = சுவேதசம். சுவேதம் - வேர்வை.

3. உற்பிச்சம் - வித்து வேர் முதலியவைகளை மேற் பிளந்து தோன்றுவன. அவை மரம் கொடி பூண்டு முதலியன. உத்பித் - மேற் பிளந்து தோன்றுவது.

4. சராயுசம் - கருப்பையிலே தோன்றுவன. அவை மிருகங்கள் மானுடர் தேவர் முதலியன. சராயு - கருப்பாசயப்பை.

5. எண்பத்து நான்கு நூறுயிரத்தாய் உண்டு:—எண்பத்து நான்கு நூறுயிர யோநி பேதங்களுள், தாவரங்கள் பத்தொன்பது நூறுயிரம்; ஊர்வன பதினைந்து நூறுயிரம்; தேவர்கள் பதினொரு நூறுயிரம்; நீர்வாழ்வன பறவை மிருகம் என்னும் ஒவ்வொன்றும் பத்துப் பத்து நூறுயிரம்; மாநுடர் ஒன்பது நூறுயிரம்.

6. யோநி - தேகம், சரீரம்.

பொழிப்பு. நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பில் எண்பத்து நான்கு நூறுயிர யோநி பேதங்களுள்ளே மாநுடப் பிறவியில் வந்து பிறத்தல் மிக்க அருமையாம். அது பெரிய சமுத்திரத்தைக் கையினாலே நீந்திக் கரையேறினவன் செயல்போன்றதாம்.

(b). உத்தம தேசத்திலே பிறத்தல் அரிது. உத்தம சாதியிற் பிறந்து புறச்சமயம் சாராது நிற்றல் அதனினும் அரிது.

**180.** நரர்பயி றேயந் தன்னி னான்மறை பயிலா நாட்டில்
விரவுத லொழிந்து தோன்றன் மிக்கபுண் ணியத்தா னாகும்
தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
பரசம யங்கட் செல்லாப் பாக்கியம் பண்ணொ ணாதே.

(இ - ள்). நரர் பயில் தேயம் தன்னில் - மானுடர் வாழ்கின்ற தேசங்களுள்ளே,—நான்மறை பயிலா நாட்டில் விரவுதல் ஒழிந்து தோன்றல் - வேதாகமங்கள் ஓதப்படாத தேசத்திலே பிறத்தலைவிட்டு அவை ஓதப்படும் உத்தம தேசத்திலே பிறத்தல்,—மிக்க புண்ணியத்தான் ஆகும் - மிகுந்த புண்ணியவசத்தால் உண்டாகும்,—தரையினில் கீழைவிட்டுத் தவம் செய் சாதியினில் வந்து - இப் பூமியிலே கீழாய சாதியிலே தோன்றாது தவஞ்

செய்தற்குரிய உத்தம சாதியிலே தோன்றி,—பரசமயங்கள் செல்லாப் பாக்கியம் பண்ண ஒண்ணு - புறச்சமயங்களிற் செல்லாது நிற்கும் நன்மை பெறுதல் அரிதாம்.

பொழிப்பு. மாநுடப்பிறவி எய்தினும் வேதாகமங்கள் ஓதப்படும் உத்தம தேசத்திற் பிறத்தல் மிகுந்த புண்ணியத்தால் உண்டாம். உத்தம சாதியிலே பிறந்தும் புறச்சமயங்களிற் செல்லாது நிற்கும் பேற்றினைப் பெறுதல் அதனினும் அரிதாம்.

(c). சைவசித்தாந்த நெறியை அடைதல் மிகவும் அரிது.
மலங்களைப் போக்கி வீடடைதற்குச் சித்தாந்தநெறி வாயில்,
சிவனை வழிபடல் உபாயம்.

**181.** வாழ்வெனு மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரும்
ஊழ்பெற லரிது சால வுயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவா ரருள்பெற் றாரே.

(இ-ள்). வாழ்வு எனும் மையல் விட்டு - (மேற்கூறியவாறு உத்தம சாதியிலே பிறந்து புறச்சமயங்களிலே செல்லாது நிற்பினும்) செல்வத்தினால் உண்டாகும் மயக்கத்தை ஒழித்தும்.—வறுமையாம் சிறுமை தப்பி - வறுமையால் உண்டாகும் சிறுமையினீங்கியும்,—தாழ்வு எனும் தன்மை யோடும் - அடிமையாந் தன்மையோடும்,—சைவமாம் சமயம் சாரும் ஊழ் பெறல் - சைவசித்தாந்தம் என்னும் நெறியைப் பொருந்தும் புண்ணியத்தைப் பெறுதல்,—சால அரிது - மிகவும் அரிதாம்,—உயர் சிவஞானத்தாலே - (இத்தன்மைகளோடு அந்நெறியிலே நின்று) மேலான சிவனருளாலே,—போழ் இள மதியினானைப் போற்றுவார் - பிளவுபட்ட இளம் பிறை அணிந்த சிவபெருமானை வழிபடுவோர்.—அருள் பெற்றார் - அவனருளைப் பெற்று மலங்களைப் போக்கி முத்திப்பேறு பெறுவோராவர்.

குறிப்பு. 1. வாழ்வு - வாழ்க்கை, செல்வம்.

2. தாழ்வு - தாழ்மை. தாழ்தல் - வணங்குதல்.

3. சிவஞானம் - பரஞானம், அருள். சிவஞானத்தாலே போற்றுதல் - அவனருளாலே அவன்றாள் வணங்கல்.

பொழிப்பு. செல்வம் முதலியவற்றால் வருஞ் செருக்கும் வறுமையால் வருஞ் சிறுமையும் நீங்கி, அடிமைத் திறத்தோடுஞ் சைவசித்தாந்த நெறியை அடையும் பாக்கியம் பெறுதல் மிகவும் அரிதாம். அந்நெறியிலே நின்று சிவனருளாலே சிவனை வணங்கும் பேறுண்டாயின், அவை மலங்களைப் போக்கி வீடடைதற்கு வாயிலும் உபாயமுமாம்.

(*d*). சிவபெருமானை வழிபடுதற்காக மானுடப்பிறவி கொடுக்கப்பட்டது.

182. மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயத்
தானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூமை ரொன்றையு முணரா ரந்தோ.

(இ - ள்). மானுடப் பிறவி தானும் வகுத்தது - பிறவிகளுள் விசேடமான மானுடப் பிறவியை முதல்வன் கொடுத்தது.—மன வாக் காயத்து - மனத்தாலே நினைந்தும் வாக்காலே துதித்தும் காயத்தாற் பணிந்தும் செய்யப்படும்,—ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றோ - பஞ்சகவ்வியத்தினை ஆடியருளுகின்ற சிவபெருமானது தொண்டின்பொருட்டாகவன்றோ.—வானிடத்தவரும் - மேலுலகத்துள்ள விட்டுணு முதலிய தேவர்களும்,—மண்மேல் வந்து அரன் தனை அர்ச்சிப்பர் - இந்தப் பூமியிலே வந்து அச்சிவபெருமானை அருச்சிப்பர்.—அந்தோ ஊன் எடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணரார் - ஐயோ! இவ்வுலகத்திலே சரீரத்தைப்பெற்று உழன்று திரிகின்ற மூகர் இவைகளில் ஒன்றையும் ஆராய்ந்தறிகின்றாரில்லை.

குறிப்பு. 1. மானுடப் பிறவி:—மிருகம் பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்பன இப்பூமியிலே பிறந்தும் வேதாகமங்களை உணரும் உணர்வும், சைவசமயாசாரங்களை அனுட்டிக்கும் பேறும், சித்தாந்தநெறிப்படி சிவபெருமானை வழிபடுந் திறமும் எய்தப்பெறாமையாலும், தேவர்க்கு விண்ணுலகம் போகம் நுகர்தற்கு இடமாமன்றி மூர்த்தி தலம் தீர்த்தங்களுடைய தாய்ப் புண்ணியந்தருமிட மாகாமையாலும், மானுடப்பிறவியே மலத்தாலாகிய பிறப்புக்களை நீக்குதற்கு உரிமையுடையதாம். ஆகையால், இத்தேகத்தோடிருக்கும்பொழுதே சிவபெருமானை வழிபட்டு அவனருளைப் பெற்றுப் பிறப்புக்களை நீக்கிக்கொள்ளல்வேண்டும்.

2. மன வாக் காயம் அரன்பணிக்காக வன்றோ:—சிவபிரானை வழிபடுதற்கு வாயில் மனம் வாக்குக் காயங்களாம். பஞ்சாக்கரதியானம் முதலியன செய்தல் மனத்தாற் செய்யப்படும் பணியாம். தேவார திருவாசகம் முதலிய துதிகளை ஓதுதல் வாக்காற் செய்யப்படும் பணியாம். சிவாலயசேவை குருசேவை அடியார்சேவை முதலியன செய்தல் காயத்தாற் செய்யப்படும் பணியாம். இங்ஙனஞ் சிவபெருமானைத் தியானித்துந் துதித்தும் வணங்கியும் வரின் திருவருளைப்பெற்று மலபந்தத்தைப் போக்கிப் பிறவியை நீக்கலாம்.

3. ஆனிடத் தைந்து மாடு மரன்:—பசுவினிடத்துண்டாகிய பால் தயிர் நெய் கோசலம் கோமயம் என்னும் ஐந்தினாலுந் திருமுழுக்காட்டல், உயிராகிய பசுவைப் பொருந்திய ஐந்து மலங்களும் நீங்குதற்பொருட்டுச் செய்யப்படுந் தொண்டினைக் குறிக்கும். கவ்வியம் - பசுவிடத்துள்ள பால் தயிர் முதலியன.

4. வானிடத்தவரு மண்மேல் வந்தரன் றனை யர்ச்சிப்பர் - சுவர்க்கம் முதலிய மேலுலகங்கள் இப் பூமியிலே ஈட்டிய புண்ணியத்தின் பயனாகிய இன்பத்தை அனுபவித்தற்கு இடங்களாகுமன்றிச் சிவனை அர்ச்சித்து மலபந்தத்தை நீக்கிக்கொள்ளுதற்கு இடங்களாகா. ஆதலால், பிறப்பினீங்கி முத்தியடைய விரும்புவோர், இவ் விசேடதலமாகிய பூமியிலே இத்தேகத்தோடுகூடியிருக்கும்பொழுதே அதனைப்பெறும்பொருட்டு முயலல்வேண்டும்.

போழிப்பு. மனம் வாக்குக் காயங்களினாலே சிவபெருமானை வழிபடுதற்பொருட்டே மானுடப் பிறவி வகுக்கப்பட்டது. மேலுலகத்துள்ள விட்டுணு முதலிய தேவரும் இப் பூமியிலே வந்து சிவபிரானை வணங்குவர். இச் சரீரத்தைப் பெற்றும் இங்ஙனம் வழிபாடுசெய்யாதார் அறிவில்லாதவராவர்.

(e). தேகம் அசித்தியம். அஃதுள்ளபோதே சிவபெருமானை வழிபடவேண்டும்.

**183.** கருவினு ளழிவ தாயுங் கழிந்திடா வழிவ தாயும்
பரிணமித் தழிவ தாயும் பாலனா யழிவ தாயுந்
தருணனா யழிவ தாயுந் தானரைத் தழிவ தாயும்
உருவமே யழிவே யானா லுள்ளபோ தேபா ருய்ய.

(இ-ள்). கருவினுள் அழிவதாயும் - மாதாவினுடைய கருப்பத்திலே அழிவதாயும்,—கழிந்திடா அழிவதாயும் - பிறந்து உடனே அழிவதாயும்,—பரிணமித்து அழிவதாயும் - உருவந் திரிந்து வளருங் குழவிப் பருவத்தில் அழிவதாயும்,—பாலனாய் அழிவதாயும் - பாலனாய் வரும் பருவத்தில் அழிவதாயும்,—தருணனாய் அழிவதாயும் - யௌவன பருவமுடையனாய் அழிவதாயும்,—நரைத்துத்தான் அழிவதாயும் - விருத்தனாய் அழிவதாயும்,—உருவமே அழிவே ஆனால் - இங்ஙனம் சரீரமே அழிந்துபோகுந் தன்மையுடையதாகலின்,—உள்ளபோதே உய்யப் பார் - இச் சரீரம் இருக்கும்பொழுதே சிவபெருமானை வழிபட்டு மலபந்தத்தைப் போக்கி முத்தியடைய முயல்வாயாக.

குறிப்பு. பரிணமித்தல் - உருவம் வேறுபடல்.

போழிப்பு. இச் சரீரம் எவ்வளவுகாலம் நிற்குமென அறியப்படாமையின், இது நிற்கும்பொழுதே சிவபெருமானை வழிபட்டு வீடுபெற முயலல் வேண்டும்.

(f). விடயபோகம் அசித்தியம்.

**184.** ஒருபுல னுகரும் போதங் கொன்றிலை யொன்றின் பாலும்
வருபயன் மாறி மாறி வந்திடு மெல்லா மாறும்
ஒருபொழு துணரி னுண்டா மல்லதிவ் வல்லல் வாழ்க்கை
மருள்கன வதுவும் போல மாயும்பின் மாயு மன்றே.

(இ - ள்). ஒரு புலன் நுகரும் போது - ஒரு விடயத்தை நாம் அனுபவிக்கும்பொழுது,—அங்கு ஒன்று இலை - அவ்விடத்து வேறொரு விடயம் அனுபவமாதலில்லை,—ஒன்றின்பாலும் வரு பயன் மாறி மாறி வந்திடும் - ஒரு விடயத்தின்கண்ணும் வருகின்ற பயன் இன்பமும் துன்பமுமாக மாறி மாறி வருவதாகும்,—ஒருபொழுது எல்லாம் மாறும் - கேவலநிலையில் விடய அனுபவமும் இன்பத்துன்ப நுகர்ச்சியும் இல்லையாய்விடும்,—உண்டாம் அல்லது (ஆம்) இவ்வல்லல் வாழ்க்கை உணரின் - இங்ஙனம் உள்ளதும் இல்லதுமாய்த் துன்பத்தோடு கூடியதாயிருக்கும் இவ்விடயபோகத்தின் இயல்பை ஆராயுமிடத்து,—மருள் கனவதுவும் போல - அது மயக்கத்தையும் கனவையும் ஒத்து,—அன்றே மாயும் பின் மாயும் - தோன்றியவுடனே அழிவதும் சிறிதுகாலத்தின் பின் அழிவதுமாயிருக்கும்.

குறிப்பு. மருள் கனவதுவும் போல: - மருள் அன்றே மாய்தலுக்கும் கனவு பின் மாய்தலுக்கும் உவமை.

பொழிப்பு. ஒரு விடயத்தை நாம் அனுபவிக்கும்பொழுது, வேறு விடயம் அனுபவத்திற்கு வராது. அவ்விடய அனுபவமும் இன்பமும் துன்பமுமாக மாறிமாறிவரும். கேவல நிலையில் இவ்வனுபவங்கள் யாதுமில்லை. இங்ஙனம் உள்ளதும் இல்லதுமாய்த் துன்பத்தோடு கூடியதுமாய் வரும் விடயசுகம் தோன்றிய உடனே அழிவதும் சிறிதுகாலந் தங்கி அழிவதுமாய இயல்புடைத்தாம்.

இதுவுமது.

**185.** அரிசனம் பூசி மாலை யணிந்துபொன் னுடை சாத்திப்
பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட
வரிசின்ன மூதத் தொங்கல் வந்திட வுணர்வு மாண்டு
பெரியவர் பேச்சுமின்றிக் கிடத்தலாற் பிணத்தோ டொப்பர்.

(இ - ள்). அரிசனம் பூசி - சந்தனம் முதலிய வாசனைத்திரவியங்களைப் பூசியும்,—மாலை அணிந்து - வாசத்தோடு கூடிய பூமாலைகளை அணிந்தும்,—பொன் ஆடை சாத்தி - பீதாம்பரம் போர்த்தும்,—பரிசனம் பின்பு செல்ல - தமது பரிவாரங்கள் பின்னே வரவும்,—பாரகர் பரிக்க - காவுவோர் சிவிகை சுமக்கவும்,—கொட்ட - வாத்தியங்கள் முழக்கவும்,—வரிசின்னம் ஊத - வரி பொருந்திய சின்னங்களை ஊதவும்,—தொங்கல் வந்திட - குடை சாமரங்கள் சூழவரவும்,—பெரியவர் - இவ்விடயசுகங்களோடு கூடிய பெரியவர்,—உணர்வுமாண்டு பேச்சும் இன்றிக் கிடத்தலால் - செல்வச் செருக்கினால் அறிவு மழுங்கிப் பேச்சுமின்றி அச்சிவிகைக்குட் கிடத்தலால்,—பிணத்தோடு ஒப்பர் - செத்தாருக்குச் சமமாவர்.

குறிப்பு. பெரியவர் பிணத்தோடொப்பர் - செல்வருக்கு நடக்குஞ் சிறப்பெல்லாம் பிணத்துக்கும் நடத்தலாலும், அறிவின்றிப் பேசாது கிடக்கும்

பிணம்போலவே அவரும் அறிவிழந்து பேசாது கிடத்தலாலும், அவர் பிண த்துக்கு ஒப்பாவர் என்க. பெரியவர் - இழிவையுணர்த்தும் குறிப்புச்சொல்.

பொழிப்பு. விடயபோகங்களிலே மயங்கி அவற்றில் அழுந்துவோர் பிணத்துக்கு ஒப்பாவர்.

(g). பொருட்செல்வம் அநித்தியம், அருட்செல்வம் நித்தியம்.

186 பிணத்தினை யொத்து வாழ்வோர் பின்னடைப் பிணங்கள்போல
உணக்கியே யுழல்வீ ருங்க ளுடலுயி ருணர்வு மெல்லாங்
கணத்திடைத் தோன்றி மாயுங் காயமென் றறிந்தொ ருக்கால்
வணக்குறீ ரரனை யென்றும் வானவர் வணங்க வைப்பன்.

(இ-ள்). பிணத்தினை ஒத்து வாழ்வோர் பின் - நீர் பொருட்செல்வம் ஈட்டுதற் பொருட்டுப் பிணம்போல வாழும் செல்வச் செருக்குடையார் பின் சென்று,—நடைப்பிணங்கள்போல - நடைப்பிணங்கள் போல,—உங்கள் உடல் உயிர் உணர்வு எல்லாம் - உங்களுடைய உடல் உயிர் அறிவு முதலிய வைகளை,—உணக்கியே உழல்வீர் - வாட்டியே அலைவீர். அங்ஙனம் அலை தலைவிட்டு,—காயம் கணத்திடைத் தோன்றி மாயும் என்று அறிந்து - உமது சரீரம் கணத்திலே தோன்றி அழியும் இயல்புடையதென்று உணர்ந்து,—அரனை ஒருக்கால் வணக்குறீர் - சிவபெருமானை ஒருகாலேனும் வணங்கு வீராக. அங்ஙனம் செய்வீராயின்,—என்றும் வானவர் வணங்க வைப்பன் - எஞ்ஞான்றும் தேவர்களும் வணங்கும்படி அவர் அருட்செல்வத்தை உமக்குக் கொடுப்பர்.

குறிப்பு. "செல்வநெடுமாடஞ் சென்றுசேணோங்கிச், செல்வமதிதோ யச் செல்வமுயர்கின்ற, செல்வர்வாழ்தில்லைச் சிற்றம்பலமேய, செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே" (தேவார. திருஞா.) என்றும், "மாட் டைத்தேடி மகிழ்ந்துநீர்நும்முளே, நாட்டுப்பொய்யெலாம் பேசிநொணிலீர், கூட்டைவிட்டுயிர் போவதன்முன்னமே, காட்டுப்பள்ளி யுளான்கழல்சேர்மி னே" (தேவா. திருநா.) என்றும், "ஐயனேயர னேயென் றரற்றினால், உய் யலாமுல கத்தவர்பேணுவர், செய்யபாத மிரண்டுநினையவே, வையமாளவும் வைப்பர்மாற்பேறரே" (தேவா. திருநா.) என்றும் வருவனவற்றால் உணர் ந்து கடைப்பிடிக்க.

பொழிப்பு. செல்வச்செருக்குடையார் பின் சென்று அநித்தியமான பொருட்செல்வம் ஈட்டுதலை விட்டுச் சிவபெருமானை வணங்குவீராயின், அவர் என்றும் அழியாத அருட்செல்வத்தை உமக்கு அளிப்பர்.

---

# மூன்றாஞ் சூத்திரம்.

இச்சூத்திரமும் நான்காஞ்சூத்திரமும் பசுவுண்மையும் பசுவிலக்கணமுங் கூறுகின்றன.

பசுவுண்மையும் பசுவிலக்கணமுந் தொகுத்துக்கூறல்.

**187.** உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதா யுற்றுச்
செயிருறு மிச்சா ஞானச் செய்திக ளுடைய தாகிப்
பயில்வுறு மின்பத் துன்பப் பலன்களு நுகரும் பார்க்கின்
துயிலொடு மஞ்ச வத்தைப் படுமுண்மை துரியா தீதம்.

(இ - ள்). உயிர் எனப்படுவது - உயிர் என்று சொல்லப்படுவது,—இந்த உடலின் வேறுளதாய் - இந்த உடம்பிற்கு வேறாயுள்ளதாய்,—உற்று - உடம்புகளைப் பொருந்தி,—செயிர் உறும் இச்சாஞானச் செய்திகள் உடையதாகி - குற்றம்பொருந்திய இச்சாஞானக்கிரியைகளையுடையதாய்,—பயில்வு உறும்- புண்ணிய பாவங்களைச் செய்யும்,—இன்பத்துன்பப் பலன்களும் நுகரும் - அவற்றால் வரும் இன்பத்துன்பப் பயன்களையும் அனுபவிக்கும்,—பார்க்கின்- ஆராயுமிடத்து,—துயிலொடும் அஞ்சு அவத்தைப்படும் - அறிவு சோர்தலோடும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தைகளையும் அடையும்,—துரியாதீதம் உண்மை - அவற்றினுள்ளே துரியாதீதம் உயிர் தான்மாத்திரம் உளதாயிருக்கும் கேவலநிலையாம்.

குறிப்பு. 1. "உயிரெனப்படுவதிந்த வுடலின் வேறுளதாய்" என்பதனாற் பசுவுண்மையும், "உற்றுச், செயிருறு மிச்சாஞானச் செய்திகளுடையதாகிப், பயில்வுறுமின்பத்துன்பப் பலன்களு நுகரும் பார்க்கின், துயிலொடு மஞ்சவத்தைப்படுமுண்மை துரியாதீதம்" என்பதனாற் பசுவிலக்கணமுந் தொகுத்துக் கூறப்பட்டன.

2. செயிருறு மிச்சாஞானச் செய்திகள் - குற்றமுடைய இச்சா ஞானக் கிரியைகள்; சிற்றறிவு சிறுதொழில்கள். ஆன்மா கேவலத்தில் ஆணவமலத்தினாலே மறைப்புண்டு தன் இச்சா ஞானக் கிரியைகள் சிறிதும் விளங்காதிருக்கும். உடலைப் பொருந்திச் சகல நிலையை அடைந்தவிடத்து அவ்விச்சா ஞானக் கிரியைகள் சிறிது விளங்கப்பெறும். அதுபற்றிச் செயிருறு மிச்சாஞானக் கிரியைகள் என்றார். செயிர் - குற்றம்.

3. பயில்வுறும்: பயிலல் - செய்தல். (செ. 212 பார்).

4. துயிலொடு மஞ்சவத்தைப்படும்: - ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களுடனும் தாத்துவிகங்களுடனுங் கூடி இலலாடத்தானத்தைப் பொருந்தி

விடயங்களை அறிந்து அனுபவித்துநிற்கும் அவதரம் சகலாவத்தை எனப்படும். இங்ஙனம் அறியுந்தன்மையைவிட்டு இலலாடத்தானத்திலிருந்து கீழ் நோக்கிச் சென்று சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளையும் பொருந்தி மூலாதாரத்தை அடையும். இது கீழாலவத்தை எனப்படும். அறியுந்தன்மையை விட்டுக் கீழ்நோக்கிச் சென்று ஐந்தவத்தையுமுறுதலால், 'துயிலொடுமஞ்சவத்தை'' என்றார். (செ. 222 பார்).

5. உண்மை துரியாதீதம் - உயிர், கருவிகளொன்றுமின்றி, மலத்தாலே மறைப்புண்டு, இச்சாஞானக் கிரியைகள் சிறிதும் விளங்காது நிற்கும் கேவலநிலை துரியாதீதமாம். உண்மை - உள்ளது, உளதாதல்.

பொழிப்பு. உயிர் இந்த உடம்பிற்கு வேறாயுள்ளது. உடல்களைப் பொருந்திநின்று அதன் இச்சா ஞானக்கிரியைகள் ஏகதேசமாய் விளங்கப்பெறும். புண்ணிய பாவங்களைச் செய்யும். அப்புண்ணிய பாவங்களின் பயனை அனுபவிக்கும். சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையும்படும். துரியாதீதம் அதன் கேவலநிலையாம்.

இச்செய்யுள் இரண்டுகூறுடையது.

1. உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதாய், (**188-195**).
2. உற்றுச் செயிருறு மிச்சா ஞானச் செய்திகளுடையதாகிப், பயில்வுறும். இன்பத்துன்பப் பலன்களுநுகரும். பார்க்கின் துயிலொடு மஞ்சவத்தைப்படும். உண்மை துரியாதீதம்.

---

## முதலதிகரணம்.

I. உயிரெனப் படுவ திந்த வுடலின் வேறுளதாய், (**188-195**).

இவ்வதிகரணம் பசுவுண்மைக்குப் பிரமாணங் கூறுகின்றது. அஃது அனுமானப்பிரமாணம். உடம்பின்கண் அறியும் பொருள் ஒன்றுளது. அஃது உடம்பின் வேறு, ஐம்பொறியுமன்று, பிராணவாயுவுமன்று, அந்தக்கரணமுமன்று, இவை எல்லாவற்றின் சமுதாயமுமன்று என மறுத்துப், பாரிசேடவளவையால் அஃது ஆன்மா என்று சாதிக்கப்படுகின்றது.

இவ்வதிகரணத்தில் அடங்கிய விஷயங்கள்:—

1. உயிர் உடம்பின்வேறாயுள்ளது, (**188**).
2. உயிர் ஐம்பொறிகளினும் வேறாயுள்ளது, (**189**).
3. உயிர் பிராணவாயுவினும் வேறாயுள்ளது, (**190**).
4. உயிர் அந்தக்கரணங்களினும் வேறாயுள்ளது, (**191**).
   (a). ஆன்ம அறிவு நிகழ்தற்கு அந்தக்கரணங்கள் துணைக்கருவிகள், (**192**).

(*b*). ஆன்ம அறிவு நிகழும் முறைமை, (**193-194**).

5. உயிர் பலபொருட்கூட்டமுமன்று, (**195**).

1. உயிர் உடலின் வேருயுள்ளது.

**188**. உடலின்வே றுயிரே னிந்த வுடலன்ரே வுணர்வதென்னின்
உடல்சவ மான போது முடலினுக் குணர்வுண் டோதான்
உடலினில் வாயுப் போளு லுணர்ச்சியின் றுடலுக் கென்னின்
உடலினில் வாயுப் போகா துறக்கத்து முணர்வ தின்றே.

(இ-ள்). உடலின் வேறு உயிர் என் - இந்த உடம்பின் வேருய் உயிரொன்றுண்டு என்பது எற்றுக்கு,—இந்த உடலன்ரே உணர்வது என்னின் - இந்த உடம்பே அறிவது என்று சொல்லின்,—உடல் சவமான போதும் உடலினுக்கு உணர்வு உண்டோதான் - உடம்பு பிரேதமாய்க் கிடக்கையிலும் அவ்வுடம்புக்கு அறிவுளதோ,—உடலினில் வாயுப் போளுல் உடலுக்கு உணர்ச்சி இன்று என்னின் - இவ்வுடம்பிலுள்ள பிராணவாயு நீங்குமாயின் இவ்வுடம்புக்கு அறிவு நிகழாது என்னின்,—உடலினில் வாயுப்போகாத உறக்கத்தும் உணர்வது இன்று - உடம்பிலுள்ள பிராணவாயு நீங்காத உறக்கத்திலும் அறிவு நிகழ்வதின்று. ஆதலால் அறிவது உடம்பன்று.

குறிப்பு. 1. இச்செய்யுளால் உடம்பே ஆன்மா என்னும் தேகான்மவாதிகள்மதம் மறுத்து, உடம்பின் வேருய் உயிரொன்றுண்டு என்பது சாதிக்கப்பட்டது.

2. போகாதுறக்கத்து:-போகாத என்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற் ருெக்கது.

பொழிப்பு. தேகான்மவாதிகள் உடம்பே அறியும், அவ்வுடம்பின் வேருய் நின்று அறியும் உயிர் என்பதொன்றில்லை என்பர். பிணக்கிடையிலும் உறக்கத்திலும் அறிவு நிகழக் காணுமையால், உடம்பு அறியும் என்பது பொருந்தாது.

2. உயிர் ஐம்பொறிகளினும் வேருயுள்ளது.

**189**. அறிவதைம் பொறியே யென்னி னுறக்கத்தி லறியா வாகும்
அறிவது மொன்ருென் ருக வொன்ருென்ரு யறியு மென்னின்
அறிவுக ளொன்றை யொன்றங் கறிந்திடாவைந்தையுங்கொண்
டறிவ தொன் றுண்ட தான்மா வைம்பொறி யறிந்தி டாவே.

(இ-ள்). ஐம்பொறியே அறிவது என்னின் - ஐம்பொறிகளுமே உடம்பின்கணின்று விடயங்களை அறியும் என்னின்,—உறக்கத்தில் அறியா ஆகும் - உறங்கும்பொழுது அவை அறியமாட்டாவாதலால் அதுவும் பொருந்தாது.

அப்படியன்று, உறக்கத்தில் அவை ஒடுங்கிநிற்கும், நனவின்கண் அறியும்,—அறிவதும் ஒன்றொன்றாக ஒன்றொன்றாய் அறியும் என்னின் - அங்ஙனம் நனவின்கண் அறிவதும் ஒவ்வொரு பொறியாக ஒவ்வொரு விடயத்தை அறியும் என்னின்,—அறிவுகள் அங்கு ஒன்றை ஒன்று அறிந்திடா - அங்ஙனமாயினும் பொறிகள் தத்தம் விடயத்தை அறியும்பொழுது தாம் ஒன்றையொன்று அறியமாட்டா. ஆதலால் அதுவும் பொருந்தாது,—ஐந்தையும் கொண்டு அறிவது ஒன்று உண்டு - இவ்வைந்து பொறிகளாலும் விடயங்கள் ஐந்தையும் அறிவது ஒன்றுளது,—அது ஆன்மா - அதுவே ஆன்மாவாம்,—ஐம்பொறி அறிந்திடா - ஐம்பொறிகளும் தாமாக அறியமாட்டா.

குறிப்பு. ஐம்பொறிகள் அறியுஞ் சத்தியுடையனவாயின், ஒவ்வொரு பொறியும் தத்தம் விடயங்களை அறிதலோடு, மற்றைப் பொறிகளையும் அப்பொறிகளால் அறியப்படும் விடயங்களையும் அறிதல்வேண்டும். அங்ஙனமின்மையால், அவை அறியும் என்பது கூடாது.

பொழிப்பு. இந்திரியான்மவாதிகள் ஐம்பொறிகளே விடயங்களை அறியும் என்பர். அவை உறக்கத்தில் விடயங்களை அறியாதிருத்தலினாலும், நனவின்கண் தத்தம் விடயத்தை அறியுமிடத்து ஒன்றையொன்று அறியாதிருத்தலினாலும் அவர் கூற்றுப் பொருந்தாது. இவ்வைம்பொறிகளையுங் கொண்டு அறியும் பொருளே ஆன்மாவாம். ஐம்பொறிகளுந் தாமாக அறியுஞ் சத்தியுடையனவாகா.

### 3. உயிர் பிராணவாயுவினும் வேறாயுள்ளது.

**190.** அறிந்திடும் பிராண வாயு வடங்குதல் விடுதல் செய்தால்
அறிந்திடா துடனு றக்கத் தறிவின்மை கரண மின்மை
அறிந்திடு முதலி யாகி னதுநிற்கக் கரணம் போகா
அறிந்திடும் பிராணன் றன்னை யடக்கியும் விட்டு மான்மா.

(இ-ள்). பிராணவாயு அடங்குதல் விடுதல் செய்தால் அறிந்திடும்-பிராணவாயுவானது உள்ளேபோய் அடங்குதலும் வெளியே வருதலுமாக இயங்குமாயின் அஃது ஐம்பொறிகளையுங்கொண்டு விடயங்களை அறியும் என்னின்,—உடல் உறக்கத்து அறிந்திடாது - உடம்பு உறங்குமிடத்து அப்பிராணவாயு இயங்கினும் அது விடயங்களை அறியமாட்டாது. ஆதலால் அதுவும் பொருந்தாது,—அறிவு இன்மை கரணம் இன்மை - அவ்வறிவின்மைக்குக் காரணம் கருவிகள் தொழிற்படாமை என்று சொல்லின்,—அறிந்திடும் முதலியாகின் - அப்பிராணவாயுவே அறியும் முதன்மையுடையதாயின்,—அது நிற்கக் கரணம் போகா - உறக்கத்தில் அப் பிராணவாயு தொழிற்பட்டு நிற்க அக்கருவிகள் தொழிற்படாது நீங்கா. ஆதலால்,—பிராணன் தன்னை அடக்கியும் விட்டும் ஆன்மா அறிந்திடும் - பிராணவாயுவை உள்ளே அடக்கியும் வெளியே விட்டும் அதற்கு வேறாயுள்ள ஆன்மாவே விடயங்களை அறிவதாகும்.

பொழிப்பு. பிராணவாயு இயங்குமிடத்து, அது ஐம்பொறிகளையும் கொண்டு விடயங்களை அறியும் என்பர் பிராணான்மவாதிகள். உடம்பு உறங்குமிடத்துப் பிராணவாயு இயங்கினும் அது விடயங்களை அறியாதாதலால், அவர்கூற்றும் பொருந்தாது. பின்னும் அவர், அவ்வறியாமைக்குக் காரணம் ஐம்பொறிகள் தொழிற்படாமை என்பர். பிராணவாயுவே அறியுந்தன்மையுடைய கருத்தாவாயின், உறக்கத்தில் அது தொழிற்பட்டு நிற்கவும், கருவிகள் தொழிற்படாது நிற்றல் கூடாவாம். ஆதலாற் பிராணவாயுவை அடக்கியும் விட்டும் அதற்கு வேறாயுள்ள ஆன்மாவே விடயங்களை அறிவதாகும்.

## நான்காஞ் சூத்திரம்.

(தொடர்பு.)

மூன்றாஞ்சூத்திரத்தின் முதற்செய்யுளிலே தொகுத்துக் கூறினவற்றில் ஒருபகுதியை இச்சூத்திரம் வகுத்துக்கூறுதலால், இஃது அச்சூத்திரத்தின் தொடர்ச்சியாகும்.

4. உயிர் அந்தக்கரணங்களின் வேறாயுள்ளது.

**191.** உணர்வன கரண மென்னி னொன்றையொன் றுணரா வெவ்வே
றணைதருஞ் செயல்க ணான்கு மறிந்தவை யடக்கி யாக்கிப்
புணருமுட் கருவி யாக்கிப் புறக்கரு வியிலும் போக்கி
இணைதரு மிவற்றின் வேறா யானென தென்ப தான்மா.

(இ-ள்). கரணம் உணர்வன என்னின் - அந்தக்கரணங்களே அறியும் என்னின்,—ஒன்றை ஒன்று உணரா - அவை ஒன்றனை யொன்று அறியா,—வெவ்வேறு செயல்கள் அணைதரும் - அன்றியும் அவை ஒன்று அறிந்ததை மற்றொன்று அறிதலின்றி வேறுவேறு தொழில்களைப் பொருந்தும். ஆதலால் அவை அறியும் என்பதும் பொருந்தாது,—நான்கும் அறிந்து-அவ்வந்தக்கரணங்கள் நான்கினையும் அறிந்து,—அவை அடக்கிப் புணரும் உட்கருவி ஆக்கி - அவற்றை வேண்டுமிடத்து அடக்கிப் பொருந்திய உட்கரணங்களாக்கியும்,—ஆக்கிப் புறக்கருவியிலும் போக்கி - விருத்திசெய்து புறக்கருவிகளிலுஞ் செலுத்தியும்,—இணைதரும் இவற்றின் வேறாய் - தன்னோடு இயைந்து நிற்கும் இக்கரணங்களுக்கு வேறாய்,—யான் எனது என்பது - யான் என்றும் எனது என்றும் செருக்குற்று நிற்பது,—ஆன்மா - ஆன்மாவாம்.

குறிப்பு. 1. உணர்வன கரணமென்னி னொன்றையொன்றுணரா:-அந்தக்கரணான்மவாதிகள் மனம் சித்தம் அகங்காரம் புத்தி என்னும் அந்தக்கரணங்களே அறியும். இவற்றின் வேறாக ஆன்மா என்பது ஒன்றில்லை என்பர். மனம் அகங்காரத்தையும் அதன் தொழிலையும் அறியாது. அகங்காரம்

மனத்தையும் அதன் தொழிலையும் அறியாது. இங்ஙனம் அந்தக்கரணங்கள் ஒன்றையொன்றறியாமலும், ஒன்றின் தொழிலை மற்றொன்று அறியாமலும் இருத்தலால், அவை ஆன்மாவாகா.

2. வெவ்வேறணைதருஞ் செயல்கள் - மனம் ஐயப்படுதலும், சித்தம் சிந்தித்தலும், புத்தி நிச்சயித்தலும், அகங்காரம் அபிமானித்தலுமாகிய வெவ்வேறு தொழில்கள். அணைதரல் - பொருந்துதல்.

3. அவையடக்கிப் புணருமுட்கருவியாக்கி - இந்திரியங்கள் வாயிலாகச் சத்தாதி விடயங்களை அறிந்து பற்றி அவற்றில் அழுந்தாது தடுத்து, அக்கரணங்களை அகக் கருவிகளாக்கி.

4. ஆக்கிப் புறக்கருவியினும் போக்கி:-ஆக்குதல் - விருத்திசெய்தல். புறக்கருவிகள் - இந்திரியங்கள்.

5. யான் எனது - செ. 149. பார்.

பொழிப்பு. அந்தக்கரணங்களே அறியும் என்னின், அவை ஒன்றையொன்றறியா. அன்றியும், அவற்றுள் ஒன்றறிந்தவற்றை மற்றொன்று அறியாது வெவ்வேறு தொழில்களைப் பொருந்தியிருக்கும் ஆதலால் அவை அறியும் என்பது பொருந்தாது. அந்தக்கரணங்கள் நான்கினையும் அறிந்து அவற்றை விடயங்களிற் செல்லவொட்டாது தடுத்தும், விடயங்களிற் செலுத்தியும், அவற்றின் வேறாய் யான் என்றும் எனது என்றும் நிற்பது ஆன்மாவாம்.

(a). ஆன்ம அறிவு நிகழ்தற்கு அந்தக்கரணங்கள் துணைக்கருவிகள்.

192. கருவியா மனமும் புத்தி யகங்காரஞ் சித்த நான்கும்
மருவியான் மாவே யென்ன வருந்தீப மெனத்தெ ரிந்தங்
கொருவியான் மாவி னுண்மை யுணர்ந்தவர் தமை யுணர்ந்தோர்
தருமிது பசுஞா னம்பின் சிவஞானந் தனக்கு மேலாம்.

(இ-ள்). கருவியாம் மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும் - அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கும்,—மருவி - ஆன்மாவைப் பொருந்தி,—ஆன்மாவே என்ன வரும் - இவையே ஆன்மா என்னும்படி ஒற்றித்து நிற்கும்,—தீபம் எனத் தெரிந்து அங்கு ஒருவி - கண் பொருள்களைக் காணுதற்கு விளக்குக் கருவியாதல் போல ஆன்மா விடயங்களை அறிதற்கு இவை கருவிகளாம் என அறிந்து, அவற்றினின்று நீங்கி,—ஆன்மாவின் உண்மை உணர்ந்தவர் - அவ்வான்மாவின் இயல்பை ஆராய்ந்தறிந்தவர்—தமை உணர்ந்தோர் - ஆன்மாவாகிய தமது இயல்பை அறிந்தோராவர்,—தரும் இது பசு ஞானம் - இங்ஙனம் ஆராய்ந்தறியும் அறிவு பசுஞானமாம்,—பின் சிவஞானம் தனக்கு மேலாம் - அதன்பின் உதிக்கும் பதிஞானம் அப்பசுஞானத்துக்கு மேலானதாம்.

குறிப்பு. 1. தீபமெனத் தெரிந்து:-கண் ஒருபொருளைக் காண்பதற்கு விளக்குத் துணைக்கருவியாயிருத்தல்போல ஆன்மா விடயங்களை அறிதற்கு மனம்முதலிய அந்தக்கரணங்களும் துணைக்கருவிகளாயிருத்தலை அறிந்து.

2. பசுஞானம் - ஆன்மசொரூபத்தை அறியும் அறிவு.

3. சிவஞானம் - பதிஞானம், திருவருள்.

பொழிப்பு. அந்தக்கரணங்கள் ஆன்மாவைப் பொருந்தி அவையே ஆன்மா என்னும்படி அவ்வான்மாவோடு ஒற்றித்துநிற்கும். கண்ணுக்கு விளக்குப்போல, அவை ஆன்மா விடயங்களை அறிதற்குத் துணைக்கருவிகளாம் என்பதை அறிந்து, அவற்றைவிட்டு ஆன்மவியல்பை அறிபவர் தமது இயல்பை அறிந்தோராவர். இங்ஙனம் அறிதல் பசுஞானமாம். சிவஞானம் இதற்கு மேலானதாம்.

(b). ஆன்ம அறிவு நிகழும் முறைமை.

**193.** அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதஞ் சித்தமோ டுள்ள மாகும்
ஒவ்வெனு மெழுத்தா மைந்து முணர்வுதித் தொடுங்கு மாறு
பவ்வமுந் திரையும் போலும் பார்க்கிலிப் பண்புந் தோன்றும்.

(இ - ள்). அவ்வுடன் உவ்வும் மவ்வும் - அகாரமும் உகாரமும் மகாரமும்,—அகங்காரம் புத்தி மனங்கள் - முறையே அகங்காரம் புத்தி மனம் என்னும் கருவிகளையும்,—செவ்விய விந்து நாதம் - செம்மையான விந்துவும் நாதமும்,—சித்தமோடு உள்ளம் ஆகும் - சித்தம் உள்ளம் என்னும் கருவிகளையும் செலுத்துவதாகும்,—ஐந்தும் ஒவ்வெனும் எழுத்தாம் - அகரம் முதலிய ஐந்தும் சமட்டியிற் பிரணவமாம்,—உணர்வு உதித்து ஒடுங்குமாறு - இவ்வைந்தெழுத்துக்களாலும் உயிரினிடத்து அறிவு மாறி மாறித் தோன்றி ஒடுங்கும் முறைமை,—பவ்வமும் திரையும் போலும் - கடலின்கண்ணே திரை புதிது புதிதாகத் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போலாம்,—பார்க்கில் இப்பண்பும் தோன்றும் - யோகப்பயிற்சி செய்து ஆராயுமிடத்து எழுத்துக்கள் கரணங்களைச் செலுத்தும் முறைமையன்றி அறிவு தோன்றி ஒடுங்கும் முறைமையும் இனிது விளங்கும்.

குறிப்பு. 1. அவ்வுடனுவ்வுமவ்வு......சித்தமோடுள்ளமாகும்: -வாக்குக்களால் ஆன்மாவுக்கு அறிவு உண்டாகும் என்று முன்னே கூறியிருக்க (செ. 46), இச்செய்யுளில் அகரம் முதலிய அக்கரங்கள் அந்தக்கரணங்களைச் செலுத்துதலினால் ஆன்ம அறிவு உண்டாகும் என்று கூறியது என்னையெனின், அவ்வாக்குக்கள் இவ்வக்கரங்களின் வடிவாய் நின்று அந்தக்கரணங்களைச் செலுத்துதல் பற்றி அவ்வாறு கூறப்பட்டதாம். வைகரிவாக்கு அகரவடிவாயும், மத்திமைவாக்கு உகரவடிவாயும், பைசந்திவாக்கு மகரவடிவாயும், சூக்குமைவாக்கு விந்துவடிவாயும், அதிசூக்குமைவாக்கு நாதவடிவாயும், இவையாவும் ஒலிவடிவாயும் இருக்கும்.

இச்சா ஞானக்கிரியைகள் என்னும் சிவசத்திகள் பிரமா முதலிய பஞ்ச மூர்த்திகளையுஞ் செலுத்த, இப் பஞ்சமூர்த்திகள் ஒலிவடிவான அகரம் முதலிய அக்கரங்களையுஞ் செலுத்த, இந்த அக்கரங்கங்கள் அகங்காரம் முதலிய அந்தக்கரணங்களையுஞ் செலுத்த, ஆன்மா விடயங்களில் இச்சையுடையதாய் அவற்றை இடைவிடாது சிந்தித்துப் பற்றி நிச்சயித்து அபிமானித்து நிற்கும். உள்ளம் - புருடதத்துவம். "அகார வுகார மகங்காரம் புத்தி மகார மனம்" என்று சிவஞானபோதமும் (சி. போ. சூ. 4. வெ. 3), "மன்னுமகார மனஞ் செலுத்தும் புத்தியினை, உன்னுமுகார முபசரிக்கும் - முன்னாகும், ஆங்காரந்தன்னை யகாரஞ்செலுத்தியிடும்" என்று துகளறுபோதமும் (துகளறு. செ. 14) கூறுதல் பற்றி, மேற்கூறியவாறு எதிர் நிரனிறைமுறையிற் பொருள்கொள்ளப்பட்டது. இவ்வாறின்றி, அகாரம் மனத்தையும், உகாரம் புத்தியையும், மகாரம் அகங்காரத்தையும் செலுத்தும் என்றும் பொருள்கொள்வர். (மறைஞா. சிவாக்கிர. ஞானப்பிர. நிரம்பவ).

2. ஓவ்வெனுமெழுத்தாமைந்தும்: - பிரணவம் சமட்டிப் பிரணவம் வியட்டிப் பிரணவம் என இருவகைப்படும். சமட்டிப் பிரணவம் "ஓங்காரம்" என நிற்பது. வியட்டிப் பிரணவம் அகார உகார மகார விந்து நாதம் என நிற்பது. சமட்டி - தொகுத்துச் சொல்வது. வியட்டி — பகுத்துச் சொல்வது.

3. உணர்வுதித்தொடுங்குமாறு பவ்வமுந் திரையும்போலும்:-சமுத்திரத்தின்கண் புதிதுபுதிதாய் அலை தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போல, ஆன்ம அறிவுங் கணந்தோறும் நினைப்பும் மறப்புமாய்த் தோன்றியும் ஒடுங்கியும் வருவதாயிருக்கும். இந்த நினைப்பு மறப்புக்கள் சகலகேவலம் எனப்படும்.

பொழிப்பு: அகாரம் முதலிய அக்கரங்கள் அகங்காரம் முதலிய அந்தக்கரணங்களைச் செலுத்துதலினால், ஆன்மாவுக்கு விடய ஞானம் உண்டாகும். இந்த ஞானமும் கணந்தோறும் புதிதுபுதிதாய்த் தோன்றுவதும் ஒடுங்குவதுமாயிருக்கும்.

இதுவுமது.

**194.** அயனரி யரனு மீசர் சதாசிவ மதிதெய் வங்கள்
உயவரு மவ்வோ டுவ்வு மவ்விந்து நாதங் கட்குப்
பயனுறு மஞ்சி லான்மாப் பரவிடி லசித்தாம் பார்க்கிற்
சயமுறு வளியி ரண்டுந் தவிர்த்துநிற் றூனுந் தோன்றும்.

(இ - ள்). உயவரும் அவ்வோடு உவ்வும் மவிந்து நாதங்கட்கு-மேற்கூறியவாறு அகங்காரம் முதலிய கரணங்களைச் செலுத்தும் அகார உகார மகார விந்து நாதங்களாகிய ஐந்து அக்கரங்களுக்கும்,—அயன் அரி அரனும் ஈசர் சதாசிவம் அதிதெய்வங்கள் - முறையே பிரமா விட்டுணு உருத்திரன் மகேசுவரன் சதாசிவன் என்னும் ஐவரும் அதிதெய்வங்களாம்,—அஞ்சில் ஆன்மாப் பரவிடில் பயன் உறும் - இங்ஙனம் அக்கரங்களாலும் தெய்வங்களா

லும் செலுத்தப்படும் கரணங்கள் ஐந்தினோடு ஆன்மாவானது பொருந்திப் பிரவர்த்திக்குமிடத்து அறிதற்பயனை எய்தும்,—பார்க்கின் அசித்தாம்-இவை ஆராயுமிடத்துச் சடப்பொருள்களாம்,—சயம் உறுவளி இரண்டும் தவிர்த்து உறின் - இடைகலை பிங்கலை நாடிகள் வழியாய் ஓடும் வலிபொருந்திய வாயு இரண்டினையுந் தடுத்துச் சுழுமுனைநாடியிற் செலுத்தி யோகப் பயிற்சிசெய்யின்,—தானும் தோன்றும் - இவ்வியல்பும் விளங்கும்.

குறிப்பு. 1. அயனரியரனும் - சுத்தவித்தையில் வைகும் பிரமா விட்டுணு உருத்திரர்கள். இவர் அகார உகார மகாரங்களுக்கு அதிதெய்வங்களாய் அவற்றை அதிட்டித்து நிற்பர்.

2. உய்யவரும் என்றது உயவரும் என விகாரமாயிற்று. உய்தல்-சீவித்தல்.

3. அஞ்சில் - அக்கரங்களாலும் அதிதெய்வங்களாலும் அதிட்டிக்கப்படும் கரணங்களோடு.

4. பரவுதல் - அந்தக்கரணங்கள் ஐம்பொறிகள்வாயிலாக விடயங்களிற் பிரவர்த்தித்தல்.

5. தானும்-பவ்வமுந் திரையும்போலும் உணர்வுதித்தொடுங்கும் முறைமையன்றி அசித்தாந்தன்மையுந் தோன்றும் என்பது.

பொழிப்பு. அகரம் முதலிய அக்கரங்கள் ஐந்தையும் அயன் முதலிய ஐவரும் அதிதெய்வங்களாய் நின்று அதிட்டிப்பர். இவ்வாறு அக்கரங்களாலும் தெய்வங்களாலும் செலுத்தப்படுங் கரணங்களோடு ஆன்மா கூடியவிடத்து விடயங்களை அறியும். இவை ஆராயுமிடத்துச் சடப்பொருளாம். இவ்வியல்பு யோகப் பயிற்சியுடையார்க்கு இனிது விளங்கும்.

### 5. உயிர் பலபொருட்கூட்டமன்று.

195. ஆன்மாவின் வடிவு தானுமநேகார்த்தக் கூட்ட மென்னிற்
பார்ப்பார்கட் கான்மா வின்றாய்ப் பலபொருளுண்மை யாகுஞ்
சேர்ப்பாய பலவே யுண்மை யென்றிடிற் சென்றி வற்றை [மே.
ஓர்ப்பான்வே றுணர்வோர்க் கெல்லா முணர்பொருள் வேறதா

(இ-ள்). ஆன்மாவின் வடிவுதானும் - ஆன்ம சொரூபமும்,—அநேக அர்த்தக் கூட்டம் என்னின் - அந்தக்கரணங்கள் பிராணவாயு முதலிய பல பொருள்களின் கூட்டம் என்னின்,—பார்ப்பார்கட்கு ஆன்மா இன்றாய்ப் பலபொருள் உண்மை ஆகும் - ஆராய்பவர்களுக்கு ஆன்மா என ஒரு பொருள் இல்லதாய் அப் பலபொருள்களின் கூட்டமே ஆன்மசொரூபமாகும். கூட்டம் என ஒரு பொருளின்மையால் அது பொருந்தாது,—சேர்ப்பாய பலவே உண்மை என்றிடின் - கூட்டமான அந்தக்கரணங்கள் முதலிய பல பொருள்களே ஆன்மசொரூபம் என்று சொல்லின்,—உணர்வோர்க்கு எல்லாம் - அறிபவரனைவர்க்கும்,—இவற்றைச் சென்று ஓர்ப்பான் வேறு - இப்

பொருள்களைப் பொருந்தி அறிபவனுகிய ஆன்மா வேருயும்—உணர்பொருள் வேறதாம்-அறியப்படும் அப்பொருள்கள் வேருயும் இருத்தலின் அதுவும் பொருந்தாது, ஆதலாற் பல பொருளின் கூட்டம் ஆன்மாவாதல் கூடாது.

குறிப்பு. உடம்பு இந்திரியம் பிராணவாயு அந்தக்கரணங்கள் என்னும் இவற்றுள் ஒவ்வொன்றே ஆன்மாவாதல் பொருந்தாதென்று கூறியது பொருந்தும். அவற்றுள் ஒன்று குறைந்தவிடத்தும் அறிவு நிகழாமையானும், எல்லாங் கூடியவிடத்து அது நிகழ்தலானும், அவையனைத்துங்கூடிய சமுதாயமே ஆன்மாவாதல் அமையும் எனச் சமுதாயவாதிகளாகிய சௌத்திராந்திகரும் வைபாடிகரும் கூறுவர். சமுதாயம்-கூட்டம்.

பொழிப்பு. அந்தக்கரணங்கள் முதலிய பல பொருட்கூட்டமே ஆன்ம சொரூபம் என்று சமுதாயவாதிகள் கூறின், பலபொருள்களின் கூட்டம் ஒருபொருளாகாமையால், அது பொருந்தாது. கூடிநிற்பனவாய பல பொருள்களே ஆன்மசொரூபம் என்னின், அப்பொருள்கள் வேருயும் அப்பொருள்களை அறியும் ஆன்மா வேருயுமிருத்தலின், அதுவும் பொருந்தாது ஆதலால் ஆன்மா பலபொருட் கூட்டமன்று.

---

## இரண்டாமதிகரணம்.

உற்றுச் செயிருறு மிச்சாஞானச் செய்திகளுடையதாகிப் பயில்வுறும். இன்பத்துன்பப் பலன்களு நுகரும். பார்க்கிற்றுயிலோடு மஞ்சவத்தைப் படுமுண்மை துரியாதீதம். இவ்வதிகரணம் பசுவிலக்கணங் கூறுகின்றது. இஃது இரண்டுபிரிவுகளாகப் பிரித்துப் பொருள்கூறப்படுகின்றது.

I. உற்றுச் செயிருறு மிச்சாஞானச் செய்திகளுடையதாகிப் பயில்வுறும். இன்பத்துன்பப்பலன்களு நுகரும். (196-221).

II. துயிலொடு மஞ்சவத்தைப்படுமுண்மை துரியாதீதம். (222-230).

I. உற்றுச் செயிருறு மிச்சாஞானச் செய்திகளுடையதாகிப் பயில்வுறும். இன்பத்துன்பப் பலன்களு நுகரும். (196-221).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. பரமதத்தவர்கூறும் ஆன்மவிலக்கணங்களும் அவற்றின் மறுப்பும், (196-209).

(a). பரிணமவாதிகள்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (196).
(b). சாங்கியர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (197-198).
(c). பௌராணிகர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (199-200).
(d). சைவர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (201-202).
(e). பாதஞ்சலர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (203).

(*f*). வைசேடிகர் முதலியோர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (**204**).

(*g*). பாஞ்சராத்திரிகள்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்,(**205-206**).

(*h*). சமணர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (**207**).

(*i*). பட்டாசாரியர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும், (**208**).

(*j*). ஐக்கியவாதிகள் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்,(**209**).

2. சைவசித்தாந்திகள்கூறும் ஆன்மவிலக்கணம், (**210**).

3. உயிர், உடல்களைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் விளங்கப்பெறும் முறைமை, (**211**).

4. உயிர் உடல்களைப்பொருந்திப் புண்ணியபாவங்களைச் செய்து இன்பத்துன்பங்கள் நுகரும் முறைமை, (**212**).

(*a*). உடல்கள் பஞ்சகோசங்கள். அவற்றோடு உயிர் ஒன்றாயும் வேறாயும் நிற்கும், (**213**).

(*b*). மேலதனை உவமைமுகத்தால் விளக்கல், (**214**).

(*c*). உயிர் பஞ்சகோசங்களின் வேறாதலை விளக்கல், (**215-218**).

(*d*). உயிர் பஞ்சகோசங்களின் வேறாதலை வலியுறுத்தல்,(**219-220**)

(*e*). உயிர் பஞ்சகோசங்களோடு ஒன்றாய் நிற்கும் முறைமையை விளக்குதல், (**221**).

1. பரமதத்தவர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும். (**196-209**).

(*a*). பரிணாமவாதிகள்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

**196**. அறிவிச்சை செயல்க ளெல்லா மடைந்தனல் வெம்மை யும்போ
குறியுற்றங் கநேகா நேக குணகுணி பாவ மாகி [ற்
நெறியுற்று நிற்கு மென்னி னிகழ்புலன் கரண மெல்லாஞ்
செறிவுற்றங் கறிவு கொள்ள வேண்டுமோ சீவ னார்க்கே.

(இ-ள்). அறிவு இச்சை செயல்கள் எல்லாம் அடைந்து - (பிரமம்) ஞானேச்சாக்கிரியைகள் கரணங்கள் எல்லாவற்றையும் பொருந்தி,—அனல் வெம்மையும் போல் குறி உற்று - அக்கினியும் சூடும் போல அவற்றோடு பிரிவின்றிச் சூக்குமதேகத்தைப் பொருந்தி,—அங்கு அநேக அநேக குணகுணி பாவம் ஆகி - அச் சூக்குமதேகத்தினின்றும் அனேக குணத்தன்மையும் அனேக குணித்தன்மையுமுடைய சீவர்களும் சடப்பொருள்களுமாகி,—நெறி உற்று நிற்கும் என்னின் - இந்த முறைமை பொருந்தி நின்று விடயங்களை அறியும் என்று சொல்லின்,—சீவனார்க்கு - பிரமத்தின் பரிணாமமாய்த் தோன்றிய சீவர்களுக்கு,—நிகழ் புலன் கரணம் எல்லாம் செறிவு உற்று அங்கு அறிவு கொள்ள வேண்டுமோ - விளங்குகின்ற பொறி கரணங்கள் முதலிய கருவிகளைப் பொருந்தி நின்று விடயங்களை அறிந்து அனுபவிக்க வேண்டுமோ? வேண்டுவதின்று.

குறிப்பு. 1. பரிணமவாதிகள் சித்தாகிய பிரமமே சித்தும் அசித்துமாகிய பிரபஞ்சமாய்த் தோன்றி அவற்றுடன் அபேதமாகவும் பேதமாகவும் நிற்கும் என்பர். இவர் ஏகான்மவாதிகளுள் ஒருசாரார். பாற்கரியர் என்றுஞ் சொல்லப்படுவர்.

2. குறியுற்றங்கேகாநேக குணகுணிபாவமாகி என்றும் பாடம்.

போழிப்பு. பிரமம் சீவர்களும் சடப்பொருள்களுமாகப் பரிணமித்து அவற்றோடு அபேதமும் பேதமுமாய் நிற்கும் என்னின், அச்சீவர்கள் பொறி கரணங்களையின்றி அறியமாட்டாமைக்குக் காரணம் யாது? ஆதலால் அஃது பொருந்துவதன்றாம்.

(b). சாங்கியர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

197. குணங்களை யின்றி யொன்றுங் குறியுடைத் தான்மா வென்னின்
இணங்கிடா விச்சா ஞானக் கிரியைக ளிவையு டற்கட் [ன்
பிணங்கிடுஞ் சந்நி திக்க ணெனிற்பிணத் துறக்கத் தின்றும்
உணங்கிடுங் கரண மென்னிற் சந்நிதி யொழிந்த தன்றே.

(இ - ள்). குணங்களை இன்றி ஒன்றும் குறி உடைத்து ஆன்மா என்னின் - இச்சாஞானக் கிரியைகளாகிய குணங்களையின்றித் தனியே அறிவு மாத்திரையாய் நிற்கும் இயல்புடையது ஆன்மா என்னின்,— இச்சாஞானக் கிரியைகள் இணங்கிடா - அறிவுமாத்திரம் நிகழ்வதேயன்றி அறிவிச்சை செயல்கள் மூன்றும் நிகழா. ஆதலால் அது பொருந்தாது,—இவை இவ்விச்சா ஞானக்கிரியைகள்,—சந்நிதிக்கண் உடற்கண் பிணங்கிடும் எனின் - வியாபகமாயிருக்கும் உயிரின் சந்நிதியிலே உடலினிடத்தே தொழிற்படும் என்னின்,—பிணத்து உறக்கத்து இன்றும் - உடல் பிணமாய்க்கிடக்குமிடத்தும் உறங்கும் பொழுதும் இவை தொழிற்படுதலில்லையாம். ஆதலால் அதுவும் பொருந்தாது,—கரணம் உணங்கிடும் என்னின் - பிணக்கிடக்கையிலும் உறக்கத்திலும் கரணங்கள் தொழிற்படாமையால் இச்சா ஞானக் கிரியைகளும் நிகழாதிருக்கும் என்னின்,—சந்நிதி ஒழிந்தது அன்றே;- உயிரின் சந்நிதியிலே இவை தொழிற்படும் என்பது இல்லதாகும்.

குறிப்பு. 1. சந்நிதிக்கண் - ஆன்மா வியாபகமாய் அறிவுமாத்திரமாயிருக்கும், அங்ஙனம் வியாபகமாயிருக்கும் ஆன்ம சந்நிதியிலே உடலின்கண் இச்சாஞானக்கிரியைகள் தொழிற்படும் என்பர் சாங்கியர். ஆன்மா வியாபகமாயிருந்தும், உடல் சவமானபோதும் சுழுத்தியவத்தை பொருந்தின உறக்கத்திலும் இச்சாஞானக் கிரியைகள் தொழிற்படாமையால் அதுவும் பொருந்தாது.

2. இணங்கல்-பொருந்துதல். பிணங்கல்-நெருங்கல், தொழிற்படுதல், உணங்கல்-வாடுதல், செயலற்றிருத்தல்.

போழிப்பு. குணகுணித்தன்மையின்றிக் கேவலம் அறிவுமாத்திரமாய் நிற்பது உயிரியல்பு என்பர் சாங்கியர். அறிவு மாத்திரமன்றி அறிவிச்சை

செயல்கள் மூன்றும் உடலிலே நிகழக் காண்டலால் அதுவும் பொருந்தா தென மறுக்க, அவ்வறிவிச்சை செயல்கள் ஆன்ம சந்நிதியில் உடலின்கண் நிகழும் என்பர். உடல் சவமானபோதும் உறக்கத்திலும் அவை நிகழக்காணாமையால் அதுவும் பொருந்தாதென மறுக்க, பிணத்தும் உறக்கத்தும் கரணங்கள் தொழிற்படாமையால் இவைகளும் நிகழாதிருந்தன என்பர். கரணங்கள் தொழிற்படுதலால் இவை நிகழுமாயின், ஆன்மசந்நிதியில் இவை நிகழும் என்பது இல்லையாய்முடியும்.

இதுவுமது.

198. சந்நிதி குணம தாகுந் தானென்போ லென்னிற் காந்தம்
முன்னிரும் பென்று மீர்க்கு முறைமையு முண் டகற்ற லின்றாம்
உன்னுத லொடுங்க லோட லிருத்தலே கிடத்த னிற்றல்
என்னுமித் தொழில்கண் மற்று மியற்றுவ தான்மா வென்னே.

(இ-ள்). சந்நிதி குணமது ஆகும் - சந்நிதி என்பது உயிரின்முன் உடம்பு தொழிற்படுதற்கு ஏதுவாய் அவ்வுயிரினிடத்திலிருக்கும் ஒரு விசேட குணமாகும்,—தான் என்போல் என்னின் - அஃது எதுபோல என்னின், —காந்தம் முன் இரும்பு என்றாய் - காந்தக்கல்லின்முன் இரும்பு தொழிற்படுதற்கு ஏதுவாய் அக் காந்தக்கல்லினிடத்திலிருக்கும் ஒரு விசேடகுணம் போலும் என்று கூறினாய்,—ஈர்க்கும் முறைமை உண்டு அகற்றல் இன்றாம்- அங்ஙனமாயின் காந்தத்துக்கு இரும்பை இழுக்கும் ஒருகுணம் உண்டன்றி அகற்றலாகிய மாறுபட்ட குணம் இன்றாம்,—ஆன்மா உன்னுதல் ஒடுங்கல் ஓடல் இருத்தல் கிடத்தல் நிற்றல் என்னும் இத்தொழில்கள் மற்றும் இயற்றுவது என்னே - ஆன்மா அவ்வாறின்றி நினைத்தல் மறத்தல் ஓடல் இருத்தல் கிடத்தல் நிற்றல் என்னும் மாறுபட்ட தொழில்களும் பிறவுஞ் செய்வது என்னே? ஆதலால் சந்நிதி ஆன்மாவுக்குரிய விசேட குணம் என்பது பொருந்தாது.

பொழிப்பு. சந்நிதி என்பது உயிரின் முன் உடம்பு தொழிற்படுதற்கு ஏதுவாய் அவ்வுயிருக்குளதாயிருக்கும் ஒரு விசேடகுணமாம். அது காந்தத்தின்முன் இரும்பு தொழிற்படுதற்கு ஏதுவாய் அக்காந்தத்துக்கு உளதாயிருக்கும் சத்திபோன்றதாம் என்னின், காந்தத்துக்கு இரும்பை இழுக்குஞ் சத்தியன்றி அகற்றலாகிய மாறுபட்ட சத்தியின்று. உயிர் அவ்வாறின்றி மாறுபட்ட தொழில்களைச் செய்யும். ஆதலால் அதுவும் பொருந்தாது.

(c). பவுராணிகர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

199. உருவுயி ரென்னி னிந்த வுடலினுட் காண வேண்டும்
வருவது பரிணா மத்தா யநித்தமாம் பூத மாகுங்
கருவினி னுழையு மாறுங் காட்டிட வேண்டுங் கண்ணின்
மருவிடா தென்னி னுன்றன் வாயினா லுருவன் றென்னே.

(இ - ள்). உயிர் உரு என்னின் - உயிரானது உருவப்பொருள் என்று சொல்லின்,—இந்த உடலினுள் காணவேண்டும் - இவ்வுடம்பினுள்ளே அவ்வுருவம் காணப்படவேண்டும்,—வருவது பரிணமத்தாய் அநித்தமாம் பூதமாகும் - அன்றியும் அங்ஙனம் உருவாய்த் தோன்றுவது பரிணமமுடையதாய் அழிவெய்தும் பூதப்பொருள்களுள் ஒன்றாகும்,—கருவினில் நுழையுமாறும் காட்டிடவேண்டும் - அஃதன்றி அவ்வுரு மாதாவின் கருப்பத்தினுட்புகுதல் எவ்வாறென்றும் தெரிவிக்கவேண்டும்,—கண்ணின் மருவிடாது என்னின் - உருவடிவாயினும் கண்ணுக்குப் புலப்படாது என்னின்,—உன்றன்வாயினல் உரு அன்று என்னே - (விழிமாத்திரத்தாற் கவரப்படுங் குணமே உருவம் ஆகலின்) உனது வாயினல் அஃது உருவமன்று என மொழிவாயாக.

பொழிப்பு. பவுராணிகர் உயிர் உருவப்பொருள் என்பர். அப்படியாயின், உருவாகிய இவ்வுடம்பு காணப்படுதல்போல, இவ்வுடம்பினுள் உயிர் வடிவமுங் காணப்படவேண்டும். அன்றியும் அஃது அழிவெய்தும் பூதப்பொருள்களுள் ஒன்றாகும். கருப்பையுள்ளே நுழைதலையுங் காட்டவேண்டும். அஃது உருவடிவாயினும், கண்ணுக்குப் புலப்படாதெனின், அஃது உருவப்பொருளன்று என்றலே பொருத்தமாம்.

இதுவுமது.

200 சூக்கும வுருவ தென்னிற் றூலகா ரணமு தாகும்
ஆக்கிய மனாதி தன்மாத் திரைவடி வசேத னம்பின்
நீக்கிய சூக்கு மத்தே நிற்பதோ ருருவுண் டென்னின்
ஆக்கிடு முருவ மெல்லா மசித்துமா யநித்த மாமே.

(இ - ள்). சூக்கும உருவது என்னின் - (கண்ணாற் காணப்படாத) சூக்குமவுருவாய் நிற்பது உயிர் என்னின்,—தூலகாரணமது ஆகும் - அது தூலவுருக்கள் தோன்றுதற்குக் காரணமாயிருக்கும்,—மனாதி தன்மாத்திரை ஆக்கிய வடிவு அசேதனம் - அன்றியும் அது மனம் முதலிய அந்தக்கரணங்களாலும் தன்மாத்திரைகளாலும் ஆக்கப்பட்ட புரியட்டகவுடம்பும் சடமுமாயிருத்தலின் ஆன்மசொரூபமாகாது,—பின் நீக்கிய சூக்குமத்தே நிற்பது ஓர் உரு உண்டு என்னின் - முன் நீக்கப்பட்ட சூக்குமவுருவினுள்ளே நிற்கும் அதிசூக்குமவுரு ஒன்றுண்டு. அதுதான் உயிர் என்னின், (அது கலையாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட பரசரீரமாயிருத்தலாலும்),—ஆக்கிடும் உருவம் எல்லாம் அசித்துமாய் அநித்தமாம் - ஆக்கப்படும் உருவங்களெல்லாம் சடமாயும் அழிந்துபோவனவாயுமிருத்தலாலும், அதுவும் ஆன்மசொரூபமாகாது.

பொழிப்பு. ஆன்மா சூக்குமவுரு என்னின், அச் சூக்குமவுரு தூலவுருக்கள் தோன்றுதற்குக் காரணமாயிருக்குமாதலாலும், மனாதிகளால் ஆக்கப்பட்ட புரியட்டகவுடம்பாயும் சடமாயுமிருத்தலாலும், அதுவும் பொருந்தாது. ஆன்மா அதிசூக்குமவுரு என்னின், அது கலையாதிகளால் ஆக்கப்பட்ட பரசரீரமாயிருத்தலாலும் ஆக்கப்படும் உருவங்களெல்லாம் சடமாய் அழிவெய்தலாலும், அதுவும் பொருந்தாது.

(d). கவுளர்கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

201. அருவுரு வென்னி னன்மா வருவுரு வாவ தின்றும்
உருவரு வாகா தாகு மொருபொருட் கிரண்டு தன்மை
வருவது மில்லை காட்ட வன்னிபோன் மருவு மென்னின்
உருவமுங் காண வேண்டு முண்மையு மொழிந்து போமே.

(இ - ள்). ஆன்மா அருவுரு என்னின் - உயிரானது அருவும் உருவுமாய ஒரு பொருள் என்னின்,—அரு உருவாவது இன்றும் - அருவப் பொருள் உருவப்பொருளாகாது,—உரு அரு ஆகாதாகும் - உருவப்பொருள் அருவப் பொருளாகமாட்டாது,—ஒருபொருட்கு இரண்டுதன்மை வருவதும் இல்லை - அன்றியும் ஒருபொருளுக்கு மாறுபட்ட இரண்டு தன்மை வருதலுமில்லையாம்,—காட்ட வன்னிபோல் மருவும் என்னின் - இங்ஙனம் கூறுவதென்னை? விறகிலே அக்கினியானது காணப்பட்டு உருவமாயும் காணப்படாது அருவமாயும் இருத்தல்போல ஆன்மாவும் அருவும் உருவுமாய் இருதன்மையுமுற்றிருத்தல் கூடும் என்னின்,—உருவமும் காணவேண்டும் - அக்கினியின் உருவம் காணப்படுமாறுபோல உயிரின் உருவமும் காணப்படவேண்டும்,—உண்மையும் ஒழிந்துபோம் - (அங்ஙனம் காணப்படின் காணப்படுவனவெல்லாம் அழியுந்தன்மையுடையனவாதலால், உயிரும் அழியுந்தன்மையுடையதாய்) அது நித்தியப்பொருள் என்பதும் இல்லாதொழியும்.

குறிப்பு. 1. அருவுருவாவதின்றும்......:-அருவாகிய ஆகாயம் உருவாகிய பிருதிவியாதலும் உருவாகிய பிருதிவி அருவாகிய ஆகாயமாதலுமில்லாமைபோல, அருவப்பொருள் உருவப்பொருளாதலும் உருவப்பொருள் அருவப்பொருளாதலுங் கூடா என்பது.

2. ஒருபொருட்கு இரண்டுதன்மை வருவதுமில்லை: - ஒருபொருளுக்கு மாறுபட்ட இரண்டுதன்மை கூடாதாயின், சிவனுக்கு அருவமும் உருவமுமாகிய மாறுபட்ட இரண்டுதன்மை எவ்வாறு கூடுமெனின், அருவத்தைக் குறித்து உருவம் என்றும், உருவத்தைக்குறித்து அருவம் என்றுஞ் சொல்லப்பட்டதாம். அஃதாவது காணப்படாத அருவமாகாமையால் உருவம் என்றும், காணப்பட்ட உருவமாகாமையால் அருவம் என்றும் கூறினதேயன்றி, அருவும் உருவும் ஆகிய இரண்டின் கூட்டம் அருவுருவம் எனக் கூறியதன்று.

3. காட்டவன்னி, ஒருபொருளுக்கு இரண்டுதன்மை யிருத்தற்கு உவமை.

பொழிப்பு. கவுளர் ஆன்மா அருவுருவப் பொருள் என்பர். அருவப் பொருள் உருவப்பொருளாகாது. உருவப்பொருள் அருவப்பொருளாகாது. அன்றியும் ஒரு பொருளிலே மாறுபட்ட இரண்டு தன்மை இருத்தல் கூடாது. விறகின்கண் அக்கினி உருவப்பொருளாயும் அருவப்பொருளாயும் இருத்தல்போல, ஆன்மாவும் அருவும் உருவுமாய் இருதன்மையுற்றிருத்

தல் கூடுமென்னின், அக்கினியின் உருவம் காணப்படுமாறுபோல, ஆன்மாவின் உருவமுங் காணப்படவேண்டும். காணப்படுமாயின் அது நித்தியப் பொருளென்பது போய் அழிபொருளாகும்.

இதுவுமது.

202. சந்திரன் வடிவு போலத் தானரு வுருவ மென்னின்
வந்துநங் கண்ணிற் றோன்றும் வடிவுள தாமு யிர்க்கும்
இந்தவூ னுருவந் தானா யெழுவது முயிரே யென்னிற்
பந்தமா யசித்தா யான்மாப் பவுதிக மாகு மன்றே.

(இ - ள்). சந்திரன்வடிவுபோல - சந்திரனது உருவம் அமாவாசைத் தினத்திலே காணப்படாது அருவாய் நின்று பின்பு வெளிப்பட்டு உருவமாய்த் தோன்றுதல்போல,—தான் அரு உருவம் என்னின் - உயிரும் அருவமும் உருவமுமாய் நிற்கும் என்னின்,—வந்து நம் கண்ணில் தோன்றும் வடிவு - சந்திரன் வடிவம்போல வெளிப்பட்டு வந்து எங்கள் கண்களுக்குப் புலப்படும் வடிவம்,—உயிர்க்கும் உளதாம் - உயிருக்கும் உளதாதல்வேண்டும், —இந்த ஊன் உருவம் தானாய் எழுவதும் உயிரே என்னின் - அமாவாசையில் அருவாய் நின்று பின் முறைமுறையே வளர்ந்து பூரணையிலே தூலவுருவாய் விளங்குவது சந்திரனுமாறுபோலத் தோற்றப்படாது அருவாய் நின்று கருவுட் புகுந்து முறைமுறையே வளர்ந்து இந்த உடம்புருவாய்த் தோன்றுவதும் உயிரேயாம். ஆதலின் அது அருவுருவாம் என்னின்,—ஆன்மாப் பந்தமாய் அசித்தாய் பவுதிகம் ஆகும் - உயிர் பந்திக்கப்பட்டதாய்ச் சடமாய்ப் பூதகாரியமாகும்.

பொழிப்பு. சந்திரன் அருவுருவாயிருத்தல்போல உயிரும் அருவுருவாம் என்னின், சந்திரன் அமாவாசையிலே அருவாய் நின்று பின் தூலவுருவாய்த் தோன்றுதல் போல, உயிரும் தூலவுருவாய்த் தோன்றல்வேண்டும். ஆதலால் அதுவும் பொருந்தாது. சந்திரன் அமாவாசையில் அருவாய் நின்று பின் வளர்ந்து வளர்ந்து பூரணையிலே தூலவுருவாய் விளங்குவது போல, உயிருங் காணப்படாது அருவாய் நின்று கருவுட் புகுந்து வளர்ந்து வளர்ந்து இந்த உடம்புருவாய்த் தோன்றும் என்னின், சித்தாய் நித்தியமாய்ப் பந்தத்திற்பட்டு நீக்குமுயிர், அசித்தாய்ப் பூதகாரியமாய்ப் பந்தமாவதாகிய உடம்புருவாதல் கூடாதாம். ஆதலால் உயிர் அருவுருவப்பொருள் என்பது பொருந்தாது.

(௭). பாதஞ்சலர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

203. அருவவி காரி யான்மா வாகாயம் போல வென்னின்
உருவினைக் கட்டி யாட்டி யோட்டிமீட் டுலாவப் பண்ணி
மருவிநிற் பித்தி ருத்திக் கிடத்திமண் புரட்டி மற்றும்
பெருவிகா ரங்க ளெல்லாந் தருவதென் பேசி டாயே.

(இ - ள்). ஆன்மா ஆகாயம் போல அரு அவிகாரி என்னின் - உயிராவது ஆகாயத்தைப்போல அருவாய் விகாரமில்லதாய் நிற்பது என்னின்,—உருவினைக் கட்டி ஆட்டி - உடம்பைப் பிணித்தும் நடிப்பித்தும்,—ஓட்டி மீட்டு உலாவப்பண்ணி - ஓடச்செய்தும் திரும்ப உலாவச் செய்தும்,—மருவி நிற்பித்து இருத்திக் கிடத்தி மண் புரட்டி - அவ்வுடம்பைப் பொருந்தி நிற்பித்தும் இருத்தியும் கிடத்தியும் மண்ணிற் புரட்டியும்,—மற்றும் பெரு விகாரங்கள் எல்லாம் தருவது என் பேசிடாய் - வேறும் பெரிய விகாரங்களையெல்லாம் செய்வது யாது? சொல்லுவாயாக.

குறிப்பு. தருவதென்:-என் - எவன். எவன் என்னும் வினைவினைக் குறிப்பிலே வகரம் தொக்குநின்றது.

பொழிப்பு. பாதஞ்சலர், உயிர் அருவாய் அவிகாரியாயிருக்கும் என்பர். அப்படியாயின், உடம்பிற் பொருந்தி அதனைப் பிணித்தல் நடிப்பித்தல் முதலிய பல விகாரங்களைச் செய்தல் அப்பொருளுக்கு ஏலாமையால், அவர் கொள்கையும் பொருந்தாது.

(*f*). வைசேடிகர் முதலியோர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

**204.** அசித்தெனி னுணரா தான்மா வசித்துச்சித் தாகு மென்னின்
அசித்துச்சித் தாகா தாகுஞ் சித்தசித் தாவ தில்லை
அசித்தொரு புறமா யொன்றிற் சித்தொரு புறமாய் நில்லா
தசித்துருச் சித்தே யென்னி னசித்தடைந் தறிவ தின்றாம்.

(இ - ள்). ஆன்மா அசித்து எனின் உணராது - ஆன்மா சடப்பொருள் என்று சொல்லின் அஃது அறியமாட்டாது,—அசித்துச் சித்தாகும் என்னின் - சடப்பொருளாகிய ஆன்மா (மனத்தோடு கூடுதலால்) அறிவுடைப் பொருளாகும் என்று சொல்லின்,—அசித்துச் சித்தாகாதாகும் - சடப்பொருள் அறிவுடைப்பொருளாகாது,—சித்து அசித்து ஆவது இல்லை - அறிவுடைப்பொருளுஞ் சடப்பொருளாவதில்லை, ஆதலால் அது பொருந்தாது,—அசித்து ஒருபுறமாய் சித்து ஒருபுறமாய் ஒன்றில் நில்லாது - (ஆன்மா சித்தும் அசித்துமாயிருக்கும் என்னின்) அசித்து ஒருபுறமும் சித்து ஒருபுறமுமாக மாறுபட்ட இரண்டுதன்மை ஒருபொருளிலே இருத்தல் கூடாது. ஆதலால் அதுவும் பொருந்தாது,—அசித்து உருச் சித்து என்னின் - அசித்தாகிய கருவிகளைப் பொருந்தாது அறியும் சித்துப்பொருள் ஆன்மா என்னின்,—அசித்து அடைந்து அறிவது இன்றாம் - அசித்தாகிய கருவிகளைக் கூடி ஆன்மா அறியவேண்டுவதின்று. ஆதலால் அதுவும் பொருந்தாது.

குறிப்பு. 1. அசித்தெனினுணரா......சித்தாகு மென்னின்: - வைசேடிகர் உயிர் சடப்பொருள் என்றும் அது மனத்தோடு கூடியவழி அறியும், கூடாதவழி அறியாது என்றுங் கூறுவர். சடப்பொருள் சித்துப்பொருளாக

வும், சித்துப்பொருள் சடப்பொருளாகவும் வருதல் கூடாதாகையால், அவர்மதமும் பொருந்துவதன்று.

2. அசித்தொருபுறமாய்......நில்லாது:-சைவரில் ஒருசாரார் உயிர் சித்தசித்து என்பர். சித்துத்தன்மையும் அசித்துத்தன்மையும் ஒன்றுக்கொன்று மாறுபாடுடையனவாகையால், அம்மாறுபட்ட இரண்டுதன்மைகளும் ஒரு பொருளிலிருத்தல் கூடாது.

3. அசித்துருச்சித்து - பட்டாசாரியர் உயிர் சித்துப்பொருள் என்றும், அது கருவிகளை ஒருபொழுதும் அடைவதேயில்லை என்றும் கூறுவர். கருவிகளோடு கூடினாலன்றி ஆன்மா அறியமாட்டாதாகையால், அவர் கூற்றும் பொருந்தாது.

பொழிப்பு. உயிர் சடப்பொருள் என்றும் அது மனத்தோடு கூடிச் சித்தாய் அறியும் என்றுங் கூறுகின்ற வைசேடிகர் மதமும், சித்தசித்து என்னும் சைவரில் ஒருசாரார் கூற்றும், கருவிகளின் துணையின்றி அறியும் சித்துப்பொருள் என்னும் பட்டாசாரியர் கூற்றும் பொருந்தா.

(g). பாஞ்சராத்திரிகள் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

**205.** உயிரினை யணுவ தென்னி னுடல்பல துவார மோடும்
பயில்வுறக் கட்டு ணாது பாரமுந் தரித்துச் செல்லா
தயர்வுறு மசித்தாய்ப் பூத வணுக்களி லொன்ற தாகும்
இயல்புறு மவய வத்தா லணுவுரு விறக்கு மன்றே.

(இ-ள்). உயிரினை அணுவது என்னின் - உயிரானது பரமாணுவளவாய் உடலில் நிற்பதொன்று என்னின்,—உடல் பல துவாரம் ஓடும் - அவ்வுடலிற் பல துவாரங்களுள். அவற்றால் ஓடிப்போவதாகும்,—பயில்வு உறக் கட்டுணாது - அன்றியும் அவ்வுடம்பிலே தொழில் நிகழும்படி கட்டுப்பட்டு நில்லாது,—பாரமும் தரித்துச் செல்லாது - பாரத்தையுந் தாங்கிச் செல்லமாட்டாது,—அயர்வு உறும் அசித்தாய் - அழிவெய்தும் சடப்பொருளாய்,—பூத அணுக்களில் ஒன்றது ஆகும் - பூத பரமாணுக்களில் ஒன்றதாய் முடியும்,—இயல்பு உறும் அவயவத்தால் - இத்தன்மை பொருந்திய அவயவப் பகுப்புடையதாயிருத்தலின்,—அணுவுரு இறக்கும் - அணுவடிவம் அழிந்து போம். ஆதலால் ஆன்மா அணு என்பதும் பொருந்தாது.

பொழிப்பு. உடம்பினுள்ளே பரமாணு அளவாய் நிற்பது உயிர் என்று பாஞ்சராத்திரிகள் கூறுவர். அணுவாயின், உடம்பின் துவாரங்களுள் ஒரு துவாரத்தால் ஓடிப்போம். உடம்பிற் கட்டுண்டற்கும் பாரந் தாங்குதற்கும் அஃது உடம்படாது. பூதவணுக்களில் ஒன்றாய் அவயவமுடையதாய் அழிந்துபோவதாயுமிருக்கும். ஆதலால் அவர்மதமும் அடாது.

இதுவுமது.

206. உடலினி லேக தேசி யுயிரெனி னுருவாய் மாயும்
படர்வுறு மறிவின் றெங்குஞ் சுடரொளிப் பண்ப தென்னிற்
சுடர்தொடிற் சுடுவ தெங்குந் தொட்டிட வறிவுண் டாகும்
அடர்புல னிடத்து மொக்க வறிவெழ வேண்டு மன்றே.

(இ - ள்). உயிர் உடலினில் ஏகதேசி எனின் - உயிரானது உடம்பினுள் இருதயத்தானத்திலே ஏகதேசமாய் நிற்கும் என்னின்,—உருவாய் மாயும் - உருவப்பொருள் எனப்பட்டு அழிவதாகும்,—எங்கும் படர்வு உறும் அறிவும் இன்று - அன்றியும் எங்கும் வியாபித்தறியும் அறிவும் இல்லதாகும். ஆகையால் அக்கூற்றுப் பொருந்தாது,—சுடர் ஒளிப் பண்பது என்னின் - அப்படியன்று, விளக்கு ஓரிடத்திருக்க அதன் ஒளி எங்கும் பிரகாசித்துப் பொருள்களை விளக்குதல்போல, உயிரும் உடம்பினுள்ளே ஓரிடத்திருக்க அதன் அறிவு எங்கும் வியாபித்து விடய உணர்ச்சியை நிகழ்த்துமென்னின்,—சுடர் தொடின் சுடுவது - விளக்குத் (தனக்கும் தன்னால் விளக்கப்படும் பொருட்கும் இடையில் மறைப்பில்லாத) தொடர்பிருந்தால் விளக்குவதாகும். அதுபோல,—எங்கும் தொட்டிட அறிவு உண்டாகும் - உயிரும் (அறியப்படும் விடயத்திற்கும் தனக்கும் மறைப்பில்லாத) தொடர்ச்சி எங்குமிருந்தால் விடய அறிவை நிகழ்த்தும். அவ்வாறன்றி, உடல் முதலிய கருவிகளது மறைப்பிருந்தும் உயிர் விடய அறிவை நிகழ்த்துவதாலும்,—அடர் புலன் இடத்தும் ஒக்க அறிவு எழ வேண்டும் - (தொடர்பின்றியும் அறிவு நிகழும் எனின்) விளக்குத் தன்னைச் சூழ்ந்த பொருள் எல்லாவற்றையும் ஒரேகாலத்தில் விளக்குதல் போல, உயிரும் தன்னைச் சேர்ந்து நெருங்கி இருக்கும் விடயங்கள் எல்லாவற்றிடத்தும் ஒரேகாலத்தில் அறிவை நிகழ்த்த வேண்டும். அவ்வாறின்றி, ஒருகாலத்தில் ஒரு விடயத்தினிடத்தேயே உயிர் அறிவை நிகழ்த்துதலாலும், அதுவும் பொருந்தாது.

குறிப்பு. 1. சுடுவது - சுடர்வது, விளக்குவது எனப் பொருள் பயந்தது.

2. தொடின் - என்றது மறைப்பாகிய இடையீடின்றித் தொட்டு நிற்பின், எனவே தொடர்பிருப்பின் என்பது.

3. படர்வுறு மறிவின் றெங்குஞ் சுடரொளிப் பண்ப தென்னில்:—என்பதற்குக் "குணங் குணியளவினன்றி மேற் செல்லாமையானும், விளக்கினொளியாவது விளக்கினது சூக்கும வடிவே யன்றிக் குணமன்றாகலான் அஃது ஈண்டைக்குவமையாகாமையானும்" என வருவித்து விரித்து, மேலும் "ஆமெனவேகொள்ளினும் அதனோடிதனிடை வேற்றுமை பெரிது" எனவும் விளக்கிப் போந்துளார் சிவஞானமுனிவர்.

பொழிப்பு. உயிர் உடம்பின்கண் இருதயத்தானத்திலே ஏகதேசமாய் நிற்கும் என்பர் பாஞ்சராத்திரிகள். அவ்வாறாயின், உயிர் உருவப்பொருள்

எனப்பட்டு அழிவதாகும். அன்றியும் எங்கும் வியாபித்தறியும் அறிவும் இல்லதாகும். ஆகையால் அது பொருந்தாது. அப்படியன்று. விளக்கு ஓரிடத்திருக்க அதன் ஒளி எங்கும் பிரகாசித்துப் பொருளை விளக்குதல் போல, உயிரும் உடம்பில் ஓரிடத்திலிருப்ப அதன் அறிவு வியாபித்து விடயவுணர்ச்சியை நிகழ்த்தும் என்னின், விளக்குப்போல உயிருந் தானிருந்தவிடத்திற் றன்னோடு மறைப்பாகிய இடையீடின்றித் தொடர்ந்து நிற்பனவற்றையே உணர்த்தல்வேண்டும். அவ்வாறின்றி இடையீடாக உடம்பு முதலிய கருவிகள் நிற்பவும் விடய அறிவு நிகழ்தலாலும், அவ்வாறு நிகழ்தல் கூடுமெனக்கொள்ளினும், விளக்குப் போலத் தன்னோடு நெருங்கிய விடயங்கள் யாவற்றினும் ஒரேகாலத்தில் உணர்ச்சி நிகழ்த்தாமையாலும், அதுவும் பொருந்தாது.

(*h*). சமணர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

**207.** உருவினி னிறைந்து நின்றங் குணர்ந்திடு முயிர தென்னின்
மருவிடா துறக்கம் வாயி லறிவொக்க வழங்க வேண்டும்
பெருகிடுஞ் சுருங்கும் போதம் பேருடற் சிற்று டற்கண்
வருமுடற் குறைக்க வொக்கக் குறைந்துபின் மாயு மன்றே.

(இ - ள்). உருவினில் நிறைந்து நின்று அங்கு உணர்ந்திடும் உயிரது என்னின் - உடம்பளவிலே நிறைந்து நின்று அங்கே அறிதலைச் செய்யும் உயிர் என்று சொல்லின்,—உறக்கம் மருவிடாது - நித்திரை வரமாட்டாது,—வாயில் ஒக்க அறிவு வழங்கவேண்டும் - அன்றியும் ஐம்பொறிகளிலும் ஏககாலத்தில் அறிவு நிகழ்தல்வேண்டும்,—போதம் பேருடல் கண் பெருகிடும் சிற்றுடல் கண் சுருங்கும் - அன்றியும் அறிவு பெரிய உடம்பினிடத்துப் பெரிதாயும் சிறிய உடம்பினிடத்துச் சிறிதாயும் நிகழவேண்டும்,—வரும் உடல் குறைக்க - இவ்வாறு சிறிதாயும் பெரிதாயும் வளருகின்ற உடம்பிலே ஓர் அங்கத்தைக் குறைத்தவிடத்து,—ஒக்கக் குறைந்து - அதனுடன்கூட உயிரும் குறைந்து,—பின் மாயும் - பின்பு உடம்பு முற்றும் அழியுமிடத்து உயிரும் அழியும். ஆதலால் உயிர் உடம்பின்கண் நிறைந்து நின்று அறியும் என்பதும் பொருந்தாது.

குறிப்பு. மருவிடாதுறக்கம் - உயிர் உடம்பில் ஓரிடத்துச்சென்று ஒடுங்குதலால் வருவது உறக்கம். உயிர் உடம்பு முழுவதும் நிறைந்து நிற்குமாயின், உறக்கம் வரமாட்டாது என்பது.

பொழிப்பு. ஆன்மா சரீரமெங்கும் நிறைந்து நின்று அறியும் என்பர் சமணர். அப்படியாயின் உறக்கம் வரமாட்டாது. ஐம்பொறியிலும் ஏககாலத்தில் அறிவு நிகழவேண்டும். உடம்பளவுக்குத்தக்க அறிவாதலும் வேண்டும். உறுப்புக்களைக் குறைக்க உயிரும் குறைந்து, உடம்பு அழியுமிடத்து உயிரும் அழியவேண்டும். ஆதலால் அவர் மதமும் அடாது.

(i). பட்டாசாரியர் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

**208.** எங்குந்தான் வியாபி யாய்நின் றுணருமிவ் வான்மா வென்னின்
தங்கிடு மவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும்
பங்கமார் புலனென் றென்றாய்ப் பார்த்திடல் பகரல் வேண்டும்
இங்கெலா மொழிந்தா னிற்ப தெங்ஙன மியம்பல் வேண்டும்.

(இ-ள்). இவ்வான்மா எங்குந்தான் வியாபியாய் நின்று உணரும் என்னின் - இந்த ஆன்மா எவ்விடத்தும் வியாபியாய் நின்று காயத்துடனே கூடி இந்திரியங்கள்வழியாக விடயங்களை அறியும் என்று சொல்லின்,—தங்கிடும் அவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும் - அறிவு நிகழாதிருக்கும் அவத்தைகளுக்கும் சுவர்க்க நரகங்களுக்குச் சென்று மீளுவதற்கும் காரணம் சொல்லல் வேண்டும்,—பங்கம் ஆர் புலன் ஒன்று ஒன்றாய்ப் பார்த்திடல் பகரல் வேண்டும் - அன்றியும் சாக்கிரத்திலே குற்றம்பொருந்திய சத்தாதிவிடயங்களையும் ஒருங்கே அறியாது ஒன்றொன்றாய் அறிதற்குக் காரணமுஞ் சொல்லல்வேண்டும்,—இங்கு எலாம் ஒழிந்தால் நிற்பது எங்ஙனம் இயம்பல் வேண்டும் - (காயம்முதலியனவற்றைக் கலந்து நிற்றலே வியாபியாய் நிற்றலாம் என்னில்) இக் காயம்முதலிய யாவும் இல்லாத சங்காரகாலத்திலே ஆன்மா நிற்பது எவ்வாறு என்றுஞ் சொல்லல்வேண்டும்.

குறிப்பு. 1. ஆன்மா எங்கும் வியாபியாய் நின்று காயத்துடனே கூடி இந்திரியங்கள்வழியாக விடயங்களை அறியும் என்பவர் பட்டாசாரியர். (சி. சி. பர. பட்டாமதம், 9).

2. தங்கிடும் அவத்தை - அறிவு தடைப்படும் அவத்தைகள், அறிவு நிகழாத அவத்தைகள். அவை சுழுத்தி துரியம் துரியாதீதமாம். தங்கிடுதல் - தடைப்படுதல்.

3. இங்கெலா மொழிந்தா னிற்ப தெங்ஙனம் - உருவப்பொருள்களனைத்திலும்கூடி நிற்றலே, "வியாபியாய் நிற்றல்" என்பதின் பொருள் எனப் பட்டாசாரியர் கொள்வராதலின், அவ்வுருவப்பொருள்கள் யாவும் அழிந்த சங்காரகாலத்திலே உயிர் எவ்வாறு நிற்கும் எனக் கூறி அவர்கொள்கையை மறுத்தவாறு.

பொழிப்பு. ஆன்மா எங்கும் வியாபியாய் நின்று உடலைப்பொருந்தி இந்திரியங்கள் வாயிலாக விடயங்களை அறியும் என்பர் பட்டாசாரியர். அவ்வாறு அறியும் ஆன்மாவுக்குச் சுழுத்திமுதலிய அவத்தைகளிலே அறிவு நிகழாதிருத்தலாலும், சாக்கிராவத்தையிலே விடயங்களை ஒவ்வொன்றாய் அறியும் அறிவேயன்றி ஒருங்கே அறியும் அறிவு இன்மையாலும் அவர் கூற்றும் பொருந்தாது. அன்றியும் அவ்வான்மா வினைப்பயனை நுகர்தற்குச் சுவர்க்க நரகங்களுக்குப் போவது எற்றுக்கு? உடல் முதலியவற்றைப்பொருந்தி நிற்றலே வியாபியாய் நிற்றலெனின், உடல் முதலிய யாவும் அழிந்த சங்கார காலத்திலே அவ்வான்மா நிற்பதற்கு இடமின்மையால் அதுவும் பொருந்தாது.

(j). ஐக்கியவாதிகள் கூறும் ஆன்மவிலக்கணமும் மறுப்பும்.

**209.** சுத்தமா மான்ம சித்தைத் துகளுடன் மறைத்த தென்னின்
வைத்துறு துடற்கண் வாயில் கரணங்கள் வழியான் ஞானம்
ஒத்துறு மலமற் றாலு முறுமலம் வீடு மின்றாம்
பெத்தமு மடையான் முத்த னய்ப்பிர காச னமே.

(இ-ள்). சுத்தமாம் ஆன்ம சித்தைத் துகள் உடல் மறைத்தது என்னின் - அநாதியே சுத்தமாகிய ஆன்மாவின் அறிவை இடையே வந்துபொருந்திய மாயாமலமாகிய உடம்பு மறைத்தது என்று சொல்லின்,—உடற்கண் வாயில் கரணங்கள் வழியால் ஞானம் வைத்துறாது - உடம்பின்கணுள்ள இந்திரியங்கள்வாயிலாகவும் அந்தக்கரணங்கள்வாயிலாகவும் அவ்வான்மாவுக்கு அறிவு உண்டாகாதாம்,—ஒத்து உறும் மலம் அற்றாலும் - இடையே வந்து பொருந்திய மாயாமலமாகிய அவ்வுடம்பு நீங்கப்பெறினும்,—மலம் உறும் - பின்னும் அம்மலம் வந்து பொருந்துமாதலால்,—வீடும் இன்றாம் - முத்தி என்பதும் இல்லையாய் முடியும், ஆன்மா அநாதியே சுத்தனயின்,—முத்தனய்ப் பிரகாசனும் - என்றும் முத்தனயே விளங்குவன்,—பெத்தமும் அடையான் - உடலைப்பொருந்திப் பந்தமுமுறான்.

குறிப்பு. 1. துகளுடல்:—உடம்பு மாயாமலகாரியமாதலின், அவ்வாறு கூறப்பட்டது. துகள் - குற்றம்.

2. ஒத்துறுமலம் - ஆகந்துகமலம், இடையே ஆன்மாவைப் பொருந்திய மலம். உடம்பு சிருட்டிகாலத்திலே ஆன்மாவைப் பொருந்துதலால் அவ்வாறு கூறப்பட்டது.

பொழிப்பு. ஆன்மா அநாதியே சுத்தமான அறிவாயுள்ளது. மாயாமலமாகிய உடம்பு இடையே வந்து பொருந்தி அதன் அறிவை மயக்கும் என்பர் ஐக்கியவாதிகள். உடம்போடுகூடிய இந்திரியங்கள்வாயிலாகவும் அந்தக்கரணங்கள்வாயிலாகவும் ஆன்மாவுக்கு அறிவு நிகழக்காண்டலின், உடம்பு அறிவை மறைக்கும் என்பது பொருந்தாது. அம்மலம் இடையே வந்து பொருந்தியதாயின் அது நீங்கப்பெறினும் பின்னும் வந்து ஆன்மாவைப் பொருந்துமாதலின் முத்தியும் கூடாதாம். ஆன்மா அநாதியே சுத்தனயின் என்றும் முத்தனயேயிருப்பனன்றி உடலைப்பொருந்திப் பந்தமுறமாட்டான்.

2. சித்தாந்திகள் கூறும் ஆன்மவிலக்கணம்.

**210.** அசித்தரு வியாப கம்போல் வியாபக மருவ மின்றாய்
வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய னகி
நசித்திடா ஞானச் செய்தி யநாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவ முடைய னகிப் பசுவென நிற்கு மான்மா.

(இ-ள்). ஆன்மா - ஆன்மாவானது,—அசித்து அரு வியாபகம்போல் - சடப்பொருளாகிய மாயையினது வியாபகத்தன்மையும் (அருவத்தன்மையும்) போல,—வியாபகம் அருவம் இன்றாய் - வியாபகத்தன்மையும் அருவத் தன்மையும் இல்லதாய்,—வசித்திட வரும் வியாபி எனும் வழக்கு உடைய தாகி - சார்ந்த பொருளிடத்து அதுவதுவாய் வசிப்புண்டு நின்றறியும் வியாபகத்தன்மையுடையதாய்,—நசித்திடா ஞானச் செய்தி அநாதியே மறைத்து நிற்கும் பசுத்துவம் உடையதாகி - கெடாது நித்தமாயிருக்கும் அதன் இச்சா ஞானக்கிரியைகளை அநாதியே மறைத்து நிற்கும் ஆணவமலசம்பந்தமுடையதாய்,—பசு என நிற்கும் - பசு எனப் பெயர் பெற்று நிற்கும்.

குறிப்பு. 1. இச்செய்யுள் சித்தாந்த நெறிப்படி ஆன்மவிலக்கணம் கூறிற்று. அவ்விலக்கணங்களாவன வசித்திட வரும் வியாபகத்தன்மை, அருவத்தன்மை, நித்தியத்தன்மை, பசுத்தன்மை என்பனவாம்.

2. அசித்தரு வியாபகம்போல் வியாபக மருவ மின்றாய்:—பதி பசு பாசம் என்னும் மூன்றும் அருவப்பொருள்கள். வியாபகத் தன்மையுடையன. அங்ஙனமாயினும், ஒன்றற்கொன்று தூல சூக்குமங்களாமியல்புடைமையின், அவை வியாப்பியமும் வியாபகமுமாய் நிற்பனவாம். மாயை பசு என்னும் இரண்டினையும் நோக்குமிடத்து மாயை சூக்குமம், பசு தூலம். மாயை வியாபகம், பசு வியாப்பியம். பதி பசு என்னும் இரண்டினையும் நோக்குமிடத்துப் பதி சூக்குமம், பசு தூலம். பதி வியாபகம், பசு வியாப்பியம். முப்பொருளையும் நோக்குமிடத்துப் பதி அதி சூக்குமம், மாயை சூக்குமம், பசு தூலம். பதி வியாபகம், மாயை பதியில் வியாப்பியம், பசு மாயையில் வியாப்பியம். இவ்வாறு மாயை பசு என்னும் இரண்டின் அருவத்தன்மைக்கும் வியாபகத்தன்மைக்கும் வேறுபாடு காண்க. அரு என்பதற்கு மாயை என்றும் பதி என்றும் பொருள்கொள்ளப்படுதலின், பதியை நீக்குதற்கு "அசித்தரு" என்றார்.

3. வசித்திட வரும் வியாபி:—ஆன்மா எதனை எதனைச் சார்ந்ததோ, அதனதன் சுபாவமே தன் சுபாவமாய் அதுவதுவாய் வசிப்புண்டு நின்றறியும் இயல்புடையது. அவ்வாறு சாரப்பட்ட அவ்வப்பொருள்களை நோக்குமிடத்து அவ்வான்மா தூலமாதலுடைமையின், அவ்வப்பொருள்களிலே வியாப்பியமேயாய் நிற்கும். மாயையைப் பற்றியவிடத்து அதனில் வியாப்பியமாயும், பதியைப் பற்றியவிடத்து அதனில் வியாப்பியமாயும் நிற்கும். அதுபற்றி வசித்திட வரும் வியாபி என்றார். வசித்தல் - வசியஞ்செய்தல்.

4. நசித்திடா ஞானச் செய்தி:—குணங்களாகிய ஞானச் செய்திகள் நித்தியம் எனவே குணிப்பொருளாகிய ஆன்மாவும் நித்தப்பொருளாம் என்பது தானே போதரும்.

5. பசுத்துவம் - பசுத்தன்மை, ஆணவம். பசு - பாசத்தாற் பந்திக்கப்பட்டது. பச் - பந்தித்தல். உ - செயப்படுபொருள் விகுதி.

பொழிப்பு. ஆன்மா அருவத்தன்மை, வியாபகத்தன்மை, நித்தியத் தன்மை பசுத்துவம் என்னும் இலக்கணங்களையுடையதாம்.

3. உயிர் உடல்களைப் பொருந்தி அறிவிச்சை செயல்கள் விளங்கப் பெறும் முறைமையும் உயிருடல்களுக்குள்ள சம்பந்தமும்.

211. மாயையின் வயிற்றுண் மன்னி வருஞ்செயல் ஞான மிச்சை
ஏயுமக் கலாதி மூன்றா லேகதே சத்தி னேய்ந்திங்
காயுமுக் குணங்க ளந்தக் கரணங்க ளாதி யெல்லாங்
காயபெத் தங்க ளாகிக் கலந்துட னிற்கு மான்மா.

(இ - ள்). ஆன்மா - அங்ஙனம் ஆணவமலத்தாலே மறைப்புண்டு கேவலப்பட்டு நின்ற ஆன்மா,—மாயையின் வயிற்றுள் மன்னி - அசுத்தமாயையிலே அசுத்தமாயாதத்துவத்தைப் பொருந்தி,—வரும் செயல் ஞானம் இச்சை ஏயும் - (அத்தத்துவத்திற் சமட்டிரூபமாய் அடங்கியிருக்கும் கலாதிகளாலே) பொதுவகையால் விளங்கப்பெறும் இச்சா ஞானக் கிரியைகளைப் பொருந்தும்,—அக் கலாதி மூன்றால் ஏகதேசத்தின் ஏய்ந்து - பின்னர் வியட்டிரூபமாய்த் தோன்றும் அக் கலையாதி தத்துவங்கள் மூன்றினாலும் சிறப்புவகையால் விளங்கப்பெறும் இச்சாஞானக்கிரியைகளைச் சிறுபான்மை பொருந்தி,—இங்கு ஆயும் - இங்கே விடயங்களில் வியாபரிக்கும்,—முக்குணங்கள் அந்தக்கரணங்கள் ஆதி எல்லாம் - முக்குணங்கள் அந்தக்கரணங்கள் முதலிய தத்துவங்கள் யாவும்,—காய பெத்தங்களாகி - சரீரபந்தங்களாய்,—கலந்து உடன் நிற்கும் - ஆன்மா அவற்றோடு பிரிவின்றி உடனாய் நிற்கும்.

குறிப்பு. 1. இச்செய்யுள் உயிர் உடலுற்றுச் செயிருறு மிச்சா ஞானக் கிரியைகளையுடையதாகி நிற்கும் முறைமை கூறிற்று. (செ. 187 பார்).

2. மாயையின் வயிற்றுண் மன்னி வருஞ்செயல் ஞான மிச்சை:—அசுத்தமாயையிற் பஞ்சகிருத்தியஞ்செய்யும் அநந்ததேவராற் கலக்குண்ட அவ்வசுத்தமாயையின் பாகம் அசுத்தமாயாதத்துவமாம். அது காரணசரீரம் எனவும்படும். ஆணவமலத்தினாலே மறைப்புண்டு அறிவிச்சை செயல்கள் சிறிதும் விளங்கப்பெறாது மாயையிலே வியாப்பியமாய் நின்ற ஆன்மா அசுத்தமாயா தத்துவத்தைப் பொருந்தி, அத்தத்துவத்திற் சமட்டிரூபமாயும் சூக்குமமாயும் அடங்கியிருக்கும் கலாதிகளால் அதன் இச்சா ஞானக்கிரியைகள் பொதுவகையால் விளங்கப்பெறும் என்பது. சமட்டி - தொகுதியாயிருப்பது.

3. அக் கலாதி மூன்றா லேக தேசத்தி னேய்ந்து - அசுத்தமாயாதத்துவத்தினின்றும் வியட்டிரூபமாயும் தூலமாயும் தோன்றிய கலையாதி தத்துவங்களுள், கலாதத்துவத்தால் ஆணவமலசத்தி சிறிதே நீங்கி ஆன்மாவின் கிரியாசத்தி விளங்கப்பெறும். வித்தையால் ஞானசத்தியும், அராகத்தால் இச்சாசத்தியும் விளங்கப்பெறும். இவை மூன்றினாலும் ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் ஏகதேசமாய் விளங்கப்பெறும். வியட்டி - விரிந்திருப்பது.

4. இங்கு ஆயும்:—ஆய்தல் - ஆராய்தல்.

5. குணங்களந்தக்கரணங்களாதி யெல்லாங் காய பெத்தங்களாகி நிற்கும்:—முக்குணங்களாலாயது குணசரீரம். தன்மாத்திரைகள் ஐந்தும் மனம் புத்தி அகங்காரம் மூன்றுங் கூடியது சூக்குமசரீரம். பிருதிவி முதலிய பஞ்ச பூதங்களாலாய சரீரம் தூலசரீரம். எல்லாம் - அசுத்தமாயாதத்துவம் முதற் பிருதிவியீருகவுள்ள தத்துவங்கள்.

பொழிப்பு. அசுத்தமாயையிலே கேவலப்பட்டு நின்ற ஆன்மா அம் மாயையிலே தோன்றிய காரணசரீரத்தைப் பொருந்தும். அதனால் அறிவிச்சை செயல்கள் பொதுவகையால் விளங்கப்பெறும். பின் கஞ்சுகசரீரத்தைப் பொருந்தும். அதனால் அறிவிச்சை செயல்கள் சிறப்புவகையால் விளங்கப்பெறும். பின் குணசரீரத்தைப் பொருந்தும். அதன்பின் சூக்கும தூல சரீரங்களைப் பொருந்தும். இச்சரீரங்கள் ஆன்மாவைப் பந்திக்கும். ஆன்மா இவற்ருேடு பிரிவின்றி நின்று இவற்றைச் செலுத்தும்.

4. உயிர் உடல்களைப் பொருந்திப் புண்ணிய பாவங்களைச் செய்து இன்பத் துன்பங்கள் நுகரும் முறைமை.

**212.** சூக்கும தேகி யாகித் தூலதே கத்தின் மன்னிச்
சாக்கிர முதலா யுள்ள வவத்தையுட் டங்கி யெங்கும்
போக்கொடு வரவு மெல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவம்
ஆக்கியும் பலன்க ளெல்லா மருந்தியு நிற்கு மான்மா.

(இ - ள்). ஆன்மா - ஆன்மாவானது,—சூக்கும தேகியாகி - மேற்கூறிய வாறு அந்தக்கரணங்கள் முதலியவற்ருலாய சூக்குமதேகத்தையுடையதாய்,—தூல தேகத்தின் மன்னி - தூலசரீரத்திலே நிலைபெற்று,—சாக்கிரம் முதலாயுள்ள அவத்தையுள் தங்கி - சாக்கிரம் முதல் அதீதம் ஈருகவுள்ள ஐந்தவத்தைகளுட்பட்டு,—எங்கும் போக்கொடு வரவும் எல்லாம் புரிந்து - யாண்டும் போக்கு வரவு முதலாய வினைகளை விரும்பிப் பயின்று,—புண்ணிய பாவங்கள் ஆக்கியும் - அப்பயிற்சியாற் சூக்குமமாயும் தூலமாயும் புண்ணிய பாவங்களை ஈட்டியும்,—பலன்கள் எல்லாம் அருந்தியும் நிற்கும் - அவற்றின் பயனாய் வரும் இன்பத் துன்பங்களெல்லாவற்றையும் நுகர்ந்தும் நிற்கும்.

குறிப்பு. 1. இச்செய்யுள் உயிர் உடலுற்றுப் பயிலுறுந் தன்மையும் இன்பத்துன்பங்களை நுகருந் தன்மையுங் கூறிற்று. (செ. 187 பார்).

2. போக்கொடு வரவுமெல்லாம் புரிந்து:—பலவகை வினைகளையும் விரும்பிச்செய்து. புரிதல் - விரும்புதல். எற்ற சரீரங்களுட் பிறந்திறந்து எனவும், சொர்க்க நரக பூலோகங்களிற் போவதுவருவதாயும் எனவும் கூறுவர். (மறை. சிவாக். நிரம்ப).

3. புண்ணிய பாவங்கள் சூக்குமமாயும் தூலமாயும் இயற்றப்படும். சாக்கிர சொப்பனவத்தைகளிலே போக்குவரவுகள் புரிந்து இயற்றப்படும் இரு

வினைகள் மனம் வாக்குக்களாலாவன. அதுபற்றி அவை சூக்குமவடிவா யிருக்கும். சாக்கிராவத்தையிலே காயத்தாற் செய்யப்படுவன தூலவடிவா யிருக்கும்.

பொழிப்பு. ஆன்மா தூலதேகத்தைப் பொருந்தி ஐந்தவத்தைகளுட்பட்டு யாண்டும் போக்கு வரவு முதலாய வினைகளை விரும்பிப் பயின்று சூக்குமமும் தூலமுமாகிய புண்ணிய பாவங்களைச் செய்து அவற்றின் பயனாகிய இன்பத்துன்பங்களை அனுபவிக்கும்.

(a). உடல்கள் பஞ்சகோசங்கள். உயிர் அவற்றோடு ஒன்றாயும் வேறாயும் நிற்கும்.

**213.** மருவா னந்தம் விஞ்ஞான மனோபி ராண னன்னமயம் [ய்
உருவாந் தன்மை யுண்டாய்மு னொன் றுக் கொன்று சூக்குமமா
வருமா மன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகும் [மாம்.
அருவா மான்மா வைங்கோசத் தார்ப்புண் டவற்றி னகம்புற

(இ - ள்). மருவு ஆனந்தம் விஞ்ஞானம் மனோ பிராணன் அன்னமயம் - ஆன்மாவைப் பொருந்திய ஆனந்தமயகோசம் விஞ்ஞானமயகோசம் மனோமயகோசம் பிராணமயகோசம் அன்னமயகோசம் என்னும் ஐந்தும்,—உருவாம் தன்மை உண்டாய் - முறையே காரண சரீரம் கஞ்சுக சரீரம் குண சரீரம் சூக்கும சரீரம் தூல சரீரம் என்னும் சரீரங்களின் தன்மையுடையனவாய்,—அன்னமயம் பற்றி முன் ஒன்றுக்கு ஒன்று சூக்குமமாய் வருமாம் - அன்னமயகோசம் முதலாகப் பின் தோன்றுவதாகிய ஒன்றற்கு முன் தோன்றியது சூக்குமமாய் வருவதாம்,—மாயை முதற்காரணமாகும் - இவ்வைந்தினுக்கும் அசுத்தமாயை முதற்காரணமாயிருக்கும்,—அருவாம் ஆன்மா ஐங்கோசத்து ஆர்ப்புண்டு - அருவப்பொருளாகிய ஆன்மா இந்த ஐந்து கோசங்களினாலும் பந்திக்கப்பட்டு,—அவற்றின் அகம் புறமாம் - அவற்றோடு அதுவதுவாயும் அவற்றின் வேறாயும் நின்று அவற்றைச் செலுத்தும்.

குறிப்பு. 1. மருவானந்தம் விஞ்ஞானம்......உருவாந் தன்மை யுண்டாய்:—மேற்கூறிய காரணசரீரம் கஞ்சுகசரீரம் குணசரீரம் சூக்குமசரீரம் தூலசரீரம் என்னும் ஐந்தும் முறையே ஆனந்தமயகோசம் விஞ்ஞானமய கோசம் மனோமயகோசம் பிராணமயகோசம் அன்னமயகோசம் எனப் பெயர் பெறும். இவையெல்லாம் காரணம்பற்றிவந்த பெயர்களாம்.

அசுத்தமாயாதத்துவம் எனைத்தத்துவங்களுக்குஞ் சரீரங்களுக்குங் காரணமாயிருத்தலால், அதனாலுண்டாகிய சரீரம் காரணசரீரம் என்றும், அச்சரீரம்பெற்ற மாத்திரையே, கேவலத்தில் ஒன்றுமின்றி நின்ற ஆன்மாவுக்கு அறிவிச்சை செயல்கள் பொதுவகையால் விளக்கமுற, அவ்வளவில் அம்மயக்க அறிவால் ஓர் ஆனந்தம் உண்டுபடுதலின், அஃது ஆனந்தமயகோசம்

என்றும் பெயர்பெறும். ஆனந்தம் - மகிழ்ச்சி. மயம் - அதுவாந்தன்மை. கோசம் - உறை.

காலம் நியதி கலை வித்தை அராகம் என்னும் ஐந்து தத்துவங்களும் புருடனுக்கு ஐந்து சட்டைபோன்றிருத்தலால், அவற்றாலுண்டாகிய சரீரம் கஞ்சுகசரீரம் என்றும், அச்சரீரத்தால் ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் சிறப்புவகையால் விளக்கமுற்று விடயபோகங்களை அறியும் இயல்புடைய தாய்ப் புருடன் நிற்றலின், அவ்வறிவை உண்டாக்கும் அச்சரீரம் விஞ்ஞான மயகோசம் என்றும் பெயர்பெறும். விஞ்ஞானம் - விசேடமான அறிவு.

சாத்துவிகம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களாலாகிய சரீரம் குணசரீரம் என்றும், அம்முக்குணங்கள் மனம்முதலிய அந்தக்கரணங்க ளைத் தம்முள் அடக்கிநிற்றலின், அது மனோமயகோசம் என்றும் சொல் லப்படும்.

சூக்குமபூதங்களாகிய தன்மாத்திரைகளாலாகிய சரீரம் சூக்குமமாகிய அணுவடிவினதாய் நிற்றலின், சூக்குமசரீரம் என்றும், அச்சூக்குமசரீரம் பிராணன் என்னும் வாயுவோடு நிற்றலாலும், அது நீங்குங்காலை அப் பிராணவாயுவோடு கூடியே நீங்குதலாலும், பிராணன் என்னும் காரணப் பெயர் அச்சூக்குமவுடம்புக்கு இருத்தலாலும், அது பிராணமயகோசம் என்றும் சொல்லப்படும்.

பிருதிவி முதலிய தூலபூதங்களாலுண்டாகிய சரீரம் தூலசரீரம் என் றும், அவை அன்னத்தாற் போஷிக்கப்படுதலால், அன்னமயகோசம் என் னும் சொல்லப்படும்.

2. அவற்றினகம்புறமாம் - ஐங்கோசங்களிடத்தும் அதுவதுவாய் வசிப் புண்டு அவற்றின் வேறாயும் நிற்கும் என்பது.

பொழிப்பு. மேற்கூறிய காரணசரீரம்முதலிய ஐந்தும் முறையே ஆனந்தமயகோசம் விஞ்ஞானமயகோசம் மனோமயகோசம் பிராணமயகோ சம் அன்னமயகோசம் எனப் பெயர்பெறும். இவை மாயையினின்று ஒன் றுக்கொன்று தூலமாய்த் தோன்றுவனவாம். ஆன்மா இவ்வைந்து கோசங் களினாலும் பந்திக்கப்பட்டு அவற்றோடு ஒன்றாயும் வேறாயும் நின்று அவற் றைச் செலுத்தும்.

(b). மேலதனை உவமைமுகத்தால் விளக்கல்.

**214.** தோற்பாவைக் கூத்துந் தொல்லை மரப்பாவை யியக்க முஞ்சீர்த்
தேர்ப்பாரிற் செலவும் வேறாய்ச் செலுத்துவோர் செய்தி தானு
பார்ப்பாய வேடங் கட்டி யாடுவோர் பரிசும் போலும் [ம்
ஆர்ப்பாய காயந் தன்னை யான்மாநின் றாட்டு மாறே.

(இ - ள்). ஆர்ப்பாய காயம் தன்னை ஆன்மா நின்று ஆட்டுமாறு - பந்த மாகிய ஆனந்தமயகோசம் விஞ்ஞானமயகோசம் மனோமயகோசம் பிராண மயகோசம் அன்னமயகோசம் என்னும் ஐந்தினையும் ஆன்மா அவற்றோடு

ஒன்றாயும் வேறாயும் நின்று செலுத்தும் முறைமை,—தோற்பாவைக் கூத்தும் - தோற்பாவைக் கூத்தும்,—தொல்லை மரப்பாவை இயக்கமும் - பழைய மரப்பாவைக் கூத்தும்,—சீர்த் தேர் பாரில் செலவும் - சிறப்புடைய தேர் பூமியிற் செல்லுகையும், ஆகிய மூன்றனையும்,—வேறாய்ச் செலுத்துவோர் செய்தி தானும் - இவற்றின் வேறாய் நின்று ஆட்டுவோர் செலுத்துவோர்களின் தன்மையும்,—பார்ப்பாய வேடம் கட்டி ஆடுவோர் பரிசும் போலும் - பார்க்கப்படுகின்ற பல வேடங்கட்டி அதுவதுவாய் நின்று ஆடுவோர் தன்மையும் போலுமாம்.

குறிப்பு. 1. தோற்பாவை ஆனந்தமய விஞ்ஞானமய கோசங்களாகிய காரணகஞ்சுகசரீரங்களுக்கும், மரப்பாவை மனோமய பிராணமய கோசங்களாகிய குண சூக்குமசரீரங்களுக்கும், தேர் அன்னமயகோசமாகிய தூலசரீரத்துக்கும் உவமைகளாம். இச்சரீரங்களின் மென்மை வன்மைபற்றி இவை உவமைகளாகக் கூறப்பட்டன. தோற்பாவை மென்மையுள்ளது. மரப்பாவை அதனினும் வலியது. தேர் அதனினும் வலியது. இவைபோல, ஆனந்தமய விஞ்ஞானமய கோசங்கள் சூக்குமமாயுள்ளன. குண சூக்கும சரீரங்கள் அவற்றினுந் தூலமாயுள்ளன. தூலசரீரம் அவற்றினுந் தூலமாயுள்ளது. ஆன்மா இத்தன்மைத்தாய சரீரங்களைப்பொருந்தி இவற்றோடு அதுவதுவாயும் வேறாயும் நின்று இவற்றைச் செலுத்தும் என்பது பொருள். தோற்பாவையை ஆட்டுவோனும் மரப்பாவையை ஆட்டுவோனும் அவற்றின் வேறாயிருந்து அவற்றை ஆட்டுதல்போலவும், தேரைச் செலுத்துவோன் அதனின் வேறாயிருந்து அதனைச் செலுத்துதல் போலவும், இச்சரீரங்களைச் செலுத்தும் ஆன்மா அவற்றின் வேறாயிருந்து செலுத்தும். ஆயினும், பல வேடங்கட்டி ஆடுவோன் அதுவதுவாய் நின்று ஆடுந்தன்மைபோல, ஆன்மாவும் அச்சரீரங்களைப் பொருந்தியவிடத்து அதுவதுவாய் நின்று அவற்றைச் செலுத்தும் என்பதாம்.

2. தேர்ப்பார்:—எதுகைநோக்கி வல்லெழுத்து மிக்கது. பார் - பூமி.

3. ஆர்ப்பாய:—ஆர்ப்பு - கட்டு, பந்தம்.

பொழிப்பு. ஆன்மாவானது ஐங்கோசங்களின் வேறாயும், அவற்றோடு அதுவதுவாயும் நின்று அவற்றைச் செலுத்தும் முறைமை, தோற்பாவை மரப்பாவைகளை ஆட்டுவோரும் தேரைச் செலுத்துவோரும் அவற்றிற்கு வேறாய் நின்று ஆட்டிச் செலுத்துந் தன்மையும், பல வேடங்கட்டி ஆடுவோன் அதுவதுவாய் நின்று ஆடுந்தன்மையும் போலுமாம்.

(c). உயிர் பஞ்சகோசங்களின் வேறாதலை விளக்கல்.

**215.** என்னுடல் பொறிபிராணன் கரணமென் னுணர்வென் றக்காற்
தன்னின்வே றாகு நீயென் றன்மனை யென்ற வெல்லாம்
நின்னின்வே றாகு மென்னி னீங்கிடா விவையிங் கென்னின்
உன்னின வாகி நீயா முகிர்மயி ருகவுங் காண்டி.

(இ-ள்). என் உடல் பொறி பிராணன் கரணம் என் உணர்வு என்றக்கால் தன்னின் வேறாகும் நீ - எனது உடல் எனது பொறி எனது பிராணன் எனது கரணம் எனது அறிவு என்று நீ சொல்லுமிடத்து (அவ்வாறு சொல்லுதலாலே) நீ அவற்றின் வேறாகுமன்றே,—என்றன் மனை என்ற எல்லாம் நின்னின் வேறாகும் - அது, நீ எனது மனைவி (எனது வீடு) என்று அபேதமாய் வழங்கிவந்தனவெல்லாம் உனக்கு வேறாயிருத்தல் போலவேயாம்,—இவை இங்கு என்னின் நீங்கிடா என்னின் - மனைவி முதலிய புறப்பொருள்கள் என்னின் வேறாதல்கூடும். உடல் பொறி முதலிய இவைகளோ இங்கே என்னைவிட்டு நீங்கமாட்டா. ஆகையால் உயிர் பஞ்சகோசங்களின் வேறன்று என நீ சொல்வின்,—உன்னினவாகி நீயாம் உகிர் மயிர் உகவும் காண்டி - உன்னுடையனவாகி அபேதமாய் எனதென்று வழங்கப்படும் நகம் மயிர் முதலியன நீங்குதலும் நீ காணுதலால் அவைபோல உடல் முதலியனவும் நீங்குவனவாம். ஆதலால் நீ அவற்றின் வேறாம்.

குறிப்பு. 1. உயிர் பஞ்சகோசங்களின் வேறன்று என்பார் தேகான்மவாதிகள் முதலிய பலவகை உலோகாயதருமாம். (செ. 188-191 பார்).

2. உடல் பொறி முதலியன பஞ்சகோசங்களைக் குறித்து நின்றன.

3. உன்னின:—உன் + இன் + அ—இன் சாரியை பெற்ற அகரவீற்றுப் பலவறிசொல்.

பொழிப்பு. மனைவி வீடு முதலியன ஆன்மாவுக்கு வேறாயிருத்தல்போலப் பஞ்சகோசங்களும் அதற்கு வேறாகும்.

இதுவுமது.

**216.** பொன்னணி யாடை மாலை போதுமே லான போதிங்
கென்னணி யானென் றுன்னி யிருந்தனை பிரிந்த போது
நின்னணி நீயு மல்ல வாயின காய நின்னின்
அன்னிய மாகு முன்னை யறிந்துநீ பிரிந்து பாரே.

(இ-ள்). பொன் அணி ஆடை போதுமாலை மேலான போது - பொன்னாபரணம் வஸ்திரம் பூமாலை முதலிய புறப்பொருள்களை அணிந்தபோது,—இங்கு என் அணி யான் என்று உன்னி இருந்தனை - இவ்விடத்து என் ஆபரணம் என்றும், அபேதம்பற்றி யான் என்றும் நீ இவற்றைக் கருதியிருந்தாய்,—நின் அணி பிரிந்தபோது நீயும் அல்லவாயின - நின்னால் அணியப்பட்ட அப் பொன்னாபரணம் முதலியவை நீங்கியபோது அவை உனக்கு அந்நியமாய் நீயும் அல்லவாயிருந்தன, அதுபோல,—காயம் நின்னின் அன்னியமாகும் - உடல் பொறி முதலிய அனைத்தும் நின்னிலிருந்து வேறாகும்,—உன்னை அறிந்து நீ பிரிந்து பார் - ஆதலால் உனது சொரூபத்தை அறிந்து நீ இவற்றை நீங்கிநின்று அறிவாயாக.

பொழிப்பு. ஆபரணம் முதலியவற்றை அணிந்திருக்கும்பொழுது என் ஆபரணம் என்றும் அவை யான் என்றும் அபேதமாய் நினைந்திருந்தாய். அவை உன்னை நீங்கியபொழுது நீயல்லவாயினாற்போல, உடல் பொறி முதலியனவெல்லாம் உனக்கு வேறாகும். ஆதலால், நீ உன் உண்மையை அறிந்து இவற்றை நீங்கிநின்று பார்ப்பாயாக.

இதுவுமது.

**217.** உடலியா னல்லே னிந்த வுணர்வுயா னல்ல வான
கடனியா தென்னின் வேறு கண்டுணர் வென்ன தென்கை
இடரிலா வென்ற னான்மா வென்றபோ தான்மா வேறே
திடனதா வுயிரை வேறு கண்டிடார் செப்ப லேகாண்.

(இ-ள்). உடல் யான் அல்லேன் - உடல் பொறி முதலியன யான் அல்லன் என்பது அமையும்,—இந்த உணர்வு யான் அல்லவான கடன் யாது என்னின் - இந்த விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்கள் யான் அல்லன் என்னும் முறைமை யாதெனின்,—வேறு கண்டு உணர்வு என்னது என்கை - ஏனைக் கோசங்களைப்போல வேறாகக் கண்டு இவற்றை எனதென்று வழங்குதல்பற்றியாம். அப்படியாயின்,—இடர் இலா என்றன் ஆன்மா என்றபோது ஆன்மா வேறே - குற்றமில்லாத என்னுடைய ஆன்மா என்றவிடத்து யான் வேறு ஆன்மா வேறே?,—திடனதா உயிரை வேறு கண்டிடார் செப்பலே காண் - அஃது உணர்பொருள்களையெல்லாம் உணர்ந்துநிற்பதாகிய உயிரை உறுதியாக அவற்றினின்று பிரித்தறியாதார் கூறும் கூற்றாமென அறிவாயாக.

குறிப்பு. 1. உணர்வு - ஆனந்தமய விஞ்ஞானமயகோசங்களைக் குறித்து நின்றது.

2. திடனதாவுயிரை வேறு கண்டிடார் செப்பலே காண்:—உயிரென்ப தொன்றுண்டெனவும் அவ்வுயிரே "யான்" என நின்று விடயங்களை அறியும் எனவும் கொண்டு, பின் எனதுயிர் என வழங்கும் உலகவழக்குண்டாகையால், யான் என்னும் உயிரின் வேறாயதே உயிர் ஆகும் எனக்கொள்ளின், பிரதிஞ்ஞாஹாநி என்னும், தோல்வித்தானமாய் முடியுமாதலால், அவ்வாறு கூறுங் கூற்று உயிர் எனப்படுவது உணரும்பொருளாயுண்டு என்னும் ஆன்மாவினுண்மை உணராதார்கூற்றாம் எனக் கொள்க. அவர்மேல் "உயிரெனப்படுவதிந்த வுடலின்வேறுளதாய்" (செ. 187) என்பதற்குக் காட்டிய நியாயங்களைக் கடைப்பிடித்துத் "திடனதாய் உயிரை வேறு காண்டலே" சாலும் என்க. (செ. 192 பார்). அவ்வாறு கண்டக்கால், என்றனான்மா என்னும் வழக்கு உபசாரமுறையில் ஆன்மாவோடு சம்பந்தமுள்ள பிறிதொருபொருளைக் குறித்துக் கூறப்படுவதேயன்றி உயிருண்மையை அபசித்தாந்தப்படுத்தியதன்றாம் என்பதைக் காட்டவே, வருஞ் செய்யுளிரண்டும்

வந்தவாறு காண்க. பிரதிஞ்ஞாஹாநி:—சாதிக்கத்தக்கது என்று தன்னாற் சொல்லப்பட்ட பிரதிஞ்ஞையைச் சாதித்துமுடியாமல் அதற்குக் கேடுவருமாறு சொல்லுதல், அபசித்தாந்தம் - ஒருசித்தாந்தத்தை அநுசரித்துப் பேசத்தொடங்கி, அதற்கு மாறான சித்தாந்தத்தைப் பேசிமுடித்தல். (பக். 37, 38 பார்). இதற்கு, ஆன்மாவை எனதென்றல், வேறாகக் காணுங் கருத்தின்றி இராகுவினது தலையென்றாற்போல ஒருசாரார் கூறுஞ் சிறுபான்மை வழக்காகலின், அஃதபேதம்பற்றிய வழக்கென வமையும், மற்றைக் கோசங்களை யெனதென்றல் அவ்வாறன்மையின் அவை உயிரின் வேறேயாம் என்பர் சிவஞானமுனிவர். தற்பொருளறிவாய்த் தன்மியாகிய ஆன்மாவைப் பிறப்பொருளறிவாய்த் தன்மமாகிய சிற்சத்தியினின்றும் பிரிவின்றிப் பிரித்தறியாதார் அபேதமாகப் பேசுவது என்பர் ஞானப்பிரகாசர்.

பொழிப்பு. விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்களை எனதென்றல் வழக்காயினும், அவையும் ஏனைக் கோசங்கள்போல ஆன்மாவின் வேறாம். ஆன்மாவை எனதென்றல், அதன் உண்மை தெரியாதார் கூறுங் கூற்றாம்.

இதுவுமது.

**218.** புந்தியை மனம தென்று மனமது புந்தி யென்றுஞ்
சிந்தையைச் சீவ னென்றுஞ் சீவனைச் சிந்தை யென்றும்
முந்தனை யான்மா வென்று மான்மாவை முந்த னென்றும்
வந்திடு மென்ற னான்மா வென்றது மற்றொன் றைக்காண்.

(இ - ள்). புந்தியை மனமது என்றும் மனமது புந்தி என்றும் - புத்தியை மனம் என்றும் மனத்தைப் புத்தி என்றும்,—சிந்தையைச் சீவன் என்றும் சீவனைச் சிந்தை என்றும் - சித்தத்தை ஆன்மா என்றும் ஆன்மாவைச் சித்தம் என்றும்,—முந்தனை ஆன்மா என்றும் ஆன்மாவை முந்தன் என்றும் - சிவபிரானை ஆன்மா என்றும் ஆன்மாவைச் சிவபிரான் என்றும்,—வந்திடும் - ஒவ்வோரவதரங்களில் உபசாரமாகக் கூறப்படும்,—என்றன் ஆன்மா என்றதும் மற்றொன்றைக் காண் - இவைபோல என்றன் ஆன்மா என்பதும் தன்னோடு சம்பந்தமுள்ள பிறிதொரு பொருளைக் குறிக்கும் என்பதை அறிவாயாக.

குறிப்பு. 1. புத்தியை மனம் என்பது காரணவிலக்கணை. காரணவிலக்கணை - காரணப்பொருளின் பெயர் காரியப்பொருளின் பெயராய் நிற்றல். மனத்தைப் புத்தி என்பது காரியவிலக்கணை. காரியவிலக்கணை - காரியத்தைக் காரணமாக உபசரித்தல்.

2. சிந்தையைச் சீவன் என்பது சமீபலக்கணை. சமீபலக்கணை - ஒரு பொருளின் பெயர் அதற்குச் சமீபத்திலே இருக்கும் மற்றொரு பொருளின் பெயராய் நிற்றல். கங்கையிலே இடைச்சேரி என்பது போல. (சிவாக்). ஞானப்பிரகாசர் இதனை உபகாரலக்கணை என்பர். உபகாரலக்கணை - ஒரு பொருளின் பெயர் அதற்கு உபகாரமாயிருக்கும் மற்றொரு பொருளுக்குப்

பெயராதல். சிவனைச் சிந்தை என்பது தன்மாநுகிருதிலக்கணை. தன்மாநுகிருதிலக்கணை - தன்மை ஒத்திருத்தல்பற்றி ஒன்றை மற்றொன்றாய்ச் சொல்வது. அது இப்புருடன் சிங்கம் என்பது போல்வது. தன்மம் - குணம், தன்மை. அநுகிருதி - ஒப்பு. இதனை ஞானப்பிரகாசர் சமீபலக்கணை என்பர்.

3. முந்தனை ஆன்மா என்பது அங்காங்கிலக்கணை. அங்காங்கிலக்கணை - அங்கத்தின் பெயர் அங்கியை உணர்த்தி நிற்பது. ஞானப்பிரகாசர் இதனை உபகாரலக்கணை என்பர். ஆன்மாவை முந்தன் என்பது ஆதாரலக்கணை (சிவாக்). ஆதாரலக்கணை - ஆதாரத்துக்குரிய பெயர் ஆதேயத்தைக் கருதி நிற்பது. (உ - ம்). கட்டில் கூப்பிட்டது என்றவிடத்து, ஆதாரமாகிய கட்டிலின் பெயர் அதிலுள்ள ஆதேயமாகிய புருடனுக்காதல் போல்வது. இதனை ஞானப்பிரகாசர் தன்மாநுகிருதிலக்கணை என்பர். முந்தன் - கடவுள்.

4. மற்றொன்று - ஏகனாகி அநேகான்மாக்களுக்கும் பிராணனாய் நின்ற பரமான்மாவை என்பர் சிவாக்கிரயோகியர்.

பொழிப்பு. என்றன் ஆன்மா என்னும் வழக்கில் ஆன்மா தன்னோடியைபுடைய பிறிதொரு பொருளைக் குறிக்கும்.

உயிர் பஞ்சகோசங்களின் வேறாதலை வலியுறுத்தல்.

**219.** அறிவுடல் சிந்தை யான்மா வணைதலா லான்மா வென்பர்
எறிசுடர் விளக்கி ருக்கு மிடத்தையும் விளக்கென் றாற்போற்
பொறிபுலன் கரண மெல்லாம் புலப்படு மபேத மாகிப்
பிறிதரா தறிவ தான்மா வறிபொருள் பின்ன மாமே.

(இ - ள்). அறிவு -விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்களையும்,—சிந்தை - மனோமய பிராணமய கோசங்களையும்,—உடல் - அன்னமய கோசத்தையும்,—ஆன்மா அணைதலால் - ஆன்மா பொருந்துதல்பற்றி,—ஆன்மா என்பர் - அக்கோசங்களையும் ஆன்மா எனக் கூறுவர்,—சுடர் எறி விளக்கு இருக்கும் இடத்தையும் விளக்கு என்றாற் போல் - ஒளியை வீசும் விளக்கிருக்கின்ற தகழியையும் விளக்கென்றாற் போலவாம்,—பொறி புலன் கரணம் எல்லாம் அபேதமாகிப் புலப்படும் - ஆதலாற் பொறி புலன் கரணங்கள் யாவும் ஆன்மாவுக்கு வேறல்லனவாக அறியப்படும்,—பிறிதராது அறிவது ஆன்மா - அங்ஙனம் பிரிவின்றி நின்று அறிவது ஆன்மாவாம்,—அறி பொருள் பின்னமாம் - ஆயினும் அங்ஙனம் அறியப்படும் பொருள்கள் அவ்வான்மாவுக்கு வேறாம்.

குறிப்பு. 1. அறிவுடல் சிந்தை யான்மா வணைதலா லான்மா வென்பர்:— உபநிடதங்கள் ஒரோவிடங்களில் அன்னமயகோசம் ஆன்மா என்றும், பிராணமயகோசம் ஆன்மா என்றும், மனோமயகோசம் ஆன்மா என்றும், விஞ்

ஞானமயகோசம் ஆன்மா என்றும், ஆனந்தமயகோசம் ஆன்மா என்றுஞ் சொல்லும். ஆன்மா அக்கோசங்களில் அபேதமாய் நின்று அறிதலால் அவ்வாறு கூறப்பட்டதாம். அறிவு என்றது ஆனந்தமய விஞ்ஞானமயகோசங்களையும், சிந்தை என்றது பிராணமய மனோமயகோசங்களையும், உடல் என்றது அன்னமயகோசத்தையுங் குறித்து நின்றன. இங்ஙனம் பஞ்ச கோசங்களும் மூவகையாகப் பிரிக்கப்பட்டவாறு காண்க.

2. பொறி புலன் கரணம் எல்லாம்:—பொறி புலன் கரணமெல்லாம் என்றது, 215-ம் செய்யுளிற் கூறப்பட்ட உடல் முதலிய பஞ்சகோசங்களையும் குறித்து நின்றன.

பொழிப்பு. ஐங்கோசங்களையும் ஆன்மா பொருந்துதல்பற்றி அவற்றையும் ஆன்மா என உபநிடதங்கள் கூறும். அவையெல்லாவற்றின்கண்ணும் அபேதமாய்ப் பிரிவின்றி நின்று அறிவதாகிய ஆன்மா அவற்றின் வேறாம்.

இதுவுமது.

220. கண்டுணர் புருடன் வேறு கனவுகண் டொடுங்கிக் காயம்
உண்டியும் வினையு மின்றிக் கிடந்துயிர்த் திடவு ணர்ந்து
கண்டிடுங் கனவுஞ் சொல்லி யொடுக்கமுங் கருதி வேறாய்
உண்டியும் வினையு முற்றிங் குணர்த்திட வுணரா நிற்கும்.

(இ-ள்). கண்டு உணர் புருடன் - அங்ஙனம் பொறி புலன் முதலியவற்றை அபேதமாகக் கண்டு அவற்றோடு பிரிவின்றி நின்று அறிந்து சாக்கிராவத்தையுறும் உயிரானது,—வேறு - அவற்றின் வேறாம், எவ்வாறெனின்;—கனவு கண்டு - அவ்வுயிரானது சொப்பனாவத்தையைப் பொருந்திக் கனவுகண்டு,—ஒடுங்கி - பின் சுழுத்தி முதலிய அவத்தைகளை அடைந்து,—காயம் உண்டியும் வினையும் இன்றிக் கிடந்து - உடலானது போக விருப்பமும் தொழிலுமின்றி ஓரிடத்திற்கிடந்து,—உயிர்த்திட - பின் சாக்கிராவத்தையுற்று விழித்தவிடத்து,—உணர்ந்து - தெளிவடைந்து,—கண்டிடும் கனவும் சொல்லி - சொப்பனாவத்தையிலே தோன்றிய கனவையுஞ் சொல்லி,—ஒடுக்கமும் கருதி - சொல்லவாராமையாற் சுழுத்தி முதலிய அவத்தைகளின் அனுபவத்தையும் உணர்ந்து,—வேறாய் உண்டியும் வினையும் உற்று - இச் சொப்பனம்முதலிய அவத்தைகளுக்கு வேறாய்ப் போக விருப்பும் தொழிலும் பொருந்தி,—இங்கு உணர்த்திட உணரா நிற்கும் - இப்பொறி புலன் முதலியன அறிவிக்க விடயங்களை அறியுமாதலினும்.

குறிப்பு. உயிர் அன்னமயகோசத்தைக் கூடிநின்று சாக்கிராவத்தையும், பிராணமயகோசத்தைக் கூடிநின்று சொப்பனாவத்தையும், மனோமயகோசத்தைக் கூடிநின்று சுழுத்தியவத்தையும், விஞ்ஞானமயகோசத்தைக் கூடி

நின்று துரியாவத்தையும், ஆனந்தமயகோசத்தைக் கூடிநின்று துரியாதீதாவத்தையும்படும். அன்னமயகோசத்தோடு கூடிய சாக்கிராவத்தையில் அது விடயங்களை அறியும். ஏனைக் கோசங்களோடு கூடிய சொப்பனாவத்தை முதலிய அவத்தைகளில் அவ்வாறு அறியாது நிற்கும். பஞ்சகோசங்கள் ஆன்மாவாயின், கோசங்களோடு கூடிய எல்லா அவத்தைகளிலும் ஆன்மாவுக்கு அறிதல் நிகழவேண்டும். அவ்வாறின்மையின், பஞ்சகோசங்கள் ஆன்மாவாகா. அன்றியும் பொறி கரணங்கள் முதலியவற்றின் துணைகொண்டு ஆன்மா அறிதலின், ஆன்மா அவற்றின் வேறாம்.

பொழிப்பு. அன்னமய கோசத்தோடு கூடிய சாக்கிராவத்தையிலே ஆன்மா விடயங்களை அறிதலாலும், ஏனைக் கோசங்களோடு கூடிய ஏனை அவத்தைகளிலே அவ்வாறின்மையாலும், ஆன்மா கோசங்களாகாது. அன்றியும், கோசங்களாகிய பொறி கரணங்கள் முதலியவற்றின் சகாயத்தால் ஆன்மா அறிதலின், ஆன்மா அவற்றின் வேறாம்.

(e). உயிர் பஞ்சகோசங்களோடும் ஒன்றாய் நிற்கும் முறைமையை விளக்குதல்.

**221.** புருடனே யறிவ னாகிற் பொறிபுல னாதி போதந்
தருவதெ னறிவு மாயா தனுகர ணாதி பற்றி
வருவதிங் கநாதி யாக மலத்தினின் மறைந்து நிற்பன்
அருவனு யிவற்றோ டாளு மமைச்சரு மரசும் போல்வன்.

(இ - ள்). புருடனே அறிவனாகில் - மேற்கூறியவாறு ஆன்மாவே அறியும் என்னின்,—பொறி புலன் ஆதி போதம் தருவது என் - பொறி புலன் முதலியன ஆன்மாவுக்கு அறிவைத் தரும் என்பது எற்றுக்கு,—அநாதியே மலத்தினின் மறைந்து அருவனாய் நிற்பன் - ஆன்மா அநாதியே தனது ஞானக்கிரியைகள் ஆணவமலத்தினாலே மறைக்கப்பட்டுக் கேவலத்தில் உருவிலியாய் நிற்குமாதலால்,—மாயா தனுகரணாதி பற்றி இங்கு அறிவு வருவது - மாயாகாரியமான தனுகரணாதிகளைக் கூடிச் சகலநிலையிலே அதற்கு அறிவு உண்டாகும்,—இவற்றோடு ஆளும் அரசும் அமைச்சரும் போல்வன் - அரசன் மந்திரிகளோடு ஒற்றித்து நின்று அரசுசெய்தல்போல அவ்வான்மாவும் இத்தனுகரணாதிகளோடு ஒற்றித்து நின்று விடயங்களை அறியும்.

குறிப்பு. 1. பொறிபுலனாதி - (செ. 219).

2. தனு கரணாதி:—கரணாதி - ஐம்பொறிமுதலிய புறக்கரணங்களும் மனம் முதலிய அந்தக்கரணங்களும், கலை முதலிய உள்ளந்தக்கரணங்களும். தனு அன்னமயகோசத்தையும், கரணாதி ஏனைக் கோசங்களையுங் குறித்து நின்றன.

பொழிப்பு. ஆன்மா தானாக அறியாது. தனு கரணாதிகளோடு கூடிநின்று விடயங்களை அறியும். அது அரசன் மந்திரிகளோடு கூடிநின்று அரசுசெய்தல்போலவாம்.

II. துயிலோடு மஞ்சவத்தைப்படும். உண்மை துரியாதீதம், (222-230).

இஃது இரண்டாம் பிரிவு. அவத்தையிலக்கணம் கூறுகின்றது.

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. கீழாலவத்தை, (222).
2. கீழாலவத்தையிலே தொழிற்படுங் கருவிகள், (223).
3. மத்தியாலவத்தையும் நின்மலாவத்தையும், (224).
4. சுத்ததத்துவங்கள் கலாதிகளைச் செலுத்தும் முறைமை, (225).
5. மத்தியாலவத்தை நின்மலாவத்தை யோகாவத்தைகளின் இயல்பு, (226).
6. காரணாவத்தைகளும் அவற்றின் இயல்பும், (227).
7. காரணகேவலத்தில் ஆன்மாவின் இயல்பு, (228).
8. காரணசகலத்தில் ஆன்மாவின் இயல்பு, (229).
9. காரணசுத்தத்தில் ஆன்மாவின் இயல்பு, (230).

1. கீழாலவத்தை.

**222.** படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போ தில்லிற்
கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுப் பின்னர்
அடைதருந் தனியே யந்தப் புரத்தினி லதுபோ லான்மா
உடலினி லஞ்ச வத்தை யுறுமுயிர் காவ லாக.

(இ-ள்). படைகொடு பவனி போதும் பார் மன்னன் - அமைச்சர் படைத்தலைவர் முதலிய பரிசனங்களோடு வெளியிலே உலாப்போன பூவுலக அரசன்,—இல்லில் புகும் போது - மீள அரண்மனையுட் புகும்போது,—கடைதொறும் விட்டு விட்டு - ஒவ்வொரு வாயிலிலும் நிறுத்தவேண்டியவர்களை அங்கங்கே நிறுத்தி,—காவலும் இட்டு - காவலும் வைத்து,—பின்னர் அந்தப்புரத்தினில் தனியே அடைதரும் அதுபோல - பின்பு அந்தப்புரத்திலே தனியே புகுமாறுபோல,—ஆன்மா - தனுகரணாதியோடுகூடி விடயங்களை அறிந்து பற்றி அனுபவித்த புருடனும் உடலினுட் செல்லும் பொழுது,—உடலினில் உயிர் காவலாக - அவ்வுடலின்கண் இலலாடம் கண்டம் இருதயம் என்னும் தானங்களிற் கருவிகளை விட்டுவிட்டு நாபித்தானத்திலே பிராணவாயுவைக் காவலாகவைத்து மூலாதாரமாகிய அந்தப்புரத்திற்குத் தனியே சென்று,—அஞ்சு அவத்தை உறும் - இங்ஙனம் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐவகை அவத்தைகளையும் பொருந்தும்.

குறிப்பு. நாதம்முதற் பிருதிவியீறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களுடனும் தாத்துவிகங்களுடனுங் கூடிச் சகலவிடயங்களையும் ஆன்மா அறி

ந்துபற்றி அனுபவித்து நிற்கும் அவதரம் சகலாவத்தை என்றும், சப்பிரதி பா சாக்கிரம் (உணர்த்து முறைமைச் சாக்கிரம், அறிதரு சாக்கிரம்) என்றும் சொல்லப்படும். சப்பிரதி பா - விளக்கமான அறிவு. ச - கூட. பிரதி பா - விளக்கமான அறிவு. அங்ஙனம் விடயங்களை அறிந்துபற்றி அனுபவியாது கீழ்நோக்கிச் சென்று சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்தவத்தையும்படும். இது கீழாலவத்தை என்றும், சகலத்திற் கேவலம் என்றும், காரியகேவலம் என்றும் அப்பிரதிபா சாக்கிரம் என்றும் சொல்லப்படும். கீழாலவத்தையிலே துரியாதீதம் கேவலத்தின் தன்மையை ஒத்திருத்தலால் இவ்வவத்தை காரியகேவலம் எனப்பட்டது. "நீக்கமிலதீத மாசு நிறைந்தகேவலமா நீர்மை." (சிவப்பிர. செ. 62). அப்பிரதிபா:—அ - எதிர்மறை. பிரதிபா - விளக்கமான அறிவு.

பொழிப்பு. ஆன்மா இலலாடம், கண்டம், இருதயம் நாபி மூலாதாரம் என்னும் இடங்களிலே முறையே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்தவத்தையுமுறும்.

2. கீழாலவத்தையிலே தொழிற்படுங் கருவிகள்.

**223.** சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னில்
ஆக்கிய விருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று
நீக்கிய விதயந் தன்னிற் றுரியத்தி லிரண்டு நாபி
நோக்கிய துரியா தீத நுவலின்மூ லத்தி லொன்றே.

(இ - ள்). சாக்கிரம் முப்பத்தைந்து நுதலினில் - சாக்கிராவத்தையில் முப்பத்தைந்து கருவிகள் இலலாடத்தானத்திலும்,—ஆக்கிய கனவு தன்னில் இருபத்தைந்து களத்தினில் - அதன்பின் உண்டாக்கப்பட்ட சொப்பனவத்தையில் இருபத்தைந்து தத்துவங்கள் கண்டத்தானத்திலும்,—நீக்கிய சுழுனை மூன்று இதயம் தன்னில் - இவை இரண்டும் ஒழிந்த சுழுத்தியவத்தையிலே மூன்று கருவிகள் இதயத்தானத்திலும்,—துரியத்தில் இரண்டு நாபி - துரியாவத்தையில் இரண்டு கருவிகள் நாபித்தானத்திலும்,—நோக்கிய துரியாதீதம் நுவலின் ஒன்று மூலத்தில் - முற்கூறிய துரியாதீதத்தைச் சொல்லுமிடத்து ஒருகருவி மூலாதாரத்திலும் தொழிற்படும்.

குறிப்பு. 1. சாக்கிர முப்பத்தைந்து - ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, சத்தாதி விடயங்கள் ஐந்து, வசனாதி ஐந்து, பிராணாதி பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று. ஏனைய தத்துவங்கள் அறுபத்தொன்றுள், தன்மாத்திரைகள் ஐந்தும் பூதங்கள் ஐந்தும் புறக்கருவிகள் நாற்பதும் ஆகிய ஐம்பது கருவிகளும் தமது சத்தி மடங்கி வினைக்கீடாகத் தொழிற்படாதொழியும். சிவதத்துவம் ஐந்தும், புருடன் நீங்கலாகக் கலாதிகள் ஆறும் ஆகிய பதினொன்றும், கன்மமில்லாதிருக்கையால் முறையே

பிரேரித்தலும் புசிப்பித்தலுமின்றி அவத்தைக்கு ஏதுவாகாதிருக்கும். பிரேரித்தல் - சிவதத்துவங்கள் கலாதிகளைச் செலுத்துதல். புசிப்பித்தல் - கலாதிகள் போக்கியகாண்டக் கருவிகளை எழுப்பி விடயபோகங்களை அனுபவிக்கச்செய்தல்.

2. கனவு தன்னில் ஆக்கிய விருபத்தைந்து:—சத்தாதி ஐந்து, வசனாதி ஐந்து, பிராணாதி பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று.

3. சுழுனை மூன்று - சித்தம், பிராணன், புருடன்.

4. துரியத்தி லிரண்டு - பிராணவாயு, புருடன்.

5. மூலத்திலொன்று - புருடன்.

பொழிப்பு. சாக்கிராவத்தையுறும் இலலாடத்தானத்தில் முப்பத்தைந்து கருவிகளும், சொப்பனாவத்தையுறும் கண்டத்தானத்தில் இருபத்தைந்து கருவிகளும், சுழுத்தியவத்தையுறும் இதயத்தானத்திலே மூன்று கருவிகளும், துரியாவத்தையுறும் நாபித்தானத்தில் இரண்டு கருவிகளும், துரியாதீதாவத்தையுறும் மூலாதாரத்தில் ஒரு கருவியும் தொழிற்படும்.

3. மத்தியாலவத்தையும் நின்மலாவத்தையும்.

**224.** அறிதரு முதல வத்தை யடைதரு மிடத்தே யைந்துஞ்
செறிதருங் கரணந் தன்னிற் செயறொறுங் கண்டு கொண்ணீ
பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற வருளா லாங்கே
குறியொடு மஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட.

(இ - ள்). அறி தரும் முதல் அவத்தை அடைதரும் இடத்தே - மேற்கூறிய அவத்தை ஐந்தனுள் விடய அறிவைத் தரும் முதலவத்தையாகிய சாக்கிராவத்தை பொருந்துகின்ற இலலாடத்தானத்திலே,—ஐந்தும் செறிதரும் - சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகளும் பொருந்தும்,—கரணம் தன்னில் செயல் தொறும் நீ கண்டுகொள் - கருவிகளால் விடயங்களை அறியுஞ் செய்கை தோறும் அவை அதிநுட்பமாய் இடையீடின்றி நிகழும் முறைமையை நுண்ணுணர்வால் நீ காண்பாயாக,—பிறிவிலா ஞானத்தோரும் - எங்கும் நீக்கமின்றி நிற்கும் திருவருளைப் பெற்றோரும்,—பிறப்பு அற—வீடு கூட - பிறப்பு நீங்கி முத்தியடையும்பொருட்டு,—அருளால் - ஞானாசாரியரின் உபதேசப்படி,—ஆங்கே - அவ்விலலாடத்தானத்திலே,—குறி யொடும் அஞ்சு அவத்தை கூடுவர் - தமது அறிவை ஒரு குறியின்கண் நிறுத்திச் சாக்கிரம் முதலிய நின்மலாவத்தை ஐந்தினையும் பொருந்துவர்.

குறிப்பு. 1. அறிதரு முதலவத்தை யடைதரு மிடத்தே யைந்துஞ் செறிதரும்:—மேற்கூறியவாறு இலலாடத்தானத்தினின்றும் நீங்கிக் கீழ்நோக்கிச்

சென்று கண்டம் முதலிய தானங்களில் அவத்தைப்பட்டு மூலாதாரத்தைப் பொருந்திய புருடன், மீண்டும் அவ்வாறே அவ்வத்தானங்களில் அவத்தைப்பட்டு மேலே சென்று இலலாடத்தானத்திலே அறிதரும் சாக்கிராவத்தையைப் பொருந்துவன். அறிதரும் சாக்கிரம் - விடயங்களை உணர்த்து முறைமைச் சாக்கிரம், சப்பிரதிபா சாக்கிரம். இச்சாக்கிராவத்தை பொருந்துகின்ற இலலாடத்தானத்திலே சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தி, சாக்கிர துரியம், சாக்கிர துரியாதீதம் என ஐந்தவத்தை நிகழும். இது மத்தியாலவத்தை என்றும், சகலத்திற் சகலம் என்றும், காரியசகலம் என்றும், நிலைபிற்படு மவத்தை என்றுஞ் சொல்லப்படும்.

2. கரணந் தன்னிற் செயற்றுறுங் காண்டல் - சாக்கிர சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையிலும் ஆன்மா அந்தக்கரணங்கள்வாயிலாக அவ்வப் பொறிகளால் அவ்வவ்விடயங்களை உணர்ந்து அவ்வப்போது அவ்வவ்விடயங்களினின்று நீங்குதலைக் காண்டல்.

3. ஞானத்தோரும் குறியொடு மஞ்சவத்தை கூடுவர்:—திருவருளைப் பெற்றோர் ஞானநிட்டை எய்தாவிடத்துக் குறிப்புப்பாவனை செய்து உபாய நிட்டை கூடுவர். குறிப்புப்பாவனையாவது சிவன் தமக்கு அனுக்கிரகஞ் செய்யுமிடத்துக் கொண்டருளிய வடிவத்திலாதல் தமது அறிவை நிறுத்தி ஐந்தவத்தையுங் கூடுதல். அவை நின்மல சாக்கிரம் நின்மல சொப்பனம் நின்மல சுழுத்தி நின்மல துரியம் நின்மல துரியாதீதம் எனப்படும். இந்திரியங்கள் பத்தும் பஞ்சபூதங்களிடமாய் நின்று விடயங்களை நேரே பற்றி அவற்றை விடப், பொருந்திய போதம் இறக்க இருந்த இடம் நின்மல சாக்கிரம் எனப்படும். அவ்விந்திரியங்களிடமாய் விடயங்களைப் பகுத்தறியும் ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளுக்கு இடமாகிய மனம் புத்தி அகங்காரங்களின் வியாத்தி அறுமிடம் நின்மல சொப்பனம் எனப்படும். ஆன்மசைதன்னியத்திற்கு அதிட்டானமான சித்த விசற்பம் ஒடுங்கின இடம் நின்மல சுழுத்தி எனப்படும். அச்சைதன்னிய வாகனமான பிராணவாயு நீங்கின இடம் நின்மல துரியம் எனப்படும். ஊசல் வடம் அற்றபோது வீழ்ந்த இடம் அதற்கு ஆதாரமானாற்போல, இங்ஙனம் கருவிப் போதம் எல்லாங் கழிந்தவிடத்து ஆன்மா அருள் ஆதாரமாய் நின்ற சுத்தாவத்தை நின்மலாதீதம் எனப்படும்.

பொழிப்பு. சாக்கிராவத்தையுறும் இலலாடத்தானத்திலே சாக்கிர சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையுளவாம். அவை கருவிகளால் விடயங்களை அறியுமிடத்து அதிநுட்பமாய் இடைவிடாது நிகழுதல் நுண்ணுணர்வால் அறியப்படும். திருவருளைப் பெற்றோரும் அக்கருவிகள் மீண்டும் தம்மைத் தாக்காது முத்தியடைதற்பொருட்டு, இவ்விலலாடத்தானத்திலே சாக்கிரம் முதலிய நின்மலாவத்தை ஐந்தினையும் பொருந்துவர்.

4. சுத்ததத்துவங்கள் கலாதிகளைச் செலுத்தும் முறைமை.

**225.** ஐந்துசாக் கிரத்தி னான்கு கனவினிற் சுழுனை மூன்று
வந்திடுந் துரியந் தன்னி னிரண்டொன்று துரியா தீதந்
தந்திடுஞ் சாக்கி ராதி யவத்தைக டானந் தோறும்
உந்திடுங் கரணந் தன்னிற் செயற்றொறு முணர்ந்து கொள்ளே.

(இ - ள்). சாக்கிரத்தில் ஐந்து - மேற்கூறிய மத்தியாலவத்தையில் நிகழும் சாக்கிரத்திலே சிவதத்துவம் முதற் சுத்தவித்தை யீறாகிய ஐந்து கருவிகளும்,—கனவினில் நான்கு - சொப்பனத்திலே சிவதத்துவம் முதல் மகேச்சுர மீறாகிய நான்கு கருவிகளும்,—சுழுனை மூன்று - சுழுத்தியிலே சிவதத்துவம் முதற் சாதாக்கிய மீறாகிய மூன்று கருவிகளும்,—வந்திடும் துரியம் தன்னில் இரண்டு - அதன்பின் வரும் துரியத்திலே சிவதத்துவம் சத்திதத்துவம் ஆகிய இரண்டு கருவிகளும்,—துரியாதீதம் ஒன்று - துரியாதீதத்திலே சிவதத்துவம் ஆகிய ஒரு கருவியும்,—சாக்கிராதி அவத்தைகள் தந்திடும் தானந்தோறும் - அச்சாக்கிரம் முதலிய அவத்தைகள் நிகழும் அவ்வவ்விடங்களிலே,—உந்திடும் - கலாதிகளைச் செலுத்தாநிற்கும்,—கரணம் தன்னில் செயல் தொறும் உணர்ந்துகொள் - கரணங்களால் விடயங்களை அறியுஞ் செய்கை தோறும் இதனை நீ நுண்ணுணர்வால் அறிந்துகொள்வாயாக.

பொழிப்பு. மத்தியாலவத்தையிலே நிகழும் சாக்கிராதியவத்தைகள் தொழிற்படும் அவ்வவ்விடங்களில் சிவதத்துவங்கள் முறையே ஐந்தும் நான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றுமாகக் கலாதிகளைச் செலுத்தி நிற்கும்.

5. மத்தியாலவத்தை நின்மலாவத்தை யோகாவத்தைகளின் இயல்பு.

**226.** இருவகை சாக்கி ராதி யவத்தைக ளியல்பு தானும்
ஒருவகை கீழே நூக்கி யுற்பவங் காட்டு மொன்று
பெருகமே னோக்கித் தீய பிறப்பறுத் திடுமி யோகிற்
றருவதோர் சமாதி தானுந் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்.

(இ - ள்). சாக்கிராதி அவத்தைகள் இயல்புதானும் - சாக்கிராதி அவத்தைகளின் இயல்பும்,—இருவகை - மேற்கூறியவாறு மத்தியாலவத்தை நின்மலாவத்தை என இருவகையாயிருக்கும்,—ஒருவகை கீழே நூக்கி உற்பவம் காட்டும் - மத்தியாலவத்தையாகிய ஒன்று கீழே தள்ளிப் பிறப்பினை உண்டாக்கும்,—ஒன்று பெருக மேல் நோக்கித் தீய பிறப்பு அறுத்திடும் - நின்மலாவத்தையாகிய மற்றொன்று முழுதும் மேலே செலுத்திக் கொடிய பிறவியை அறுக்கும்,—யோகில் தருவதோர் சமாதிதானும் - இவையன்றி யோகத்தாலுண்டாகும் சமாதியும்,—தாழ்ந்து பின் சனனம் சாரும் - கீழே தள்ளிப் பின்பு பிறவியைக் கொடுக்கும்.

குறிப்பு. யோகிற் றருவதோர் சமாதி - இருதயம் கண்டம் அண்ணம் இலலாடம் பிரமரந்திரம் என்னும் தானங்களிற் புறக்கரண அகக்கரணங் களைப் பற்றியும் பற்றாதும் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி எனப்பட்டு நிகழும் யோகாவத்தை.

பொழிப்பு. மத்தியாலவத்தை பிறவியைக் கொடுக்கும். நின்மலா வத்தை பிறவியை அறுத்தற்கு ஏதுவாயுள்ளது. யோகாவத்தையும் பிறவி யைக் கொடுப்பதாம்.

6. காரணாவத்தைகளும் அவற்றின் இயல்பும்.

**227.** கேவல சகல சுத்த மென்றுமூன் றவத்தை யான்மா
மேவுவன் கேவ லந்தன் னுண்மைமெய் பொறிக ளெல்லாங்
காவலன் கொடுத்த போது சகலனு மலங்க ளெல்லாம்
ஓவின போது சுத்த முடையனுற் பவந்து டைத்தே.

(இ - ள்). கேவல சகல சுத்தம் என்று மூன்று அவத்தை ஆன்மா மேவு வன் - மேற்கூறிய காரியாவத்தைகளுக்குக் காரணமாகிய கேவலம் சகலம் சுத்தம் என மூன்று அவத்தைகளை ஆன்மா எய்துவன்,—கேவலம் தன் உண்மை - அவற்றுட் கேவலமாவது இச்சாஞானக்கிரியைகளின் நிகழ்ச்சி சிறிதுமின்றித் தான்மாத்திரம் உளனாதலாம்,—மெய் பொறிகள் எல்லாம் காவலன் கொடுத்த போது சகலனும் - பின்பு தனு கரணாதிகள் முதலியன முதல்வனாற் கொடுக்கப்பெற்று அவ்விச்சாஞானக்கிரியைகள் சிறிது விளங் கும் அவதரத்திலே அவ்வான்மா சகலன் எனப்படுவன்,—மலங்களெல்லாம் ஓவினபோது உற்பவம் துடைத்து சுத்தமுடையன் - பின்பு பஞ்சமலங்க ளும் நீங்கியவிடத்துப் பிறவியை ஒழித்து அவ்விச்சாஞானக்கிரியைகள் எங் கும் வியாபித்து விளங்கும் அவதரத்திலே சுத்தமுடையன் எனப்படுவன்.

குறிப்பு. 1. மேற்கூறிய கீழாலவத்தை மத்தியாலவத்தை யோகா வத்தை நின்மலாவத்தைகள், காரியாவத்தை எனப்படும். இக்காரியாவத் தைகளுக்குக் காரணமாக மூன்றவத்தைகளுள. அவை கேவலம் சகலம் சுத்தம் எனப்படும். இவற்றுட் கேவலமாவது ஆன்மா ஆணவமலத்தோடு கூடி அறிவிச்சை செயல்கள் சிறிதும் விளங்காதுகிடக்கும் அனாதிகேவலம். இது மருட்கேவலம் என்றும் சொல்லப்படும். சகலமாவது தனு கரணங்கள் முதலியவற்றைப்பெற்று இச்சாஞானக்கிரியைகள் சிறிது விளங்கும் அவத ரம். சகலம், சகலத்திற் கேவலம் சகலத்திற் சகலம் சகலத்திற் சுத்தம் என மூவகைப்பட்டு, ஒவ்வொன்றும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரி யாதீதம் என ஐவகைப்படும். அவற்றுட் சகலத்திற் கேவலம் ஐந்தும் 223-ம் செய்யுளிற் கூறப்பட்டன. சகலத்திற் சகலம் ஐந்தும் 224-ம்செய்யுளிற் கூறப்பட்டன. சகலத்திற் சுத்தம் 226-ம்செய்யுளிற் கூறப்பட்ட யோகா வத்தையாம்.

சுத்தமாவது பஞ்சமலங்களும் நீங்கி ஆன்மா வியாபக அறிவு எய்தும் நிலையாம். அது சீவன்முத்தி சுத்தாவத்தை, பரமுத்தி சுத்தாவத்தை என்று இருவகைப்பட்டு, ஒவ்வொன்றும் நின்மல சாக்கிரம் நின்மல சொப்பனம் நின்மல சுழுத்தி நின்மல துரியம் நின்மல துரியாதீதம் என ஐவகைப்படும். சீவன்முத்தி சுத்தாவத்தை ஐந்தும் 228-ம்செய்யுளிற் கூறப்பட்டன. இங்கே கூறப்பட்ட சுத்தாவத்தை பரமுத்தி சுத்தாவத்தையாம். கருவிப்போதங் கழன்ற இந்த அவத்தையிலே, அருளாலே தன்னை அறிவது நின்மல சாக்கிரம். அருளாலே தன்னை அறிந்தபின் தனக்கொரு சேட்டையுமின்றி அந்த அருளே தனக்கு ஆதாரமாய் அவ்வருளிலே தான் அசைவறநின்று அவ்வருளைத் தரிசிப்பது நின்மல சொப்பனம். ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகள் தோன்றாது அவ்வருளே தானாகி எதிரீடு சிறிதுமின்றியிருக்கும் அவசரம் நின்மல சுழுத்தி. மலவாசனை சற்றுமின்றி ஆனந்தவொளி தோன்றுமிடம் நின்மல துரியம். ஆனந்தாநுபவத்தைப்பெற்று அவ்வானந்தாநுபவத்தை அறிந்த தானுமின்றி ஆனந்தமாய்நின்ற முதலுமின்றி அவ்வானந்தமே தானாய் அதீதப்பட்டவிடம் நின்மல துரியாதீதம். சீவன்முத்தி சுத்தாவத்தை ஐந்தும் கருவிகள் முப்பத்தாறும் நீங்குதற்கும், பரமுத்தி சுத்தாவத்தை ஐந்தும் தற்போதங்கெட்டுச் சிவத்தில் அதீதப்படுவதற்கும் ஏதுவாயிருக்கும்.

2. தன்னுண்மை - தான்மாத்திரம் உளதாதல். உண்மை - உளதாதல்.

பொழிப்பு. கேவலம் சகலம் சுத்தம் எனக் காரணாவத்தைகள் மூன்றாம். அவற்றுட் கேவலமாவது இச்சாஞானக்கிரியைகள் சிறிதும் விளக்கமுறாது ஆன்மா ஆணவமலத்தோடுமாத்திரம் கூடிநிற்கும் நிலையாம். சகலமாவது தனுகரணாதிகளைப்பெற்று இச்சாஞானக்கிரியைகள் ஏகதேசவிளக்கமுற்றிருக்கும் நிலையாம். சுத்தமாவது பஞ்சமலங்களும் பிறவியும் ஒழிந்து இச்சாஞானக்கிரியைகள் வியாபகமெய்தியிருக்கும் நிலையாம்.

7. காரணகேவலத்தில் ஆன்மாவின் இயல்பு.

228. அறிவில னமூர்த்த னித்த னராகாதி குணங்க ளோடுஞ்
செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னேடும் வியாபிகே வலத்தி லான்மா.

(இ - ள்). கேவலத்தில் - மேற்கூறிய கேவலாவத்தையிலே,—ஆன்மா - ஆன்மாவானது,—அறிவிலன் - அறிவு விளங்கப்பெறாததும்,—அமூர்த்தன் - தூலவுடம்பு இல்லாததும்,—நித்தன் - தோற்றக் கேடுகள் இல்லாததும்,—அராகாதி குணங்களோடும் செறிவிலன் - தமோகுணம் முதலிய குணங்களோடுங் கலப்பில்லாததும்,—கலாதியோடும் சேர்விலன் - கலைமுதலிய கருவிகளோடும் சேர்தல் இல்லாததும்,—செய்ல்கள் இல்லான் - தொழில்கள்

விளங்கப்பெறாததும்,—குறியிலன் - காரணசரீரம் இல்லாததும்,—கருத்தா அல்லன் - தனக்கெனச் சுதந்திரம் இல்லாததும்,—போகத்தில் கொள்கை இல்லான் - போகங்களிலே பற்று இல்லாததும்,—மலத்தினோடும் பிறிவு இலன் - ஆணவமலத்தினோடு பிரிவின்றிநிற்பதும்,—(மலத்தினோடும்)வியாபி - அம்மலத்தினோடு சமவியாபகமுடையதுமாயிருக்கும்.

குறிப்பு. 1. அராகாதி குணங்கள் - தாமதம் இராசதம் சாத்துவிகம் என்னுங் குணங்கள். தாமதகுணம் போகங்களில் இச்சையை உண்டாக்குதலால் அது அராசகுணம் எனப்பட்டது. அராகம் - இச்சை. அராகாதி குணங்களோடுஞ் செறிவிலன் எனவே, எனைப் போக்கியகாண்டக் கருவிகளோடுஞ் செறிவிலன் என்பதாயிற்று. கேவலநிலையில் ஆன்மாவுக்குக் குண சரீர சூக்குமசரீரங்கள் இல்லை என்பது.

2. கலாதியோடுஞ் செறிவிலன் - பஞ்ச கஞ்சுக சரீரமில்லாதவன் என்பது.

3. அறிவிலன் செயல்களில்லான் - இச்சாஞானக் கிரியைகள் விளங்கப்பெறாதவன் என்பது.

4. குறியிலன் - காரணசரீரமில்லாதவன் என்பது. குறி - அடையாளம், இலக்கணம்.

5. கொள்கை - ஆசை, பற்று, விருப்பம்.

6. மலத்தினோடும் வியாபி - ஆன்மா மலத்தளவில் வியாபகமாயிருக்கும் என்பது. இது வியாத்தி எனப்படும். வியாத்தி - சமவியாபகம்.

பொழிப்பு. ஆன்மா கேவலநிலையில் அறிவுவிளக்கம் முதலியனவின்றி ஆணவமலத்தோடு மாத்திரம் கூடி அதனோடு சமவியாபகமுற்றிருக்கும்.

8. காரணசகலத்தில் ஆன்மாவின் இயல்பு.

229. உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல்
வருசெயன் மருவிச் சத்த மாதியாம் விடயந் தன்னிற்
புரிவதுஞ் செய்திங் கெல்லா யோனியும் புக்கு ழன்று
திரிதருஞ் சகல மான வவத்தையிற் சீவன் சென்றே.

(இ - ள்). சீவன் - மேற்கூறிய கேவலாவத்தையிலே நின்ற ஆன்மா,—சகலமான அவத்தையிற் சென்று - சகலாவத்தையை அடைந்து,—உருவினைக் கொண்டு - உடம்பைப்பற்றி,—போக போக்கியத்து உன்னல் செப்பல் வரு செயல் மருவி - போகத்துக்குரிய பொருள்களை மனம் வாக்குக் காயங்களால் நினைத்தல் உரைத்தல் இயற்றல் ஆகிய வினைகளைப் பொருந்தி,—சத்தம் ஆதியாம் விடயந் தன்னில் புரிவதும் செய்து - சத்தாதி விடயங்களை விரும்பி நுகர்ந்து,—இங்கு எல்லா யோனியும் புக்கு உழன்று திரிதரும் - இங்கே எண்பத்துநான்குநூறாயிர யோனிபேதங்களையும் எடுத்துச் சுழன்று திரியும்.

குறிப்பு. 1. போக போக்கியம் - புசித்தற்குரிய பொருள்கள். போகம் - புசிப்பு, அனுபவம். போக்கியம் - புசிக்கப்படும் பொருள்.

2. உன்னல் செப்பல் வருசெயல் - மனத்தின் செயலாலும் வாக்கின் செயலாலுஞ் செய்யப்படும் நல்வினை தீவினைகள்.

3. புரிவதுஞ் செய்து - சத்தாதி விடயங்களை விரும்பி அனுபவித்தலால் நல்வினை தீவினைகளாகிய ஆகாமியம் ஏறும் என்பது. புரிதல் - விரும்புதல். புரிவதும் என்ற உம்மையால் நுகர்வது என்றது வருவிக்கப்பட்டது. விரும்பி அனுபவித்தல் - நான் கருத்தா நான் போக்தா என்னும் முனைப்போடு அனுபவித்தல். (செ. 212 பார்).

சத்தாதி விடயங்கள் போக்கியப்பொருள்களாயினும், போக்கியப்பொருள்கள் யாவும் சத்தாதி விடயங்களல்லவாதலின், இங்ஙனம் பிரித்துக் கூறினர்.

பொழிப்பு. சகலாவத்தையிலே ஆன்மா உடம்பைப்பொருந்தி மனம் வாக்குக் காயங்களால் நல்வினை தீவினைகளைச் செய்து, அதனாற் பல பிறவிகளிற்பட்டு உழலும்.

9. காரணசுத்தத்தில் ஆன்மாவின் இயல்பு.

230. இருவினைச் செயல்க ளொப்பி லீசன்றன் சத்தி தோயக்
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே.

(இ - ள்). இருவினைச் செயல்கள் ஒப்பில் - மேற்கூறிய நல்வினை தீவினைகளாகிய இருவினைப்பயன்களிலும் சமபுத்தி வந்தவிடத்து,—ஈசன் தன் சத்தி தோய - சிவசத்தி பதிதலால்,—குருவருள் பெற்று - ஞானகுருவின் உபதேசத்தைப் பெற்று,—ஞானயோகத்தைக் குறுகி - ஞானயோகத்தை அடைந்து,—முன்னைத் திரிமலம் அறுத்து - அநாதியான மும்மலங்களையும் நீக்கி,—பண்டைச் சிற்றறிவு ஒழிந்து - பழைய ஆன்மபோதம் நீங்கி,—ஞானம் பெருகி - வியாபக அறிவெய்தி,—நாயகன் தன்பாதம் பெறுவது - முதல்வன் திருவடியைப் பெறுதல்,—சுத்தமாம் - சுத்தாவத்தையாம்.

குறிப்பு. 1 இருவினைச் செயல்களொப்பில்:—இருவினையொப்பாவது நல்வினை தீவினைகளிலும (ஆகாமியம்), அவற்றின் விளைவாகிய புண்ணிய பாவங்களிலும் (சஞ்சிதம்), அவற்றின் பயனாகிய இன்பத்துன்பங்களிலும் (பிராரத்தம்), ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமின்றி, ஆன்ம அறிவின் கண் ஒப்ப வெறுப்பு நிகழ்தலாம்.

2. ஈசன்றன் சத்தி தோய்தல் - சிவசத்தி பதிதல், சத்திநிபாதம். சத்திநிபாதம், மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என நான்குவகை. இங்கே கூறப்பட்ட சத்திநிபாதம் தீவிரதரமாம். இதுவும் ஆன்மாக்களின் பக்குவத்துக்கேற்ப மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என நான்குவகையாயிருக்கும். சத்திநிபாதத்திற்குக் காரணம் இருவினையொப்பும் மலபரிபாகமுமாம். மலபரிபாகமாவது ஆணவமலத்தினது சத்தி ஆன்ம அறிவை மயக்க இயலாது வலிகுன்றி நிற்கும் அவதரம்.

3. குருவருள் பெற்று - ஞானாசாரியர் கூறும் உபதேசமொழிகள் ஒருபிரகாரமாயிருப்பினும், பக்குவத்துக்கேற்ப ஞானம் ஏறுவதன்றி ஒருபடித்தாய் ஏறாதாகையாற் சத்திநிபாதம் நான்குவகையாயின. வாழைத்தண்டைப் பன்னாளாகப் பல காட்டத்தாற் சுடுதல்போல, மந்ததரபக்குவர்க்குப் பன்னாளாகப் பல உபதேசமொழிகளைக் கூற ஞானம் ஏறும். சில காட்டத்தாற் பச்சைமரத்தைச் சுடுதல்போல, மந்தபக்குவர்க்குச் சில உபதேசமொழிகள் கூற ஞானம் ஏறும். கரியிற் பற்றிய தீப்போலத் தீவிரபக்குவர்க்கு ஞானம் உண்டாகும். தீவிரதரபக்குவர்க்கு விளக்கின் கொழுந்திற் பிடித்த பஞ்சிலே தீப்பற்றல் போலப் பாசம் நீங்கி ஞானம் உண்டாம்.

4. ஞானயோகம் - ஞானநிட்டை கூடி, அதுவென்றும் இதுவென்றும் சுட்டி அறியும் சுட்டறிவெல்லாம் இறந்து, கரணம் அசைவற நிற்றல்.

**பொழிப்பு.** திருவருள் பெற்று ஞானயோகத்தைப் பொருந்தி வியாபக அறிவெய்தி முதல்வனது திருவடியைப் பெறுதல் சுத்தாவத்தையில் ஆன்மாவின் இயல்பாம்.

அவத்தையிலக்கணங் கூறிய செய்யுட்களுள், அறிதரு முதலவத்தை, ஐந்து சாக்கிரத்தின், இருவகை சாக்கிராதி (224, 225, 226) என்றற்றொடக்கத்தனவாகிய மூன்று செய்யுளையும் நிரை பிறழ்த்திப் பல வுரையாசிரியர்களும் வைத்துள்ளார். இங்கு எடுத்தாண்ட முறை ஞானப்பிரகாசரது முறையாகும். சிவஞானமுனிவர், சிவாக்கிரயோகியர், நிரம்பவழகியர் மூவரும், இவற்றுள் ஈற்றதை முன்னும் மற்றையிரண்டையும் நிரையே பின்னுமாக (226, 224, 225) வைத்துள்ளனர். மறைஞானதேசிகர் நடுவதை முன்னும் மற்றையவைகளை நிரையே பின்னுமாக (225, 224, 226) வைத்துள்ளார். இவ்வவத்தையிலக்கணத்தை நுணுக வாசித்துக் குருமூலங் கேட்டு விளங்குவதோடமையாது அநுபவத்திலும் சாதித்துக் 'கரணந் தன்னிற் செயல்தொறும்' காண்பார்க்கு இம்முறையில் நிரைத்ததின் நியாயம் புலனாகும்.

# ஐந்தாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் பதி உயிர்களுக்கு ஏகதேசவறிவையும் போக முத்திகளையுங் கொடுத்து உபகரிக்கும் முறைமை கூறுகின்றது.

பதி உயிர்களுக்கு உபகரிக்கும் முறைமை தொகுத்துக் கூறல்.

**231.** பொறிபுலன் கரண மெல்லாம் புருடனா லறிந்தா னாவை
அறிதரா வவையே போல வான்மாக்க ளனைத்து மெங்குஞ்
செறிதருஞ் சிவன்ற னாலே யறிந்திடுஞ் சிவனைக் காணா
அறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன்.

(இ - ள்). பொறி புலன் கரணம் எல்லாம் - ஐம்பொறிகளும் ஐம்புலன்களும் அந்தக்கரணங்களும் ஆகிய யாவும்,—புருடனால் அறிந்து - ஆன்மாவினது உபகாரத்தால் அறிந்தும்,—ஆன்மாவை அறிதரா - அவ்வாறு உபகரித்துநிற்கும் ஆன்மாவை அறியா,—அவையே போல - அவ்விந்திரியங்கள் முதலியவற்றைப் போல,—ஆன்மாக்கள் அனைத்தும் - ஆன்மாக்களெல்லாம், —எங்கும் செறிதரும் சிவன்றனாலே அறிந்திடும் - எங்கும் வியாபித்து நிற்கும் முதல்வனது உபகாரத்தால் விடயங்களை அறியும். ஆயினும்,—சிவனைக் காணா - அவ்வாறு உபகரித்து நிற்கும் அம்முதல்வனை அறியா,—அறிதரும் சிவனே - அங்ஙனம் அறியச்செய்யும் முதல்வனே,—எல்லாம் அறிந்து அறிவித்து நிற்பன் - எல்லாவற்றையும் அறிந்து ஆன்மாக்களுக்கு அறிவித்து உடனிற்பன்.

குறிப்பு. 1. பொறிபுலன் கரண மெல்லாம்:—(செ. 219. கு. 2 பார்). புலன் - இந்திரிய வுணர்ச்சி "பூதமும் கரணம் பொறிகளும்புலனும் பொருந்திய குணங்களோர் மூன்றும்"—திருவிசைப்பா. உணரப்படும் விடயங்களையும், உணரும் பொறிகளையும் ஆகுபெயராய்க்குறிப்பது வந்துழிக்காண்க. "ஐம்புல வேடர்" (சூ. அ. செ. 253). "ஒருபுலன் நுகரும்போது" (சூ. உ. செ. 184).

2. அறிதரும் சிவன் - முற்றறிவுடைய சிவன் எனினும் ஒக்கும். உண்மை அறிவைத் தருகின்ற சிவன் என்பர் சிவஞானமுனிவர்.

3. உபகரித்தலாவது, மலமறைப்பினால் அறிவு விளங்காது கேவலப்பட்டுக்கிடக்கும் ஆன்மாக்களுக்குத் தனு கரணங்களைக் கொடுத்து, அவ்வறிவைச் சிறிதாக விளக்கிக், கன்மத்துக்கீடாகப் போகங்களை அநுபவிக்கச் செய்து, கன்மவொப்பில் வியாபக அறிவைக் கொடுத்து முத்தி அளித்தலாம்.

பொழிப்பு. பொறி புலன் கரணங்கள் ஆகிய யாவும் ஆன்மாவினது உபகாரத்தால் விடயங்களை அறியினும் ஆன்மாவைத் தாம் அறியா. அது போல, ஆன்மாக்கள் விடயங்களை முதல்வனது உபகாரத்தால் அறியினும்

அம்முதல்வனைத் தாம் அறியா. அங்ஙனம் அறியச்செய்யும் முதல்வனே எல்லாவற்றையும் அறிந்து ஆன்மாக்களுக்கு அறிவித்து உடனிற்பன்.

இச்செய்யுள் இரண்டுகூறுடையது.

1. பொறிபுலன் கரண மெல்லாம் புருடனு லறிந்தான் மாவை, அறிதரா வவையே போல வான்மாக்க ளனைத்து மெங்குஞ், செறிதருஞ் சிவன்ற னுலே யறிந்திடுஞ் சிவனைக் காணு, (232-233).
2. அறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன், (234-239).

---

## முதலதிகரணம்.

பொறிபுலன் கரண மெல்லாம் புருடனு லறிந்தான் மாவை, அறிதரா வவையேபோல வான்மாக்க ளனைத்து மெங்குஞ், செறிதருஞ் சிவன்றனுலே யறிந்திடுஞ் சிவனைக் காணு, (232-233).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. முதல்வன் கன்மத்துக்கீடாக ஆன்மாக்களுக்கு அறிவைக் கொடுப்பன், (232).
2. ஆன்மா அறிவிக்க அறியும் இயல்புடையது, (233).

### 1. முதல்வன் கன்மத்துக்கீடாக ஆன்மாக்களுக்கு அறிவைக் கொடுப்பன்.

**232.** இறைவனை யறிவிப் பானே லீண்டறி வெவர்க்கு மொக்குங்
குறைவதி கங்க டத்தங் கன்மமேற் கோமான் வேண்டா
முறைதரு செயற்குப் பாரு முளரிகட் கிரவி யும்போல்
அறைதரு தத்தங் கன்மத் தளவினுக் களிப்ப னுதி.

(இ-ள்). இறைவனே அறிவிப்பானேல் - முதல்வனே அறிவிப்பானு யின்,—ஈண்டு அறிவு எவர்க்கும் ஒக்கும் - இவ்விடத்து அறிவுகள் யாவர்க்கும் ஒருதன்மைத்தாயிருத்தல் வேண்டும், அங்ஙனமின்றி அவை ஏற்றத் தாழ்வுகளாய் நிகழ்தலின்,—குறைவு அதிகங்கள் தத்தம் கன்மமேல் - அவ் வேற்றத் தாழ்வுகள் அவரவர் கன்மத்துக்கீடாக நிகழ்வன என்னில்,—கோ மான் வேண்டா - அறிவித்தற்கு ஒருமுதல்வன் வேண்டுவதில்லை என முடி யும். அப்படியன்று,—முறைதரு செயற்குப் பாரும் - உழுதல் எருவிடல் விதைத்தல் நீர்ப்பாய்ச்சல் காத்தல் என முறையே செய்யப்படும் செயல் களுக்கேற்ற பயனை விளைநிலம் கொடுக்குமாறுபோலும்,—முளரிகட்கு இரவி யும்போல் - பக்குவப்பட்ட தாமரை முகைகளை ஆதித்தன் அலரச்செய்தல் போலும்,—ஆதி - முதல்வனும்,—அறைதரு தத்தம் கன்மத்து அளவினுக்கு -

சொல்லப்பட்ட அவரவர் கன்மத்துக்கு ஈடாக ஏற்றத்தாழ்வான அறிவுகளை யும் மலபரிபாகமான ஆன்மாக்களுக்கு வியாபக அறிவையும்,—அளிப்பன் - கொடுப்பன்.

குறிப்பு. இறைவன் அறிவிப்பானாகில் யாவர்க்கும் அறிவு ஒருபடித்தா யிருக்கவேண்டும் என்னும் ஆருகதர் மதமும், கன்மமே பலன்கொடுக்கும் என்னும் மீமாஞ்சகர்மதமும் இதனால் மறுக்கப்பட்டன.

பொழிப்பு. விளைநிலம் அவரவர் செய்கைக்குத் தக்க பயனைத் தருமாறு போலும், ஆதித்தன் பக்குவமான தாமரை முகைகளை அலர்வித்தல்போலும், முதல்வனும் அவரவர் கன்மத்துக்கேற்ப ஏற்றத்தாழ்வான அறிவுகளையும், பக்குவமான ஆன்மாக்களுக்கு வியாபக அறிவையுங் கொடுப்பன்.

2. ஆன்மா சிவன் அறிவிக்க அறியும்.

**233.** அறிந்திடு மான்மா வொன்றை யொன்றினா லறித லானும்
அறிந்தவை மறத்த லானு மறிவிக்க வறித லானும்
அறிந்திடுந் தன்னை யுந்தா னறியாமை யானுந் தானே
அறிந்திடு மறிவ னன்று மறிவிக்க வறிவ னன்றே.

(இ - ள்). அறிந்திடும் ஆன்மா - மேற்கூறியவாறு கன்மத்துக்கேற்ப அறியும் ஆன்மாவானது,—ஒன்றை ஒன்றினால் அறிதலானும்,—ஒவ்வொரு விடயத்தையும் ஒவ்வொரு இந்திரியத்தால் அறிதலாலும்,—அறிந்தவை மறத்தலானும் - அங்ஙனம் அறிந்தவற்றை மீள மறத்தலாலும்,—அறிவிக்க அறிதலானும் - ஒருவன் அறிவிக்க அறிதலாலும்,—அறிந்திடும் தன்னையும் தான் அறியாமையானும் - இங்ஙனம் அறிகின்ற தன்னையும் தான் அறி யாமையாலும்,—தானே அறிந்திடும் அறிவன் அன்றும் - தானே அறிந்திடும் சுதந்திர அறிவுடையதன்று,—அறிவிக்க அறிவன் அன்றே - சிவன் அறி விக்க அறியும் இயல்புடையதாம்.

குறிப்பு. 1. உயிர் தானே அறியும், அறிவிக்க ஒருவன் வேண்டுவ தில்லை என்னும் சிவசமவாதசைவர், ஐக்கவாதசைவர், ஈசுவரவவிகாரவாத சைவர் முதலியோர்மதம் இதனால் மறுக்கப்பட்டது.

2. தன்னையுந் தானறியாதெனவே, தனக்கு அறிவித்து நிற்குஞ் சிவனை யும் அறியாது என்பது தானேபோதரும்.

பொழிப்பு. ஆன்மா ஒவ்வொரு விடயத்தையும் ஒவ்வொரு இந்திரியத் தால் அறிதலாலும், அங்ஙனம் அறிந்தவற்றை மீள மறத்தலாலும், ஒருவன் அறிவிக்க அறிதலாலும், அறிகின்ற தன்னையும் தான் அறியாமையாலும், அது தானாக அறியும் இயல்புடையதன்று. சிவன் அறிவிக்க அறியும் இயல் புடையதாம்.

## இரண்டாமதிகரணம்.

அறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன் என்பது இரண்டாங் கூறு, (**234-239**).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. சிவன் ஆன்மாக்களுக்கு உணர்த்தும் முறைமை, (**234-235**).

(*a*). சிவன் ஆன்மாக்களுக்கு மாயாகாரியங்களைக்கொண்டு உணர்த்துவன், (**234**).

(*b*). சிவன் ஆன்மாக்களுக்கு உயிர்க்குயிராய் நின்று உணர்த்துவன், (**235**).

2. மாயாகாரியங்களைக்கொண்டு உணர்த்துதல்பற்றி முதல்வன் விகாரியாகான், (**236**).

3. உயிர்க்குயிராய் நின்று உணர்த்துதல்பற்றி முதல்வன் விகாரியாகான், (**237**).

4. உணர்த்துதலால் வரும் பயன், (**238**).

5. பயன்தரும் முறைமை, (**239**).

### 1. சிவன் ஆன்மாக்களுக்கு உணர்த்தும் முறைமை.

### (*a*). சிவன் ஆன்மாக்களுக்கு மாயாகாரியங்களைக் கொண்டுணர்த்துவன்.

**234**. கருவியாற் பொருளாற் காட்டாற் காலத்தாற் கருமந் தன்னால்
உருவினு லளவா னூலா லொருவரா லுணர்த்த லானும்
அருவனு யுண்மை தன்னி லறியாது நிற்ற லானும்
ஒருவனே யெல்லாத் தானு முணர்த்துவ னருளி னாலே.

(இ - ள்). கருவியால் - ஐம்பொறி முதலிய கருவிகளாலும்,—பொருளால் - சத்தாதி விடயங்களாலும்,—காட்டால் - சந்திர சூரியர் முதலிய விளக்குங் கருவிகளாலும்,—காலத்தால் - இறந்தகாலம் முதலிய முக்காலங்களாலும்,—கருமம் தன்னால் - புண்ணிய பாவச் செயல்களாலும்,—உருவினுல் - காட்சிக்கமைந்த உடம்புகளாலும்,—அளவால் - அநுமானங்களாலும்,—நூலால் - ஆகமங்களாலும்,—ஒருவரால் - வேறொருவராலும்,—உணர்த்தலானும் - ஆன்மா சகலநிலையில் அறிவிக்கப்பட்டு அறிதலாலும்,—உண்மை தன்னில் - கருவிகளொன்றுமின்றியிருக்கும் கேவலநிலையில்,—அருவனுய் அறியாது நிற்றலானும் - அருவப்பொருளாய் ஒன்றையும் அறியாது நிற்றலாலும்,—ஒருவனே - இவ்விருநிலைகளையும் அறியவல்ல ஒப்பற்ற முதல்வனே,—அருளினுலே - ஆன்மாக்கள்மேற்கொண்ட கருணையினுலே,—எல்லாத்தானும் உணர்த்துவன் - மேற்கூறிய ஏதுக்கள் எல்லாவற்றையுங்கொண்டு அவ்வான்மாக்களுக்கு அறிவிப்பன்.

குறிப்பு. 1. மாயாகாரியங்களே உணர்த்துவன என்னும் சாங்கியர் மதம் இதனால் மறுக்கப்பட்டது.

2. காட்டு - ஒளி, விளக்குங் கருவி.

3. அளவு:—உருவும் நூலும் காட்சி ஆகமங்களைக்குறித்தலால், அளவு அநுமானமெனக் கொள்ளப்பட்டது.

பொழிப்பு. ஆன்மா சகலநிலையிலே ஐம்பொறி முதலியனவற்றால் அறிவிக்கப்பட்டு அறிதலாலும், கேவலநிலையிலே ஒன்றுமறியாது நிற்றலாலும், இவ்விருநிலைகளையும் அறியவல்ல முதல்வனே கருணைகூர்ந்து அப்பொறி முதலியனவற்றைக்கொண்டு ஆன்மாக்களுக்கு அறிவிப்பன்.

(b). சிவன் ஆன்மாக்களுக்கு உயிர்க்குயிராய் நின்று உணர்த்துவன்.

**235.** கருவியும் பொருளுங் காட்டுங் காலமுங் கருமந் தானும்
உருவமு மளவு நூலு மொருவரு முணர்த்த லின்றி
அருவனு யுலக மெல்லா மறிந்தவை யாக்கி வேறாய்
ஒருவனே யுயிர்கட் கெல்லா முயிருமா யுணர்த்தி நிற்பன்.

(இ - ள்). ஒருவனே - ஒப்பற்ற முதல்வனே,—கருவியும் - ஐம்பொறி முதலிய கருவிகளும்,—பொருளும் - சத்தாதி விடயங்களும்,—காட்டும் - சந்திர சூரியர் முதலிய விளக்குங் கருவிகளும்,—காலமும் - இறந்தகாலம் முதலிய முக்காலங்களும்,—கருமம் தானும் - புண்ணிய பாவச் செயல்களும்,—உருவமும் - சரீரங்களும்,—அளவும் - அநுமானங்களும்,—நூலும் - சாத்திரங்களும்,—ஒருவரும் - தனக்கு வேறாகிய ஒரு சேதனனும்,—உணர்த்தல் இன்றி - அறிவிக்க அறிதலின்றி,—அருவனாய் - சுதந்திரனாய்,—உலகம் எல்லாம் அறிந்து - உலகுயிர்கள் யாவையும் அறிந்து,—அவை ஆக்கி - அவற்றைத் தோற்றுவித்து,—வேறாய் - அத்தொழில்பற்றி விகாரப்படாது வேறாயும்,—உயிர்கட்கு எல்லாம் உயிருமாய் - உயிர்களுக்கெல்லாம் உயிராயும்,—உணர்த்தி நிற்பன் - அறிவித்து நிற்பன்.

குறிப்பு. 1. உலகமெல்லாவற்றையு மறிந்து என்றது கேவலத்திற் கிடக்கும் உயிர்களின்பொருட்டு முதல்வன் செய்யும் சூக்கும ஐந்தொழிலைக் குறித்து நின்றது. "மலபரிபாக தாரதம்மியத்திற்குத் தக்கபடி அறிவிக்கத் தக்கவர்களை அறிவித்துக்கொண்டும், திரோதசத்தியால் மறைக்கத்தக்கவர்களை மறைத்துக்கொண்டும், ஆன்மாக்களின் கன்மங்களைப் பக்குவப்படுத்திக்கொண்டும், மாயாகாரியங்களை வெளிப்படத்தகுந்தவைகளாகச்செய்துகொண்டும், தோன்றுதற்குரிய சடமுஞ் சித்துமாகிய எல்லாப் பதார்த்தங்களையும் பார்த்துக்கொண்டுமிருக்கிறார்" (மிருகேந். பதிபிர. 15. சி. போ. பாடி. 254).

2. அவையாக்கி - சடசித்துக்களைத் தோற்றுவித்து. இது தூலசிருட்டி எனப்படும்.

3. உயிர்கட்கெல்லா முயிருமாய் - உயிர்க்குயிராயும், உடனுமாய் (செ. 93 பார்).

4. உணர்த்துதல் - அறிவித்தல். இது முதல்வன் செய்யும் அதிசூக்கும ஐந்தொழிலுள் ஒன்று. அதிசூக்கும ஐந்தொழிலாவது:—ஆன்மாவிற்கு விடயங்களை அறிவித்தல் சிருட்டி, அறியும் விடயத்தை அநுபவிக்கச்செய்தல் திதி, அவ்விடயமாய் அழுந்தச்செய்தல் சங்காரம், அதனில் உருசிப்பித்தல் திரோபவம், அதனைத் தெளிந்து கோடச்செய்தல் அநுக்கிரகம்.

பொழிப்பு. உலகுயிர்கள் யாவையும் அறியவல்ல முதல்வன் உயிர்க்குயிராய் நின்று உயிர்களுக்கு உணர்த்துவன்.

2. மாயாகாரியங்களைக்கொண்டு உணர்த்துதல்பற்றி முதல்வன் விகாரியாகான்.

**236.** இறைவன்றன் சந்நி திக்கண் ணுலகின்றன் சேட்டை யென்னும்
மறைகளு மறந்தாய் மாயை மருவிடான் சிவன வன்கண்
உறைதரா தசேத னத்தா லுருவுடை யுயிர்கட் கெல்லாம்
நிறைபரன் சந்நி திக்க ணீடுணர் வுதிக்கு மன்றே.

(இ - ள்). (மேற்கூறியவாறு மாயாகாரியங்களைக்கொண்டு உணர்த்துதல்பற்றி முதல்வன் விகாரியாவான்போலும் எனின்) இறைவன் தன் சந்நிதிக்கண் - அம்முதல்வனது சந்நிதானத்திலே,—உலகின் தன் சேட்டை என்னும் மறைகளும் மறந்தாய் - சடமும் சித்துமாகிய பிரபஞ்சம் காரியப்படும் என்னும் வேதவாக்கியத்தையும் மறந்தாய்.—சிவன் மாயை மருவிடான் - முதல்வன் எங்கும் வியாபித்து நிற்றலால் மாயையைப் பொருந்தான்,—(மாயை) அசேதனத்தால் அவன்கண் உறைதராது - அம்மாயை சடமாதலால் சித்தாகிய முதல்வனிடத்திலே பொருந்தியிராது, ஆதலால்,—உருவுடை உயிர்கட்கு எல்லாம் - அம்மாயையின் காரியமான தனுகரணங்களைப் பொருந்திய எல்லா உயிர்களுக்கும்,—நிறைபரன் சந்நிதிக்கண் - எங்கும் வியாபித்து நிற்கும் முதல்வனது சந்நிதானத்திலே,—நீடு உணர்வு உதிக்கும் - கன்மத்துக்கீடாக ஏகதேசவறிவன்றி வியாபக அறிவும் உண்டாகும்.

குறிப்பு. 1. விகாரமாவது ஒருபொருள் மற்றொருபொருளைப் பற்றுதலினாலுண்டாகும் வேற்றுமை.

2. சந்நிதி - சத்திரூப சந்நிதி (செ. 39 பார்).

3. மாயை மருவிடான் சிவன் - சிவன் எங்கும் வியாபித்து நிற்றலால், மாயையைச் சுட்டி அறிந்து பொருந்த வேண்டுவதின்று என்பது.

4. மாயை அவன்கண் உறைதராது அசேதனத்தால்:—சிவன் சித்துப் பொருளாதலால், ஒளிமுன் இருள்போல, அசத்தாகிய மாயை அவன்முன் முனைத்து நில்லாது என்பது (செ. 249).

5. உருவுடை உயிர்கட்கெல்லாம் .....:—மாயாகாரியங்கள் துணைக்காரணமாக உயிர்கள் சிவசந்நிதியில் அறிவைப் பொருந்தும் என்பது.

6. நீடுணர்வு - கன்மத்துக் கேற்ப ஏற்றத்தாழ்வாய் ஏகதேசவறிவாயும், கன்மவொப்பில் வியாபக அறிவாயும் நிகழும் அறிவு.

7. மறைகளும் மறந்தாய்:—உயிர்கள் சகலநிலையிற் கருவிகள் முதலிய மாயாகாரியங்களைக்கொண்டு அறிதலாலும், அம்மாயாகாரியங்கள் பொருந்தாத கேவலநிலையில் அறியாது நிற்றலாலும், பாரிசேடவளவையால் முதல்வன் அறிவிக்க அறியும் என்பது 234-ம் செய்யுளிற் கூறப்பட்டது. அவ்வநுமானப்பிரமாணமேயன்றி ஆகமப்பிரமாணமும் அதற்குச் சான்றாக இங்கே கூறப்பட்டதால் "மறைகளும்" என்றார்.

பொழிப்பு. முதல்வன் மாயாகாரியங்களைக்கொண்டு உயிர்களுக்கு உணர்த்துவன் என்பதற்கு அநுமானப்பிரமாணமேயன்றி ஆகமப்பிரமாணமுஞ் சான்றாகும். அவ்வுணர்வு அவன் சந்நிதிக்கண் உண்டாகுமாதலால் அவன் விகாரமெய்தான்.

### 3. உயிர்க்குயிராய் நின்று உணர்த்துதல்பற்றி முதல்வன் விகாரியாகான்.

**237.** உலகமே யுருவ மாக யோநிக ளுறுப்ப தாக
இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக
அலகிலா வுயிர்கட் கெல்லா மறிவினை யாக்கி யைந்து
நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னாதன்.

(இ - ள்). நாதன் - முதல்வன்,—உலகமே உருவமாக - தனக்கு இருநூற்றிருபத்துநான்கு புவனமும் திருமேனியாகவும்,—யோநிகள் உறுப்பதாக - எண்பத்துநான்குநூறாயிரம் யோநிபேதங்களும் அவயவங்களாகவும்,—இலகுபேர் இச்சாஞானக் கிரியை உட்கரணமாக - மிக்க விளக்கமுடைய இச்சாஞானக் கிரியைகள் உட்கரணமாகவுங் கொண்டு,—அலகிலா உயிர்கட்கு எல்லாம் அறிவினை ஆக்கி - எண்ணிறந்த உயிர்களுக்கும் விடய அறிவை உண்டாக்கி,—நலம் மிகு ஐந்து தொழில்களோடும் - நன்மைமிகுந்த அதிசூக்குமஐந்தொழில்களையும் மேற்கொண்டு,—நாடகம் நடிப்பன் - நாடகமாகச் செய்தருளுவன்.

குறிப்பு. 1. உலகமே யுருவமாக......அறிவினையாக்கி:—உயிர் இயங்கியவழி உடம்பு அவயவங்கள் கரணங்கள் முதலியவை தொழிற்படுமாறுபோல, புவனங்கள் உடம்பாகவும், யோநிகள் அவயவங்களாகவும், தனது இச்சாஞானக்கிரியைகள் அந்தக்கரணங்களாகவுங்கொண்டு முதல்வன் இயங்கியவழி உயிர்களும் அவற்றோடு கூடிய உடம்பு முதலியனவுந் தொழிற்படும்

என்பது. இது முதல்வன் உயிர்க்குயிராய் நின்று ஆன்மாக்களுக்கு அறிவு நிகழச்செய்தலை விளக்கிற்று. "அலகிலா வுயிர்ப்புலன்கட் கறிவினையாக்கி" என்றும் "அலகிலா வுயிர்கட்கெல்லா மிருபயனுக" என்றும் "இருபயனுக்க" என்றும், "இருபயனுக்கி" என்றும் பாடம்.

2. அரங்கத்து நடிக்கும் நாடகற்கு உருவுமுறுப்புங் கரணமும் பயனுந் தொழிலு மமைந்தவாறே, சிதாகாச அரங்கத்து நடிக்கும் பரமநாடகனும் முதல்வற்கும் அசித்துப்பிரபஞ்சம் தூல உருவமாகவும், சித்துப்பிரபஞ்சம் உறுப்புகளாகவும், இச்சாஞானக்கிரியைகள் கரணமாகவும், உயிர்கட்கிரு வினையொப்பு மலப்ரிபாகமுற அறிவினையாக்கலே பயனுகவும், பஞ்சகிருத்தியவிரிவே தொழிலாகவும் அமைந்தமைகூறியதாம். இவ்வுண்மையைப் பல புராணங்களிலும் ஈசன் விச்சுவரூபம் காட்டியதாகக் கூறப்படுவதோடொட்டியறிக. அன்றியு முயிர் அந்தக்கரணவாயிலாய் உறுப்புக்களை இயக்கித் தூலவுடலோடொன்றி ஏகதேசவறிவு தலைப்படத் தொழிற்படுதல்போல ஈசனும் தமது இச்சாஞானக்கிரியைகளால் உயிர்களை இயக்கிப் பிரபஞ்சத்தோடொனுய்ச் செலுத்தி நின்று வியாபகவறிவு தலைப்படச் சூக்குமபஞ்சகிருத்தியமாகிய தொழிற்படுதலும், அவ்வாறுயிர் உடலோடொன்று தொழிற்படினும் உயிர் வேறு உடம்பு வேறு ஆமாறுபோல, முதல்வனும் உயிர்க்குயிராய் நின்று பஞ்சகிருத்தியத்தொழிற்படினும் முதல்வன் வேறு உயிர் வேறு முதல்வற்கிஃது ஓர் நாடகம்போலும் என்பது மிங்குகாணக்கிடந்தது.

### 4. உணர்த்துதலால் வரும் பயன்.

**238.** தெரிந்துகொண் டொரோவொன் ருகச் சென்றைந்து புலனும் [பற்றிப்
புரிந்திடு முணர்விஞேடு போகமுங்கொடுத்தி யோனி
திரிந்திடு மதுவுஞ் செய்து செய்திகண் டுயிர்கட் கெல்லாம்
விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்.

(இ - ள்). தெரிந்து கொண்டு - மேற்கூறியவாறு உணர்த்த உணர்ந்து கொண்டு,—ஒரோவொன்ருகச் சென்று - பஞ்சப்பொறிகள் ஒவ்வொன்றின் வழியாகச் சென்று,—ஐந்து புலனும் பற்றிப் புரிந்திடும் உணர்விஞேடு - சத்தாதி ஐந்து விடயங்களையும் விரும்பிப்பொருந்தித் தொழிற்படும் ஏகதேச அறிவோடு,—போகமும்'கொடுத்து - அவ்விடயங்களால் வரும் இன்பத்துன்பங்களையுங் கொடுத்து,—யோனி திரிந்திடும் அதுவுஞ் செய்து - யோனி மாறிமாறிப் பிறந்திறந்து சுழலுதலுஞ்செய்து,—செய்தி கண்டு - அவரவர் கன்மம் நோக்கி,—உயிர்கட்கெல்லாம் விரிந்திடும் அறிவும் காட்டி - உயிர்களனைத்திற்கும் வியாபக அறிவையும் நிகழ்வித்து,—வீட்டையும் அளிப்பன் மேலோன் - முத்தியையும் கொடுப்பன் முதல்வன்.

குறிப்பு. 1. தெரிந்து கொண்டு .....சென்று...பற்றிப் புரிந்திடு முணர்வு - ஏகதேச அறிவு; விரிந்திடு மறிவு - வியாபகவறிவு. தெரிதல் - அறிவு, பற்றுதல் - இச்சை, புரிதல் - தொழில். எனவே அறிவிச்சை தொழில் ஏற்பட்டுணரும் அறிவு ஏகதேச அறிவென்றதாம். (செ. 211 பார்).

2. செய்தி கண்டு - இருவினையொப்பு மலபரிபாகம் வந்தவிடத்து.

பொழிப்பு. முதல்வன் உணர்த்துதலால் உயிர்களுக்கு உண்டாகும் பயன் ஏகதேச அறிவும் அதனால் விடயபோகமும் கன்மவொப்பில் வியாபக அறிவும் அதனால் பரபோகமுமாம்.

5. பயன்தரும் முறைமை.

**239.** அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்.

(இ - ள்). அருளது - அருள் எனப்படுவது,—அரன் தனக்கு சத்தி ஆகும் - முதல்வனது சத்தியாம்,—அருளை இன்றித் தெருள் சிவம் இல்லை - அச்சத்தியினின்றும் பிரித்தறியப்படும் சிவம் இன்று,—அந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை - அந்தச் சிவத்தினின்றும் வேறாகச் சத்தி என்னும் பொருளில்லை,—ஈசன் - அச்சிவன்,—கண்கட்கு இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல - கண்களுக்கு மறைப்பைச் செய்யும் இருளைத் தனது கிரணத்தாலோட்டிப் பிரகாசத்தினைச் செய்கின்ற ஆதித்தன்போல,—மன் உயிர்க்கு மருளினை அருளால் வாட்டி - நிலைபெற்ற உயிர்களுக்கு அறிவை மறைக்கும் மலமயக்கத்தைத் தனது அருளாலே நீக்கி,—அளிப்பன் - மேற்கூறியவாறு வீட்டையும் கொடுப்பன்.

குறிப்பு. அருளையின்றித் தெருள் சிவமில்லை, அந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை—"தானெங்குள தங்குள தையன் மாதேவி" (திருமந்). அர்த்தநாரீசுரவடிவமும் இது காட்டியதாம். அர்த்தநாரீசுவரம் - பாதியுரு உமையும் பாதியுருச் சிவமுமாகக் காட்டிய திருவுருவம். இது சத்தியை நீக்கிச் சிவத்தைமாத்திரம் வலம் வரும்படி முயற்சித்த பிருங்கு ரிஷிக்குச் சத்தி சிவத்தினதபேதமும் ஒற்றுமையும் காட்டியதாம்.

பொழிப்பு. முதல்வன் தனக்கபின்னமாயுற்ற திருவருட்சத்தியினால் மலசத்தியைப் போக்கி உயிர்களுக்கு முத்தியைக் கொடுப்பன்.

---

## ஆறாஞ் சூத்திரம்.

இச்சூத்திரமும் ஏழாஞ் சூத்திரமும் உயிர்களுக்குபகரிக்கும் பதி அவ்வுயிர்களால் அறியப்படு முறைமை கூறுமுகத்தான், அந்நிலையிற் பதியினிலக்கணமும் பசுவினிலக்கணமும் கூறுகின்றன.

உபகரிக்கு நிலையிற் பதி பசு இரண்டனதிலக்கணமுந்
தொகுத்துக் கூறல்.

**240.** அறிவுறும் பொருளோ வீச னறிவுறா தவனோ வென்னின்
அறிபொரு ளசித்த சத்தா மறியாத தின்றா மெங்குஞ்
செறிசிவ மிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்
நெறிதரு சத்தின் முன்ன ரசத்தெலா நின்றி டாவே.

(இ-ள்). ஈசன் அறிவுறும் பொருளோ அறிவுறாதவனோ என்னின் - மேற்கூறிய சிவன் ஆன்மபோதத்தாற் சுட்டியறியப்படும்பொருளோ அன்றி ஒருவாற்றானும் அறியப்படாத பொருளோ என்னின்,—அறிபொருள் அசித்து அசத்தாம் - அறியப்படும்பொருள் சடமாய் அழிந்துபோவனவாம்,—அறியாதது இன்றாம் - ஒருவாற்றானும் அறியப்படாதபொருள் இல்பொருளாம்,—எங்கும் செறி சிவம் - எங்கும் வியாபித்து உபகரிக்கும் சிவன்,—இரண்டும் இன்றி - சுட்டியறியப்படுதலும் ஒருவாற்றானும் அறியப்படாமையும் ஆகிய இரண்டுதன்மையுமின்றி,—சித்தொடு சத்தாய் நிற்கும் - சித்துச் சத்தாகி அருளினுலறியப்படுவதாய் நிலைபெறும்,—நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றிடா - உயிர்களுக்குபகரித்துக் கதியுதவும் சிவத்தின் முன்னர் அசத்தாகிய ஒன்றும் நிலைபெறமாட்டா.

குறிப்பு. 1. அசித்து - சடப்பொருள்; அசத்து - இல்பொருள். சத்து - உள்ளது.

2. அறியாததின்றாம் - ஒருவாற்றானுமறியப்படாத பொருள் பயனுமிலதாய் இல்பொருளாம் என்பது.

3. எங்குஞ் செறி சிவம் - அழிவெய்தாதும் இல்பொருளாகாதும் எங்கும் வியாபித்து "உலகெலாமாகி வேறாய் உடனுமாய்" நிற்பனென முன் கூறப்பட்ட சிவன். (செ. 91 பார்).

4. நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றிடா:—உபகரிக்கும் பதிமுன்னர் நின்று உபகரிக்கப்படும் பசு அசத்தாதல் கூடாது. பின் சத்தாமோவென்னில் அதுவும் பொருந்தாது. எனவே ஆன்மா சதசத்தாய் நிற்பது என்பது. (செ. 249; 250 பார்).

5. இச்செய்யுளில் பாசம் அசத்தசித்து என்பதும், பதி சத்துச்சித்து என்பதும், பசு சதசத்து என்பதும் கூறியதாம்.

பொழிப்பு. சுட்டி அறியப்படுவன யாவுஞ் சடமாய் அழிவெய்தும். ஒருவாற்றானும் அறியப்படாதனவும் பயனிலவாய் இல்பொருளாம். ஆதலால் உயிருக்கு உபகரிக்குஞ் சிவன் இவ்விருதன்மையுமின்றிச் சித்துப் பொருளும் சத்துப்பொருளுமாய் நிற்கும் இயல்புடையதாம். இவ்வியல்புடைய சிவத்தின் முன்னர் அசத்தாகிய ஒன்றும் முனைத்துநில்லாது.

இச்செய்யுள் மூன்று கூறுடையது.

1. அறிபொரு ளசித்தசத்தாம், அறியாத தின்றாம், (241-243).
2. அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறா தவனோ என்னிற், செறிசிவம் இரண்டுமின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும், (243-248).
3. நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றிடா, (249-252).

இவற்றுள் முதலிரண்டு கூறுகளும் உபகரிக்கு நிலையிற் பதியினதிலக்கணங் கூறுதலின் ஒரு சூத்திரமாகவும், பின்னைய ஒன்றும் அந்நிலையிற் பசுவினதிலக்கணங் கூறுதலின் வேறு சூத்திரமாகவும் முதனூலோடொப்ப வகுக்கப்பெற்றுள்ளன.

---

## முதலதிகரணம்.

அறிபொரு ளசித்தசத்தாம், அறியாத தின்றாம், (241-243).

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. சுட்டியுணரப்படும் காரியப்பிரபஞ்சம் அசித்து, (241).
2. சுட்டியுணரப்படும் காரியப்பிரபஞ்சம் அசத்து, (242).
3. ஒருவாற்றானும் அறியப்படாப்பொருள் பயனுமிலதாய் இல்பொருளாகும், (243).

### 1. சுட்டியுணரப்படும் காரியப்பிரபஞ்சம் அசித்து.

241. ஆவதா யழிவ தாகி வருவதா லறிவு தானுந்
தாவலா லுலகு போகந் தனுகர ணாதி யாகி
மேவலான் மலங்க ளாகி விரவலான் வேறு மாகி
ஓவலா லசித்தாஞ் சுட்டி யுணர்பொரு ளான வெல்லாம்.

(இ - ள்). அறிவு ஆவதாய் அழிவதாகி வருதலால் - சுட்டியறியும் அறிவு தோற்றமும் நாசமும் உடையதாய் நிகழ்தலாலும்,—தானும் தாவலால் -

அவ்வாறு நிகழுமறிவுந்தானே நிலைபேறின்றி ஒன்றைவிட் டொன்றைப் பற்றுதலாலும்,—சுட்டி உணர்பொருள் ஆன எல்லாம் - அத்தன்மையான ஆன்மவறிவாற் சுட்டியறியப்படுவதாகிய காரியப்பிரபஞ்சம் முற்றும்,—தனு கரணம் உலகு போகம் ஆதி ஆகி மேவலான் - தனு கரண புவன போகங்களாகிய பலவகையாய் வருதலாலும்,—மலங்களாகி விரவலான் - சகலநிலையில் மாயாமலங்களாகி ஆன்மாவோடு கலந்து நிற்றலாலும்,—வேறும் ஆகி ஓவலால் - சுத்தநிலையில் ஆன்மாவுக்கு அந்நியமாய் ஒழிதலாலும்,—அசித்தாம் - சடப்பொருளாம்.

குறிப்பு. 1. அறிவு என்றது இங்கே ஒரு விடயத்தை இந்திரியங்களாலே முற்பட்டுப் பொருந்தி அதுவதுவாய் நின்று சுட்டியறியும் அறிவையாம். இவ்வறிவு சுட்டறிவு, கருவியறிவு, அளவையறிவு எனவும், பாசஞானம் எனவுஞ்சொல்லப்படும். "அறிவினாலறிந்தயாவுமசத்தாதலறிதி ... .....தொன்மையறிவுதானொன்றைமுந்தி யதுவதுவாகக்காணு, மறிவுகாணசத்து." (சிவப்பிர. 55).

2. சுட்டியறியப்படும் விடயங்கள்போலச் சிவனும் சுட்டியறியப்படும் பொருளாமென நையாயிகர் முதலியோர் கூறுவர். அவர்கொள்கையை மறுத்தற்பொருட்டுச் சுட்டறிவினால் அறியப்படும் பொருள்கள் யாவும் அசித்து என்றார். அஃதாவது பாசஞான பசுஞானங்களாலறியப்படுவது அசித்து. சிவம் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாததாய்ப் பதிஞானம் ஒன்றினாலே அறியப்படும் பொருள் என்பது.

பொழிப்பு. ஆன்மபோதம் தோற்றநாசம் அடைவதாய் நிலைபேறின்றி நிகழ்தலாலும், அவ்வான்மபோதத்தாற் சுட்டி அறியப்படும் பொருள்கள் தாமே தனு கரண புவன போகங்களாய்ப் பலவகைப்படுதலாலும், சகலநிலையில் மலங்களாய் ஆன்மாவைப் பொருந்திச் சுத்தநிலையிலே அதனைவிட்டு நீங்குதலாலும், சுட்டியுணரப்படுங் காரியப்பிரபஞ்சம் அசித்தாம்.

2. சுட்டியுணரப்படும் காரியப்பிரபஞ்சம் அசத்து.

**242** மண்டனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும்
எண்டரு பூத பேத யோனிக ளியாவு மெல்லாங்
கண்டவிந் திரமா சாலங் கனக்கழு திரதங் காட்டி
உண்டுபோ லின்றாம் பண்பி னுலகினை யசத்து மென்பர்.

(இ - ள்). மண்தனில் வாழ்வும் - நிலவுலகத்து அரசவைபவத்தோடு வாழும் வாழ்வும்,—வானத்து அரசு அயன்மாலார் வாழ்வும் - வானுலகத்து இந்திரன் அயன் முதலியோர் வாழ்வும்,—எண்தரு பூத பேத யோனிகள் யாவும் எல்லாம் - சொல்லப்பட்ட பூதபரிணாமமாகிய எண்பத்துநான்கு

நூறுயிர யோனிபேதங்கள் அனைத்தும் ஆகிய இவை எல்லாம்,—கண்ட இந்திரமாசாலம் கனா கழுதிரதம் காட்டி - காணப்பட்ட இந்திரமாசாலமும் கனாக்காட்சியும் பேய்த்தேரும்போல,—உண்டுபோல் - நெடுங்காலம் நிலை பெறுவனபோலத் தோன்றி,—இன்று ஆம் பண்பில் - விரையக்கெட்டு மறைந்துபோம் இயல்புபற்றி,—உலகினை அசத்தும் என்பர் - காரியப்பிரபஞ்சத்தை அசித்தென்று கூறுதலேயன்றி அசத்தென்றுங் கூறுவர்.

குறிப்பு. 1. எல்லாப்பொருள்களும் சத்தாதலால், சுட்டி அறியப்படும் பொருளும் சத்தேயாம் என்னும் சாங்கியர்கொள்கை இதனால் மறுக்கப்பட்டது.

2. இந்திரசாலம் மண்தனில் வாழ்வுக்கும், கனா இந்திரன்முதலானோர் வாழ்வுக்கும், கழுதிரதம் பூதபேத யோனிகளுக்கும் உவமையாயின. கண்கட்டிவித்தையிலே காணப்படும் பொருள்கள் உள்பொருள்போலத் தோன்றி உடனே மறைதல்போல, உலகில் சம்பிரமவாழ்வும் நிலைபெறுதல்போலத் தோன்றிச் சடுதியில் மறையும் என்பது. கனவிலேதோன்றும் பொருள்கள் உள்பொருள்போலத்தோன்றி விழித்தபோது மறைதல்போல, இந்திராதியர்வாழ்வும் நெடுங்காலம் நிலைபெறுவதுபோலத் தோன்றி அற்பகாலத்தில் மறையும் என்பது. பேய்த்தேர் சூரியகிரணத்தின் கடுமைபற்றி உள்ளது போலத்தோன்றி அக்கிரணம் நீங்கியவிடத்து அழிதல்போல யோனிபேதங்களும் கன்மங் காரணமாகத் தோன்றி அக்காரணமில்லாதவிடத்து அழிவெய்தும் என்பது.

3. காட்டி - போல, அவற்றின் தன்மையைத் தன்னிடம் காண்பித்து என்றபடி. காட்டியென்பது இங்கு ஓர் உவமவுருபாம்.

4. அசத்துமென்னும் உம்மை பொருட்டன்மையாற் சத்தென்பதுபட நின்ற எதிர்மறை என்பர் சிவஞானயோகியர்.

பொழிப்பு. சுட்டியுணரப்படும் காரியப்பிரபஞ்சம் நெடுங்காலம் நிலை பெறுவதுபோலத் தோன்றி, இந்திரசாலம், கனாக்காட்சி பேய்த்தேர்போல விரைவில் மறைந்துபோகும் இயல்புபற்றி அசத்து எனவும்படும்.

3. ஒருவாற்றானும் அறியப்படாப்பொருள் பயனுமிலதாய்
இல்பொருளாகும்.

**243** உணராத பொருள்சத் தென்னி னொருபய னில்லைத் தானும்
புணராது நாமுஞ் சென்று பொருந்துவ தின்று மென்றுந்
தணவாத கரும மொன்றுந் தருவது மில்லை வானத் [னும்.
திணரார்பூந் தொடையு மியாமைக் கெழுமயிர்க் கயிறும் போ

(இ-ள்). உணராத பொருள் - ஒருவாற்றானுமறியப்படாதபொருள்.— சத்து என்னின் - உள்பொருளாதல்கூடுமே என்னில்,—ஒரு பயன் இல்லை - அதனால் ஆகும் பயனும் இல்லை,—தானும் புணராது - அது தானாகவே ஒருவகையானும் எம்மைச் சேராது,—நாமும் சென்று பொருந்துவது இன்றாய் - நாமேனும் சென்று அதனைப் பொருந்துமாறுமில்லையாம்,—என்றும் தணவாத கருமம் ஒன்றும் தருவதும் இல்லை - அன்றியும் எக்காலத்தும் எம்மை விட்டுப்பிரியாது நின்று செய்யவேண்டிய செயலையும் அது எம்பொருட்டுச் செய்யுமாறும் இல்லையாம். ஆகையால்,—வானத்து இணரார் பூந்தொடையும் யாமைக்கு எழும் மயிர்க்கயிறும் போலும் - ஆகாயப்பூவினாலே தொடுத்த மாலையும் ஆமைமயிரினாலே திரித்த கயிறும்போலப் பயனுமிலதாய் அஃது இல்பொருளாகும்.

குறிப்பு. 1. உணராதபொருள் சத்தென்னின்:—“ஒருவாற்றானும் அறியப்படாதபொருள் சூனியம் என்பது எல்லாச் சமயத்தாருக்கும் ஒப்பமுடிந்தமையின்” அஃது இல்பொருளேயாம். (சி. போ. பா. 120 பக்). ஆயினும் அறிபொருள்போல அறியப்படாப்பொருளுக்குத் தோற்றம் நாசம் நிலைபேறின்மை முதலிய தன்மை தெரியப்படாமையின் அது சத்தாதலும் கூடுமே என்று வினவுவார்க்கு, அவ்வாறு சத்தே எனக்கொள்ளுவதற்கு ஏதுவாகிய பயனாவது காணப்படாமையின் அஃது அசத்தேயாம் என்றது. ஈண்டு ஒருவாற்றானுமறியப்படாதபொருள் என்றது தன்னியல்பானாதல், காரியப்படுமியல்பானாதல், பிறிதெவ்வியல்பானாதல் அறியப்படாதபொருளையாம் என்க.

2. புணராது......பொருந்துவதின்று.........கருமமொன்றுந் தருவதுமின்று:—நம்மையதுவந்தடைதல், நாமதையடைதல், நம்பொருட்டு அது கருமமியற்றல் ஆதிய வினைகள் இயல்வதாயின், காரியப்படுமியல்பானறியப்படும்பொருளாய்விடும். எனவே ஒருவாற்றானுமறியப்படாதபொருள் இவ்வாறு வினைகளொன்றும் இயற்றமாட்டாது என்றதாம். “ஒருபயனில்லை” என ஈண்டும் மேல் 245-ம் செய்யுளிற் கூறியதும் இதனானேயென்க.

3. தணவாத - நீங்காத, விட்டுப்பிரியாத.

4. வானத்திணரார் பூந்தொடையு மியாமைக் செழுமயிர்க் கயிறும் போலும்:—ஆகாயப்பூமாலையும், ஆமைக்கயிறும் பயனிலவாய் இல்பொருளாதல் போல ஒருவாற்றானு மறியப்படாதபொருளும் பயனிலவாய் இல்பொருளேயாம் என்பது. ஆகாயப்பூவும், ஆமைமயிருந் தாமே இல்பொருளாகவும் அவற்றாலியற்றிய மாலையையும், கயிற்றையும் உவமானமாகக்கொண்டது காரியப்படுமாறுமின்றிக் காரியமுறையிலாவது பயன்படுமாறுமின்றி நிற்கும் பொருள் உள்பொருளாகாது என வற்புறுத்திக்காட்ட என்க.

5. சிவமும் ஒருவாற்றானு மறியப்படாப்பொருளாம் என்னில் அஃது ஒருவாற்றானும் காரியப்படுத்தும் செயலற்றுப் பயனிலதாய் இல்பொருளாய் முடியுமாகையால், அஃது அருளினாலறியப்படுஞ்சத்து என்பது பெறக்கிடந்தது.

பொழிப்பு. ஒருவாற்றானு மறியப்படாப்பொருள் உள்பொருளாதல் கூடும் என்னில், அது தானாக எம்மைச் சேருதலுமின்றி, நாமாக அதைச் சேருதலுமின்றி. எமக்கு ஒருபயனுந் தருவதுமின்றிச் செயலற்றுநிற்றலின் இல்பொருளாகவே ஒழியும்.

---

## இரண்டாமதிகரணம்.

அறிவுறும் பொருளோ வீச னறிவுறு தலானே வென்னின், எங்குஞ் செறி சிவ மிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும் என்பது இரண்டாங்கூறு, **(244-249).**

இவ்வதிகரணத்திலடங்கிய விஷயங்கள்:—

1. சிவம் சத்துச் சித்து, **(244)**.
2. சிவம் பதிஞானத்தால் அறியப்படுவது, **(245)**.
3. சிவம் பாசஞானத்தால் அறியப்படாது, **(246)**.
4. சிவம் பசுஞானத்தால் அறியப்படாது, **(247)**.
5. சிவம் தன்னை அறியுமாறறிந்த ஆன்மாவோடு அத்துவிதமாய் நிற்கும், **(248)**.

### 1. சிவம் சத்துச் சித்து.

**244** தத்துவஞ் சத்த சத்துச் சதசத்து மன்றென் றாலென் [றில்
உய்த்துணர்ந் துண்டோ வின்றோ வென்றவர்க் குண்டென் றோ
வைத்திடுஞ் சத்தை யாரு மனத்தொடு வாக்கி றந்த
சித்துரு வதுவ சித்தா மனத்தினற் றேர்வ தெல்லாம்.

(இ - ள்). தத்துவம் - பிரமப்பொருள்,—சத்து அசத்து சதசத்தும் அன்று என்றால் என் - உள்பொருளுமன்று இல்பொருளுமன்று உள்பொருளும் இல்பொருளும் ஆவதுமன்று என்று அநிர்வசனியமாகக் கூறிற் படும் இழுக்கென்னை எனின்,—உண்டோ இன்றோ என்றவர்க்கு - அப்படி அநிர்வசனமாய்க் கூறப்படும் பொருளொன்றுதான் உண்டோ இல்லையோ என வினவியினர்க்கு,—உய்த்து உணர்ந்து உண்டென்று ஓதில் - ஆராய்ந்துபார்த்து

(இல்லையெனில் முயற்கொம்பை ஒக்குமென்றஞ்சி) உண்டென்று கூறுவாயாகில்,—வைத்திடும் சத்தை ஆகும் - அந்தப் பிரமம் சொல்லப்பட்ட சத்துப் பொருளாகும். ஆயினும்.—மனத்தினால் தேர்வது எல்லாம் அசித்தாம் - மனத்தினாற் சுட்டியறியப்படுவனவெல்லாம் சடப்பொருள்களாயழிவனவாகும். ஆதலால்,—அது மனத்தொடு வாக்கிறந்த சித்துரு - அப்பிரமம் மனம் வாக்குக்களாலாய சுட்டறிவுக்கு எட்டாத சித்துப்பொருளாம்.

குறிப்பு. 1. தத்துவம் - உண்மை, உண்மைப்பொருள்.

2. சத்தை - சத்து, உள்பொருள்.

3. மனத்தொடு வாக்கிறந்த சித்துருவது:-—இங்கே மனம் பசுஞானத்தையும், வாக்குப் பாசஞானத்தையும் குறித்து நின்றன. பாசஞானமாவது சொற்பிரபஞ்சமும் பொருட்பிரபஞ்சமுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாய் ஆன்மாவின்கண் நிகழும் ஏகதேசஞானமாம். வைகரி முதலிய நால்வகை வாக்குக்களும், வேதசாத்திரங்களும், மிருதிகளும், புராணங்களும், மற்றைக் கலைஞானங்களும், அசபையும் சொற்பிரபஞ்சமாம். பிருதிவி முதல் நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களும் பொருட்பிரபஞ்சமாம். பசுஞானமாவது நான் பிரமம் என்னும் ஞானம். அது ஆன்மபோதத்தால் வருவது. பாசங்களின் இயல்பை உணர்ந்து தன்னை அவற்றின் வேறாகக் கண்டு அவையெல்லாம் தன் கீழ் வியாப்பியமென்றறிந்து நீங்கித் தான் மேற்படும்பொழுது, அவற்றிற்கு மேலாகிய பிரமம் நானே எனச் சடுதியில் வரும் ஞானமாம். சிவம் மேற்கூறிய இருவகை ஞானத்தினாலும் அறியப்படாது பதிஞானம் ஒன்றினாலே அறியப்படும் என்பது. சித்துரு - ஞான வடிவு. இதனாற் சிவம் சித்தென்றது.

4. அசித்தா மனதினாற் தேர்வதெல்லாம் - "அறிபொருள் அசித்தசத்தாம்" (செ. 240, 241 பார்). இதனால் சிவம் சத்தென்றது.

பொழிப்பு. சிவம் சத்துச்சித்தாகிய இயல்புடையது. மனம் வாக்குக் காயங்களால் அறியப்படாதது.

2. சிவம் பதிஞானத்தால் அறியப்படுவது.

**245.** அறிபொரு ளசித்தாய் வேறு மறிவுறுப் பொருள்சத் தென்னின்
அறிபவ னறியா னாகி லதுவின்று பயனு மில்லை [ன்
அறிபவ னருளி னாலே யநந்நிய மாகக் காண்பன்
அறிபொரு ளறிவாய் வேறு யறிவரு ளுருவாய் நிற்கும்.

(இ - ள்). அறிபொருள் அசித்தாய் வேறும் - சுட்டி அறியப்படும்பொருள் சடமாய் சிவத்துக்கு அந்நியமாம் என்பது ஒக்கும், ஆயினும்,—அறிவுறுப்பொருள் சத்து என்னின் - ஒருவாற்றானு மறியப்படாதபொருள் சத்தாகிய சிவமாயிருத்தல்கூடும் என்னில்,—அறிபவன் அறியான் ஆகில் அது

இன்று பயனும் இல்லை - அறிபவனாகிய ஆன்மா அறியானாகில் அச்சிவமும் இல்பொருளாய் அதனாற் பெறக்கடவதோர் பயனுமில்லையாய் முடியும். அப்படியன்று,—அறிபவன் அருளினாலே அநந்நியம் ஆக காண்பன் - அறிய வல்ல ஆன்மா திருவருட்சகாயத்தால் அச்சிவம் தனக்கு வேறற நிற்பதாகக் காண்பன். ஆதலால்,—அறிபொருள் அறிவாய் வேறாம் - அங்ஙனம் அறியப் படும்பொருளாகிய சிவம் அவ்வறிவேயாய் வேறுமாய்,—அறிவு அருள் உருவாய் நிற்கும் - அறிவைப் பயப்பிக்கும் ஞானவடிவாய் நிற்கும்.

குறிப்பு. 1. அறிபவனறியானாகிலதுவின்று பயனுமின்று:—"உணராத பொருள் சத்தென்னி னொருபய னின்றாம்" என்பது பார்க்க (செ. 243).

2. அறிபவனருளினாலே யநந்நியமாகக் காண்பன் - ஆன்மா பதிஞானத்தைக்கொண்டு சிவத்தைத் தன்னின்வேறின்றி அத்துவிதமாகக் காண்பன். அப்போ காண்பானும் காட்சிப்பொருளும் காண்பிக்குமாறும் யாங்ஙனமாகும் என்னும் ஐயம் நீக்க "அறிபொருள் அறிவாய் வேறாய் அறிவருள் உருவாய் நிற்கும்" என ஆன்மாவிற்கு அறிவேயாய் வேறுமாய் உடனிற்பதோர் அத்துவித இயைபுடையது சிவம் எனக் காட்டியதாம். இவ்வுண்மையை இரண்டாஞ் சூத்திரத்து அத்துவிதலக்கணத்தோடொட்டி அறிக.

பொழிப்பு. சிவம் பதிஞானத்தால் அறியப்படுவதாம். அஃது அவ்வறிவேயாய் வேறுமாய் உடனுமாய் ஆன்மாவோடு அத்துவிதமாய் நிற்கும் இயல்புடையதாம்.

### 3. சிவம் பாசஞானத்தால் அறியப்படாது.

**246.** பாவிப்ப தென்னிற் பாவம் பாவகம் கடக்கிற் பாவம்
பாவிக்கு மதுநா னென்னிற் பாவகம் பாவங் கெட்டுப்
பாவிப்ப தென்னிற் பாவம் பாவனை யிறந்து நின்று
பாவிக்கப் படுவ தாகும் பரம்பர னருளி னாலே.

(இ - ள்). பாவிப்பது என்னின் - சிவம் மேற்கூறியவாறு அருளினாலே அறியப்படுதலன்றி மனம்முதலிய கருவிகளோடுகூடிச் செய்யும் பாவனையால் அறியப்படும் என்னில்,—பாவம் - அவ்வாறு கருவிகளால் அறியப்படுவன யாவுஞ் சடப்பொருளாதலால் அப்பாவனை பயனற்றதாம்,—பாவகம் கடக்கின் பாவம் - கருவிகளை நீங்கிநின்று செய்யும் பாவனையால் அறியப்படும் என்னில், அப்பொழுது கேவலம் வந்து மூடுமாதலால் அதுவும் பயனற்ற செயலாம்,—பாவிக்கும் அது நான் என்னிற் பாவகம் - பாவிக்கப்படும் அந்தப்பொருளே நான் என்று பாவனைசெய்ய அறியப்படும் என்னில், அதுவும் போலிப்பாவனையாகிப் பயனற்ற செயலாம்,—பாவம் கெட்டுப் பாவிப்பது என்னின் பாவம் - ஒருவாற்றானும் பாவனையின்றிப் பாவித்

தறியப்படும் என்னில் அப்போ பாவனேயேயின்றி அது அநிர்வசனியப் பாழாய்ப் பயனற்ற செயலேயாகும். ஆதலால்,—பரம்பரன் - அப்பரம்பொருள்,—பாவனே இறந்து நின்று - பாவனேகளேக் கடந்துநின்று,—அருளினுலே பாவிக்கப்படுவெதாகும் - தனது திருவருளாற் பாவிக்கப்படுவெதாம்.

குறிப்பு. 1. யோகநூலிற் கூறும் தியான பாவனேகளாற் சிவனே அறியலாம் என்னும் பாதஞ்சலர்கொள்கை இச்செய்யுளால் மறுக்கப்பட்டது.

2. பாவிப்பதென்னிற் பாவம் - மனம்முதலிய கருவிகளால் அறியப்படுவன யாவும் சடப்பொருளாதலாலும், சிவம் சித்துப்பொருளாதலாலும், அக்கருவிகளோடுகூடிச் செய்யும் பாவனேயாற் சிவத்தை அறிதல் கூடாது என்பது. பாவம், பாவகம் - பொழுதுபோக்கு, வீண்செயல்.

3. பாவகங் கடக்கிற் பாவம் - கருவிகளோடுகூடிச் செய்யாது கருவிகளே நீங்கி நின்று செய்யும் பாவனேயிற் கேவலம் வந்து பொருந்துமாதலால், அப்பாவனேயாலும் பயனின்று என்பது.

4. பாவிக்குமது நானென்னிற் பாவகம் - கருவிகளேக்கொண்டும் பாவியாது, கருவிகளினீங்கியும் பாவியாது, பாவனேக்கெய்தாத பொருளே எய்தியதாகவைத்துச் சிவன் நான் என்று பாவிக்கின், அது போலிப்பாவனேயாய்ப் பயனற்றதாம் என்பது.

5. பாவங்கெட்டுப் பாவிப்பதென்னிற் பாவம் - பாவனேயாற் பாவிக்கப்படாதவன் என்று பாவித்தல் ஒருவாற்றானும் பாவனேயாகமாட்டாது. ஆகலால் அதுவும் பயன்தருமாறில்லே என்பது. இங்ஙனம் பாவனே, கருவிகளோடுகூடிச் செய்யும் பாவனேயும், கருவிகளினீங்கிநின்று செய்யும் பாவனேயும், அடையாதபொருளே அடைந்ததாக எண்ணிச் செய்யும் பாவனேயும், பாவனேயின்றிச் செய்வதெனப்படும் பாவனேயுமென நான்குவகையாக, இவற்றுள் யோகநூலார் (பாதஞ்சலர்) கூறும் பாவனேகள் யாவும் அடங்குமாதலின், இவை இங்கே கூறப்பட்டு மறுக்கப்பட்டன.

6. பாவனே யிறந்து நின்று பாவிக்கப்படுவெதாகும் பரம்பரன் அருளினுலே:—முதல்வன் பாவனுதீதனுயினும், அருளால் அறிவுருவாய்த் தியானிக்கப்படுவென் என்பது. பாவனே யிறந்து நின்று பாவித்தல் - பாவிப்போனுகும் காண்பான், பாவிக்கப்படுவெதாகும் காட்சிப்பொருள், பாவித்தலாகும் காட்சி என்னும் மூன்றும் பிரித்தறிதலின்றி, அருளே தானுய் ஞானநிட்டைகூடுதல். (செ. 282 பார்).

பொழிப்பு. பாசஞானமாகிய பாவனேகளாற் சிவம் அறியப்படாது. திருவருளாற் பதிஞானம் கைவந்தபோது அறியப்படும்.

4. சிவம் பசுஞானத்தாலறியப்படாது.

**247.** அந்நிய மிலாமை யானு மறிவினு ணிற்ற லானும்
உன்னிய வெல்லா முன்னின் றுணர்த்துவ னாத லானும்
மன்னதி யானென் றோது மிருஞ்செருக் கறுத்த லானுந்
தன்னறி வதனாற் காணுந் தகைமைய னல்ல னீசன்.

(இ - ள்). ஈசன் - முதல்வன்,—அந்நியம் இலாமையானும் - ஆன்மாவிற்கு வேறற நிற்றலானும்,—அறிவினுள் நிற்றலானும் - அறிவுக்கறிவாய் நிற்றலானும்,—உள்நின்று உன்னிய எல்லாம் உணர்த்துவன் ஆதலானும் - அங்ஙனம் அறிவுக்கறிவாய் நின்று ஆன்மா நினைத்தவை எல்லாவற்றையும் அறிவிப்பனாதலானும்,—என்னது யான் என்று ஓதும் இரும் செருக்கு அறுத்தலானும் - அவ்வாறறியும் ஆன்மாவைப்பொருந்திய, எனது, யான் என்று சொல்லப்படும் பெரிய மயக்க உணர்வை முற்றாய் நீக்குதலானும்,—தன் அறிவு அதனால் காணும் தகைமையன் அல்லன் - யான் எனது என்னுஞ் செருக்கோடுகூடியுள்ள ஆன்ம அறிவினால் அறியப்படுந் தன்மையுடையவனல்லன்.

குறிப்பு. 1. அந்நியமிலாமை, அறிவினு ணிற்றல், முன்னின் றுணர்த்தல்:—இவை மூன்றானும் முறையே பதி பசுவோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் சுத்தாத்துவிதநிலையைக் குறிப்பித்தவாறு.

2. என்னதியானென்றோதுமிருஞ்செருக்கு:—எனது என்றும், யான் என்றும் பகுத்துக்காணும் மயக்க உணர்வு. இது மமகார அகங்காரங்கள் எனவும்படும். மம - என்னுடையது; அஹம் - யான். இவற்றுள் எனது என்பது அறியும் அறிவையும் அறியப்படும்பொருளையும்பற்றிய இறுமாப்பு. ஞானஞேயங்கள் மேற்கொண்டெழுத்தும் அபிமானம் எனினும் ஒக்கும். யான் என்பது அறியும்பொருளாகிய உயிர் தன்னிற்பற்றிய இறுமாப்பு. ஞாதிரு மேற்கொண்டெழுத்தும் அபிமானமெனினும் ஒக்கும். ஞாதிரு, ஞானம், ஞேயம் என்பன முறையே காண்பான் காட்சி காட்சிப்பொருள் எனவும் படும். செருக்கு - மயக்கம். இங்கு மயக்கத்திற்கேதுவாகிய உணர்ச்சியைக் குறித்து நின்றது. இவ்வுணர்ச்சியே ஆணவமலத்தடிப்புற்ற பசுஞானமாம்.

பொழிப்பு. முதல்வன் பகுத்தறியவராது, ஆன்மாவோடு வேறறவும், அறிவுக்கறிவாகவும், முன்னின்றும் உணர்த்துதலாலும், அவ்வாறுணர்த்தவே ஆன்மாப்பகுத்துணர்தலாலும், பகுத்துணரும் மயக்க அறிவோடுகூடிய பசுஞானத்தாற் சிவம் அறியப்படாது.

5. சிவம் தன்னையறியுமாறறியும் ஆன்மாவோடு அத்துவிதமாய் நிற்கும்.

**243.** ஒன்றெனு மதனு லொன்றென் றுரைப்பதுண் டாகை யாலே
நின்றனன் வேறாய்த் தன்னி னீங்கிடா நிலைமை யாலே
பின்றிய வுணர்வுக் கெட்டாப் பெருமைய னறிவி னுள்ளே
என்றுநின் றிடுத லாலே யிவனவ னென்ன லாமே.

(இ - ள்). ஒன்றெனும் அதனுல் - சிவனும் ஆன்மாவும் ஒன்றென்று கூறுமிடத்து,—ஒன்று என்று உரைப்பது உண்டு ஆகையாலே - அங்ஙனம் ஒன்றென்று கூறும் ஆன்மா வேறாய் உளதாதலின்,—வேறாய் நின்றனன் - சிவன் அவ்வான்மாவிற்கு வேறாய் நிற்பவனும்,—தன்னின் நீங்கிடா நிலைமை யாலே - ஆயினும், அச்சிவன் அவ்வான்மாவோடு பிரிப்பின்றி உடனாய் நிற் குந்தன்மையாலே,—பின்றிய உணர்வுக்கு எட்டாப் பெருமையன் - வேறெ ன்று பகுத்தறியும் அறிவுக்கு எட்டாது உடனிற்கும் மாட்சிமையுடையோனு மாம்,—அறிவினுள்ளே என்றும் நின்றிடுதலாலே - அறிவினுள் எக்காலத்தும் ஒற்றித்துநிற்றலாலே,—இவன் அவன் என்னலாமே - ஆன்மாவே சிவன் என்னும்படி ஒன்றாயும் நிற்பவனுமாம்.

குறிப்பு. 1. பின்றிய உணர்வு - பின்பட்ட அறிவு, பிரித்து வேறுகாணும் மயக்க உணர்வு. (செ. 247 பார்).

2. நின்றனன் வேறாய், உணர்வுக்கெட்டாப் பெருமையன், இவனவ னென்னலாமே - என்றது மேலைச் செய்யுளிற் கூறியவண்ணம், பதி ஆன்மா வின்வேறாயும், அதனோடு உடனாயும், ஒற்றித்தும் நிற்கும் சுத்தாத்துவிதநிலை யைக் குறித்து நின்றது. இதனானே பதி பசுவோடு அத்துவிதமாய்க் கலந்துநின்றறிவிக்குநிலை கேவலாத்துவிதி, விசிட்டாத்துவிதி, பேதவாதி, மாயாவாதிகள்கூறும் அத்துவிதலக்கணமுமன்றிச் சிவசமவாதிகூறும் சமத் துவநிலையிலக்கணமுமன்றிச் சுத்த அத்துவித இலக்கணமாம் என்பது போதர, நின்றனன் வேறாய் என முடிவு கொடுத்துத் தன்னின் நீங்கிடா நிலைமையாலே உணர்வுக்கெட்டாப் பெருமையன், இவன் அவன் என்ன லாமே. என்னும் மூவகையினுங்கொள்ளுந் திறத்தது என விளக்கியதுமாம் என்க. மேலருளினல் அறியப்பட்டு ஆன்மாவிற்கு அறிவித்து நிற்கும் பதியி னது சுத்தாத்துவித இலக்கணவிரிவு சிவஞானபோதமாபாடியத்து "அது வென்னுமொன்றன்றதுவன்றிவேறே, யதுவென்றறியறிவுமுண்டே—அது வென், றறியவிரண்டல்ல ஞக்கறிவுணிற்ற லறியுமறிவேசிவமுமாம்" என் னும் உதாரணவெண்பாவிருத்தியிற் காண்க. (சி. போ. பா. 127-130 பக்).

பொழிப்பு. சிவன் ஆன்மாவிற்கு வேறாய்நின்றறியப்படுதலுமேயன்றி, அதனோடு கலந்து உடனாயும், பிரிவின்றி ஒற்றித்தும் அத்துவிதமாய் நிற்பன்.

---

## ஏழாஞ் சூத்திரம்.

(தொடர்பு.)

### மூன்றுமதிகரணம்.

நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றிடா என்பது மூன்றுங் கூறு, (249-252).

இவ்வதிகரணம் பதியினாலுபகரிக்கப்படு நிலையிற் பசுவினிலக்கணம் கூறுகின்றது.

இதில் அடங்கிய விஷயங்கள்:—

1. சத்து அசத்தை யறியாது, அசத்துச் சத்தை யறியாது, (249).
2. சத்தையும் அசத்தையும் அறிவது சதசத்தாகிய ஆன்மா, (250).
3. சதசத்தாகிய ஆன்மா அநாதியே அசத்தின்வண்ணமாயுள்ளது, (251).
4. சதசத்தாகிய ஆன்மா அருளாற் சத்தின்வண்ணமாந்தன்மையுடையது, (252).

1. சத்து அசத்தை அறியாது, அசத்துச் சத்தை அறியாது.

**249.** அனைத்துஞ்சத் தென்னி னொன்றை யறிந்திடா தசத்தா லென்[னின்
முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிரு ளிரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே யென்னிற் சத்தின்முன் னிலாமை யானுந்
தனைக்கொடொன் றுணர்த லானுந் தானசத் துணரா தன்றே.

(இ - ள்). அனைத்தும் சத்து என்னின் - அறியும்பொருள் யாவும் சத்தாம் என்று சொல்லின்,—ஒன்றை அறிந்திடா - சத்துப்பொருள் வியாபகமாயிருத்தலால் ஒன்றைப்பிரித்து அறியமாட்டாது,—அசத்தால் என்னின் - அவ்வாறு அறிதல் அசத்தின் சேர்க்கையாலாம் என்னின்,—இருள் இரவி முன்போல் - இருள் ஆதித்தன்முன் நிற்கமாட்டாதவாறுபோல,—அசத்துச் சத்தின்முன் முனைத்திடாது - அசத்தும் சத்தின்முன் முனைத்து நில்லாது, ஆதலால் சத்தே அசத்தை அறியும் என்பது பொருந்தாது,—நினைப்பது இங்கு அசத்தே என்னில் - அறியும்பொருள் அசத்தேயாம் என்னில்,—சத்தின்முன் நிலாமையானும் - அசத்துச் சத்தின்முன் முனைத்து நில்லாததலாலும்,—தனைக்கொடு ஒன்று உணர்தலானும் - அசத்தாகிய கருவிகளைக் கொண்டு ஆன்மாவாகிய பிறிதொருபொருளே அறிவதாதலாலும்,—தான் அசத்து உணராது - அசத்தே சத்தை அறியும் என்றலும் பொருந்தாது.

குறிப்பு. 1. ஆறுஞ் சூத்திரத்தின் முதற் செய்யுளிலே தொகுத்துக் கூறியவற்றின் ஒருபகுதியை இச்சூத்திரம் விரித்து விளக்கலால், இஃது அதன் தொடர்ச்சியாகும். முதனூலில் ஏழாஞ்சூத்திரத்தை "மேலதற்கு

தூர் புறனடையுணர்த்துதனுதலிற்று" என்று கூறியுள்ளார். ஆன்மாவிற் கறிவிக்கு நிலையிற் பதியினிலக்கணங்கூறி, அறியும் பொருள்தான் பதிபோற் சத்துமன்று பாசம்போல் அசத்துமன்று, அதனின் வேருயதன்மையுள்ள ஆன்மாவாம் என விளக்கும்படி, அறிவுறு நிலையில் ஆன்மாவினதிலக்கணம் கூறுவதனுல் மேலைச் சூத்திரத்தின் வேருயதோர் பொருளினதிலக்கணங் கூறலின் வேறு சூத்திரமெனக்கொண்டதாம்.

2. அனைத்துஞ் சத்தென்னி னொன்றை யறிந்திடாது:—சிவாத்துவித சைவர் பசு பாசங்கள் பதி வியாபகத்தின் வியாப்பியமாய் நிற்பனவன்றித் தனிப்பொருளல்ல, முப்பொருட்குந் தம்முள் வேற்றுமை குண குணிகட்குத் தம்முளுளதாகிய வேற்றுமைபோல உட்பேதமேயன்றிப் புறப்பேதமின்று, மரத்தின் வியாப்பியமான கவடு கொம்பு முதலியனவெல்லாம் மரமேயாமாறு போலச் சதசத்தும் அசத்துமாகிய அனைத்தும் சத்தெனவேபடும். ஆகையால் சத்தாகிய பதிப்பொருள் பாசத்தை அறியுமென்பர். சிவம் வியாபகப்பொருளாய் அதன் அறிவும் வியாபகமாய் நிற்றலால், அது தன்னின் வியாப்பியமான எல்லாப்பொருளையும் ஒருங்கே அறிந்து நிற்பதன்றி ஏகதேசமாய்ப் பகுத்து ஒன்றை அறியாதாதலால், அது பொருந்தாது. அறிதல் - அநுபவித்தல். கண் இருளை அறிந்து அநுபவிக்கும். சூரியன் அவ்விருளை அறிந்து அநுபவியாது. அதுபோலச் சிவமும் பாசத்தையறிந்து அநுபவியாது என்பதாம்.

3. அசத்தா லென்னின் முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிரு ளிரவி முன்போல்:—இன்னும் அச்சிவாத்துவித சைவர், பதிப்பொருளே பாசத்தையறிதல் கூடாதாயினும், அது ஆன்மாவினிடமாக நின்று கருவிகளோடு கூடிப் பாசத்தை அறிதல்கூடும் என்பர் (சிவப். பக். 117). ஆதித்தன் முன் இருள் முனைத்து நில்லாதவாறுபோலச் சத்தின்முன் அசத்து முனைத்து நில்லாதாதலால் அதுவும் பொருந்தாது. இங்கே அசத்து என்றது தத்துவங்களை (முத். பக். 348). முனைத்திடாமை - இஃது குடம் இஃது ஆடை என நம்மனேராற் சுட்டியறியப்படுவதுபோல அறியப்பட்டு நில்லாமை.

4. நினைப்பதிங் கசத்தே யென்னின்:—சத்து அசத்தை யறியாதாயினும், அசத்தாகிய தனு கரண புவன போகங்களுள் ஒன்ருகிய கரணம், விகாரமின்றி நிற்கும் ஆன்மசந்நிதியில் அசத்தாகிய விடயங்களை அறியும் என்பர் சிவசங்கிராந்தவாதிகள்.

5. தனைக்கொடு ஒன்றுணர்தலானும் - கருவி கரணங்களைக்கொண்டு உணர்வது ஆன்மாவாகிய பிறிதொன்றென்பது மேல் நான்காஞ் சூத்திரத்துக் காட்டியவாற்ருனுணர்க. (செ. 219-222 பார்).

6. நினைப்பது அனைத்துஞ் சத்தென்னில் பொருந்தாது, நினைப்பது இங்கு அசத்தென்னிலும் பொருந்தாது. ஆதலால் நினைப்பது "தான் சத்து

மசத்துமன்று" என வருஞ் செய்யுளிற் கூறியதைப் பாரிசேடவளவையா லுணரவைத்தது இச்செய்யுளென்க.

பொழிப்பு. சத்துப் பிரித்தொன்றை யறியாதாதலாலும் தன்முன் முளைத்துநிற்காத அசத்தோடுகூடி யறியாதாதலாலும் அறியும்பொருள் சத்தாகுமென்றல் பொருந்தாது. அசத்துச் சத்தின்முன் னில்லாதாதலாலும் அசத்தோடுகூடி யறிவதொன்று வேறு வேண்டப்படுதலாலும் அசத்தே அறியும் என்றலும் பொருந்தாது.

2. சத்தையும் அசத்தையும் அறிவது சதசத்தாகிய ஆன்மா.

250. சத்தசத் தறிவ தான்மாத் தான்சத்து மசத்து மன்று
நித்தனாய்ச் சதசத் தாகி நின்றிடு மிரண்டன் பாலும்
ஒத்துட னுதித்து நில்லா துதியாது நின்றி டாது
வைத்திடுந் தோற்ற நாற்ற மலரினில் வருதல் போலும்.

(இ-ள்). சத்து அசத்து அறிவது ஆன்மா - சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவது ஆன்மாவாம்,—தான் சத்தும் அசத்தும் அன்று - அவ்வான்மா சத்தாகிய சிவமும் அன்று, அசத்தாகிய பாசமும் அன்று,—நித்தனாய்ச் சதசத்தாகி நின்றிடும் இரண்டன்பாலும் - அது நித்தியப்பொருளாய்ச் சத்து அசத்து என்னும் இரண்டனிடத்தும் தனித்தனி கூடியவழிச் சத்தாயும் அசத்தாயுந்தோன்றி அதுவதுவாய் நின்று அறியுந்தன்மையதாம்,—ஒத்து உடன் உதித்தும் நில்லாது - அவ்விரண்டிற்கும் சமமாய் அவற்றோடு கூடி விளங்கித்தோன்றி நிற்பதுவுமன்று,—உதியாதும் நின்றிடாது - விளங்கித் தோன்றாது சூனியமாய் நிற்பதுவும் அன்று,—வைத்திடும் தோற்றம் - அது தோன்றி நிற்குந்தன்மை,—நாற்றம் மலரினில் வருதல் போலும் - வாசனையானது பூவினிடத்தில் அடங்கித் தோன்றிநிற்றல்போலாம்.

குறிப்பு. மலரின் வாசனை மலர்போல விளங்கித் தோன்றாமலும், சூனியமல்லாமலும் அம்மலரின்கண் அடங்கித் தோன்றுமாறுபோல, ஆன்மாவும் சத்து அசத்து ஆகிய இரண்டும்போல விளங்கித்தோன்றி அவற்றோடொப்ப நிற்பதுமன்றாய், விளங்காது சூனியமாதலுமன்றாய்ச் சத்திலும் அசத்திலும் சார்ந்ததன்வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோரியல்புடையதாம். எனவே ஆன்மா சத்தும் அசத்தும் போலத் தனித்தறியப்படுவதொன்றாகாது, அவ்விரண்டனையும் அறியுமுகத்தான் அறியப்படுவதாம் என்பதும் காணக்கிடந்தது.

பொழிப்பு. சத்து அசத்து என்னும் இரண்டனையும் அறிவது ஆன்மாவாம். அஃது அவ்விரண்டிற்கும் வேறாய் இரண்டின்பாலும் மலரின்கண் நாற்றம்போல அதுவதுவாய்த் தோன்றி நிற்றலாற் சதசத்தெனப்படும்.

3. சதசத்தாகிய ஆன்மா அநாதியே அசத்தின்வண்ணமாயுள்ளது.

**251.** சுத்த மெய்ஞ் ஞான மேனிச் சோதிபா லசத்தஞ் ஞானம்
ஒத்துறு குற்ற மெல்லா முற்றிடு முயிரின் கண்ணே
சத்துள போதே வேறுஞ் சதசத்து மசத்து மெல்லாம்
வைத்திடு மநாதி யாக வாரிநீர் லவணம் போலும்.

(இ - ள்). சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபால் - இயல்பாகவே பாசத்தினீங்கிய உண்மைஞானமே திருமேனியாகவுடைய அருள் ஒளியாகிய சிவத்தினிடத்து,—அசத்து அஞ்ஞானம் ஒத்துறு - அசத்தாகிய ஆணவ மலவிருள் முனைத்து நில்லாது, ஆதலின்,—குற்றம் எல்லாம் உயிரின் கண்ணே உற்றிடும் - ஆணவம் முதலிய பாசங்கள் அனைத்தும் உயிரினிடத்தே பொருந்தும்,—சத்து உளபோதே - சத்தாகிய சிவம் என்று உள்ளது அன்றே,—வேறும் சதசத்தும் அசத்தும் எல்லாம் - அச்சிவத்தின் வேறுயுள்ள சதசத்தாகிய உயிர்களும் அசத்தாகிய பாசங்களும் சேர்ந்து,—வாரி நீர் லவணம் போலும் - கடல் நீர் உப்பு (என்னும் மூன்றனுள் கடலைப்பற்றாது நீரையே உப்புப் பற்றியிருத்தல்) போல,—அநாதி ஆக வைத்திடும் - அநாதியே இரண்டும் ஒன்றையொன்று பற்றி நிற்கும். ஆதலால் உயிர் அநாதியே அசத்தின் வண்ணமாயுள்ளது.

குறிப்பு. 1. சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபா லசத்தஞ் ஞானம் ஒத்துறு - என்பது அநுவாதம். இரவிமுன் னிருள்போலச் சத்தின்முன் அசத்து முனைத்திடாதாதலாலென்க. (செ. 249. கு. 3 பார்). சுத்த சத்துச் சித்தொளிமுன் அதன் அபாவமாகிய அசுத்த அசத்து அசித்திருள் நிற்றல் பொருந்தாதெனினும் ஒக்கும். சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதி - அநாதி மலமுத்த சச்சிதானந்த சிவம், அநாதிமுத்தசித்த பேரறிவொளி. சுத்தம் - மலநீங்கினமை; மெய் - உண்மை, சத்து, நித்தம்; ஞானம் - சித்து, பேரறிவு; சோதி - ஆனந்தம், அருளொளி. அஞ்ஞானம் - ஆணவமலம்.

2. குற்ற மெல்லா முற்றிடு முயிரின் கண்ணே:—மலங்கள் உயிரைப் பொருந்துதல் அதனிடத்துள்ள பற்றுந்தன்மையாலாம். அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க்குற்றங்களுள்வைத்துணரப்படும். (சி. போ. சூ. 4. அ. 2).

3. வாரி நீர் லவணம் போலும்:—வாரி - நீருக்கு இடங் கொடுக்கும் ஆகாயம். வாரி பதிக்கும், நீர் பசுவுக்கும், லவணம் பாசத்திற்கும் உவமை. பதி கடல்போல வியாபகமாயும், பசு நீர்போலச் சிவத்தினுளடங்கி வியாப்பியமாயும், பாசம் உப்புப்போலப் பசுவோடு வியாத்தியுற்றும் அநாதியாக நிற்கும். வியாத்தி - சமநிறை. "மெய்ஞ் ஞானந் தன்னில்......தண்கடனீருப்புப் போற்றனே........" (சி. போ. சூ. 7. அதி 3. வெ. 5).

4. எல்லாம் வைத்திடும்:—சதசத்தும் அசத்துமென்னு மிரண்டன்பாற் பட்ட யாவுஞ்சேர்ந்து ஒன்றையொன்று பற்றி நிற்கும் என்றது, எல்லாம் -

என்பது சதசத்தும் எல்லாம், அசத்தும் எல்லாமென இரண்டனேடும் இயைந்தது. வைத்திடல் - பொருந்தியிருத்தல், பற்றிநிற்றல்.

பொழிப்பு. உப்பு கடலைப் பற்ருது நீரையே பற்றியிருத்தல்போல அசத்தாகிய பாசமும் சத்தாகிய சிவத்தைப் பந்தியாது சதசத்தாகிய உயிரையே அநாதியாகப் பந்தித்திருக்கும். ஆதலால், ஆன்மா அநாதியே அசத்தின்வண்ணமாயுள்ளது.

4. சதசத்தாகிய ஆன்மா அருளாற் சத்தின்வண்ணமாந்தன்மையுடையது.

252. அறிவிக்க வறிதலானு மழிவின்றி நிற்ற லானுங்
குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக் கீசன்
நெறிநித்த முத்த சுத்த சித்தென நிற்ப னன்றே
பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளி ஞலே.

(இ - ள்). அறிவிக்க அறிதலானும் - உயிர்கள் சிவன் அறிவிக்க அறிதலாலும்,—அழிவின்றி நிற்றலானும் - நித்தப்பொருள்களாய் இருத்தலாலும், —குறிபெற்ற சித்தும் சத்தும் உயிருக்குக் கூறுவது - (மலத்தின் பற்றுக் கோடுடைய) தூலசித்துத்தன்மையும் தூலசத்துத்தன்மையும் அவ்வுயிர்களுக்கு உளவாகக் கூறப்படும்,—ஈசன் நெறி நித்த முத்த சுத்தசித்தென நிற்பன் - முதல்வனே உயிருக்கு அறிவுதந்து கதியிற் செலுத்துஞ் சத்தாய் மல முத்தனுய் அதிசூக்குமசித்தாய் நிற்பன்,—மலங்கள் எல்லாம் பின் உயிர்க்கு அருளினலே பிறிவிப்பன் - தூலப்படுத்தும் அம்மலங்களெல்லாவற்றையும் உயிர்கள் பக்குவமெய்தியவிடத்து, அவ்வுயிர்களினின்றும் தமது அருளி ஞலே நீக்குவன். ஆதலால் உயிர் சத்துச்சித்தின்வண்ணமாந்தன்மையுடையது.

குறிப்பு. 1. குறிபெற்ற சித்துச் சத்து - மலபந்தத்தால் தூலப்பட்ட சித்துச்சத்து. மலங்கள் உயிரைப்பற்றுதல் அவற்றின் தூலத்தன்மையாலேயாம். உயிர் சகலத்திற் கருவிகள் முதலியவற்றின் துணையையும், சுத்தத்தில் திருவருளின் றுணையையுங்கொண்டறிதலால் தூலசித்தாம். அழிவின்றி நிற்றலால் தூலசத்துமாம். சிவமோ தனக்கோர் துணைவேண்டாது தானே எல்லாவற்றையும் அறிதலாற் சூக்குமசித்து. குறி - அடையாளம், உருவம், கட்டு. (செ. 196 பார்).

2. நெறி நித்தம் - உயிர்க்குக் கதியுதவும் சத்து, நெறிதருஞ் சத்து (செ. 240 பார்). நித்தம் - உண்மை, சத்து.

3. சுத்த சித்து - மல அழுக்கில்லாத சித்து எனவே மலபந்தத்தால் தூலப்படாத, அதிசூக்குமசித்து என்றதாம்.

பொழிப்பு. ஆன்மா மலசம்பந்தத்தால் அறிவிக்க அறிதலாலும் நித்தியமாயிருத்தலாலும் தூலசித்துச்சத்தெனவும்படும். அதிசூக்குமசித்தாகிய பதியின் அருளால் மலநீக்கம்பெறும். ஆகையால் சித்துச் சத்தின்வண்ணமாந்தன்மையுடையது.

# எட்டாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் முதல்வன் குருவடிவாய்த்தோன்றிப் பக்குவான்மாக்களுக்குத் தீக்கையினால் அத்துவசுத்திசெய்து மலமகற்றி ஞானம் வருவித்துத் திருவடி அடைவிக்கும் முறைமை கூறுமுகத்தான், தீக்கைவகைகளும் அத்துவாக்களின் தன்மையும், சைவத்திறனும் சைவசாதனைகளதியல்பும், சிவஞானத்திறனும் பயனும், திருவடிப்பேற்றினியல்பும் கூறுகின்றது.

முதல்வன் பக்குவான்மாக்களுக்கு ஞானம்வருவித்துத் திருவடி அடைவிக்கும் முறைமை தொகுத்துக் கூறல்.

**253.** மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோற்
றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி
மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

(இ - ள்). மன்னவன்தன் மகன் - அரசகுமாரன் ஒருவன்,—வேடரிடத்தே தங்கி வளர்ந்து - (இளமைப்பருவத்து மடமையால்) வேடரிடத்திலே அகப்பட்டு அவரோடு கூடி இழிதொழில் செய்து வளர்ந்து (பருவம் வந்தவிடத்து),—அவனை அறியாது மயங்கி நிற்ப - தனது தந்தையாகிய அவ்வரசனையும் தன்னையும் அறியாது மயக்கமுற்று நிற்க,—பின் அவனும் நீ என் மகன் என்று அவரின் பிரித்து - பின்பு அவ்வரசனும் நீ எனது மகன் என்று அறிவுறுத்தி, அவ்வேடரினின்றும் அவனைப் பிரித்து,—பெருமையொடும் தான் ஆக்கிப் பேணுமா போல் - பெருந்தகைமையோடும் தானாம்வண்ணம் செய்து ஆதரித்தல்போல,—துன்னிய ஐம்புல வேடர் சுழலில் பட்டு - அறியாமையினாலே நெருங்கிய ஐம்பொறிகளாகிய வேடரின் சுழற்சியிற்பட்டு விடயபோகங்களிலே அழுந்தியிருந்து,—துணைவனையும் அறியாது துயர் உறும் தொல் உயிரை - தன்னையும் (பக்குவகாலத்துப் பேரின்ப அறிவு தரவந்த) தலைவனையும் அறியாது வருந்தும் அநாதி உயிரை,—மன்னும் அருட் குருவாகி வந்து - முதல்வனும் நிலைபெற்ற அருளே திருமேனியாகக் குருவடிவங்கொண்டு எழுந்தருளிவந்து உபதேசித்து,—அவரின் நீக்கி - அவ்வைம்பொறிகளினின்றும் நீக்கி,—மலம் அகற்றி - மலங்களின் வலியைக் கெடுத்து,—தான் ஆக்கி - தன்வண்ணமாக்கி,—மலர் அடிக்கீழ் வைப்பன் - மலர்போலுந் திருவடிக்கீழ் வைத்து வாழ்விப்பன்.

குறிப்பு. 1. மன்னவன்றன் மகன் வேடரிடத்தே தங்கி:—மன்னவன் முதல்வனுக்கும், மன்னவன் மகன் ஆன்மாவுக்கும், வேடர் ஐம்பொறிகளுக்கும் உவமை.

2. தங்கி வளர்ந்து:—அறியாத இளம்பருவத்திலே அகப்பட்டு வளர்ந்து, அறியுந்தன்மையுள்ள பக்குவகாலம் வந்தவிடத்து என்பது.

3. ஐம்புல வேடர் சுழலிற் பட்டு:—காட்சியளவி லறியக்கிடந்த ஐம்பொறிகள் வயப்பட்டுத் துன்பப்படுதலைக் கூறவே, தூலாருந்ததி நியாயம் பற்றி, மும்மலங்களின் வயப்பட்டு வருந்துதலும் பெறப்பட்டது. ஐம்புலன் - ஆகுபெயராய் ஐம்புலனைப்பற்றும் பொறிகளைக்குறித்து நின்றது. ஐம்புலனை வேடராகக் கூறியது, முதல்வன் உயிர்களைப் பக்குவ நோக்கி வலிந்து குருவாய் வந்து தானாக்கி ஆட்கொள்ளு முறைமை, அகத்திணையிற் குறிஞ்சிக்குரிய களவொழுக்க மணம்போல்வதனாலாம் என்க. இது மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த ஞானநூலாகும் திருச்சிற்றம்பலக்கோவையாரிலும், கந்தபுராணத்து வள்ளியம்மை திருமணப்படலத்தும் பிறவிடங்களினும் ஒட்டிக் காணலாகும். தூலாருந்ததிநியாயம் - முதலில் ஒரு பெரும் பொருளைக் காட்டிப் பின் அதற்குச் சார்பான சிறிய பொருளைக் காண்பிக்கு நியாயம்.

4. துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிர்:—தன்னை யறியாமையேயன்றித் தனது தலைவனையும் அறியாது வருந்தும் உயிர். மகன் பிதா என்ற முறையாற் சொல்லிய உவமானப்பொருளை உவமேயத்தில் துணைவி துணைவனாகக்கொண்டது, முதல்வன் பக்குவான்மாவுக்கு ஞானங் கொடுத்து அதைத் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பென்னும் அத்துவித முத்தியின்பத்தைத் தரும் நிலை, சன்மார்க்க நிலையெனப்படும் ஞானபாதமுடிபாய் தலைவன் தலைவியர் அநுபவத்தையொக்கும் இரண்டற்ற நிலைபோல்வதாகக் கூறப்படுதலாலென்க. இதுவும் திருச்சிற்றம்பலக்கோவை முதலிய அகத்திணை நூல்களுட் காணலாகும்.

5. அவரினீக்கி:—அந்த கரணங்கள் இந்திரியங்கள் முதலிய கருவிகள் தானல்லவென ஆன்மா அறியுமாறறிவுறுத்தி அவற்றோடு மீட்டுங் கூடாவண்ணம் பிரித்து என்றது. (செ. 282, 289).

6. மலமகற்றி:—ஆசாரியனாய்வந்து தீ க்ஷைசெய்து; அத்துவசுத்தியாற் சஞ்சிதமும், அநுபவத்தாற் பிராரத்தமும், ஞானவுதிப்பினால் ஆகாமியமுமாகக் கன்மங்களொழிய ஆணவமலத்தையும் மெஞ்ஞானத்தால் வலிகுன்றச் செய்து என்றது. (செ. 258-262).

7. தானாக்கி:—ஞானவடிவாக்கி; தன்னின் வேறாகாது தனது நிறைவிற் கலந்திருத்தலாகும் சீவன்முத்தநிலையைத் தந்து என்றது. (செ. 281-283).

8. மலரடிக்கீழ் வைப்பன்:—என்றும் விட்டுநீங்கா முறையில் நேசமொடுஞ்சேபாதத்தையணைய வைப்பன் என்றது. இது தலைவன் தலைவியர்போன்றத்துவிதபாவமாகத் திருவருளோடிரண்டறநிறுத்தலாகும் பரமுத்தியென்ப. மலரடி - திருவருட்சத்தி. (செ. 289-291).

பொழிப்பு. ஐம்பொறி முதலிய தத்துவங்களின் வசத்ததாகித் தன்னையும் தனது தலைவனையும் அறியாது வருந்தும் உயிருக்கு, முதல்வன் அது பக்குவமெய்தியவிடத்துத் திருவருளே திருமேனியாகக்கொண்டெழுந்தருளி வந்து உபதேசித்துத் தத்துவநீக்கஞ்செய்து ஆணவமல வலியைக் கெடுத்து ஞானமுதிப்பித்துப் பரமுத்தியைக் கொடுப்பன்.

இச்செய்யுள் நான்கு கூறுடையது:—

1. துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துயருறுந் தொல்லுயிரை மன்னுமருட்குருவாகி வந்து மலமகற்றி வைப்பன், (254-262).

2. துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையுமறியாது துயருறுந் தொல்லுயிரைமன்னுமருட்குருவாகிவந்து(அறிவித்து) அவரினீக்கி வைப்பன், (263-280).

3. துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துயருறுந் தொல்லுயிரைத் தாளுக்கி வைப்பன், (281-289).

4. துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துயருறுந் தொல்லுயிரை மலரடிக்கீழ் வைப்பன், (290-291).

---

## முதலதிகரணம்.

துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துயருறுந் தொல்லுயிரை மன்னுமருட் குருவாகி வந்து மலமகற்றி வைப்பன் என்பது முதற்கூறு.

இக்கூற்றில் அடங்கிய விஷயங்கள்:—

1. உயிர்வர்க்கமும் அவ்வுயிர்களுக்கு முதல்வன் பாசத்தை நீக்கும் முறைமையும். சகலருக்குக் குருவடிவாய் வந்து மலமகற்றுவன், (254).

2. பாசம் நீக்குதற்பொருட்டுச் சகலருக்குச் செய்யப்படும் தீக்ஷைகளின் வகை, (255).

3. நிர்ப்பீச தீக்ஷையின் இலக்கணம், (256).

4. சபீச தீக்ஷையின் இலக்கணம், (257).

5. அத்துவசுத்தி செய்யும் முறைமை, (258).

6. அத்துவசுத்தியில் நிவிர்த்தி பிரதிட்டாகலைகளிலடங்கும் அத்துவாக்கள், (259).

7. அத்துவசுத்தியில் வித்தியாகலை சாந்திகலையிலடங்கும் அத்துவாக்கள், (260),

8. அத்துவசுத்தியில் சாந்தியதீதகலையிலடங்கும் அத்துவாக்கள், (261).

9. முதல்வன் குருவாகி வந்து அத்துவசுத்திசெய்து மலமகற்றும் முறைமை, (262).

1. உயிர்வர்க்கமும் அவ்வுயிர்களுக்கு முதல்வன் பாசத்தை நீக்கும் முறைமையும். சகலருக்குக் குருவடிவாய் வந்து மலமகற்றுவன்.

**254.** உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்று
முயரும்விஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர்
நிரையின்மல மலங்கன்ம மலங்கன்ம மாயை
நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக்
கரையிலருட் பரன்றுவிதா சத்திநிபா தத்தாற்
கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பிற்
றரையிலா சான்மூர்த்தி யாதார மாகித்
தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

(இ - ள்). உரைதரும் இப்பசுவர்க்கம் - மேற்கூறிப்போந்த இந்த உயிர் வர்க்கம்,—உணரின் - ஆராய்ந்தறியுமிடத்து,—உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - மேலான விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் சகலரும் என,—மூன்றும் - மூவகையாம்,—நிரையில்மலம், மலம்கன்மம், மலம்கன்மம் மாயை நிற்கும் - அம்மூவகை உயிர்களையும் முறையே ஆணவமலமும் அதனோடு கன்மமலமும் அவற்றோடு மாயாமலமும் பொருந்தியிருக்கும்,—முதல் இருவர்க்கும் - ஒருமலமுடைய விஞ்ஞானகலரும் இருமலமுடைய பிரளயாகலருமாகிய இருவகை உயிர்களுக்கும்,—கரை இல் அருள் பரன் - அளவிடுதற்கரிய கருணைவடிவாகிய முதல்வன்,—துவிதா சத்திநிபாதத்தால் - தீவிரம் தீவிரதரம் என்னும் இருவகைச் சத்திநிபாதம் நோக்கி,—நிராதாரமாகி மலம் கழிப்பன் - வடிவம் முதலிய ஆதாரம் ஒன்றும் இன்றித் தானே உண்ணின்றும் முன்னின்றும் தீக்கைசெய்து மலத்தை நீக்குவன்,—சகலர்க்கு - மும்மலமுடைய சகலருக்கு,—கன்ம ஒப்பில் - இருவினையொப்பு வருமிடத்து,—சதுர்த்தா சத்திநிபாதத்தால் - மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என்னும் நால்வகைச் சத்திநிபாதம் நோக்கி,—தரையில் ஆசான்மூர்த்தி

ஆதாரமாகித் தரித்து - இப்பூமியின்கண் குருமூர்த்தியை இடமாகக்கொண்டு நின்று தீக்கை செய்து,—மலம் ஒழிப்பன் - மலங்களை நீக்குவன்.

குறிப்பு. 1. பசுவர்க்க முணரின் மூன்றும்.....மலங்கன்ம மாயை நீற்கும்:—உயிர்கள் மலபந்த வேறுபாடுபெற்றி விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என மூவகையர்.

(*a*). விஞ்ஞானகலர் (விஞ்ஞான + அகலர்) - விஞ்ஞானத்தாலே கலா சம்பந்தமற்றவர். விஞ்ஞானம் - மேலான அறிவு. அகலர் - கலை அற்றவர். இவர் ஆணவமலம் என்னும் ஒருமலம் உடையவர். இவர் அநாதியே மல பந்தம் மாத்திரமுடைய விஞ்ஞானகலரும், பிரளயாகலர் சகலரிலிருந்து இடையே மாயாபந்தம் கன்மபந்தம் முழுவதும் நீங்கி மலபந்தம் ஒன்றே யுடைய விஞ்ஞானகலரும் என இருவகையர். இவருக்கு மாயை கன்மங் களுளவாயினும் அவற்றாற் பிணிப்புண்டு மயங்குதலின்றி ஆணவமலம் ஒன் றினாற் பிணிப்புண்டமையின், ஒருமலமுடையர் எனப்படுவர். இவருக்குக் கன்மம் இல்லையாதலின் இருவினையொப்பும் இல்லை. சத்திநிபாதம் தீவி ரம் தீவிரதரம் என்னும் இரண்டுமாம். எடுத்த பிறவியன்றி வேறு பிறவி யில்லை. விஞ்ஞானகலர் என்பதன் தலைக்குறை என்பர் ஞானப்பிரகாசர்.

இவருக்குரிய புவனங்கள் சுத்தவித்தைக்கும் அசுத்தமாயைக்கும் இடை யேயுள்ளன. இவர் பக்குவர் அபக்குவர் என இருவகைப்படுவர். பக்கு வரிலே தீவிரதர சத்திநிபாதமுடையோர் சிவாநுக்கிரகம்பெற்றுப் பரமுத்தி யடைவர். தீவிர சத்திநிபாதமுடையோர் சிருட்டியாதியிலே சிவானுக்கிர கம்பெற்று அதிகாரமலமும் சர்வஞ்ஞத்துவம் முதலிய அறுகுணங்களுமுடை யோராய்ச், சுத்தாத்துவ புவனபதிகளாய் அணுசதாசிவர் அநந்தராதிகள் மந்திரேசுரர் என்னும் அபரமுத்தர்களாயிருந்து, பிரளயகாலத்திலே பர முத்தி அடைவர். தீவிர சத்திநிபாதம் வராத அபக்குவர் மேற்கூறியவாறு சுத்தவித்தைக்கும் அசுத்தமாயைக்கும் இடையேயுள்ள புவனங்களிற் கேவல ராயிருப்பர். கேவலர் - ஆணவமலமுடையோர்.

(*b*). பிரளயாகலர் (பிரளய + அகலர்) - பிரளயத்திலே கலாதிதத்துவங் கள் நீங்கப்பட்டும் சிருட்டிகாலத்திலே கலாதிதத்துவங்களோடு கூடியுமிருப் பவர். இவர் ஆணவமலம் கன்மமலம் என்னும் இருமலம் உடையவர். இவர் அநாதியே மலகன்மங்கள்மாத்திரமுடைய பிரளயாகலரும், சகலரி லிருந்து இடையே பரிபக்குவ விசேடத்தால் மாயாபந்தம்மாத்திரம் நீங்கி, ஏனை இரண்டு மலங்களுமுடைய பிரளயாகலரும் என இருவகையர். இவ ருக்கு மாயையுளவாயினும், அதனிற் பிணிப்புண்டு மயங்குதலின்றி ஏனை இருமலத்தானும் பிணிப்புண்டமையின், இருமலமுடையர் எனப்படுவர். இவருக்குச் சத்திநிபாதம் தீவிரம் தீவிரதரம் என்னும் இரண்டுமாம். கன்மம் உளவாதலின், சில பிறவிகளில் முத்தி அடைவர்.

இவருக்குரிய புவனங்கள் அசுத்தமாயை முதல் அராகம் ஈறான தத்து வங்கள். இவர் பக்குவர் அபக்குவர் என இருவகையர். பக்குவரிலே

தீவிரதர சத்திநிபாதமுடையோர் சிவானுக்கிரகம்பெற்றுப் பரமுத்தி அடைவர். தீவிர சத்திநிபாதமுடையோர் சிவானுக்கிரகம் பெற்று அதிகாரமலமும் சர்வஞ்ஞத்துவம் முதலிய அறுகுணங்களுமுடையராய்ச் சுத்தாசுத்தாத்துவாக்களிலே புவனபதிகளாயிருந்து, பிரளயகாலத்திலே பரமுத்தி அடைவர். அபக்குவர் சிருட்டிகாலத்திலே சகலராவர்.

(c). சகலர் (ச + கலர்) - கலையாதிதத்துவங்களோடு கூடினவர். ஸ - கூட. கலர் - கலையுடையவர். இவர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களாலும் பிணிப்புண்டவர். இவர் தேவர் மக்கள் முதலாகவுள்ள உயிர்கள். இவருக்குச் சத்திநிபாதம் தீவிரதரம் தீவிரம் மந்தம் மந்ததரம் என்னும் நான்குமாம். இவருக்குரிய புவனங்கள் மூலப்பகுதி முதற் பிருதிவியீறான தத்துவங்களில் உள்ளன. இவரும் பக்குவர் அபக்குவர் என இருவகையர். இவருட் பக்குவர் மலபரிபாகமும் இருவினையொப்பும் தீவிரதரம் முதலிய நால்வகைச் சத்திநிபாதமுமுடையவர். தீவிரதர சத்திநிபாதமுடையோர் பரமுத்திநிலையும், தீவிர சத்திநிபாதமுடையோர் அபரமுத்திநிலையும், மந்த சத்திநிபாதமுடையோர் சீவன்முத்திநிலையும், மந்ததர சத்திநிபாதமுடையோர் சாதகநிலையும் பெறுவர் என்று சிவஞானமுனிவர் கூறுவர். (சி. போ. பாடி. 181). அபக்குவர் மலபரிபாகமும் இருவினையொப்பும் சத்திநிபாதமும் வருமளவும் பல சன்மங்களெடுத்துப் பிறந்திறந்து உழல்வர்.

மந்ததர சத்திநிபாதமுடையோர் பிரமாண்டத்துக்கு மேலுள்ள உலகங்களையும், மந்த சத்திநிபாதமுடையோர் புருடதத்துவத்துக்கு மேலுள்ள தத்துவங்களையும் தீவிர சத்திநிபாதமுடையோர் சுத்தவித்தை முதலிய தத்துவங்களில் அபரமுத்தியையும், தீவிரதர சத்திநிபாதமுடையோர் பரமுத்தியையும் அடைவர் என்றுஞ் சொல்லப்படும். (சிவாக்).

சகலர் பிரகிருதி சம்பந்தமான தேகத்தோடு கூடியிருக்கிற காலத்திலும், தீக்ஷை யோகாப்பியாசம் சந்நியாசம் முதலிய ஏதுக்களாற் பிரளயாகலர் விஞ்ஞானகலராதலும் சொல்லப்படும். பிரகிருதிமாயா புவனப்பற்று நீங்கப்பெற்றவர் பிரளயாகலராவர். பிரகிருதிமாயா புவனப்பற்றும் அசுத்தமாயா புவனப்பற்றும் நீங்கப்பெற்றவர் விஞ்ஞானகலராவர். இங்ஙனம் பிரளயாகலத்துவமும் விஞ்ஞானகலத்துவமும் பெற்ற சகலருக்குப் பரமசிவன் அனுக்கிரகஞ்செய்யும் முறைமை ஏனைப் பிரளயாகலருக்கும் விஞ்ஞானகலருக்கும் அனுக்கிரகிக்கும் முறைமைபோலாம். (சிவாக்).

2. முதலிருவர்க்கு நிராதாரமாகிக் கழிப்பன் மலம்:—விஞ்ஞானகலர் பிரளயாகலர் ஆகிய இருவகை உயிர்களுக்கும் முதல்வன் தாமே உண்ணின்றும் முன்னின்றும் உணர்த்துவன். உண்ணின்றுணர்த்துதல் விஞ்ஞானகலருக்காம். அது அறிவுக்கறிவாய் நின்று உண்மைஞானத்தை உணர்த்துதல். பிரளயாகலருக்கு முன்னின்று உணர்த்துவன். அஃதாவது மான் மழு சதுர்ப்புஜம் காளகண்டம் திரிநேத்திரம்முதலிய உறுப்புக்களோடு மூத்

தொழில் நடத்திநின்ற தன் இயற்கை வடிவமே குருவடிவமாகக் காட்டி முன்னிலையாக நின்று உண்மைஞானத்தை உணர்த்துதல். நிராதாரம் - ஆதாரமில்லாதது.

3. துவிதா சத்திநிபாதத்தால் - விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும் மலபரிபாகத்திற்கேற்பச் சத்திநிபாதம் தீவிரமாயும் தீவிரதரமாயும் நிகழும். அவ்விருவகைச் சத்திநிபாதம்பற்றி முதல்வன் அவருக்கு உணர்த்துவன். தீவிரத்தாலுணர்த்தப்பட்டார் அபரமுத்தியும் தீவிரதரத்தாலுணர்த்தப்பட்டார் பரமுத்தியும் அடைவர். (சி. போ. பா. 181).

4. சகலருக்குக் கன்மவொப்பிற் றரையிலாசான்மூர்த்தி யாதாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ் சதுர்த்தா சத்திநிபாதத்தால்:—சகலருக்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் வந்தவிடத்து மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என்னும் நான்குவித சத்திநிபாதம் நிகழும். அப்பொழுது முதல்வன் சகலவர்க்கத்துள் ஒருவரை ஆதாரமாகக்கொண்டு நின்று உண்மைஞானத்தை உணர்த்துவன். ஆதாரம் - இடம், பற்றுக்கோடு. தரித்தல் - நிறுத்துதல், தீக்கையால் வலிகெடுத்தல். இங்ஙனம் நிராதாரமாயும் ஆதாரமாயும் நின்று உணர்த்தி மலத்தை நீக்குதற்குக் காரணம் சோபான முறையில் அறிவித்தாலன்றி அறியமாட்டாத உயிர்களின் பக்குவவேறுபாடாம்.

இருவினையொப்பாவது நல்வினை தீவினைகளிலும், அவற்றின் விளைவாகிய புண்ணிய பாவங்களிலும், இவற்றின் பயனாகிய இன்பத்துன்பங்களிலும், ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமின்றி ஆன்ம அறிவின்கண் ஒப்ப வெறுப்பு நிகழ்தலாம். இவ்விருவினையொப்பு வருதற்குக் காரணம் சரியை கிரியா யோக சிவபுண்ணியங்களாம்.

மலபரிபாகமாவது ஆணவமலத்தினது சத்தி ஆன்ம அறிவை மயக்க இயலாது வலிகுன்றி நிற்கும் அவதரம். மலபரிபாகத்திற்குக் காரணம் இருவினையொப்பாம்.

சத்திநிபாதம் - சிவசத்திபதிதல். அது ஆன்மாக்களின் பக்குவவேறுபாட்டால், மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என நான்குவகையாய் நிகழும். இச்சத்திநிபாதத்திற்குக் காரணம் இருவினையொப்பும் மலபரிபாகமுமாம்.

பொழிப்பு. உயிர்வர்க்கம் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என மூவகைப்படும். விஞ்ஞானகலர் ஆணவம் என்னும் ஒருமலமுடையவர். பிரளயாகலர் ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடையவர். சகலர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமுடையவர். விஞ்ஞானகலர் முதலிய இருவருக்கும் தீவிரம் முதலிய இருவகைச் சத்திநிபாதம் நோக்கி முதல்வன் தாமே உண்மைஞானத்தை விளக்கி மலங்களை ஒழிப்பன். சகலருக்கு மந்ததரம் முதலிய நால்வகைச் சத்திநிபாதம்நோக்கி ஒரு குருமூர்த்தியை அதிட்டித்து நின்று தீக்கைசெய்து மலத்தை ஒழிப்பன்.

2. பாசம் நீக்குதற்பொருட்டுச் சகலருக்குச் செய்யப்படும் தீக்கைகளின் வகை.

255. பலவிதமா சான்பாச மோசனந்தான் பண்ணும்
படிநயனத் தருள்பரிசம் வாசகமா னதமும்
அலகில்சாத் திரம்யோக மவுத்தி ராதி
யனேகமுள வவற்றினவுத் திரியிரண்டு திறனும்
இலகுஞா னங்கிரியை யெனஞான மனத்தா
லியற்றுவது கிரியையெழிற் குண்டமண்ட லாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதா னின்னு
நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகி நிகழும்.

(இ-ள்). ஆசான் பாசம் மோசனம்தான் பண்ணும்படி - மேற்கூறிய குருமூர்த்தி மலத்தை ஒழிக்கும் முறைமை,—பலவிதம் - பலவகையாம்,—நயனத்து அருள் பரிசம் வாசகம் மானதமும் அலகு இல் சாத்திரம் யோகம் அவுத்திராதி அநேகம் உள - அவை திருவருணோக்கம் பரிசம் வாக்குப் பாவனை மிக்க நூலுபதேசம் யோகம் ஔத்திரி முதலியவாக அநேகமுள,—அவற்றின் அவுத்திரி - அவற்றுள் ஔத்திரிதீக்கையாவது,—இலகு ஞானம் கிரியை என இரண்டு திறனும் - விளங்குகின்ற ஞானவதி கிரியாவதி என இருவகைப்படும்,—ஞானம் மனத்தால் கிரியை இயற்றுவது - இவற்றுள் ஞானவதியாவது (குண்ட மண்டலாதிகளை மனத்தாற் கற்பித்துக்கொண்டு) அகத்தே ஆகுதி முதலிய கிரியை செய்வதாம்,—எழில் குண்டம் மண்டலம் ஆதி நிலவுவித்துச்செய்தல் - அழகினையுடைய குண்ட மண்டலாதிகளைப் புறத்தே அமைத்துக்கொண்டு விதிப்படி புறம்பே ஆகுதி முதலிய கிரியை செய்வது,—கிரியாவதி - கிரியாவதியாம்,—தான் - இங்ஙனம் இருவகைப் பட்ட ஔத்திரிதான்,—இன்னும் நிர்ப்பீசம் சபீசம் என இரண்டாகி நிகழும் - மேலும் நிர்ப்பீசதீக்கை சபீசதீக்கை என இரண்டாக விளங்கும்.

குறிப்பு. 1. நயனத்தருள் - நயனதீக்கை, சட்சுதீக்கை. ஆசாரியர் தனது கிருபாநோக்கத்தாற் சீடனது சஞ்சிதவினையை அறுத்தல்.

2. பரிசம் - பரிசதீக்கை. ஆசாரியர் தமது கரசரணங்களாற் பரிசித்து ஆணவமலத்தை நீக்குதல். பரிசித்தல் - தீண்டல், தொடுதல்.

3. வாசகம் - வாசகதீக்கை. அது சொற்களால் உபதேசிப்பது. தீவிர பக்குவருக்கு ஒருமொழியாலும், மந்தபக்குவருக்குச் சிற்சில மொழிகளாலும், மந்ததரபக்குவருக்கு நானா உபாயங்களாலும் ஆன்மசுத்தியாம். தீவிர தரபக்குவருக்குத் திருநோக்கமே போதுமானது. பஞ்சாக்கரத்தை உபதேசித்தலும் வாசகதீக்கை என்று சொல்லப்படும்.

4. மானதம் - பாவனாதீக்கை. ஆசாரியர் சிடனைத் தமது அருளுருவா கப்பாவித்து மாயாமலத்தை நீக்குதல்.

5. சாத்திரம் - சாத்திரதீக்கை. பதி பசு பாசங்களின் இலக்கணங்களை யும், பசு பாசத்தினீங்கி முத்தியடையும் முறைமையையும் நூல்வழியாகப் போதித்தல்.

6. யோகம் - யோகதீக்கை. நிராதார சிவயோகத்தை அப்பியாசம்பண் ணும்படி உபதேசித்தல்.

7. அவுத்திரி - ஔத்திரிதீக்கை. ஔத்திரி - ஓமத்தோடுகூடச்செய்வது. ஹோத்திரம் - ஓமம். ஞானவதி - ஞானத்தையுடையது. கிரியாவதி - கிரி யையையுடையது. வதி - உடையது. குண்ட மண்டலாதி - குண்டம், மண் டலம், அங்கி, நெய், சுருக்கு, சுருவம் முதலியன.

8. ஞான மனத்தாற் கிரியை யியற்றுவது:—குண்ட மண்டலாதிகளை மனத்தாற் கற்பித்தலும், ஆகுதி முதலியவற்றை அகத்தே செய்தலும் கிரி யையாதலின் ஞானவதியும் கிரியாதீக்கையாக, அவுத்திரி கிரியாதீக்கை என்பது பெறப்படும். இதுவே ஆசிரியர் கருத்தென்பது மேல் 258-ம் செய்யுளில் ஞானவதி கிரியாவதி என்னும் இரண்டினையும் ஒன்றனுள் அடக்கி "அழிவிலாக் கிரியையினானாதல் சத்திமத்தானாதல்" எனக் கூறியத னால் உணர்க. "சத்தி எனினும் ஞானவதி எனினும் ஒக்கும். மாந்திரி எனினும் கிரியாவதி எனினும் ஒக்கும்" என்பர் சைவசமயநெறியுரையா சிரியர். (சைவசம. 24).

திருநோக்கு முதலியவற்றால் மாணாக்கனது பாசத்தைச் சேதித்தல் சாம்பவிதீக்கை என்றும், விஞ்ஞானதீக்கை என்றும் சொல்லப்படும்.

"நயனதீக்கை முதலிய ஆறும் சுதந்தரமாய்ச் செய்யப்படுவனவும், அவுத்திரிக்கு அங்கமாகச்செய்யப்படுவனவும் என்று இருவகைப்படும். அவற் றுள் முன்னையவை அவுத்திரிக்குரியரல்லாதார்க்குச் செய்யப்படுவன" என்பர் சிவஞானமுனிவர்.

9. நிர்ப்பீசம் - நிர்ப்பீசதீக்கை. அது மந்திரத்திற்கு மூலமாகிய பீசாக் கரமின்றி, மந்திரத்தைமாத்திரம் செபிக்கும்படி உபதேசித்தல். நிர்ப்பீசம் - பீசமில்லாதது. பீசம் - மூலம்.

10. சபீசம் - சபீசதீக்கை. மந்திரத்தோடு பீசாக்கரத்தையும் கூடச் செபிக்கும்படி உபதேசித்தல். சபீசம் - பீசத்தோடு கூடியது.

பொழிப்பு. சகலருக்குத் தீக்கைசெய்து பாசத்தைக் கெடுக்கும் முறை திருநோக்கம், பரிசம், வாக்கு, பாவனை, நூலுபதேசம், யோகம், அவுத்திரி முதலாகப் பலவிதமாம். அவற்றுள் அவுத்திரிதீக்கை ஞானவதி கிரியாவதி என இருவகைப்படும். ஞானவதியாவது குண்ட மண்டலாதிகளை மனத் தாற் கற்பித்துக்கொண்டு அகத்தே ஆகுதிமுதலிய கிரியைசெய்து சிடனது

பாசத்தைக் கெடுத்தலாம். கிரியாவதியாவது குண்ட மண்டலங்களைப் புறத்தேயிட்டு விதிப்படி புறம்பே ஆகுதி முதலிய கிரியைசெய்து சீடனது மலத்தைக் குன்றும்படி செய்யுந் தீக்கையாம். அவ்வுத்திரி மேலும் நிர்ப்பீச தீக்கை சபீசதீக்கை என இரண்டாய் விளங்கும்.

### 3. நிர்ப்பீசதீக்கையின் இலக்கணம்.

**256.** பாலரொடு வாலீசர் விருத்தர்பணி மொழியார்
பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப் பண்ணுஞ்
சீலமது நிர்ப்பீசஞ் சமயா சாரந்
திகழ்சுத்தி சமயிபுத்தி ரர்க்கு நித்தத்
தேனுமதி காரத்தை யியற்றித் தானு
மெழினிரதி காரையென நின்றிரண்டாய் விளங்குஞ்
சாலநிகழ் தேகபா தத்தி னோடு
சத்தியநிர் வாணமெனச் சாற்றுங் காலே.

(இ - ள்). பாலரொடு வாலீசர் விருத்தர் பணிமொழியார் பலபோகத் தவர் வியாதிப்பட்டவர்க்குப் பண்ணும் சீலம் அது - பாலரும், வாலிபரும் முதியோரும் மெல்லியவசனத்தையுடைய மாதரும் பலபோகத்தினையுடையவரும் நோயினையுடையவரும் ஆகிய இவர்களுக்குச் செய்யும் முறையான தீக்கை,—நிர்ப்பீசம் - நிர்ப்பீசம் எனப்படும்,—சமயாசாரம் திகழ்சுத்தி - இம் முறையில், ஆசாரியன் சமயாசார கன்மங்களை ஆகுதியாற் பண்ணும் சுத்தி,—சமயி புத்திரர்க்கு நித்தத்து எனும் அதிகாரத்தை இயற்றி - சமயிக்கும் (சாமானிய விசேடமாகிய இருதிறத்துப்) புத்திரர்க்கும் நித்திய கன்மமாத்திரையின் இயல்வதாகிய அதிகாரத்தைக் கொடுத்தலால்,—எழில் நிரதிகாரையென நின்று - இந்த நிர்ப்பீசதீக்கை (நித்தியம் நைமித்திகம் காமியம் ஆகிய மூன்றற்கும் அதிகாரம் உதவாமையால்) நிரதிகாரை எனப்பட்டு,—சாற்றுங்கால் - மேலுஞ் சொல்லுமிடத்து,—சாலநிகழ் தேகபாதத்தினோடு சத்திய நிர்வாணமென இரண்டாய் விளங்கும் - மிக்கு நிகழ்கின்ற தேகமுடிவில் முத்தியைப் பயக்கும் சத்தியோ நிருவாணம் எனவும் உடனே முத்தியைப் பயக்கும் அசத்தியோ நிருவாணம் எனவும் இருவகையாய் அறியப்படும்.

குறிப்பு. 1. பாலரொடு வாலீசர்.......................:—

(a). பாலர் - சமயாசாரங்களை அனுட்டிக்கும் சாமர்த்தியமிலராயும், ஓதியுணராதவர்களாயும் ஏழுவயதுக்குட்பட்டவராயு மிருப்பவர்.

(b). வாலீசர் - சத்திநிபாத இலக்கணங்களையுடையராயும் ஓதியுணராதவர்களாயுமிருப்பவர். வாலீசர் என்றது வாலீசர் என நின்றது. வாலீசர் - அறிவீனர். பதினாறு வயதுக்குட்பட்ட வாலிபர் என்றலுமொன்று.

(c). விருத்தர் - சத்திநிபாத இலக்கணங்களமைந்து, ஓதியுணர்ந்தாலும் சமயாசாரங்களை அநுட்டிக்கும் வலிமையில்லாதவரும், எழுபதுவயதுக்கு மேற்பட்டவருமாயிருப்பவர்.

(d). பனிமொழியார் - சத்திநிபாத இலக்கணங்களையுடையோரும் ஓதியுணர்ந்தும் சமயாசாரங்களை அநுட்டிக்குஞ் சாமர்த்தியமில்லாதவருமாயிருக்கும் மகளிர்.

(e). பலபோகத்தவர் - சாத்திர அறிவும் சத்திநிபாத இலக்கணமுமுடையராயினும், போகவாஞ்சையைப் போக்கும் ஊக்கமில்லாதவர். மாறிமாறி வருவதும் நிலையாய இன்பத்தைத்தராததுமாகிய விடயபோகத்தில் அழுந்தி அதனின்றும் கரையேற ஆற்றலில்லாதவர். வெகுவிதமான புசிப்புக்களை இச்சித்தவர்கள் (நிரம்பவழகியர்).

2. சீலம் - முறைமை. செயற்பாலதாகிய தீக்கை என்பது.

3. சமயாசாரத் திசுழ்சுத்தி:—தீக்கைசெய்தபின் நியமமாக வழுவின்றி அநுட்டிக்கக்கடவனவாகிய சமயாசாரங்களை அநுட்டிக்கும் ஆற்றலும் அறிவும் இல்லாத பாலர் முதலியோருக்கு மற்றைக்கருமங்களோடுகூடச் சமயாசாரத்தையும் ஆகுதியாற் சுத்திசெய்தொழித்து நித்தியகருமமாத்திரையில் இயன்றமட்டும் அதிகாரமுடையராகச் செய்தல். இது நிர்ப்பீசதீக்கைச் சிறப்பியல்பின் ஒன்று.

4. சமயிபுத்திரர்:—சமயி - சமயதீக்கையைப் பெற்றுச் சிவாகமவிதிப்படி தனக்குரிய நித்தியகன்மத்தைமாத்திரஞ் செய்பவன்; புத்திரன் - சமய விசேட தீக்கைகள் பெற்றுச் சிவாகமவிதிப்படி தர்ப்பணம் சிவபூசை அக்கினிகாரியம் முதலியன செய்பவன். புத்திரர் சாமானிய புத்திரர் விசேட புத்திரரென இருவகையர். சமயவிசேட தீக்கைகள்மாத்திரம் பெற்றவர் சாமானிய புத்திரர். இவ்விரண்டோடு நிர்வாணதீக்கையும்பெற்றுச் சாதகாபிடேகமில்லாதிருப்பவர் விசேடபுத்திரர். (சைவசம. 59-70 பக்).

5. நித்தத்தேனு மதிகாரம்:—கர்மம் நித்தியம், நைமித்திகம், காமியம் என மூவகைப்படும். இவற்றுள் நித்தியகர்மமாவது ஸ்நானம்பண்ணுதல், தர்ப்பணஞ்செய்தல், சிவபெருமானுடைய திருவடிகளை அர்ச்சித்தல், அக்கினிகாரியஞ் செய்தல் முதலியன. நைமித்திக கர்மமாவது, பிரதிட்டை தீக்கைகள் முதலியன செய்தலும் ஆகமங்களின் பொருளை உரைத்தலுமாம். காமியகர்மமாவது - சித்திபேதங்களை விரும்பி விசேடதினங்களிலே விசேடமாகச் சிவபூசைசெய்தல், மந்திரங்களைச் செபம்பண்ணுதல் முதலியன. இக்கர்மங்கள் மேலும் தனக்காகச் செய்யப்படும் பூசை செபம் முதலிய ஆன்மார்த்தமும், பிறர்பொருட்டுச் செய்யப்படும் பிரதிட்டை பிராயச்சித்தம் தீக்கை முதலிய பரார்த்தமுமென இருவகைப்படும். இக்கர்மங்களுள் நிர்ப்பீசதீக்கை பெற்றார்க்கு நித்தியகன்மமாத்திரையில் இயன்றளவுக்குச் செய்யும் கிஞ்சித்ததிகாரமுண்டு.

நித்தியம் - நாள்தோறும் தவறாது செய்யவேண்டிய கர்மம்.

நைமித்திகம் - ஒவ்வோர் நிமித்தம்பற்றி விசேடகாலங்களிற் செய்ய வேண்டிய கர்மம்,

காமியம் - யாதாமொரு பேறு அடையவிரும்பிச் செய்யுங் கர்மம்.

6. நிரதிகாரை - அதிகாரமில்லாதது. நித்தியகர்மத்துக்கேயன்றி நைமித்திக காமியங்களுக்கு அதிகாரங்கொடாமையால் நிரதிகாரை எனப்பட்டது.

7. இரண்டாய் விளங்கும்.........சாற்றுங்காலே:—மேல் நிரதிகாரை எனப்பட்டுச் சமயிபுத்திரர்க்கு நித்தியகன்மத்து இயலும் அதிகாரத்தைக் கொடுப்பதாய்ச் சமயவிசேடங்களோடு கூடிய நிருவாணமாய் நிலைபெறும் நிர்ப்பீசதீக்கையே சத்தியோநிருவாணம் அசத்தியோநிருவாணம் என இரு வகையாக அறியப்படும் என்பது. இவற்றுள் அசத்தியோநிருவாணம் தேகாந்தத்திலும் சத்தியோநிருவாணம் தீக்கைசெய்தவுடனும் முத்தியைப் பயப்பன வாம். தேகபாதம் - தேகம் விழுதல், இறத்தல். சத்தியநிர்வாணம் - உடனே முத்தி; சத்ய - உடனே. நிர்வாணம் - முத்தி, ஒய்வு. நிர் - முற்றாக. வா - கெடுதல். நம் - விகுதி.

பொழிப்பு. பாலர் அறிவீனர் முதலியோருக்குச் செய்யப்படும் தீக்கை நிர்ப்பீசதீக்கை எனப்படும். இதிற் சமயாசாரசுத்தி செய்து ஆசாரியன் சமயிபுத்திரராகிய இருவகைச்சீடர்க்கும் நித்தியகர்மங்களைமாத்திரம் இயன்றளவுக்கு அநுட்டிக்கும் அதிகாரங் கொடுத்தலினால் இது நிரதிகாரதீக்கை எனவும்படும். இது சமயவிசேடமென்னும் அங்கங்களோடுகூடிய நிருவாண தீக்கையாகி மேல் சத்தியோநிருவாணம் அசத்தியோநிருவாணம் என இரு வகைப்படும்.

## 4. சபீசதீக்கையின் இலக்கணம்.

257. ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல
வுத்தமர்க்குச் செய்வதுயர் பீசமிவர் தம்மை
நீதியினா னித்தியநை மித்திககா மியத்தி
னிறுத்திநிரம் பதிகார நிகழ்த்துவதுஞ் செய்து
சாதகா சாரியரு மாக்கி வீடு
தருவிக்கு முலோகசிவ தருமிணியென் றிரண்டாம்
ஆதலினா னதிகாரை யாஞ்சமய விசேட
நிருவாண மபிடேக மிவற்றடங்கு மன்றே.

(இ - ள்). ஓதி உணர்ந்து - சிவாகமங்களை ஓதி அவற்றின் பொருளை அறிந்து,—ஒழுக்கநெறி இழுக்கா - அவற்றிலே விதிக்கப்பட்ட அறங்களின் வழி வழுவாதொழுகும்,—நல்ல உத்தமர்க்குச் செய்வது - விசேடித்த உத்த

மர்களுக்குச் செய்யுந் தீக்கை,—உயர் பீசம் - மேலான சபீசதீக்கையாம்,—இவர்தம்மை நீதியினால் நித்திய நைமித்திக காமியத்தின் நிறுத்தி - இத்தீக்கை தன்னைப்பெற்றவரை முறைப்படி நித்திய நைமித்திக காமிய கன்மங்களிலே நிற்கச்செய்து,—நிரம்பு அதிகாரம் நிகழ்த்துவதும் செய்து - அக்கன்மங்களில் முழு அதிகாரமும் கொடுத்து,—சாதக ஆசாரியரும் ஆக்கி - சாதகரும் ஆசாரியருமாகச்செய்து, – வீடுதரும் உலோகசிவதருமிணியென்று இரண்டாம் - முத்தியைப் பயப்பிக்கும் உலோகதருமிணியும் சிவதருமிணியும் என இருவகைப்படும்,—ஆதலினான் அதிகாரையாம் - கன்மங்களெல்லாவற்றையும் பண்ணுமதிகாரங்கொடுத்தல்பற்றி, இது சாதிகாரதீக்கை எனப்படும்,—சமயம் விசேடம் நிருவாணம் அபிடேகம் இவற்று அடங்கும் - சபீசமான சமயம் விசேடம் நிருவாணம் அபிடேகம் என்னும் தீக்கைவகைகள் இவ்விருவகைத் தீக்கைகளுள்ளும் அடங்குவனவாம்.

குறிப்பு. 1. உயர் பீசம் - மேலான சபீசதீக்கை. இது மலபரிபாகத் தோடுகூடக் கற்றறியுமாற்றலும் மிக்குடையராயினோர்க்குச் சமயாசார கன்மமாத்திரம் நிறுத்தி மற்றைக்கன்மமெல்லாஞ் சுத்திசெய்தொழித்து நித்தியகன்மம் முதலிய மூன்றினும் பேரதிகாரமுடையராகச்செய்தலாம். (சைவசம. 42).

2. நித்திய நைமித்திக காமியம்:—(செ. 256. கு. 5 பார்).

3. சாதகர்:—இம்மைக்கண்ணே சித்தியையும் மறுமைக்கண்ணே போகத்தையும் மோட்சத்தையும் சாதித்தடைவோர். அவர் சமயம் விசேடம் நிர்வாணம் என்னும் மூன்று தீக்கையும் பெற்று நித்தியகர்மத்தையும் நைமித்திககர்மத்தையும் சிவாகமவிதிப்படிபண்ணிச் சித்திகளை விரும்பிக் காமியகர்மத்தையும்பண்ணி, ஆசாரியருடைய திருவடிகளைவணங்கி அவரிடத்திலே யநுமதிபெற்றுக்கொண்டு தமது ஆச்சிரமத்துக்குப்போய்க் கேவல சகலமில்லாத இடத்திலே சாக்கிராதீதமாகிய பரமசிவத்தை ஞானக்கண்ணினால் உள்ளபடிபார்த்து இரண்டறப்புணர்ந்து இப்படி நிட்டையிலமுழுந்தி விழித்த போது உலகத்தைக்கண்டு தமதுசரீரத்தை வெறுத்து, அதனைத் தரித்தற்கு இளைத்துச் சிவபெருமானுடைய அடிகளிலே அன்புபொருந்தித் தம்மோடு சகசமாயுள்ள ஆணவம் முதலிய மும்மலங்களை நீக்குவோர். (சைவசம. 70-73).

4. ஆசாரியர் - சமயதீக்கை விசேடதீக்கை நிருவாணதீக்கை ஆசாரியாபிடேகம் என்னும் நான்கும்பெற்றுக்கொண்டு நித்தியகருமங்களோடு தீக்கை பிரதிட்டை முதலிய கிரியைகளுஞ் செய்பவர். (சைவவினா).

5 உலோக சிவதருமிணி:—உலோகதருமிணியாவது போககாமிகட்குத் திரோதானசத்திரூபமாகிய சிகாச்சேதமின்றிச்செய்வது. இது பௌதிக தீக்கை என்றுஞ் சொல்லப்படும். சிவதருமிணியாவது, முத்திகாமிகட்குத் திரோதானசத்திரூபமாகிய சிகாச்சேதத்தோடு செய்வது. இது நைட்டிக

தீக்கை எனவும் பெயர்பெறும். உலோகதருமிணி அபரமுத்தியாகிய பதப் பிராப்தியைப் பயக்கும். சிவதருமிணி பரமுத்தியைப் பயக்கும் (சைவசம. 42). மேல்விரிவு ஞானப்பிரகாசர் உரையிற் பார்க்க.

6. அதிகாரரை - சாதிகாரதீக்கை. அதிகாரத்தோடு கூடியது.

7. சமய விசேட நிருவாண மிவற்றடங்கு மன்றே:—சமயாசார சுத்தி யின்றிச் செய்யும் நிர்வாணதீக்கையும் அதற்கு அங்கமாய்ச் செய்யப்படும் சமயவிசேடங்களும் சபீசதீக்கையெனக்கொள்க. (சிவஞா).

பொழிப்பு. சிவாகமங்களை ஓதியுணர்ந்து அவை விதித்தபடி ஒழுகும் உத்தமர்களுக்குச் செய்யுந்தீக்கை சபீசம் எனப்படும். இத்தீக்கை பெற்றோர் சாதகரும் ஆசாரியருமென இருவகைப்பட்டு, நித்திய, நைமித்திக, காமிய கன்மங்களைச் செய்வதற்குப் பேரதிகாரமுடையோராவர். இதனால் இத் தீக்கை அதிகாரதீக்கை எனப்படும். இத்தீக்கை உலோகதருமிணி சிவதரு மிணியென இருவகைப்பட்டுச் சமயம் விசேடம் நிருவாணம் ஆசாரியாபிடே கம் என்னும் நான்கனையும் தன்னுள் அடக்கி நிற்கும்.

---

## தீக்கைப்பெருமை.

மேற்கூறியவாற்றானே தீக்கை யென்பது ஆசாரியமூர்த்திவாயிலாய் நின்று முதல்வனே அத்துவசுத்திசெய்து மலமகற்றிச் சிவம் பிரகாசிக்கச் செய்து ஞானமுதிப்பித்து வீடளிக்கவுற்ற முறையாம் என்பது தெளிக. ஆசாரியராவார் சீடரது பக்குவநோக்கி அவர் மனதைக் கசிவித்துத் தமது சக்தியை அவர்மாட்டுச்செறிவித்து அவர்க்கு ஞானமுதிப்பிக்கும் ஆற்றலுள ராய் மனக்குற்றமுடற்குற்றமிரண்டுமிலராய்த் திரிபதார்த்தஞானம் உடை யாராயிருத்தல் வேண்டுமென்பதூம், சீடரும் குருவினது குணத்தையேகொ ண்டு "தந்தைதாயாவானும் சார்கதியிங்காவானும், அந்தமிலா இன்பமக் காவானும்—எந்தனுயிர், தானாகுவானும் சரணாகுவானும் அருட், கோனாகு வானும் குரு" என்று தெளிந்து குருவைப் போற்றிப் பூசித்து அவர் உப தேசித்தவாறே மந்திரக் கிரியாபாவனைகளை நுணுகத்தெரிந் துச்சரித்துச் சாதித்துப் பாவித்து நிட்டைமுயலல் வேண்டுமென்பதும் ஆராய்ச்சியா னறிக. மேல்விரிவு சைவசமயநெறி, ஒழிவிலொடுக்கம் முதலிய நூல்களுட் காண்க.

ஆகவே ஆன்மாக்களது சஞ்சிதம் ஆசாரியன் திருநோக்காலும் அத்துவ சுத்தியாலுமழியப் பிராரத்தம் உடலோடழிய, ஆகாமியமும் ஆணவமும் ஞானத்தாலும் சிவோஹம்பாவனையாலுமழியுமாதலால், வினைநீக்கத்திற்குக் குருவும் சிவதீக்கையும் இன்றியமையாதனவென்பதும், அத்தீக்கைதான் சீடரது பக்குவமும் பரிவும் ஆற்றலு நோக்கிப் பலவகையானருளற்பால தாம் என்பதும் இங்கே கூறியதாமென்க.

தீக்கைவகையும் விரிவும் மேற்காண்க.

தீக்கை.

- நயனம், பரிசம், வாசகம், மானதம், சாத்திரம், யோகம்
  - இவை ஆறும் சுதந்திரமாய்ச்செய்யப்படுவனவும் அவுத்திரிக்கு அங்கமாய்ச் செய்யப்படுவனவுமாம்.
- அவுத்திரி (ஓமத்தோடு கூடியது)
  - ஞானவதி (அகத்தே ஆகுதி முதலிய இயற்றுவது.)
  - கிரியாவதி (புறம்பே ஆகுதி முதலிய இயற்றுவது.)
    - நிர்ப்பீசம் (நிரதிகாரை) (சமயாசாரசுத்தியுடன் ஆசாரியனாற் செய்யப்படுவது)
      - சமயம் (சமயிக்குச் செய்வது)
      - விசேடம் (சாமானியபுத்திரர்க்குச் செய்வது)
        - இவை இரண்டும் சுதந்திரமாயும் நிருவாணத்திற்கு அங்கமாயும் செய்யப்படுவன.
      - நிர்வாணம் (விசேடபுத்திரர்க்குச் செய்வது)
        - சத்தியோநிர்வாணம் (உடனே முத்தி பயப்பது)
        - அசத்தியோ நிர்வாணம் (தேகாந்தத்தில் முத்தி பயப்பது)
    - சபீசம் (சாதிகாரை) (சமயாசாரசுத்தியின்றிச் செய்யப்படுவது)
      - உலோகதருமிணி (பௌதிகம்) (போககாமிகளாகிய சாதகர் ஆசாரியர்களுக்குச் சிகாச்சேதமின்றிச் செய்யப்படுவது)
      - சிவதருமிணி (நைட்டிகம்) (முத்திகாமிகளாகிய சாதகர் ஆசாரியர்களுக்குச் சிகாச்சேதத்தோடு செய்யப்படுவது)
        - இவ்விரண்டனுள்ளும் சமயம் விசேடம் நிர்வாணம் அபிடேகம் என்ற சபீசதீக்கைகளடங்கும்.
- முதலியபிற

நயன முதலிய ஆறும் சுதந்திரமாய்ச் செய்யுங்கால் சாம்பவிதீக்கை எனவும் விஞ்ஞானதீக்கையெனவும்படுமென்றும், ஞானவதி சத்திதீக்கையெனவும்படுமென்றும், கிரியாவதி மாந்திரிதீக்கையெனவும்படும் என்றுங்கூறுப. (சைவசம. 23, 24 பக்).

## தீக்கை அதிகாரமுறை.

மேல் அதிகாரமுறை வருமாறு:—

நிர்ப்பீசமாகமுறையே சமய விசேட நிர்வாணதீக்கைகள் பெற்ற சமயி, சாமானியபுத்திரன் விசேடபுத்திரனாகிய மூவர்க்கும் கன்மங்களோடு சமயாசாரகன்மங்களும் ஆசாரியனால் ஆகுதிசெய்தொழிக்கப்பட்டமையின், நித்தியகன்மமாத்திரையில் இயன்றளவு அநுட்டித்தலாகும். இம்முறையிற் தீக்கைபெற யாவர்க்கும் உரிமையுண்டு. இவர்கட்குத் தமதான்மார்த்தமாய கன்மத்திலன்றிப் பரார்த்தத்திற் சிறிதும் அதிகாரம் இயையா.

சபீசமுறையிற் சமயதீக்கைபெற்ற சமயிக்கு அமைந்த அதிகாரம் நித்தியகன்மங்களாகும் ஸ்நானம், தர்ப்பணம், செபம், தியானமாதியவற்றோடு குருசேவை, சிவனடியார்சேவை, சரியைச் சிவதொண்டு செய்தலுமாம். (சைவசம. 56-58). பரார்த்தத்து அதிகாரமின்று.

மேல் விசேடதீக்கைபெற்ற சாமானியபுத்திரனுக்கு மேற்கூறியவற்றோடு சிவபூசை, அக்கினிகாரியம், அதிதிபூசை முதலிய கிரியைத்தொண்டுகளும், சாதகர் ஆசாரியர் ஏவிய செய்து பரார்த்தகன்மத்து உதவிபுரிதலுமாம்.

மேல் நிருவாணதீக்கைபெற்ற விசேடபுத்திரனுக்கு மேலவற்றோடு தனது பிராயச்சித்தத்திலும், தன்பொருட்டுச் செய்யப்படும் நைமித்திகத்திலும் அதிகாரம் உண்டு. பிறர்பொருட்டுச் செய்யும் நைமித்திகத்திலதிகாரமின்று. ஆயினும் அதிற் பிரதிட்டைக்கங்கமாகிய ஓமாதியிலும் அங்குரார்ப்பணம் முதலிய கர்மத்திலும் ஆதிசைவராற் தீக்கைபெற்ற புத்திரர்க்கும் சாதகர்க்கும் அதிகாரமுண்டு. (சைவசம. 69-70). அங்குரார்ப்பணம் - பாலிகை போடுதல், முளையிடுதல். மங்களகாரியங்களின் ஆரம்பத்தே சந்திரனை அதிதெய்வமாகக்கொண்டு கும்பத்தினருகிற் பாலிகைகளிடத்துப் பாலிற் கலந்த நவதானியங்களை மந்திரத்தோடு பெய்து வளர்த்தல். அங்குரம் - முளை; அர்ப்பணம் - இடுதல்; பாலிகை - முளைக்குடம்.

மேல் நிருவாணதீக்கைபெற்றுச் சாதகராயினோர்க்கு ஆன்மார்த்தமாகச் சிவாகமவிதிப்படிபண்ணும் நித்திய நைமித்திக கன்மங்களினும் ஆசிரமவாழ்வில் நிஷ்டைகூடுதல் முதலாய காமிய கன்மங்களினும், பரார்த்தத்தும் மேற்சொல்லியபடி பிரதிட்டாங்கமாகிய ஓமாதியிலும் அங்குரார்ப்பண முதலிய கன்மங்களினும் அதிகாரமுண்டு. (சைவசம. 70-73).

மேல் ஆசாரியாபிடேகமும்பெற்ற ஆசாரியர்க்கு ஆன்மார்த்தம் பரார்த்தம் ஆகிய இருமுறைமையினும் நித்திய நைமித்திக காமிய கன்மங்களிலும், பிரதிட்டை. தீக்கை முதலிய சகல கிரியைகளிலும் ஞானோபதேசம் முதலிய செய்தலிலும் பூரண அதிகாரமுண்டு.

எனவே சைவசமயிகளாகிய யாவரும் நிர்ப்பீசமுறையிலாவது சிவதீக்கைபெறவேண்டுமென்பதும், அவ்வாறுபெற்றோர் தத்தமக்கியன்றவாறு

ஸ்நானம் செபம் தியானம்முதலியவற்றைக் கைக்கொண்டொழுக இடமுண்டென்பதும், அவ்வாறு நிர்ப்பீசமாயேனும் தீக்கைபெறுதோர் சைவ சமயிகளெனப்படாது "சைவத்திறத்தடைந்த" பயனையும் அடையாது "பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப் பெருங்குழியில் வீழ்ந்திடுவர்" என்பதும், நிர்ப்பீசதீக்கையிற்சாதித்த சாதனைப்பயனுல் இப்பிறவியிலேனும் மறுபிறவியிலேனும் சபீசதீக்கைபெற்றுச் சரியை கிரியை யோகஞ் சாதித்து ஞானத்தால் முத்தியெய்தல் சைவசமயிகளாய்ப் பிறந்த புண்ணியவான்களுக்காகும் என்புதும் இவற்ருற் பெறக்கிடந்தது. இவ்வுண்மையை அறியாது அந்தோ ! சைவசமயிகளெனப்பெயர்கொண்டு ஸ்ரீபஞ்சாட்சர உபதேசம்பெருது. தீக்கைபெற்ருல் ஒழுகவேண்டிய ஒழுக்கம் யாவர்க்கும் யாண்டும் சித்திக்காதென்றும், இயலாதென்றும் கூறிப் பயப்பிராந்தியாற் சிவதீக்கைபெருது "புறச்சமயநெறிநின்று மகச்சமயம்புக்கும்......... வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்று சைவத் திறத்தடைந்த" அரும்பயனையும் பெருது வாழ்நாளை வீணுளாக்குவோர் மதியிருந்தவாறே !!

5. ஆசாரியன் அத்துவசுத்திசெய்யு முறைமை.

258. அழிவிலாக் கிரியையினு ஞதல்சத்தி மத்தா
ஞதலத்து வாசுத்தி பண்ணிமல மகற்றி
யொழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞான
முதிப்பித்துற் பவந்துடைப்ப னரனொருமூ வர்க்கும்
வழுவிலா வழியாறு மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைகள்
கழிவிலா துரைத்தமுறை யொன்றினொன்று வியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும்.

(இ - ள்). அரன் - முதல்வன் குருமூர்த்தியை அதிட்டித்து நின்று,—அழிவிலாக் கிரியையினுன் ஆதல் - கெடுதலில்லாத ஞானவதி கிரியாவதி என்னும் கிரியாதீக்கையினுலாவது,—சத்திமத்தான் ஆதல் - சாம்பவி என்னும் ஞானதீக்கையினுலாவது,—ஒருமூவர்க்கும் - அவ்வத் தீக்கைகளுக்குரியோர் மூவருக்கும்,—அத்துவா சுத்திபண்ணி - அறுவகை அத்துவாக்களையுஞ் சுத்திபண்ணி,—மலம் அகற்றி - மலங்களை ஒழித்து,—ஒழிவிலாச் சிவம் பிரகாசித்தற்கு ஞானம் உதிப்பித்து - எங்கும் வியாபகமான சிவம் பிரகாசித்தற்பொருட்டு ஞானத்தை உதிக்கச்செய்து,—உற்பவம் துடைப்பன் - பிறவியை ஒழிப்பன்,—வழுவு இலா வழி - இங்ஙனம் முதல்வன் சுத்தி செய்யநின்ற குற்றமற்ற அத்துவாக்கள்,—மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் - மந்திரங்களும் பதங்களும் வன்னங்களும் புவனங்களும் தத்துவங்களும் கலைகளும் என,—ஆறும் - அறுவகைப்படும்,—

உரைத்த முறை - மேற்கூறிய முறையிலே,—கழிவு இலாது ஒன்றின் ஒன்று வியாத்தி - ஒழிவின்றி ஒன்றின் ஒன்று அடங்கும்,—கருதுகலை சத்தியின் கண் - மேற்சொல்லிய கலையானது சத்தியினிடத்தும்,—சத்தி சிவன்கண்ணும் - சத்தி சிவத்தினிடத்தும் அடங்கும்.

குறிப்பு. 1. அழிவிலாக்கிரியையினுனுதல் சத்திமத்தானுதல்:—கிரியாவதி, ஞானவதி, சாம்பவி என்னுந் தீக்கைகளுள் ஒன்றனுல் முதல்வன் ஒரு குருவை அதிட்டித்து நின்று அத்துவசுத்திசெய்து மலங்கழிப்பன் என்பது. சத்திமத் - சத்திமான், சத்திபொருந்தியது.

2. அத்துவாசுத்தி:—அத்துவசுத்தியாவது ஆறத்துவாக்களினுஞ் சஞ்சிதமாயிருந்த கன்மங்களையெல்லாம் நசிப்பித்தலாம். கன்மம் நசியவே மாயையும் நீங்கும். ஆணவமலத்தின் தடையும் ஒழியும். ஆணவமலத்தின் தடைநீங்கவே, சிவஞானம் பிரகாசிக்கும். பின்பு சிவம் பிரகாசமாகும். அத்துவசுத்திசெய்வது எப்படியெனில், மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் என்னும் அறுவகை அத்துவாக்களுள், மந்திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம் கலையிலும் அடங்க ஒடுக்கிக் கலையைத் திரோதானசத்தியிலும், திரோதானசத்தியைச் சிவத்திலும் ஒடுக்குவதாம்.

3. ஒரு மூவர் - கிரியாவதி, ஞானவதி, சாம்பவி தீக்கைகளுக்குரிய மூவர்.

4. வழுவிலா வழியாறு மந்திரங்கள்... ..:—மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் ஆகிய ஆறும் அத்துவாக்கள் எனப்படும். இவை கன்மம் ஈட்டுதற்கும், பரகதி அடைதற்கும் வழிகளாதலால் அத்துவாக்கள் எனப்பட்டன. அத்துவா - வழி.

மந்திரம் முதலிய ஐந்து அத்துவாக்களும் மனம் வாக்குக் காயங்களாகவும், கலை இவற்றைச் செலுத்தும் சத்திவடிவாயும் நின்று கன்மம் ஈட்டப்படுதலின், அத்துவாக்கள் கன்மம் ஈட்டுதற்கு வழியாதலும், மன வாக்குக் காயங்களாற் கடவுளைத்தியானித்துத் துதித்து வணங்கி முத்தியடைவதற்கு வழிகளாயிருத்தலின் அவை பரகதி அடைதற்கு வழியாதலும் காண்க. மேலும் விரிவு. (முத். உரை 223-225 பக்).

மந்திரங்கள் 11, பதங்கள் 81, வன்னங்கள் 51, புவனங்கள் 224, தத்துவங்கள் 36, கலைகள் 5. மந்திரம் பதம் வன்னம் மூன்றும், சுத்தமாயாகாரியமாதலாற் சுத்தாத்துவா எனவும், தத்துவம் சுத்தமாயை, அசுத்தமாயைகளின் காரியமாதலால், மிச்சிராத்துவா எனவும், புவனம், சுத்தமாயை, அசுத்தமாயை பிரகிருதிமாயைகளின் காரியமாதலால் அசுத்தாத்துவா எனவும் சொல்லப்படும்.

5. வியாத்தி:—வியாபகம் - பூரணவியாபகம், ஏகதேசவியாபகம், சமவியாபகம் என மூத்திறப்படும். அவற்றுள், ஏகதேசவியாபகத்தை வியாப்

பியம் என்றும், சமவியாபகத்தை வியாத்தி என்றும் கூறுவர். வியாப்பியம் பிறிதொன்றால் வியாபிக்கப்படுவது. வியாத்தி பிறிதொன்றில் அடங்கி இருப்பது. வியாபகம் பிறிதொன்றால் வியாபிக்கப்படுதலும் பிறிதொன்றில் அடங்குதலுமின்றியுள்ளது. கண்ணொளி - வியாப்பியம்; இருள் - வியாத்தி; சூரியன் வியாபகம். இருள் கண்ணளவில் மறைத்தலாற் சமவியாபகம் அல்லது வியாத்தி எனப்பட்டது.

பொழிப்பு. முதல்வன் குருமூர்த்தியை அதிட்டித்துநின்று கிரியாவதி ஞானவதி சாம்பவி என்னுந் தீக்ஷைகளுள் ஒன்றினால் அவ்வத்தீக்ஷைகள் பெறுதற்குரியோருக்கு அத்துவசுத்திசெய்து மலத்தை ஒழித்துச் சிவம்பிரகாசித்தற்கேதுவாகிய ஞானத்தைத் தெரிசிப்பித்துப் பிறப்பை அறுப்பன். அத்துவசுத்திசெய்தலாவது, மந்திரம்முதலிய ஆறு அத்துவாக்களையும் ஒன்றினொன்று அடக்கி முடிவில் நின்ற கலையைத் திரோதானசத்தியிலும், அச்சத்தியைச் சிவத்திலும் அடக்குதலாம்.

6. அத்துவசுத்தியில் நிவிர்த்தி பிரதிட்டாகலைகளிலடங்கும் அத்துவாக்கள்.

259. மந்திரங்கண் முதலைந்துங் கலையைந்தின் வியாத்தி
மருவுமந் திரமிரண்டு பதங்க ணாலேழ்
அந்தநிலை யெழுத்தொன்று புவன நூற்றெட்
டவனிதத் துவமொன்று நிவிர்த்தியயன் றெய்வம்
வந்திடுமந் திரமிரண்டு பதங்கள் மூவேழ்
வன்னங்க ணாலாறு புரமைம்பத் தாறு
தந்திடுந்தத் துவங்களிரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமா லதிதெய்வந் தானும்.

(இ-ள்). மந்திரங்கள்முதல் ஐந்தும் கலை ஐந்தின் வியாத்தி - மந்திரங்கள் முதலாகத் தத்துவங்கள் ஈறாகவுள்ள அத்துவாக்கள் ஐந்தும் ஒன்றினொன்று வியாத்தியாய்ப் பஞ்சகலைகளுள் அடங்குமாறு எவ்வாறெனின்,—மந்திரம் இரண்டு - மந்திரம் இரண்டும்,—பதங்கள் நாலேழ் - பதம் இருபத்தெட்டும்,—அந்தநிலை எழுத்து ஒன்று - அத்தன்மையுடைய எழுத்து ஒன்றும்,—புவனம் நூற்றெட்டு - புவனங்கள் நூற்றெட்டும்,—அவனிதத்துவம் ஒன்று - பிருதிவிதத்துவம் ஒன்றும் ஆகிய இவைகள் ஒன்றினொன்றாக,—நிவிர்த்தி மருவும் - நிவிர்த்திகலையில் அடங்கும்,—அயன் தெய்வம் - அதற்குப் பிரமன் அதிதேவதையாம்,—வந்திடும் மந்திரம் இரண்டு - வாராநின்ற மந்திரம் இரண்டும்,—பதங்கள் மூவேழ் - பதம் இருபத்தொன்றும்,—வன்னங்கள் நாலாறு - எழுத்து இருபத்துநான்கும்,—புரம் ஐம்பத்தாறு - புவனம் ஐம்பத்தாறும்,—

தந்திடும் தத்துவங்கள் இருபத்து மூன்று - இப்புவனங்களைத்தாராநின்ற தத்துவம் இருபத்துமூன்றும், ஆகிய இவைகள்,—தரும் பிரதிட்டாகலை - இவற்றைத்தரும் பிரதிட்டாகலையில் அடங்கும்,—மால் அதிதெய்வம்தான் ஆம் - அதற்குத் திருமால் அதிதேவதையாம்.

குறிப்பு. 1. நிவிர்த்திகலையிலடங்கிய மந்திரங்கள் முதலியன:—

(a). மந்திரங்கள் - சத்தியோசாதம், இருதயம் 2.

(b). பதங்கள் - நமோநம முதல் மஹாதேவ பதம் வரையில் 28.

(c). வன்னம் - க்ஷகாரம்.

(d). புவனம் - காலாக்கினி ருத்திரபுவனம் முதல் பத்திரகாளிபுவனம் வரையில் 108.

(e). தத்துவம் - பிருதிவி.

(f). தெய்வம் - பிரமா.

இதில் நமோநம என்ற பதத்தை ஓம் சிவாய என்ற இரண்டாம் பதத்தோடு சேர்த்து ஓம் என்ற பதத்தை முதலாகக்கொண்டும் ஹவ ஹவ என்பதை ஈறாகவுங்கொள்வதுமாம். (சித். சாரா. ஸ்லோ. 71).

2. பிரதிட்டாகலையிலடங்கிய மந்திரங்கள் முதலியன:—

(a). மந்திரங்கள் - வாமதேவமந்திரம், சிரோமந்திரம் 2.

(b). பதங்கள் - மகேசுவர பதம் முதல் அருபின் அருபின் பதம் வரையில் 21.

(c). வன்னங்கள் - ஊகாரமுதல் டகாரம் வரையில் 24.

(d). புவனங்கள் - அமரேசபுவனம் முதல் சீகண்டபுவனம் வரையில் 56.

(e). தத்துவங்கள் - அப்புதத்துவம் முதல் பிரகிருதிதத்துவம் வரையிலுள்ள ஆன்மதத்துவங்கள் 23.

(f). தெய்வம் - விஷ்ணு.

இதன் பதங்கள் சர்வ சர்வ முதல் வியாபின் வியாபின் வரை எனவும் வன்னம் ஹ முதல் ட வரையும் என்பர் சித்தாந்தசாராவளியாசிரியர். அப்போ வர்ணம் 23 ஆகும். (சித். சாரா. ஸ்லோ. 72).

பொழிப்பு. நிவிர்த்திகலையில் இரண்டுமந்திரமும், இருபத்தெட்டுப்பதமும், ஒருஅக்கரமும், நூற்றெட்டுப்புவனமும், ஒருதத்துவமும் ஒன்றினொன்றாக அடங்கும். அதற்குப் பிரமன் அதிதேவதையாம். இரண்டுமந்திரமும் இருபத்தொருபதமும் இருபத்துநான்கு அக்கரமும், ஐம்பத்தாறுபுவனமும்,

இருபத்துமூன்றுதத்துவமும் பிரதிட்டாகலையிலே அடங்கும். அதற்குத் திருமால் அதிதேவதையாம்.

7. அத்துவசுத்தியில் வித்தியாகலை சாந்திகலைகளிலடங்கும் அத்துவாக்கள்.

260. வித்தையின்மந் திரமிரண்டு பதநா லைந்து
விரவுமெழுத் தேழுபுர மிருபத் தேழு
தத்துவமு மோரேழு தங்குமதி தெய்வந்
தாவிலுருத் திரனாகுஞ் சாந்தி தன்னின்
வைத்தனமந் திரமிரண்டு பதங்கள்பதி னொன்று
வன்னமொரு மூன்றுபுரம் பதினெட் டாகும்
உத்தமமாந் தத்துவமு மொருமூன் றாகு
முணரிலதி தேவதையு முயரீச னாமே.

(இ-ள்). வித்தையின் - வித்தியாகலையினிடத்து,—மந்திரம் இரண்டு - மந்திரங்கள் இரண்டும்,—பதம் நாலைந்து - பதங்கள் இருபதும்,—விரவும் எழுத்து ஏழு - பொருந்திய வன்னங்கள் ஏழும்,—புரம் இருபத்தேழு - புவனங்கள் இருபத்தேழும்,—தத்துவமும் ஓரேழு - தத்துவங்கள் ஏழும்.—தங்கும் - ஒன்றினொன்றாக அடங்கும்,—அதிதெய்வம் தாவு இல் உருத்திரன் ஆகும் - அதற்கு அதிதெய்வம் அழிவில்லாத உருத்திரனாகும்,—சாந்தி தன்னின் வைத்தன - சாந்திகலையில் அடங்குவன,—மந்திரம் இரண்டு - மந்திரங்கள் இரண்டும்,—பதங்கள் பதினொன்று - பதங்கள் பதினொன்றும்,—வன்னம் ஒருமூன்று - அக்கரங்கள் மூன்றும்,—புரம் பதினெட்டு ஆகும் - புவனங்கள் பதினெட்டுமாகும்,—உத்தமமாம் தத்துவமும் ஒருமூன்று ஆகும் - நன்மைதரும் தத்துவங்களும் மூன்றாகும்,—உணரில் அதிதேவதையும் உயர் ஈசனும் - உணருமிடத்து அதற்கு அதிதெய்வமும் மகேசுவரனும்.

குறிப்பு. 1. வித்தியாகலையிலடங்கிய மந்திரங்கள் முதலியன:—

(a). மந்திரங்கள் - அகோரம் சிகை 2.

(b). பதங்கள் - வியாபின் வியாபின் பதம் முதல் தியானஹாராய பதம் வரையில் 20.

(c). வன்னங்கள் - ஙகாரமுதல் வகாரம் வரையில் 7.

(d). புவனங்கள் - வாமபுவனம் முதல் அங்குட்டமாத்திரபுவனம் வரையில் 27.

(e). தத்துவங்கள் - புருடதத்துவம் முதல் மாயாதத்துவம்வரையில் வித்தியாதத்துவங்கள் 7.

(f). தெய்வம் - உருத்திரன்.

இதன் பதம் வியோமின் வியோமின் முதல் ஓங்காரம் வரையென்பர். (சித். சாரா. ஸ்லோ. 73).

2. சாந்திகலையிலடங்கிய மந்திரங்கள் முதலியன:—

(a). மந்திரங்கள் - தற்புருடம் கவசம் 2.

(b). பதங்கள் - நித்யயோகினே பதம் முதல் வியோம வியாபினே பதம் வரையில் 11.

(c). வன்னங்கள் - மகாரம் வகாரம் ககாரம் 3.

(d). புவனங்கள் - வாமை புவனம் முதல் சதாசிவ புவனம் வரையில் 18.

(e). தத்துவங்கள் - சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் 3.

(f). தெய்வம் - மகேசுவரன்.

இதன் பதம் தியானஹார முதல் வியோம வியாபிவரை என்பர். (சித். சாரா. ஸ்லோ. 74).

பொழிப்பு. வித்தியாகலையில் இரண்டு மந்திரமும் இருபது பதமும் எழு அக்கரமும், இருபத்தேழு புவனமும், எழு தத்துவமும் அடங்கும். அதற்கு அதிதேவதை உருத்திரன். சாந்திகலையிலே இரண்டு மந்திரமும், பதினொரு பதமும், மூன்று அக்கரமும், பதினெட்டுப் புவனமும், மூன்று தத்துவமும் அடங்கும். அதற்கு அதிதேவதை மகேசுரனும்.

8. அத்துவசுத்தியில் சாந்தியாதீதகலையிலடங்கும் அத்துவாக்கள்.

**261.** சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்க
டாமூன்று பதமொன்றக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுர மூவைந்து தத்துவங்க ளிரண்டு
மருவுமதி தேவதையு மன்னுசதா சிவராம்
ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்க
ளெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத் தொன்றாகும்
ஆய்ந்தபுர மிருநூற்றி டிருபத்து நாலா
மறிதருதத் துவமுப்பத் தாறுகலை யைந்தே.

(இ - ள்). சாந்தியாதீதகலை தன்னின் - சாந்தியாதீதகலையிலே,—மந்திரங்கள்தாம் மூன்று - மந்திரங்கள் மூன்றும்,—பதம் ஒன்று - பதம் ஒன்றும், அக்கரங்கள் பதினாறு - வன்னங்கள் பதினாறும்,—வாய்ந்தபுரம் மூவைந்து - சிறந்த புவனங்கள் பதினைந்தும்,—தத்துவங்கள் இரண்டு - தத்துவங்கள் இரண்டும்,—மருவும் - ஒன்றினொன்றாக அடங்கும்,—அதிதேவதையும் மன்னு

சதாசிவராம் - அதற்கு அதிதேவதை நிலைபெற்ற சதாசிவனும்.—எய்ந்த முறை - மேற்கூறியவாறு அடங்கியவகையிலே,—மந்திரங்கள் பதினொன்று - மந்திரங்கள் பதினொன்றும்.—பதங்கள் எண்பத்தொன்று - பதங்கள் எண்பத்தொன்றும்,—அக்கரங்கள் ஐம்பத்தொன்றுகும் - வன்னங்கள் ஐம்பத்தொன்றும்.—ஆய்ந்தபுரம் இருநூற்றேடு இருபத்துநாலாம் - ஆராயப்பட்ட புவனங்கள் இருநூற்றிருபத்துநான்காம்.—அறிதருதத்துவம் முப்பத்தாறு - அறியப்பட்ட தத்துவங்கள் முப்பத்தாறும்,—கலை ஐந்து - கலைகள் ஐந்தாம்.

குறிப்பு. 1. சாந்தியாதீதகலையிலடங்கிய மந்திரங்கள் முதலியன:—

(a). மந்திரங்கள் - ஈசானமந்திரம் அஸ்திரமந்திரம் நேத்திரமந்திரம் 3.

(b). பதம் - ஓங்காரம்.

(c). வன்னங்கள் - ஃ முதலாக ஈ வரையில் 16.

(d). புவனங்கள் - நிவிர்த்திபுவனம் முதல் அநாசிரிதபுவனம் வரையில் 15.

(e). தத்துவங்கள் - சத்தி, சிவம் 2.

(f). தெய்வம் - சதாசிவம்.

இதன் மந்திரங்கள் ஈசானம் சிவம் அஸ்திரமென்பர் சித்தாந்தசாராவளிகாரர். (சித். சாரா. ஸ்லோ. 75).

பொழிப்பு. சாந்தியாதீதகலையிலே மூன்று மந்திரமும் ஒரு பதமும் பதினாறு அக்கரங்களும் பதினைந்து புவனமும் இரண்டு தத்துவமும் அடங்கும், அதற்கு அதிதேவதை சதாசிவமூர்த்தியாம். மேற்கூறிவந்த முறையிலே மந்திரங்கள் பதினொன்று, பதங்கள் எண்பத்தொன்று, வன்னங்கள் ஐம்பத்தொன்று, புவனங்கள் இருநூற்றிருபத்துநான்கு, தத்துவங்கள் முப்பத்தாறு, கலை ஐந்து.

### 9. முதல்வன் குருவாகிவந்து அத்துவசுத்திசெய்து மலமகற்றும் முறைமை.

262. மூன்றுதிறத் தணுக்கள்செயுங் கன்மங் கட்கு
　　முன்னிலையா மூவிரண்டா மத்து வாவின்
ஆன்றமுறை யவையருத்தி யறுத்துமல முதிர்வித்
　　தரும்பருவ மடைதலுமே யாசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
　　துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவே சோதித்
தேன்றவுடற் கன்மமனு பவத்தினா லறுத்திங்
　　கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்.

(இ - ள்). மூன்று திறத்து அணுக்கள் செயும் கன்மங்கட்கு - மனம் வாக்குக் காயம் என்னும் மூத்திறத்தால் உயிர்கள்செய்யுங் கன்மங்களுக்கு,— முன்னிலையாம் - துணைக்காரணமாகிய,—மூவிரண்டாம் அத்துவாவின் ஆன்ற முறை - ஆறு அத்துவாக்களிலே கட்டுப்பட்டுப் பக்குவமான முறையிலே,— அவை அருத்தி அறுத்து - அவற்றைப் புசிப்பித்துத் தொலைத்து,—மலம் முதிர்வித்து - ஆணவமலத்தைப் பரிபாகப்படுத்தி,—அரும்பருவம் அடைதலுமே - அதனால் அவ்வுயிர்களுக்கு அரிய பக்குவமுண்டாக,—ஆசானாகித் தோன்றி - முதல்வன் குருவடிவாய் எழுந்தருளிவந்து,—நுகராதவைகை முன் செய் கன்மத்துகள் அறுத்து - சஞ்சிதகன்மப்பயனை அனுபவியாவண்ணம் அக்கன்மக்குற்றத்தை ஒழித்து,—அங்கு அத்துவாத்துடக்கு அறவே சோதித்து - அவ்விடத்து மாயேயமாகிய அத்துவபந்தம் முழுதும் சுத்திசெய்து,— உடல் ஏன்ற கன்மம் அனுபவத்தினால் அறுத்து - உடலுக்கமைக்கப்பட்ட பிராரத்தகன்மத்தை அனுபவத்தினால் ஒழித்து,—இங்கு இனிச் செய் கன்மம் மூலமலம் - இவ்விடத்து இனிமேற் செய்யும் ஆகாமியவினையையும் அநாதி ஆணவமலத்தையும்,—ஞானத்தால் இடிப்பன் - ஞானத்தினால் ஒழிப்பன்.

குறிப்பு. 1. மூன்றுதிறத்தணுக்கள்செயுங்கன்மங்கட்கு......மூவிரண்டாமத்துவாவின் ஆன்றமுறை:—இருவினை ஈட்டப்படுங்கால், மந்திரமுதலிய அத்துவாக்களிடமாக மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றான் ஈட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியம் எனப் பெயர்பெற்று, பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடக்கும் (சி. போ. பாடி. 65). ஆன்றமுறை - பொருந்தியமுறை. ஆனுதல் - சேருதல், பொருந்துதல், நிறைதல்.

மந்திரவன்னங்கள்-வாக்காலும், புவனங்கள்-காயத்தாலும், தத்துவங்கள் மனத்தாலும் கன்மமீட்டப்படற்கு வழிகளாதலாலும், கலைசத்தியாய் மூவகையாலும் ஈட்டுதற்குபகரணமாயிருத்தலாலும் " கன்மங்கட்குமுன்னிலையா மூவிரண்டாமத்துவா " என்றார். முன்னிலை - துணைக்காரணம், முனைத்துநிற்றற்கு இடம் எனலுமாம்.

2. அவையருத்தி யறுத்து மலமுதிர்வித்து - கன்மத்தை நுகர்வித்து இருவினையொப்பு மலபரிபாகம் வருவித்து.

3. முதல்வன் குருவாய் எழுந்தருளிவந்து அத்துவசுத்திசெய்தலினால், சஞ்சிதவினை ஒழியும். சஞ்சிதவினை ஒழிதலால் மாயாமலமும் நீங்கும். ஆணவமலம் வலியற்றிருக்கும். பிராரத்தகன்மம் அனுபவத்தாற் கழியும். ஆகாமியவினை ஏறாது. இங்ஙனம் மும்மலங்களும் ஒழியுமாறு காண்க. இச்சூத்திரத்தின் முதற்செய்யுளிலே " தொல்லுயிரை மன்னு மருட்குருவாகி வந்தவரினீக்கி மலமகற்றி வைப்பன் " எனத் தொகுத்துக் கூறியது 254-ம் செய்யுள்முதல் இச்செய்யுளீறாக வகுத்து விளக்கப்பட்டவாறு காண்க.

4. அத்துவாவிரிவு மேற்பக்கத்துக் காண்க.

பொழிப்பு. ஆன்மாக்கள் பக்குவமெய்தியவிடத்து முதல்வன் குருவடிவாய் எழுந்தருளிவந்து அத்துவசுத்தியினால் அவ்வான்மாக்களின் சஞ்சிதவினையையும், ஞானத்தால் ஆகாமியவினையையும் ஆணவமலத்தையும் ஒழிப்பன். பிராரத்தவினை அனுபவத்தால் ஒழியும்.

## அத்துவசுத்திப்பெருமை.

இதனாலே அத்துவாக்கள் சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம் ஆகிய இரண்டனையும் அடக்கியவாறும், அண்டமும் பிண்டமும் ஒருவகைத்தாயமைந்தவாறும். அத்துவசுத்திசெய்வதனாற் பிரபஞ்சப்பற்று அறவேயொழிவதென்பதும், இவற்றுட் கட்டுப்பட்டுள்ள மனம் வாக்குக் காயங்களாலான சஞ்சிதவினை கெட்டழிவெய்துமென்பதும் நோக்குக. இதன்விபரம் தத்துவப்பிரகாசத்தும் சித்தாந்தசாரவளிக் கிரியாபாதவியாக்யானத்தும் மிருகேந்திரத்தும் காண்க. இவ்வத்துவசுத்தியே தோற்ற ஒடுக்க முறைமையில் தீக்ஷை, மணம், அந்தியேட்டி முதலிய ஓமங்களினெல்லாம் குருவாற் சீடனுக்குச் செய்யப்படுவதும், அதில் இடும் ஆகுதிகளெல்லாம் இச்சுத்தியையே குறிப்பனவென்பதும் நூலாராய்ச்சியாலும் குருமூலமாயும் தியானவாயிலாயும் அறிந்து, கிரியாபாதத்துள்ள சூக்குமஞானத்தைத் தெளிந்துய்க்க. இதுதெரியாதார் கிரியைகளைச் சாதிக்கவுஞ்செய்யாது விளங்கவும் நாடாது எள்ளுவதெத்தகைமடமையோ! இவர்க்கு நன்மதிவந்து சிவதீக்ஷைபெற்றுத் திருநீறு கண்டி திருவஞ்செழுத்துண்மை கைவருநாளெந்நாளோ !! இவர்கடாம் "அத்துவாவெல்லாமடங்கச்சோதித்தபடிச், சித்துருவாய்நின்றார்தெளிவறிவதெந்நாளோ" எனத் தாயுமானவர் கூறியவாறு தெளிவெய்தி உய்வதுதான் என்றோ.!!!

---

## இரண்டாமதிகரணம்.

துன்னிய வைப்புல வேடர் சூழலிற்பட்டுத் துணைவனையுமறியாது துயருறும் தொல்லுயிரை (அறிவித்து) வைப்பன், என்பது இரண்டாங் கூறு. **(263-280)**. இது ஆசாரியனால் தீக்ஷைபெற்றவுயிர்க்குத் தலைவனாகிய பதியையறியும் ஞானமும், ஞானத்தால் முத்தியும்வருமாறு கூறுமுகத்தான் சைவத்திறமும், சைவசாதனைகளின் விரிவும், சிவஞானத்திறமும் கூறுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

துணைவனையுமறியாது துயருறும் தொல்லுயிர்க்குச் சைவத்திறமும், அதனாற் சிவஞானமும், அதனாற் சிவனடிப்பேறாகிய முத்தியும் சித்திக்குமுறைமை தொகுத்துக் கூறல், **(263)**.

1. சைவத்திறமே முத்தி சித்தித்தற்குரிய நெறி, (**264-269**).

(*a*). முத்தியிலக்கணம், (**264**).

(*b*). வேதசிவாகமங்களே முத்திநெறியை அறிவிப்பன, (**265**).

(*c*). வேதசிவாகமங்களின் பெருமை, (**266**).

(*d*). சிவாகமம் வேதாந்த சித்தாந்தமாகும், (**267**).

(*e*). சித்தாந்தநெறியே சிவனடிப்பேறளிப்பது, (**268**).

(*f*). சிவனே மலமகற்றி முத்தியளிப்பவன், (**269**).

2. சைவசாதனைகளே முத்திபயப்பன, (**270-275**).

(*a*). சைவசாதனைகளின் வகையும் பயனும், (**270**).

(*b*). சரியாசாதனையின் இலக்கணமும் பயனும், (**271**).

(*c*). கிரியாசாதனையின் இலக்கணமும் பயனும், (**272**).

(*d*). யோகசாதனையின் இலக்கணமும் பயனும், (**273**).

(*e*). ஞானசாதனையின் இலக்கணமும் பயனும், (**274**).

(*f*). ஞானபூசனையே முத்திக்கு நேர்வழி, (**275**).

3. சிவஞானத்திறமே சிவனடி சேர்விக்கும், (**276-280**).

(*a*). ஞானத்தின் வகையும் பயனும், (**276**).

(*b*). ஞானப்பேறே மற்றைய சாதனைகளின் முடிவு, (**277**).

(*c*). மெஞ்ஞானப்பேறு புண்ணியச்செயல்களாலுமாகும், (**278**)

(*d*). மெஞ்ஞானத்தின் இயல்பு, (**279**).

(*e*). மெஞ்ஞானத்தின் பயன், (**280**).

துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிர்க்குச் சைவத்திறமும் அதனாற் சிவஞானமும், அதனாற் சிவனடிப்பேறாகிய முத்தியும், சித்திக்கு முறைமை தொகுத்துக் கூறல்.

**263.** புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

(இ - ள்). புறச்சமயநெறி நின்றும் - புறச்சமயநூல்வழியே ஒழுகியும்,—அகச்சமயம் புக்கும் - அகச்சமயநூல்வழியே சென்றொழுகியும்,—புகல் மிருதிவழி உழன்றும் - மனுமுதலியோராற் சொன்ன மிருதிநூல்வழியே சென்றொழுகியும்,—புகலும் ஆச்சிரம அறத்துறைகள் அவை அடைந்தும் - வேதங்களிற் கூறிய ஆச்சிரமதரும நெறிகளை மேற்கொண்டு அவற்றின் வழுவாதொழுகியும்,—அரும் தவங்கள் புரிந்தும் - அரிய தவங்களைச் செய்தும்,—அரும் கலைகள் பல தெரிந்தும் - அரிய கலைஞானங்கள் பலவற்றைப் பயின்றும்,—ஆரணங்கள் படித்தும் - வேதங்களை ஓதியும்,—சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் - சிறப்பினையுடைய புராணங்களை ஆராய்ச்சிசெய்தறிந்தும்,—வேதசிரப்பொருளை மிகத்தெளிந்தும் - வேதசிரசாகிய உபநிடதங்களின் பொருளை மிகவுமாராய்ந்து தெளிவுற்றும்,—சென்றால் - இங்ஙனம் சோபான முறையிலே மேலேறிச் சென்றால்,—சைவத்திறத்து அடைவர் - சிவாகமநெறியாகிய சைவசித்தாந்தத்தைத் தலைப்படுவர்,—இதில் சரியை கிரியை யோகம் செலுத்தியபின் - இச்சைவசித்தாந்தத்தினும் சரியை கிரியை யோகங்களைச் சாதித்து முற்றியபின்,—ஞானத்தால் சிவன் அடியைச் சேர்வர் - ஞானத்தைப் பெற்று அதனாற் சிவபெருமானது திருவடிகளை அடைதலாகும் முத்திப்பேற்றைப் பெறுவர்.

குறிப்பு. 1. புறச்சமயம், அகச்சமயம். (செ. 2. குறிப்பு 1 பார்).

2. புகல் மிருதி - மநுவினுலியற்றிய தருமநூல். மநுஸ்மிருதியையொட்டிப் பின்னெழுந்த தருமநூல்களும் மிருதியெனக்கொள்ளப்படும். அவை தத்தம் ஆசிரியர்பேரானே வழங்கிவருவன. அவையாவன: அத்திரி, ஔரிதம், விட்டுணு, யாஞ்ஞவற்கியம், உசனம், ஆங்கிரசம், யமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்தியாயனம், பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், தக்கம், கௌதமம், சாதான்மம், வாசிட்டம் எனப் பதினெட்டாம். இவற்றின்வழி ஒழுகுவோர் ஸ்மார்த்தர்களெனப்பட்டு அவ்வச்சூத்திரத்தின் பெயரானறியப்படுவர். இவற்றுட் கிரேதாயுகத்தில் மநுமிருதியும், திரேதாயுகத்திற் கௌதமமிருதியும், துவாபரத்திற் சங்கலிதமிருதியும், கலியுகத்திற் பராசரமிருதியும் முக்கியமானவை. சங்கலிதமிருதி நான்கு யுகங்களுக்கும் பொது என்றுஞ் சொல்லப்படும். இது சங்கம், லிகிதம் என இரண்டாகக் கூறப்படுவதுமுண்டு. இம்மிருதிகளில் வேதத்தின்கண் விதிவிலக்குகளைக் கூறும் கர்மகாண்டத்தைப்பற்றிப் பிராமணர் முதலிய சாதிகளும் பிரமசரியம் முதலிய ஆச்சிரமங்களும் விதிக்கப்பட்டும், தத்துவ ஆராய்ச்சி கூறும் உபநிடதங்களாகிய ஞானகாண்டத்தைப்பற்றிப் பிரகிருதி புருடன் ஈசுரன் இலக்கணங்கள் கூறப்பட்டும், வேதத்திலமைத்த ஒழுக்கம் வழக்கு தண்டங்கள் நியமிக்கப்பட்டும் உள்ளன.

3. புகலு மாச்சிரம வறத்துறைகள் - வேதத்திற் கூறிய சமயநிலைகளுக்குரிய தருமங்களை அநுட்டிக்கும் ஒழுக்க நெறிகள். அவை பிரமசரியம்,

கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என நான்காம். பிரமசரியமாவது- ஆசிரியனிடத்துக்கற்று விரதங்காத்துக் காமவிச்சையின்றியொழுகும் ஒழுக்கம். இது, நைட்டிகம், பௌதிகமென இருவகைப்படும். நைட்டிகம்- மரணாந்தம் விரதநியமித்துத் துறவியாய் விவாகமின்றியிருத்தல். பௌதிகம்- பாலியவயசு தொடங்கி விவாகஞ் செய்யும்வரையும் விரதநியமித்துத் துறவியாய் ஒழுகுதல்.

கிருகஸ்தமாவது - கருத்திற்கொத்த மனையாளை மணந்து தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற ஐவகையார்க்குஞ் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து இல்லத்தன்போடு ஒழுகும் ஒழுக்கம். இது சாதகம், உதாசீனம் என இருவகையாகும். சாதகம் - முறையே ஐங்கடனையுஞ் சாதித்திருத்தல். உதாசீனம் - கேள்வியால் முனிவர்கடனையும், வேள்வியால் தேவர்கடனையும், புதல்வரால் தென்புலத்தார்கடனையும் நீக்கி, இல்லாளோடு பற்றின்றி இல்லத்திருத்தல்.

வானப்பிரஸ்தமாவது - விவாகஞ்செய்து இல்லொழுக்கத் தொழுகிப் பின் இல்லைவிடுத்து வனத்திற்சென்று தவத்தர்சேவைசெய்து தவம்பூண்டொழுகும் ஒழுக்கம். இது சபத்தினிகம், விபத்தினிகம் என இருவகைப்படும். சபத்தினிகம் - மனையாளோடுகூடி இல்லைவிடுத்து வனத்திற் சேறல். விபத்தினிகம் - மனையாளைப் புத்திரர் சுற்றத்தவரோடு இல்லில் விடுத்துத் தனியே வனத்துச்சேறல்.

சந்நியாசம் - மனை மக்கள் சுற்றம் முதலிய யாவற்றையும் துறந்து ஏகாக்கிரமாய் ஒழுகும் ஒழுக்கம். இது தவசுவி, விவிதீஷு, வித்துவான் என மூன்றுவகைப்படும். தவசுவி - வனத்திற்றனித்து மரநீழலிடமாக் கொண்டு, மாணாக்கர்களைத்தேடிக் கற்பித்து, தண்டு கமண்டலமின்றி, மணல் முதலிய க்ஷணிகலிங்கத்தைப் பூசித்து, கரபாத்திரமாய்ப்புசித்து மௌனியாயிருப்பவன். விவிதீஷு - வேதாகம அத்தியயனஞ்செய்தும் செய்வித்தும் மேற்சொல்லிய கிருத்தியங்களுடையவன். வித்துவான் - ஆசாரியரால் அபிடேகம்பெற்று மாணாக்கர்கட்குச் சிவாகமவியாக்கியானம்பண்ணிக்கொண்டு அதனையே சிந்தித்திருந்து மேற்கூறிய கிருத்தியங்களுடையவன்.

4. தவங்கள் - பஞ்சாக்கினிநடுவிலும், சலத்தினடுவிலும் பிறவாற்றானும் நின்று மனமும் பொறியும் ஒருவழிப்படுமாறு உடம்பைவருத்திச் செய்யுஞ் சாதனைகள்.

5. அருங்கலைகள் - கற்பதற்கரிதாய கலைஞானங்கள். இவை அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தருமசாத்திரம், மந்திரசாத்திரம், சகுனசாத்திரம், சிற்பசாத்திரம், வைத்தியசாத்திரம், உருவசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடணம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம, தாளம், அத்திரபரீட்சை, கனகபரீட்சை, இரத

பரீட்சை, கசபரீட்சை, அசுவபரீட்சை, இரத்தினபரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராமவிலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடணம், வித்துவேடணம், மதனசாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், சவுத்திகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப்பிரயோகம் என அறுபத்துநான்காம்.

6. ஆரணங்கள் - வேதங்கள். அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன.

7. புராணங்கள் - பழைய சமயசரித்திரங்களைக் கூறும் நூல்கள். இவை சைவம், காந்தம், இலிங்கம், கூர்மம், வாமனம், வராகம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் என்னுஞ் சிவபுராணங்கள் பத்தும், நாரதீயம், பாகவதம், காருடம், வைணவம் என்னும் விட்டுணுபுராணங்கள் நான்கும், பிரமம், பதுமம் என்னும் பிரமபுராணங்கள் இரண்டும், ஆக்கிநேயம் என்னும் அக்கினிபுராணம் ஒன்றும், பிரமகைவர்த்தம் என்னும் சூரியபுராணம் ஒன்றும் ஆகிய பதினெட்டாம். இவற்றோடு சனற்குமாரம், நாரசிங்கம், நந்தி, துருவாசம், சிவதருமம், நாரதீயம், காபிலம், மானவம், அவுசனம், வாசிட்டம், லைங்கம், வாருணம், காளிகம், சாம்பேசம், சௌமியம், சவுரம், பராசரம், பார்க்கவம் என்னும் உபபுராணங்கள் பதினெட்டும் பின்னுள்ள தலமான்மியங்களுமாகிய பலவும் புராணங்கள் எனப்படும். இவையெல்லாம் உலகத்தோற்றம், ஒடுக்கம், மநுவந்தரம், முனிவர் அரசர் மரபு, அவர்சரிதம் ஆகிய ஐந்திலக்கணங்களை விரிப்பனவாம்.

8. வேதச்சிரம் - உபநிடதம். இவை வேதத்தில் இலைமறைகாய்போலிருக்கும் ஞானப்பொருளைத் தெரிவித்தலின், அவ்வாறு கூறப்படும். அவை சீருத்திரம், பிருகதாரண்ணியம், சுவேதாசுவதரம், கைவல்லியம், காலாக்கினி, கடம், வல்லி, காத்தியாயனம், பிரமம், நாராயணம், அங்கிசம், பரமாங்கிசம், பாற்கரம், பிரமபிந்து, ஆருணி, அமிர்தபிந்து, பருவபஞ்சம், பிரமசாபாலம், தேசோபிந்து, வார்சியாயனீயம், போதாயனீயம், ஆசுவலாயனீயம், சாங்கியாயனீயம், வாசிராயனீயம், சௌனகீயம், சிவசங்கற்பம், சிரவணம், பாராசம், கிய்புரோடியம், மாண்டூகம், முண்டிரம், மௌண்டிரம் என முப்பத்திரண்டாம். இவ்வாறன்றி இருக்குவேதத்திற்கு ஐதரேயம் முதற் பத்தும், யசுர்வேதத்திற்குக் கடவல்லிமுதல் ஐம்பத்தொன்றும், சாமவேதத்திற்குக் கேனம்முதற் பதினாறும், அதர்வவேதத்திற்குப் பிரசுமுதல் முப்பத்தொன்றுமாக உபநிடதங்கள் நூற்றெட்டென்னலுமாம். நான்குவேதங்களுக்கும் ஆயிரத்துநூற்றெண்பது உபநிடதங்களிருப்பினும், அதிசாரமாயும் இரகசியமாயுமுள்ளன முற்சொல்லிய நூற்றெட்டும் முப்பத்திரண்டு

மாம். இவற்றுள்ளும் அதர்வசிரம், கைவல்லியம், சுவேதாச்சுவரம், காலாக்கினி, ருத்திரம் என்னும் ஐந்தும் பஞ்சருத்திரமெனப்பட்டு அதிவிசிட்டமாகக் கொள்ளப்படும்.

9. ஆன்மா உணர்த்த உணருந்தன்மையுடையதாயினும், ஒரேகாலத்து ஒருங்கே உணர்த்த ஒருங்கே உணரும் ஆற்றலுடையதன்றாதலால், சோபானமுறையால் அறிவுவிளங்கப்பெற்று வியாபக அறிவெய்தி முத்தியடையும் இயல்பினதாயிற்று.

பொழிப்பு. உயிர்கள் புறச்சமய அகச்சமயங்களிலே நின்றொழுகியும் மிருதிவழி, ஆச்சிரமநெறி, தவநெறிகளில் ஒழுகியும், புராணங்கள் வேதவேதாங்கங்கள் உணர்ந்தும், இவ்வாறு பல பிறவிகளிலே படிப்படியாய் உயர்ந்து சிவாகம சைவசித்தாந்தநெறியை யடைந்து அதிற் சரியை கிரியை யோகங்களைச் சாதித்து முடித்தபின் ஞானத்தைப் பெற்று முத்தியடையும்.

1. சைவத்திறமே முத்திசித்தித்தற்குரிய நெறி (264-269).

(a). முத்திஇலக்கணம்.

264. இம்மையே யீரெட்டாண் டெய்தியெழி லாரு
மேந்திழையார் முத்தியென்று மிருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றுமுத்தி யைந்து கந்த
மறக்கெடுகை யென்றுமட்ட குணமுத்தி யென்று
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

(இ - ள்). இம்மையே ஈரெட்டு ஆண்டு எய்தி எழில் ஆரும் ஏந்திழையார் முத்தி என்றும் - இம்மையிலே பதினாறுவயதுள்ள அழகுபொருந்திய அரிவையரைக்கூடி இன்புறுதலே முத்தி என்றும்,—அம்மையே இரும் சுவர்க்கம் முத்தி என்றும் - யாகம் முதலிய கன்மங்களைச் செய்து மறுமையிலே பெரிய சுவர்க்கம் முதலிய உலகங்களிலே போகங்களை நுகர்தலே முத்தி என்றும்,—ஐந்துகந்தம் அறக்கெடுகை முத்தி என்றும் - பஞ்சகந்தங்களும் முற்றக்கெடுதலே முத்தி என்றும்,—அட்டகுணம் முத்தி என்றும் - எட்டுத் தீக்குணங்களும் அடங்க எட்டு நற்குணங்களையும் அடைதலே முத்தி என்றும்,—மெய்ம்மையே பாடாணம்போல்கை முத்தி என்றும் - மெய்ம்மையாகப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்றும்,—விவேகம் முத்தி என்றும் - விவேகஞானமே முத்தி என்றும்,—தன் மெய்வடிவாம் சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தி என்றும் - தனது உண்மைவடிவாகிய சிவசொரூபத்தைச் செவ்விதாகப் பெறுதலே முத்தி என்றும்,—செப்புவர்கள் -

ஏனைச்சமயிகள் கூறுவர்.—இங்கு யாம் செப்புவது - இங்கே யாம் கூறும் சைவசித்தாந்த முத்தியாவது,—சிவன் அடியைச் சேரும் முத்தி - பரமசிவனது திருவடியைச்சேரும் முத்தியாம்.

குறிப்பு. 1. இம்மையே யீரெட்டாண்டெய்தி பெழிலாரு யேந்திழையார் முத்தி:-உலோகாயதர் இம்மையிலே மங்கையரைக் கூடி இன்பம் அனுபவித்தலே முத்தி என்றும், கடவுள் ஆன்மா கன்மம் உண்டென்பது பொய் என்றும் சொல்வர். அவருக்கு முத்தித்தானம் பூமி.

2. இருஞ்சுவர்க்க முத்தி:-மீமாஞ்சகர் யாகம் முதலிய சன்மங்களைச் செய்து சுவர்க்காதி லோகங்களிலே அவற்றின் பயனை அனுபவித்தலே முத்தி என்பர். முத்தித்தானம் பிருதிவிதத்துவம்.

3. ஐந்து கந்தமறக்கெடுகை முத்தி:-சௌத்திராந்திகர், உருவம் ஞானம் வேதனை குறி வாசனை என்னும் ஐந்து கந்தங்களும் முற்றும் ஒழிவதே முத்தி என்பர். முத்தித்தானம் புத்திதத்துவம்.

4. அட்டகுணமுத்தி:-ஆருகதரில் நிகண்டவாதிகள், ஞானுவரணீயம் தரிசனுவரணீயம் வேதநீயம் மோகநீயம் ஆயுஷ்யம் நாமம் கோத்திரம் அந்தராயம் என்னும் எட்டுத் தீக்குணங்களும் நீங்கி, அநந்தஞானம் அநந்ததரிசனம் அநந்தவீரியம் அநந்தசுகம் நிர்நாமம் நிர்க்கோத்திரம் நிராயுஷ்யம் சம்நியதாபாவம் என்னும் நற்குணங்கள் எட்டையும் பெறுதலே முத்தி என்பர். ஞானுவரணீயம் - ஞானத்தைமறைப்பது. ஞானம் - அறிவு. ஆவரணீயம் - மறைப்பது. தரிசனுவரணீயம் - காட்சியைமறைப்பது. தரிசனம் - காட்சி. வேதநீயம் - வருத்துதலோடுகூடியது. வேதநீ - வருத்துவது. மோகநீயம் - ஆசையுடையவனுயிருத்தல். ஆயுஷ்யம் - சீவத்துவம், வாழ்நாளுடைமை. ஆயுஷ் - வாழ்நாள். அந்தராயம்-இடையூறு, தீமை. அநந்தஞானம்-வரம்பிலா அறிவு. அநந்ததரிசனம் - வரம்பில்லாக்காட்சி. அநந்தவீரியம் - அளவில்லாத வீரம். அநந்தசுகம் - வரம்பில்லா இன்பம். நிராயுஷ்யம் - ஆயுசுவின்மை. சம்மியதாபாவம் - அழியாவியல்பு. முத்தித்தானம்-குணதத்துவம்.

5. பாடாணம்போல்கை முத்தி:-வைசேடிகர், திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மை எனப் பதார்த்தம் எழுவகைப்படும். இவற்றுள்ளே திரவியம், நிலம் நீர் தீ வளி ஆகாயம் காலம் திசை ஆன்மா மனம் என ஒன்பது வகைப்படும். ஆன்மா மனத்தோடுகூடி அறியும். இந்த எழுவகைப் பொருள்களின் இயல்புகளை உணரவே, உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவின் இயல்பு விளங்கும். அதனுல் உடம்பு முதலியவற்றை நான் என்று எண்ணிய மித்தையுணர்வு கழியும். அதனுல், முயற்சியின்மையின், அறம்பாவங்களில்லையாய்ப் பிறவி ஒழியும். அதனுல் துன்ப இன்பங்கள் இலவாய், உடம்பு எடுத்துக்கொண்ட வினைப்பயன் நுகர்ச்சியாற் கழிந்தவிடத்து, இறுதித்துன்பங் கெட்டு மனத்தோடு கூடுதற்கு ஏது

வின்மையின், அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்பர். பாடாணம் - கல். முத்தித்தானம் - புத்திதத்துவம்.

6. விவேகமுத்தி:-சாங்கியர் விவேகஞானமே முத்தி என்பர். விவேகஞானமாவது பிரகிருதியையும் புருடனையும் பகுத்துணரும் அறிவு. அன்றி மாயாவாதிகள் பிரமம் ஒன்றே மெய்ப்பொருள், ஏனைய எல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினுற் காணப்படுவனவாதலிற் பொய். இஙஙனம் தோன்றும் உலகத்திற்கு முதற்காரணமாகிய பிரகிருதிமாயை பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடுபோல அசத்துமன்றி அநிருவசனமாயிருக்கும். இந்த மாயைக்கு வேறாகிய பிரமரூபமே யான் என ஆராய்ந்தறிவதே முத்தி என்பர். முத்தித்தானம் - பிரகிருதிதத்துவமும், புருடதத்துவமும்.

7. தன்மெய்வடிவாஞ் சிவத்தைச் செம்மையேபெறுகை முத்தி:-சிவசமவாதிகள், சிவானுக்கிரகத்தால் ஆன்மாக்களின் மும்மலங்களும் நீங்க, அதனுல் அவற்றின் சொரூபமாகிய இச்சாஞானக் கிரியைகள் விளங்கப்பெற்றுச் சர்வஞ்ஞத்துவம் முதலிய அறுகுணங்களோடு சிவசமமாயிருப்பதே முத்தி என்பர். முத்தித்தானம் - ஈசுவரதத்துவம்.

8. சிவனடியைச்சேருமுத்தி:-சித்தாந்தமுத்தியாவது, ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் நீங்க ஆன்மா திருவருளைக்கூடிச் சிவத்தோடு ஒன்றிநின்று பேரானந்தத்தை அனுபவிக்கும் நிலையாம். "திரிமலமுமகலவுயிரருள்சேர்முத்தி" "ஒன்றிநின்றுணருமுண்மைக்குவமையாணவத்தொடொன்றே" (சிவப்பிர. செ. 50, 87). பதம் என்ற சொல்லுக்குப் பொருள், நிச்சயம், ரக்ஷை, இருக்குமிடம், அடையாளம், அடி, ஒருவஸ்து இத்தனையுமாகையால், சிவனடியைச் சேரவென்றது, சிவமாகிய வஸ்துவைப் பொருந்தவென்றது என்பர் சிவாக்கிரயோகியர்.

**தொழிப்பு.** ஏனைச் சமயத்தவர்கூறும் முத்திகள் பிருதிவிமுதல் நாதம் ஈருகவுள்ள முப்பத்தாறு தத்துவங்கள் ஒவ்வொன்றிற் படுவனவாய், மாதர் போகம் நுகர்தல் முதலிய பேறுகளாயிருக்கும். சைவசித்தாந்திகள் கூறும் முத்தி முப்பத்தாறுதத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட சிவனடியை அடையும் முத்தியாம்.

(b). வேதசிவாகமங்களே முத்திநெறியை அறிவிப்பன.

**265.** ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
னிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி

நீதியினு னிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூல்
ஆதலினு னிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்.

(இ - ள்). ஓதுசமயங்கள் - சொல்லப்பட்ட சமயங்களும்,—பொருள் உணரும் நூல்கள் - அச்சமயப்பொருள்களை உணர்த்தும் நூல்களும்,—ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் உள பலவும் - ஒன்றோடொன்று மாறுபட்டனவாகவும் பலவாகவும் இருத்தலினால்,—இவற்றுள் சமயம் யாது பொருள்நூல் யாது இங்கு என்னின் - இவற்றுள் முதன்மையான சமயம் யாது, அச்சமயப்பொருளை உணர்த்தும் நூல் யாது, என்று இங்கே கேட்கின்,—இது ஆகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி - இது பொருத்தமுடையது, அது பொருத்தமுடையதன்று என்னும் தருக்கவாதமின்றி,—நீதியினால் இவையெல்லாம் ஓர் இடத்தே காண நின்றது யாதொருசமயம் - முறைமையால் இச்சமயங்களும் இவற்றால் உணர்த்தப்படும் பொருள்களுமாகிய அனைத்தும் தனித்தனி ஒவ்வோரிடத்தேயமைய அவற்றை ஒருங்கு சேர்த்துக் காண நின்றது எச்சமயமோ,—அது சமயம் பொருள்நூல் ஆதலினால் - அதுவே முதன்மையான சமயமும் அச்சமயப் பொருளை உணர்த்தும் நூலே முதன்மையான நூலுமாகவிருத்தலே முறையாம்,— இவை எல்லாம் அருமறை ஆகமத்தே அடங்கியிடும் - இச்சமயங்களும் அவற்றின் பொருள்களுமெல்லாம் அரிய வேதாகமங்களிலே அடங்குதல் காணக்கிடந்தது,—அவை இரண்டும் அரன் அடிக்கீழ் அடங்கும் - அவ்வேதாகமங்கள் இரண்டும் முதல்வன் திருவடியிலே அடங்குதலும் அறியக்கிடந்தது. (ஆதலால், அச்சிவனடியை அடைவிக்கும் சைவசமயமே உண்மைச்சமயமும், அச்சமயப் பொருள்களை விளக்கும் வேதாகமங்களே உண்மைநூல்களுமாம்.)

குறிப்பு. 1. பொருள் - அவ்வச்சமயத்தவர் கூறும் பதி பசு பாசம் என்னும் பதார்த்தங்கள்.

2. இதுவாகுமதுவல்ல தெனும் பிணக்கதின்றி நீதியினுனிவையெல்லா மோரிடத்தே காண நின்றது:-குருடர் சிலர் கூடி யானையையறியவெண்ணி ஒவ்வோர் உறுப்புக்களைப் பரிசித்தறிந்து இதுவே யானை மற்றதுவல்லவெனத் தம்முள் முரணக், கண்ணுள்ளானொருவன் யானையைக் கண்டு குருடர் கூறிய இலக்கணங்கள் யாவு மொருங்கே யமைந்திருப்பதாய வொன்றே யானையென விளக்குதல்போலச், சின்னாட் சில்பிணிச் சிற்றறிவுடைய மாந்தர் சிலர், பதி பசு பாசவிலக்கண நிச்சயிக்கவுற்று முடிபாகக்கண்ட கிஞ்சித் உண்மைகளையெல்லாம் ஏகதேசமாகக் காட்டி, விரிந்த முற்றறிவுடைய முதல்வன் தமது திருவருளா லான்மாக்கட்குத் தாம் உபகரித்த வேதசிவாகமங்களிலே மெய்ப்பொருளாகிய சித்தாந்த வுண்மையைத் தெரிவிப்பன் என்பது காண்க.

3. அரனடிக்கீழடங்கும் - வேதாகமங்கள் பரமசிவனால் அருளப்பட்டமையால், அவை அப்பரமசிவனிடத்தே ஒடுங்கும் என்பது.

4. யாது சமயம் பொருள் நூல் என்னில், இதுவாகும் அதுவல்ல தெனும் பிணக்கதின்றி நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண நின்றது யாது சமயமோ அது மெய்ச்சமயம். அதன்பொருளும் நூலுமே மெய்ப்பொருளும் மெய்நூலுமாம். வேதசிவாகமங்களிலே இத்தகைய பிணக்கதின்றி இவையெல்லாமோரிடத்தே காணநின்றது. ஆகையால் அவையே மெய்நூல், அவைதாம் சிவனடிக்கீழடங்குமாதலின், சைவசமயமே மெய்ச்சமயமுமாம் எனக்கூட்டுக.

பொழிப்பு. சமயங்களும் சமயநூல்களும் ஒன்றோடொன்று மாறுபட்டனவாயும் பலவாயுமிருத்தலின், அவற்றுள் உண்மைச்சமயம் யாது, அச்சமயப்பொருளை உணர்த்தும் நூல் யாது, என்னின், எல்லாச் சமயத்தார் கூறும் பொருளியல்புகளும் தனித்தனி ஒவ்வோரிடத்தே யமைய அவற்றை ஒருங்குசேர்த்துக்காண நின்ற சமயம் எதுவோ, அதுவே உண்மைச் சமயமாகவேண்டும். அச்சமயப்பொருளை உணர்த்தும் நூலே உண்மைநூலாகவும் வேண்டும். இச்சமயங்களும் அவை கூறும் பொருளியல்புகளும் வேதாகமங்களிலே அடங்கியிருக்கக்காணப்படுதலாலும் வேதாகமங்கள் சிவனடியிலே அடங்குதல் அறியப்படுதலாலும் சிவனடியை அடைவிக்கும் சைவசித்தாந்தமே உண்மைச்சமயமாம். அச்சமயப்பொருளை விளக்கும் வேதாகமங்களே மெய்நூல்களுமாம்.

(c). வேதசிவாகமங்களின்பெருமை.

**266.** அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினா
னளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்கள்
தருவர்கள்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற்
றர்க்கமொடுத் தரங்களினாற் சமயஞ் சாதித்து
மிருதிபுரா ணங்கலைகண் மற்று மெல்லா
மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம்வே தாங்கஞ்
சுருதிசிவா கமமொழியச் சொல்லுவதொன் றில்லைச்
சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ ணாதே.

(இ - ள்.) அரு மறை ஆகமம் - ஓதிஉணர்தற்கரிய வேதாகமங்கள்,—அனைத்தும் உரைக்கையினான் - எல்லாப்பொருள்களின் இயல்பும் கூறுகையினால்,—முதல் நூல் - முதனூல் எனப்படும்,—அளப்பரிதாம் அப்பொருளை - அளவிடற்கரிய அப்பொருளை,—அரன் அருளால் - முதல்வன் பக்குவநோக்கி அளித்த அருளினாலே,—அணுக்கள் பின் தனித்தனியே தாம் அறிந்தஅளவில் -

உயிர்கள் பிற்காலத்தே தனித்தனியாகத் தத்தம் அறிவளவுக்கேற்ப,—தர்க்கமொடு உத்தரங்களினால் - தர்க்கமுறையோடு வினாவிடைகளினால்,—சமயம் சாதித்துத் தருவர்கள் - தத்தம் சமயத்தை உறுதிப்படுத்தி நூல் செய்தனர்,-மிருதி புராணம் கலைகள் மற்றும் எல்லாம் - மிருதி புராணம் கலைகளும் உபாகமம் முதலிய ஏனை நூல்களும் ஆகிய யாவும்,—மெய்ந்நூலின்வழி - உண்மை நூலாகிய வேதாகமங்களின் வழியே செய்யப்பட்ட வழிநூலாகும்,—அங்கம் வேதாங்கம் புடையாம்-ஆகமாங்கங்களும் வேதாங்கங்களும் சார்புநூலாம்,—சிவாகமம் ஒழியச் சொல்லுவது சுருதி ஒன்று இல்லை - சிவாகமங்களிற் கூறியவற்றையன்றிப் புதிதாக ஒரு பொருளை எடுத்துரைக்கும் ஒரு நூல் வேறில்லை,—சொல்லுவார் தமக்கு அறையோ சொல்லொணாதே - உண்டென்று சொல்லுவாருக்கு உத்தரமுஞ் சொல்ல இயலாது.

குறிப்பு. 1 அருமறையாகம முதனூலனைத்து முரைக்கையினால்:—வேதாகமங்கள் எல்லாப்பொருள்களின் இயல்புகளையுங் கூறுதலினால், முதனூல் எனப்படும். வேதம் - இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என நான்கு. ஆகமம் இருபத்தெட்டு. அவை, காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்பன. இவை சதாசிவமூர்த்தியின் ஐந்து திருமுகங்களினின்றும் தோற்றிச் சுத்த வித்தியா தத்துவத்திலிருந்து சதாசிவனால் அநந்தருக்கும், அவரால் ஸ்ரீகண்டருக்கும், அவரால் தேவர்களுக்கும், அவர்களால் முனிவர்களுக்கும், அவர்களால் மனுடருக்கும், மனுடரால் மனுடருக்குமாக உபதேசக்கிரமத்தில் உலகிற் பரம்புவனவாம்.

இவற்றுள், காமிகம் முதல் ஐந்தும் சத்தியோசாதமுகத்தினின்றும் கௌசிகவிருடியின்பொருட்டும், தீப்தம்முதல் ஐந்தும் வாமதேவமுகத்தினின்றும் காசிபவிருடியின் பொருட்டும், விசயம்முதல் ஐந்தும் அகோரமுகத்தினின்றும் பாரத்துவாசவிருடியின்பொருட்டும், இரௌரவம் முதல் ஐந்தும் தற்புருட முகத்தினின்றும் கௌதமவிருடியின்பொருட்டும், புரோற்கீதம் முதல் எட்டும் ஈசானமுகத்தினின்றும் அகத்தியவிருடியின் பொருட்டும் தோன்றின என்ப. இவ்வைந்து வகைகளின்வண்ணம் முறையே அவரவர்க்குத் தீக்ஷையும்செய்யப்பட்டது. இவற்றிற் கதிதேவதைகள் முறையே சிவமூர்த்தி, ஈசுரன், ஈசானன், பிரமமூர்த்தி, நடேசமூர்த்திகளாம். இவ்விருடிகள் கோத்திரங்கள் முறையே சிவகோசரம், சிகாகோசரம், சோதிகோசரம், சாவித்திரிகோசரம் வியோமகோசரம் எனப்படும்.

மேலும் இவற்றுள் முதற்பத்தும் விஞ்ஞானகலருட் பரமசிவனது அநுக்கிரகத்தைப்பெற்ற பிரணவர் முதலிய பத்துச்சிவன்களுக்கும் அருளிச்செய்

யப்பட்டமையால் சிவபேதமெனவும், ஏனைய பதினெட்டும் இவ்வாறு பரமசிவன்பாலுபதேசம் பெற்ற அநாதிருத்திரர் முதலிய பதினெட்டு ருத்திரர்களுக்கும் அருளிச்செய்யப்பட்டமையால் உருத்திரபேதம் எனவும் சொல்லப்படும். இச்சிவாகமங்கள் சித்தாந்தம் எனவும், மாந்திரம் எனவும், தந்திரம் எனவும் பெயர்பெறும்.

மேலும் இவை ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் எனத் தனித்தனி நான்கு பாதங்களுடையன வாயிருக்கும்.

இவற்றுள் ஞானபாதத்தில்.— பரமசிவனுடைய சொரூபமும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் ஆன்மாக்களின் சொரூபமும், ஆணவம், காமியம், மாயேயம், வைந்தவம், திரோதானசத்தி எனும் பாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும், சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவமீருய முப்பத்தாறு தத்துவங்களதுற்பத்தியும், இவை ஆன்மாக்கள் போகம்புசித்தற்குக் கருவியாமுறையும், புவனங்கள் புவனேசர் சொருபமும். புவனங்களின் யோசனைப்பிரமாணங்களும், அதமப்பிரளயம் மத்தியமப்பிரளயம் மகாப்பிரளயங்களின் சொரூபமும், அந்தப்பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டியாமுறைமையும், பாசுபதம், மகாவிரதம், காபாலம் முதலிய மதங்களின் சொரூபமும் கூறப்படும்.

யோகபாதத்தில்.—இந்த முப்பத்தாறு தத்துவங்களும், தத்துவேசுரரும், ஆன்மாவும், பரமசிவனும், சத்தியும், சகத்திற்குக் காரணமாகிய மாயை மகாமாயைகளைக்காணும் வல்லமையும், அணிமாதி சித்திகளுண்டாமுறைமையும், இயமம் நியமம் ஆசனம் பிராணுயாமம் பிரத்தியாகாரம் தியானம் தாரணை சமாதிகளாகிய அட்டாங்கவியல்பும், மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினை ஆகிய ஆறுதாரங்களின் முறைமையும் கூறப்படும்.

கிரியாபாதத்தில்.—மந்திரங்களினுத்தாரணம் சந்தியாவந்தனம் பூசை செபம் ஓமங்களும், சமய விசேட நிருவாண ஆசாரியாபிடேகங்களும், பத்தி முத்திகளுக்குபாயமாகிய தீக்கையுங்கூறப்படும்.

சரியாபாதத்தில்.—பிராயச்சித்தவிதியும், பவித்திரவிதியும், சிவலிங்கவிலக்கணமும், உமாமகேசுர முதலிய வியத்தாவ்வியத்த விலிங்கங்களினிலக்கணமும், நந்திமுதலிய கணநாதரிலக்கணமும், செபமாலை யோகபட்டம் தண்டம் கமண்டலம் முதலியவற்றினிலக்கணமும், அந்தியேட்டிவிதியும், சிராத்தவிதியுங் கூறப்படும்.

மேலும் சிவபெருமானுக்குத் திருவடிகளெனப்படும் காமியத்திற்கு மூன்றும், கணைக்கால்களாகும் யோகஜத்துக்கு ஐந்தும், திருவடிவிரல்களாகும் சிந்தியத்துக்கு ஆறும், கெண்டைக்கால்களாகும் காரணத்துக்கு

எழும், முழந்தாள்களாகும் அசிதத்துக்கு நான்கும், தொடைகளாகும் தீப்தத்துக்கு ஒன்பதும், குய்யத்தானமாகும் சூக்குமத்துக்கு ஒன்றும், கடித்தானமாகும் சகச்சிரத்துக்குப் பத்தும், முதுகாகும் அஞ்சுமானுக்குப் பன்னிரண்டும், கொப்பூழாகும் சுப்பிரபேதத்துக்கு ஒன்றும், உதரமாகும் விசயத்துக்கு எட்டும், நாசியாகும் நிச்சுவாசத்துக்கு எட்டும், முலைகளாகும் சுவாயம்புவத்துக்கு மூன்றும், கண்களாகும் ஆக்கினேயத்துக்கு ஒன்றும், கழுத்தாகும் வீரத்துக்குப் பதின்மூன்றும், செவிகளாகும் இரௌரவத்துக்கு ஆறும், திருமுடியாகும் மகுடத்துக்கு இரண்டும், கைகளாகும் விமலத்துக்குப் பதினாறும், மார்பாகும் சந்திரஞானத்துக்குப் பதினான்கும், திருமுகமாகும் முகவிம்பத்துக்குப் பதினைந்தும், திருநாவாகும் புரோற்கீதத்துக்குப் பதினாறும், கபோலங்களாகும் இலளிதத்துக்கு மூன்றும், திருநெற்றியாகிய சித்தத்துக்கு நான்கும், குண்டலமாகிய சந்தானத்துக்கு எழும், உபவீதமாகும் சருவோத்தத்துக்கு ஐந்தும் ஆரமாகிய பாரமேசுரத்துக்கு எழும், இரத்தினாபரணங்களாகும் கிரணத்துக்கு ஒன்பதும், திருப்பரிவட்டமாகிய வாதுளத்துக்குப் பன்னிரண்டும் ஆக உபாகமங்கள் இருநூற்றேழு கூறப்படும். மேலே காட்டியவாறு சிவாகமங்கள் பரமசிவனுக்கு அங்க உபாங்கங்களாக அமைய, உபாகமங்களுள் காலோத்தரம் திருமேற்பூச்சாக. மற்றையவெல்லாம் பரிமளத்திரவியங்களும் புஷ்பமுமாகச், சைவசித்தாந்தம் நைவேத்தியமுமாகப் பொருந்திய முறையில் "ஆகமங்களரனடிக்கீழ் அடங்கு" மாறும் காண்க.

மேலும் ஆகமங்களின் சார்புநூல்களாக, தத்துவப்பிரகாசிகை, தத்துவசங்கிரகம், தத்துவத்திரய நிர்ணயம், போககாரிகை, மோக்ககாரிகை, நாதகாரிகை, பரமோக்ககாரிகை, இரத்தினத்திரயம் என்னும் எட்டும் கூறப்படும்.

2. அளப்பரிதாமப்பொருளை யரனருளாலணுக்கள் தருவர்கள்:—வேதாகமங்களின் உண்மைப்பொருள்களை உணரும் ஆற்றலில்லாதார், அப்பொருள்களைத் தத்தம் அறிவிற்கெட்டியவாறு விபரீதமாகக்கருதிக்கொண்டு, உலோகாயதம், பிடகம், ஆருகதம், தருக்கம், மீமாஞ்சை, சாங்கியம், பாஞ்சராத்திரம், பாதஞ்சலம் முதலிய நூல்களைச்செய்தனர். இந்நூல்கள் அபக்குவரான உயிர்கள் தத்தம் கன்மத்துக்கேற்ப உணர்ந்து சோபானமுறையிலே உண்மைப்பொருளை உணர்தற்பொருட்டுச் செய்யப்பட்டனவாதலால், அவர் அங்ஙனம் செய்ததும் முதல்வனது அருளாலேயாம் என்பது. இந்நூல்கள் பூருவபக்கநூல்கள் எனப்படும்.

3. மிருதி புராணங் கலைகள் மற்றுமெல்லா மெய்ந்நூலின்வழி:—வேதாகமங்களின் உண்மைப்பொருளை உணர்ந்தபெரியோர், அப்பொருளை உலகத்தவர் தெளிவாகவிளங்கும்பொருட்டு வேறெடுத்து இனிது விளக்கிச் செய்த நூல்கள் மிருதி, புராணம், கலைகளும், உபாகமங்கள் முதலியனவுமாம்.

இவை வேதாகமங்களின்வழியே செய்யப்பட்டமையால் வழிநூல் எனப்படும்.

மிருதி-தருமசாத்திரம். (செ. 263. கு. 2. பார்).

புராணம். (செ. 263. கு. 7. பார்).

கலைகள்- (செ. 263. கு. 5. பார்).

உபாகமங்கள் இருநூற்றேழு. (மேல்குறிப்பு. 1. பார்).

4. அங்கம் - ஆகமாங்கம். அவை காருடம், தக்கிணம், வாமம், பூதம் என நான்காம். இவைநான்கும் தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம் என்னும் கீழுள்ள நான்கு முகங்களாற் பரமசிவன் அனுக்கிரகஞ்செய்யப்பெற்று அந்தப்பெயர்கொண்ட விஞ்ஞானகலர் நால்வராற் செய்யப்பட்டன. இவற்றுள், காருடதந்திரத்தில் தற்புருடமே பிரமரூபமாகத்தியானஞ் செய்து பூசிக்கற்பாற்று எனக் கூறப்படும். இந்த நூலில் எவ்வகைப் பட்ட பிணியுங் கண் கூடாகத்தீர்க்கும் மந்திரங்களும் மருந்துகளுங் கூறப்படும். தக்கிணதந்திரத்தில், அகோரமே பிரமரூபமாகத்தியானஞ்செய்து பூசிக்கற்பாற்று என்றும், யோகத்தை அனுட்டித்துப் பரமசிவனைக்காண வேண்டும் என்றுங் கூறப்படும். பகைவரை வெல்லுதற்கு மந்திரங்களும் இதனுட் கூறப்படும். வாமதந்திரத்தில், வாமதேவமே பிரமரூபமாகத்தியானித்துப் பூசிக்கற்பாற்று என்று கூறப்படும். இதனுள் இரசவாதம் முதலியனவுங் கூறப்படும். பூததந்திரத்தில், சத்தியோசாதமே பிரமரூபமாகத்தியானித்துப் பூசிக்கற்பாற்று என்று கூறப்படும். பூதப்பிரேதபிசாசுகளை ஓட்டும் மந்திரங்களும் மருந்துகளும் இதனுட் கூறப்படும்.

5. வேதாங்கம் - சந்தசு, கற்பசூத்திரம், சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், சோதிடம் என்னும் ஆறுமாம். இவைவேதத்தை யறிந்தோதற்கு இன்றியமையாதனவாதலின் இவ்வாறு கூறப்பட்டன.

சந்தசு - ஆரிய யாப்பிலக்கணம் கூறும் நூல். கற்பசூத்திரம்-யாகம் முதலியன செய்யுங் கிரமங் கூறும் நூல். சிக்ஷை (சிட்சை) - வேதோச்சாரணத்திற்கு வன்னத்திற் றோன்றுஞ் சுரத்தையும் மாத்திரா பேதத்தையும் விளங்கச்சொல்லும் நூல். வியாகரணம் - இலக்கணநூல். நிருத்தம் - வேதத்தில் வருஞ் சொற்களிலுள்ள தோன்றல்முதலிய விகாரங்களையும் பகுதி விகுதி முதலியவைகளையுங் காட்டிப் பொருள்கூறிப் பதமுடிபுகளை விளக்கும் நூல். சோதிடம் - லௌகிக வைதிக கன்மங்களுக்கு உபயோகமாகிய துடி இலவம் முதலிய காலவிசேடங்களை இதற்கிது வென்றறுதியிட்டு விதிக்கும் நூல்.

சுருதி - நூல், பிரமாணமாக யாண்டும் எஞ்ஞான்றும் கைக்கொள்ளத்தக்க நூல் என்பது. இது காண்டல் கருதல் உரைஎன்னும் பிரமாணங்களுள் உரை எனப்பட்டதாம். (செ. 19. பார்).

பொழிப்பு. வேதாகமங்கள் முதனூலாகும். மிருதி, புராணம், உபாகமம் முதலியன வழிநூலாகும். ஆகமாங்கங்கள், வேதாங்கங்கள் சார்புநூலாகும். ஏனைய நூல்கள் பூருவபக்கநூல்களாகும்.

(*d*) சிவாகமம் வேதாந்தசித்தாந்தமாகும்.

267. வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.

(இ-ள்.) வேதநூல் சைவநூல் என்று நூல்கள் இரண்டே - வேதம் சிவாகமம் என்று நூல்கள் இரண்டேயாம்,—வேறு உரைக்கும் நூல் இவற்றின் விரிந்தநூல்கள் - வேறு உண்டெனக்கூறப்படும் நூல்கள் இவை இரண்டினின்றும் விரிந்த நூல்களாம்,—அநாதி அமலன் தருநூல் இரண்டும் ஆதி நூல் - அநாதிமுத்த சிவனுலே தரப்பட்ட வேதாகமங்கள் இரண்டும் முதனூல்களாம். அவ்வாருயினும்,—ஆரணநூல் பொது சைவம் அரும் சிறப்பு நூலாம் - வேதம் பொதுநூலாகும் ஆகமம் அரியசிறப்புநூலாகும்,—நீதியினுல் உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நிகழ்த்தியது - இவை முறையே உலகத்தவர்க்கும் சத்திநிபாதமுடையோருக்குமாகச் செய்யப்பட்டன,—நீள் மறையின் ஒழிபொருள் - விரிந்தவேதத்திற் கூருதொழிந்தபொருளேயும்,—வேதாந்தத்தீது இல் பொருள் - வேதமுடிபாகிய உபநிடதத்தின் சாரமாயுள்ள குற்றமற்ற பொருள்களேயும்,—கொண்டு - வேறெடுத்துக்கொண்டு,—உரைக்கும் நூல் சைவம் - இனிது விளக்கும் நூல் சிவாகமமம் ஆதலால்,—பிறநூல் திகழ்பூர்வம் - இவ்வாகமத்துக்கு மாருக வேத வேதாந்தப்பொருளேச் சொல்லும் ஏனையநூல்களெல்லாம் விளங்குகின்ற பூருவபக்கநூல்களும்,—சிவாகமங்கள் சித்தாத்தாந்தம் ஆகும் - சிவாகமங்கள் சித்தாந்தநூல்களுமாம்.

குறிப்பு. 1. வேதநூல்சைவநூலென்றிரண்டேநூல்கள்:—வேதம் சிவாகமம் இரண்டுமே சமயநூலாம். ஏனையநூல்களெல்லாம் இவற்றின் வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூல் எனப்பட்டு இவற்றுள் அடங்குதலின், அவ்வாறு கூறப்பட்டது.

2. ஆரணநூல்பொது சைவமருஞ்சிறப்பு:—வேதம், பொருள்பலபடத் தோன்றுஞ் சூத்திரமும், ஆகமம் அதனே அவ்வாருக வொட்டாது தெளித்துரைக்கும் பாடியமும்போல என்பது. வேதம் சூரியன் முதலாக ஈசுவ

ரன் ஈருகவுள்ள தேவர்களை யெல்லாம் ஆராதிக்கச் சொல்லுகையால் பொது. சிவாகமம் சிவனொருவனையே ஆராதிக்கச் சொல்லுகையாற் சிறப்பு (சிவாக்). "வேதமோடாகம மெய்யாமிறைவனூல், ஓதும்பொதுவுஞ்சிறப்பு மென்றுன்னுக, நாதனுரையிவை நாடிலிரண்டந்தம், பேதமதென்னிற் பெரியோர்க்கபேதமே." (திருமந்.)

3. உலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கும்:—உலகர் - தேகாதிப்பிரபஞ்சப் பற்றுடையோர், போககாமிகள். சத்திநிபாதர் - முத்திகாமிகள், திருவருள் பதியப்பெற்றவர். வைநாயிகர் எனினும் ஒக்கும். "மார்க்கர் கண்டநாலோதி வீடுகாதலிப்பவர்" (செ. 4. பார்.)

4. நீண்மறையினொழிபொருள்:—வேதத்திற்கூறும் கருமகாண்டப் பொருட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு எஞ்சிநின்றனவாய பொருள்கள். (உ-ம்) வேதம் தேவாராதனையைச் சொல்லிக் கருஷணம்முதற் பிரதிட்டை யீருகவுள்ள தந்திரங்களையும், உற்சவம்முதற் தீர்த்தம் ஈருகவுள்ள தந்திரங்களையும் சொல்லாதொழியும். இவற்றை ஆகமங்கள் விரிவாகக் கூறும்.

5. வேதாந்தத் தீதில்பொருள் - வேதசிரசென்னப்படும் உபநிடதங்களின் சாரமாகிய மெய்ம்மையான பொருள். "சித்தாந்தத்துக்கு விரோதியாத வேதாந்தப் பொருள்" என்பர் ஞானப்பிரகாசர்.

பொழிப்பு. வேதம் சிவாகமம் என நூல்கள் இரண்டாம். ஏனைய நூல்களெல்லாம் இவைஇரண்டினின்றும் விரிந்த நூல்களாம். வேதாகமங்கள் முதனூலாயினும், வேதம் பொதுநூலும் சிவாகமம் சிறப்புநூலுமாம். வேதம் உலகருக்கும் சிவாகமம் சத்திநிபாதர்க்குமாக அருளப்பட்டன. சிவாகமம் வேதத்திற்கூறுதொழிந்த பொருளையும் உபநிடதத்துண்மைப்பொருளையும் இனிது விளக்குதலின் சித்தாந்தமாகும். இவ்வாகமங்களுக்கு மாறுபட வேதவேதாந்தப் பொருளைச் சொல்லும் ஏனைய நூல்களெல்லாம் பூருவபக்க நூல்களாம்.

(e) சித்தாந்தநெறியே திருவடிப்பேறளிப்பது.

268. சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
செனநமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி.

(இ-ள்.) சித்தாந்தத்தே - மேற்கூறிய சிவாகமங்களிலே,—சிவன் தன் திருக்கடைக்கண் சேர்த்து - சிவபெருமான் குருவடிவாய் எழுந்தருளிப் பக்குவ ஆன்மாக்களுக்குத் தனது திருநோக்கமாகிய தீக்ஷைசெய்து,—இச் செநநம் ஒன்றிலே சீவன்முத்தராக வைத்து - இப்பிறப்பிற்றானே சீவன் முத்தராகச் செய்து,—ஆண்டு - தடுத்தாட்கொண்டு,—மலம் கழுவி - மும் மல அழுக்கை நீக்கி,—ஞானவாரிமடுத்து - ஞானசாகரத்திலே மூழ்கு வித்து,—ஆனந்தம் பொழிந்து - சிவானந்தம் மேலிடச்செய்து,—வரும் பிறப்பை அறுத்து - மேல்வரும் பிறவியை ஒழித்து,—முத்தாந்தப் பாதம லர்க்கீழ்வைப்பன் என்று மொழிந்திடவும் - முத்திமுடிபாகிய திருவடிம லர்க்கீழ் வைப்பன் என்று சொல்லியிருக்கவும்,—உலகர் எல்லாம் மூர்க்கர் ஆகி - உலகத்தாரனைவரும் இதனை அறியமாட்டாத அறிவிலிகளாய்,—பித்தாந்தப்பெரும் பிதற்றுப்பிதற்றி - பித்தமுடிபாகிய பெரிய மயக்கவார்த் தைகளைப் பேசி,—பாவப்பெருங்குழியில்வீழ்ந்திடுவர் - பிறப்பாகிய பெரிய குழியில் வீழ்வர்,—இது என்ன பிராந்தி - இது என்ன மயக்கம்.

குறிப்பு. 1. திருக்கடைக்கண் சேர்த்து ... ... பாதமலர்க்கீழ் வைப் பன்:—ஞாசாரியரது திருநோக்கத்தாற் கன்மமலமும், பாவனையால் மாயாமலமும், பரிசத்தால் ஆணவமலமும் நீங்கும். இங்ஙனம் மலங்கள் நீங்கவே, ஆன்மா திருவருளில் மூழ்கி அவ்வருளேதானாகிப் பேரானந்தத் தைப் பெற்றுத் தேகநீக்கத்தில் சிவத்தோடு இரண்டறக் கலந்து திரு வடியாகிய பரமுத்தியை அடையும். முத்தியந்தம் முத்தாந்தம் என மரீஇ யிற்று. பித்தாந்தம் - பித்தமுடிபு, பெரும்பித்து.

2. சீவன்முத்தர் - தனுவாதிகளோடு கூடியுங் கூடாமல் நின்று நேயத் தழுந்தினோர். (ஒழிவி. 335.)

3. பாவப்பெருங்குழி - பிறவியாகியபேரிடர்க்குழி. உற்பவமென்றது தலைக்குறைந்து பவமென நின்று நீட்டல்விகாரம்பெற்றுப் பாவமென்றாயது. பித்தாற்பிதற்றுவதலாய பாவத்துக்கான பெருங்கொடுநரகில் எனக் கொள் வர் சிவஞானமுனிவர்.

4. பிராந்தி - சுழற்சி, மயக்கம்; சித்தாந்தத்திறனையறியாத உலகர் யாவரையு நோக்கி யிவ்வாறு கூறியிருப்பவும், சைவசித்தாந்த நெறியிற் பிறந் தும், பிறபுன்னெறிகளில்மயங்கிச் சென்றுழல்வோர் பிராந்தியை யாதென் கவோ! அவரைநோக்கியே "புற்றில் வாழரவு மஞ்சேன் பொய்யர் தம் மெய்யுமஞ்சேன், கற்றைவார் சடை யெம்மண்ணல் கண்ணுதற் பாத நண்ணி, மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைத்தெம் பெம்மாற், கற்றிலாதவரைக் கண்டா லம்மநா மஞ்சுமாறே" எனத் திருவாசகத்தும் அமைந்ததாம் எனவுணர்ந்து, அன்னோர் தமக்குள்ளதைத் தெளிந்தறிந்தநு பவியாது பிறர் பொருளை வெஃகிப் பெறவிரும்பிய கயவரெனவஞ்சி விலக் கப்படுவர் என்பதுங்காண்க.

பொழிப்பு. முதல்வன் பக்குவ ஆன்மாக்களுக்கு ஒரு பிறவியிற்றானே திருநோக்கம் முதலிய தீக்கைசெய்து மும்மலங்களை நீக்கி அருள்வடிவாக்கிப் பேரானந்தம் அனுபவிக்கச் செய்து சீவன்முத்தராக வாழ்வித்துத் தேகநீக்கத்திலே பரமுத்தியாகிய திருவடிக்கீழ் வைப்பன் என்று சித்தாந்தநூல் சொல்லியிருக்கவும், உலகத்தார் இதனை அறியாது பிதற்றுவது என்ன மயக்கம்!!

(f) சிவனே மலமகற்றிமுத்தியளிப்பவன்.

269. இறைவனு வான்ஞான மெல்லா மெல்லா
முதன்மையனுக் கிரகமெல்லா மியல்புடையா னியம்பு
மறைகளா கமங்களினு னறிவெல்லாந் தோற்று
மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும்
முறைமையினு லின்பத்துன் பங்கொடுத்த லாலே
முதன்மையெலா மறிந்துமுயங் கிரண்டு போகத்
திறமதனுல் வினைய றுக்குஞ் செய்தி யாலே
சேருமனுக் கிரகமெலாங் காணுதுநாஞ் சிவற்கே.

(இ-ள்.) இறைவன் ஆவான் - முழுமுதற்கடவுள் எனப்படுபவன்,—எல்லாஞானம், எல்லாமுதன்மை, எல்லாஅநுக்கிரகம் - முற்றறிவு, முடிவிலாற்றல், பேரருள் என்னும் இலக்கணங்களை,—இயல்பு உடையான் - இயல்பாகவே உடையனுதல் வேண்டும்,—சிவற்கே - சிவனுக்கே,—இயம்பு மறைகள் ஆகமங்களினுல் - அவனுலருளிய வேதசிவாகமப் பெருமையினுல்,—எல்லா அறிவும் தோற்றும் - முற்றறிவுகாணப்படும்,—மரபின்வழி வருவோர்க்கும் வாராதோர்க்கும் - அவ்வேதாகமங்களின் வழியே ஒழுகுவோர்க்கும் ஒழுகாதோர்க்கும்,—முறைமையினுல் இன்பம் துன்பம் கொடுத்தலாலே - அவ்வவர் ஒழுக்கமுறைப்படி இன்பத்தையும் துன்பத்தையும் கொடுத்தல் பற்றி,—எல்லாமுதன்மை நாம் அறிந்தும் - முடிவிலாற்றலுடைமை நாம் அறியக்கிடந்தது,—முயங்குஇரண்டுபோகத்திறமதனுல்வினையறுக்குஞ் செய்தியாலே - அவ்வாறுபொருந்திய இன்பத்துன்பங்களாகிய இருவகை அநுபவங்களால் அவற்றிற்குக்காரணமாகிய இருவினைப்பந்தத்தை நீக்கும் ஏதுவினுல்,—சேரும் எல்லாஅநுக்கிரகமும் நாம் காணுதும் - நிறைந்த பேரருளுடைமையும் நாம் காணக்கிடந்தது. ஆகையால் சிவனே முழுமுதல்வனெனப்பட்டு முத்தியளிப்பவனுமாம்.

குறிப்பு. 1. எல்லாம், என்றது செய்யுணடைபற்றி முன்பின்முறை மாறியும் வைக்கப்பட்டுள்ளது.

2. இயல்புடையான்:—இயல்பாகவே பொருந்தியவன். எனவே மேற் கூறிய குணங்கள் பதியின் தடத்த இலக்கணமாம் என்க. (சூ. 1. அதி. 2.)

3. "இறைவனுவான்......இயல்புடையான்; சிவற்கே......அறிவெல்லாம் தோற்றும்......முதன்மையெல்லாம் நாம் அறிந்தும்......அநுக்கிரகமெல்லாம் நாம் காணுதும்" எனவே, சிவனே இறைவனுதல் துணிபு என்பது.

பொழிப்பு. பரமசிவன் அருளிய வேதாகமங்களின் பெருமையால் அவன் முற்றறிவுடையன் என்பதும், அவ்வேதாகமங்களின் வழி ஒழுகுவோர்க்கும் ஒழுகாதோர்க்கும் முறைமைப்படி இன்பத்தையும் துன்பத்தையும் கொடுத்தலினுல் முடிவிலாற்றலுடையன் என்பதும், அவ்வின்பத்துன்பங்களை நுகரச்செய்து வினையை ஒழித்தலாற் பேரருளுடையன் என்பதும் பெறப்படுதலின், அவனே முழுமுதற்கடவுளாய் முத்தியளிப்பவனும்.

## 2. சைவசாதனைகளே முத்திபயப்பன. (270-275.)

### (a) சைவசாதனைகளின் வகையும் பயனும்.

270. சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந்
தாதமார்க் கம்மென்றுஞ் சங்கரனை யடையும்
நன்மார்க்க நாலவைதா ஞான யோக
நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்
சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய
சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தா லெய்து முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பர்.

(இ-ள்.) சங்கரனை அடையும் நன்மார்க்கம் - சிவபெருமானது திருவடிகளைச் சேர்தற்குரிய நல்லநெறிகள்,—சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம் தாதமார்க்கம் என்றும் நாலு - சன்மார்க்கம் என்றும் சகமார்க்கம் என்றும் சற்புத்திரமார்க்கம் என்றும் தாசமார்க்கம் என்றும் நான்கு வகைப்படும்,—அவைதாம் ஞான யோக நற்கிரியா சரியை என நவிற்றுவதும் செய்வர் - அவற்றையே ஞானபாதம் யோகபாதம் நல்ல கிரியாபாதம் சரியா பாதம் என்றுஞ் சொல்லுவர்,—சன்மார்க்கமுத்திகள் - தாதமார்க்கம்முதலிய நன்னெறிகட்குரிய முத்திகள்,—சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியம் என்று சதுர்விதமாம் - முறையே சிவசாலோக சாமீப சாரூப சாயுச்சியம் என நான்கு வகைப்படும்,—முன்மார்க்கஞானத்தால் எய்தும் முத்தி - இவற்றுள் முதன்மையான ஞானபாதத்தால் அடையும் சிவசாயுச்சிய முத்தியை.—முடிவுஎன்பர் - பரமுத்திஎனக் கூறுவர்,—மூன்றினுக்கும் முத்திபதம் என்பர் - ஏனைய மூன்றினுக்குமுரிய முத்தியை அபரமுத்தி என்று கூறுவர்.

குறிப்பு. 1. சன்மார்க்கம் சகமார்க்கம்......சங்கரனையடையும் நன்மார்க்கம் நாலு:—பரமுத்தியடைதற்குரிய நேர்வழி ஞானமார்க்கமாதலால்

அது சன்மார்க்கமெனப்பட்டது. சத்தியநெறியென்பதற்குப் பரியாயமாகச் சொன்னது சன்மார்க்கமென்பர் சிவாக்கிரயோகியர். சத் - நல்ல, உசித, நிச்சயமான; மார்க்கம் - நெறி, சங்கரனை அடையுநன்மார்க்கமென்றமையானும். மேல் சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாதமார்க்கம் என அடைந்து நிற்குமுரிமை பற்றிக் கூறினமையானும், சன்மார்க்கமென்பதற்குப், பிரிப்பற்றுடனுய அத்துவிதநிலையிற் தலைவிதலைவனையடையுமாறு போன்று ஆன்மாபதியை அடையும் மார்க்கம் என்றல் சிறப்பாம். என்னை? ஞானமார்க்கத்தின் பயனாகிய ஒன்றற்று இரண்டற்று ஒன்றிரண்டுமற்று நிற்கும் சுத்தாத்துவிதப்பேரின்பமுதீதி யநுபவம், தலைவன் தலைவியரியல்பை ஒத்திருத்தலினுலென்க. (செ. 253. கு. 4. பார்.) மேல் 274-ம் செய்யுளில் "பின்மார்க்கச்சிவனுடனும்பெற்றி" எனக்கூறியதும் நோக்குக. சம்-உடனுய, பிரிவற்ற: மார்க்கம் - நெறி, (நல்ல - சித். மொழி. பக் - 234.) அவ்வாறே யோகத்தின் பயனுகிய சாரூபம் தோழன் தோழனையடைந்து நிற்குமுரிமைபற்றிய இயல்பினையும், கிரியையின் பயனுகிய சாமீபம் மைந்தர் பெற்றோரை அடைந்து நிற்குமுரிமை பற்றிய இயல்பினையும், சரியையின் பயனுகிய சாலோகம் பணியாளர் பணிகொள்முதல்வரை அடைந்து நிற்குமுரிமைபற்றிய இயல்பினையும் ஒத்திருத்தலின் அவைமூன்றும் சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாதமார்க்கம் எனப்பட்டன. "சாலோகம் முதலிய மூன்றும் உரிமைவிசேடம்பற்றி முறையே தொண்டர் முதலியோரியல்பை ஒத்தலின் இவற்றை அடைதற்கு நெறியாகிய சரியை முதலிய மூன்றும் தாதமார்க்கம் புத்திரமார்க்கம் சகமார்க்கமெனப் பெயர்பெற்றன" என்றும் "சரியையின் ஞானமுதல் யோகத்தின் ஞானமீறுய ஞானவிசேடங்கட்குப் பயனெனப்படும் சாயுச்சியம் ஒத்த வடிவினராய் வாழ்தன் மாத்திரையே யன்றி அவ்வப்புவன பதிகளான் அதிட்டிக்கப்பட்டு அவ்வவ்வதிகாரங்களை அவ்வவர்போலவே செய்துகொண்டு வாழ்வதென்றுணர்க" என்பர் மாபாடியகாரர் (சி. ஞா - பா. 361. பக்.). முடிவாகிய ஞானத்தின் ஞானமாகிய நிட்டையின்பயன் திருவடிப்பேறுரும் வீட்டின்பமே என்பது (செ. 275 - 290. பார்.) இம்முறையில் நான்கு மார்க்கங்களினதிலக்கணங்களையுந் தமிழுலகிலொழுகிக் காட்டியுள்ளார் சிவஞானச்செல்வர்களாகிய மாணிக்கர், சுந்தரர், சம்பந்தர், அப்பர் என்னுஞ் சமயகுரவப் பெருந்தகையாளர் என்ப. இதன்விரிவு நால்வர் நான்மணிமாலையிற்காண்க. சகமார்க்கம் - தோழநெறி, சக - கூட; தாதமார்க்கம் - தாசநெறி, தாத - அடிமை, இம்மார்க்கங்கள் நான்கும் ஒன்றுக்கொன்று சாதனமாய்ச் சோபானமாயிருத்தலின் சங்கரனையடையுநன்மார்க்கம் என்ருர் "விரும்புஞ்சரியை முதன் மெஞ்ஞானநான்கும், அரும்புமலர் காய் கனிபோலன்றே" என்ருர் தாயுமானவரும்.

2. ஞானயோக நற்கிரியாசரியை:—சரியை எனப்படும் தாதமார்க்கம் புறத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய உருவத்திருமேனியை

நோக்கிச் செய்யும் வழிபாடாம். கிரியை எனப்படும் சற்புத்திரமார்க்கம் புறத்தொழில் அகத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய அருவுருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாம். யோகம் எனப்படும் சகமார்க்கம் அகத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடாம். ஞானம் எனப்படும் சன்மார்க்கம் புறத்தொழில் அகத்தொழில் இரண்டுமின்றி அறிவுத்தொழில் மாத்திரையானே உருவம் அருவுருவம் அருவம் என்னும் முத்திறத்திருமேனிகடந்த அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப்பிழம்பாய் நிறைந்துநின்ற சிவபெருமானிடத்துச் செய்யும் வழிபாடாம்.

சரியைமுதலியன உபாயச்சரியை உபாயக்கிரியை உபாயயோகம் உபாயஞானம் எனவும், உண்மைச்சரியை உண்மைக்கிரியை உண்மையோகம் உண்மைஞானம் எனவும் இருவகைப்படும். புகழ்முதலிய உலகப்பயனை நோக்கிச் செய்யும் சிவபுண்ணியங்கள் உபாயச்சரியை முதலியனவாம். பத்திகாரணமாகச்செய்யுஞ் சிவபுண்ணியங்கள் உண்மைச்சரியை முதலியனவாம். உபாயச்சரியை உண்மைச்சரியை இரண்டும் சரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், கிரியையிற்சரியை கிரியை யோகம் ஞானம் யோகத்திற் சரியை கிரியை யோகம் ஞானம், ஞானத்திற்சரியை கிரியை யோகம் ஞானம் என ஒரோவொன்று நந்நான்காய் முப்பத்திரண்டு வகைப்படும்.

சரியையிற்கிரியைமுதலியன:—திருக்கோயில் அலகிடல் மெழுகல்முதலியன சரியையிற்சரியை. உமாமகேசுவரர் இடபாரூடர் கல்யாணசுந்தரர் முதலிய இருபத்தைந்து மூர்த்திகளில் ஒருவரையாதல், விநாயகக்கடவுள் முதலிய ஆவரண மூர்த்திகளில் ஒருவரையாதல் பூசித்தல் சரியையிற் கிரியை. ஆவரணம் - பரிவாரம். நெஞ்சின்கண் உருத்திரக்கடவுளைத் தியானஞ்செய்தல் சரியையில் யோகம். இந்தத் தியானபாவனையினுறைப்பால் நிகழும் அனுபவ அறிவு சரியையில் ஞானம்.

கிரியையிற்சரியைமுதலியன:—சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களெல்லாஞ் செய்து கோடல் கிரியையிற்சரியை. உபகரணம் - துணைக்கருவி. சிவாகமங்களிற் கூறியவாறே பூதசுத்தி, மந்திரசுத்தி, திரவியசுத்தி, ஆன்மசுத்தி, இலிங்கசுத்தி என்னும் ஐவகைச்சுத்தி முன்னாகச் சிவலிங்க வடிவிற்செய்யும் பூசனை கிரியையிற் கிரியை. அகத்தே பூசை ஓமம் தியானம் என்னும் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தரியாகம் கிரியையில் யோகம். மூவிடம் - இதயம், உந்தி, புருவநடு இந்த அந்தரியாக உறைப்பின்கண் நிகழும் அனுபவ உணர்வு கிரியையில் ஞானம்.

யோகத்திற்சரியைமுதலியன:—இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் என்னும் நான்கும் யோகத்திற்சரியை. பிரத்தியாகாரமும், தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில்யோகம். சமாதி யோகத்தில் ஞானம். இந்தயோகம் சகளம் சகளநிட்களங்களைப் பற்றி

நின்று செய்யுஞ் சாலம்ப யோகமும், நிட்களத்தைப்பற்றி நின்றுசெய்யும் நிராலம்பயோகமும் என இருவகைப்படும். சாலம்பம் - ஆதாரமுடையது ஆலம்பம் - ஆதாரம்.

ஞானத்திற்சரியை முதலியன:—கேட்டல் முதலிய நான்கனுள், கேட்டல் ஞானத்திற்சரியை. சிந்தித்தல் ஞானத்திற்கிரியை. தெளிதல் ஞானத்தில்யோகம். நிட்டைகூடல் ஞானத்தில் ஞானம் (சி. போ. பா. 170.) சிவனடியாரையும் சிவலிங்கப்பெருமானையும் மெய்யன்போடு வழிபடுதல் ஞானத்திற் சரியை என்றும். பூதசுத்திமுதலிய ஐந்து சுத்தியுஞ் செய்து வழிபடுதல் ஞானத்திற்கிரியை என்றும். யான் எனது என்னுஞ் செருக்கற்று அருளோடு கூடி அவ்வருளேயாய் நிற்றல் ஞானத்தில்யோகம் என்றும், சிவத்தோடு அத்துவிதமாய் நிற்கும் நிலை ஞானத்தில் ஞானம் என்றும் சொல்லவும்படும். பூதசுத்தியாவது பிருதிவியாதிதத்துவங்களைச் சடமெனக்காண்டல். திருவருளாலன்றி இங்ஙனம் ஆன்மா அறியாதெனக் காண்டல் ஆன்மசுத்தி. கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றன எல்லாம் திருவருள் எனக்காண்டல் திரவியசுத்தி. பஞ்சாக்கரத்தைச் சிவமுன்னாகக் கணித்தல் மந்திரசுத்தி. எங்கும்வியாபித்து நிற்குஞ் சிவபெருமான் இவ்விலிங்கத்திலும உளர் எனக் காண்டல் இலிங்கசுத்தி (கந்தபுரா. நவசி. 116.)

ரு. சன்மார்க்கமுத்திகள்:—உபாயச்சரியையிற் சரியைமுதல் உபாய ஞானத்தின் ஞானமீறாகிய பதினாறுவகைச் சிவபுண்ணியங்களுக்கும் பயன் அவ்வவற்றிற்கேற்பக் காலாக்கினிருத்திரர் முதல் குணதத்துவமத்தகத்திற் சிகண்ட புவனத்தின்கீழுள்ள உருத்திரரீறான அவ்வப்புவன பதிகளுலகத்திற் சாலோகம் முதலியவற்றைப் பெறுதலாம். உண்மைச்சரியையிற் சரியைமுதல் உண்மையோகத்தின் ஞானமீறாகிய பன்னிருவகைச் சிவபுண்ணியங்களுக்கும் பயன், அவ்வவற்றிற்கேற்பச் சிகண்டபுவனம்முதற் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவன பதிகளுடைய சிவலோகத்துச் சாலோகம் முதலிய பதமுத்திகளைப் பெறுதலாம் (சி. போ. பாடி. 171). உண்மைஞானத்திற் சரியைமுதலிய மூவகைச் சிவபுண்ணியங்களுக்கும் பயன், அவ்வவற்றிற்கேற்பச் சிகண்டபுவனம் முதற் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவன பதிகளாய் இருத்தலாம் (செ. 276. கு. 2. பார்). ஞானத்தின் ஞானத்திற்குப் பரமுத்தியே பயன். இங்கு சன்மார்க்கம் என்றது, சிவசரியை, சிவகிரியை, சிவயோகம், சிவஞானம் ஆகிய நன்னெறிகளையாம் எனவே பிறபுவனதேவர்களை நோக்கிச் சாதிக்கும் சரியை முதலியன அவ்வப்புவனத்துச்சாலோகாதிபதங்களையே தருமென்பதும், அவ்வாறு பெறும் புவனதேவர் சாயுச்சியமும் பரமுத்தியாகாது பிறவிக்கிடமாயிருக்கும் என்பதும் உய்த்துணர்க.

பொழிப்பு:—சிவனடியைச் சேர்தற்குரிய நெறிகள் தாதமார்க்கம் முதலாக நான்கு வகைப்படும். அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்றுஞ் சொல்லப்படும். இவற்றின் பயன் முறையே சாலோக சாமீப சாரூப

சாயுச்சிய முத்திகளாம். முன்னைய மூன்றும் பதமுத்திகள் பின்னையது பர முத்தியாம்.

(b) சரியாசாதனையின் இயல்பும் பயனும்.

**271.** தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்த்திரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு
மியற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர்.

(இ-ள்.) தாதமார்க்கம் சாற்றில் - மேற்கூறிய நான்கனுள்ளே தாத மார்க்கமாகிய சிவசரியையைச் சொல்லுமிடத்து,—சங்கரன் தன் கோயில் தலம்அலகுஇட்டு - சிவபெருமானுடைய திருக்கோயிலிலே திருவலகிட்டு,—இலகுதிருமெழுக்குஞ்சாத்தி - விளங்குகின்ற திருமெழுக்கும் இட்டு,—போதுகளும் கொய்து - பூக்களும் எடுத்து;—பூந்தார்மாலை கண்ணிபலபுனிதற்குச் சமைத்து - மலரினாற் தார்மாலை கண்ணிமுதலிய தொடையல்கள் பலவற்றையும் சிவபெருமானுக்குச்சாத்துமாறு அமைத்து;—புகழ்ந்துபாடி - அவருடைய கீர்த்தியினை வாயாரவாழ்த்தி,—தீது இல்திருவிளக்கு இட்டு - குற்றமற்ற பிரகாசம்பொருந்திய விளக்குகளையும் ஏற்றி,—திருநந்தவனமும் செய்து - அழகிய நந்தவனங்களும்வைத்து,—திருவேடம் கண்டால் - சிவனடியார் திருவேடத்தைக் காணுமிடத்து,—அடியேன் செய்வது யாதுபணியீர் என்று பணிந்து - அடியேன் செய்யத்தக்க குற்றேவல் யாது அதனை அருளவேண்டும் என்று வணங்கி,—அவர்தம்பணியும் இயற்றுவது - அவர் அருளிச்செய்யும் பணிவிடையும் செய்வதாம்,—இச்சரியை செய்வோர் ஈசன் உலகு இருப்பர் - இச்சிவசரியையினை அனுட்டிப்போர் சிவலோகத்திலிருப்பர்.

குறிப்பு. 1. அலகிடல்:—திருக்கோயிலினுள்ளும் புறமும் அசுத்தமாகிய பொருட்களிருக்காது பெருக்குதல்.

2. திருமெழுக்குச்சாத்தல்:—திருக்கோயிற்றரையைச் சுத்தமான பசுவின் சாணிகொண்டு மெழுகுதல்; பசுவின் சாணிகொண்டு மெழுகுதலால், பூதப்பிரேத பைசாச தோஷங்களும் அசுத்தவாயு துர்நாற்றம் முதலிய தோஷங்களும் நீங்குவதேயன்றித் தரையானதுலர்ந்து பரிசுத்தமாய் இருப்போருக்குமனோகரமும் லட்சுமீகரமும் சாத்துவிதகுணமும் தரும் என்பது துணிபு.

3. போதுகள்கொய்தல்:—அதிகாலையில் எழுந்து ஸ்நானாதிகள் முடித்துப் பரிசுத்தனாய் எச்சிலுமிழ்தல் முதலிய அசுசியின்றிச் சிவத்தியானத்

தோடும் வண்டுகள் ஊதாமுன் மலர்களைக் கைநகம் படாதபடி கொய்து கூடையிலிட்டுத் திருக்கோயிலிற் கொடுத்தல்.

4. பூந்தார்மாலைகண்ணி .....சமைத்தல்:—இண்டை, தொடை, கண்ணி, பந்து, தண்டிற்கட்டுமாலை முதலிய பலவினமாய பூமாலைகளைத் தொடுத்தல். தொடை, நெற்றிமாலை, வீசுமாலை முதலிய என்பர் மறைஞானதேசிகர்.

5. புகழ்ந்துபாடல்:—ஆரியவேதங்களாலும் தமிழ்வேதங்களாகிய பன்னிருதிருமுறையாலும் பண்ணமையப் பத்திரசத்துடன் காலத்துக்கும் இடத்துக்குமேற்ற அமைவுகளோடு ஆநந்தமேலிட்டுக் கண்கள் நீர்ததும்ப நெஞ்சு நெக்குருக மயிர் சிலிர்ப்ப மெய்ம்மறந்து தனக்குங் கண்டோர்க்குங் கேட்டோர்க்கும் மெய்யன்பு கூடுமாறு எம்பிரான் புகழைப் பாடுதல்.

6. தீதில்திருவிளக்கிடல்:—கபிலை முதலிய பசுவின் நெய்யினாலேனும் எள்நெய்முதலியவற்றாலேனும் தாமரைவளையநூலிழை சுத்தமாக நூற்ற பருத்திநூலிழை முதலிய கொண்டு தீபமேற்றுதல். தீபமெனவே, தசாங்கம், சாம்பிராணி முதலிய கந்தவர்க்கங் கொண்டு கூட்டும் தூபமும் அடங்கிய தென்க.

7. திருநந்தவனஞ்செய்தல்:— கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ முதலிய மலர்த்தருக்களை உண்டாக்கல். நந்தவனம் கூறவே தேவாலயம், மடாலயம் கட்டலும் அடங்கினதென்க.

8. திருவேடங்கண்டால்......பணிந்து அவர்தம்பணியுமியற்றுவது:—வீபூதி, உருத்திராக்கம், காஷாயம் முதலிய சிவவேடப் பொலிவுடையாரைக் கண்டால் அவரை வணங்கி அவர்க்கு வேண்டிய உதவிகள் குற்றேவல்கள் செய்தல். சிவவேடத்தைக் கண்டாற் சிவனையே கண்டதாகப் பாவித்து வழிபடல் முறையாகுமேயன்றி, வேடதாரிகளது அகநிலையை யாராய்தல் அறிதல் சரியையாளர்கடனாகாது என்பதும், வேடத்துக்கேற்ப அகமில்லாவிடின் அவ்வவர் மேற்பொறுத்த பாரமாயிருப்பதனை உலகிற்பல்வகையிலுழலும் நம்போலியர் வீணேதலையிற் சுமத்தல் அவசியமின்று என்பதும், உவர்மண் உலர்ந்து வெளுத்த மேனி வண்ணானை விழுந்து வணங்கிய சேரமான்பெருமாள் சரிதத்தினும் பிற திருத்தொண்டர் சரிதத்துளும் காண்க.

9. இத்தகைச் சரியை நெறியை அதற்கு இலக்கியமாய் ஒழுகிக் காட்டிய நாவுக்கரசாகும் அப்பரும் "நிலைபெறுமாறெண்ணுதியே நெஞ்சேநீவா நித்தலுமெம்பிரானுடைய கோயில்புக்குப், புலர்வதன்முன்னலகிட்டுமெழுக்குமிட்டுப் பூமாலைபுனைந்தேத்திப் புகழ்ந்துபாடித், தலையாரக்கும்பிட்டுக் கூத்துமாடிச் சங்கராசயபோற்றிபோற்றியென்றும், அலைபுனல்சேர்செஞ்சடையெம்மாதீயென்றும் ஆரூரா என்றென்றே அலறாநில்லே" எனவும்

"பெரும்புலர் காலை மூழ்கிப்பித்தர்க்குப் பத்தராகி, அரும்பொடுமலர்கள் கொண்டாங் கார்வத்தையுள்ளேவைத்து, விரும்புநல் விளக்குத்தூபம் விதியினாலிடவல்லார்க்குக், கரும்பினிற்கட்டிபோல்வார் கடவூர்வீரட்டனாரே" எனவும் "விளக்கினாற்பெற்றவின்பமெழுக்கினாற் பதிற்றியாகும்; துளக்கினன் மலர்தொடுத்தாற் றூயவிண்ணேறலாகும், விளக்கிட்டார்பேறு சொல்லின் மெய்ந்நெறிஞானமாகும், அளப்பிலகீதஞ்சொன்னார்க் கடிகடாமருளுமாறே" எனவும் 'எவரேனுந்தாமாக விலாடத்திட்டதிருநீறுஞ் சாதனமுங் கண்டாலுள்கி, உவராதேயவரவரைக்கண்டபோது உகந்தடிமைத்திறநினைந் தங்குவந்துநோக்கி, இவர்தேவரவர்தேவரென்றுசொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக், கவராதேதொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக்காணலாமே" எனவும் கூறிப் புகழ்ந்திருப்பதும் மற்றுந் திருமுறைகளில் வருவனவும் நோக்கி உணர்ந்து சாதித்துய்க்க.

பொழிப்பு. சிவசரியையாவது திருக்கோவில்அலகிடல், மெழுகுதல், பூமாலைதொடுத்தல், சிவபெருமானைப் புகழ்ந்துபாடல், தீபமிடுதல், நந்தவனம் உண்டுபண்ணுதல், சிவனடியாருக்குப் பணிவிடைசெய்தல் முதலியன. சரியை அனுட்டிப்போர் சாலோகபதத்தை அடைவர்.

(c). கிரியாசாதனையின் இயல்பும் பயனும்.

**272.** புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினா லருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்க
ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே.

(இ-ள்.) புத்திரமார்க்கம் புகலின் - புத்திரமார்க்கமாகிய சிவகிரியாபாதத்தைச் சொல்லுமிடத்து,—புதிய விரைப்போது புகை ஒளி மஞ்சனம் அமுது முதல்கொண்டு - புதிய வாசனையுடைய மலர்கள் தூபம் தீபம் திருமஞ்சனம் திருவமுது முதலிய உபகரணங்களை அமைத்துக்கொண்டு,— ஐந்துசுத்திசெய்து - பூதசுத்திமுதலிய பஞ்சசுத்திகளுஞ் செய்து,— ஆசனம் மூர்த்தி மூர்த்திமானும் சோதியையும் பாவித்து ஆவாகித்து - ஆசனமிட்டு மூர்த்தியை எழுந்தருளச்செய்து மூர்த்திமானாகியபரஞ்சோதியைப் பாவனை செய்து ஆவாகித்து;—சுத்தபத்தியினால் அருச்சித்துப்பரவிப்போற்றி - மெய்யன்போடு அருச்சனைசெய்து, துதித்து வழிபட்டு,—பரிவினொடும் எரியில் வரு காரியமும்பண்ணி - விருப்போடு அக்கினிகாரியமுஞ்செய்து முடித்த

லாம்,—நித்தலும் இக்கிரியையினை இயற்றுவோர்கள் - நாடோறும் இக்கிரியையை அனுட்டிப்போர்,—நினையுங்கால் - ஆராயுமிடத்து,—நின்மலன் தன் அருகிருப்பர் - சிவனது சமீபத்திலிருப்பதாகிய சாமீபபதத்தை அடைவர்.

குறிப்பு. 1. ஐந்துசுத்தி - பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பனவாம். இவற்றுள் (a) பூதசுத்தியாவது, பிருதிவிமுதல் ஆகாயமீறாகிய பஞ்சபூதங்களையும் அவ்வப்பூதங்களின் நிறம் குணம் குறி தெய்வம் வடிவங்களோடு தியானித்து, அவ்வப்பூதங்களுக்குரிய கலாமந்திரங்களை அவ்வக்கலாபீசங்களோடு முறைப்படி சேர உச்சரித்து, அப்பூதங்களை விதிப்படி சுத்திசெய்வதாம் (b) தானசுத்தியாவது, அஸ்திர மந்திரங்களினாலே தாளத்திரயஞ்செய்து அங்கு நின்றும் இடையூறகற்றி, அஸ்திரமந்திரத்தால் அக்கினிவண்ணமாகிய மதிலையும், கவசமந்திரத்தால் அகழையுஞ்செய்து, சத்திமந்திரத்தான் மேலுங்கீழுஞ் சத்திகளினிறைவாகப்பாவித்துச் சிவலிங்கத்துக்குமுன் மண்டலமிட்டுப் பூமிதேவியைத் தியானித்து, இருதயமந்திரத்தால் அருச்சித்து, அஸ்திரமந்திரத்தினாலே திக்குப்பந்தனஞ் செய்தலாம் (c) திரவியசுத்தியாவது, அருக்கியமுதலிய பாத்திரங்களை அஸ்திரமந்திரத்தாற் கழுவி விந்தமிர்தமாகிய நீரை இருதயமந்திரத்தானிறைத்துத் திரவியங்களிட்டுப் பஞ்சப்பிரமம் முதலிய மந்திரங்களான் முறைப்படி பூசித்துச், சங்கிதாமந்திரத்தாலபிமந்திரித்துத், திக்குப்பந்தனமும் அவகுண்டனமுஞ் செய்து, தேனுமுத்திரைகொடுத்து அருக்கிய சலத்தாலே தன்னையும் பூசோபகரணங்களையும் புரோக்ஷித்துக், கவசத்தால் அப்பியுக்கணமும், இருதயத்தால் அபிமந்திரித்தலும், கவசத்தால் அவகுண்டனமும், தேனுமுத்திரையால் அமிர்தீகரணமுஞ்செய்து, புஷ்பத்தால் அருக்கியநீரெடுத்துத் திருமஞ்சனகுடத்தின்கணிட்டுத் தேனுமுத்திரைகொடுத்தலாம். (d) மந்திரசுத்தியாவது, தன்னுசனத்திற் சிவாசனமும் மார்பிற் சிவமூர்த்தியும் நியசித்துச், சந்தனதிலகமிட்டு, மூலத்தாற் சிரசிலே புஷ்பமிட்டு ஆன்மபூசைசெய்து, பிரணவவாதியாகவும் நமோந்தமாகவும் மந்திரங்களை உச்சரித்தலாம் (e) இலிங்கசுத்தியாவது, ஸ்நானவேதிகையில் விரித்த வஸ்திரத்திலே சடுத்தாசனங்கற்பித்து, இலிங்கத்தை எழுந்தருளப்பண்ணி, அந்தஸ்நானவேதிகையில்வைத்து விதிப்படிபூசித்து, நின்மாலியங்கழித்து, இலிங்கத்தையும் ஆவுடையாரையும் அலம்பிச் சாமானியார்க்கியத்தாலுஞ் சுத்தோதகத்தாலும் அபிஷேகஞ்செய்து, தைலமுதல் அருகிய சலமீறாக முறைப்படி அபிஷேகஞ்செய்து, திருவொற்றுடைசாத்திப் பீடத்திலெழுந்தருளப்பண்ணி ஓர்புஷ்பஞ்சாத்துதலாம் (திருவாத. திருப்பெருந். 70. உரை.) மேற்கிரியை விரிவு 299-ம் செய்யுட்குறிப்பின்கீழ்க்காண்க.

சைவசமயநெறியுரைகாரர், முதலாவதாக ஆன்மசுத்திகூறி அதுவே பூதசுத்தி, அந்தரியாகம், சமாதியென்னுமூன்றன் றொகுதியாம் என்பர்.

அந்தரியாகம்-அகத்துளான் மாவிலுறையுஞ் சிவனைப்பூசைசெய்தல். சமாதி - மோனங்கூடல்.

2. ஆசனமூர்த்தி மூர்த்திமானுஞ் சோதியையும்பாவித்து—இட்டம் பரார்த்தமாகிய இலிங்கங்களுக்கு முறையே சலாசனம் திராசனமாகிய ஆசனங்களுரித்தாம். ஆசனமிட்டு, மூர்த்தியை எழுந்தருளச்செய்து, மூர்த்திமானாகிய பரஞ்சோதியைப் பாவனைசெய்து மேல் சிவோகம்பாவனையில் அகத்தேபண்ணுவதுபோல் மூர்த்தியிற்செய்யும் முறையாமென்க (செ. 299. சூ. 3 பார்.)

3. ஆவாகித்தல் - தாபனஞ் செய்தற்குத் தெய்வத்தை யழைத்தல். இது சத்தியோசாதமந்திரத்தாற் செய்யப்படுவது. எல்லாக் கிரியைகளுக்கும் பொதுவான இருதயமந்திரத்தாலுஞ்செய்யலாம. (சைவசம. பொது. 525. 526.)

4. எரியில்வருகாரியம் - அக்கினிகாரியம். அது நிவிர்த்திமுதலிய பஞ்சகலாமயமாகக் குண்டம் அமைத்து, அதிற் சத்திதத்துவத்து விளங்கும் வாகீசுவர வாகீசுவரிகளது சம்யோகம் பாவித்து வாகீசுவரியினது கர்ப்பத்திலே சிவாக்கினியாகிய சிசு பதிந்ததாகப் பாவித்துக் கர்ப்பாதானம் முதலிய சம்ஸ்காரங்கள்செய்து சிவாக்கினி சனித்ததாகவும், சாதகர்மம் நாமகரணம் முதலிய கிரியைகளும் உபநயனமுஞ்செய்து, பதினாறுவயது பெற்று விளங்குவதாகப்பாவித்து, அவருடைய இருதயகமலத்திற் சிவாசன மூர்த்தி மூலங்களாற் சிவனை ஆவாகனஞ்செய்து, சகல உபசாரங்களுடனும் பூசித்து இவ்வாறு சிவாக்கினியின் இருதயத்திற் சிவனை வழிபடுதலாம்.

5. அருச்சனை - சிவலிங்கத்தை அலங்காரம் நைவேதனம் தூபம் தீபம் கொடி குடை ஆலவட்டம் சாமரை கண்ணாடி முதலியவைகளால் ஆராதித்தல்.

6. இக்கிரியாநெறியினை அதற்கிலக்கியமாயொழுகிக்காட்டிய ஆளுடைய பிள்ளையாராம் சம்பந்தர் “நறைமலிதருமளறொடுமுகைநகுமலர்புகைமிகுவளரொளி. நிறைபுனல்கொடுதனைநினைவொடுநியதமும்வழிபடுமடியவர், குறைவிலபதமணைதரவருள்குணமுடையிறையுறைவனபதி, சிறைபுனலமர்சிவபுரமதுநினைபவர்செயமகளலவரே” எனவும் “செம்பொன்செய்மாலையும் வாசிகையுந் திருந்துபுகையுமவியும் பாட்டும், நம்பும்பெருமைநள்ளாறுடைய நம்பெருமானிதுவென்கொல்சொல்லாய், உம்பருநாகருலகந்தானுமொலிகடல்சூழ்ந்தவுலகத்தோரும், அம்புதநால்களானிடுங் கூடலாலவாயின்கணமர்ந்தவாறே” எனவும் “காவினையிட்டுங் குளம்பலதொட்டுங்கனிமனத்தால். எவினையாலெயின் மூன்றெரித்தீரென் றிருபொழுதும், பூவினைக்கொய்து மலரடிபோற்றுதும் நாமடியோம், தீவினைவந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்” எனவும் “தோத்திரமாமணலிலிங்கந்தொடங்கியவானிரையிற்பால், பாத்திரமாவாட்டுதலும் பரஞ்சோதிபரிந்தருளி, ஆத்த

மென மறைநால்வர்க்கறம்புரிநூலன் றுரைத்த, நீர்த்தமல்கு சடையாருந் திருவேட்டக்குடியாரே'', எனவும் கூறிப் புகழ்ந்திருப்பதும், மற்றுந்திருமுறைகளில் வருவனவுநோக்கியுணர்ந்துசாதித்துய்க.

பொழிப்பு. சிவகிரியையாவது புதியமலர்கள் தூபம் தீபம் திருமஞ்சனம் திருவமுது முதலிய அமைத்துப் பஞ்சசுத்திகளுஞ்செய்து ஆசனமிட்டு மூர்த்தியை எழுந்தருளச்செய்து மூர்த்திமானாகிய பரஞ்சோதியைப் பாவனைபண்ணி ஆவாகித்து மெய்யன்போடுமருச்சித்துத்துதித்து வழிபட்டு அக்கினிகாரியமுஞ்செய்தலாம். கிரியை அநுட்டிப்போர் சிவசாமீபபதத்தை அடைவர்.

(*d*). யோகசாதனையின் இயல்பும் பயனும்.

**372.** சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்கள்
அகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக வினைகள்
உகமார்க்க வட்டாங்க யோக முற்று
முழத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்.

(இ-ள்.) சகமார்க்கம் - யோகபாதமாகிய தோழநெறி,—புலன் ஒடுக்கி - ஐம்பொறிகளை ஒடுக்கி,—வளிஇரண்டும்தடுத்து - உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டினையும் அடக்கி,—சலிப்பற்று - மனம் சலனப்படாது ஒருவழிநிறுத்தி,—முச்சதுரம்முதல் ஆதாரங்கள் அகமார்க்கம்அறிந்து - முக்கோணம் முதலிய வடிவினவாகிய மூலாதாரம்முதலிய ஆறுதாரங்களின் உள்வழிகளை அறிந்து,—அவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்து - அவ்வாறுதாரங்களிலுள்ள பத்மதளம் அக்கரங்கள் அதிதேவதைகளாகிய அரிய பொருள்களையும் அறிந்து,—அங்கு அணைந்துபோய் - மூலாதாரந்தொடங்கி அவ்வவ்விடங்களிலே பொருந்தித் தியானித்து,—மேல்ஏறி - அவ்வாறுதாரங்களுக்கும் மேலே சென்று,—மதிமண்டலத்தின் அலர்முகம் அமுது ஆர்க்க - சந்திரமண்டலத்தின்கண்ணுள்ள பிரமரந்திர கமலத்தினது மலர்ந்தமுகையானது அமிர்தத்தை ஊட்ட,—உடலம்முட்டத்தேக்கி - அதனைத் தேகம்முழுவதும் நிரப்பி,—முழுச்சோதிநினைந்திருத்தல் முதலாக - பூரணப்பிரகாசத்தைத் தியானித்துச்சமாதிகூடுதல் பிரதானங்கமாக,—வினைகள் உகமார்க்க அட்டாங்கயோகம்முற்றும் உழத்தல் - வினைகள் கெடுதற்குரிய வழியாகிய இவ்வட்டாங்கயோகத்தை முற்றும் அநுட்டித்தலாம்,—உழந்தவர் சிவன் தன் உருவத்தைப் பெறுவர் - இங்ஙனம் அநுட்டித்தோர் சிவனது சாரூபத்தைப் பெறுவர்.

குறிப்பு. 1. புலனொடுக்கி - ஐம்பொறிகளை அடக்கி. இது பிரத்தியாகாரம் எனப்படும்.

2. வளியிரண்டுந்தடுத்து:—வளிஇரண்டு - உச்சுவாச நிச்சுவாசங்கள் உச்சுவாசம் - சுவாசத்தை உள்ளே வாங்குதல். இதுபூரகம் எனவும்படும். நிச்சுவாசம் - உள்ளேவாங்கிய சுவாசத்தைவெளியேவிடுதல். இது இரேசகமெனவும்படும். உட்கொள்ளுதலையுங் கழித்தலையும் ஒழித்து, உள்ளேயுள்ள வாயுவைத்தடுத்து நிறுத்துதல் கும்பகமெனப்படும். வாயுவைக் கும்பித்தலினால் மனம் சலிப்பறுதலின், சலிப்பற்று என்றார். இம்முறையிற்பிராணவாயுவை வாங்கி விடுத்துநிறுத்தல் பிராணாயாமம் எனப்படும்.

3. மூச்சதுரமுதலாதாரங்கள் அகமார்க்கமறிந்தவர்கூறும் பொருள்களுணர்ந்து:—மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞைஎன்பன ஆறாதாரங்கள் எனப்படும். இவற்றுள், (a) மூலாதாரம் குதத்துக்கு இரண்டங்குலத்துக்குமேலே, குறிக்கு இரண்டங்குலத்துக்குக் கீழே இருப்பது. இதுமுக்கோணவடிவமுடையதாயும், அவ்வடிவத்திலே நான்கிதழ்ச்செந்தாமரையுளதாயும், அவ்விதழ்களிலே வ ஶ ஷ ஸ என்னும் நான்கு அக்கரங்களிருப்பனவாயும் பாவிக்கப்படும். இவ்வாதாரத்திற்கு அதிதேவதை விநாயகர். (b) சுவாதிட்டானம் மூலாதாரத்துக்கு மேலே இருவிரற்பிரமாணத்திலே இலிங்கபீடமாயிருப்பது. இதற்கு வடிவு நாற்கோணம். அனேக காந்தியுடைய ஆறிதழ்த்தாமரை. அக்கரங்கள் ப ப ம ய ர ல என்பன அதிதேவதைபிரமா. (c) மணிபூரகம், சுவாதிட்டானத்துக்குமேல் நாபித்தானத்திலிருப்பது. வடிவம் மூன்றுவட்டம். பத்து இதழ்களுடையதாமரை. அக்கரங்கள் ட ட ண த த த த ந ப ப என்பன. அதிதேவதை விட்டுணு. (d) அநாகதம், மணிபூரகத்துக்குப் பத்துவிரற்பிரமாணத்துக்குமேலே இருதயகமலத்திலிருப்பது. வடிவுமுக்கோணம். பன்னிரண்டு இதழ்களுடையதாமரை அக்கரங்கள் க க க க ங ச ச ஜ ஜ ஞ ட ட என்பன. அதிதேவதை உருத்திரன். (e) விசுத்தி, கண்டத்திலிருப்பது. வடிவம் அறுகோணம். பதினாறிதழ்த்தாமரை. அக்கரங்கள் அ ஆ இ ஈ உ ஊ ரு ரூ லு லூ எ ஏ ஐ ஒ ஓ ஔ அம் அஃ என்பன. அதிதேவதை மகேசுவரன். (f) ஆக்கினை புருவமத்தியிலிருப்பது. வடிவு வட்டம். இரண்டு இதழ்களுடையதாமரை. அக்கரங்கள் ஹ க்ஷ என்பன. அதிதேவதை சதாசிவர். மூலாதாரத்திற்கு ஏழு இதழும், ஆஞ்ஞைக்கு ஒரு இதழுமாகச் சொல்வதுமாம். (262. சூ. 4. பார்).

4. அங்கணைந்துபோய் மேலேறி - மூலாதாரம்முதலாக ஆறு ஆதாரங்களையும் அடைந்து அவ்வவ்விடங்களிலே அவ்வத்தேவதைகளைத் தியானித்துப் பின் சந்திரமண்டலத்தை அடைந்து. என்பது "அணைந்துபோய்" என்றதற்கு அசபையுடனே சென்று என்றும் பொருள்சொல்வர் (சிவாக்கிர), அசபை - நாதவடிவாயிருக்கும் குண்டலிசத்திசொரூபம்.

5. அலர்மதிமண்டலத்தின் முகமார்க்க வமுதுடல முட்டத்தேக்கி:— சந்திரமண்டலம் கண்டத்தானத்துக்குமேலேயுள்ளது. இதிலே பதினாறிதழ்களுடைய பிரமரந்திரகமலம் உளது. இக்கமலத்தினின்றும் சந்திரகாந்தி நிறைந்த தேன்போலும் இனிய அமிர்தம்பெருக அதனைத் தேகம்முழுவதும் நிரப்பி என்பது. தேக்குதல் - நிறைத்தல்.

6 முழுச்சோதிநினைந்திருத்தல் - பிரமரந்திரகமலத்துக்கு மேலுள்ள ஆயிரத்தெட்டிதழ்க் கமலங்களையுடைய துவாதசாந்தமாகிய பராபரவெளியைப் பொருந்திச் சமாதிகூடியிருத்தல்.

7. அட்டாங்கயோகம் - எட்டு உறுப்புகளையுடைய யோகம். அவை, இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்பன. இவற்றுள் பிராணாயாமம் முதலிய ஆறு அங்கங்களின் இயல்புகள் மேலே கூறப்பட்டன. இயமம் - கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமை, இரக்கமுடைமை, வஞ்சனையில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமை எனப் பத்துவிதம். நியமம் - தவம், சந்தோஷம், தேவபத்தி, தானம், ஈசுவரபூசை, ஞானசாத்திரத்தைக்கேட்டல், இலச்சை, புத்தி, செபம், விரதம் எனப்பத்துவிதம். ஆசனம் - சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் முதலாயின.

8. வினைகளுக - அட்டாங்கயோகம் அநுட்டித்தலின் பயன் கன்மநீக்கம் என்றபடி.

9. இவ்வியோகநெறியை அதற்கிலக்கியமாக ஒழுகிக்காட்டிய எம்பிரான்றோழராகிய சுந்தரர் "தேடுவன் றேடுவன் செம்மலர்ப்பாதங்கணாடொறும், நாடுவனாடுவனாபிக்கு மேலேயொர் நால்விரல், மாடுவன் மாடுவன் வன்கைபிடித்து மகிழ்ந்துளே, ஆடுவனாடுவனாமாத்தூ ரெம்மடிகளே" எனவும் "வழித்தலைப்படுவான் முயல்கின்றேனுன்னைப்போலென்னைப் பாவிக்கமாட்டேன், சுழித்தலைப்பட்ட நீரதுபோலச் சுழல்கின்றேன் சுழல்கின்றதென்னுள்ளம், கழித்தலைப்பட்ட நாயதுபோல வொருவன்கோல்பற்றிக் கறகறவிழுக்கை, ஒழித்து நீயருளாயினசெய்யா யொற்றியூரெனு மூருறைவானே." எனவும் "வானுடையான் பெரியான்மனத்தாலு நினைப்பரியான், ஆனிடையைந்தமர்ந்தானனலாகி யோர்தீயுருக்கொண், டூனுடையிவ்வுடலையொடுங்கிப்புகுந்தான் பரந்தான், நானுடைமாடெம்பிரானண்ணாமூர் நனிபள்ளியதே" எனவுங் கூறிப்புகழ்ந்து தம்முழுப் பதிகங்களிலும் யோகத்துக் கண்ட அநுபூதியை எடுத்துத்தோழமைமுறையில் விரித்ததுவும் பிறதிருமுறைகளிலும்வருவனவும் நோக்கி உணர்ந்து சாதித்துய்க்குக.

பொழிப்பு. சிவயோகமாவது ஐம்பொறிகளையும் ஒடுக்கிச் சுவாசத்தை நிலையில்நிறுத்தி மனத்தை ஒருவழிப்படுத்தி உடம்பினுள் ஆறாதாரங்களையும்

தரிசித்து, ஆன்மாவானது அவ்வாறுதாரங்களுக்கும் மேலேசென்று பிரமரந்திரத்திலொழுகும் அமிர்ததாரை யொழுக்கால் உடம்பு நிலைத்திருப்பத் தான் பூரணப்பிரகாசமாகிய சிவசோதியைக்கண்டு இவ்வாறு இயமமாதி அட்டாங்கங்களோடு கூடிய சமாதி நிலையையடைந்து ஆநந்தித்திருத்தலாம். இவ்வியோகநெறியைச் சாதித்தோர் சிவசாரூபத்தை அடைவர்.

(ச). ஞானசாதனையின் இயல்பும் பயனும்.

**274.** சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

(இ-ள்.) சன்மார்க்கம் - ஞானபாதமாகிய சன்மார்க்கமாவது,—சகலகலைபுராணவேத சாத்திரங்கள் சமயங்கள் தாம் பலவும் உணர்ந்து - எல்லாக்கலைஞானங்களும் புராணங்களும் வேதங்களும் சாத்திரங்களும் சமயநூல்களும் ஆகிய பலவற்றையும் ஆராய்ந்தறிந்து,—பன்மார்க்கப்பொருள் பலவுங்கீழாக - பலசமயங்களிலும் கூறப்படும் பொருளியல்புகள் சித்தாந்தமல்லவாக,—மேலாம் பதி பசு பாசந்தெரித்துப் பரசிவனைக்காட்டும் நன்மார்க்கஞானத்தை நாடி - மேலான பதி பசு பாசம் என்னும் முப்பொருளையும் சித்தாந்தமாகத் தெரிவித்துப் பரமசிவனைத் தெளிவாய்க்காட்டும் நல்லநெறியாகிய சிவாகமஞானத்தைத் தெளிந்தறிந்து,—ஞானம் ஞேயமொடு ஞாதிருவும் நாடாவண்ணம் - அறிவாகிய அவ்வருளையும், அறியப்படுவதாகியசிவத்தையும், அறிபவனாகிய தன்னையும் பகுத்தறிதலின்றி,—பின்மார்க்கம் சிவனுடனும்பெற்றி - அத்துவிதமாகிய பிணிப்புமுறையில் சிவத்துடன் கலந்துநிற்றலாம்,—ஞானப்பெருமையுடையோர் - இந்த ஞானநெறியைச் சாதித்தநுபவமடைந்தபெரியோர்,—சிவனைப்பெறுவர் - சிவசாயுச்சியமாகியபரமுத்தியைப்பெறுவர்.

குறிப்பு. 1. சன்மார்க்கம் (செ. 270. கு. 1. பார்).

2. சகலகலை......உணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக, மேலாம்பதி பசு பாசந்தெரித்துப் பரசிவனைக் காட்டு நன்மார்க்கஞானம்:— மேல் "புறச்சமயநெறிநின்றும்......சைவத்திறத்தடைவர்......ஞானத்தாற்

சிவனடியைச்சேர்வர்" என்றமுறையை ஈண்டுத்துவ ஆராய்ச்சியினாற் பெற்று என விளக்கியதாம். (செ. 263. பார்).

3. ஞானஞேயமொடுஞாதிருவுநாடாவண்ணம்:—ஞானம் - அறிவு, திருவருள்; ஞேயம் - அறியப்படும்பொருள், சிவன்; ஞாதிரு - அறிபவன், ஆன்மா. இவைமுறையே காட்சி, காட்சிப்பொருள், காண்பான் எனவும் படும். நாடாவண்ணம் - பிரிந்து தெரியாதபடி. ஞானநிலையையடைந்தோருக்குச் சங்கற்பமில்லையென்றதாம்.

4. பின்மார்க்கச்சிவனுடனும் பெற்றிஞானம் - பின்னுதலாகிய முறையில் சிவனோடு அத்துவிதக்கலப்புற்றிருக்கும் தன்மையான ஞானம். பின்மார்க்கம் = பின்னும் + மார்க்கம். பின்னுதல் - பிணைத்தல். உடனும்பெற்றி- ஒன்றும், இரண்டும், ஒன்றிரண்டுமின்றி அத்துவிதமாய்க் கலந்திருக்கும் தன்மை. இதுதலைவன் தலைவியர்க்குள்ளாகும் நிமிடமாத்திரையானாகிய போலி அத்துவிதம்போன்ற நித்தியம் என்பார், உடனும் பெற்றிஞானப் பெருமை என விதந்து கூறினார். முன் சன்மார்க்கம் என்றதன் கீழ்க்காட்டியதும் நோக்குக. (செ. 270. கு. 1. பார்).

5. "நன்மார்க்க ஞானத்தானாடி" எனவும்பாடம், இதனைக்கொள்ளுமிடத்து "நன்மார்க்கம் - நல் மார்க்கமாகிய ஞானபாதத்தை,—ஞானத்தால்நாடி - குருவருளால் ஆய்ந்தறிந்து" எனப் பொருளுரைக்க. ஆகமங்களால் அறிவது அபரஞானம். அத்துவிதமாய்க்கலந்து நின்று பேரானந்தத்தை அனுபவித்தறிவது பரஞானம்.

6. இஞ்ஞானநெறியை அதற்கிலக்கியமாக ஒழுகிக்காட்டிய மணிவாசகராம் மாணிக்கர் "சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரிலைம்புலன்களான், முந்தையானகாலநின்னை யெய்திடாத மூர்க்கனேன், வெந்தையா விழுந்திலே னெனுள்ளம்வெள்கிவிண்டிலே, னெந்தையாயநின்னை யின்னமெய் தலுற்றிருப்பனே" எனவும், "உவலைச்சமயங்களொவ்வாத சாத்திரமாஞ், சவலைக்கடலுளனாய்க் கிடந்துதடுமாறும், கவலைக்கெடுத்துக்கழலிணைகள் தந் தருளுஞ், செயலைப்பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ" எனவும், "புணர்ப்பதொக்க வெந்தையென்னை யாண்டுபூணநோக்கினாய், புணர்ப்ப தன்றிதென்றபோது நின்னொடென்னொடென்னிதாம், புணர்ப்பதாக வன் றிதாக வன்புநின்கழற்கணே, புணர்ப்பதாக வங்கணாள புங்கமான போ தமே" எனவும், "முத்திநெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப், பத்தி நெறி யறிவித்துப்பழவினைகள் பாறும்வண்ணம், சித்தமலமறுவித்துச் சிவ மாக்கியெனையாண்ட, அத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே"

எனவும், "நான்றனக்கன்பின்மை நானுந்தானும் மறிவோம், தானென்னை யாட்கொண்ட தெல்லாருந்தாமறிவார், ஆனகருணையும் அங்குற்றேதான வனே, கோனென்னைக் கூடக்குளிர்ந்தூதாய்கோத்தும்பீ" எனவும் பிற வாற்றானும் தம்மருமைத் தமிழ்மொழியாகிய திருவாசகத்தும், "சொற்பால முதிவள் யான்சுவையென்னத் துணிந்திங்ஙனே, நற்பால்வினைத்தெய்வந் தந்தின்று நானிவளாம்பகுதிப், பொற்பாரறிவார் புலியூர்ப்புனிதன் பொதியில் வெற்பிற், கற்பாவியவரைவாய்க் கடிதோட்ட களவகத்தே" என்பன முத லாகத் தமது மெஞ்ஞானநூலாகிய திருக்கோவையாரினும் கூறிப்புகழ்ந் தும், ஞானநுபவத்தையே யாண்டும் விரித்துப் போந்ததூஉம் பிறதிருமு றைகளில் வருவனவுங்கண்டு உணர்ந்து சாதித்தநுபவிக்குக.

பொழிப்பு. சிவஞானமாவது கலைஞானம் முதலிய யாவற்றையும் கற்றறிந்து மற்றுஞ்சமயநூற்பொருள்கள் யாவும் பூர்வபக்கமாகக்கண்டு, பதிபசுபாசவிலக்கணங்கூறும் சிவாகமநெறியே சித்தாந்த மெனத்தெளிந்து காண்பான் காட்சி காட்சிப்பொருள் எனப்பிரித்தறியும் அறிவொழிய அத் துவித முறையிற் சிவனுடன் கலந்து நிற்றலாம். இஞ்ஞானநெறியை அநுட் டித்தோர் சிவசாயுச்சியம்பெறுவர்.

(f) ஞானபூசனையே முத்திக்கு நேர்வழி.

**275.** ஞானநூ றனையோத லோது வித்த
    னற்பொருளைக் கேட்பித்த றன்கேட்ட னன்றா
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்த லைந்து
    மிறைவனடி யடைவிக்கு மெழின்ஞான பூசை
ஊனமிலாக் கன்மங்க டபஞ்செபங்க டியான
    மொன்றுக்கொன் றுயருமிவை யூட்டுவதும் போகம்
ஆனமையான் மேலான ஞானத்தா லரனை
    யருச்சிப்பர் வீடெய்த வறிந்தோ ரெல்லாம்

(இ - ள்.) ஞானநூல்தனை ஓதல் ஓதுவித்தல் - சிவாகமங்கள் முதலிய ஞானநூல்களைத் தான்படித்தலும் பிறருக்குப்படிப்பித்தலும்.—நற்பொரு ளைத் தான்கேட்டல் கேட்பித்தல் - அவற்றிலே கூறப்பட்டசிறந்தபொருள் களைத்தான் ஞானசாரியரிடமாகக்கேட்டலும் பக்குவருக்கு உரைத்தலும்,—நன்றாஈனம் இலாப்பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் - செவ்விதாகக்குற்ற மற்ற அப்பொருள்களைச் சிந்தித்தலும் ஆகிய ஐந்தும்,—இறைவன் அடி அடைவிக்கும் எழில்ஞானபூசை - முதல்வனது திருவடியைச் சேர்விக்கும் மேலான ஞானபூசையாம்,—ஊனம்இலாக்கன்மங்கள் தபம் செபங்கள் தியானம் - குற்றமற்ற கன்மயாகம் தவயாகம் செபயாகம் தியானயாகம் என்னும் இவை,—ஒன்றுக்கொன்று உயரும் - ஒன்றுக் கொன்று ஏற்ற

மாம்,—இவை ஊட்டுவது போகம் ஆனமையான் - இவை தருவன போகங்களாதலின்,—அறிந்தோர் எல்லாம் - அறிவுடையோர் யாவரும்,—வீடு எய்த - முத்தியடைதற்கு,—மேலானஞானத்தால் அரனை அருச்சிப்பர் - மேலான ஞானவேள்வியினுலே சிவபிரானைப் பூசிப்பர்.

குறிப்பு. 1. ஞானநூறனையோதல் - ஞானநூல்களிற்கூறிய பதி பசு பாசங்களின் பொது இயல்புகளை ஆசாரியினிடமாகவாதல் தானுகவாதல் படித்தல்.

2. நற்பொருளைத்தான் கேட்டல் - பதி பசு பாசங்களின்சிறப்பியல்புகளை ஞாஞசாரியரிடமாகக் கேட்டல். சிறப்பியல்புகள்முத்தியடைதற்குரிய சாதனங்களும் பயன்களுமாதலால் "நற்பொருள்" என்றுர்.

3. ஊனமிலாக்கன்மங்கள்......:—சிவபெருமானை வழிபடும் முறைகள் கன்மவேள்வி, தவவேள்வி, செபவேள்வி, தியானவேள்வி, ஞானவேள்வி என ஐவகைப்படும். இவற்றுள் (a) கன்மவேள்வியாவது, சிவசிந்தனை முதற் சிவபூசை அக்கினிகாரியமீருகச் செய்யுஞ் செயல்களாம். (b) தவவேள்வியாவது, சாந்திராயணம் கிருச்சிரம் மாசோபவாசம் அட்டமிபாதி உபவாசவிரதங்களினுலே தேகத்தை மெலிவித்தலாம். சாந்திராயணவிரதம்- ஒரு திங்களுள்விரதம். இதுபௌரணைதொடங்கி அமாவாசைவரைக்கும் ஒவ்வொருபிடி அன்னம் குறைத்தும், அமாவாசைதொடங்கிப் பௌரணைவரைக்கும் ஒவ்வொருபிடி அன்னம் அதிகமாகப் புசித்தும் அநுட்டிக்கும் ஒரு விசேடவிரதம். சாந்திராயணம் - சந்திரனதுஅயநம். அயநம் - பாதை, வழி. கிருச்சிரம் - சாக்தபனவிரதம் இது பஞ்சாமிர்தத்தோடாறுநாளுண்டு, ஏழாநாள் உபவசிப்பது (c) செபவேள்வியாவது, மந்திரங்களை வாசகம் இரகசியம் மானதம் என்னும் முறையிற்செபித்தலாம். வாசகம் - பிறர்க்குக் கேட்கும்படி செபித்தல். இரகசியம் - தன்செவிக்குக்கேட்கும்படி செபித்தல். மானதம் - மனத்தாற் செபித்தல். (d) தியானவேள்வியாவது - இருதயம் முதலிய தானங்களிலே சதாசிவன் முதலிய மூர்த்திகளின் திருமேனிகளைத் தியானித்தலாம். இவ்வழிபாடுகளெல்லாம் கிரியைபொருந்தினவாயும், ஒன்றுக்கொன்று ஏற்றமாயும், போகபலனைத்தருவனவாயும், ஞானமுண்டாதற்குக் காரணமாயும் இருக்கும். போகம் - சிவலோகத்திலே மகாபோகம் (சிவாக்) (e) ஞானவேள்வியாவது, சிவாகமங்களை ஓதல் ஓதுவித்தல் முதலிய ஐந்துமாம். இதன்பயன் வீடுபேறென்ப. (செ. 276, கு. 2. பார்). வேள்வி - வழிபாடு.

4. கன்மங்கடபஞ் செபங்கடியான மொன்றுக் கொன்றுயரும் - கன்மத்தைப் பற்றத்தவம் பதின்மடங்குபலமதிகம் அதனைப்பற்றச் செபம் நூறுமடங்கதிகம் அதனைப்பற்றத் தியானம் நூறுமடங்கதிகம். அதனைப்பற்ற ஞானயாகமானது மகத்தாய் அளவற்றபலத்தைக்கொடுப்பதாயிருக்கும். (சிவதரு.)

பொழிப்பு. சிவபெருமானை வழிபடும் முறைகள் கன்மயாகம் முதலிய ஐந்துமாம். இவற்றுள், கன்மயாகம் முதலிய நான்கும் ஒன்றுக்கொன்று ஏற்றமாயும் போகப்பயனைத்தருவதாயுமிருக்கும். ஞானயாகம் இவைநான்கிற்கும் மேலாய் முத்தியைப்பயப்பிக்கும்.

3. சிவஞானத்திறமே சிவனடிசேர்விக்கும்.

(a) ஞானத்தின்வகையும் பயனும்.

276· கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை
கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்
வீட்டையடைந் திடுவர்நிட்டை மேவி னோர்கள்
மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்
கீட்டியபுண் ணியநாத ராகி யின்ப
மினிதுநுகர்ந் தரனருளா லிந்தப் பார்மேல்
நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவான்
ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன் றாளே

(இ - ள்.) கிளக்கில் ஞானம் - மேலும் விரித்துக்கூறுமிடத்து ஞானமாவது.—கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகிளத்தல் என ஈரிரண்டாம் - கேட்டலும், கேட்டபொருளைச் சிந்தித்தலும், சிந்தித்து அப்பொருளின் உண்மையைத் தெளிந்து அறிதலும், தெளிந்தவாறே நிட்டைகூடுதலும் என நான்குவிதமாம்,—நிட்டைமேவினோர்கள் வீட்டை அடைந்திடுவர் - இம்முறையே வந்து நிட்டை எய்தினோர் பரமுத்திஅடைவர்,—மேவாது தப்பினவர் - நிட்டைபொருந்தாது ஞானநூல் ஓதல் முதலாகத் தெளிதலளவிலே தேகத்தைவிட்டவர்,—மேலாயபதங்கட்கு - மேலானபுவனங்களுக்கு,—ஈட்டியபுண்ணியநாதராகி - அவரவர் செய்த புண்ணியத்திற்கேற்ப அதிபராய் இருந்து,—இன்பம் இனிது நுகர்ந்து - இன்பத்தினை நன்குபெற அனுபவித்து,—அரன்அருளால் - முதல்வனது ஆணையால்,—இந்தப்பார்மேல் நாட்டியநற்குலத்தினில் வந்து அவதரித்து - இந்தப்பூமியிலே உயர்ந்த நற்குலத்திலே வந்து பிறந்து,—குருவான்ஞானநிட்டை அடைந்து - ஞானகுருவினது அருளால் ஞானநிட்டை கைவரப்பெற்று,—நாதன் தாள்அடைவர் - முதல்வனது திருவடியை அடைவர்.

குறிப்பு. 1. கேட்டலுடன் சிந்தித்த றெளிதனிட்டைகிளத்தல்...... கிளக்கின்ஞானம்:—கேட்டல் - பதிபசுபாசங்களின் சிறப்பியல்புகளை ஆசாரியர் வாயிலாகக் கேட்டு அறிதல். பதிபசுபாசங்களின் சிறப்பியல்புகளை அறிதலாவது தனுவாதிபிரபஞ்சம் சடப்பொருள் என்றும், ஆன்மாவுக்கு அன்னியமானது என்றும், ஆன்மா அலசித்துஎன்றும், மலமறைப்பினாலே தனது இயல்பை அறியாது பிரபஞ்சத்தில் வசப்பட்டுத் துன்புறுகின்றது

என்றும், பதிருக்குமசித்து என்றும், எங்கும் வியாபகமுள்ளது என்றும், உயிர்க்குயிராயிருக்கும் இயல்புடையது என்றும், எல்லாவற்றையும் ஒருங்கே ஓரியல்பாய் அறியும் பேரறிவுடையது என்றும் அறிதலாம். சிந்தித்தல் ஆசாரியரிடத்துக் கேட்டபொருளை மனனஞ்செய்து ஆராய்தலாம். தெளிதல் - அங்ஙனம் ஆராய்ந்தபின் பாசத்தினின்று நீங்கவேண்டும் என்றும், பதியை அடையவேண்டும் என்றும் துணிதலாம். நிட்டை - அங்ஙனம் துணிந்தபொருளுடன் பிரிவின்றி உறுதியாக நிற்றலாம். கிளத்தல் - எழுப்புதல்.

2. வீட்டையடைந்திடுவர் நிட்டைமேவினோர்கள் ... ... நாதராகி:— நிட்டை கைவரப்பெற்றவர் பரமுத்தியடைவர். ஞானநூலோதல் முதலாகக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலிலேநின்று அவ்வளவில் யாக்கைநீங்கப் பெற்றவர் மேலான புவனங்களிலே அவரவர் புண்ணியத்துக்கேற்பப் புவனபதிகளாயிருப்பர். மேலானபுவனங்களாவன சீகண்டபுவனம் முதலாகச் சுத்தவித்தைக்குக்கீழுள்ள புவனங்களாம். ஓதல் ஓதுவித்தலில் நின்றோர் சிவலோகாதி பதமுத்திகளைப் பெறுவர் என்றும், கேட்டல்முதலியவற்றில் நின்றோர் சுத்தவித்தைமுதலிய சுத்ததத்துவங்களில் அபரமுத்தியைப் பெறுவர் என்றும் சிவஞானமுனிவர் கூறுவர், (சி. போ. பாடி. 171; சித்தி. உரை.) கேட்டல்முதலியவற்றில் நின்றோர் பிருதிவியாதிபுத்திதத்துவங்களுக்கு மேலான பிரகிருதி மண்டலத்திற் சிவலோகத்திலே சாலோகாதி பதங்களைப் பெறுவர் என்று சிவாக்கிரயோகியர் கூறுவர்.

கேட்டல் முதலியவற்றினின்றோர் மேலாயபதங்களிலே நாதராகி, அங்குள்ள இன்பங்களை இனிது நுகர்ந்து, மீண்டும் இப்பூமியில் வந்திருப்பர் எனஇச்செய்யுள் கூறுதலானும், சுத்தவித்தைமுதலிய தத்துவபுவனங்களை எய்தினோருக்கு ஆண்டு நின்றவாறே பரமுத்திதலைப்படுதலன்றி ஒருவாற்றானும் மீட்சியில்லை என்றும், ஞானத்திற் சரியை முதலியவற்றில் நின்றோர்க்குப் பயன் புத்திதத்துவ புவனத்துச்சுத்த சாலோகம்முதலாயின என்றும் சிவஞானமுனிவர் கூறுதலானும் (சி. போ. பாடி. 171.), அக்கேட்டல்முதலியவற்றில் நின்றோருக்குப்பயன் மேற்கூறியவாறு சீகண்டபுவனம் முதல் சுத்தவித்தைக்குக் கீழுள்ள புவனங்கள் என்பதுபெறப்படும்.

3. இந்தப்பார்மேல் வந்து வதரிப்பர் என்பது நியமமன்று. போய்ப் பொருந்திய புவனத்திருந்தவாறே பூமியிற்றிரும்பாது பரமுத்தியடைவர் என்றுஞ் சொல்லப்படும். (ஞானப்பிர)

பொழிப்பு. ஞானம் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என நான்குவகைப்படும். இவற்றுள், நிட்டைகைவரப்பெற்றோர் பரமுத்தியடைவர். நிட்டைகைவரப்பெறுதார் மேலான புவனங்களுக்கு அதிபராய் வைகி ஆண்டுபோகங்களைப்புசித்து மீண்டு இப்பூமியிற் பிறந்து குருவருளால் நிட்டைகைவரப்பெற்றுத் திருவடியடைவர்.

(b) ஞானப்பேறே மற்றையசாதனைகளின் முடிபு.

277. தானமியா கந்தீர்த்த மாச்சிரமந் தவங்கள்
சாந்திவிர தங்கன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வ
ரீசனியோ கக்கிரியா சரியையினி னின்றோர்
ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லா
மொடுங்கும்போ தரன்முனிலா தொழியினுற்ப வித்து
ஞானநெறி யடைந்தடைவர் சிவனை யங்கு
நாதனே முன்னிற்கி னணுகுவர்நற் றாளே.

(இ - ள்.) தானம் - தானங்கள்கொடுத்தலும்,—யாகம் - யாகங்கள் செய்தலும்,—தீர்த்தம் - புண்ணியதீர்த்தங்கள்ஆடலும்,—ஆச்சிரமம் - தத்தம் நிலைகளிலே தவறாது நிற்றலும்,—தவங்கள் - தவங்கள்புரிதலும்,—சாந்தி - பிராயச்சித்தங்கள்பண்ணலும்,—விரதம் - விரதங்கள்காத்தலும்,—கன்மயோகங்கள் - கருமயோகங்கள் இயற்றலும் ஆகிய இவைகளை,—சரித்தோர் - அநுட்டித்தோர்,—ஈனம் இலாச்சுவர்க்கம்பெற்று - துன்பமின்றி இன்பம் மிக்குடைய சுவர்க்கவுலகினைப் பொருந்திப் போகங்களை நுகர்ந்து, இமைப்பு அளவின் மீள்வர் - கணப்பொழுதிலேமீண்டுவந்துபிறப்பர்,—ஈசன் யோகக்கிரியாசரியையினின்நின்றோர் - முதல்வன் விதித்த சரியைகிரியா யோகங்களை அனுட்டித்தோர்,—ஊனம் இலாபதம்முத்தி பெற்று - குற்றமில்லாதபதமுத்தியை அடைந்து.—உலகம் எல்லாம் ஒடுங்கும்போது - பிரபஞ்சம்முழுதுஞ் சங்காரப்படும்பொழுது,—அரன்முன்நில்லாது ஒழியின் - முதல்வன்முன்னின்று அருளானுகில்,—உற்பவித்து ஞானநெறிஅடைந்து சிவனை அடைவர் - மீண்டும்பிறந்து குருவருளால் ஞானமார்க்கத்தை அடைந்து முதல்வன் திருவடி சேர்வர்,—அங்குநாதனேமுன்நிற்கின் - அச்சங்கார காலத்தில் முதல்வன் முன்னின்று அருளுவானுயின்,—நற்றாள்நணுகுவர் - திருவடி அடைவர்.

குறிப்பு. 1. தானம் - மிருதிமுதலிய தருமசாத்திரங்களிலே சொல்லப்பட்டதானங்கள். அவை பசு, பூமி, பொன், வெள்ளி, எள், நெய், வஸ்திரம், வெல்லம், நெல், உப்புமுதலியன. தானங்கள் சற்பாத்திரருக்கு அன்புடனே கொடுத்தல்வேண்டும்.

2. யாகம் - பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம் என ஐந்து. இவற்றுள் வேதமோதல் பிரமயாகம். ஓமம்வளர்த்தல் தெய்வயாகம். பலிகொடுத்தல்பூதயாகம். தருப்பணஞ்செய்தல் பிதிர்யாகம். தருப்பணம் - மந்திரநீரிறைத்து உவப்பித்தல். இரப்போருக்குஉணவுமுதலியனகொடுத்தல் மனுடயாகம். இவ்வைந்தும் பஞ்சமகாயக்கியம் எனப்படும். இன்னும்

அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உக்தியம், சோட்சீ, வாசபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினியாதேயம், க்கினிகோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர்மாசியம், நிரூடபசுபந்தம், ஆக்கிரயணம், சௌத்திராமணி, அட்டகை, பார்வணம், சிரார்த்தம், சிராவணீ, ஆக்கிரகாயணீ, சைத்திரி, ஆசுவாயுசினனயாகம் இருபத்தொன்று என்றுஞ் சொல்லப்படும்.

3. தீர்த்தம் - கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி முதலிய புண்ணியதீர்த்தங்களிற் சென்று சங்கற்பபூர்வமாக ஆடுதல்.

4. ஆச்சிரமம், தவம்:—(செ. 263. கு. 3. 4. பார்.)

5. விரதம் - சாந்திராயணம்முதலிய உபவாசங்கள். இவை தவத்திற்கு வேண்டப்படுஞ் சாதனைகளுள் உணவை யொறுத்தலாகிய முக்கியசாதனை. இது, தவவேள்வியெனவும்படும். (செ. 277. கு. 3. பார்.)

6. கன்மயோகம் - கன்மவேள்வி, (செ. 277. கு. 3. பார்.)

7. ஈனமிலாச் சுவர்க்கம்பெற்று இமைப்பளவில் மீள்வர்:—இன்பாநுபவநிறைந்த தேவலோகமுதலிய வற்றிற்சென்று புண்ணியப்பயனை நுகர்ந்து விரைவில் பூமிக்கேதிரும்புவர். இமைப்பளவில் என்றது சிறிதுகாலத்தில்என்பதற்கு உபலக்கணம் (சிவாக்)

8. ஈசனியோகக் கிரியாசரியையினி னின்றோரூனமிலாமுத்திபதம்பெற்று:—உண்மைச்சரியைகிரியை யோகங்களினின்றோருக்குப் பயன் அவ்வப்புண்ணியங்களுக்கேற்பச் சீகண்டபுவனம் முதற் | சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவனபதிகளுடைய சிவலோகத்துச்சாலோகம் முதலிய பதமுத்திகளைப் பெறுதலாம். (சி. போ. பாடி 171.) இவர்களுந் திரும்பிப்புவியில்வந்து ஞானநிலைகூடிப் பரமுத்தியடைதல், வெள்ளியங் கையிலையில் சிவசாமீபம் பெற்றிருந்த ஆலாலசுந்தரர் பூமியிற் சுந்தரமூர்த்திநாயனாராக அவதரித்து முத்திெய்தியதினின்றும், தெரியக்கிடப்பதுகாண்க.

9. உலகமெலாமொடுங்கும்போது:—சுத்தாத்துவாவைப் பொருந்தினவர்கள் மீண்டு வருவதில்லையாதலின், இங்கே உலகமெலாம் என்றது அசுத்தமாயைக்குக்கீழுள்ள புவனங்களைக்குறித்துநின்றது.

பொழிப்பு:—தானம்முதலிய பசுபுண்ணியங்களைச் செய்வோர் சுவர்க்கவின்பங்களையனுபவித்து மீளப்பிறப்பர். சரியை கிரியை யோகங்களாகிய சிவபுண்ணியங்களை அநுட்டித்தோர் பதமுத்தியடைவர். அவர் சர்வசங்காரகாலத்தில் முதல்வன் அநுக்கிரகஞ்செய்யாவிடின் மீண்டும் பிறந்துகுரு

வருளால் ஞானம்பெற்றுச் சிவனடிசேர்வர். அநுக்கிரகம்பெறின் மீளப்பிற வாதே முத்திபெறுவர்.

(c) மெஞ்ஞானப்பேறு புண்ணியச்செயல்களாலும் ஆகும்.

278. சிவஞானச் செயலுடையோர் கையிற் றானந்
திலமளவே செய்திடினு நிலமலைபோற் றிகழ்ந்து
பவமாயக் கடலினழுந் தாதவகை யெடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னினுஞ்சா ராமே
நவமாருந் தத்துவஞா னத்தை நல்கி
நாதனடிக் கமலங்க ணணுகுவிக்குந் தானே

(இ - ள்.) சிவஞானச்செயலுடையோர்கையின் - சிவஞானிகள்கையிலே,—தானம் திலமளவேசெய்திடினும் - ஒருவன் தானம்முதலிய அறங்களை எட்டுணையாயினும் இயற்றுவானாகில்,—நிலம் மலைபோல் திகழ்ந்து - அது நிலம்போலகன்றும் மலைபோல் ஓங்கியும் பெருகி,—பவமாயக்கடலின் அழுந்தாதவகைஎடுத்து - அவனைப் பிறப்பிறப்பாகிய பிரபஞ்சக்கடலின்கண் பட்டு அமிழ்ந்தாவண்ணம் கரையேற்றி,—பரபோகந்துய்ப்பித்து - மேலான சிவசாலோகாதி பதங்களிலுள்ளவாகிய இன்பங்களை அனுபவிக்கச்செய்து,—பாசத்தைஅறுக்க - மலங்களை நீக்குமாறு,—தவம் ஆரும் பிறப்பு ஒன்றின் சாரப்பண்ணி - புண்ணியப்பிறப்பொன்றை யடையச்செய்து,—சரியை கிரியாயோகம் தன்னினும் சாராமே - சரியை கிரியை யோகங்களையும் சோபானமுறையில் அநுட்டிக்கவேண்டாதே,—நவம் ஆரும்தத்துவஞானத்தை நல்கி - அதிசயிக்கத்தக்க தத்துவஉணர்ச்சியாகிய மெஞ்ஞானத்தைக்கொடுத்து,—நாதன் அடிக்கமலங்கள் நணுகுவிக்கும் - முதல்வனது சீபாததாமரைகளையடைவிக்கும்.

குறிப்பு. 1. சிவஞானச் செயலுடையோர் - ஞானநிட்டையாளர். இவர்களதியல்பு மேலதிகரணத்து விரித்ததுகாண்க (செ. 281 - 287. பார்.)

2. தானம் திலமளவே செய்திடினு நிலமலைபோற்றிகழ்ந்து:—தானம் அளிப்போனன்பிலும், ஏற்போன்தகையினுமே பெருமையடைவதன்றி ஈந்தபொருளின் அளவுக்கேற்பப் பெருமையடைவதன்றென்பது. செய்திடினும் என்ற உம்மை, எள்ளளவெனினும் அது மலைபோலும் என்றபடி உயர்வுசிறப்பும், இதுகாறுங்கூறியபடி விதிநெறியானன்றிப் பத்திநெறியானேசெய்யினும் என்றபடி இறந்தது தழீய எச்சமும், புத்திபூர்வமாயன்றிப் பக்குவமேலீட்டால் அபுத்திபூர்வமாகச் செய்யினும் என்றபடி எதிரது தழீய எச்சமும் ஆகிய பொருள்களைத்தந்தது. விதிநெறியானன்றிப்

பத்திநெறியாற் சிவஞானிகட்குச் செய்ததானத்திற்கு இல்லாளையளித்த இயற்பகையார், பிள்ளையறுத்துப் பெருவிருந்திட்ட சிறுத்தொண்டர் ஆதியோர் சரிதமும், அவ்வாறியற்றிய ஏனைய அறங்கட்குக் கல்லாலெறிந்தர்ச்சனை இயற்றிய சாக்கியர், உமிழ்நீராலபிடேகித்து எச்சிலிறைச்சியை நிவேதித்துத் தமது கண்களையுமிடந்தப்பிக்கண்ணப்பனுன திண்ணனார், தாதையைத்தாளறவீசிய சண்டேசுவரரான விசாரசருமர்முதலிய தொண்டர்சரிதமும், அபுத்திபூர்வஞ்செய்த அறங்கட்குப் புலிக்கஞ்சி வில்வமரத்திலிருந்து ஒடித்துவீசிய பத்திரம் சிவராத்திரியிற் சிவலிங்கபூசையாகப்பெற்ற அங்குலன்முதலாயோர் சரிதமும், புத்திஅபுத்திபூர்வமிரண்டுமின்றிச் செய்த அறங்கட்குக் கைலையிற்பாய்ந்தசைத்த வில்வமரத்தினின்றும் சொரிந்த பத்திரங்களே சிவார்ச்சனையாக முசுகுந்தச்சக்கிரவர்த்தியாய்ப் பிறந்தமுசுவும், திருமறைக்காட்டிற் தன்மூக்கைச்சுட்ட தீபத்தைத்தூண்ட அது திருவிளக்கேற்றியதாகப்பெற்று மாபலியாய்ப் பிறந்த எலியும் மற்றும் விலங்கு புள் முதலியவற்றின் சரிதங்களும் சான்றுதல்காண்க.

தானம் என்றது ஈண்டுஅறங்கள்யாவற்றையும் குறித்தது. இதுகருத்தென்பது "இருவினையொப்பும் பசு நல்வினை தீவினைகள் தம்முளொத்தலாகிய இருவினையொப்பென்றும், சிவ நல்வினை தீவினைகள் தம்முளொத்தலாகிய இருவினையொப்பென்றும் இருவேறுவகைப்படும்......இவற்றுள் முன்னையது, பக்குவத்தானிகழும் பசுபுண்ணியத்தினும் நிகழ்வனவாயுளவென மேற்கூறப்பட்ட அபுத்திபூர்வம் புத்திபூர்வம் என்னும் பொதுச்சிவபுண்ணியத்தான் உண்டாவதாய் மலபரிபாகத்தைத் தோற்றுவிக்குமுகத்தானே மந்தரமெனப்படும் முதற்சத்திநிபாதத்தில்நிகழும். பின்னையது, பலதிறப்படுவவாகிய நால்வகைச்சத்திநிபாதத்தான் அவ்வாறே நால்வகைப்பட்டமுறையான் நிகழ்ந்து முடிவின்கண் ஞானத்திற்கேதுவாமென்றுணர்க" எனச் சிவஞானமுனிவர் திராவிடமாபாடியத்துக்காட்டியதனுற் காண்க. (சி. ஞா. பா. 363 பக்.)

3. பவம் - உற்பவம், பிறப்பு. மாயம் - மாய்தல், இறப்பு.

4. பாசத்தையறுக்கத் தவமாரும் பிறப்பொன்றின் சாரப்பண்ணி... ஞானத்தைநல்கி என்றமையானே, சிவஞானிகட்கீந்ததானம் எவ்வகையானும் முத்திக்கு வித்தென்பது துணிபாயினும், சிவஞானமின்றி முத்தியடைதல் கூடாதென்பதும், அவ்வாறு சிவஞானம் அடைவதற்குப் பிறவி வேண்டிற்றென்பதும், ஆயினும் எடுக்கும்பிறவி பாசமறுக்கவுற்றதீக்கை பெறும்தகைத்தாய்க் கூன்முதலியவின்றிச் சற்கர்மவர்ணத்தில் கல்விஞானமெய்திச் சைவத்திறங்கூடிய புண்ணியப்பிறவியே யாமென்பதும், அவ்வாறெடுத்த பிறவியினும் "சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானம்" என்ற சோபானமுறையின்றி, ஈராண்டிற் சிவஞானம்பெற்ற மெய்கண்டதேவர் மூவாண்டிற் சிவஞானம்பெற்ற ஆளுடையபிள்ளையார் முதலிய குரவர்க்குப் போன்று ஞானநெறியேதலைக்கிடையாய் அமையுமென்றும் ஈண்டுதெளியக்கிடந்தமைகாண்க.

பொழிப்பு. சிவஞானியர்க்குச்செய்யுந் தானம்முதலிய அறங்கள் சிறியவேயாயினும் மிகப்பெருகிப் பரபோகத்தைக் கொடுப்பதேயன்றி வரும் பிறப்பில் நேரேஞானத்தையடைவித்து முத்திப்பேறுமளிக்கும்.

(*d*) மெஞ்ஞானத்தின் இயல்பு.

279. ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லவா கமஞ்சொல்ல வல்லவா மென்னும்
ஊனத்தா ரென்கடவ ரஞ்ஞா னத்தா
லுறுவதுதான் பந்தமுயர் மெஞ்ஞா னந்தான்
ஆனத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போ
லஞ்ஞானம் விடப்பந்த மறுமுத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்க ளல்லா ஞான
மிறைவனடி ஞானமே ஞான மென்பர்.

(இ - ள்). ஞானத்தால்வீடென்றே - (மேற்கூறியவாறு எல்லாநெறிகளும் புண்ணியச்செயல்களும் மெஞ்ஞானத்தை உதிப்பிக்க) மெஞ்ஞானம் ஒன்றினாலேதான் வீடுபேறாகும் என்று,—நான் மறைகள் புராணம் நல்ல ஆகமம் சொல்ல - நான்கு வேதங்களும் பதினெண்புராணங்களும் இருபத்தெட்டுச்சிவாகமங்களும் ஆகிய அளவு நூல்களெல்லாம் கூறுவதாகவும்,—அல்லவாம் என்னும் ஊனத்தார் என்கடவர் - அவ்வாறன்று, கன்மங்கள், விவேகஞானம், தத்துவவிசாரம், சரியைகிரியைகள், யோகம் முதலியன தம்மாத்திரையானே முத்திபயப்பனவாம் என்றுகூறும் அறிவிலிகள் யாது பயனைப்பெறுவரோ,—அஞ்ஞானத்தால் உறுவதுதான் பந்தம் - அஞ்ஞானத்தால் நேர்ந்திருப்பதுவே பந்தமாம்,—உயர் மெஞ்ஞானந்தான் ஆனத்தால் - உயர்வாகிய மெஞ்ஞானம் உதித்தவாற்றானே,—அலர்கதிர்முன்னிருள் போல் அதுபோவது - உதயமாகும் சூரியன்முன்னே இருள் அகல்வது போல் அவ்வஞ்ஞானம் விட்டுநீங்குவதாகும்,—அஞ்ஞானம் விடப் பந்தம் அறும் - அவ்வாறு அஞ்ஞானம் விட்டுநீங்கப் பந்தமும் அகன்றுபோம்,—முத்தியாகும் - வீடுபேறாகிய பரமுத்திநிலை கைகூடும், ஆகலால்,—ஈனத்தார் ஞானங்கள் அல்லாஞானம் - அவ்வறிவிலிகள் கூறும் ஞானமெல்லாம் உண்மைஞானமன்றாம்,—இறைவன் அடி ஞானமே ஞானம் என்பர் - முதல்வன் திருவடியை அடையச்செய்யும் சிவஞானமே மெஞ்ஞானமாமென்று பெரியோர் கூறுவர்.

குறிப்பு. 1. அல்லவாமென்னும் ஊனத்தார் என்கடவர்:—தானம் யாகம் முதலிய கன்மங்களால் முத்தி என்னும் மீமாஞ்சகரும், தத்துவங்களைப் பகுத்துணரும் விவேகஞானத்தால் முத்தி என்னும் சாங்கியரும், மாயை பிரமங்களை விசாரிப்பதனால் முத்தி என்னும் மாயாவாதிகளும், சரியைகிரியைகளால் முத்தி என்னும் சிவசமவாதிகள் முதலியோரும்,

யோகத்தால் முத்தி என்னும் பாதஞ்சலரும் ஆகிய குறைந்த அறிவுடையோர் (செ. 264. 277. பார்). ஊனத்தார் - குறைவுடையோர், அறிவிலிகள் என்றபடி. ஊனம் - குறைவுள்ளது. கடவர் - பெறுதற்குரியர். கடம் - கடன், தகுதி. ஊனத்தார் என்றதனுள் தீக்ஷாகன்மத்தினலே மோக்ஷமென்று சொல்லும் பூர்வசைவரும் சேர்ந்துளதாகச் சிவாக்கிரயோகியர் விரிப்ப, அதனைநோக்கி ஜடகன்மமல்லாத சிற்கன்மத்தாலே முத்தியென இச்செய்யுளிற் கூறியதாக ஞானப்பிரகாசர் எடுத்துக்கொண்டு தீக்ஷாகன்மங்கள்யாவும் ஞானமெனக் காட்டி "சுப்பிரபேதம், சுவாயம்புவம், பௌஷ்கரமுதற் சிவாகமங்களிற் சிறப்பித்திருத்தலால் தீக்ஷையும் ஞானமென்பது சிவாகமப் பிரசித்தம்" எனக் கூறிப்போந்துள்ளார். முதல்வன் "தரையில் ஆசான் மூர்த்தியாதாரமாகித் தரித்தொழிப்பன்மலம் சதுர்த்தாசத்திநிபாதத்தால்" என்றபடி சிவதீக்கை பந்தநீக்கத்துக்கும் மெஞ்ஞானப் பேற்றிற்கும் இன்றியமையாததென மேற்கண்டமையானே, தீக்கையான் முத்தியாமென்பது ஒக்கும். ஆயின் சத்திநிபாதம் வேண்டியவாற்ருனே தீக்கையும் ஞானம் பயப்பித்தே முத்திதரும் என்பது. தீக்கைமாத்திரையானே முத்தியென்பார் மெய்யானதீக்கையையே யன்றிப் போலித்தீக்கைகளைச்சுட்டி யவ்வாறு கூறுவதெனக் கொள்ளின் அவர் சரியைகிரியைகளால் முத்தியென்பவரேயாவரன்றி வேறுபடுத்துக் காட்டவேண்டியதின்மையானும் தீக்கையை இச்செய்யுளிலிழுத்து வழக்கிட அவசியமில்லையென அமைக.

2. அஞ்ஞானத்தால் உறுவதுபந்தம். மெஞ்ஞானம் ஆனத்தால், அது (அஞ்ஞானம்) அலர்கதிர்முன் இருள்போல்போவது. (அவ்வாறு) அஞ்ஞானம் (போய்) விட (அதனல் உறுவதான) பந்தம் அறும். (பந்தம் அற) முத்தியாகும், எனக்கொண்டு நேரே பொருள் பயத்தல்காண்க. இதனற் காட்டிய முத்திகள் 264-ம் செய்யுளிற்காண்க. அஞ்ஞானம் - பசுஞானபாசஞானங்கள்.

ஆனத்தால் - ஆனதால், உதித்ததன்மையால். இசைநோக்கிய வலித்தல்விகாரம். அலர்கதிர் - உதயமாகும் சூரியன். சூரியன் உதிக்க இருள் அகலுதல் ஞானம் உதிக்க அஞ்ஞானம் போவதற்குவமையாயது.

அஞ்ஞானம்விடப் பந்தம் அறும்:—அஞ்ஞானத்தானுறுவதுதான்பந்தமென்றமையால், அஃதகலப் பந்தமுமறும் என்றது.

முத்தியாகும் - "விட்டதேபேரின்பவீடு" என்றபடி பந்தமறவே வீடெனப்படும் முத்தி ஆகும் என்றது.

தான் என்பதிரண்டிடத்தும் பிறிதன்று இதுவேயென நிச்சயப்படுத்துதலின் தேற்றப்பொருள் பயந்தமைகாண்க.

3. ஈனத்தார் - மேல்ஊனத்தாரெனச் சுட்டிய குறைந்த அறிவினர். குறைந்த அறிவு தன்னையுடையானுக்கும் பிறர்க்கும் நன்மையைத்தராது

தீமையையே பயத்தலின் அத்தகையறிவுடையோர் ஈனத்தார் எனப்பட்டனர். ஈனம் - தீமை, குற்றம்.

4. அல்லாஞானம் - உண்மையல்லாதஞானம்.

5. இறைவனடிஞானம் - சிவனடியைச்சேர்விக்கும் ஞானம். "ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" (செ. 263.) "சிவனடியைச்சேருமுத்தி" (செ. 264.)

பொழிப்பு. முத்திசித்திப்பது ஞானத்தாலே யென்பது வேதசிவாகமத்துணிபாம். ஞானமின்றி முத்தியாகும் என்று கூறுவார் மதியீனர்களாம். அத்தகையஞ்ஞானத்தால் உற்றபந்தம் மெஞ்ஞானத்தாலற முத்தியாகும். எனவே முத்திநெறிகாட்டும் ஞானம் மெஞ்ஞானமாம்.

(e). மெஞ்ஞானத்தின்பயன்.

**280.** சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனு மாசான்வந் தருளாற் றோன்ற
வடிஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத்
தூரியனுஞ் சிவன்றோன்றுந் தானுந் தோன்றும்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனுப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்.

(இ - ள்). சூரியகாந்தக்கல்லின் இடத்தே செய்ய சுடர் தோன்றியிட - சூரியகாந்தக்கல்லின்கண்ணே ஆதித்தனது சிவந்த ஒளி பிரகாசிக்க,—சோதிதோன்றுமாபோல் - அதனிடத்து அக்கினிவிளங்கித் தோன்றுமாறுபோல,—ஆரியனும் ஆசான் அருளால் வந்துதோன்ற - ஞானாசாரியர் அருளேதிருமேனியாக்கொண்டு எழுந்தருளிவந்து பக்குவஆன்மாவின் சந்நிதியிலே தோன்றி உபதேசிக்க,—அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்- சிவஞானம் அவ்வான்மாவினிடத்து விளங்கித்தோன்றும்,—தோன்ற- அங்ஙனம் தோன்றவே,—தூரியனும் சிவன்தோன்றும் - வாக்குமனாதீதனாய்நின்ற சிவத்தின் இயல்பு ஆன்ம அறிவின்கண் விளங்கித்தோன்றும்,—தானும் தோன்றும் - ஆன்மாவாகிய தனது இயல்புந் தோன்றும்,—தொல் உலகம் எல்லாம் தன்னுள்ளே தோன்றும் - அநாதிபாசமாகிய பிரபஞ்சம் அனைத்தின் இயல்பும் தனது அறிவின்கண் விளங்கித் தோன்றும்,—நேரியனுப் பரியனுமாய் - அன்றியும் அச்சிவன் அணுவுக்கணுவாயும் மகத்துக்கு மகத்தாயும்,—உயிர்க்குயிராய் - அறிவுக்கறிவாயும்,—எங்கும் நின்றநிலை எல்லாம் - சடசித்துக்கள் யாவற்றோடும் அத்துவிதமாய்க் கலந்து நின்றதன்

மையும்,—முன்நிகழ்ந்துதோன்றும் - அவ்வறிவின் அனுபவமாகத் தோன்றும்.

குறிப்பு. 1. ஆரியனுமாசான்வந்தருளாற்ருேன்ற வடிஞானமான்மாவிற் ருேன்றும்:—பெத்தநிலையிற் கருவிகரணங்களைக்கொண்டு உண்ணின்றுணர்த்திய பரமசிவன், மலபரிபாகமும் சத்திநிபாதமும் நிகழ்ந்து உண்மைஞானத்தை அடையவிரும்பும் உயிர்களுக்குத் திருவருளேதிருமேனியாகக்கொண்டு குருமூர்த்தியாய் எழுந்தருளிவந்து தீக்கையினுல் அத்துவசுத்தி செய்து பதிபசுபாசங்களின் இயல்பை உபதேசிப்பர். இவ்வுபதேசத்தைக் கேட்ட சீடனிடத்துச் சிவஞானம் பிரகாசிக்கும் (செ. 258. 262. பார்.) இந்த ஞானமும் சீடனது பக்குவவேறுபாடுபற்றி ஒருபடித்தாய் ஏருது மந்ததரசத்திநிபாதமுடையோனுக்குக் கேட்டல் ஞானமும், மந்தசத்திநிபாதமுடையோனுக்குச் சிந்தித்தல் ஞானமும், தீவிரசத்திநிபாதமுடையோனுக்குத் தெளிதல் ஞானமும், தீவிரதரசத்திநிபாதமுடையோனுக்கு ஞானநிட்டையுமாக நிகழும். முப்பொருள்களின் இயல்பும், கேட்டல் ஞானம் நிகழுமிடத்து நிருவிகற்பமாயும், சிந்தித்தல்ஞானம் நிகழுமிடத்து நிருவிகற்பம் சவிகற்பம் என்னும் இரண்டுக்கும் இடையாயும், தெளிதல் ஞானம் நிகழுமிடத்துச் சவிகற்பமாயுந்தோன்றும். ஆரியன் - அறிவுடையோன், சிவன். அடிஞானம் - திருவடியைஅடைவிக்கும் ஞானம், சிவஞானம். (செ. 275. 279).

ஆசான் பாசவிமோசனம் பண்ணும்வகை திருவருணேக்கம் பரிசம் வாசகம் மானதம் சாத்திரம் யோகம் அவுத்திரி முதலியனவாகப் பலவாயிருப்பினும் (செ. 255), இங்கே கூறப்பட்ட முறை ஞானநூல்களை ஓதி அந்நூல்கள்வழியாக முத்தியடையும்வழியாதலால், "தோன்ற" என்றதற்குத் தோன்றி உபதேசிக்க என்று பொருள் கூறப்பட்டது. "மார்க்கர் கண்டநூலோதி வீடுகாதலிப்பவர்கட் கீசன் புண்டரிகத்தாள் சேரும் பரிசினைப் புகலலுற்ரும்" (செ. 4) என்றதனுல் அறிக.

2. தூரியனுஞ் சிவந்தோன்றுந் தானுந்தோன்றுந் தொல்லுலகமெல்லாந்தன்னுள்ளேதோன்றும்:—பெத்தநிலையில் ஆன்மா விடயபோகங்களை அநுபவிக்குங்கால், தான்அறிந்து அருந்துகின்றேன் என நினைப்பதன்றிச் சிவன் அறிவிக்க அறிந்து அநுபவிக்கின்றேன் என நினையாது. இவ்வியல்புக்குக் காரணம் ஆணவமலமாம். மலபரிபாகம்வந்து சிவஞானந் தோன்றியவிடத்து, ஆன்மாதன்னுல் அறியப்பட்ட விடயங்களைக் கருவிகளைக் கொண்டறிந்தது என்றும், அக்கருவிகள் மாயாகாரியம் என்றும், சடம் என்றும், தனக்கு அந்நியம் என்றும், தனக்கு அவ்வாறறிவித்தது திருவருள் என்றும், தனக்கொருசெயலில்லை என்றும், அக்கருவிகளைப்போலச் சடமுமன்றித் திருவருளைப்போலப் பேரறிவுமன்றி நின்று அறிந்த அறிவு தான் என்றும் காணப்பெறும். சிவன்தோன்றுதலாவது சித்தும் சடமுமான

தாவரசங்கமப்பொருள்களனைத்தினும் தான்வேறறநின்று, அருளே திருமேனியாகக் கொண்டு மலத்தினாலே பந்திக்கப்பட்ட உயிர்களின் பரிபாகநிமித்தமாகத் தனது இச்சாஞானக்கிரியாசத்திகளின் செயலாற் படைத்தும் காத்தும் அழித்தும் தொழில் செய்து, மலபரிபாகம் வந்தகாலத்துத் தத்துவங்கள் யாவும் வேறாகும்படி சத்திநிபாதத்தை விளைவித்துக் குருமூர்த்தியாய் எழுந்தருளிவந்து தான் வேறறநின்ற முறைமையைத் தருபவன் ஆன்மாக்களுக்கெல்லாம் அறிவுக்கறிவாயிருக்கிற சிவனே என்று தனது அறிவின்கண் விளங்கக்காண்டலாம். இது சிவரூபம் என்றும், அருள் தரிசனம் என்றும், ஞானதரிசனம் என்றும் சொல்லப்படும். இவ்வருள்தரிசனத்தில் ஆன்மா மேற்கூறியவாறு தனது இயல்பை அறிதலால் ஆன்மதரிசனமும், தத்துவங்களைத் தனக்கு அந்நியமாகக்காண்டலால் தத்துவசுத்தியும் நிகழுமாறு காண்க. தூரியன் - தூரத்திலுள்ளவன், அதீதன்.

3. நேரியன் - நுண்மையுடையோன். நேர் - நுணுக்கம், நுண்மை.

4. பரியன் - பருமையுடையோன். பரி - பருமை.

பொழிப்பு. ஞானாசாரியரது சந்நிதிமாத்திரையால் பக்குவஆன்மாவுக்குச் சிவஞானம் உதிக்கும். அதனாற் பதி பசு பாசங்களின் இயல்பும பதி சடசித்துக்களோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் முறைமையும் ஆன்ம அறிவிலே விளங்கித்தோன்றும்.

---

## மூன்றுமதிகரணம்.

துன்னிய வைம்புலவேடர்சூழலிற் பட்டுத் துயருறுந் தொல்லுயிரை அவரினீக்கித் தானாக்கி வைப்பன் என்பது மூன்றாங்கூறு (281-283) இஃது இறைவன் குருவாய்வந்து தீக்கைசெய்து சிவஞானமுதிப்பித்த ஆன்மாவை ஐம்புலவேடரினீக்கித் தன்னோடு அத்துவிதமாம்படி தானாக்கி யருள்செய்யு முறைமைகூறுமுகத்தான் ஞானநிட்டையாளர் இயல்பும், அநுபவமும் பேறும் கூறுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. ஞானநிட்டையாளர் இயல்பு (281-287).

(a) ஞானநிட்டையாளர் இசத்தே சீவன்முத்தராய்ச் சிவதரிசனம் பெற்றிருப்பர் (281).

(b) சிவதரிசனங்கூடுமுறையும் அதனியல்பும் (282).

(c) ஞானநிட்டையாளர் இருவினை யொப்புடையோராய்த் தேகாந்தத்துப் பரமுத்தராவர் (283).

(d) ஞானநிட்டையாளருக்கு விதிவிலக்கும் வினையும் இல்லை (284).

(e) இருவினையொப்பினியல்பு (285).

(f) ஞானநிட்டை முடியாதோருக்கு உபாயநிட்டை (286).

(g) உபாயநிட்டையினுற் சாக்கிராதீதம் கூடினேரியல்பு (287).

2. ஞானநிட்டையாளர் அநுபவமாகிய அத்துவித இரகசிய இன்பத்தியல்பு (288).

3. ஞானநிட்டையாளர் பெறும் அத்துவிதப்பரமுத்தி இயல்பு (289).

1. ஞானநிட்டையாளர் இயல்பு.

(a) ஞானநிட்டையாளர் இகத்தே சிவன்முத்தராய்ச் சிவதரிசனமே பெற்றிருப்பர்.

281. மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாத
மேவுதலு ஞானம்விளைந் தோர்குருவி னருளாற்
புக்கநுட்டித் தேநிட்டை புரிந்து ளோர்கள்
பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டிற்
றபநியத்திற் சமபுத்தி பண்ணிச்சங் கரனே
டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே
யுடந்தையாய்ச் சிவன்றோற்ற மொன்றுமே காண்பர்.

(இ - ள்). மிக்கது ஒரு பக்குவத்தின் - ஆணவமலம் மிகவும் பரிபாகமான காலத்திலே,—மிகு சத்திநிபாதம் மேவுதலும் - தீவிரதர சத்திநிபாதம் பொருந்த,—ஞானம் விளைந்து - மேற்கூறிய கேட்டல் ஞானம் முதிர்ந்து,—ஓர் குருவின் அருளால் - ஒப்பற்ற ஞாஞசாரியரது கருணையினுல்,—புக்கு அநுட்டித்தே நிட்டை புரிந்துளோர்கள் - நூற்பொருள் ஆராய்ச்சியிற் பிரவேசித்துக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து இம்முறையே வந்து நிட்டை கூடினவர்கள்,—பூதலத்தில் புகழ் சீவன்முத்தராகி - இப்பூமியின் கண்ணே புகழத்தக்க சீவன்முத்தர்களாய்,—தக்க பிரியம் அப்பிரியம் இன்றி - இச்சையுண்டாகத்தக்க பொருளிலே விருப்பும் அல்லாத பொருள்களிலே வெறுப்புமின்றி,—ஓட்டில் தபநியத்தில் சமபுத்திபண்ணி - ஓட்டையும் பொன்னையும் சமமாகக்கண்டு,—சங்கரனேடு ஒக்க உறைந்து - சிவனேடு பிரிவின்றி நின்று,—இவர் அவனை அவன் இவரை விடாதே உடந்தையாய் - தாம் சிவனைப் பிரியாமலும் சிவன் தம்மைப் பிரியாமலும் ஒன்றுபட்டிருந்து,—சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர் - சிவனது தோற்றம் ஒன்றுமே கண்டிருப்பர்.

குறிப்பு. 1. ஓர் குருவினருளாற் புக்கநுட்டித்தே நிட்டை புரிந்துளோர் கள்:—ஞானசாரியர் கூறும் உபதேசமொழிகள் ஒருபிரகாரமாயிருப்பினும், பக்குவத்திற்கேற்ப ஞானம் ஏறுவதன்றி ஒருபடித்தாய் ஏறாதாகையால் புக்கநுட்டித்தே நிட்டை புரிந்துளோர்கள் என்றார். "முந்தியவொருமை யாலே மொழிந்தவைகேட்டல் கேட்டல். சிந்தனை செய்தலுண்மை தெளிந்திடலது தானாக, வந்தவாறெய்த நிட்டைமருவுதலென்று நான்காம், இந்த வாறடைந்தோர் முத்தியெய்திய வியல்பினரே" (சிவப்பிர 83). நிட்டை - கேட்டுச் சிந்தித்துத் துணிந்த பொருளுடன் பிரிவின்றி உறுதியாக நிற்றல். நி - நிச்சயம். ஸ்தா - நிற்றல்.

2. உடந்தை - ஒன்றுபட்டிருத்தல்.

3. சீவன்முத்தர் - தனுவாதிகளோடு கூடியுங் கூடாமல் நின்று நேயத் தழுந்தினோர்.

பொழிப்பு. குருவருள் பெற்று, மலமுதிர்ச்சியும் சத்திநிபாதமுங் காரணமாக ஞானம்விளைந்து, நிட்டைகூடினோர்கள் சீவன்முத்தராய் ஒன்றிலும் விருப்புவெறுப்பின்றிச் சிவனோடு பிரிவின்றி நின்று சிவம் ஒன்றையுமே காண்பர்.

(b) சிவதரிசனக்கூடுமுறையும் அதனியல்பும்.

282. அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
　　அறிவுதனை யருளினா னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
　　கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்
பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்
　　பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
　　நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே

(இ-ள்). அறியாமை அறிவு அகற்றி - அறியாமையாகிய கேவலாவத்தையையும், அறிவாகிய சகலாவத்தையையும் சிவஞானத்தினால் நீக்கி,—அறிவின்உள்ளே அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து - ஆன்மாவினிடத்துப் பரான்மாவாய்ப் பிரிவற உள்ளிருந்த சிவத்தை அருளினாலே பகுத்தறியாதறிந்து,—குறியாதே குறித்து - தற்போதத்தாற் சுட்டி நிச்சயிக்காது அருளினால் விரியநிச்சயித்து,—அந்தக்கரணங்களோடும் கூடாதே வாடாதே- பின்பு கருவிகளோடுகூடிச் சகலப்படாமலும் கேவலப்படாமலும்,—குழைந்து இருப்பைஆகின் - அவ்வருளோடுகூடி நிட்டைசெய்து இருக்கப்பெறின்,—பிறியாதசிவன்தானேபிரிந்து தோன்றி - பெத்தநிலையிலே ஆன்மாவோடு பிரிவின்றி அபேதமாய்நின்ற சிவன் இச்சுத்த நிலையிற்பிரிந்து பேதமாய்த்

தோன்றி,—பிரபஞ்சபேதம் எலாம் தாஞய்த் தோன்றி - தநுகரணுதி பிர பஞ்சப்பொருள்கள் யாவும் சிவசொரூபமாய்த் தோன்றக்காட்டி,—நெறி யாலே இவை எல்லாம் அல்லவாகின்று - உண்மையிலே இப் பிரபஞ்சபே தமெல்லாம் தானல்லவாக வேறாய்நின்று,—என்றும் நிராதாரனாய்த் தோன் றிடுவன் - எப்பொழுதும் பற்றவொன்றின்றித் தமியே தோன்றுவன்.

குறிப்பு. 1. அறியாமையறிவகற்றி:—மயக்கமாய் வந்தடைப்பது கேவ லம். விகற்பமாய் வந்தடைப்பது சகலம். இவை மத்தியாலவத்தையில் நிகழ்வன; திருவருளால் நீங்கப்பெறுவன.

2. அறிவினுள்ளே......குழைந்திருத்தல்:—கேவலசகலங்களிற் பொரு ந்துதலும் தற்போதமுனைத்தலுமின்றித் திருவருளையே தாரகமாகக் கொண்டு அவ்வருளிலடங்கி அவ்வருளே தானாகிநிற்றல். இது ஆன்மசுத்தி யாம். அறியாதேஅறிதல் தற்போதமற்றுப் பதிபோதங்கொண்டறிதல். குறியாதேகுறித்தல் - தற்போதமற்றுப் பதிபோதங்கொண்டு நிச்சயித்தல். அந்தக்கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருத்தல் - ஐம்புல வேடரின் மயங்கி அவரோடொன்றென நின்ற கவற்சியைக்கழற்றியும், நீடு கூடிய பழக்கவாசனைபற்றி அவரை விடுத்ததில் வருந்தாமலும், தற்போ தமே முற்றும் அற்று அருளிலழுந்தி ஆனந்தித்திருத்தல். பழக்கவாசனை - நீடுசேர்ந்திருந்த சேர்க்கையால் நேர்ந்தபற்று. இதுவே மாணிக்கவாசகரைக் குருந்தடியிற் றீக்கைசெய்தபின்னும் பாண்டியனிடம் திரும்ப இழுத்தது வும், வள்ளியைக் களவுமணத்தின் பின் வேடர்பாற் செல்ல வலித்ததுவு மாம். அவ்வாசனையற்றபின் எய்திய அநுபவம் இருசரிதத்தும், துறந்து சென்றஞான்று தலைவனையே நாடியதன்றிப் பிறவற்றை இருவரும் நாடா திருந்தமையினறியலாகும். இவ்வநுபவத்தை எம் மாணிக்கர் கனியுந்தனித் தமிழ்மறையாகும் திருவாசகத்து யாண்டும் காட்டியதை அன்புடனோதி அறிந்தாநந்தித் தநுபவித்தல் சைவசமயிகட்கு வாய்த்தபெரும்பேறாகும்.

3. பிறியாதசிவன்றானே பிரிந்து தோன்றி......தோன்றிடுவன்:— மேற்கூறியவாறு கேவலசகலங்களிற் பொருந்துதலும் தற்போதமுனைத்தலு மாகிய இரண்டும் அறவேயின்றி அருளிலே அழுந்தி எங்கும் சிவமயமே காண்டல் சிவதரிசனமாம். இங்ஙனம் ஆன்மசுத்தியாற் சிவதரிசனம் நிகழு தல் காட்டியவாறு. பிறியாதசிவன்......பிரிந்து தானாய்த்தோன்றி என் றது "உலகெலாமாகிவேறாய் உடனுமாய்" இறைவன் நின்றநிலையைக் குறித்தது.

பொழிப்பு. கேவலசகலங்களைவிடுத்து அவற்றைப் பின் பொருந்தா மலும், தற்போதமுனைப்பற்றுநின்று விட்டதைப் பின் அடையாமலும் ஆன் மாவின்கண் சிவத்தைப் பிரித்தறியாது அருளோடுகூடி அறிந்து அவ்வரு ளேயாய் நிற்கப்பெறின் சிவதரிசனமுண்டாம்.

(c) ஞானநிட்டையாளர் இருவினையொப்புண்டயோராய்த் தேகாந்தத்துப் பரமுத்தராவர்.

283. புண்ணியமே மேனோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்
புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தி னாலே
நண்ணியஞா னத்தினா லிரண்டினையு மறுத்து
ஞாலமொடு கீழ்மேலு நண்ணானாகி
எண்ணுமிக லோகத்தே முத்திபெறு மிவன்றா
னெங்கெழிலென் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்
கண்ணுதற னிறைவதனிற் கலந்து காயங்
கழிந்தக்கா லெங்குமாய்க் கருதரன்போ னிற்பன்

(இ - ள்). புண்ணியம் மேல்நோக்குவிக்கும் - புண்ணியம் சுவர்க்கஞ் சென்று இன்பத்தை நுகரச்செய்யும்,—பாவம் கீழ்நூக்கும் - பாவம் நரகஞ் சென்று துன்பத்தை நுகரச்செய்யும்,—புண்ணியனைப்பூசித்த புண்ணியத்தினாலே நண்ணியஞானத்தினால் - புண்ணியமூர்த்தியாகிய சிவபிரானை அருச்சித்த சிவபுண்ணியத்தின் பயனாய் நிகழ்ந்த சிவஞானம் என்னும் வாளினால்,—இரண்டினையும் அறுத்து - அப்புண்ணியபாவத்தொகைகள் இரண்டையும் அறுத்து.—ஞாலமொடுகீழ்மேலும் நண்ணான் ஆகி - அப்புண்ணியபாவங்களின்பயனை அநுபவித்தற்குரிய பூமிநரகசுவர்க்கங்களிற் செல்லுதலிலனாகி.—எண்ணும் இகலோகத்தே முத்திபெறும் இவன்தான் - கருதப்பட்ட இவ்வுலகத்திலே முத்தி அடைந்த இந்த ஞானநிட்டையாளன்.—ஞாயிறு எங்கு எழில் எமக்கு என் என்று - ஆதித்தன் எவ்விடத்தே உதிக்கினும் எமக்கு என்ன என்று சொல்லி,—குறைவு இன்றி - ஒரு குறைவுமின்றி,—கண்ணுதல்தன் நிறைவு அதனில் கலந்து - முதல்வனது வியாபகத்திலே கலந்து,—காயம் கழிந்தக்கால் - தேகம் நீங்கியவிடத்து,—எங்குமாய் கருது அரன்போல் நிற்பன் - எங்கும் வியாபியாய்ச் சொல்லப்பட்ட முதல்வனோடொத்து நிற்பன்.

குறிப்பு. 1. இச்செய்யுள் பரமுத்திசுத்தாவத்தையின் இலக்கணங் கூறுகின்றது. பரமுத்தியாவது, தனுவாதிகளைநீக்கி நேயத்தழுந்தலாம். அஃது ஒளியான் அறியுங் கண்ணிற்கு இருளிற்பொருள் தோன்றுதவாறு போல, அருளோடுகூடி அருள்வடிவாய் நிற்கும் பரமுத்தருக்குச் சிவம் ஒன்றுமே தோன்றுமன்றித் தனுவாதிப் பிரபஞ்சம் தோன்றாதிருத்தலாம்.

2. புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே நண்ணியஞானம்:— சரியை கிரியை யோகங்களைச் செய்தல் சிவபுண்ணியங்களாம். இச்சிவபுண்ணியங்களின் பயனாய் நிகழ்வது சிவஞானம். (செ. 263. பார்.)

3. இரண்டினையு மறுத்து ஞாலமொடு கீழ்மேலு நண்ணுஞ்:—சஞ்சிதவினை எனப்படும் புண்ணியபாவங்களிரண்டின் பயனாகிய இன்பதுன்பங்களை அனுபவித்தற்கு ஆன்மா சுவர்க்காதி மூவுலகங்களுக்குஞ் சென்று பிறந்திறந்து உழலும். அத்துவசுத்தியால் இச்சஞ்சிதவினை நீக்கப்பெறுதலால் ஆன்மா பிறத்தல் இறத்தல்களின்றி இருக்கும் என்பது.

4. எங்கெழிலென் ஞாயிறெமக்கென்று:—விருப்பு வெறுப்புக்களின்றி, சங்கற்பவிகற்பங்களின்றி எனினுமாம்.

5. கண்ணுதறனிறைவதனிற்கலந்து:—நேயத்தழுந்தி.

பொழிப்பு. சரியை கிரியை யோகங்களின் பயனாய் விளங்கும் சிவஞானம் உதித்தவிடத்து இருவினைப்பயனாகிய இன்பதுன்பங்களை நுகர்தற்கு எடுக்கப்படும் பிறவிகளினீங்கி இப்பூமியிலே விருப்பு வெறுப்புக்களற்றவராய் நேயத்தழுந்திக் காயம் நீங்கியவிடத்து எங்கும் வியாபியாய் முதல்வனோடத்துவிதமான பரமுத்தியடைவர் ஞானநிட்டையாளர்.

(*d*) ஞானநிட்டையாளர்க்கு விதிவிலக்கும் வினையும் இல்லை.

**284**. ஞானமதில் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லைச்
சீலமிலைத் தவமில்லை விரதமொ டாச் சிரமச்
செயலில்லைத் தியானமில்லைச் சித்தமல மில்லைக்
கோலமிலைப் புலனில்லைக் கரண மில்லைக்
குணமில்லைக் குறியில்லைக் குலமு மில்லைப்
பாலருட னுன்மத்தர் பசாசர்குண மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வார்.

(இ - ள்.) ஞாலமதில் ஞானநிட்டை உடையோருக்கு - இப்பூமியின்கண் ஞானநிட்டைகூடினோருக்கு,—நன்மையொடுதீமை இலை - நன்மை தீமைகளாகிய வினைகளும் வினைப்பயன்களும் வேறாக்காணப்படாவாம்,—நாடுவது ஒன்று இல்லை - அவர்வினையைச் செய்யினும் அவரால் விரும்பும் பயனொன்றுமில்லை—சீலம் இலை - அவரால் ஒழுகவேண்டியதென நியதியான சமயவொழுக்கமுமில்லை,—தவம் இல்லை - அவரால் செய்யவேண்டியதென்றதவமுமில்லை,—விரதமொடு ஆச்சிரமச்செயல் இல்லை - அவரால் அநுட்டிக்கவேண்டியதென்ற விரதங்களும் ஆச்சிரமதருமங்களும் இல்லை,—தியானம் இல்லை - மனத்தால் உன்னவேண்டிய தியானபாவனைகளும் இல்லை,—சித்தமலம் இல்லை - சித்தத்தாற் சிந்திக்கவேண்டிய பந்தனைகளுமில்லை,—கோலமிலை - காயத்தாற் கட்டிக்காட்டவேண்டிய வேடங்களுமில்லை,—புலன் இல்லை - புலன்களால் உணரப்படும் பேத உணர்வுமில்லை,-

கரணம்இல்லை - நீக்கவேண்டிய அந்தக்கரண விடயப்பற்றுமில்லை,—குணம் இல்லை - அடக்கவேண்டுமென்றதாகிய குணங்களுமில்லை,—குறி இல்லை - நிலையாய் நிற்கவேண்டுமென்ற குறியுமில்லை,—குலமும் இல்லை - கொண்டொழுகவேண்டிய குலாசாரமும் இல்லை,—பாலருடன் உன்மத்தர் பசாசர் குணம் மருவி - பாலர் பித்துக்கொண்டோர் பேய்பிடியுண்டோர் முதலியோர் தன்மைகளையுடையோராய்,—பாடலினோடு ஆடல் இவை பயின்றிடினும் பயில்வர் - ஆனந்தமேலீட்டாற் பாடல் ஆடல் முதலிய பயிற்சிகளைப் பயிலினும் பயிலுவர்.

குறிப்பு. 1. ஞானநிட்டையுடையோருக்கு நன்மைதீமைமுதலியன இல்லையென்றது தற்போதமுனைப்பின்றிச் சிவனது அருணிறைவிற் கலந்து நிற்போருக்குப் பிரிய அப்பிரிய மின்மையாலும், எங்கெழிலென் ஞாயிறெமக்கென்று குறைவின்மையாலும் சங்கற்பமே யொழிந்தமையாலும் யாதொன்றையும் பிரித்தறிந்து விரும்பி இயற்றுவதற்கு வேண்டிய பற்றின்மையாலும், மற்றைச் சரியை கிரியை யோக நிலையிலும், ஞானத்தில் கேட்டல் சிந்தித்தல் தெளித லென்னும் நிலையினும் நிற்பவர்களால் ஒழுகவேண்டிய ஒழுக்கம் முதலியன அவசியமன்று என்றதாம். ஆயினும் ஞானிகளல்லாத மற்றையோர் தத்தமொழுக்கத்தைக் கைவிடாதநுட்டிக்குமாறு உலகத்துறுதியுன்னி ஞானியரும் உலகத்தோடொட்டி யிருக்குமளவும் சற்கருமமே செய்தொழுக வேண்டுமென்பது "பெறினுமபேதம் பிரமத்துலகிற், குறுதியுனிச் செய்க வினையும்" என்னும் சைவசமயநெறியாற் காண்க. "ஞானிகளுக்கு விதித்தனசெய்தலும் விலக்கியனவொழிதலும் வேண்டாம், அவர் செய்தனவெல்லாம் தவமாகலின்" என்பர் சிவஞானமுனிவர்.

2. பாலருடனுன்மத்தர் பசாசர்குண மருவி:—பாலர் விடயத்தைப் பற்றியறிந்து விரும்பிவினைபுரியுந் தன்மைமுற்றுமின்மையால் அவர் ஞானியரது செயலின்மைக்கும், உன்மத்தர் சுயபுத்தியுள்ளபோ தறிந்து விரும்பிப் புரிந்தும் அஃதில்லாதபோது கொன்னே வினைபுரிந்தும் நிற்றலில் அவர் ஞானியர் ஒருகாற் செய்தொருகாலொழிதற்கும், பசாசர் தம்செயலை முற்றுமின்றிப் பேயின்செயலாய் வினைபுரிவராதலின் அவர் ஞானியர் செயலிழப்பினின்று செய்தற்கும் உவமையாயினர்.

3. பாடலினோடாடலிவை பயின்றிடினும் பயில்வர்:—பரமானந்தமேலீட்டாற் செய்வதென்னென வறியாது பாடியாடித்திரியினும் திரிவர் என்றது. எனவே துக்கம் முதலிய மனக்கலக்கமான குணங்களைக் கொள்ளார் என்பதும் பெறக்கிடந்தது.

பொழிப்பு. இவ்வுலகத்திலே ஞானநிட்டைகூடினோர் நன்மைதீமை முதலியனவற்றிற் பற்று அற்றவராய் பாலர் உன்மத்தர் பேய்பிடியுண்டவர் என்னும் இவர்களைப்போல வினையியற்றுபவராய்ப் பாடல் ஆடல் முதலிய ஆநந்தக்குறியாந் தொழில்களைச் செய்யினும் செய்திருப்பர்.

### (e). இருவினையொப்பினியல்பு.

**285.** தேசமிடங் காலந்திக் காசனங்க ளின்றிச்
  செய்வதொன் றுபோற்செய்யாச் செயலதனைச் செய்தங்
கூசல்படு மனமின்றி யுலாவ னிற்ற
  லுறக்கமுணர் வுண்டிபட் டினியிருத்தல் கிடத்தல்
மாசதனிற் றூய்மையினின் வறுமை வாழ்வில்
  வருத்தத்திற் றிருத்தத்தின் மைதுனத்திற் சினத்தின்
ஆசையினின் வெறுப்பினிவை யல்லாது மெல்லா
  மடைந்தாலு ஞானிகடா மரனடியை யகலார்.

(இ - ள்.) ஞானிகள் - ஞானநிட்டை கூடியுள்ளோர்,—தேசம் இடம் காலம் திக்கு ஆசனங்கள் இன்றி - தேசம், இடம், காலம், திக்கு, ஆசனம் என்பவற்றுள் இயைந்தன இவை, இயையாதன இவையென்ற சங்கற்பமின்றி,—செய்வது ஒன்றுபோல் செய்யா - உலகர் தற்போதமுனைப்புடனின்று விரும்பி ஒன்றைச்செய்வதுபோலச் செய்யாத,—செயல் அதனை செய்து - தொழில்களைச்செய்து,—அங்கு ஊசல் படுமனம் இன்றி - அவ்வாறு செய்யுந் தொழில்கள் பற்றி மனம் சலனமடைதலின்றி,—உலாவல் நிற்றல் - நடத்தல் நடவாது நிற்றல்,—உறக்கம் உணர்வு - உறங்குதல் உறங்காது விழித்தல்,—உண்டி பட்டினி - உண்ணுதல் உண்ணாது பட்டினியிருத்தல்,—இருத்தல் கிடத்தல் - இருத்தல் இருக்காது கிடத்தல்,—மாசதனில் தூய்மையினில் - அசுத்தமாயிருத்தல் அன்றிச் சுத்தமாயிருத்தல்,—வறுமைவாழ்வில் - வறுமையிற்றயங்கல் அன்றிச் செல்வத்துளழுந்தல்,—வருத்தத்தில் திருத்தத்தில் - நோயில் வருந்தல் அன்றிச் சுகத்தில் மகிழ்தல்,—மைதுனத்தில் சினத்தில் - சேர்க்கையில் மகிழ்தல் அன்றிப் பிரிதலிற் சினத்தல்;- ஆசையினில் வெறுப்பில் - ஒருபொருள் மாட்டுற்ற பற்றினால் ஆசை கொள்ளல் அல்லாவிடத்து வெறுத்தல்,—இவை அல்லாதும் எல்லாம் அடைந்தாலும் - இவையேயல்லாது இவைபோன்ற இருமைத்தன்மையான எவ்வகை வினைகளுட்பட்டாலும்,—அரனடியை அகலார் - சலனமின்றி முதல்வனது திருவடிகளை விட்டு நீங்குவாரல்லர் (ஆகையால் இருவகை வினைகளிலும் ஒத்த அநுபவமே உடையராயிருப்பர்).

குறிப்பு. 1. தேசம் இடம் காலம் திக்கு ஆசனங்கள் என்பனவற்றை இயைந்தமுறையில், பின்கூறிய, உலாவல், உறக்கம், உண்டி, இருத்தல், மாசு, வறுமை, வருத்தம், மைதுனம், ஆசை என்பனவற்றோடும் அவற்றின் எதிர்மறையான நிற்றல் முதலியனவற்றோடும் மற்றும் இவைபோன்ற இருவகைப்பட்ட வினைகளும் வினைப்பயன்களுமாகிய யாவற்றோடும் ஒட்டி நோக்குக. நிற்குமிடம் காலம் திக்கு இருக்குமிடம் தேசம் காலம் திக்கு ஆசனம் என்றபடி. எனவே இருவகை வினைகளிலும் வினைகளுக்குபகாரண

மான தேசாதிகளிலும், வினைப்பயன்களாகிய சுகதுக்கங்களினும் சலனமின்றி அரனடியை யகலாதிருத்தலே இருவினையொப்பு என்பது. "ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றிப் புண்ணிய பாவமிரண்டினும் அவற்றின் பயன்களிலும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனதறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறொப்ப நிகழ்ச்சிமேல ஈண்டு இருவினையொப்பென்றதற்குப் பொருளென நுண்ணுணர்வாற் கண்டுகொள்க" என்பர் சிவஞான முனிவர். (சி-ஞா-பா.363-பக்).

2. செய்வதொன்றுபோற் செய்யாச்செயல்:—உலகர் உலகியனெறியிற் தமது சிற்றறிவுகொண்டறிந்து விரும்பி வினைகளைச் செய்வர். ஞானியரோ அவ்வாறன்றித் தற்போதமுனைப்பும் விருப்புமின்றியே வினைகளை இயற்றுவர் என்பது. "அறியாதேயறிந்து .....குறியாதேகுறித்து......" என்றதுவும் இதுவேயாம் (செ-282-கு-2-பார்).

3. ஊசல்படுமனமின்றி:—உலகர்க்குமனம் ஒருக்காலின்பமும் ஒருக்காற்றுன்பமுமாகிய அநுபவங்களுட்பட்டு ஊசல்போற் சலனப்பட்டுழலும். ஞானியர்க்கு அந்தக்கரணங்கள் யாவுமடங்கினமையின் மனமும் சலனமற்று ஒருவழிப்பட்டிருக்குமென்பது. "அந்தக்கரணங்களோடுங் கூடாதே வாடாதே" என்றதுவும் இதுவேயாம். (செ-282-கு-2-பார்).

பொழிப்பு. ஞானநிட்டை கூடினோர்க்குத் தேசம் முதலிய உபகரணங்களோடு நிற்றல் இருத்தல் முதலிய இருவகைத்தாம் வினைகள் யாவற்றிலும் ஒத்த அநுபவமேயிருக்கும். அவர் எவ்வினைசெய்யினும் அரனடியை அகன்றிரார்.

(f) ஞானநிட்டை முடியாதோர்க்கு உபாயநிட்டை.

**286.** இந்நிலைதா னில்லையே லெல்லா மீச
னிடத்தினினு மீசனெல்லா விடத்தினினு நின்ற
அந்நிலையை யறிந்தந்தக் கரணங்க ளடக்கி
அறிவதொரு குறிகுருவி னருளினா லறிந்து
மன்னுசிவன் றனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனிற் றுரியா தீதந்
தோன்றமுயல் சிவாநுபவஞ் சுவாநுபூ திகமாம்.

(இ-ள்.) இந்நிலைதான் இல்லையேல் - இவ்வாறு ஞானநிட்டை கூடல் முடியாதாயின்,—எல்லாம் ஈசனிடத்தினினும் ஈசன் எல்லா இடத்தினினும் நின்ற அந்நிலையை அறிந்து - சடசித்துக்கள் யாவும் முதல்வனிடத்து வியாப்பியமாயும் முதல்வன் எங்கும் வியாபகமாய் அவற்றோடு கலந்து அத்துவிதமாயும் நிற்கும் மெய்ந்நிலையை நூலாராய்ச்சியாலறிந்து,—அந்தக்கரணங்கள் அடக்கி - (பொறிபுலன்) கரணங்களை ஒருவழிப்பட அடக்கி,—

அறிவதொருகுறி - அறிவுமாத்திரத்தான் உணர்வதாகிய ஒருபாவனையை,—குருஅருளினால் அறிந்து - ஆசாரியனது அருளுபதேசத்தால் அறிந்து,—மன்னுசிவன்தனை அடைந்து நின்று - அவ்வறிவினால் நிலைபெற்றசிவனைச் சேர்ந்து நின்று,—அவன்றனாலே - அவ்வாறு அறிவினாற் கண்ட சிவனருளினால்,—மருவு பசுகரணங்கள் சிவகரணமாக - பொருந்திய சீவச் செயல்கள் யாவும் சிவச்செயல்களாகக் கண்டு,—துன்னியசாக்கிரம் அதனில் - கருவிகளோடு கூடிய சாக்கிராவத்தையிலே,—துரியாதீதம் தோன்றமுயல் - அக்கருவிகளின் செயலற்று நிற்கும் துரியாதீத நிலை ஒருவாறு கைவர முயல்வீராக,—சிவாநுபவம் சுவாநுபூதிகமாம் - அங்ஙனம் முயல்வீராயின் சிவபோகம் தமக்கென உரித்தாய அநுபவமாக விருக்கும்.

குறிப்பு 1. இந்நிலை:—மேல் "அறியாமையறிவகற்றி அறிவினுள்ளேயறிவுதனை யருளினாலறியாதே யறிந்து, குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும் கூடாதேவாடாதே குழைந்திருப்பை" என்ற ஞானநிட்டைநிலை. (செ-282.) இஃது "அகம்புறமென்னுமல் லிங்கனும் ஏகநிலையாய்க்கண்டு இறைநிறைவில் அழுந்துவதாயநிலை" என்பர் சிவஞானமுனிவர். இந்நிலையை அடைவது உலகியலில் ஒழுகுவோர் பலர்க்கும் முடியாதாகையின், அவ்வாறு ஒழுகுவோரும் சிவாநுபவத்தை முற்றிலுமே யநுபவித்திருக்காவிடினுந் தமக்கெனவுள்ள அநுபவங்களில் ஒன்றாக இடையிடையே ஒருக்காற் கண்டநுபவித்தழுந்தப் பயிற்றும் உபாயநிட்டை கைவரப்பெற்றுய்யவும் அதனானேபக்குவம் வந்தடைந்தால் உண்மைஞானநிட்டை கைவரப்பெற்று முத்தி கூடவும் ஆகிய நெறியைக் காண்பிக்கவுற்றது இச்செய்யுளென அறிக.

2. எல்லாமீசனிடத்தினினு மீசனெல்லாவிடத்தினினு நின்ற அந்நிலையை யறிந்து:—சடசித்துக்கள் சிவத்துளடங்கிநிற்ப, சிவம் யாண்டும் கலந்துடனாய்நிற்ப, உயிர் சென்று பற்றுதற்கும் விடுதற்கும் சிவனேயன்றி வேறுபொருளில்லை யெனக்கண்டு யாவும் சிவசொரூபமாகவும் எச்செயலும் சிவச்செயலேயாகவும் கண்டறிந்து நிற்குநிலை. இதனையே "அன்றேயென்றனாவியுமுடலுமுடைமை யெல்லாமும், குன்றேயனையாய் என்னையாட்கொண்டபோதே கொண்டிலையோ, இன்றோரிடையூறெனக்குண்டோ, எண்டோள்முக்கணெம்மானே, நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோவதற்கு நாயகமே" எனத் திருவாசகத்தும் கூறியுள்ளதாம்.

3. அந்தக்கரணங்களடக்கியறிவதொருகுறி - மனம்பொறிகளின் செயலற்று நின்று அறிவினாலுணரப்படும் ஒருகுறி. இது குருவடிவினதல், மற்றும் விநாயகர், முருகன், நடராஜமூர்த்தி முதலிய சிவவடிவினதல், மந்திரத்தின்வடிவமாகிய யந்திரங்களினதல் கண்ணிமைக்கு மளவோ, அம்பெய்தாலது போய்விழுமளவோ, பசுக்கறக்குமளவோ கூடியவளவுக்கு மனம் முதலியவற்றின் சேட்டைகள் நிகழாவண்ணம் சாக்கிரத்திலதீதமாகிய நிலை கூடுவதற்குக் குருவினால் நித்திய உபாசனைக்கு அருளப்பட்ட யந்திரமந்திர

உபாசனமூர்த்திகளாம். கண்முதலிய பொறிகளுள் ஒன்றையே தொழிற்செய்ய விட்டு மற்றையவற்றை அடக்கிப், பின் தொழிற்செய்யுமதையும் அடக்கி, மனத்தைமாத்திரம் உலாவவிடுத்தும், பின் மனத்தையும் அடக்கித் துரியாதீதம்கூட்டியும் சிவாநுபவத்தழுந்தச் செய்தற்கு உருவடிவங்களும் யந்திரக்குறிகளும் அவசியம் வேண்டிய வென்பதும் அவற்றோடு யந்திரங்களும் கந்தவர்க்கமும் வீபூதி உருத்திராக்கம் பட்டு மரவுரி மான்றோல் திருவருட்பாஓதல் முதலியவும், செவி மூக்கு மெய் வாய் முதலியவற்றை அடக்குமாறு வேண்டியவென்பதும் ஊன்றியாலோசித்துய்த்துணரக் கிடந்தது.

4. சிவன்றனையடைந்து .....சாக்கிரமதனிற்றுரியாதீதம்தோன்ற:— சிறிதுபோழ்தேனும் சிவத்துடன் கலந்து தன்னை யிழந்து நிற்குநிலை. இதுவே "சும்மாவிருக்கைசுகம்" என்ற நிலையாகும்; இந்நிலையிற் தானென்ற அறிவே அற்றமையின் பசுபோதமறச் சிவபோதமே தலைப்பட்டு நிற்குமாதலான், "பசுகரணங்கள் சிவகரணமாக" என்றதாம். துரியாதீதம் தோன்ற என்றமையால், உண்மைநிட்டையாளர்க்குத் துரியாதீதம் அடைவாய்க் கூடியிருப்பதும், இங்கு சொல்லியபடி உபாயநிட்டை முயல்வோர்க்கு இடையிடையே தோன்றிநின்றகல்வதும் கூறியதாமென்க. துரியாதீதம் - கேவலசகலப்படாமலும், தற்போதச்சேட்டையின்றியும் சிவத்தொடு ஏகனாய் நிற்குநிலை. இது சாக்கிராதீதம் எனவும்படும்.

5. சிவாநுபவம் சுவாநுபூதிகமாம் - சிவத்தோடு இரண்டற அழுந்திநிற்கும் உண்மை நிலையும் தமக்கெனப் பெறத்தக்க நிலையாய்வரும். எனவே உண்மைநிட்டையாளருக்குச் சுவயமாகவுள்ள சிவாநுபவம் உபாயநிட்டையாளருக்குச் சுவாநுபூதிகமென்ற உரிமைப்பொருளாய் இருக்கும் என்றதாம். ஒருவகை நிட்டையுமில்லார்க்கு உரிமையில்லாததென்பதும் இதிலிருந்தறியக்கிடந்தது. சுவ - தனக்குரிமையாகிய; அநு - பின்உண்டாகும் பூதி - ஐசுவரியம்.

பொழிப்பு. ஞானநிட்டை கைவரப்பெறாதாயின் சடசித்துகள்யாவும் சிவமயமாகவும், சீவச்செயல்கள்யாவும் சிவச்செயல்களாகவும் கண்டுணர்ந்து குருவருளானருளப்பட்ட உபாசனையைக் கைக்கொண்டு சாக்கிரத்திற் றுரியாதீதம் பெற முயற்சித்துவரின், சிவபோதம் தமக்கென உரித்தாய அநுபவமாகவிருக்கும்.

(g) உபாயநிட்டையினாற் சாக்கிராதீதம் கூடினோரியல்பு.

**287.** சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்க ளுலகிற்
　　சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்க ளிவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுவெ னிம்மையிலே யுயிரின்
　　பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவ ரன்றே

ஆக்குமுடி கவித்தரசாண் டரிவைய ரோ
டநுபவித் திருந்திடினு மகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலு
நுழைவர்பிறப் பினின்வினைக ணுங்கிடாவே.

(இ - ள்.) சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் - மேற்கூறியவாறு சாக்கிரத்திலிருந்துகொண்டு கருவிகள் கடந்த அதீதத்தைப் பொருந்தினவர்கள்,—உலகில் - இப்பூமியின்கண்ணே,—சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் - எல்லாப்பற்றையும் ஒழித்த தபோதனர்களாவர்.—இவர்கள் பாக்கியத்தைப் பகர்வதுஎன் - இவர்கள் முற்பிறவியிற் செய்த புண்ணியப்பேற்றைச் சொல்வது எவ்வாறு,—இம்மையிலே உயிரின் பற்று அறுத்துப் பரத்தை அடை பராவு சிவர் அன்றே - இம்மைக்கண் உயிர்ப்பற்றை நீக்கிச் சிவத்தைக் கலந்து யாவராலும் வணங்கப்படும் சிவன்களாவர்,—அவர்கள் ஆக்குமுடி கவித்து அரசு ஆண்டு - அவர்கள் ஆக்கப்பட்டமுடியினை அணிந்து அரசாட்சிசெய்து,—அங்கு அரிவையரோடு அநுபவித்து இருந்திடினும் - அவ்விடத்து மாதரோடு கூடி அநுபவித்து இன்புற்றிருந்திடினும்,—அகப்பற்று அற்று இருப்பர் - அகப்பற்றின்றி இருப்பர்.—நோக்கியிது புரியாதோர் புறப்பற்று அற்றாலும் - ஆராய்ந்து இவ்வகைப்பற்று நீங்காதோர் புறப்பற்று நீங்கினும்,—வினைகள் நுங்கிடா - வினைகள் கெடாவாதலின்,—பிறப்பினின் நுழைவர் - பிறப்பிற்படுவர்.

குறிப்பு. 1. சருவசங்கநிவிர்த்தியினும் உயர்ந்ததருமமேயில்லை. தருமமாவது பெரும்பான்மையும் தானம் தவம் என்கின்ற இரண்டின்கண்ணே அடங்கும். சருவசங்கநிவிர்த்தியாவது சிவனிடத்தே உடல் பொருள் ஆவிமூன்றையும் சத்தியமாக ஒப்புவித்து எவ்விடத்தும் தனது சுதந்திரத்துவம் தோன்றாமை நிற்றலின், இதற்குமேலாகிய தானமும் இல்லை. அங்ஙனம் அது தோன்றாமல் நிற்போர்க்குச் சிவமேயொழியத் தானும் பிறருந் தோன்றாமையின், யான்செய்தேன் பிறர்செய்தார் என்னும் இதாகிதங்களிலே பற்றுச்சிறிதும் உண்டாகாமையின் இதற்கு மேலாயதவமும் இல்லை. சங்கம் - விருப்பு, பற்று.

2. உயிரின்பற்று - புறப்பற்று, அகப்பற்றுக்கள். இவற்றுள், புறப்பற்று உயிர்ச்சார்பும் பொருட்சார்பும் என இருவகை. பெண்டிர் பிள்ளை முதலியன உயிர்ச்சார்பு. காணிமுதலியன பொருட்சார்பு. அகப்பற்று - உடற்கரணப்பற்று; அதுதானல்லாத உடம்பையும் கரணங்களையும் தான் எனக்கருதி அதன்கட்செய்யும் பற்று.

3. பராவுசிவர் - எவராலும் வணங்கப்படுந்தன்மையராய்ச் சிவத்துவமுடையோராவர். சிவன் என்றது விட்டுவிடாதலக்கணையால் ஆகுபெயராகிப் புரிந்தவர்கள் என்பதற்கியையப் பன்மைவிகுதிபெற்றது. குணம்பற்றிய குறிப்புவினைமுற்றெனினுமாம். "சஞ்சரிக்கின்ற சிவமேயாவர்" என்பர் சிவஞானமுனிவர்.

4. ஆக்குமுடிசவித்தரசாண்டவர்களரிவையரோடநுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற்றிருப்பர்:—மேற்கூறிய இருவகைப்பற்றுக்களுள், புறப்பற்று நீங்கிய பின்னரே அகப்பற்று நீங்குதலாலும், இத்தம்போதனர் சர்வசங்கநிவிர்த்தியுடையராய்ப் புறப்பற்று அகப்பற்றுக்களிரண்டுமின்றி இருத்தலாலும், அரசாளுதலும் அரிவையரோடின்புறுதலும் இல்லை என்பதேதுணிபாம். உம்மை எதிர்மறைக்கண் வந்தது.

பொழிப்பு. சாக்கிரத்தில் நின்மலதுரியாதீதத்தைப் பொருந்தினவர்கள் இப்பூமியின்கண்ணே புறப்பற்றும் அகப்பற்றும் ஆகிய பற்றுக்கள்யாவையும் ஒழித்துச், சிவத்துடன் கலந்து சிவமேயாவர். புறப்பற்று நீங்கி அகப்பற்றுடையோர் பிறப்பிற்படுவர்.

2. ஞானநிட்டையாளர் அநுபவமாகிய அத்துவித இரகசிய இன்பத்தியல்பு.

288. கருவிகழிந் தாற்காணா தொன்றுமெனிற் காணார்
காணாதார் கன்னிகைதான் காமரதங் காணாள்
மருவியிரு வரும்புணர வந்த வின்பம்
வாயினாற் பேசரிது மணந்தவர்தா முணர்வர்
உருவினுயிர் வடிவதுவு முணர்ந்திலர்காண் சிவனை
யுணராதா ருணர்விலு ணர்வதுகற் பனைகாண்
அருள்பெறினவ் விருவரையு மறிவிறந்தங் கறிவ
ரறியாரேற் பிறப்பும்விடா தாணவமு மறுமே.

(இ-ள்). காணாதார் - திருவருளொளிகொண்டு காணமாட்டாதார்,—கருவிகழிந்தாற் காணார் - கருவிகள் (கூடாதும் தொழிலற்றும்) கழிந்தாற் காணமாட்டார்,—ஒன்றும் எனிற் காணார் - (காட்சிப்பொருள் தம்மின் வேறாகாது) ஒன்றியிருக்குமாயிற் காணமாட்டார்,—கன்னிகைதான் காமரதம் காணாள் - அப்பேதை கன்னிப்பருவத்துப் பெண் (பக்குவமின்மையாலும் அநுபவமின்மையாலும்) காமவின்பத்தின் சுவையை அறியமாட்டாளாதலும்,—மருவி இருவரும் புணரவந்த இன்பம் வாயினாற் பேச அரிது மணந்தவர்தாம் உணர்வர் - சேர்க்கையிற் தலைவன் தலைவியராகிய இருவருங் கூடிச் சுவைக்கு மின்பம் பிறர்க்கு வாயினாற் கூறி விளக்க முடியாது மணந்தநுபவித்தோர்க்கே தெரியவருவதும் போலும்,—உணராதார் உருவின் உயிர்வடிவதுவும் உணர்ந்திலர்காண் - (அருளுணர்விலால்) அறியுமாற்றலில்லாதார் இவ்வுடம்பிற் செறிந்தொன்று பட்டிருக்கும் உயிரையே உணர்ந்தறியமாட்டார்,—சிவனை உணர்விலால் உணர்வது கற்பனைகாண் - அவர் உணர்விலாற் பேரின்பமாகிய சிவத்தை அறிவர் என்பது கற்பனைமொழியேயாகும்,—அருள்பெறில் அவ்விருவரையும் அறிவு இறந்து அங்கு அறிவர் - திருவருள் கைவரப்பெற்றபோதே சீவன் சிவன் என்ற இருவரையும் பாசபசுஞானங்கள் அகல மெய்யறிவானறிவர்.—அறியாரேல் பிறப்

பும் விடாது ஆணவமும் உளது - அவ்வாறு அறியாதிருப்பார்க்குப் பிறப்பு விட்டு நீங்குவது யில்லை ஆணவமாசு அகல்வதுமில்லையாம்.

குறிப்பு. 1. இச்செய்யுள் ஐம்புலவேடரினையர்ந்து அவரை நீங்கிய பசுவாகுந்தலைவி பதியாகுந் துணைவனோடுகூடி அவனே தானாய்க்கலந்து அத்துவிதப்பட்டநுபவிக்கு மின்பம் இரகசியமாதலாற் பிறர்க்குரைக்கற்பாலதல்லவென்பதனை உவமைமுகத்தால் விளக்கியதாம். "பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரத்தைப் பெற்றோர் அதன்மேலும் கரணங்கடந்த அதீதத்தைப் புரிதற்கு அறிவு செல்லுமாறு யாங்ஙனம் என்னுஞ் சிவசங்கிராந்தவாதிகளை மறுக்குமுகத்தால் 'துன்னியவைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையுமறியாது துயருறுந்தொல்லுயிர்' என்ற மூன்றாங்கூறு வலியுறுத்தப்பட்டது" என்பர் சிவஞானமுனிவர்.

2. கருவி கழிந்தாற் காணேர் ஒன்றுமெனிற் காணேர்......மணந்தவர் தாம் உணர்வர்:—அளவையினறியப்படுவன சகலத்தறிவனவாயும் கேவலத்திலும் வேறுகண்டறியப்படுவனவாயும் இருப்பனவாம். முத்தியின்பமோ அவ்வாறறியப்படாததாய் வேறற்ற ஒன்றாம் இயல்புடைத்தாகலின் அது காட்சி அநுமானம் உரையென்னும் மூவகை யளவைகளாலும் அளந்தறியப்படாதென்றதாம். இந்திரியம், மானதம், தன்வேதனை, யோகம் என்னும் நால்வகைக் காட்சியும் தத்துவதாத்துவிகங்களை யொட்டியே நிகழ்தலால் முத்தியின்பம் காட்சியளவையானறியப்படாது என்றும், தன்பொருட்டும் பிறர்பொருட்டுமாய இருவகை அநுமானங்களும் மறைபொருளை அதனோடுடனிகழும் ஏதுக்கொண்டறிவதாதலான் தன்னின் வேறாகாது ஒன்றி நின்றநுபவிக்கப்படும் முத்தியின்பம் அநுமான வளவையானறியப்படாதென்றும், உடம்பாடு எதிர்மறையா மிருவகை உரைகளும் தன்னின் வேறாய் அறியப்படாத பொருளை அறிந்தார் மொழிகளாற்கேட்டு விளங்கி யறிவதாதலான் தன்னின் ஒன்றிய முத்தியநுபவம் ஆகமவளவையானறியப்படா தென்றும், விரித்து விளங்கக்கிடந்தது காண்க. கருவி கழிந்தாலென்றது கலாதிகளில்லாதிருத்தலும் இருந்தும் செயலற்றிருத்தலுமாகிய கேவலத்தைக் குறிப்பித்தமை பருவமடையாதும், அடைந்தும் மணவினை அநுபவமில்லாதும் இருக்கும் கன்னிகையின் உவமையிலிருந்து காணலாகும். மருவிப் புணரவந்த வின்பம் வாயினாற் கூறரிது எனவே முத்தி யின்பம் பரம இரகசியமாம் என்றபடி. இதுவே சிதம்பர இரகஸ்யம், கதிர்காம இரகஸ்யம் என்பனவற்றிலிருந்து அறியற்பாலதுமாம்.

3. உருவினுயிர்வடிவாதலும்......கற்பனைகாண்:—அருளறிவினால் உணரும் உணர்ச்சியில்லாதார் உடம்பிற் செறிந்திருக்கு முயிரையே தெரியாதிருப்பதுண்மையாக, அத்தகையோர் உயிருக்கும் உயிராயிருக்கும் சிவத்தை அறிந்துணர்வர் என்பது புனைந்துரையேயாமன்றி உண்மையாகாது.

உணர்வினாலுணர்வது - கேவலசகலப்படும் பாசஞானத்தாலும், தற்போதங் கூடிய பசுஞானத்தாலும் அறிந்து தெளிதல்.

கற்பனை - என்பதற்குப் பாவனாமாத்திரை யெனக் கூறிச் சிவோக மறிவாகிய உபாய நிட்டையைக் குறிப்பதாகக் கூறலு மொன்று.

காண் - என்றது சுட்டுரைக்கண் வந்த தசை நிலையென்பர் சிவஞான முனிவர். அது கூறும் பொருளை யுறுதிப்படுத்துதற்கண் வந்தது.

பொழிப்பு. கருவிகளில்லாதும் தொழிலற்றும் கழிந்தபோது காணுந் தன்மையில்லாதிருக்கும் அருளொளியில்லார் ஒன்றுபட்டு நிற்கும் முத்தி யின்பத்தைக் காணுந் தகையரல்லர். அஃது காமவின்பங் கன்னிக்குத் தெரி யாததுபோலவும், சேர்க்கையின்பம் மணவாதார்க்குத் தெரியாததுபோல வுமாம். உடம்பிற் செறிந்தியங்கு முயிரையே உணர்ந்தறிய மாட்டாத அரு ளுணர்வில்லார் உயிர்க் குயிராய் நிற்கும் சிவத்தைத் தம்முணர்வாலுணர் தல் கூடுமென்பது கற்பனைமொழியேயாம். திருவருளாற் பாச பசுஞானங் களகல மெய்யறிவாற் சிவனையும் சீவனையும் அறிபவர்க்கன்றி ஏனையோர்க் குப் பிறவியும் மலமாசும் நீங்காது.

3. ஞானநிட்டையாளர் பேறும் அத்துவிதப்பரமுத்தி இயல்பு.

**289.** பன்னிறங்க ளவைகாட்டும் படிகம்போ லுள்ளம்
பலபுலன்க ணிறங்காட்டும் பரிசு பார்த்திட்
டிந்நிறங்க ளென்னிறமன் றென்று தன்ற
னெழினிறங்கண் டருளினா லிந்நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிறமைம் புலநிறங்கள் பொய்யெனமெய் கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னை
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்னீங்கா முறைபோல்.

(இ - ள்.) பல்நிறங்களவை காட்டும் படிகம்போல - தன்னையடுத்த பல நிறங்களின் இயல்பே தனது இயல்பாகக் காட்டிநிற்கும் படிகம் போல,—உள்ளம் பலபுலன்கள் நிறம்காட்டும் பரிசுபார்த்திட்டு - ஆன்மா வும் தன்னையடுத்த பல கருவிகளின் இயல்பே தனது இயல்பாகக்காட்டி நிற்குந்தன்மையை அறிந்து,—இந்நிறங்கள் என்நிறம் அன்று என்று தன் றன் எழில் நிறம் அருளால் கண்டு - இந்தக்கருவிகளிலழுந்திநின்ற இயல் புகள் எனது இயல்பன்று என்று தேர்ந்து தனது சிறப்பியல்பு இவற்றின் வேறு என்று திருவருளால் அறிந்து,—இந்நிறத்தின் வேறாய்ப்பொய்ந்நிற ஐம்புல நிறங்கள்பொய் என மெய்கண்டான் - இச்சிறப்பியல்புக்கு வேறாய்ப் பொய்த்தன்மையான ஐம்பொறிமுதலிய கருவிகளோடு மயங்கி அவற்றின் வண்ணமெனத் தன்னை நினைத்திருந்த இயல்பு பொய்யென்ற உண்மையை அறிந்தவன்,—சிவத்தினொடும் பொருந்திடுவன் - சிவத்தைப் பொருந்து வன்,—பின்னைபோதான் - மீள அக்கருவிகளோடும் கூடுவானல்லன்,—

முன்நிறைநீர் சிறைமுறிய முடுகி ஓடி - முன்னர்த்தடையுண்டு நிறைந்து நின்ற நீரானது அத்தடைதீர்ந்தபோது விரைந்தோடி,—முந்நீர்சேர்ந்து அந்நீராய் - கடலின்நீரைப் பொருந்தி அந்நீராய்,—பின் நீங்காமுறைபோல் - பின் மீளாது அடங்கி நிற்றல்போலாம்.

குறிப்பு. 1. இச்செய்யுள் ஐம்புலவேடரினயர்ந்து அவர்வசமாய்த் துணைவனையு மறியாது நின்றவுயிர் தான் அவர்களின் வேறென்று தனது மெய்ந்நிலையைக்கண்டபோது துணைவனுகிய சிவனேடும் அத்துவிதக்கலப் புற்று மீண்டும் ஐம்புலவேடர்வசப்பட்டு வருந்தும் அவதியின்றி ஐக்கியப் பட்டு நிற்கும் பரமுத்தியினியல்பை உவமைமுகத்தான் விளக்கியதாம்.

இச்செய்யுள் முதனூலில் "ஆன்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணராவென்றது" என்னும் 8-ம் சூத்திரத்து 3-ம் அதிகரணத்துக் காட்டிய "பன்னிறமேகாட்டும்" என்ற உதாரண வெண்பாவையும், "இனியிவ்வான்மாத்தன்னை யிந்திரியத்து வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தையணையுமென்றது" என்னும் 8-ம் சூத்திரத்து 4-ம் அதிகரணத்துக் காட்டிய "சிறைசெய்யநின்ற செழும்புனலினுள்ளம்......" என்ற வெண்பாவையும் இயைந்த பொருளுேக்கி ஒருங்குபடுத்திக் கூறுதலினுல், வழிநூலாசிரியர் முதனூலோடொப்பத் தமது நூலிலதிகரணங்கற்பித்தும், அற்றேல் கற்பிக்க இயைபுரைத்தும், நூலியற்றினுரென்று என்பதைக் காட்டியது காண்க. பின் வழிநூலினுரையாசிரியர்கள் அதிகரணப்படுத்தியது யாங்ஙனே என்னில். முதனூலோடொப்ப இயைபும்பொருளும் மொழியும் ஒத்தவிட நோக்கியும் சூத்திரத்தொகுப்புச் செய்யுளிலுள்ள, பொருண்முடிபுகள்நோக்கியும் வகுத்ததா மென்க.

2. பன்னிறங்களனை......பார்த்திட்டு:—படிகம்தன்னிற்கலந்த நிறத்தைத் தனதுபோற் காட்டும் தன்மையதாம். அதுபோல் ஆன்மாவும் கருவி கரணமாகிய பாசத்தோடடுத்து நின்று தன்னை அசத்தெனவும், பதியோடடுத்த ஞான்று தன்னைப் பதியாம் வண்ணமாயும் காணுந்தன்மைத்தென்பது (செ. 251, 252-பார்).

3. இந்நிறங்களென்னிறமன்றென்று......மெய்கண்டான் பொருந்திடுவன் சிவத்திலெனுடும்:—இந்த ஐம்புலன் கருவிகரணங்களோடுகூடி அவையேதானென அயர்ந்திருந்த நிலைமை தனதுண்மை நிலையன்றெனக் குருவருள்கூட்டி யுதவிய பதிஞான முதிர்ச்சியால் உண்மையைத் தெரிந்தவன் சிவசாயுச்சியமாகும் பரமுத்தியையடைவன் என்பது. நிறம், ஈண்டு இயல்பு என்னும் பொருள் பயந்து நின்றது.

4. போதான்பின்னை முன்னிறைநீர்......பின்னீங்காமுறைபோல்:—பரமுத்தியெய்தினேர் ஐம்பொறிபின்மீளினும் இழுக்கில்லையென்பர் சிவசங்கிராந்தவாதிகள். முத்தியடைந்த ஆன்மாக்களும் ஒரு மஹா கற்பத்தின் பின் உலகிற்றிரும்பும் என மண்டோக்கியம் III. 2 (6) சுலோகத்தை யெடுத்துக்காட்டிக் கூறியுள்ளார். ஆரியசமாஜத்து நிலையினர் சுவாமி தயா

சங்கசரஸ்வதிகள் (சத்யார்த்த. அதி. 9-பக் 263). அக்கூற்றும் பதமுத்தி யையேயன்றிப் பரமுத்தியையன்றென்பது சித்தாந்தப்பசித்தியாது இச் செய்யுளானறிக. மஹாகற்பம் பிரமாவின் பூரண ஆயுசுகாலம். இது 432 கோடி மானுடவருடங்கொண்ட பிரமநாள் 36000 கொண்டதாம்.

இவ்வுண்மை "தொண்டலாற் றுணையுமில்லைத் தோலலா துடையுமில்லை, கண்டலா தருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லைப், பண்டைநான்மறைகள் காணாப் பரிசினனென்றென்றெண்ணி, அண்டவானவர்கணேத்து மையனையாறனார்க்கே" என்னும் அப்பர் தமிழ்மறையினும் அறியலாகும்.

பொழிப்பு. ஆன்மா தன்னை அடுத்த கருவிகளின் இயல்பே தனது இயல்பாகக்காட்டிநிற்குந் தன்மையை யறிந்து இக்கருவி இயல்புகள் தனது சொரூப இயல்பன்று என்றும், இவை தனக்கு அந்நியமென்றும், பொய்ப் பொருளாய் அழிந்துபோவன என்றும் திருவருளால் இவற்றினதுண்மை யையறிந்தவன் சிவனையடைவன். அடைந்து பின் மீளான்.

---

## நான்காமதிகரணம்.

துரியமலைம்புலவேடர் சுழலிற்பட்டுந் தூயநூற்றொல்லுயிரை மலரடிக்கீழ் வைப்பான், என்பது நான்காங்கூறு (290-291). இது முதல்வன் சிவஞானந்தந்து அத்துவிதநிலையிற் றானாக்கிய ஆன்மாவைத் தன்னோடியைந்து என்றும் நீங்காநிலையிற் சீபாதத்தோடணையவைப்பன் என்பது கூறுமுகத்தான், மலரடிக்கீழ் வைப்பினியல்பும், மலரடிக்கீழ் அணைந்துநிற்போர்நிலையும் கூறுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. மலரடிக்கீழ்வைப்பினியல்பு (290).
2. மலரடிக்கீழ் அணைந்துநிற்போர்வகையும் நிலையும் (291).

### 1. மலரடிக்கீழ் வைப்பினியல்பு.

**290.** எங்குந்தா னென்னினெய்த வேண்டா
வெங்குமில னென்னினவே றிறையு மல்லன்
அங்கஞ்சே ருயிர்போல்வ னெங்கு மங்கத்
தவயவங்கள் கண்போலக் காணு மான்மா
விங்குநா மியம்புந்தத் துவங்களின்வைத் தறிவ
திறைஞானந் தந்ததனா லீதல்கட் டிழந்த
துங்கவிழி சோதியுமுட் சோதியும்பெற் றாற்போற்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

(இ - ள்.) எங்குமுளன் என்னின் நாம் எய்தவேண்டா - (மேற்சிவத்தோடு பொருந்தும் என்றது எவ்வாறும் என ஆராய்ச்சி நிகழுங்கால்) சிவமே சடசித்தெங்கும் வியாபித்து நிற்றலின் ஆன்மாக்களாகிய நாம் அதனை அடையவேண்டுமென்பதில்லையே என்பார்க்கு,—எங்கும் இலன் வேறு என்னின் இறையுமல்லன் - சிவம் எங்கும் வியாபித்திருப்பதன்று ஆன்மாக்களின் வேறாய் நிற்பதாமென்னில், அது முழுமுதற்பொருளுமாகாது என முடியும். அப்போ அடைந்ததும் முத்தியில்லையன்று என்றாகும்,—அங்கஞ்சேர் உயிர்போல்வன் எங்கும் - (அப்படியன்று) உடம்பெங்கணும் செறிந்திருக்குமுயிர்போலச் சிவனும் சடசித்தெங்கும் வியாபித்திருப்பன்.- அங்கத்து அவயவங்கள் கண்போலக்காண - அவ்வாறு உடம்பெங்கணுஞ் செறிந்திருப்பினும், கண்ணவயவத்தைக்கொண்டு விரித்தறிவதுபோல் மற்றைய அவயவங்களைக்கொண்டு உயிர் அறியாதவாறுபோல்.—ஆன்மா இங்கு நாம் இயம்பும் தத்துவத்தின் வைத்து அறிவது - ஆன்மாவும் சகலத்தில்நாம் கூறிய தத்துவங்களிற் செறிந்து வியாபரித்தலாகிய பசுஞானங்கொண்டு விரிவின்றி அறிவதாம்.—இறைஞானம் தந்து தான் ஈதல் - முதல்வன்பதிஞானத்தையளித்து மலரடிக்கீழ் வைத்தலாகிய பரமுத்தியை ஆன்மாவுக்குக் கொடுத்தல்.—சுடரிழந்த துங்கவிழி - (ஒருக்கால் ஒளியோடுகூடி விரிவாயறியுந் தன்மைத்தாய்ச் சூரியப்பிரகாசமின்மையாலும் உள்ளொளியின்மையாலும்) ஒளியை இழந்து நிற்குங் கண்.—சோதியும் உட்சோதியும் பெற்றாற்போல் - இரவியொளியையும் உள்ளொளியையும் அடையவுற்றது போலாகும்,—சோதிக்குள் சோதியாய்த் தோன்றிடுவன் - அவ்வாறு இரவியொளி இருப்பவும் காட்சிக்கின்றியமையாதிருக்கும் கண்ணுள்ளொளி போலச் சிவனும் ஞானத்துள்ளும் பரஞானமாயிருந்து தோற்றுவன்.

குறிப்பு. 1. சிவனையடைந்து அத்துவிதமாய்க் கலந்திருத்தலே முத்தியாயின், எங்கும் வியாபியான சிவனை அடைதலென்றது யாங்ஙனம். அவன் வேறாயிருப்பினன்றோ அவனைச் சென்றடைதல் கூடும். அவ்வாறு வேறாயிருப்பின் பதித்துவம் யாங்ஙனமாகும் என்று கூறுவார்க்கு அவன் "அக்கரங்கடோறும் சென்றிடுமகரம்போல" நின்று வியாபகமாயிருப்பன் என்றதை வலியுறுத்திப் பசுஞானத்தின் குறையும் பதிஞானத்தின் நிறையும் திருவடிமுத்தியின் பெருமையும் கூறி மலரடிக்கீழ் வைப்பினியல்பை விளக்கியது இச்செய்யுளென்க.

2. எங்குந்தா னென்னி ஞமெய்தவேண்டா - எங்கும் வியாபித்திருக்கும் பொருளை அதின்வியாப்பியமான பிறிதொரு பொருள்போய் அடைவதென்பது பொருந்தாக்கூற்று என்றது.

3. எங்குமிலனென்னின் வேறிறையுமல்லன் - வியாபியாகாது வேறாம் பொருளாகவிருப்பின் முன் முதற்சூத்திரத்திற் காட்டிய பதியிலக்கணத்துக் கிழுக்காகும் என்றது.

4. அங்கஞ் சேருயிர்போல்வன்:—சிவன் உடம்பெங்கணுஞ் செறிந்து நின்றியக்குமுயிர்போலச் சடசித்துக்களெங்கும் வியாபித்திருப்பன் என்றது.

"உயிர்களொன்றா......அக்கரங்கடோறுஞ் சென்றியையும் அகரம்போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே" (செ. 92. பார.) அக்கர எழுத்துக்கும், உயிர் சித்தாகும் சிவனுக்கும் உவமை.

5. அங்கத்தவயவங்கள் கண்போலக்காணா:—உயிர் உடம்பெங்கணுஞ் செறிந்திருப்பினும், உடம்பின் மற்றைய அவயவங்களாலறியும அறிவு கண்ணாலறியு மறிவுபோல் விரிந்ததன்று என்பது. அவயவங்களாலறிவது தத்துவத்தின் வைத்தறியும் பாசஞானத்துக்கும், கண்ணாலறிவது இறைஞானத்துக்குமுவமை.

6. தத்துவத்தின் வைத்தறிவது - சகலத்திற்கருவிகளோடுகூடி விடயிகரித்து அறியும் அறிவு, பாசஞானம். (செ. 234-235 பார்.)

7. இறை ஞானந்தந்து தாளீதல்:—முதல்வன் ஞானத்தையளித்து வீடுபேற்றை யுதவுதல் என்றது. (செ. 235, 279, 280-பார்). ஞானம் மெய்ஞ்ஞானம், பதிஞானம்; தாளீதல் - திருவடிப்பேறுதல், வீடெய்துவித்தல்.

8. சுடரிழந்த துங்கவிழி சோதியும் உட்சோதியும் பெற்றாற்போல்:—இரவிப்பிரகாசமின்மையானும், கண்ணொளிமாசுபட்டமையானும், ஒளி நீங்கியிருக்குங்கண், இரவிப்பிரகாசத்தையும் கண்ணொளியையும் பெற்றாற் போலும். சுடரிழந்ததுங்கவிழி - சித்தாந்த வுண்மையறியும்பாலதாயிருந்தும் ஞானப்பேறின்மையால் தன் மெய்யறிவிழந்திருக்கும் ஆன்மாவுக்கு உவமை. சோதி-இரவிப்பிரகாசம். இஃது விடயங்களைக்கண்கண்டு அறிவதற்கு அவசியம் வேண்டியதாதலால் ஞானத்திற்குவமையாயது. உட்சோதி-கண்ணொளி இஃது விடயவறிவிற்கு மாத்திரமேயன்றி இரவியொளியையும் அறிந்து அதனை உபயோகித்தற்கும் வேண்டியுள்ளதானமையின் சிட்டையாகிய சிவஞானமுடிபுக்குவமையாயது. சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே - மேற்காட்டியபடி ஞானமாகிய இரவியொளியைக்கொண்டு நிட்டை கூடுதலாகும் கண்ணொளியையும் பெற்றபோதே ஆன்மாவிற்குச் சோதிக்குட் சோதியாகிய சிவத்தினறிவு தலைப்பட்டு அத்துவிதப் பேரின்பப்பேறெய்தும் என்றவாறும்.

பொழிப்பு. எங்கும் வியாபியாகிய சிவத்தை யாம் சென்றடைவதென்னையோ, அவன் வியாபியாயின்றி எம்மின் வேறாயிருப்பினன்றோ அடையலாகும் என்னில், அவனது வியாபகம் உடலிற்செறிந்திருக்கும் உயிர்போல்வதாம். உயிர்தான் உடலெங்குஞ் செறிந்திருந்தும் கண்கொண்டறிவதுபோல் பிற அவயவங்களைக்கொண்டு விரித்தறிவதில்லாததுபோல, உயிரும் பதிதன்னில் யாண்டுஞ் செறிந்திருந்தும் அவனருளாகிய ஒளிகொண்டு, நிட்டையினிசழும் கண்ணொளியும் பெற்றே தனதியல்பையும் இறைவனதியல்பையும் தெளிந்தறியும். அப்போ இறைவன் கண்ணிற் கண்ணொளிபோல ஆன்மாவிற் பராண்மாவாகத் தோன்றிநிற்பன்.

மலரடிக்கீழ் நின்றோர் வகையும் நிலையும்.

291. பாசிபடு குட்டத்திற் கல்லினை விட் டெறியப்
படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கும்
ஆசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்து
மரனடியை யுணரும்போ தகலும்பின் னணுகும்
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தாங்கு
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாக
ஆசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ
ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்.

(இ - ள்.) பாசிபடு குட்டத்தில் கல்லினைவிட்டெறிய - பாசிபொருந்திய தடாகத்திலே கல்லை மேலும் மேலும் எறியும்போது,—படும்பொழுது நீங்கி விடும்பொழுது அதுபரக்கும் - கல்லெறி படுமிடத்து நீங்கிக் கல்லெறியாது விடுமிடத்து அப்பாசியானது நீரை மூடிக்கொள்ளும். அதுபோல,—ஆசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும் - குற்றம்பொருந்திய மலமும் மாயையும் பெரியகன்மமுமாகிய எல்லாம்.—அரன் அடியை உணரும்போது அகலும் பின் அணுகும் - சிவனடியைத் தியானிக்கும்போது நீங்கி உணராதவிடத்து மீளவும் அவை வந்துபொருந்தும் - திருவடிக்கீழ் நேசமொடும் நீங்காதே தாங்கும் நினைவுடையோர் - ஆதலால், இடையறாத அன்போடு சிவத்தைப்பொருந்தி அதீதத்தை அடையும் இச்சையுடையோர்,—நிலை அதுவேஆக நின்றிடுவர் - அரனடியை உணரும் சுத்தாவத்தை நிலையே நிலையெனக்கொண்டு அதிலே நிற்பர்.—அங்குமிங்குமாகி ஆசையொடும் அலமருவோர் அரும்பாசம் அறக்கும்வகை - அவ்வாறின்றிச் சிவத்தின்மாட்டும் கருவிகள் மாட்டும் விருப்புற்றுச் சுழலுவோர் பெரியமலவாதனையைப்போக்கும்நெறியை,—அருளின்வழி உரைப்பாம் - முதல்வன் ஆகமங்களிற் கூறியபடி பின்னர்க் கூறுவாம்.

குறிப்பு. 1. இச்செய்யுள் இறைவனது மலரடிக்கீழ் நீங்காதே தாங்குநினைவுடைய நிட்டையாளர், மலமாயை கன்மமூன்றுந் தம்மைவந்தோர்ஞான்று மடையப்பெறாதே நிற்பரென்பதனை வலியுறுத்தி, உபாயநிட்டையாற் பரமனைப்பாவனைசெய் தாரந்திக்கு மேலோர்க்கு அவை ஒருக்கால் விட்டும் பின்னொருக்காற் தொட்டும் நிற்குமாதலால், அத்தகைய நிலையில் இருவகையினும் பற்றுடையராய் அலமருவோர்க்குச் சிவோகம்பாவனை சாதித்துப் பாசமறுக்குமுபாயம் மேற்கூறுவாமென வெடுத்துக்கொண்டு வருஞ்சூத்திரத்திற்குத் தோற்றுவாய் கூறியதாம்.

2. பாசிபடுகுட்டத்தில்......பின் அணுகும் - பாசி செறிந்திருக்குங் குளத்தில் மேலும் மேலும் கல்லுக்கொண்டெறிந்தவுடனே பாசிநீங்கி, விடுத்தவுடன் திரும்பவும் நீர்மலினப்படுதல்போல, உபாயநிட்டையிலோ

ருக்காற் சிவத்தைத் தியானிப்போர்க்கு அவ்வப்போது நிட்டைகூடி மலம கன்றும், தியானமொழிய மலசம்ஸ்காரம் கூடியும் வரும் என்பது. விட் டெறிய என்பது மேலும் மேலும் எறிய; நீங்காதெறிவதென்பதியாண்டு மின்மையால் இஃது உபாயநிட்டையாளர் நிலைமையே குறிப்பித்தவாறு.

3· நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின் றிடுவர் நிலையதுவேயாக - உபாயநிட்டை கூடுவோர்போலன்றி, உண்மை நிட்டைகூடினோர் மலரடிக்கீழ் நீங்காதே தூங்குவாராதலின், அவர்க்குச் சிவோகநிலை பாவனைமாத்திரத்தானொருக்காற் கூடியும் ஒருக்கால் அகன் றும் வருதலின்றி ஒரேநிலைத்தாய் நிற்குமென்றதாம்· இஃது அவர்க்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் நிகழ்ந்தமையால் மலமாயை கன்மச்சேட்டைகளியையவிடமின்றாதலாலென்க. இத்தகை யோர் சாமுசித்தராய் ஞானமே தலைக்கொண்டு பிறந்து ஞேயத்தழுந்து வோராவர் என்றலுமாம்.

4. ஆசையொடு மங்கு மிங்கு மாகி யலமருவோரரும்பாசமறுக்கும் வகை:—முத்திகாமிகளாய்ப் பிரபஞ்சப்பற்று முற்றுநீங்காது அலமருவோர் களுக்குக் கூறிய உபாயநிட்டையின் விரிவும் சாதனைகளும் மேற்சூத்தி ரத்துக் காட்டுவோம் என்பது. அங்கும் இங்குமாகி யலமருவோர் - மலமகற் றிக்கதிசேர்வதின்மாட்டும், பிரபஞ்சத்து விளைவுகளை விருத்திப்பதன்மாட் டும் பற்றுக்கொண்டு ஊசல்படுமனத்தினையுடையோர்.

5. அருளின்வழி யுரைப்பாம்:—இறைவனது திருவருளாலாகிய சிவா கமங்களிற் செப்பியமுறைமையில் என்றது. "அருளினாலே தாளிணைதலை மேற்சூட்டும்.....வெண்ணெய்மேவிவாழ் மெய்கண்டான்" அருளிய முத னூல் முறைமைபற்றி எனலும் ஒக்கும். அருள் - அருளப்பட்டது, உபதேசம்.

பொழிப்பு. தடாகத்திலுள்ள பாசியானது கல்லினை மேலும் மேலும் எறியும்பொழுது எறிபட்டவிடத்து நீங்கி, கல்லெறியாது விடுமிடத்து வந்து நீரை மூடிக்கொள்வதுபோல, மலமாயை கன்மங்களாகிய பாசமும் முதல் வனது திருவடியைத் தியானிக்கும்போது நீங்கி விடுத்தவிடத்து ஆன்மா வைப்பொருந்தும். நேயத்தழுந்தி அரன் மலரடிக்கீழ் நீங்காத நிட்டையா ளர்க்கு ஒருபோதும் அது வந்தடையாது. ஆயின் அவ்வாறன்றியரன்மாட்டும் கருவிகள் மாட்டும் விருப்புற்றுச் சுழலுவோர் அப்பாசத்தை நீக்கிக்கொள் ளும் உபாயம் உபதேசமுறைப்படி பின்னர்க் கூறப்படும்.

## ஒன்பதாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் ஞானநிட்டை கைவராதார்க்கு உபாயநிட்டையாலான்ம சுத்தியெய்துமாறு கூறுமுகத்தானே, பாசஞான பசுஞான பதிஞான விலக்கணங்களும், சிவோகம்பாவனையியல்பும் திருவஞ்செழுத்துண்மையும் பெருமையும் கூறுகின்றது.

ஞானநிட்டை கைவராதார்க்கு உபாயநிட்டையெய்துமுறைமை
தொகுத்துக்கூறல்.

292. பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடு முள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரு முலகமெலா மலகைத்தே ராமென்
றறிந்தகல வந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க
வுள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலா மோட.

(இ - ள்.) பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்ப அரிய பரம்பரனை - பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் ஆராய்ந்தறிதற்கரிய பரமசிவனை,—பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தேநாடி - அவனது திருவடிஞானத்தாலே அன்போடும் தன்னறிவின்கண்ணுராய்ந்திருக்க,—பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதின் - அத்திருவடிநிழலின்கீழ் பிரிப்பற நின்று அழுங்குதலாகும் ஞானநிட்டை கைவருவதாகும். ஆயினும், கன்மவலியால் நிட்டை கைவராது பிரபஞ்சப்பற்றுவழி அறிவுசெல்லுமாயின்;—ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தேராம் என்று அறிந்து அகல - அவ்வாறு பற்றுவதற்கிடமாயிருக்கும் பிரபஞ்சமனைத்தும் கானற்சலம்போல நிலையில்லாதன என்றுகண்டு அவற்றை விட்டுநீங்க,—அந்நிலையே ஆகும் - திருவடிஞானம் தலைக்கொண்டு நிட்டைஒரோவழிக் கைகூடப்பெறும்,—பின்னும் - அவ்வாறு ஒருவாற்ருல் நிட்டைகைவரப்பெற்ற பின்னரும்,—ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க - நிட்டைநிலைத்தற்கு ஆற்றலைத்தருவதாகிய திருஅஞ்செழுத்தை விதிமுறையாலுச்சரிக்க,—உள்ளத்தேபுகுந்து - அறிவின்கண் அறிவாய்விளங்கி நின்று,—ஊனமெலாம் ஓட அளிப்பன் - பற்றுக்குவித்தாய்ச் சாரமாய்நின்ற பாசங்கள்யாவும் செயலற்று விலகும்படி தனதருளைத் தந்து நிற்பன்.

குறிப்பு. 1. பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்,—இறைவன்,பாசஞான பசுஞானங்களாலே யறியப்படுபவனல்லன்

என்பது (செ. 246-247 பார்.) இவையிரண்டனதிலக்கணமும் மேல் 293, 294-ம் செய்யுளிற் கூறியதுகாண்க.

2. பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தேநாடி:—இறைவன் திருவடிஞானமாகிய அருளறிவினலறியப்படுவன் என்பது (செ. 245 பார்). உள்ளத்தேநாடி - ஆன்மசிற்சத்தியிற் கண்டறிக்து.

3. பாதநீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதின்:—பதிஞானத்தாலறியப் பட்டமாத்திரத்தே பரன் அத்துவிதமாயறிவிற் செறிந்திருப்பன். ஆயினும் சன்மவலியால் நிட்டை கைவராதுவிடின் ஆசையொடும் இங்குமங்கும் அலமருவதாகிய நிலையிலே ஆன்மா நிற்கும் என்பது (செ. 291 பார்). நில்லாதே என்பதில் ஏகாரம் எதிர்மறைப்பொருளதென்பது மேல் 296-ஞ் செய்யுளினின்றும் காணலாகும்.

4. ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தேரமென்றறிந்தகல அந்நிலையேயாகும்:—மெஞ்ஞானமுதித்தும், வாதனையாற் பற்றுட்படுத்தி நிஷ்டை கூடாவண்ணம் தடுப்பதாகும் பிரபஞ்சம் கானற்சலம் போல் "காட்டி உண்டு போலின்றும்பண்பு" உடையது என்னும் அறிவு நிலைப்பின், பற்றகலும், அகலவே உபாயநிட்டை கைவரும். ஆகும் என்றதனல் நிட்டைஒருக்கால் வந்து சித்திக்கும் என்றதாம்.

5. பின்னும்:—என்றதனல் ஒருக்காற் கைவந்து பின் கலையுந்தன்மைத்தாய உபாயநிட்டை உண்மைநிட்டையாவதற்கு வேண்டியசாதனை கூறுவாம் என்றதாம்.

6, ஓசைதரும் அஞ்செழுத்து:—நிட்டைநிலையாதற்கு வேண்டிய ஆற்றலைத்தரும் திருவஞ்செழுத்து என்பது ஓசஸ் - ஆற்றல், ஆதாரம். அன்றி அகார உகார மகார விந்துநாதஞ்சேர்ந்த பிரணவமாகிய ஊமையெழுத்தென்னும் ஓசையில்லா அஞ்செழுத்தினின்றும் பிரித்து, நாவினல் ஒலித்தற்பாலதாதலின் ஓசைதருமஞ் செழுத்தென்றதெனலும் ஒருசாராம்.

7. ஊனம் - மேலும் பிரபஞ்சப்பற்று விளைவதற்கிடமாய் வித்துப்போன்று அப்போது செயலற்றிருக்கும் பாசம் என்பது. ஊனம் - சாரம்.

8. பதிஞானஞ் சித்தித்தபின்னரும் பிரபஞ்சப்பற்று வருதல் பிராரத்த அநுபவநோக்கி என்பர். பிராரத்தம் - எடுத்த உடலுக்கு வரையறுக்கப்பட்ட சன்மம், அதை அநுபவித்தற்குப் பதிஞானம் விலகிப் பாசபசுஞானங்கள் சிறிதேனுந் தலைப்படவேண்டும் என்பது சித்தாந்தம். முருகனது விச்சுவரூப தரிசனத்தாற் பதிஞானம் விளங்கிய சூரபன்மனுக்குப் பழையபடி அகங்காரம் வந்தடைந்ததும் சிவஞானோபதேசம்பெற்ற மாணிக்கருக்குப் பாண்டியனிடம்சென்று வருந்த நேர்ந்ததும் பிராரத்த அநுபவம் பற்றி மீண்டும் வந்து சூழ்ந்த பசுபாச ஞானங்களைக் குறித்தமை ஒட்டி யறிக. அவ்வாறு பிராரத்த வலியாற் பிரபஞ்சப்பற்று வரும்வழியும் நிட்டையே கூடி அதன்வலியைக் கெடுப்பதற்கு முக்கிய சாதனம் திருவஞ்செழுத்து

என அஞ்செழுத்தினுண்மையையும் பெருமையையும் கூறியதும் காண்க. அதுபற்றியே "ஊனிலுயிர்ப்பை யொருக்கியொண்சுடர், ஞான விளக்கினை யேற்றிநன்புலத், தேனைவழிதிறந் தேத்துவார்க்கிட, ரானகெடுப்பன வைஞ்செழுத்துமே" எனச்சம்பந்தரும், "வீடினுருலகினில் விழுமிய தொண்டர், கூடினூரந்நெறி கூடச்சென்றதும், ஓடினேனோடிச் சென்றுருவங்காணலும், நாடினேனுடிற்று நமச்சிவாயவே" என அப்பரும் "விரும்பி நின்மலர்ப்பாதமே நினைந்தேன்வினைகளும் விண்டனன், நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற நின்ற காவிரிக்கோட்டிடைக்; குரும்பைமென்முலைக் கோதைமார்குடைந்தாடுபொண்டிக்கொடுமுடி, விரும்பனேயுனைநான் மறக்கினும் சொல்லுநாநமச்சிவாயவே" எனச்சுந்தரரும் "நமச்சிவாயவா அழ்க நாதன்றாள்வா அழ்க......" என மாணிக்கரும் தமது அருந்தமிழ்மறை மொழிகளுட் கூறியிருப்பதுமாமென்க.

பொழிப்பு. பாசஞானம் பசுஞானங்களாலறியப்படாத பரன், பதிஞானத்தாலறியப்பட்டும் கன்மவசத்தாற் பிரபஞ்சப்பற்றுதித்து கிட்டைகைவராதாயின், பற்றுக்கிடமாய பிரபஞ்சம் நிலையற்றதெனக்கண்டு திருவஞ்செழுத்தை முறையே செபித்துவரின் உண்மைகிட்டை நிலையாவுறும்.

இச்செய்யுள் மூன்றுகூறுடையது:—

1. பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடு முள்ளத்தேநாடி (உற) ப்பாதநீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதா. (293-296).

2. பாதநீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதின் ஆசைதருமுலகமெல்லாமலகைத்தேராமென்றறிந்தகல வந்நிலையேயாகும். (297-298).

3. பின்னும் ஓசைதருமஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க உள்ளத்தே புகுந்தளிப்பனூனமெலாமோட. (299-303).

---

## முதலதிகரணம்.

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரியபரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடுமுள்ளத்தேநாடி (உற) ப்பாதநீழற்கீழ் நில்லாதே நீங்கிப்போதா என்பது முதற்கூறு (293-296). இதனானே மேற்சூத்திரத்தீற்றில் ஞானமுதித்தும் கிட்டைகூடாது "ஆசையினலிங்கு மங்குமாகி யலமருவோர்" எனக்கூறியதை விளக்க வெழுந்து, அவர் சிறுபான்மயரேயாகப், பதிஞானமுதித்தபோதே கிட்டையுங்கைவருதல் இயல்பாம் என்னும் சித்தாந்தத்தை வலியுறுத்துமாற்றுன் பாசஞான பசுஞானங்களிலக்கணமும் அவற்றின் சிறுமையும் பதிஞானத்திலக்கணமும் அதன் பெருமையும் கூறியதாம்.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. பாசஞான பசுஞானங்களிலக்கணம். (293).
2. பாசஞான பசுஞானங்களின் சிறுமை. (294).
3. பதிஞானத்திலக்கணம். (295).
4. பதிஞானத்தின் பெருமை, அது பாசத்தை அகற்றும். 296).

1. பாசஞான பசுஞானங்களின் இலக்கணம்.

293. வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கண் மேலா
நாதமுடி வானவெல்லாம் பாச ஞான
நணுகியான் மாவிவைகீழ் நாட லாலே
காதலினா னான்பிரம மென்னு ஞானங்
கருதுபசு ஞானமிவ் வுடலிற் கட்டுண்
டோதியுணர்ந் தொன்றொன்ற வுணர்ந்திடலாற் பசுவா
மொன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன் காணே.

(இ - ள்.) வேதசாத்திர மிருதிபுராண கலைஞானம் - வேதங்களும் சாத்திரங்களும் மிருதிகளும் புராணங்களும் மற்றைக்கலைஞானங்களும்,—விரும்பு அசபை - விரும்பப்படும் அசபாஎன்னும் மந்திரமும்,—வைகரி ஆதித்திறங்கள் - வைகரிமுதலிய நால்வகைவாக்குக்களும்,—மேலாம்நாதம் முடிவான எல்லாம் - பிருதிவிமுதல் மேலாகிய நாதம ஈறாகவுள்ள தத்துவங்களும் ஆகிய இவைஅனைத்தின் வாயிலாகவும் ஆன்மாவின்கண் நிகழும் ஞானம்,—பாசஞானம் - பாசஞானமாம் எனெனில்,—ஆன்மா இவை நணுகி கீழ்நாடலாலே - ஆன்மா இக்கலைஞானம் முதலியவற்றைப் பொருந்தி பிறப்பிறப்பிற்படுதலானும்,—காதலினால் நான்பிரமம் என்னும் ஞானம்- செருக்கால் நான் இவற்றிற்கு வேறாகியபிரமரூபம் என்று மதிக்கும் ஞானம்,—கருதுபசுஞானம் - சொல்லப்பட்ட பசுஞானமாம்,—இவன் உடலில் கட்டுண்டு - இவ்வான்மா தூலசூக்கும பரதேகங்களாற் கட்டுண்டு,—ஓதிஉணர்ந்து - மேற்கூறிய வேதம் முதலியவற்றை ஓதி உணர்த்த உணர்தலானும்,—ஒன்று ஒன்றாஉணர்ந்திடலால் - ஐம்பொறிமுதலிய தத்துவங்களால் விடயங்களை ஒவ்வொன்றாய் உணர்தலானும்,—பசுஆம் - ஏகதேச அறிவுடைய பசுவாம்,—சிவன் இயல்பின் ஒன்றாக உணர்ந்திடுவன்காண் - சிவன் உணர்த்த உணர்தலின்றியும் ஒவ்வொன்றாய் அறிதலின்றியும் இயல்பாகவே எல்லாவற்றையும் ஒருங்கே அறிவனாதலின் முற்றறிவுடைய பதியாம். ஆதலால் பதிபாசஞானம் பசுஞானங்களால் அறிதற்கரியதாம் என்பதை அறிவாயாக.

குறிப்பு. 1. இச்செய்யுள் "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்றதை விளக்கிற்று.

2. பாசஞானம் - சொற்பிரபஞ்சமும் பொருட்பிரபஞ்சமுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஏகதேசஞானம். சொற்பிரபஞ்சம் - வைகரிமுதலியநால்வகைவாக்குக்கள், அசபாமந்திரம், வேதம் சாத்திரம் முதலிய கலைஞானங்கள். அசபை - அசபா என்னும் மந்திரம். அது நான் அவன் எனப் பொருள்படும் அஹம், ஸ என்பவற்றின் கூட்டு என்ப. அவன் நான் எனப்படும் ஸோஹம் என்பதுவே எழுத்துநிலைமாறி ஹம்ஸ என்ருயிற்று என்பர். பொருட்பிரபஞ்சம் - பிருதிவிமுதல் நாதம் ஈருகவுள்ள தத்துவங்கள். மந்திரம், பதம், வன்னம் சொற்பிரபஞ்சமும், புவனம், தத்துவம், கலை பொருட்பிரபஞ்சமுமாம். (296 பக்-விரிவு).

3. பசுஞானம் - மாயையுமதன் காரியங்களியாவும் தனக்கு வேறு என்று விசாரித்தறியுமிடத்து ஞானம் பிறக்கும். இந்த ஞானம் பிரமத்தை நான் என்று அறிவிக்கும். இங்ஙனம் அறிதலே முத்திஎன்பர் மாயாவாதிகள். இந்தஞானமும் தற்போதமுனைப்பால் ஆன்மாவின்கண் நிகழும் அறிவாதலால் பசுஞானம் எனவேபடும் என்றதாம்.

4. இவனுடலிற்கட்டுண்......பசுவாம்:—ஆன்மா நூல்கள் முதலியவற்றின் துணையின்றியும், கருவிகரணங்களின் துணையின்றியும் அறியமாட்டாது. இவற்ருல் வரும் ஞானம் ஏகதேச அறிவாகிய பாசஞானமாம். நானே இவற்றை அறிந்தேன் என்னும் முனைப்போடு அறிதல் பசுஞானமாம். இப்பாசஞான பசுஞானங்களால் முற்றறிவுடைய முதல்வன் அறியப்படான் என்பது.

5. நணுகியான்மா விளைகீழ் நாடலாலே - பாசஞானத்தையடைந்த ஆன்மா அதனுல் மேலும் பிறப்பிற்பட்டுழல்வதாகிய கீழ்நாட்டத்தையே கொண்டிருக்கும் என்றது. கீழ்நாடல் - கீழ்நோக்கல். நணுகி (ய) ஆன்மா இவை கீழ்நாடலாலே எனப்பிரித்து, இவற்றைப் பொருந்திய ஆன்மா இவையனைத்தும் தன்கீழ் வியாப்பியமென்றறிந்து நீங்கித் தானவற்றிற்கு மேற்படுதலான் எனவிளக்குவர் சிவஞானமுனிவர்.

பொழிப்பு. சொற்பிரபஞ்சமும் பொருட்பிரபஞ்சமுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஏகதேச அறிவு பாசஞானமாம். நான் என்னும் முனைப்பால் ஆன்மாவின்கண் நிகழும் அறிவு பசுஞானமாம். இவைஇரண்டினுலும் முதல்வனை அறிதல் கூடாது.

2. பாசஞான பசுஞானங்களின் சிறுமை.

**294** கரணங்கள் கெடவிருக்கை முத்தியா மென்னிற்
கதியாகுஞ் சிலைமுட்டை கருமரத்தி னுயிர்கண்
மரணங்கொண் டுடவுறங்க மயங்கிமூர்ச் சிக்க
வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை யடையச்

சரணங்கள் புகுநிழற்போற் றனையடையுஞ் சமாதி
தவிராது மலமிதுவும் பசுஞான மாகும்
அரணங்க ளெரித்தவன்ற னடியையறி விறந்தங்
கறிந்திடீர் செறிந்ததுக ளகற்றிடீரே.

(இ - ள்.) கரணங்கள் கெட இருக்கை முத்தியாம் என்னில் - மேற் சொல்லியவாறு கருவிகளோடு கூடி ஆன்மா சிவ்நாடலின்றி அவை கூடாதும், செயலற்றுக்கெட்டும் இருக்கப்பெறுவதே முத்தியாகும் என்று கூறின்,—சினைமுட்டை கருமரத்தின் - கருவிகள் விரிந்து தொழிற்படா திருக்கும் சினை முட்டை கரு வித்து என்னும் நிலைகளிலும்,—மாணங்கொண் டிட உறங்கயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம்பனைபண்ண வல்விடத்தை அடைய- கருவிகள் தஞ்செயலற்றுக் கெட்டுநிற்கும் மரணாவத்தை உறக்கம் மயக்கத் தோடுகூடிய மூர்ச்சை பிராணவாயு அடங்கிய யோகம் ஸ்மரணையறச் செய் யும் கொடிய விடந்தலைக் கேறுகை ஆகிய இந் நிலைகளிலும்,—உயிர்கள் கதியாகும் - உயிர்கள் வீட்டின்பத்தைப் பெறுவனவாதல்வேண்டும். அவ்வா றன்றுதலாலும்,—சரணங்கள் புகுநிழல்போல் - காலையிற் சேய்மையாய் நின்றநிழல் உச்சியில் தன்காலுள்ளடங்கிப் பின்னும் மாலையிற் சேய்மைத் தாதல்போல,—தனையடையுஞ் சமாதி - யோகமதத்தில் தன்னையறிந்தடங் குதலெனக் கூறப்பட்டவொடுக்க நிலையும் காலத்திற்கேற்ப ஒடுங்கியும் பின் விரிந்தும் நிகழுமாதலாலும்,—தவிராதுமலம் - இந்நிலைகளில் மலம் அகன்ற தாகமாட்டாது,—இதுவும் பசுஞானம் ஆகும் - இந்நிலையில் ஞானம் உதிப் பின் அதுவும் பசுஞானமேயாகும் ஆகையால்,—அரணங்கள் எரித்தவன் தன் அடியை அறிவிறந்து அங்கு அறிந்திடீர் - முப்புரங்களையும் முறுவலித் தெரித்த முதல்வனது திருவடிகளைக் கருவிகளோடுகூடியும் தற்போத முனைப்பினின்றும் அறிவதைவிட்டு, மெஞ்ஞானங்கொண்டு அறியின்,— செறிந்ததுகள் அகற்றிடீரே - உயிரைச் சகசமாய்ப் பந்தித்துற்ற மலவாதனை அறப்பெறும்.

குறிப்பு. 1. கரணங்கள் கெடவிருக்கைமுத்தியா மென்னிற்...... அடைய":—பாசமாகிய கருவிகளோடு கூடிய சகலநிலையில் ஆன்மா விடயங் களிற்சென்று சிவ் நாடலாற் சிவத்தை யறிந்து முத்தியடைதல்கூடாது. எனவே கருவிகள் நீங்கிய கேவலநிலையில் ஆன்மா அறிவின்றிக் கிடப்பதே முத்திஎன்பர் பாடாணவாதிகள். அங்ஙனமாயின் சினைமுதலியவற்றை அடை ந்தஆன்மாக்களுக்குக் கருவிகள் தொழிற்படாமையின் அவை முத்தியைப்பெற் றனவாதல் வேண்டும் என்றும், எல்லாக்கருவிகளும் நீங்கி ஆணவமலத் தொடுங் கூடி ஒன்று மறியாமற் பாடாணம்போற் கிடக்கிற் கேவலத்துயர மேயன்றி முத்தியின்பம் இன்று என்றும் அவர்கொள்கையை மறுத்தவாறு (சங்கற்ப நிரா. பாடாணவாதி பார்). கெடஎன்றது ஈண்டுவிரிந்து தொழிற் படாதிருத்தலையும் குறித்தமை, உயிர்கள் என்னுஞ் சொல்லைச் சினையாதி வைற்றிற்கும் மரணமாதியவற்றிற்கும் இடையிலிட்டுப் பிரித்தமையாற்

காண்க. மரம் என்றது ஒற்றுமைபற்றி ஆகுபெயராய் வித்தென்னும் பொருள் பயந்தது. (நல்ல. சித். மொழி. பக் 242). புதிதாய் நாட்டப்பட்டவிளை யெனினும் ஒக்கும்.

மரணம்கொண்டிட என்றது அந்தியகாலத்துக் கரணங்கள் ஒன்றொன் றாய்ச் செயலற்றுப்போக அறிவடங்கியிருக்கும் அவஸ்தையை. இது பத்தாம் அவஸ்தையெனவும்படும். இது ஞானியர்க்கும் பற்றற்றோர்க்கும் சிறிது நேரமும், மற்றையோர்க்கு நீடித்தும் நிகழுவதாகும் என்ப.

விடம் என்றது ஆகுபெயராய் விடந்தலைக்கேறி ஸ்மரணையற்றுக்கிடக் கும் நிலையைக் குறித்தது.

2. சரணங்கள் புகுநிழல்போற் றனையடையுஞ்சமாதி......:—கருவிகர ணங்களின் சேட்டையின்றி ஆன்மா தன்னைத்தான் கண்டு நிற்றலேசமாதி யெனப்படும். இந்நிலையில் ஆன்மபோதம் நீங்காதிருத்தலின் இதுவும் பசு ஞானமாய்முத்திபயக்காது என்றதாம். இதுவும் என்றமையால் முற் செய்யுளிற் காட்டியவாறு வேதாந்திகள் கூறும் அஹம்பிரமம் என்னும் ஞான மேயன்றி யோகமதத்தார் கூறும் சமாதியும் பசுஞானமாம் என்றபடி. இந்த சமாதியென்றது சிவயோகத்துமுடிபாகிய சிவசமாதியன்றென்பது தெளிதரவே சரணங்கள் புகுநிழற்போல் எனவிரித்துக் காட்டியதாமென்க.

3. தவிராதுமலம் என்றதைக் கரணங்கள் கெட்டவிடத்தும், சரணங் கள் ஒடுங்கியவிடத்தும் என்னும் இருவகைநிலைகளோடும் சேர்த்துப் பொருள்கொள்க. மலமகலாவிடத்து முத்தியாதலில்லையென்பது.

4. அரணங்கள் எரித்தவன்றனடி - முப்புரங்களையுமெரித்த முதல்வ னது திருவடி. இதனை அறிதல் பதிஞானமாம். அறிவிறந்து அறிதல் பாசஞானம் விடுத்துநின்று அறிதல். முப்புரங்கள் தூலசூக்குமகாரணசரீ ரங்கள். "அப்பணிசெஞ்சடையாதிபுராதனன், முப்புரஞ்செற்றனனென்பர் கள் மூடர்கள், முப்புரமாவது மும்மலகாரியம், அப்புரமெய்தமையாரறி வாரே" (திருமந்). சரீரங்களையழித்தவன் முதல்வன் எனவே, அவன் சந்நி தியில் பாசஞானம் நில்லாதென்றதும் குறிப்பித்தது காண்க.

5. இச்செய்யுளிற் கேவலசகலங்களும் தற்போதமுமற்றவிடத்தே பாதநீழற்கீழ் நிற்றல் கைகூடும் என்றமையான் பாசஞான பசுஞானங்க ளது சிறுமை கூறியவாறு.

பொழிப்பு. கருவிகளோடுகூடிக் கீழ்நாடுதலின்றி அவை விரிந்தும் அடங்கியும் தொழிற்படாதிருப்பதே முத்தியாமென்னில் சினையாதிய நிலை களிலும் மரணாவத்தைமுதலிய அவதிகளினும் உயிர்களுக்கு முத்தி சித்தித்த தாகவேண்டும். அஃதின்மையாலும், சமாதியே முத்தியாகுமென்னில் அஃது கூடிப் பின் ஒழியுமிடத்துக் கருவிகள் தொழிற்படுமாதலானும் இந் நிலைகளில் மலமறமாட்டாது. பதிஞானமொன்றனாலே திருவடிப்பேறுகி மலமகலும்.

### 3. பதிஞானத்திலக்கணம்.

295. சிவனையவன் றிருவடிஞா னத்தாற் சேரச்
செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்
அவனையணு காவென்று மாத லானு
மவனடியவ் வொளிஞான மாத லானும்
இவனுமியான் றுவக்குதிர மிறைச்சி மேதை
யென்புமச்சை சுக்கிலமோ விந்திரியக் கொத்தோ
அவமகல வெனையறியே னெனுமைய மகல
வடிகாட்டி யான்மாவைக் காட்ட லானும்.

(இ - ள்.) சிவனை அவன் திருவடிஞானத்தால் சேரச் செப்புவது - பரமசிவனை அவனது திருவடிஞானமாகிய பதிஞானத்தாலே அடையும்படி மேற்கூறியது எற்றாலோவெனின்,—சிந்தைவாக்குச்செயலெல்லாம் - மனம் வாக்குக் காயம் முதலியனயாவும்,—அவனை என்றும் அணுகா ஆதலானும் - அவனை ஒருகாலத்திலும் அடையாவாதலாலும்—அவன் அடி அவ்வொளி ஞானம் ஆதலானும் - அவனது திருவடிமேற் கூறியவாறு பாச இருளைநீக்கும் சுயம்பிரகாசஞானமாதலாலும்,—இவனும் - இவ்வான்மாவும்,—யான் துவக்கு உதிரம் இறைச்சி மேதை என்பு மச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ - யான் தோல் இரத்தம் தசை நரம்பு எலும்பு மூளை சுக்கிலம் முதலியனவோ. அல்லது இந்திரியக்கூட்டமோ எனத் தனது சொரூபத்தை அறியாது நிற்றலால்,—அவம் அகல - அக்குற்றம் நீங்கும்படியும்,—எனை அறியேன் எனும் ஐயம் அகல - தனது சொரூபத்தை அறியேன் என்னும் ஐயம் நீங்கும்படியும்,—அடிகாட்டி ஆன்மாவைக் காட்டலானும் - சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து ஆன்மாவினது தற்சொரூபத்தை விளக்குதலாலுமாம்.

குறிப்பு. 1. செயல்வாக்குச் சிந்தையெல்லாமவனை யணுகாவென்றும்:—மனம்வாக்குக்காயங்கள் சுட்டியறியப்படும் பொருள்களாதலாலும், சுட்டியறியப்படுவனயாவும் அசத்தாதலாலும், அசத்துச் சத்தின் முன்னர் முனைத்து நில்லாதாதலாலும், செயல்வாக்குச் சிந்தை யெல்லாம் அவனை யணுகா எனப்பட்டது. இவை அணுகா எனவே இவற்றால்வரும் ஞானத்தாலும் சிவனை அறிந்துசேருதல் கூடாது என்பது பெறப்படும். அதாவது பாசஞானத்தாற் சிவனை அறிந்து சேருதல்கூடாதென்பது. செயல் ஆகுபெயராய்க் காயத்தைக் குறித்து நின்றது.

2. அவனடியவ்வொளிஞானமாதலாலும்:—பதிஞானத்தின் இயல்பு கூறியவாறு. அதுமேற் செய்யுளிற் கூறிய அரணங்களாகிய பாசவிருளை நீக்கும் ஞானச்சுடராம் என்பதை உணர்த்துமாறு "அவ்வொளி" எனச் சுட்டியவாறுங் காண்க.

3. இவனாமியான் றுவக்கு......அவமகல:—தத்துவதாத்துவிகங்களுள் ஆன்மா தன்னை அபிமானித்து மயங்கும் பாசஞானக்குற்றம் நீக்க என்பது.

4. எனையறியே னெனுமையமகல:—தத்துவதாத்துவிகங்களினின்றும் தன்னைப் பிரித்துக்கண்டும், தன்னுண்மைநிலையை யறியாது மயங்கும் பசுஞானக் குற்றம் நீங்க என்பது.

பொழிப்பு. மனம் வாக்குக்காயங்கள் வாயிலாக நிகழும் பாசஞானத்தினாற் சிவனை ஒருகாலும் அறிய முடியாதாதலாலும், ஏகதேச அறிவுடைய ஆன்மா திருவருள் அறிவித்தாலன்றி அறிய இயலாதிருத்தலாலும், சிவஞானத்தாற் சிவனை அறியவேண்டும் எனக்கூறியதாம்.

4. பதிஞானத்தின் பெருமை.

296. கண்டிடுங்கண் டனைக்காணா கரணங் காணா
கரணங்க டமைக்காணா வுயிருங் காணா
உண்டியமரு முயிர்தானுந் தன்னைக் காணா
துயிர்க்குயிரா மொருவனையுங் காணா தாகுங்
கண்டசிவன் றனைக்காட்டி யுயிருங் காட்டிக்
கண்ணாகிக் கரணங்கள் காணாம னிற்பன்
கொண்டரனை யுளத்திற்கண் டடிகூடிற் பாசங்
கூடாது கூடிடினுங் குறித்தடியி னிறுத்தே.

(இ - ள்.) கண்டிடும் கண் தனைக் காணா கரணம் காணா - விடயங்களைக் காண்கின்றகண்கள் தமது இயல்பையும் அறியா. தமக்கு முதலாகிய அந்தக்கரணங்களையும் அறியமாட்டா,—கரணங்கள் தமைக் காணா உயிரும் காணா - மனம் முதலிய அந்தக்கரணங்களும் வித்தை முதலிய உள்ளந்தக் கரணங்களும் தமது இயல்பையும் அறிய மாட்டா. தமக்கு விடயங்களைக் காட்டி முதலாய் நிற்கும் உயிரையும் அறியா. அவைபோல.—உண்டி அமர் உயிர் தானும் தன்னைக்காணாது உயிர்க்கு உயிராம் ஒருவனையும் காணாது ஆகும் - விடயங்களைப் பொருந்துகின்ற ஆன்மாவும் தனது இயல்பையும் அறியமாட்டாது. தனக்கு அறிவுக்கறிவாய்நின்று உணர்த்தும் முதல்வனையும் அறியமாட்டாது நிற்கும்,—கண்டசிவன் - இவையாவையும் ஒருங்கே அறிந்துநிற்கும் முதல்வன்,—தனைக்காட்டி உயிரும் காட்டி - தன்னியல்பை விளக்கி ஆன்ம வியல்பையும் விளங்கச்செய்து,—கண்ணாகிக் கரணங்கள் காணாமல் நிற்பன் - ஞானசொரூபியாய்க் கரணங்களால் அறியப்படாது நிற்பன். ஆதலால்,—கொண்டு அரனை உளத்தில் கண்டு அடி கூடின் - அந்தச் சிவஞானத்தைத் துணையாகக்கொண்டு முதல்வனை ஆன்ம அறிவிற்கண்டு திருவடி நிழற்கீழ் நிற்கப்பெறின்.—பாசம் கூடாது - பாசம் விட்டு நீங்கும்,—கூடிடினும் குறித்து அடியின் நிறுத்து - நீங்கியது வந்து ஒருகாற் பொருந்துமாயினும் சிவபாவனையை விடாது செய்து அதனானே திருவடிநிழற்கீழ் நீங்காது தங்கி நிற்றலுமாகும்.

குறிப்பு. 1. உண்டியமருயிர்:- விடயபோசங்களை விரும்பி நுகர்ந்து மயங்கும் உயிர். உண்டி-போக்கியப்பொருள், போசநுகர்தற்குரிய விடயங்கள். அமர்தல் - பொருந்துதல், விரும்புதல்.

2. கண்ணுசி:- காட்டுந்தன்மையுடைய கண்போல நிலைக் காண்பிக்கும் ஞானம் என்றது.

3 குறித்து:- குருவருளினாற்பெற்ற ஒரு குறிப்புப்பாவனையைச் சாதிப்பதனாற் பாசங்களின் சேட்டை மீட்டும் வந்து தாக்கப்பெறாது பசுகரணங்கள் சிவகரணமாகப்பெற்று நிட்டைநிலைக்கப்பெறும் என்பது. "அறிவதொரு குறி குருவினருளினாலறிந்து" (செ. 286 பார்). குறித்தல் - தூலத்திற் றியானித்தல். குறி - உருவம். (செ. 252 பார்). இதனானே பதிஞானத்தின் பெருமைகூறி மேலதிகரணத்துச் சிவோஹம்பாவனை கூறுவதற்கும் தோற்றுவாய் செய்தது காண்க.

பொழிப்பு. விடயங்களைக் காண்கின்ற கண் தன்னையும் தனக்கு முதலாகிய அந்தக்கரணங்களையும் அறியமாட்டாதிருத்தல்போலவும், அந்தக்கரணங்கள் தம்மையும் தமக்கு முதலாகிய உயிரையும் அறியமாட்டாதிருத்தல் போலவும், உயிரும் தன்னையும் தனது முதலாகிய சிவனையும் அறியாதிருக்கும். இவையாவையும் ஒருங்கே அறிந்து நிற்கும் சிவன் தனது இயல்பையும் ஆன்மவியல்பையும் அவ்வான்மாவுக்கு விளக்கித் தான் கரணங்களால் அறியப்படாது நிற்பன். ஆதலால் திருவருளைத் துணையாகக் கொண்டு சிவனை ஆன்ம அறிவிற்கண்டு அவ்வருளோடு கூடிநிற்கப்பெறின், பாசம் விட்டுநீங்கும். நீங்கியது ஒருக்கால்வந்து கூடினும் சிவபாவனையை விடாது செய்யின் திருவருளே தாரகமாக நிற்றலுமாகும்.

---

## இரண்டாமதிகரணம்.

பாதநீழற்கீழ்நில்லாதே நீங்கிப்போகின் ஆசைதருமுலகமெல்லாமலைந்தோராமென் றறிந்தகலவந்நிலையேபாகும் என்பது இரண்டாங்கூறு. (297-298). இதனானே பதிஞானமுதித்தவிடத்தும் நிட்டை கைவரப்பெறாவிடத் "குறித்தடியினிறுத்தே" என மேலேச்செய்யுளிற் கூறியதை விளக்கவுற்றுப் பிரபஞ்சவெறுப்பு நிகழப் பேரன்பு தலைப்படுமாறும் அங்ஙனம்சாதித்தற்பாலதாகிய சிவோஹம்பாவனையியல்பும் கூறப்படுகின்றன.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. பிரபஞ்சவெறுப்பு நிகழத் திருவடியன்புதலைப்படுமுறைமை. (297).
2. சிவோஹம்பாவனை யியல்பும் பயனும். (298).

1. பிரபஞ்சவெறுப்பு நிகழத் திருவடியன்பு தலைப்படுமுறைமை,

297. குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி
கோகநகன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்

வெறுத்துநெறி யறுவகையு மேலொடுகீ ழடங்க
வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுகீ ழில்லான்
நிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வர்க்கு
நினைப்பரியா னொன்றுமிலா னேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே
புகுந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

(இ-ள்). குறித்து அடியின் நின்று - மேற்கூறியவாறு குருவினருளால் அறிவதாகிய குறிப்புப் பாவனையால் உள்ளத்தில் நாடித் திருவருளே தாரகமாகநின்று,—அட்டகுணம் எட்டுச்சித்தி - அனந்தஞானம் முதலிய எண்குணங்களும் அணிமாமுதலிய அட்டமாசித்திகளும்,—கோகநகன் முதல் வாழ்வு குலவுபதம் எல்லாம்வெறுத்து - பிரமன் முதலியோருடைய செல்வங்கள் அழகிய புவனங்கள் யாவும் கானற்சலம்போல நிலைபற்றன என்று அறிந்து வெறுத்து;—நெறி அறுவகையும் மேலொடுகீழ் அடங்க - அத்துவாக்கள் அறுவகையும் கலைகள் முதலாகத் தத்துவங்கள் ஈறாக,—வெறும்பொய் என நினைந்து இருக்க - முழுதும் பொய் என்று நினைந்து சலிப்பற்று இருக்கப் பெறின்,—மேலொடுகீழ் இல்லான் - அந்தமும் ஆதியும் இல்லாதவனும்,—நிறுத்துவது ஓர்குணம் இல்லான் - இன்னதென்று நிச்சயிக்கத்தக்க ஒரு இயல்பு இல்லாதவனும்,—தன்னை ஒருவர்க்கு நினைப்ப அரியான் - தான் ஒருவராலும் உணரப்படாதவனும்,—ஒன்றும் இலான் - ஒருபற்றும் இல்லாதவனும், ஆகிய சிவன்,—நேர்பட உள்ளேவந்து - நேரே ஆன்ம அறிவின்கண் தோன்றி.—பொறுப்பரிய பேரன்பை அருளி - பொறுத்தற்கரிய பெருங்காதலைக்கொடுத்து,—அதன் வழியே - அவ்வன்பின் வழியாக,—எங்கும் இலாப் போகத்தைப் புரிந்து - எவ்விடத்தும் அறிதற்கரிய திருவடிப் பேரின்பத்தை அருளி,—புகுந்திடுவன் - அவ்வான்ம அறிவினுள்ளே நிற்பன்.

குறிப்பு. 1. அட்டகுணம் (செ. 264. கு. 4 பார்).

2. அட்டசித்தி - அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. (சிவப். 106 பார்).

3. கோகநகன் - பிரமா. கோகநகம் - செந்தாமரை.

4. நெறியறுவகையு மேலொடுகீழடங்க வெறும்பொயென நினைந்திருக்க: - கலைமுதலாகத் தத்துவங்கள் ஈறாகவுள்ள ஆறத்துவாக்களுள் அடங்கிய சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் என்னும் மூவகைப் பிரபஞ்சமும் தோன்றி அழிதலுடைமையாற் பொய்ப்பொருள் எனப்பட்டன. அறுவகை நெறி - ஆறத்துவாக்கள். நெறி-வழி. அடங்க - ஒருங்கே, எல்லாம். (செ. 262. கு. 4 பார்).

பொழிப்பு. சிவத்தில் விருப்பும் பிரபஞ்சத்தில் வெறுப்பு முண்டாயபடித்துச் சிவன் ஆன்மாவினிடத்துப் பிரகாசித்து நின்று அன்பைப்பெருக்.

அவ்வான்பின் வழியாக ஆன்ம அறிவின்கண் புகுந்துநின்று பேரின்பத்தைக் கொடுப்பன்.

### 2. சிவோஹம்பாவனையியல்பும் பயனும்.

298. கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணாக்
    கழிபரமு நானல்லே னெனக்கருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
    சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலு மலங்களெலாங் கருடதியா னத்தால்
    விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
    பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

(இ-ள்.) கண்ட இவை நான் அல்லேன் என்று அகன்று - ஆன்ம போதத்தினால் சுட்டி அறியப்பட்ட இத்தேகாதிப் பிரபஞ்சமாகிய பாசம் நான் அன்றென்று நியதிபண்ணி,—காணாக்கழிபரமும் நான் அல்லேன் எனக்கருதி - அப்போதத்தினால் சுட்டி அறியப்படாது மேம்பட்டு நின்ற சிவனும் நான் அன்றென்று அநுமித்தறிந்து,—உளத்து அவன் தான் நின்ற கலப்பாலே - (அவ்வாறு அறியப்படாது நின்றானாயினும்) ஆன்மாவின்கண் அச்சிவன் அத்துவிதமாய்க் கலந்து நின்ற முறைமையால்,—கசிந்த தொண்டினொடும் சோகம் எனப்பாவிக்க - அன்போடுகூடிய அடிமைத்திறத்தினால் சிவோஹம் பாவனை செய்யின்,—வேறின்றித் தோன்றுவன் - அவ்வான்மாவுக்கு வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றுவன்,—கருடதியானத்தால் விடம் ஒழியும் அதுபோல - கருடதியானத்தால் விடம் நீங்குவதுபோல,—மலங்கள் எல்லாம் விண்டு அகலும் - மலங்கள் யாவும் விட்டு நீங்கும்,—விமலதையும் அடையும் - அதனால் ஆன்மா சுத்தியும் அடையும்,—பண்டைமறைகளும் அது நானானேன் என்று பாவிக்கச் சொல்லுவது - பழையவேதாந்தமும் அதுநானானேன் எனப்பாவிக்கச் சொல்லுவதும்,—அப்பாவகத்தைக் காண் - இச்சோகம்பாவனையையே என அறிவாயாக.

குறிப்பு. 1. கழிபரம்:—கழி - மேலான. பரம் - கடவுள், சிவன்.

2. கசிந்ததொண்டு:—கசிவு - அன்பு. தொண்டு - அடிமை.

. சோகமெனப்பாவித்தல் - அது நான் என்று பாவனைசெய்தல். சோகம் (ஸ + அகம்)=அதுநான், அவன்நான். இது வேதாந்தவாக்கியம். சிவோகம் என்பதும் இதுவே. சிவோகம் (சிவ + அஹம்)=சிவம் நான். இது சித்தாந்தவாக்கியம்.

4. கருடதியானத்தால் விஷம் நீங்குமாறுபோலச், சோகம்பாவனை செய்தலால் மலங்கள் நீங்கும். ஆதிபௌதிககருடன், ஆதிதைவிககருடன்

ஆத்தியான்மிக கருடன் எனக் கருடன் மூவகைப்படும். அவற்றுள், உலகத்திற் காணப்படுங் கருடன் ஆதிபௌதிககருடன் என்றும், கருடமந்திரம் ஆதிதைவிககருடன் என்றும், கருடமந்திரமிடமாக நின்று பலன் கொடுக்குஞ் சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் என்றுஞ் சொல்லப்படும். ஆதிதைவிககருடமந்திரத்தை நாடோறும் பயின்று வந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திரமே தானாக அநந்நியபாவனைசெய்து தன்னறிவு அதன் வசமாம்படி உறைத்துநின்று, அம்மந்திரக்கண் கொண்டு பார்க்குங்கால் விஷவேகம் நீங்குமாறுபோல, சிவோகம்பாவனைசெய்து வருங்கால் எய்தும் சிவத்துவ விளக்கம் வாயிலாகப் பாசமாகிய விஷம் நீங்கும் என்பதாம்.

5. விமலதை - மலநீங்கிய தன்மை. எனவே ஆன்மசுத்தி யாணமையாம்.

6. அதுநானானேன் - ஆன்மா ஒன்றைப்பற்றி நிற்குமேயன்றித் தனித்து நிற்றல் கூடாதாதலின், மேற்செய்யுளிற் கூறியவாறு பிரபஞ்சம் பொய் என்று நினைத்திருத்தல் மாத்திரம் போதியதன்று - ஆதலால் இச்செய்யுள் சிவத்தைப் பற்றி நிற்பதற்கு வேண்டப்படும் பாவனை கூறியதாம். அப்பாவனை சிவோகம்பாவனையாம். வேதாந்திகள் சோஹமஸ்மி என்றும் சித்தாந்திகள் சிவோஹமஸ்மி என்றும் பாவனைசெய்வர். சோஹமஸ்மி (ஸ + அஹம் + அஸ்மி)=அதுநான் ஆகின்றேன், அவன் நான் ஆகின்றேன். சிவோஹமஸ்மி (சிவ + அஹம் + அஸ்மி)=சிவன் நான் ஆகின்றேன். இவ்விரண்டனுள் ஒன்றைப்பாவனைசெய்தலால், ஆன்மா மலங்களினீங்கிச் சுத்தியெய்தும். இப்பாவனையை உணர்த்துவதாகிய பஞ்சாக்கரத்தின் முறைமையை ஞானகுருவாயிலாக அறிக.

பொழிப்பு. பாசமும் நானன்று பதியும் நான் அன்று என்று கண்டு, பாசத்தை விட்டு நீங்கிச் சிவோகம்பாவனை செய்யின், சிவன் இவனில் வேறற நின்று மலங்கள் முழுவதையும் போக்கிச் சுத்தனாகச் செய்வன்.

---

## மூன்றமதிகரணம்.

ஓசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க உள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலாமோட என்பது மூன்றாங்கூறு (299-303). இதனானே நிட்டை நிலையாதற்கு வேண்டிய சாதனங்கள் கூறுமுகத்தானே சிவோஹம் பாவனை உறைத்தற்கு வேண்டுந் திருவஞ்செழுத்துவேள்வி அந்தரியாக வேள்வி உபாயப் புறபூசையாகிய வற்றி னியல்பும் பயனும்; இவற்றாற் திருவடி முத்தியாமாறும் கூறியது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. திருவஞ்செழுத்து வேள்வியி னியல்பும் பயனும் (299).
2. அந்தரியாகஞ்செய்யு முறைமை (300).

அந்தரியாக பூசனையி னியல்பும் பயனும் (301).
4. உபாயப் புறப்பூசையி னியல்பும் பயனும் (302).
5. சிவோஹம் பாவனையாற் திருவடி முத்தியாமாறு (333).

1. திருவஞ்செழுத்துவேள்வியி னியல்பும் பயனும்.

299 அஞ்செழுத்தா லான்மாவை யரனுடைய பரிசு
மரனுருவ மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்
டஞ்செழுத்தா லங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவி னஞ்செழுத்தா லிதயத் தர்ச்சித்
தஞ்செழுத்தாற் குண்டலியி னனலை யோம்பி
அணைவரிய கோதண்ட மடைந்தருளின் வழிநின்
றஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி யருக்க
னணையரவம் போற்றோன்று மான்மாவி லரனே.

(இ - ள்). அஞ்செழுத்தால் ஆன்மாவை அரன் உடைய பரிசும் - திருவஞ்செழுத்திலே ஆன்மாவைச் சிவன் அடிமையாக வுடைய தன்மையும்.— அரன் உருவம் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு - சிவனுடைய திருமேனி திருவஞ் செழுத்தாலமைந்திருக்குந் தன்மையுமறிந்து,— அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி - திருவஞ்செழுத்தால் சகளீகரண மென்னும் அங்கநியாச கரநியாசங்களை முறையே மற்றைக் கிரியைகளோடு கூட்டிச் செய்து,— ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத்து அர்ச்சித்து - மலநீங்கிச் சுத்தி யெய்தியதாகிய ஆன்மா விடத்துத் திருவஞ்செழுத்தால் இதயத் தானத்துச் சிவனை ஆராதித்துப் பூசித்து,— அஞ்செழுத்தால் குண்டலியில் அனலை ஓம்பி - திருவஞ்செழுத்தால் உந்தித்தானத்திருக்கும் அருட் சத்தியைப் பிராணாயாமத்தாற் பிரகாசிக்கச்செய்து மேனோக்கி எழுப்பி.— அணைவு அரிய கோதண்டமடைந்து - கூடுதற் கரிய புருவநடுவில் அச்சத்தியைச் சேர்த்துத் தியானித்து,— அருள் வழி நின்று அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க - அவ்வருட்சத்தியின் வயத்தாய் நின்று திருவஞ்செழுத்தை விதிப்படியே உச்சரிக்க,— மதி அருக்கன் அணை அரவம் போல் - சந்திர சூரியரிடத்துக் கிரகண காலத்திற் றோன்றும் இராகு கேதுக்கள்போல.— ஆன்மாவில் அரன் தோன்றும் - ஆன்மாவிடத்துச் சிவன் பிரகாசியாநிற்பன்.

குறிப்பு. 1. இச்செய்யுள் மேற்கூறிப்போந்த சிவோஹம்பாவனை உறைத்து நிற்குமாறு சாதிக்க வேண்டிய திருவஞ்செழுத்துத் தியான மாகிய பாவனா விசேடம் கூறியதாம். இதனானே நித்திய கர்மாநுஷ்டான விதியினுள்ள கிரியைகளும் ஒருவாறு விளக்கப்பட்டமை மேற்காண்க. இருதயம், உந்தி, புருவநடு என்னும் மூன்றனையும் முறையே மண்டபம். குண்டம், கும்பம் ஆகிய தானங்களாகக் கற்பித்து அவற்றில் நிரலே அர்ச்சித்து, அன

லோப்பி, (உலகைத் தோற்றஞ் செய்யும் பிராணவாயுக்களைத்) தம்பித்துப் பசுபோதத்தைத் தடிந்து தியானிப்பதாதலின், திருவஞ்செழுத்துக்கணிப்பு, வேள்வியாயதூஉம் உய்த்துணரவைத்ததாம்.

2. அஞ்செழுத்தா லான்மாவை யரனுடைய பரிசும்......(அறிந்திட்டு). சிவன் அருள் உயிர் திரோதம் மலம் என்ற முறையானே யமைந்துள்ள சிகார முதற் கொண்ட சூக்குமபஞ்சாக்கரத்தைக் குருவருளியவாறே நிர்ப்பீசமாகவேனும் சபீசமாகவேனும் உச்சரிக்க. மகாரமாகிய மலத்தினாலேற்பட்ட நகாரமாகிய திரோதம் நீங்க, யகாரமாகிய வுயிர் வகாரமாகிய அருளாற் சிகாரமாகிய சிவத்தோடைக்கியமாகும் என்பது. இதனானே உயிர் சிவனதுடைமையும் சிவன் உயிரை யுடையானுமாம் என்றதாம். இதனை யறிந்து முத்திகாமிகள் சூக்குமவஞ்செழுத் தெனப்படும் சிகாராதியாக வுள்ள திருமூல மந்திரத்தையே உச்சரிக்க வேண்டியதென்பது போதர "அறிந்திட்டு" என்றும், அதுவும் குருவினிடம் உபதேசக் கிரமமாகப் பெற்றே செய்தல் வேண்டுமென்பது போதர மேல் 'விதிப்படி உச்சரிக்க' என்றும் கூறியதாம். (உண்மைவி. 42-45).

3 அரனுருவ மஞ்செழுத்தா லமைந்தமையு மறிந்திட்டு:—முதல்வனது சகளத்திருமேனியில் நகாரமுதல் யகாரமீறாக முறையே பாதம், உந்தி, தோள், முகம், சிரமாக அமைந்திருக்கும் என்பதும், விசேடமாக நடராஜ மூர்த்தத்தில் ஓங்காரமாகிய பிரணவ பீடம் திருவாசியாக, நகாரமாகிய மலம் முயலகனை மிதித்த பாதத்துட்பட்டு வலிகுன்ற, மகாரமாகிய திரோதசத்தி அங்கிக்கரத் தெரிந்தொழிய, யகாரமாகிய உயிர் அபயக்கரத் தாட்கொள்ளப்பட்டு, வகாரமாகிய அருளை வரத கரத்திற் பெற்றுச், சிகாரமாகிய சிவத்தோடு துடிக்கரத்தணைந்து ஆநந்தத் தழுந்தும் என்பதையும் அறிந்து என்றது. (உண்மைவி. 33-35). நிஷ்கள சகளமாகிய சதாசிவ மூர்த்தத்தில், சத்தியோசாதம் வாமம் அகோரம் தற்புருடம் ஈசானங்களும் சிவலிங்கத்துக் கீழ்ப் பதுமம், கண்டம், மேற்பதுமம், நாளம், லிங்கமும் முறையே, பாதம், குய்யம், இருதயம், முகம், சிரம் ஆக நகார முதலாக் கொண்ட தூலவஞ்செழுத்தாயமைந்திருக்கு மென்ப. இதனானே ஈசானாதி பஞ்சப் பிரமமந்திரங்களும் சிரசாதி சடாங்க மந்திரங்களும் சேர்ந்து தோற்ற ஒடுக்கமுறையிற் றூலத் திருவஞ்செழுத்தாந் தன்மையும், இறைவனது உருவத் திருமேனியும் அருவுருவ திருமேனியும் திருவஞ்செழுத்தாலமைந்த தன்மையும் குருவருளாலறிந்து என்றதும் குறித்துணர்க. அருவமாகிய நிஷ்களத் திருமேனி ஊமை யெழுத்தென்னும் பிரணவமாகிய ஓசைதரா வஞ்செழுத்தாலமைந்திருந்தமையான் அதை இங்கு ஓசைதரு மஞ்செழுத் தன்மையிற் கூறா தொழிந்ததாம்.

4. அஞ்செழுத்தா லங்ககர நியாசம் பண்ணி:—அங்கநியாசம் கரநியாசம் இரண்டும் சேர்த்துச் சகளீகரணம் எனப்படும். இது நித்திய சந்தியாவந்தனத்திலே பூதசுத்தி, கணபதிகுருவந்தனம், சலசுத்தி, தருப்பணம், ஆக

மனம், தானசுத்தி, விபூதிசுத்தி, விபூதிஸ்நானம், மந்திரஸ்நானம், மேல் ஆசமனம், மானதஸ்நானம் என்னும் மந்திரோபாவனைக் கிரியைகளால் மாயாசம்பந்தமாய தூலசரீரம் ஒழிந்ததாகப் பாவித்து மேற் சிவசொரூபமுண்டாவதாகச் செய்யுங் கிரியையாம். இந்தச் சகளீகரணமே சிவோஹம் பாவனையின் தலையாயிருத்தல்பற்றி இதனைக் கூறவே இதற்கு வேண்டியுள்ள மற்றைய கிரியைகளெல்லாஞ் செய்து, என்பது பெறக்கிடந்தது. இவற்றின் விபரம் மேற்காட்டுவதுகாண்க. (௫-11. பார்). சகளீகரணம் பஞ்சப்பிரம்ம சடாங்க மந்திரங்களாலே பாவித்துச் செய்வதாயிருந்தும் அஞ்செழுத்தாலங்ககரநியாசம் பண்ணி என்றது மேற்சொல்லிய ஈசானாதி பதினொரு சங்கிதாமந்திரங்களும் சேர்ந்து ஒடுக்கம் விரிவு முறையிலமைந்த அதிமூலத் திருவஞ்செழுத்தா யென்பதுபற்றியாமென்க. திருவஞ்செழுத்தின் எழுத்துக்களைப் பீசமாக்கொண்டு ஒவ்வொன்றனோடும் கூட்டி உச்சரிப்பதனாலும் இது காண்க.

5. ஆன்மாவினஞ்செழுத்தா லிதயத் தர்ச்சித்து:—மந்திரோபாவனைக் கிரியைகளால் மலசுத்தியெய்திய தாகப் பாவித்த ஆன்மாவிலே திருவஞ்செழுத்தினால் இருதயகமலத்துச் சிவனை உருவமூர்த்தியாகவும் உருவாருவமூர்த்தியாகவும் ஆவாஹித்துப் பூசித்து என்பது. "உயிராவணமிருந் துற்றுநோக்கி யுள்ளக்கிழியி னுருவெழுதி, உயிராவணஞ் செய்திட்டுன்கைத்தந்தா லுணரப்படுவாரோ டொட்டி வாழ்தி; அயிராவணமேறா தானேறேறி யமரர்நா டாளாதே யாரூராண்ட, அயிராவணமேயென் னம்மானே நின்னருட் கண்ணா னோக்காதா ரல்லாதாரே" என்று அப்பர்சுவாமிகள் அருளிச்செய்தது நோக்குக. விபரம் மேற்காண்க. இதுவேள்வியிற் பூசைகூறியவாறு.

6. அஞ்செழுத்தாற் குண்டலியி னனலை யோம்பி:—உந்தித்தானத்துள்ள திருவருட் சத்தியைப் பிராணயாமத்து இரேசக பூரகங்களாலுண்டாகும் அனலினாற் பிரகாசிக்கச் செய்து மேலேசெல்ல வெழுப்பி என்றது. இதுவேள்வியில் அனலோம்புதல் கூறியவாறு.

7. அணைவரிய கோதண்ட மடைந்து:—கருவி கரணாதிகள் தொழிலற்றாலேயன்றி யடைதற்கரிய புருவ நடுவிலே திருவருட்சத்தியை நிறுத்தி என்பது. இது பிராணயாமத்திற் கும்பகத்துச் சுழுமுனைவழியே திருவருட்சத்தியை விந்துத்தானமாகிய புருவநடுவினுக் கிழுத்து நிறுத்தி என்பது. இதுவேள்வியிற் பசுத்தடிதல் கூறியவாறு.

8. அருளின் வழி நின்று:—பிராணயாமத்தாற் புருவநடுவில் நிறுத்திய திருவருட்சத்தி வழியே நின்று என்பது. இது சந்தியாத்தியானத்தாற் சிவசத்தியைத் தியானித்து அதன்வசமாய் நிற்றல் முதலிய மற்றைய பாவனைகளைக் குறித்தது. இதுவேள்வியி னவியுண்டல் கூறியவாறு.

9. அஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க:—மேல் திருவஞ்செழுத்தை முறைப்படி செபஞ்செய்ய என்பது. விதிப்படி என்றதற்குக் குருவினுற் பக்குவநோக்கி உபதேசித்த முறைப்படி எனவும், "ஆதிமலமிரண்டு மாதியா வோதினுற், சேதியாமும்மலமுந் தீர்வாகா - யோத, மதிப்பரிதா மின்பத்தே வாழலாமாறி, விதிப்படியோ தஞ்செழுத்துமே" என உண்மைவிளக்கத் துக் கூறியவாறு மல நீக்கத்துக்குவேண்டும் சூக்குமமான முறைப்படி என வும், உரை மந்தம் மானதம் என்றமுறைகளானன்றிச் சுத்தமானதமாம் அறிவாற் கணித்து எனவும் கூறுப.

விதிப்படி என்றதினின்றும் திருவஞ்செழுத்து நகராதியான தூல மும், சிகாராதியான சூக்குமமும், நகார மகார மிரண்டு மொழித்து யகார நடுவாக ஏனைய சிவனருளிரண்டும் இருமருங்கும் எதிர் நிரனிறையாகிற் கும் இருதலை மாணிக்கம் என்னும் காரணமும், அருளிருமருங்கு முறச் சிவம் நடுவே நின்ற மகா காரணமும், சிவமே தனித்து நின்ற நாயோட்டு மந்திரமென்னும் மநுவு மென ஐவகைத் தென்பதும், அவை குரு மூலம் தெரி யவேண்டிய வென்பதும், அவற்றுள் முத்தி யீவது பின்னைய நான்குமே யென்பதும் காணக் கிடந்தது. இவையேயன்றிச் சங்கிதா மந்திரம் பதி னென்றும் சேர்ந்தது தோற்ற ஒடுக்கமுறையில் அதிநூலவஞ் செழுத்தும், ஊமை யெழுத்தாகிய பிரணவம் ஓசையில்லா அஞ்செழுத்தாகிய மஹா மனுவுமாம். இதுவே மஹா பீசம் எனப்பட்டுப் பக்குவ நோக்கித் திருவஞ்செ ழுத்தோடு சேர்த்தும் சேராதும் உபதேசிக்கப்படுவதாம். மேலும் விரிவு குருமூலந் தெரிக.

10. மதியருக்கனணையரவம்போற்றோன்றுமான்மாவிலரன்:— இயல் பிலேதோன்றாது சாயைமாத்திரையாக நின்று கிரகணகாலத்திற் சந்திர சூரியரையணைந்து காணநிற்கும் இராகுகேதுக்களைப்போல இறைவனும் ஆன்மாவின்கண் விளங்கித் தோன்றுவன் என்றதாம். சூரிய சந்திரகலைக ளாகிய இடை பிங்கலைகளை மறைத்துச் சுழுமுனையிடமாக வெளிப்பட்டுப் பாம்புருவமாய குண்டலினிசத்திவயிற்றோற்றும் பரசிவப்பேரொளியென் மொன்று.

இதனானே திருவஞ்செழுத்து வேள்வி யாகமுறையானும் யோகமுறை யானும் விளக்கியதும், அத்தகைவேள்வியாற் சிவம்பிரகாசிப்ப ஞானம் நிகழுமாறு குறித்ததும் காண்க. இதயம், குண்டலி, சோதண்டம், மதியருக் கனணையரவம் என்பனவற்றை ஊன்றி யோசிக்க அறியவரும் அனுபவவு ணர்ச்சி சாதனையாற்சாதித்தறிக.

11. இதனானே யாவரும் செய்யவேண்டிய சந்தியா வந்தனக் கிரியை பாவனை நிட்டையாய் அநுட்டித்துழி ஞான நிட்டை கைவர முத்தி யெய் தற்குரிய சாதனமாமென்றது காண்க.

சந்தியாவந்தன மந்திரோபாவனைக் கிரியைவிளக்கம்.

க. ஸ்நானம் - குளிர்ந்த ஜலத்தினுல் உடம்பைக் கழுவிச் சுத்தி செய்து, தோய்த்துலர்ந்த வஸ்திரத்தினு லீரந்துவட்டிப், பட்டேனும் தோய்த்துலர்ந்த வஸ்திரமேனுந் தரித்து, அநுஷ்டானத்திற்கு நீர் மொண்டுவருதல். நோயாளர் கண்டம், தொப்பூழ், கால் அளவுக்கும் வெந்நீராலும் ஸ்நானஞ்செய்யலாம். அதுவுமியலாதோர் விபூதியினுல் மானத ஸ்நானமுஞ்செய்யலாம். ஸ்நானத்தினுற் தேகசுத்தியாக மனுேசக்தி வலுவேறத் தியானஞ் சித்திக்குமென்ப. பட்டேனும், பட்டுக்கரை வேட்டியேனும் தலைப்பெல்லாம் கட்டிற் சேரக்கொய்து தரிப்பதனுல் தேகத்துள்ள ஆகருடண சத்தியும் புறம்பேயுள்ள உக்கருடண சத்தியும் நிலைமாறாது ஒருதலையா நிற்குமென்ப. இதுபற்றியே மரவுரி, மான்ருேல் புலித்தோலு மாசனத்துக்கு விசேடமென்பதும், விபூதி ஸ்நானம் உருத்திராக்கதாரணம் தியானத்துக் குசிதம் என்பதுவுமா மென்க. ஆகருடணம் - வெளியிற்செறிவது; உக்கருடணம் - உட்செறிவது.

உ. திக்குநோக்கல் - முத்திகாமிகள் வடக்குநோக்கியும், போககாமிகள் கிழக்கேனும் மாலையில் மேற்கேனும் யாறு குளங்களில் எதிர்நோக்கியும் இருத்தல்வேண்டுமென்ப. அண்டத்தின் ஆகருடண உக்கருடண சத்திகளோடு பிண்டத்து ஆகருடண உக்கருடண சத்திகள் முரணுது ஒத்து நிற்பின் ஆத்மசத்தி வலுவெய்தத் தியானம் சித்திக்கு மாதலின், முத்திகாமிகட்கு என்றும் வடக்கும். சூரியனது கிரகண சத்தியோடும் யாறு குளங்களது உக்கருடண சக்தியோடும் ஒத்து நின்று போகசத்தி வலுக்கச்செய்தல் போககாமிகட்கு வேண்டினமையின் அவர்க்குக் கிழக்கும் மேற்கும் யாற்றெதிர் நோக்கும் கூறியதாம் என்ப.

ங. பூமிசுத்தி - சலத்தினுல் இருக்குமிடத்தைச் சுத்தி செய்தல். இது மனத்தையடக்கப் புனிதமாகிய இடத்திலிருக்கவேண்டு மென்றபடியாம். பீடமேனும், மரவுரி, மான்ருேலேனும் ஆசனத்திற்குவந்ததெனலும் மேற் கூறியபடி ஆகருடண உக்கருடண சத்திகளை நிலையிற் படுத்து மாற்ருனுமேயாம். மந்திரம் - அஸ்திரம்.

ச. கணபதிகுருவந்தனம் - பிரணவ சொரூபமாகும் விநாயகரையும் உபதேசஞ்செய்த குருவையும் தியானித்தலாம். மலநீக்கமும் சிவத்துவ விளக்கமு மாகுமாறும். பிரணவத்தைத் தியானித்தல் நிஷ்கள வணக்கமென்ப. அதுவும் உபதேசஞ் செய்த குருமூர்த்தியைத் தியானித்தேயாக வேண்டுமென்பது. குரு என்பது மலத்தை நீக்குபவன் என்னும் பொருளது. தாய், தந்தை, வித்தியாகுரு, தீக்ஷாகுரு, ஞானகுரு, முதல்வன் என்னும் ஐவகையோரும் தெய்வமாகவும் மலநீக்கத்து வாயில்களாகவும் கொள்ளப்படுமாற்ருல் இவரெல்லாம் குருவெனப்படுவர். இறைவனே குருலிங்க சங்கமத்தில் நின்று வழிபாட்டை யேற்பனென்ப. மந்திரம் - கணபதி. மூர்த்தம், குரு. முத்திரை - குட்டுதல், கும்பிடுதல்.

ஈ. சலசுத்தி - சலத்தைச் சுத்திசெய்து சிவசத்தி வடிவினதாக்குதல். கன்மக்கள்யாவும் மந்திரம், கிரியை, பாவனை என்னும் மூன்றானும் செய்யப் படும். இதில் மந்திரம் அதிசூக்குமமாகவும், கிரியை தூலமாகவும் பாவனை சூக்குமமாகவும் பலனளிப்பனவாம். மந்திரத்தின் அதிதேவதை முத்திரை யாற பிரீதியுற்றுப் பாவனையை முற்றச் செய்யுமென்ப. சலசுத்திக்குக் கிரி யைகள் எட்டு. அவை வருமாறு.

a. நிரீக்ஷணம் - வலம், நெற்றி, இடம் ஆகிய மூன்று கண்களாலும் சலத்தைப் பார்த்தல். வலக்கண் ஆதித்தமண்டலவடிவாய் இச்சாசத்தி சொரூபமாகவும், நெற்றிக்கண் அக்கினிமண்டலவடிவாய் ஞானசத்தி சொரூபமாகவும், இடக்கண் சந்திரமண்டலவடிவாய் கிரியாசத்தி சொரூப மாகவும், பாவனை பண்ணப்பட்டு இவற்றாற் பார்த்த நீர் குற்ற நீங்கி அஃது சரிபட அமிர்தம் பெய்வுற்றுச் சுத்தமாயதெனப் பாவிக்கப்படுவதாம். மந்திரம் சிவமூலம். முத்திரை - திவ்வியம்.

b. புரோக்ஷணம் - விந்துத்தானத்து அமிர்தத்தைத் தெளித்து நீரை மேலும் சுத்திசெய்யும் பாவனை. மந்திரம் - அஸ்திரம். முத்திரை - பதாகை.

c. தாடனம் - மேலும் அந்நீரைத் தட்டிச் சிவசத்தி பிரகாசிக்கச்செய் யும் பாவனை. மந்திரம் - அஸ்திரம். முத்திரை - சுட்டுவிரல் நீட்டிய கை.

d. அப்பியுக்ஷணம் - நீரிற்றோன்றிய சிவசத்திப் பிரகாசமானது நீங் காவண்ணம் மூடும்பாவனை. மந்திரம் - கவசம். முத்திரை - சுட்டுவிரல் நீட்டிய கை.

e. த்ராணத்திரயம் - அச்சத்தியினது பிரகாசத்தைக் கெடுக்கவரும் அசு ரர் முதலியோரைத் (தீய வெண்ணம் முதலியவற்றை) துரத்தும் பாவனை. மந் திரம் - அஸ்திரம். முத்திரை - வலக்கை நடுவிரல் மூன்றாலும் மும்முறை இடவுள்ளங்கையிற் றட்டுதல்.

f. திக்குப்பந்தனம் - மேல் துரத்திய அசுரர் முதலியோர் கிட்டவாராது எட்டுத்திக்கிலும் காவல்செய்யும் பாவனை. மந்திரம் - அஸ்திரம். முத்திரை - சோடிகை (சொடுக்குக்கை).

g. அவகுண்டனம் - மேல் சிவசத்தி பிரகாசமான இடத்தை மதி லாற் காவல் செய்யும் பாவனை. மந்திரம் - கவசம். முத்திரை - சுட்டுவிரல் நீட்டியகை.

h. தேனுமுத்திரை - அந்நீரிற் காமதேனுவின் பாலைப் பொழிந்ததாகச் செய்யும் பாவனை. மந்திரம் - சிவமூலம். முத்திரை - தேனு. (பசுவினுன்று முலைபோல இருகையின் பெருவிரல்கணீக்கிய எட்டு விரல்களையும் சேர்த்த முத்திரை.)

உ. தருப்பணம் - அமிர்தமாகிய அந்நீரைச் சூரியமண்டலத்துற்ற சிவ பிரானுக்கு அளித்து உவப்பித்தல். தருப்பணம் - மும்முறை அஸ்திரத்திற்

செய்து பத்துரு மூலம் செபித்து, பின்னும் ஒருமுறை செய்வதாம். தர்ப்பணம் சூரியனை நோக்கி யுளதாகையானே சூரியோதயமும், சூரியாஸ்தமன முன்னும் அநுஷ்டானத்துக்குரிய விசேட காலங்களாயினமையும் காண்க. மந்திரம் - மேற்கண்டபடி. முத்திரை - கோமூத்திரிகம் (விரித்து நீட்டிப்பொருந்தச் சேர்த்த விருஸ்கையும்). தருப்பணத்தால் இறைவன் மகிழ்வெய்தவே கன்மம் நீங்கிய பாவனையாம்.

௭. ஆசமனம் - ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவமாகிய மூவகைத் தத்துவங்களையும் சுத்திசெய்யும் பாவனை. பிரமா விஷ்ணு ருத்திரப் பிரீதியுமாம். தத்துவ விபரம் இரண்டாஞ் சூத்திரத்துக் காண்க. (பக். 181. பார்). இது கோகன்ன முத்திரையுடைய வலக்கையிற் பெருவிரலடியிற் சார்ந்து உழுந்தமிழ்ந்து சலத்தை மும்முறை உட்கொண்டு பின் உதடுகளிரண்டையும் வலப்பெருவிரலடியால் வலமிடமாக இருமுறையும் உள்ளங்கை கொண்டு கீழாக ஒருமுறையும் துடைத்தல். ஆசமன மந்திரம் - ஆத்தும, வித்தியா, சிவதத்துவங்கள். சுத்தி - அஸ்திரம். இதில் மந்திராந்தமாகிய "ஸ்வாதா" உச்சரிப்பால் பிரம விஷ்ணு ருத்திரர் பிரசன்னமாகி முறையே தத்தமக்குரிய ஆத்மதத்துவம் இருபத்து நான்கையும், வித்தியாதத்துவம் ஏழையும் சிவதத்துவமைந்தனுள் சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் ஆகிய மூன்றையும் சுத்தி செய்வதாகிய பாவனையாம். இதனானே தத்துவங்களிற் கட்டுண்டு கிடந்த சஞ்சிதப்பற்றுச் சிவசத்தி சம்பந்தத்தால் அற ஆன்மாவுக்கும் அத் தத்துவங்களுக்கும் அவ்வினை காரணமாயுற்ற தொடர்பு ஒழிந்துபோக மாயாமல நீங்கிய பாவனையாம்.

௮. தொடுமிடம் - முகம், வலமிடமாய மூக்குகள், கண்கள், காதுகள், உந்தி, மார்பு, புயங்கள், சிரம் என்னும் 12 இடங்களையும் பெருவிரலோடு கூடிய அணிவிரலாற் றொடுதல். இதனானே இத்தானங்கள் சுத்தி செய்யப்பட்டு அவ்வவ்விடத்து அதிதேவதைகள் பிரீதியான பாவனையாம். மந்திரம் - இருதயம். முத்திரை - அங்குசம்.

௯. வீபூதிசுத்தி - வீபூதி பராசத்தி வடிவாயுள்ளது. அதிதேவதை அக்கினிருத்திரன். சுத்தி மேற் சலசுத்திக்குக் கூறிய முதனான்கனோடு பஞ்சகலாசுத்தியும் அபிமந்திரித்தலுமாம். பஞ்சகலாசுத்தியால் அத்துவசுத்தியாகும் (செ. 262. பார்). பின் சங்கிதா மந்திரங்களால் அபிமந்திரிப்பதனால் இறைவனது குணங்கள் பொருந்தப்பெறும். இதுவே மகத் ஐஸ்வரியம் எனப்படும். இதுவே வீபூதி என்னும் பதத்தினர்த்தமுமாம். இதனானே வீபூதியில் அத்துவசுத்திசெய்து இறைவனுடைய அநந்தைஸ்வரிய சத்திகளை அதனிடத்துப் பிரகாசிக்கச் செய்தலே வீபூதி சுத்தியின் பாவனையாம். பின் திக்குப்பந்தனமும் அவகுண்டனமும் சலசுத்திக்குப்போற் செய்யப்படும். வீபூதிப்பெருமை திருநீற்றுப்பதிகத்துக் காண்க.

௰. வீபூதிஸ்நானம் - இது மலஸ்நானம், விதிஸ்நானம், மந்திரஸ்நானம் என மூன்று வகைத்து.

a. மலஸ்நானம் என்பது தேகம் முழுதும் வீபூதியை வலக்கைப் பெருவிரல் அணிவிரல்களாற் பூசுதல். இதனுனே ஆணவமலம் முழுதும் கெட்டொழிந்த பாவனையாம். மந்திரம் - அஸ்திரம்.

இவ்வகையான வீபூதி உத்தூளண ஸ்நானத்தினுல் தேகத்து ஆகருடண உக்கருடண சத்திகள் நிலையெய்தி அரோக தேகமும், பூரித்த மனமும் அமையப் பெறுதல் கண்கூடாக் காணத்தகுமென்ப.

b. விதிஸ்நானம் - ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் அழித்தொழிக்கும் பாவனையில் திரிபுண்டரமாக வீபூதியை முப்பத்திரண்டு, பதினாறு, பன்னிரண்டு, எட்டு, ஐந்து என்னுங் கணக்காய தானங்களிற் குரு சம்பிரதாயப்படி தரித்தல். இதனுனே அவ்வத்தானங்கள் சுத்தியெய்த அவற்றின் அதிதேவதைகள் பிரசன்னராய் மலபந்த நீக்கமான பாவனையாம் மந்திரம் - சிரசு, நெற்றி, மார்பு, குய்யம் ஆகிய இடங்களில் முறையே ஈசானுதி நான்கும், மற்றைய இடமெல்லாம் சத்தியோசாதமுமாம். நெற்றி, இருதயம், தோள்கள், புயங்களில் அவ்வாறங்குலமும் மற்றைய விடங்களில் வருணங்களுக்கேற்ப ஆறு, நான்கு, இரண்டு, ஒன்று என்னும் அங்குலப் பிரமாணமுமாகத் தரித்தல் வேண்டுமென்பர். (சைவ. நெ. 151). திரிபுண்டரமேயன்றித் திரிசூலம் இடபம் ஆகிய குறிகள் பொறித்துத்தரித்தலுமாகும். மேல்விபரம் சைவசமயநெறியிற் காண்க.

c. மந்திரஸ்நானம் - எஞ்சிய வீபூதியோடு சலங்கொண்டு கும்பமுத்திரையினுல் ஏகாதசமந்திரங்களை உச்சரித்துச் சிவமூலத்தால் சிரசில் அபிடேகித்தல். இதனுனே மலமாசு பற்றற நீங்கிய பாவனையாம்.

௰௧. ஆசமனம் - இதுமுன்னர்போற்செய்தல். மலமாயைகன்ம நீங்கிய ஆன்மாவிற்கு முன்செய்த தத்துவசுத்திசெய்து மீண்டும் மலப்பற்றடையாது காத்தல்.

௰௨. மானதஸ்நானம் - மும்மலநீக்கம்பெற்ற ஆன்மாவும் தேகமும் பரிசுத்த மெய்துவதாக அமிர்தப்பிரவாகத்தால் உள்ளும் புறம்பும் நனைத்தலாகும் பாவனை. மந்திரம் - சிவமூலம். முத்திரை - பிராணுயாமம். பிராணுயாமத்தோடு கூடியிருந்து மனதை யடங்கச் செய்யும்பாவனை.

இக் கிரியைகள்யாவும் ஆன்மாவிற்கு மலபந்த நீங்கிப் பரிசுத்தமெய்தியதாகிய பாவனையாம். மேல் சகளீகரணமாகிய நியாசங்களாற் சிவோஹம பாவனை தலைப்படுத்துமாறு.

௰௩. சகளீகரணம் - இதன்விரிவு வருமாறு.

a. கரசுத்தி - கைகளை ஒன்றுல் ஒன்றை உள்ளும் புறமும் துடைத்து அவற்றிலுள்ள அசுசிகளைத் தகித்தபாவனையாம். மந்திரம் - அஸ்திரம். மேல் சத்திமந்திரத்தால் இரு கரங்களையும் குவித்தல் சத்தி அமிர்தத்தால் அவ்வக்கினியைத் தணித்த பாவனையாம்.

b. கரநியாசம் - இருகைகளையும் சிவனுக்குரிய கமலாசனமாகப்பாவித்து அதிலே சிவனை அருச்சித்து அக்கைகளைச் சிவவடிவினவாக்கல். இருகரங்களும் சத்திவடிவினவாக, அவற்றைக் குவித்து விடத்து அங்குட்டங்களொழிந்த மற்றையெட்டு விரல்களும் இருதயகமலத்தின் 8 இதழ்வடிவினவாயும் மத்தியில் வைத்த அங்குட்டவிரல் அக்கமலத்தின் கர்ணிகை வடிவினதாயும் பாவிக்கப்படும். குவித்த இருகைகளின் நடுவில் அங்குட்டவிரல்களினால் சிவாசன மந்திரத்தால் ஆசனம் சமர்ப்பித்து, அதில் சிவமூர்த்தி மந்திரத்தினால் உருவமாகிய மூர்த்தியை ஆவாஹனஞ் செய்து, சிருட்டி திதிசங்காரக்கிரமத்தில், அதிகாரத்துக்கியைய, ஐந்து விரல்களிலும் ஈசானாதி பஞ்சப்பிரமமந்திரங்களால் நியசித்துச் சிவனுடைய சிரசு முதலிய அங்கங்களை அமைத்துப் பூசித்து, மேல் கைகளின் நடுவில் அங்குட்டவிரலால் வித்தியாதேசமந்திரத்தால் அருவாருபமாகிய சிவலிங்கமூர்த்தியிலே வித்தியாதேகம் அமைத்துப் பூசித்து, இருகைகளின் நடுவிரல் மூன்றாலும் நேத்திரமந்திரத்தால் நேத்திரமமைத்துப் பூசித்து, அங்குட்டவிரலினாலே சிவமூலமந்திரத்தால் நியசித்து அச்சிவலிங்கமூர்த்தியில் நிஷ்களமாகிய சிவனை ஆவாஹித்துப் பூசித்து, முதல் மூன்று விரல்களினும் இருதயம், சிரசு, சிகை மந்திரங்களால் முறையே அவ்வங்கங்கள் அமைத்துப்பூசித்து மேல் கவசமந்திரத்தால் அவகுண்டனஞ்செய்து அவ்வாறு பிரசன்னமாகிய சிவனைச்சூழ மதில் உண்டாக்கி அஸ்திரமந்திரத்தால் ஒவ்வோருள்ளங்கையையும் மற்றையதன் அணிவிரலால் நியசித்தலுமாய பாவனையாம். மேல் சிவமூலமந்திரத்தால் இருகரமுங்குவித்துப் பரமீகரணஞ்செய்தல் முன்வைத்த மந்திரமனைத்தையும் ஏகீபாவஞ்செய்தலாம் (பரமீகரணம், ஏகீபாவம், ஒருங்குசேர்த்துப் பாவித்தல்). இக்கிரியை மேல் அங்கத்தைச் சிவசொரூபமாக்குநிமித்தம் வேண்டப்படுவதாகிய கையை முன்னர்ச் சிவவடிவினதாக்கிக்கொள்ளும் பாவனையாம்.

இக்கரநியாசம் வலக்கைப் பெருவிரலாதியாக இடக்கைப் பெருவிரலீறாக நியசிக்கும் சிருட்டிக்கிரமமும், இருகரத்தும் ஒரேகாலத்துப் பெருவிரல் முதற் சிறுவிரலீறாக நியசிக்கும் திதிக்கிரமமும், சிறுவிரல்முதற் பெருவிரலீறாக நியசிக்கும் சங்காரக்கிரமமுமென மூத்திறப்படும் இவற்றுள் சிருட்டிக்கிரமம் பிரமசாரிக்கும் கன்னியர்க்கும், திதிக்கிரமம் கிருகத்தனுக்கும் சுமங்கலிக்கும், சங்காரக்கிரமம் வானப்பிரஸ்தன் சந்நியாசி விதவைக்குமாம் என்ப.

c. அங்கநியாசம் - அங்கத்துச் சிவவடிவை வைத்துப் பூசித்து அதைச் சிவசொரூபமாகப் பாவித்தல். சிவாசனமந்திரத்தால் பெருவிரல் அணிவிரலைச் சேர்த்து இதயத்தில் நியசித்து ஆசனம் அமைத்து அதிலே சிவமூர்த்திமந்திரத்தால் உருவமாயமூர்த்தியை ஆவாஹித்துப் பூசித்துக் கையை முஷ்டியாகப் பிடித்துப் பெருவிரல்கொண்டு ஈசானமந்திரத்தாற் சிரசிலும் பெருவிரலோடு மற்றை நாலுவிரல்களையும் முறையே சேர்த்துத் தற்புருடம்,

வாமம், அகோரம், சத்தியோசாதமந்திரங்களால் முறையே முகம், மார்பு, குய்யம், பாதம் ஆகிய இடங்களிலும் நியசித்து, உருவத்திருமேனிக்குரிய சிரம் முதலாகிய அவயவங்கள் உண்டானதாகப்பாவித்துப் பூசித்துப் பெருவிரல் அணிவிரல்சேர்த்து வித்தியாதேகமந்திரத்தால் இருதயத்து நியசித்து அங்கே அருவாரூபமாய சிவலிங்கந்தோன்ற அதில் வித்தியாதேகம் பொருந்தியதாகப்பாவித்துப் பூசித்து, வலக்கை நடுவிரல் மூன்றனும் நேத்திரமந்திரத்தாற் கண்களில் நியசித்துச் சிவனுக்கு நேத்திரங்கள் அமைத்ததாகப் பாவித்துப் பூசித்து, சிவமூலமந்திரத்தால் இருதயத்தில் நியசித்து அங்குள்ள சிவலிங்கமூர்த்தியிலே அருவமாய சிவனை ஆவாகித்துப் பூசித்து, மேல் பெருவிரலோடு கூடிய சிறுவிரல் அணிவிரல் நடுவிரல்களினால் இருதயம், சிரம், சிகை யென்னுமந்திரங்களால் அவ்விடங்களை நியசித்துச் சிவனுக்கு அவ்வங்கங்கள் உண்டாயதாகப் பாவித்துப் பூசித்து இருகரங்களினும் நீட்டிய சுட்டுவிரல்களினாலே கவசமந்திரத்தால் கழுத்தை மூலை நடுவளவாகச்சுற்றி இருதயத்துற சிவனுக்குக் கவசமிட்டுப் பூசித்து, ஒருகையினணிவிரலால் மற்றவுள்ளங்கையில் அஸ்திரமந்திரத்தால் நியசித்து சிவாஸ்திரத்தைப் பூசித்தலுமாகிய பாவனையுஞ் செய்து மேல் தாளத்திரயம் திக்குப்பந்தனம் அவகுண்டனம் ஜலசுத்திக்குப் போலவே செய்து சிவசொரூபத்தைப் பாதுகாத்துச் சிவமூலமந்திரத்தால் சிரமுதற் பாதமளவாக மஹாமுத்திரைகாட்டி எல்லாமந்திரங்களையும் எகீபாவஞ் செய்தலாம். இதனானே மந்திரசகிதமாய்க் கிரியையோடு கூட்டிச் செய்தபாவனையின் வலியாற் தன்னிடத்துச் சிவசொரூபமுண்டாகுவதாமென்க. இது மேலே சந்தியா சத்தியைத் தியானிப்பதற்கு வேண்டியிருத்தலின் அதற்குரிமையுடைய சிவசொரூபியாகத் தன்னை யாக்கிக்கொள்ளுதலுமாம். சிவசொரூப பாவனை மேற்கொள்ளாது சிவத்தியானமான பாவனாநிட்டை கைவராதென்க.

இருதயத்தில் விளங்கும் சிவாசனமாவது பீடத்தின் அடியிலே கூர்மாசனத்தின்மேல் ஆதாரசத்தியும் அதன்மேல் அநந்தாசனமும் அதன்மேல் அநந்தனும் அதன்மேல் தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம, அனைசுவரியம் என்னும் இவற்றாலாய சிங்கரூபமான எட்டுக்கால்களும் பீடத்தின்மேல் மேகலையின் அடியில் அசுத்தமாயைவரையும் வியாபகமான அதச்சதனமும் அதன்மேற் சுத்தவித்தையின் கீழ் ஊர்த்துவச்சதனமும் அதன் நடுவிலே மாணிக்கவர்ணமான கிழங்கும் பவளம்போன்ற அங்குரமும் நீலவர்ணமான நாளமும் வெள்ளி போன்ற இலையும் வித்தியேசுரரெண்மர்வடிவமாய்ப் பொன்போன்று விளங்கும் எட்டு இதழ்களும் அறுபத்துநான்கு கலாவடிவமாய் விளங்கும் கேசரங்களும் ஐம்பத்தோரக்கரவடிவான ஐம்பத்தொரு பீசங்களுள்ள பொன்போன்ற கர்ணிகையும் உள்ளதாய், இதழ்களெட்டிலும் வாமாதி சத்திகளெண்மரையும் கர்ணிகையில் மனோன்மணியையும் உடையதாய், தளாக்கிர விருத்தத்தில் சூரியமண்டலமும் அதன் அதிபராகிய பிரமாவும் கேசராக்

கிர விருத்தத்தில் சந்திரமண்டலமும் அதனதிபராகிய விஷ்ணுவும் கர்ணிகாக்கிரத்தில் அக்கினிமண்டலமும் அதனதிபராகிய உருத்திரனும் கர்ணிகையின் நடுவில் சத்திமண்டலமும் அதனதிபராகிய ஈசுரனும் விளங்கப்பெறுவதாய் இங்ஙனம் ஆதாரசத்திமுதற் குடிலாசத்திபரியந்தம் பாவிக்கப்படும் யந்திர சிம்மாசனமாம. விபரம் வருஞ்செய்யுளிற் கூறியதுகாண்க.

சிவனுக்குரிய மூர்த்தியாவது சிவதத்துவ சொரூபமாய்த் தேசோமயமாய்த் தண்டாகாரமாய்ப் பரவிந்து வியாபகமாயுள்ள வடிவமாம்.

இதனுனே திருவஞ்செழுத்தாற் சிவனைச் சகள, சகளநிஷ்கள, நிஷ்களமாகிய வடிவுகளோடு அமைந்திருக்குமுறைமையாகத் தேகத்துப்பாவனை செய்து என்றதாம்.

மேலும் சந்தியாவந்தனத்துள்ள கிரியைவிபரம் வருமாறு:

யச. பிராணாயாமம் - மூக்கின் வலத்துவாரத்துப் பிங்கலை நாடியால் அகத்தேயுள்ள அசுத்தவாயுவைப் பன்னிரண்டுமாத்திரைக் காலம் இரேசித்துப் புறத்தே சழித்து, இடத்துவாரத்து இடைகலை நாடியாற் புறத்தேயுள்ள சுத்தவாயுவை ஆறுமாத்திரைகாலம் பூரித்துள்ளே வாங்கி, பூரித்தவாயுவைச் சுழுமுனையென்னும் நடுநாடியிற் செலுத்தி எழுபத்திரண்டு அல்லது நாற்பத்தெட்டு அல்லது இருபத்தினன்கு மாத்திரைகாலமளவுக்கு உள்ளே நிறுத்தல். இதிற் கும்பகம் மந்திரமுந் தியானமும் கூடிச்செய்வதாகிய சகர்ப்பமும் அவையின்றிய அகர்ப்பமுமென இருவகைத்தாம். இவ்வாறு பிராணவாயுவைக் கும்பித்தலால் மனமூரு குவிந்து ஒருநிலைப்படுமென்ப. பிராணாயாமகாலத்து விரிந்தமனமுடையனுயிருப்பின் போகமும், ஒடுங்கியமனமுடையனுயிருப்பின் முத்தியும் சித்திக்கும். அன்றியும் குருமூலமறிந்து பிராணாயாமஞ் செய்துவரின் சுவாசப்பையையிட்ட ரோகங்கள் அணுகா என்பதும், அதுபற்றி மற்றைய ரோகங்களும் ஏற்படாது தேகமும் மனமுஞ் சுத்தியெய்துமென்பதும் கண்கூடாகக் காணத்தகும். பிராணாயாமத்துத் தியானம் அவரவர் நிலைக்கேற்ப நிஷ்கள, நிஷ்களசகள, சகளமூர்த்தமா மென்பதும், மந்திரம் முறையே பிரணவமும், பன்னிருகலாப்பிரசாதத்தோடு கூடிய சிவமூலமும், ஏகாதசமாகிய சங்கிதாமந்திரங்களுமென்பர். முத்திரை சுட்டுவிரல் நடுவிரல்களை மடித்துப் பெருவிரலையும் அணிவிரலையுஞ் சேர்த்து மூக்கைப்பிடித்து முறையே மூடித் திறத்தல். அப்பியாசத்தினுல் இவ்வாறு பிடித்தல்வேண்டாமே பிராணாயாமஞ் செய்யலாகும். மேல் வலக்கையை வலச்செவியில் மூலமந்திரமுச்சரித்துவைத்தல் மேற்படி கிரியையிலுண்டாகிய வாயுவின் அசுத்தமெரிந்தொழிந்து கைசுத்தியாதற்பொருட்டாமென்க.

யடு. சிவதீர்த்தகரணம் - இருதயமந்திரத்தாற் புருவநடுவாகிய விந்துத்தானத்துள்ள அமிர்தத்தை அங்குசமுத்திரையினுல் எடுத்துச் சலத்தில்வைத்துச் சிவமூலமந்திரத்தால் அபிமந்திரித்துச் சலத்தைச் சிவதீர்த்தமாகப்

பாவித்து முறையே சலசுத்தி முதலியன செய்தல். இதனானே தீர்த்தசத்தி வடிவினதாயிருந்த தீர்த்தத்திற் சிவவடிவைப் பதித்து அதைச் சிவதீர்த்த மாக்கி மேற்செய்யும் சந்தியா முதலிய கிரியைகட்குபயோகமாக்குதலாம்.

௫௬. சந்தியாத்தியானம் - பிராதம், மத்தியானம், சாயம், அர்த்தசாமம் என்ற நான்கு சந்தியாகாலங்களிலும் அவ்வக் காலங்களுக்குரிய சந்தியை என்னுஞ் சத்தியைத் தியானித்தல். சந்தியை அக்கினியிற் சூடுபோலச் சிவத்தோடபின்னையாய்ச் சகல கருமசாக்ஷிணியாயிருக்குஞ் சிவசத்தி. இது அபரை, பராபரை, பரை என மூத்திறப்படும்.

அபரை இரத்தமண்டலத்திற் சிருட்டி நிகழ்த்தும் பிராமியென்றும், சுவேதைமண்டலத்திற் காத்தல்செய்யும் வைஷ்ணவியென்றும், விந்துமண்டலத்திற்சங்காரம் செய்யும் ரௌத்திரியென்றும் மூன்றுவிதப்படும். இவை சகுணத்தியானத்திற் குரியனவாய்ப் பிரம விஷ்ணு உருத்திரர்க்குரிய அங்கங்களையுடையன.

பராபரை - ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தி என மூன்றுவிதப்படும். இவை நிர்க்குணத்தியானத்திற்குரியனவாய்ச் சூரிய சந்திர அமிர்தப் பிரகாசமுடையனவாய் நாதசொரூபமாயிருக்கும்.

பரை - இரத்தை, சுக்கிலை, அசிதை, கிருஷ்ணை, என நான்குவிதப்படும். இவை ஞானவழிபாட்டிற்குரியனவாய் அத்தியந்த நிஷ்களமாய் அறிவுப்பிரகாசமாயிருக்கும்.

இச்சத்திகளைத் தியானிக்கு முறையும் தீக்ஷாதிகாரம்பற்றி வேறுபடும். சமயி பிராதக்காலத்துப் பிராமியை இருதயத்திலும், புத்திரன் மேலதனோடு சாயங்காலத்தில் ரௌத்திரியைப் பிரமரந்திரத்திலும், விசேடபுத்திரன் மேலவற்றோடு மத்தியானகாலத்து வைஷ்ணவியை விந்துவிலும் தியானித்தல் முறையாம். சாதகாசாரியன் முக்காலத்தும் முறையே ஞானம் இச்சை கிரியை ஆகிய சத்திகளை இருதயம் விந்து பிரமரந்திரத்திலும், சிவதர்மிணி அவ்வாறே முக்காலத்தும் முறையே இரத்தை, சுக்கிலை, அசிதையை மூவிடத்தும், ஆசாரியன் மேலவற்றோடு அர்த்தயாமத்தில் கிருஷ்ணையைத் துவாதசாந்தத்தும் தியானித்தல் முறையாமென்ப. இத்தியானமே ஞானசமாதியைத் தந்து சிவனது திருவருட்சத்தி வியாபகத்துள் அத்துவிதமாகக் கலத்தலாகிய பரமுத்தியை உதவுவதுமாமென்க.

௫௭. மந்திராபிடேகம் - கும்பமுத்திரையாகப்பிடித்த கையிலே சிவதீர்த்தத்தை வைத்துக்கொண்டு சங்கிதாமந்திரங்களா லபிமந்திரித்துச் சிவமூலமந்திரத்தாற் சிரசிலபிடேகித்தலாம். இதனானே தான்பெற்ற அருட்பேற்றுநிலை உறுதிப்படுமாறு சிவதீர்த்த வடிவினதாகிய அமுதகும்பத்தால் அபிடேகஞ்செய்யும் பாவனையாம்.

௫௮. மார்ச்சனம் - சிவதீர்த்தத்தை நமோந்தசங்கிதங்களால் வலக்கையாலெடுத்து இடக்கையில்விட்டு வைத்துக்கொண்டு கீழேயொழுகும் நீரை

வௌஷடாந்தசங்கிதங்களாற் சிரசிற் தெளித்தல். இது தூலசரீரசம்பந்தமாய் அன்றன்று செய்துவந்த தீவினைகளை ஒழித்தற்பாவனை.

௰௯. அகமர்ஷணம் - முன் இடக்கையில் வைத்திருந்த சலத்தில் எஞ்சியதை வலக்கையில்விட்டு மூக்குக்குச் சமீபத்திற் பிடித்து அது வெண்மை நிறமான தர்மரூபமாய் இடமூக்குவழியே யுட்புகுந்து அகத்துள்ள பாவத்தையழித்ததாகவும் அந்தப்பாவம் மைக்குழம்புபோல வலமூக்கினாலே புறத்தே நீங்கிக் கையில் வந்ததாகவும் வலக்காற் பெருவிரலிற் சுவாலிக்கும் அக்கினிவர்ணமான வச்சிரசிலையிலே உம்படந்த அஸ்திரமந்திர முச்சரித்துப் புருவநெரிப்புடனே விட்டு அந்தப் பாவம் அதில் விழுந்து பொடிபட்டொழிந்ததாகப் பாவித்தல். இது சூக்குமசரீரசம்பந்தமாய் அன்றன்று வந்த தீவினைகளை ஒழிக்கும் பாவனை. அகமர்ஷணம் - அகத்துள்ளபாவத்தையொழித்தல். நீரை இவ்வாறு உள்ளே யிழுத்து வெளியே விடப் பயிறல் பிராணாயாமப் பயிற்சிக்கு மிகவுதவுவதும், மூக்கையிட்ட ரோகங்க ளணுகாவகை தடுக்கும் சாதனையுமாம்.

உ௰. மேலும் ஆசமன சகளீகரணங்கள் - சூக்குமசரீர தத்துவங்களைச் சுத்தியாக்கி அச் சரீரத்தையும் சிவரூபமாகப் பாவித்தல்.

உக. கவசவேஷ்டனம் - கவசமந்திரத்தால் தன்னைச் சலங்கொண்டு வலமாகச்சுற்றி மதிலாக்குதல். இதனானே சூக்குமதேகச் சிவரூபம்காத்தமை.

உஉ. சதாசிவத்தியானம், காயத்திரிசெபம் - சூரியமண்டலத்து நடுவில் விளங்கும் சதாசிவமூர்த்தியைத் தியானஞ்செய்து சிவகாயத்திரியைப் பொன்னிறத்தளாய் ஒருமுகம் மூன்றுகண் அபயவரத கண்டிகை கமண்டலஞ் சேர்த்த நான்கு கைகளுமுடையளாய்த் தியானித்துக் காயத்திரி மந்திரத்தோடு மும்முறை அர்க்கியமீந்து எழுருவாதல் பத்துருவாதல் காயத்திரி மந்திரசெபஞ் செய்தலாம்.

உ௩. தருப்பணம் - சிவமூலத்தினால் மும்முறை முன்போற் தருப்பணம் செய்து பத்துருச்செபித்துப் பிரதக்ஷிணஞ் செய்து சங்கிதாமந்திரங்களாற் பதினொருமுறை தருப்பணஞ்செய்து, பின் மந்திரம், பூதம், பிதிரர், ஆசாரியர்க்குமாக அவ்வவர் மந்திரங்களாற் தருப்பணஞ்செய்து இவர்களையுவப்பித்தல். தருப்பணதீர்த்தம் கைவிரலுனியில் தேவர்க்கேயும் தேவதீர்த்தமும், விரல்களினிறைச் சந்தியால் இருடிகட்கேயும் ஆரிடதீர்த்தமும், கனிட்டிகை மூலத்தால் மானுடர்க்கேயும் மானவதீர்த்தமும், மணிக்கட்டினால் பஞ்சபூதங்கட்கேயும் பூததீர்த்தமும், தர்ச்சனி அங்குட்டங்களினடுவால் பிதிரர்க்கேயும் பிதிர் தீர்த்தமுமென ஐவகையாம்.

உ௪. பின்னரும் ஆசமன சகளீகரணஞ்செய்தல் மேற்செய்த தத்துவ சுத்தியும் சிவசொரூபபாவனையும் நிலைபெறச் செய்தற்பொருட்டாம்.

உ௫. தீர்த்தோபசாரசங்காரம் - முன் விந்துத்தானத்திலிருந்தெடுத்துச் சலத்தில்வைத்த அமிர்தத்தை இருதயமந்திரத்தால் சங்கார முத்திரையினலெடுத்து விந்துத்தானத்தொடுக்குதல். இதுவே சாந்தணியும் முறையுமாம்

புருவமத்தியை என்றும் உஷ்ணப்படுத்தி உர்ப்பூதசம்பந்த சேஷ்டைகளால் விந்துத்தானம் கலக்கமுறாது காத்தலுமாம்.

௨௬. சூரியோபஸ்தானம் - கைநிறையச் சலம் விட்டுப் பிடித்துக் கொண்டு சங்கிதா மந்திரங்களுச்சரித்துச் சிவமூலமந்திரத்தாற் சூரியமண்டல மத்தியில் விளங்கும் சிவபிரானிடம் கொடுத்துச் சூரியமந்திரத்தினலொருமுறை தருப்பணஞ்செய்து ஆதித்தமூர்த்தியினிடத்துச் சிவனை உபஸ்தானஞ்செய்தல். இதனுனே பூமண்டலத்தைக் கருஷணிக்கும் சத்தியுள்ள ஆதித்த மண்டலத்து மூர்த்தியிடம் சிவனை அடுத்துவைத்தல் எனவே எமது ஆன்ம சத்தியைச் சிவசத்தியாக்கி விரித்து ஆதித்தகிரணவாயிலாய் ஆண்டுற்ற சிவமூர்த்தியிடம் சேர்ப்பித்தலுமாம்.

இவையே சந்தியாவந்தன கிரியை பாவனை தியானமுறையாம். அதிகார வேறுபாட்டானும் குருபரம்பரைச் சம்பிரதாய வேறுபாட்டானும் இதினின்றுஞ் சிறிது மாறிய முறைகளும் கொள்ளப்படும். ஆயினும், யாவும் தூலசூக்கும தேகங்களுட் தத்துவங்களை நீற்றி, மலமாயை கன்மங்களை வலிகெடுத்து, உபாயநிஷ்டையாகும் பாவனையினல் மெஞ்ஞானத்தை உதிப்பித்துக் கதிசேர்ப்பிக்கு மியல்பினவேயாம். இத்தகைய சந்தியாவந்தன முறை, சரியை கிரியை யோகம் ஞானத்தொழுக இயலாத லௌகீகர் யாவரும் கருடபாவனைசெய்வோன் மந்திரம் பாவனை தியானத்தினல், விடநீக்குமாற்றல் பெறுமாபோலத் தினந்தோறும் பண்ணும் பாவனையே தடித்து மந்திரசத்தி வலுவேறித் தியானம் உறைக்க ஒருக்கால் மெஞ்ஞான நிட்டை கைவரப் பெற்று முத்திப்பேறடையவும், நிட்டை கைவராதொழியினும் வரும்பிறப்பிலாயினும் ஞானங் கைவரப்பெறவும் வேண்டியனவாக இறைவன் தமதருளால் ஆகமங்களுட் கூறியுள்ளதென அறிந்து, மற்றும் உலகவியாபாரங்களிலே தினமுழுதும் போக்கி வாழ்நாளைக்கழிக்குமானுடர் சந்தியாகாலங்களிலாவது இறைவனை உபாசித்து மெய்க்கதி பெறுதொழியின் என்னேகொல் இவர் தமதறிவு! பெறுதற்கரிய மானுடப்பிறவியைப் பெற்றும் இவர் பெற்ற பேறுதான் யாதோ!! இவரை நோக்கியே அப்பரும் "திருநாம மஞ்செழுத்துஞ் செப்பாராகிற் றீவண்ணர் திறமொருகாற் பேசாராகில், ஒருகாலுந் திருக்கோயில் சூழாராகி லுண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணாராகில், அருநோய்கள் கெடவெண்ணீ றணியாராகில் அளியற்றார் பிறந்தவாறேதோவென்னிற், பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்தும் பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே" என அருந்தமிழ் மறையி லறைந்ததுமாமென்க. இதனுனே சரியை கிரியை யோகஞானத் தொழுகு மாற்றலும் இயல்பும் நெறியுமில்லாத உலகர் யாவர்க்கும் சந்தியாவந்தன மின்றியமையாது வேண்டப்படுவதும் அதுவே நிட்டைக்கு வழியாமென்பது மறியக் கிடந்தது. சந்தியாவந்தனத்துண்மை பயனாதிய மேலுமறிய விரும்புவார் வித்துவான் தாமோதரம்பிள்ளை யவர்களியற்றிய சந்தியாவந்தன ரகசியம் நோக்குக.

பொழிப்பு. திருவஞ்செழுத்தினாலே சிவஞானயாக்கையுடையான் என்பதையும், திருவஞ்செழுத்தினாற் சிவனது உருவ அருவுருவத் திருமேனிகள் அமைந்ததென்பதையும் முறையானறிந்து. திருவஞ்செழுத்தாற் சகளீகரணஞ்செய்து தனதுடலைச் சிவசொரூபமாக்கித் திருவஞ்செழுத்தால் இருதயகமலத்துச் சகள நிஷ்களசகள மூர்த்திகளை ஆவாஹித்துப் பூசித்துத் திருவஞ்செழுத்தாற் பிராணாயாமஞ்செய்து குண்டலியில் வேள்வியாற் றிருவருட் சத்தியைப் பிரகாசிக்கச்செய்து மேலெழுப்பிப் புருவநடுவாகிய விந்துத்தானத்து நிறுத்தித் திருவஞ்செழுத்தை விதிமுறையாற் செபிக்க முதல்வன் ஆன்மாவின்கண் விளங்கித் தோன்றுவன்.

## 2. அந்தரியாகஞ்செய்யுமுறைமை.

300. நாட்டுமித யந்தானு நாபியினி னடியாய்
ஞாலமுதற் றத்துவத்தா லெண்விரனா ளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய் [ய்க்
முழுவிதழெட் டக்கரங்கண் முறைமையினி னுடைத்தா
காட்டுகம லாசனமே லீசர்சதா சிவங்கள்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணாகுஞ் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மானாகிச் சத்தி
மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே.

(இ - ள்). நாட்டும் இதயந்தானும் - பூசைத்தானமாகக் குறித்த இருதயமும்,—நாபியினில் அடியாய் - உந்தித்தானத்திலே மூலப்பிரகிருதியாகிய கிழங்கையுடையதாய்,—ஞாலம் முதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய் - பிருதிவிமுதற் கலையீறான தத்துவங்களாலாகிய எட்டங்குலமுள்ள தண்டினையுடையதாய்,—மோகினி மூட்டு - அசுத்தமாயையாகிய முடிச்சைக்கொண்டு,—சுத்தவித்தை மலர் எட்டாய் - அசுத்தமாயையிலுள்ள வித்தியாதத்துவங்களேழுடன் சுத்தவித்தையுஞ் சேர்ந்து எட்டுப் புறவிதழ்களாகவும்,—அக்கரங்கள் முழுவிதழ் எட்டுமுறைமையினின் உடைத்தாய் - வித்தியேசுரர்கள் எட்டகவிதழ்களாகவும் முறையே அமைந்திருப்ப,—காட்டுகமலாசனம் - தியானத்திற் காணத்தக்க கமலாசனமாகவிருக்கும்,—மேல் ஈசர் சதாசிவமும் கலாமூர்த்தமாம் - இக்கமலத்தின்மேல் ஈசுரம் சாதாக்கியம் என்னும் இருதத்துவங்களும் அறுபத்துநான்காகும் கேசரவடிவமாகிய மூர்த்தியாகவிருக்கும்,—இவற்றின் கண்ணாகும் சத்தி - இக்கேசரங்களுட் சத்திதத்துவம் பொகுட்டுவடிவாக உயர்ந்திருக்கும்,—வீட்டையருள் சிவன் மூர்த்திமானாகிச் சத்திமேலாகி நிற்பன் - உயிர்களுக்கு வீடுபேற்றையளிக்கும் சிவன் இச்சத்திக்கும் மேலாகிய பீசமாய் மூர்த்திமானாக நிற்பன்,—இந்த விளைவு அறிந்து போற்றே - இந்த முறைமையை முன்கூறிய பாவனைகளின மூர்த்தி நிலையாக அகத்தே கண்டு அருச்சனை செய்வாயாக.

குறிப்பு. 1. இச்செய்யுள் முன்கூறியவாறு சிவோஹம்பாவனை செய்து திருவைஞ்செழுத்தாற் பூசித்து நிலைக்கச்செய்யவேண்டுமென்ற உபாய நிட்டையை மேலும் உறைக்கச்செய்யவுற்ற அந்தர்யாகமென்னும் அகப்பூசனையை விளக்கவுற்று. அண்டத்திருந்தவாறே ஆலயத்தும் பிண்டத்தும் நிலாவி நிற்கும் இறைவனை இருதயகமலமாகிய ஆசனத்துக் கற்பித்தமைத்து மூர்த்தியைக்கொண்டு மூர்த்தியானும் சோதியைக்கண்டு பூசிப்பதாகிய விரிவைக் காட்டிபதாம்.

2. நாட்டுமிதயந்தானும் .....காட்டுகமலாசனம் - இருதயத்துக்கற்பித்த பங்கயம் உந்தித்தானத்தே பிரகிருதிமாயையாகிய கிழங்கினின்றும் எழுந்து, மேல் எட்டங்குல நீளமாகிய நாளமாகப் பிருதிவிமுதற் கலையீறாகிய ஆன்ம தத்துவங்களமைய, அதன்மேல் அசுத்தமாயை நாளத்தையும் மலரையும் பொருத்தும் முடிச்சாகவும் மேல்வித்தியாதத்துவங்களேழும் சுத்தவித்தையுமாகிய எட்டுத் தத்துவங்களும் எட்டுப் புறவிதழ்களாகவுமமையச் சுத்தமாயை மேற்கொண்டு, வித்தியேசுரர்களெண்மரும் எட்டகவிதழ்களாகவும் அமைந்துள்ள கமலமாம். வெண்ணிறமாகிய இவற்றின்மேல் ஈசுவர தத்துவமும் சதாசிவதத்துவமும் அறுபத்துநான்கு கேசரங்களாகவும் அவற்றின் மத்தியிற் சத்திதத்துவம் பன்னிரண்டங்குல விரிவும் ஓரங்குல வுயரமுமான பொகுட்டாகவுமமையச் சிவதத்துவம் அப்பொகுட்டினுட்காணப்படும் ஐம்பத்தோரக்கரமாம் பீசமுமாக அமைந்திருப்பவுங் கண்டு பூசித்தல் அந்தரியாகபூசனையாம் என்றதாம். இவ்வாறன்றி நிலமுதலிய முப்பத்தொரு தத்துவமாகிய எட்டுக்கொத்துக்களும் எண்விரனுளம், அசுத்தமாயை மூட்டு, சுத்தவித்தையில் வாமை முதலிய எட்டும் எட்டிதழ் என்பாரும்; அசுத்தமாயை கிரந்தியின் கீழ்நோக்குமிதழ்களாகவும் சுத்தவித்தை மேல் நோக்குமிதழ்களாகவும் மேல் ஈசுவரதத்துவத்திலுள்ள அநந்தராதியெண்மர் எட்டிதழ்வடிவெனவும் சதாசிவமொன்றே கேசரவடிவமெனவும் கொண்டு, அதற்கியையக் கொண்டு கூட்டியுரைப்பாரும்; கலாரூபம் நிவிர்த்தியாதி பஞ்சகலைகள் எனவும் அஃது யாண்டும் கூட்டியுரைக்கப்படும் எனவும்கொண்டு அவ்வாறு கோடலான் மண்ணும் மண்ணை முதலாகவுடைய இருபத்துமூன்றுதத்துவமுமாகிய கலாரூபமாவன நிவிர்த்தியும் பிரதிட்டையுமேயாகலான் அவையிரண்டும் முறையே நாளமும் மலருமாம், வித்தியாதத்துவமாகிய கலாரூபமாவன வித்தியாகலை சுத்தவித்தையோடு கூட்டி எண்ணப்பட்ட ஈசர் சதாசிவமாகிய சாந்திகலையாகலான் அவையிரண்டும் முறையே கலையெனப்படும் கேசரமும் கலைக்குள்ளுருவெனப்படும் பொகுட்டுமாம், நாதமும் சத்தியுமாகிய கலாரூபமாவது சாந்தியதீதகலையாகலான், அது பொகுட்டின்கணுள்ள பீசமாம் என்றும் உரைப்பாருமுளர். இவையெல்லாம் அவ்வவ்வாகமபேதபற்றிக் கொள்ளப்படும் என்பர் சிவஞானபாடியகாரர். (சி. ஞா. பா. 395 பக்). இவை தியானத்துறைத்தமுறையிற் கண்டு பூசிக்கவுற்றனவாம். இதனுனே கிரியையாகிய புறப்பூசனைமார்க்கத்துக்கு வேண்டியவாறே இத

யகமலம் ஆசனமும், ஈசர் சதாசிவம் மூர்த்தியுமாகச் சத்திமேற்கொண்டு சிவன் மூர்த்திமானுஞ் சோதியான முறைமையும் தெரிக (செ. 272. பார்).

3. சத்திமேலாகிநிற்பன்:- சத்தி லிங்கத்தின்மேற் பதுமத்து நாளமாகச் சிவன் அதன் மேல் குறித்தடியினிற்பன் என்பதுமொருசாரம்.

4. இந்தவிளைவறிந்து போற்றே என்றமையால் இவ்வுண்மையை அவரவர் தியானத்துப் பாவனையிலுறைத்துநின்றமூர்த்திக் காணவுற்ற முறையிற் றெளிந்து எனவும் பொருள்கொள்ளுமாகிடந்தது காண்க.

பொழிப்பு. பூசனைத்தானமாகக்கூறிய இருதயமும் உந்தியிற் பிரகிருதியாகிய கிழங்கினின்று எழுந்து ஆன்மதத்துவங்களாகிய எட்டங்குல நாளத்தையுடையதாய் அசுத்தமாயையாகிய முடிச்சோடுகூடி வித்தியாதத்துவங்களேழும் சுத்தவித்தையுமாகிய எட்டுப் புறவிதழ்களையும் வித்தியேசுரர்களாகிய அகவிதழ்களையுமுடைய கமலாசனமாம். இக்கமலத்தின்மேல் ஈசுவரம் சதாசிவமாகிய இருதத்துவங்களும் கேசரமாய் மூர்த்தியாக அமைந்திருக்கும். அதனுட் சத்திதத்துவமாகிய பொகுட்டிற் பீசமாய் விளங்கும் சிவன் மூர்த்திமானாக நிற்பன். இவ்வாறறிந்து பூசித்தலே அந்தரியாகஞ்செய்யுமுறைமையாம்.

### 3. அந்தரியாக பூசனையின் இயல்பும் பயனும்.

**301.** அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா
 அறைந்திடுவ ரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
 கண்டனவெ லாமனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற்
 சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியர னுளத்தே
 வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

(இ - ள்). அந்தரியாகம்தன்னை - மேற்கூறிய அகப்பூசனையை,—முத்திசாதனமா அறைந்திடுவர் - முத்திக்கு ஏதுவாகச் சாதிக்கத்தக்கது என்று பெரியோர் கூறுவர்,—அதுதானும் ஆன்மசுத்திஆகும் - அதுவும் ஆன்மசுத்தியை வருவிக்கும். எவ்வாறெனில்,—கந்தம் மலர்புகை ஒளிமஞ்சனம் அமுது முதலாக்கண்டன எலாம் மனத்தாற் கருதிக்கொண்டு - வாசனைத்திரவியம் புட்பம் தூபம் தீபம் அபிடேகத்திரவியம் திருவமுது முதலியவாகக் காட்டிய பூசைப்பொருள்களையெல்லாம் மனத்தாற் கற்பித்துக்கொண்டு,—சிவனை சிந்தைதனில் அர்ச்சிக்க சிவனை ஆன்மாவில் வைத்துப் பூசித்து,—ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்க - அருள்வழி நின்று மீட்டும் மீட்டும் தியானிக்க,—தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ்வொளிபோல - கண்ணாடியை விளக்க மாசு நீங்கி மேலிட்டுவரும் ஒளிபோல,—அரன் உளத்தேமருவிவர

வர வந்திடுவன் - சிவனும் ஆன்மாவின் கண்ணே பொருந்தி மேலிட்டு மேலிட்டு வந்து விளங்கித் தோன்றுவன்,—பின் மலமானது அறும் - அவ்வாறு சிவன் தோன்ற ஞானம் உற்பவிப்பதனால் ஆணவமலம் பற்றறக்கழியும்.

குறிப்பு. 1. அந்தரியாகம் - உட்பூசை. அது 299-ம் செய்யுளிற் கூறியவாறு இருதயம் உந்தி புருவநடு என்னு மூவிடத்தும் முறையே செய்யும் பூசையும் ஓமமும் தியானமுமாம். அந்தர் - உள்; யாகம் - வேள்வி, பூசை.

2. அதுகாணும் ஆன்மசுத்தியாகும். கந்தமலர்.....மனத்தாற்சுருதிக்கொண்டு .....சிந்தையினிலர்ச்சிக்க . ...ஞானத்தாற்சிந்திக்கச்சிந்திக்க..... அரன் உளத்தே வந்திடுவன் மலமானது அறும் ஆகையான் என்றுகொண்டு கூட்டுக. இதனால் ஒழுக்கங்களையே கந்தவர்க்கமுதலாய பூசனைத்திரவியங்களாகக்கொண்டு மானதபூசை செய்துவருவதனால் ஆன்மாவிற்கு மலம் அகலும் என்றதாம் முதலாக் கண்டனவெலாம் என்றமையால் ஈண்டு கூறாது விடுத்தவுமாகிய பதினாறுபசாரங்களும் பிறவும் கொண்டதாம். அவை அந்தர்யாகத்து வருமாறு.

க. ஆசனம். இருதயகமலமே ஆசனமாகக் கொள்வது. (செ. 300. பார்).

உ. ங. ச. அருக்கியம், பாத்தியம், ஆசமனம் - மந்திரநீராளிறைத்தல். இவை முறையே கைகழுவவும் கால்கழுவவும் உட்கொள்ளவும் நீர்தரல் என்றதாம். அமிர்தங் கூட்டிய நீரினால் ஆத்ம வித்தியா சிவதத்துவங்களையெல்லாம் இறைத்துக் கழித்தல் என்றது (செ. 299 தருப்பணம், ஆசமனம் பார்). உடல் பொருள் ஆவிமூன்றையும் ஒப்படைத்தலாகும் என்பர்.

ரு. மஞ்சனம் - நீராட்டல் - இது நிறையினாலும் நேயத்தாலும் இறைவனை முழுக்காட்டல் என்றது.

சு. ஆடைசாத்தல் - நீராட்டியபின் உடையுடுத்தல். இது ஆன்மபோத மொழித்துச் சிவபோதத்தால் மூடுதலாம். ஞேயத்தழுத்தல் எனினும் ஒக்கும்.

எ. முப்புரி நூலீதல் - பூணூல் தரிக்கச் செய்தல். இது தற்போதக் களைவினால் மலமாயை கன்மவலுவறச் சிவப்பிரகாசத்துலக்கம் தெரியச் செய்தல்.

அ சந்தனம் முதலிய வாசனைத்தேய்வை பூசச்செய்தல் இது போகப் பற்றின்மையாகிய வைராக்கியத்து நிற்றல்.

கூ. மலர் - பூக்களைச் சாத்தி யணியப்பெறச்செய்தல். இது கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்னும் எட்டொழுக்கங்களாலும் அணிசெய்தலாம். “பூவார மலர்கொண்டடியார்தொழுவார்” என்ற தமிழ்மறைமொழியிது குறித்தாம்.

௰. அட்சதை - மஞ்சளரிசியிடுதல். இஃது அகப்புறமாகிய இருவகைச் சுத்தியினாலும் தூளி செய்து மங்கலமாக்கல் என்பது. "வையகமெல்லா முரலதாக மாமேருவென்னு முலக்கைநாட்டி மெய்யெனுமஞ்சணிறைய விட்டி .....ஆடப்பொற் சுண்ணமிடித்துநாமே" என்ற மணிமொழிமறையானும் காணலாகும்.

௰௧. புகை - தூபம். இது பிராணாயாமம். போக்குவரவோடு கூடியிருக்கிற மனமாகிய பாத்திரத்தினிடத்தே பிராணனாகிய அக்கினியை யிட்டுக் கர்வமென்ற புகையைக் கூட்டுதலாம்.

௰௨. ஒளி - தீபம். இது புத்திமுழுவதையும் பிரகாசிக்கச்செய்யும் ஞானமாகிய விளக்கை யேற்றுதலாம். தீபம் - நட்சத்திரதீபம், புருடதீபம், இடபதீபம் முதலிய பலவுள. அவையாவும் மந்திராதி அத்துவாக்களைக் களையுமாறு ஞானவொளியை ஏற்றியவாறும். பூசைமுறையினறிந்துணர்க.

௰௩. கருப்பூரதீபம் - கருப்பூரமெரித்து ஒளிகாட்டல். இது வினைப்பயனையறவே யெரித்தமுறை காண்பித்தல். "தீதிணையாங்கர்ப்பூரதீபமென நான்கண்ட சோதியுடனொன்றித்துரிசறுவதெந்நாளோ" என்ற தாயுமானவர்வாக்கும் இது குறித்ததாம். கர்ப்பூரம் எரிந்தொழிந்தவிடத்து எஞ்சுவதியாதுமின்மைகாண்க.

௰௪. அமுது - நைவேத்தியம். சவளமான உணவையூட்டல். இது பிரத்தியாகாரமாம். இந்திரியவாயிலாய்ப் பற்றிய மனத்தை விடயத்தின்வழிச் செல்லாது திருப்பிப் பலகாலு மியமத்திருத்தல். வினைகளை விளைவிக்கும் பாசபசுஞானங்களை யிறைவனுக்கீதல் என்பதுமாம். "கள்ளவினைப்பசுபோதக் கவளமிடக் களித்தூட்டு கருணையென்னும் வெள்ளமதம் பொழி சித்திவேழம்" என்றதும் நோக்குக.

௰௫. அடைகாய் தரல் - வெற்றிலைபாக்குக் கொடுத்தல். இது தற்போதமும் பாசபோதமுங் கெடச் சிவபோத மிணைந்தபோது ஆன்ம சுபாவமே போக இறைவன் குணமமைந்தவாறு குறித்ததாம்.

௰௬. அர்ச்சித்தல் - மந்திரத்தோடு கூடிய மலராலும் பத்திரத்தாலும் பூசனை செய்தல். இறைவன் புகழையும் அருளையுஞ் சிந்தித் தானந்தித்தலுமாம். மலராணெறிதல் அருட்சத்தி பதிவித்தல் என்ப.

மேல் விரிவு சிவாகமங்களுள்ளும் கிரியாபாத வ்யாக்யானத்துங் காண்க. இவ்வாறே பரப்பூசனைக்குரிய ஆலயத்தலையுள்ளும் அங்கு நிகழ்த்தலும் நித்திய நைமித்திகாதி கர்மங்களின் தத்துவப்பொருளும் விளக்கற்பாலன. விரிவு சிவக்ஷேத்திராலய மஹோற்சவ உண்மைவிளக்கம், ஞானசித்தி முதலியவற்றிற் காணலாகும். தேடிக் கண்டுகொள்க. இப்பொதுப்பொருளெல்லாம் மெய்ஞ்ஞானப் பித்துப்பிடித் தறியவிருப்பிக் குருவை நாடினோர்க்கு

அவர்தங்காலமுழுமையும் பதிஞானவிழைவினே கழிப்பாராதலின் தெளிந்தறிய வைத்து, ஏனையோர்க்குத் தூலப்பொருளாகவே பத்திவிளைவையுண்டாக்க அமைத்த பெருமுறை யென்பதை யறிந்துய்வதன்றி ஞானநெறி தலைப்பட்டோரும் இவையிற்றை எள்ளற்க என்ப.

3. சிந்திக்கச் சிந்திக்க......வரவர வந்திடுவன்: - அடுக்குத்தொடர்கள் தேற்றப்பொருளன. தருப்பணத்தை விளக்க என்பதற்குக் கண்ணாடியை மேலும்மேலும் இரதக் குளிகையிட்டு விளங்கச் செய்ய என்னலுமாம். அப்போ அது பிரதியொளி செய்யுமாற்றல் பெற்றுப் பிரகாசமுறுவதுபோல் ஆன்மாவும் சிவத்தைத் தன்னுட்கொண்டு காண்பிக்குமியல்புபெறும் என்பதாம்.

4. இந்த அந்தரியாகபூசனையே "காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக, வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக, நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப், பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" எனவும் "உடம்பெனு மனையகத்தே யுள்ளமே தகழியாக, மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிமயக்கி, யிடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற், கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே" எனவும் "உயிராவண மிருந்துற்று நோக்கி யுள்ளக் கிழியினுருவெழுதி, உயிராவணஞ் செய்திட்டுன் கைத்தந்தா லுணரப் படுவாரோ டொட்டி வாழ்தி, அயிராவண மேறாதானேறி யமரர் நாடாளாதே யாரூராண்ட, அயிராவணமே யென்னம்மானே நின்னருட்கண்ணா னோக்காதா ரல்லாதாரே" எனவும் தமிழ்மறையிற் கூறியதுமாம். சிவாலய அமைப்பும் அங்கு நிகழும் நித்திய நைமித்தியாதிகளும் இவ்வந்தர்யாகத்தை விளக்கியவாற்றானே அதி தூலமாய பூசனை முறையாம் என்பதும் உய்த்துணர்ந்து தெளிருக.

பொழிப்பு. ஆன்மாவிற் சிவனை அர்ச்சித்தலும் அருள் வழி நின்று சிவனைத் தியானித்தலுமாகிய அகப் பூசனையாற் சிவம் விளங்க மலம் நீங்கி ஆன்மசுத்தியடைதலால் அவ்வகப் பூசனையும் முத்திசாதனமாம்.

### 4. உபாயப் புறப்பூசனையின் இயல்பும் பயனும்.

**302.** புறம்பேயு மான்கழல்கள் பூசிக்க வேண்டிற்
பூமரத்தின் கீழுதிர்ந்த போதுசளுங் கொண்டு
சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தா லங்குச்
சிந்திக்கும் படியிங்குச் சிந்தித்துப் போற்றி
அறம்பாவங் கட்குநா மென்கடவே மென்றும்
ஆண்டவனைக் கண்டக்கா லகம்புறமென் றுறு
திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றோ
சீரடியார் தம்முடைய செய்தி தானே.

(இ-ள்). புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டின் - மேற்கூறிய வாறு அகத்தேயன்றிப் புறத்தேயும் முதல்வன் திருவடிகளைப் பூசிக்கவேண்டுமாயின்,—பூமரத்தின் கீழ் உதிர்ந்த போதுகளும் கொண்டு - பூமரங்களின் கீழே உதிர்ந்து கிடக்கும் பூக்களும் பிறவுபகரணங்களுங் கொண்டு,—சிறந்து ஆரும் சீர்ச் சிவனை - சிறந்து விளங்குகின்ற புகழையுடைய முதல்வனை,—அங்கு ஞானத்தால் சிந்திக்கும்படி - அகப்பூசையிலே திருவருளின் வழிநின்று தியானித்தவாறே,—இங்கு சிந்தித்துப் போற்றி - இப்புறப்பூசையிலும் தியானித்து வணங்கி,—அறம் பாவங்கட்கு நாம் என்கடவேம் என்றும் - நம்மால் விளையும் புண்ணியபாவங்கட்கு நாம் சுதந்திரர் அல்லேம் என்றும்,—ஆண்டவனைக் கண்டக்கால் அகம் புறம் என்றது திறம்பாது - புறத்தே குரு லிங்கசங்கமமாகிய இறைவன் திருவுருவங்களைத் தெரிசிக்கில் அகத்து லிங்கத்துக்கும் இவ்வுருவங்கட்கும் பேதம் நினைந்து பிறழாமலும்,—பணிசெய்து நிற்கை அன்றே - எங்கும் சிவமாகக் கண்டு வழிபடுதலன்றே,—சீர் அடியார் தம்முடைய செய்தி - சிறந்த மெய்யடியார்களது செயலாம்.

குறிப்பு. 1. புறம்பேயும் அரன் கழல்கள் பூசிக்க வேண்டில்:- அந்தரியாக பூசனை செய்வார்க்கு அதுவே சிறந்த பூசையாதலின் புறப்பூசனை வேண்டிற்றில்லையா மெனினும், அவர்க்குந் தியானத்தை நிலைப்படுத்தற்கும், தம்மை நோக்கித் தம் நிலை மேற்கொள்ளவுற்ற பிறரைப் பூசனையி னொழுகச் செய்வதற்குமாகப் புறப்பூசனையும் ஒருசார் வேண்டப் படுமாதலான் என்றது. உம்மை அகத்தேயன்றிப் புறத்தேயும் என இறந்தது தழீஇ நின்ற எச்சம். புறம்பேயும் என்பதற்குக் குரு லிங்க சங்கம மென்ற மூன்றினு மெனினுமாம். இவை இறைவன் யாண்டும் நிறைந்திருப்பினும் கற்றாவைப்பசுவின் முலைக்கட் சொரியும் பாலே போன்றுலகுக் கருளும் வாயில்களாய வடிவங்களென்ப.

2. பூமரத்தின் கீழுதிர்ந்த போதுகளுங் கொண்டு:—இங்கு கூறிய புறப்பூசனை, முறையான கிரியைநெறிப் பூசனையர்மாறன்றி, உபாயக் கிரியையாமாதலின், இதற்கு, (முயன்று வருந்தலும் பிறவுயிர்களை வருத்துதலுமாகாமையாற்) பூமரத்தின் கீழுதிர்ந்த பூக்களும், யாறு குளம் முதலியவற்றின் நீரும், அயாசகமாய் வந்த அமுதும் ஆகும் என்ப. உண்மைக் கிரியைக்குப் போற் பிராயச்சித்த கன்மாதிக ளிதற் கின்மையானும், இப்பூசையும் மானதத்தின் பாற்றே யாகலின் அதற்குரிய மலர்கள் கொல்லாமை முதலிய எட்டொழுக்கங்களேயாம் என்றமையானும் இது பொருத்த மாதல் காண்க. உம்மை விதி முறையானன்றி என இறந்தது தழீஇயதும், மஞ்சனம் முதலியவற்றையும் என எதிரது தழீஇயதுமாய பொருள்கள் குறித்தன.

3. ஞானத்தா லங்குச் சிந்திக்கும்படி:—அகப் பூசை நெறியில், ஞான நிட்டை கூடி, அருள் வழி நின்று, இதயத் தர்ச்சித்தும் புருவ நடுவின் கண் தியானித்தும் நாபியில் ஓமஞ் செய்தும் பூசித்த வாறு போல என்றதாம். (செ. 299. பார்.)

4. அறம்பாவங்கட்கு நாமென் கடவே மென்றும்:—உடல் பொருள் ஆவி மூன்றனையும் இறைவனிடத்தே யொப்பித்த ஆன்மா உலகியனெறியில் விளைவனவாய புண்ணிய பாவங்கட்குப் பாத்தியவானாகான் என்பது. இது "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமும், குன்றே யனையா யென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ. இன்றோ ரிடையூறெனக் குண்டோ எண்டோள் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற மணிமொழியினும் காணத்தக்கது.

5. ஆண்டவனைச் சண்டக்கா லகம் புற மென்றது.........செய்திதானே:—அந்தரியாக பூசனையைச் செய்யு மறிவாளரும், குரு லிங்க சங்கமத்தில் இறைவனைக் கண்ணுறப் பெற்றால், மற்றையோர்போல முறையானே தொழுதல் வேண்டுமென்பது. இதனானே அத்தகையார் இவ்வுருவங்களை வேண்டிலரேனும், வலிந்து வேண்டி யடைவா ரலரேனும், ஒருகாலவை யிவர்கள் முன்னணைந்தால், அவற்றைத் தம் அந்தரியாக விலிங்கத்தினின்றும் பேதப் படுத்தாது ஒன்றாகவே கண்டு வழிபடுதல் வேண்டுமென்றதுவாம். இஃதறியாதார் பலர் மாயாவாதப் பித்துப் பிடித்துத் தற்போத முனைப்பே தலையுற்றுத் திருக்கோயில்களையும் இறைவனது திருவுருவங்களையும் தமக்கு வேண்டிற்றில வெனக் கூறியெள்ளித் திரிந்து தமக்குந் தம்மை யடுத்தோர்க்கும் அதோகதியாக்குவர். இவர் பேசுவது பெருஞானமே போன்றிருப்பினும் அஃதஞ்ஞானத் தடிப்பேயா மாதலின், இவர் தம்மையுணராதார் என்பது தெளிந்து, இவரை நீங்கி மெய்க் குரவரை நாடி யுண்மை கடைப்பிடித் தொழுகுக.

குறிப்பு: அந்தரியாக பூசனை செய்வோர் புறப் பூசனையுஞ் செய்ய வேண்டின் பூமரத்தின் கீழுதிர்ந்த பூக்கள் முதலிய திரவியங்களைக் கொண்டு தம் அந்தரியாகத்திலிங்கம் போலவே இறைவனது திருவுருவங்களையும் பேதமறக் கண்டு பூசித்துத் தியானித்து, முனைப்பின்றித் தம்மை வந்துறும் புண்ணிய பாவங்கட்குத் தாம் பாத்தியரல்லரெனத் தெளிந்து, இறைவனுருவங்களை எதிருற்ற இடத்தெல்லாம் வழிபட்டு நிற்றலும் முறையாம். இது சிறந்த மெய்யடியார் செயலாகும்.

5. சிவோஹம் பாவனையோடு கூடிய அகப் பூசனையால் முத்தியாமாறு.

303. இந்தனத்தி னெரிபாலி னெய்பழத்தி னிரத
மெள்ளினெண் ணெய்யும்போ லெங்குமுளன் இறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளு
மலைமறிப்போ ரான்மாவின் மலரடிஞா னத்தால்

சிந்தனைசெய் தர்ச்சிக்கச் சிவனுளத்தே தோன்றித்
தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன் றன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
பரப்பையெலாங் கொடுபுகுந்து பதிப்பனிவன் பாலே.

(இ-ள்). இந்தனத்தின் எரி பாலில் நெய் பழத்தி னிரதம் எள்ளின்கண் எண்ணெயும் போல - விறகின் கண் தீயும் பாலின் கண் நெய்யும் பழத்தின் கண் சுவையும் எள்ளின் கண் எண்ணெயும் போல,—இறைவன் எங்கும் உளன் - முதல்வன் எங்கும் ஆன்மாக்களது பக்குவத்திற்கேற்பத் தோன்றியுந் தோன்றாதும் உடனாயும் நிற்பனாதலால்,—எவ்விடத்தும் வந்தனை செய்து வழிபடவே அருளும் - சராசரமாகிய யாவும் சிவமயமாகக் கண்டு அவற்றின் வைத்து வணங்கி வழிபடவே பக்குவத்துக் கேற்ப யாவர்க்கும் அநுக்கிரகஞ் செய்வன்; ஆயினும்,—மலம் அறுப்போர் - பிறவிதோறும் பற்றிய மலவாதனையி னீடுற்று அதனைத் தவிர்க்க விரும்புவோர்,—ஆன்மாவில் மலரடி ஞானத்தாற் சிந்தனை செய்து அர்ச்சிக்க - ஆன்மாவி னகத்தே இருதய கமலத்திலிங்கத்தைத் திருவடிஞானமேதுணைக் கொண்டு தியானித்துப் பூசை செய்க்கடவர்,—சிவன் உளத்தே தோன்றி - அவ்வாறு பூசிக்கவே மறைந்து நிற்குஞ் சிவன் வெளிப்பட் டான்மாவி னுள்ளே தோன்றி,—தீ இரும்பைச் செய்வதுபோல் - தீயானது தன்கண டைந்த இரும்பை மாசு நீக்கித் தன் வண்ண மாக்குதல்போல,—சீவன் தன்னைப் பந்தனையை அறுத்துத் தானாக்கி - ஆன்மாவையும் அதனை அநாதியே பொருந்திய பந்தத்தினின்றும் விடுவித்துத் தானும் வண்ணமாக்கி,—தன் உருவப் பரப்பை யெலாம் கொடு புகுந்து - தனது சொரூப இலக்கணமாகிய முற்றறிவு முதலியவற்றையெல்லாங் கொடுத்துட் புகுந்து நின்று,—இவன்பாலே பதிப்பன் - அவ்வான்மாவின் மீது மலரடியைப் பதிப்பன்.

குறிப்பு. 1. இந்தனத்தி னெரி .....எள்ளின்கணெண்ணெய்:—இந்நான்கும் முதல்வன் சடசித்துக்களில் வியாபித்து நிற்றற் குவமை. இந்தனத்தினெரி உலகர்க்குச் சிறிதுந் தோற்றாது மறைந்துடனாய் நிற்றற்கும், பாலினெய் மந்ததர பக்குவர்க்குச் சிறிது தோன்றியுந் தோன்றாதும் உடனிற்றற்கும், பழத்தி னிரதம் மந்தபக்குவர்க்கு உய்த்துணரும் வழி விளங்கித் தோன்றி உடனிற்றற்கும், எள்ளினெண்ணெய் தீவிர பக்குவர்க்கு இனிது விளங்கித் தோன்றினும் பிரித்தறியப் படாது உடனாய் நிற்றற்கும் உவமையாயின வென்பர் சிவஞான முனிவர். இதுவே "விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான், உறவு கோனட் டுணர்வுக் கயிற்றினால், முறுக வாங்கிக் கடைய முன்னிற்பனே" எனத் தமிழ் மறையிற் குறித்ததுமாம்.

2. எவ்விடத்தும் வழிபடவே யருளும்:—சராசர பேதங்க ளனைத்தும் சிவமயமாகக் கண்டு வழிபட, அவரவர் பக்குவத்துக் கேற்ப வெளித்

தோன்றி யருளுவன் என்றது. அது மந்ததரர் மந்தர்க்கு விறகிற்றீ பாலி னெய் போலவும், தீவிரர் தீவிரதரர்க்குப் பழத்திரதம் எள்ளி னெண்ணெய் போலவுமாமென்க. இவர்களது வழிபாடும் பக்குவத்துக்கேற்ப முறுகியும் இழகியும் இருத்தல் வேண்டு மென்பதும் தெளிக.

3. மலமறுப்போர்:—திருவடிஞானம் கைவரப் பெற்றும் நீங்காதே பாத நீழற்கீழ்த் தாங்கப் பெறாது பிறவிகடோறும் பற்றிய மலவாதனைச் சேட்டையாகிய ஆசையினால் அங்கு மிங்கு மலமந்து அம்மல வாதனையைத் தவிர்க்க விரும்புவோர். இதனையே "பழக்கந் தவிரப் பழகுவ தன்றி, உழப்புவ தென் பெணேயுந்தீபற, ஒருபொருளாலே யென்றுந்தீபற" எனத் திருவுந்தியாரிலுங் கூறியதாம்.

4. நீ யிரும்பைச் செய்வது போற்.....பதிப்பன்:—தீயானது தன்னகத்துற்ற காரிரும்பினை மாசு நீக்கித் தன் வண்ண மாக்கித் தன்சொரூப லக்கணத்தையு மதற் குதவித் தானுட் செறிந்து தன் வெம்மையை அதன்கண் பதித்தல் போலச் சிவனும் தியானத்தாற் றன்னகத்துற்ற ஆன்மாவை மலநீக்கித் தன் வண்ண மாக்கித் தனதெண்குணத்தையும் அதற்களித்துத் தானதனுட் செறிந்து தனது திருவருட் சத்தி பதித்தலாகிய பரமுத்தியைத் தருவன் என்பது. கொடுபுகுந்து என்றமையானே பதி பசுவின் மாட்டுச் செறிப்பதனாற் றனது குணங்களிற் குறைவுபடாதே நிற்பன் என்றதாம். இதுவே "தந்த துன் றன்னைக் கொண்ட தென் றன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர், அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே னியாது நீ பெற்ற தொன்றென்பாற், சிந்தையே கோயில் கொண்ட வெம் பெருமான் திருப்பெருந்துறை யுறை சிவனே, எந்தையே யீசா வுடலிடங் கொண்டா யானிதற்கில னோர்கைம்மாறே" என மணிமொழியினுங் கண்டதாம். உருவப் பரப்பு - சொரூபலக்கணம். இது தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்ற எண் குணங்களுமாம். பதித்தல்-சத்திநிபாதஞ் செய்தல், திருவடிப் பேறளித்தல்.

பொழிப்பு. முதல்வன் சராசரங்களெங்கும் வியாபித்து நிற்றலால் எங்குஞ் சிவமயமாகக் கண்டு வழிபட அவரவர் பக்குவத்துக்கேற்ப வெளித் தோன்றி யருள் செய்வன். ஆயினும் மல வாசனையை நீக்க விரும்புவோர் மேற் கூறியவாறு சிவோஹம்பாவனையோடு கூடிய தியான பூசனைகளைச் செய்யின் முதல்வன் ஆன்மாவின்கண் விறகிற்றீ பாலினெய் பழத்திரதம் எள்ளினெண்ணெய் போல விளங்கித் தோன்றி மலநீக்கஞ் செய்து தன் வண்ணமாக்கித் தனது சொரூப விலக்கணங்களையு மீந்து ஆன்மாவினுட் கலந்து திருவருட் சத்தி பதித்துப் பரமுத்தி யின்பந் துய்ப்பிப்பன்.

---

## பத்தாஞ்சூத்திரம்.

இச்சூத்திரம் முதல்வன் பக்குவரோக்கி உயிர்களுக்குச் சிவப்பிரகாசிக்கு ஞானமுதிப்பித் தூற்பவந் துடைப்பனென முன் எட்டாஞ்சூத்திரத்துக் கூறிய வுண்மையை விளக்குமுகத்தானே, சிவஞானிபர் இறைவனோடு அவனிவனாய்ப் பிரிப்பின்றி நிற்றலால், அவரை வினைப்பயன் சாராமையும், அவர் தாம் இறைபணியி னிற்றலானே யவர்மாட்டு மலக்குற்றம் அடையாமையுங் கூறி அதனானே அவர்க்கு மேலும் பிறவியிலதாமாறு காட்டுகின்றது.

சிவஞானிக்கு வினைப்பயனுகர்ச்சியும் வினைவிளைவும் இலவாக
மலக்குற்ற நீங்கினமையின் பிறவியின்றென்பது.

304. இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லா
மிதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையும்
அவனிவனாய் நின்றமுறை யேக னாகி
அரன்பணியி னின்றிடவு மகலுங் குற்றம்
சிவனுமிவன் செய்தியெலா மென்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல வுடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே.

(இ-ள்). இவன் உலகில் இதம் அகிதம் செய்த எல்லாம் - சிவஞானப் பேறுற்றோன் உலகியலிலே செய்தனவாகிய நல்வினை தீவினைகளின் பயன்களியாவும்;—அவன் இவனாய் ஏகனாகி நின்றமுறை - முதல்வன் இச்சிவஞானியோடு பிரிப்பின்றி அவனேயாய் உடனின்ற முறைமையினால்,—இதம் அகிதம் இவனுக்குச் செய்தார்பால் இசையும் - நல்வினை தீவினைகளை இவனுக்குப் புரிந்தார்மாட்டுப் பொருந்தும்,—அரன்பணியில் நின்றிடவும் - தன் செயலற்றுத் தலைவன்பணியிலே நின்றொழுகுதலாலே,—குற்றம் அகலும் - வினைவிளைவுக்குக் காரணமாகிய மலக்குற்றம் அகலும்;—சிவனும் இவன் செய்தி எல்லாம் என் செய்தி என்றும் - முதல்வனும் இச்சிவஞானியது வினைகள் யாவும் தஞ்செயலாகவும்;—இவனுக்குச் செய்தது எனக்குச் செய்தது என்றும் - இச்சிவஞானிக்குப் பிறர்செய்த வினைகள் யாவும் தமக்கே செய்தனவாகவுங் கொண்டு.—பவம் அகல உடனாகி நின்றுகொள்வன் - மேலும் பிறவியானது அவனை வந்தடையாவண்ணம் தாமவனோடுடனாக நின்று வினைகளையெல்லாம் ஏற்றுக்கொள்வன்,—பரிவால் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடும் - ஆகலால் அவன் சிவநேயத்தழுந்தி நின்று பாதகத்தையே ஒருக்காற் செய்திடினும் அதனையுந் தனது பணியாகிய அறமாக்கிக் கொள்வன்.

குறிப்பு. 1. இவனுலகி லிதமகிதஞ் செய்தவெல்லா மிதமகித மிவனுக்குச் செய்தார்பாலினையும் அவனிவனாய் ஏகனாகி நின்றமுறை:- உண்மை நிட்டையாளரும் உபாயநிட்டையாளருமாகிய இருவகைச் சிவஞானியரும் மூன் எட்டாம ஒன்பதாம் சூத்திரங்களுட் கூறியவாறே விடயப்பற்றாலும் தற்போதமுனைப்பாலும் உண்டாகும் பாச பசுஞானங்களுட்படாது செய்வதொன்றும்போற் செய்யாச்செயலையே யுடையராதலின், அவர்க்கு வினைப்பயனுகர்ச்சியாமாறின்றென்பது. ஆயின் "கன்மப்பலனூட்டுவனாகும்" என்ற சுருதிக்கு முரணாமேயெனின், அன்று. இறைவனே கன்மங்களை யேற்று உயிர்கண்மாட்டுத் தமது ஆணையிலணைப்பன் என்றபடி, ஞானியரது கன்மத்துக்கு அநுபவம் அவர்க்கு இதம் அகிதங்கள் செய்தார் பயன்களை ஏற்றுஞ்செய்யுமாற்றானே ஆகும் என்றதாம். (செ. 112. 278. பார்). இவ்வாறன்றிச் சிவஞானியர் இயற்றும் நல்வினைகள் அவரை ஏற்று அவர்க்கு நன்மைசெய்வோரிடத்தும், தீவினைகள் எள்ளித்தீமைசெய்வோரிடத்தும் சென்றடையும் எனப் பொருள்கொள்வதுமாம்.

இதம், அகிதம் என்பன முறையே மனம் வாக்குக் காயங்களால் உயிர்க்குறுதிசெய்தலும் செய்யாமையுமாம். (செ. 103. பார்).

உலகி லிதமகிதம் செய்தவெல்லாம் - சிவஞானியர் வினைகள் "செய்வதொன்றுபோற் செய்யாச் செயலை" யாமாதலின், அவை உண்மையிற் பயனை நுகர்வித்தற்குரிய வினையாகமாட்டா என்றது. ஆயினும் உலகியலில் வழக்கு நீதி தண்டம் என்ற முறைகளில் இதம் அகிதம் எனவே படுமாதலின் அவற்றினுக்கொருசார் பயனுகர்ச்சியும் வேண்டப்படும் என்பதூஉம், அப்பயன்தான் அச்செயல்களை வினையெனக்கொண்டு மயங்கிய உணர்ச்சியுடையார்மாட்டுச் சென்று பொருந்தும் என்பதூஉம் பெறக்கிடந்தது. (செ. 285. பார்).

அவனிவனாய் ஏகனாகி நின்றமுறை - சிவஞானியரிலக்கணம் (செ. 303. பார்).

செய்த என்றதனால் முன்னே செய்யப்பட்டு நுகர்ச்சிக்கிடனாய் இருக்கும் இதம் அகிதம் எனக்கொண்டு பிராரத்தமாய வினைப்பயன் என்பது பெற்றாம். மேல் ஆசாரியத்தை "இவன்செய்திபெல்லாம்" என விரித்தமையானும் இது காண்க.

இவன் அவன் என்பன மகாவாக்கியவழக்கு என்பர் சிவஞானமுனிவர்.

இதனானே ஞானியர்க்கு வினைப்பயனும் வினைப்பயனுகர்ச்சியும் இல்லாதவாறு காட்டியதாம்.

2. அரன்பணியி னின்றிடவு மகலுங்குற்றம் - சிவஞானி தன்னையே தெரிதலின்றி முற்றும் முதல்வனுணையின் வழி நின்றியங்குவனுதலின், அவன் செயலற்றவனேயாவன். இதுவே பணிமொழிப் பெருந்தகையாளரும் மாற

னது நிதியைச் சிவதொண்டிற் செலவாக்கிப் பின் ஞானாசாரியமூர்த்தி பணிவழி நின்று பாண்டியற்குத் தாம் பரிகொண்டதாகவும் ஆவணிமூலத்து மதுரைக்கவை வருமெனவும் கூறிய உலகியனெறிப் பொய்மை விளக்குவதூஉமாம். அவர் அரன்பணியினின்ற நிலையை “மையலாமுணர்வின்மிக்கீர் யாவர் நீர் மாயாபேதப் பொய்யெலா முரைக்கவேண்டாம் போமினியகல” எனத் தம்முடன் வந்த பரிசனத்தவரை அறியுமறிவற்று நின்று கூறியதும், “மின்பாலன்ப ரானவரடியா ரெம்மையடிமையா வுடையாரல்லாற் தானெனக்கண்ணவென்றும் தன்னையான் பிழைத்ததென்றும் மாநிலமன்னன் சொன்னதென்” என்று மனதிற் தயங்கியதும் ஆண்டுப் புராணத்திலாய்க் காண்க. (திருவா. திருப்பெரு).

ஆகலுங்குற்றம்:—மலக்குற்றம் விடயப்பற்றாலும் தற்போதமுனைப்பாலுமாகிய அஞ்ஞானவழித் தாமேயன்றிப் பிறிதன்றாகையாற் சிவஞானியர்க்கு மலக்குற்றம் யாண்டு மடைதலின்றென்பதாம். இதனானே சிவஞானிக்கு அஞ்ஞானமழிந்தமையின் வினைவிளைவு இன்றென்றதாம்.

3. சிவனுமிவன் செய்தியெல்லாமென் செய்தியென்றும் செய்ததிவன் றனக்கெனக்குச் செய்ததென்றும் பவமகல உடனாகி நின்றுகொள்வன்:— சிவஞானி இறைபணி நிற்றலானும், இறைவனோடேகனாகி நிற்றலானும் அவன் பிறர்மாட்டுச் செய்யும் வினையும் அவன்மாட்டுப் பிறர் செய்யும் வினையும் இறைவனாலேயே ஏற்கப்பட்டொழிய வினைப்போகத்தைத் தானநுபவிக்கவும் பிறர் தன்னாலநுபவிக்கவுமாகிய இரு காரணம் பற்றியும் பிறத்தல் வேண்டாமையிற் பிறவிக்கிடமின்றென்றது. ஆகவே சிவனுடனும் பெற்றித்தாய பேறு கிட்டியதூஉமாம் என்பதூஉம் உணரக்கிடந்தது. இதனையே “நஞ்செயலற்றிந்த நாமற்றபின் னாதன், தன்செயல் தானே யென்றுந்தீபற, தன்னையே தந்தானென் றுந்தீபற” எனத் திருவுந்தியாரிலும் கூறியதாம்.

பவமகல - இப்பிறவியில் மேலநுபவ நோக்கிநிற்கும் ஆகாமியவிளைவின்றாகப் பிறவிப்பிணியே யறும் என்றது. “வினைப்போகமே ஒருதேகங்கண்டாய் வினைதானொழிந்தாற், றினைப்போதளவுந்தரியாது கண்டாய் .....” எனப் பட்டினத்தடிகள் கூறியதும் நோக்குக. பிறர் தன்மாட்டுச் செய்த வினையையும் தனக்குச் செய்யப்பட்டதாக ஒருவன் ஏற்குமாயின் அவ்வினையைச் செய்தோன் அனுபவித்தொழித்தற்கு இவனும் பிறக்கவேண்டுமென்பது தெரியக்கிடந்தது காண்க.

உடனாகி நின்று கொள்வன்:—பிறவிப்பிணியற, இறைவன் அத்துவிதக் கலப்பில் ஆன்மாவோடணைந்து நின்று வினைவிளைவைத் தாமே ஏற்றருளும் என்றதாம். (செ. - 119, 284. பார்).

4. பரிவாற்பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடும்:—சிவஞானி உலகினர் பாதகமெனக் கொளற்பாலனவாய வினைகளைப் புரியான் என்பதும், ஒருக்கால் சிவநேயத்தழுந்தி நின்று செய்வதென்னெனத் தெரியாது அத்

தகைய செய்யினும், அவை "தாதையைத் தாளறவீசியசண்டி" முதலியோர் செயலே போன்று சிவநேயவினையாய் அரன் பணியறமேயாகி இயற்றலுற்றோர்க்கு ஒல்லும்வகையான் அறவினையாய் நின்று பயன்றருமென்பது. (செ. 119. 117. 113. பார்). உம்மை எதிர்மறைப் பொருள்பயந்தது.

இவ்வுண்மை அறவே தற்போதமற்று நிற்குமெஞ்ஞானியர்க்கேயொக்குமென்பதை யுணராது, உலகியல் வியாபாரத்துத் தடிப்புற்று மூனைத்து நான் எனது என்னும் அகங்காரமமகாரங்கள் கெடாது ஊண் உடை பெண்டீர் பிள்ளை முதலாய போகபோக்கியங்களை விழைந்தும் அவற்றுளழுந்தியும் உழலும் பேதைமாந்தர் சிலர் வேதாந்திகளெனப் போலிப் பெயர் புனைந்து மாயாவாத மயலுட்பட்டுச் சீவன்முத்தர் செயலும் விளைவும் சிறிதுமே தெரியாது, தம்மைச் சீவன்முத்தரென எண்ணியும் பிறரால் எண்ணச் செய்தும் தமக்கும் தம்மையடுத்த பிறர்க்கும் மீளாநரகேயிடமாக்குவதன்றி, மெய்ந்நூலறிவாகிய வேதாந்தத்தின் தெளிவாகிய சித்தாந்த ஞானநெறிக்கு மோரிழுக்கைவருவிப்பர். அந்தோ! இவர்தம் மடனுந்துணிபு மிருந்தவாறே!! இவர் தம்மயலுட் படுவார் கதியை யென்னென்றுரைப்பல்!!! இவர் தமைநோக்கியே "மிண்டியமாயாவாதமென்னும் சண்டமாருதஞ் சுழித்தடித்தா அர்த்து" என மணிமொழிவாக்கும் எழுந்ததாமென்க. இவர் மேலைச் செய்யுளில் "ஊன்செய்யா ஞானந்தானுதிப்பினல்லா லொருவருக்கும் யானெனதிங் கொழியாவன்றே" என்பது நோக்கிச் சிவஞானப்பேறெய்த முயல்வதாக.

பொழிப்பு. சிவஞானி இறைவனோடும் பிரிப்பின்றி அவனேயாய் நிற்றலின், அவன் உலகியலிற் செய்த வினையாவும் அவனுக்கு வினைபுரிந்தார்மாட்டுப் பொருந்தும். அவன் தன் செயலற்று இறைபணியிலே நிற்றலின், அஞ்ஞானத்தாலுறும் ஆகாமியமறும். ஆகவே இவன் செயலிறைவன் செயலாகவும் இவனுக்குச் செய்தன இறைவற்குச் செய்தனவாகவும் பயன்பட இவனுக்குப் பிறவியே யிலதாகிப் பரமுத்தி சித்திக்கும். இவன் சிவநேயத்தழுந்தி நின்று ஒருக்காற் பாதகமெனற்பால செய்பினும், அவை அரன் பணி யறமாகவே பயன்றரும்.

இச்செய்யுள் இரண்டு கூறுடையது.

1. அவனிவனாய் ஏகனாகி நின்றமுறை, இவனுலகிலிதமகிதஞ் செய்த வெல்லா மிதமகித மிவனுக்குச் செய்தார்பாலிசையும், (சிவனும்) செய்திவன்றனக் கெனக்குச் செய்ததென்று பவமகல உடனாகி நின்றுகொள்வான். (305.)

2. அரன்பணியி னின்றிடவு மசலுங் குற்றம் சிவனுமிவன் செய்தியெல்லாமென் செய்தி யென்று பவமகல உடனாகி நின்று கொள்வன். பரிவாற்பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடும். (306 - 309).

---

## முதலாமதிகரணம்.

அவனிவனாய் ஏகனாகி நின்றமுறை, இவனுலகில் விதமகிதஞ் செய்தவெல்லாமிதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையும், சிவனும் செய்ததிவன்றனக்கேகலக்குச் செய்த தென்று பவமகல உடனாகி நின்றுகொள்வன், என்பது முதற்கூறு. இக் கூற்றானே சிவஞானியர் முதல்வனோடு பிரிப்பற்று அவனேயாய் நின்றமையால், அவர்க்குக் கன்மநுகர்ச்சியின்றென்பது காட்டியதாம்.

சிவஞானியர்க்குக் கன்மநுகர்ச்சியில்லை.

305 யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு
மிக்கோணை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடவத் தத்துவன்றா னேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும்
நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்
ஊன்செய்யா ஞானந்தா னுதிப்பி னல்லா
லொருவருக்கும் யானெனதிங் கொழியா வன்றே.

(இ - ள்). யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இக்கோணை - யான் பிறர்க்கு இதமகிதம் செய்தேன் பிறர் எனக்கு அவற்றைச் செய்தார் என்றும், எனது என்றும் யான் என்றும் அபிமானித்து நிற்றலாகிய மலக்குற்றத்தை,—ஞானஎரியால் வெதுப்பி நிமிர்த்து - ஞானக்கினியினாலே காய்ச்சித் தீர்த்து,—தான் செவ்வே நின்றிட - தான் மெய்ஞ்ஞானத்திறத்து நிற்க,—அத்தத்துவன் தான் நேரே தனை அளித்து முன் நிற்கும் - அம்முதல்வன் ஆன்மசொரூபத்தை மறைத்து நேரே தற்சொரூபத்தை விளக்கி முற்பட்டுத் தோன்றும்,—வினை ஒளித்திட்டு ஓடும் - அவ்வாறு தோன்றவே, வினைகள் யாவும் பயன்பட நில்லாது விரைவினீங்கும்,—நான் செய்தேன் எனும் அவர்க்கு - நான் செய்தேன் என்பது முதலாய அபிமானமுடையோர்க்கு,—தான் அங்கு இன்றி போகத்தை நண்ணுவிக்கும் - முதல்வன் முற்பட்டு விளங்கித் தோன்றுதலின்றிக் கன்மப்பயனாகிய இன்ப துன்பங்களைப் புசிக்கச்செய்வன்,—கன்மம்பண்ணுவிக்கும் - அங்ஙனம் புசிக்கும்போதே மேலிதமகிதமாகிய ஆகாமியங்களையும் ஏறச்செய்வன்,—ஊன் செய்யா ஞானம்தான் உதிப்பின் அல்லால் - ஆகவே, உடம்பிற் பட்டுப் பிறத்தலை யொழிப்பதாம் மெய்ஞ்ஞானம் தோன்றினாலன்றி,—ஒருவருக்கும் யான் எனது இங்கு ஒழியாது - யாவர்க்கும் யான் எனது என்ற அபிமானம் இப்பிறவியில் விட்டு நீங்காது.

குறிப்பு. 1. யான் செய்தேன்......வெறுப்பி:—தனதல்லாத மனைமக்கள் முதலியவற்றைத் தனதெனவும், தானல்லாத உடம்பு இந்திரியாதிகளைத் தான் என்றும் மாறுபடக்கருதி அதனால் வினைகள் தன்னாற் பிறர்க்கும் பிறராற் தனக்கும் இயற்றப்பட்டனவாகக்கொண்டு இன்பதுன்பநுகர்தல் ஆணவமலக்குற்றத்தாலாவதாம். இக்குற்றம் சிவஞானத்தாலெரியுமென்பது. (செ. 262. பார்).

2. செவ்வே நின்றிட:—பதிஞானம் தலைப்பட்டு அவனிவனாய் ஏகனாகி நின்றிட என்றது. (செ. 304. பார்).

3. தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட்டோடும்,—இறைவனே சிவஞானியரிற் பிரிப்பறத்தானாகி நிற்றலின் அவர்மாட்டுப் பிராரத்த சஞ்சித வினைகள் பயனுறுவாக, அவர் அப்போதியற்று மாகாமியங்களும் நேரில் நிற்க மாட்டாது பயனிலவாய் ஒழிந்து, ஞானியர்க்கு வினை நிகழ்த்தியுள்ளார்பாற் சென்றணையும் என்றது. (செ 304. பார்). ஒளித்திட்டோடும் எனவே அவர்மாட்டுப் பயன்பட்டு இன்பதுன்ப நுகர்ச்சிக்கிடமாகாது பிறர்பாற் சென்று பொருந்தும் என்பதாம்.

4. நான் செய்தேனெனுமவர்க்கு .....கன்மம்:—அவனே தானாகியநிலை கடைப்பிடித்துணராது தற்போதமுனைப்புடன் விடயங்களிலழுந்தும் இயல்புற்றார் செய்யும் வினைகளாலுண்டாகும் இன்பதுன்பம் கன்மாநுபவமாகவும், அவ்வினைகள் ஆகாமியமாய் மறுமைக்கு வித்தாகவும் நிற்கும் என்றது.

5. ஊன்செய்யாஞானம்:-ஊனெடுத்துப் பிறப்பதற்கு வித்தாகிய ஆகாமிய வினைவைத் தரும் ஆணவமலத்தை ஒழிக்கும் மெஞ்ஞானம். இது சிவஞானமெனவும்படும். ஊன் - உடம்பு. மாயாகருவிகளைப் பொருந்தியறிகிற சிற்றறிவினின்று நீங்கி ஏகனாகிநிற்கு ஞானம் என்பர் சிவஞானமுனிவர்.

பொழிப்பு. யான்செய்தேன் பிறர்செய்தார் என்றும், என்னது யான் என்றும் அபிமானிக்கும் ஆணவமலத்தோடு கூடிய அறிவைச் சிவஞானத்தாலெரித்தொழித்து அவனே தானாகி நிற்கப்பெறின், இறைவனே நேரினின்று வினைப்பயன்களும் வினைகளும் அணையாது ஓட்டெடுக்கச்செய்வான். மேற்கூறிய மாயாவாதனையோடு வினைசெய்வார்க்கு இறைவன் பிரிந்துநின்று அவ்வினைகளாலே போகநுகர்ச்சியையும் ஆகாமிய வினைவையும் முன்னுறச்செய்வான். ஆகவே பிறவியறுக்கும் பெருஞானம் எய்தினாலேயன்றி ஆணவம் யாவர்க்கும் அகலாது.

---

## இரண்டாமதிகரணம்.

அரனைப்பணியி னின்றிடவுமகலுங் குற்றம். சிவனுமவன் செய்தியெல்லா மென்செய்தியென்று, மலமகல உடனாகிநின்று கொள்வன். பரிவாம் பாதகத்

தைச் செய்திடினும் பணியாக்கிவிடும் என்பது இரண்டாங்கூறு. (306-309). இக்கூற்றிற் சிவஞானியர் தஞ்செயலற்றுத் தலைவன் பணியினிற்கு மாற்றாலவர்க்காகாமியமேறாமையும், அதனாற் பிறவிக்கிடமின்றாக முத்தியாமாறும் கூறப்படுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:-

1. சிவஞானியர் தஞ்செயலற்றிருக்குந்தன்மை (306).
2. சிவஞானியர்க்கு ஆகாமியமேறாதகலுந்தன்மை (307)
3. சிவஞானியர்க்குப் பிறவியகலுந்தன்மை (308).
4. சிவஞானியர்க்கு ஆகாமியமேறாமையை உவமைமுகத்தான் விளக்கல் (309).

1. சிவஞானியர் தஞ்செயலற்றிருக்குந்தன்மை.

306 இந்திரிய மெனைப்பற்றி நின்றேயென் வசத்தி
னிசையாதே தன்வசத்தே யெனையீர்ப்ப திவற்றைத்
தந்தவன்ற னாணைவழி நின்றிடலா லென்றுந்
தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் றாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேன்
முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்
மூளாவங் காளாகி மீளா வன்றே.

(இ-ள்). இந்திரியம் எனைப்பற்றிநின்றே - என்னின்வேறாகிய இந்திரியங்கள் வினைப்பயனுகர்ச்சிக்காக என்னுடன் கூடி நின்றனவாயினும்,—என்வசத்தின் இசையாதே - என்வசத்தவாக நின்றியங்காது,—எனை ஈர்ப்பது - என்னைத் தம்வசமாக்கி விடயங்களிலிழுத்து அழுத்துவது,—இவற்றைத் தந்தவன்றன் ஆணைவழி நின்றிடலால் என்றும் தான் அறிந்திட்டு - அவற்றை எனக்குத்தந்த இறைவனது ஆணைவழிக்கொண்டு அவைநிற்றலானேயாம் என்றும் அறிந்து,—இவற்றினொடும் தனை உடையான் தாள்கள்வந்தனைசெய்து - அவ்விந்திரியங்களையும் தன்னையுமே தமதுடைமைப்பொருள்களாகக்கொண்ட இறைவனது திருவடிகளைப் போற்றி,—இவற்றின் வலி அருளினால் வாட்டி - அவ்விந்திரியங்களின் வன்மையை இறை பணி நிற்றலென்னும் மெய்யுணர்வாகிய ஞானசத்தியினாற் கெடுத்து,—வாட்டமின்றியிருந்திடவும் - தான் ஒருவாற்றானும் கலக்கமின்றி அவன்செயலையே கண்ணுற்று இருக்கவும்,—வரும்செயல்கள் உண்டேல் - பழக்கம்பற்றி ஒருக்கால் நல்வினை தீவினைகள் இயலுமாயின்,—முந்தனுடைச் செயல் என்று முடித்து ஒழுக - அவ்வினைகட்காமே முதல்வனது திருவிளையாட்டாமென்று

திடப்படுத்தி இறைபணியிலொழுகிவர,—வினைகள் மூளா - ஆகாமிய வினைகள் மேலேறாவாம்,—அங்கு ஆளாகி மீளான் அன்றே - அதனால் சிவஞானி அரனடிக்காளாகி மீட்டும் வினைவயப்படமொறின்றியிருப்பன்.

குறிப்பு. 1. இந்திரியம் எனைப்பற்றி .....நின்றிடலால் - பொறிபுலன் கரணமாதியன, ஆன்மா வினைப்பயனை நுகர்தற்குக் கருவியா யதையடைந்திருந்தும், தாமே சடமாயிருந்தும், ஆன்மாவை அவை தம்வசப்படுத்துவது இறைவனுணைவழி யவைநின்றியங்குதலாலேயாம் என்பது. "காணிலார் கருத்தில்வாரார்திருத்தலார் பொருத்தலாகார், எணிலாரிறப்புமில்லார்பிறப்பிலார் துறக்கலாகார், நாணிலாரைவரோடுமிட்டெனை விரவிவைத்தார், ஆணலார்பெண்ணுமல்லார் அதிகைவீரட்டனாரே" என்ற தமிழ்மறையுமிது கூறியது காண்க. இதனை "உலகத்துப் பாடிகாவலராயினோர் பிழைசெய்துள்ளாரைத் தம்முளடக்கித் தாம் ஈர்த்தவாறெல்லாம் பரதந்திரமாய்க் கிடப்பச்செய்வது, தம்மை அவ்வாறு செய்விக்கும் அரசனதாணைவழிநிற்கும் அவ்வாற்றல்கொண்டன்றிப் பிறிதின்மையின்" எனவிளக்கி மேல் "அதனையறிந்து அப்பாடிகாவலர்க்கும் தமக்கும் இறைவனாகிய அவ்வரசனைத் தலைக்கூடப்பெற்று அவன்கருத்தின்வழியொழுக வல்லாராயவழி அவர் அப்பரதந்திரநீங்கி அரசனதருளாற் பாடிகாவலரையும் தம்மாணைவழியினிற்பித்துக்கொள்ளவல்ல சுதந்தரராவர் அதுபோல" என விரித்துள்ளார் சிவஞானமுனிவர்.

2. இவற்றின் வலிஅருளினால் வாட்டி - அஞ்ஞானவினைவை மெய்யுணர்வாகிய ஞானசத்தியின் வலியாலழித்து என்றது. சூர்மார்புங்குன்றும் மாமுதலுமாகிய ஆணவ கன்ம மாயைகளை அழித்தொழித்த முருகன் திருக்கைவேலு மதுவேயாம்.

3. வாட்டமின்றி யிருந்திடவும்......மூடித்தொழுக:—பற்றிகலின்மையாலும் மெஞ்ஞானத்தாலும் தன் செயலற்றுச் செய்வனவும் அநுபவிப்பனவும் இறைவன் திருவிளையாடலேயெனக் கண்டு சலனமற்றிருக்கும்போது வினைக்காட்சியும் விளைவுமே தோன்றா எனினும், வாசனமலத்தின் வலியால், செய்வனவும் அநுபவிப்பனவுமாகச் சில வினைகள் தனக்கு ஒருகாற் சேருமாயின் அதுவும் இறைவன் செயலேயாமெனக் கண்டொழுக என்பது. இருந்திடவும் என்ற உம்மை எதிர்மறைப்பொருள் பயந்து, வருஞ் செயல்களுண்டாகா, ஒருக்கால் உண்டுபோற்றோற்றினும் எனக் குறித்தது காண்க. "என்செயலாவது யாதொன்றுமில்லை யினித்தெய்வமே, உன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்த வூனெடுத்த, பின்செய்த தீவினையேதொன்றுமில்லைப் பிறப்பதற்கு, முன்செய்த தீவினையோ விங்ஙனேவந்து மூண்டதுவே" என முற்றத்துறந்து பற்றிகலற்று வினைப்போகமும் விழைவும் காணாது நின்ற பட்டினத்தடிகள் கூறியதும் இதனையே காட்டியதாம்.

4. என்றும் தானறிந்திட்டு - என்பதில் உம்மை என்வினைவழிக்கொண்டிழுப்பதாயினும், என்வசப்பட்டு நிகழாது இறைவனாணையினானே நிகழ்வதாம் என உணரும் மெஞ்ஞானத்தின் உயர்வு காட்டிய சிறப்பும்மையாம்.

பொழிப்பு. இந்திரியங்கள் எம்வசமின்றி எம்மைத் தம்வசமிழுப்பது இறைவனாணையாலேயாம். ஆகையால் அவ்விறைவனாணையை நாமே தலைக்கொண்டொழுக, இந்திரியங்களது வலிகெடும். கெடவே ஆகாமியமுமேறாது வினையுந்தோற்றாது. ஒருக்கால் வாசனாமலவலியால் வினை தோற்றிடினும், அஃதிறைவன் செயலேயெனக் காணவே, வினை விளைவின்றி இறைவன் மலரடிப்பேறு சேர்வதாகும்.

2. சிவஞானியர்க்கு ஆகாமியமேறாதகலுந்தன்மை.

307. சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னால்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்
உலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே
உண்ணின்றும் செய்வித்தும் செய்கின்றா யென்றும்
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்றும்
நினைவார்க்கு வினைகளெல்லா நீங்குந் தானே.

(இ-ள்). தலைவன் - முதல்வன்,—சலம் இலனாய் - தமக்கு ஒருவர்மாட்டு விருப்பும் பிறிதொருவர்மாட்டு வெறுப்புஞ் செலுத்துவதாகிய விகாரம் வந்தடையாமலே,—ஞானத்தால் தனை அடைந்தார் தம்மைத் தான் ஆக்கி - சிவஞானவிளைவினால் அருள்வழியே நின்று தம்மைச் சரண்புகுந்த மெய்யன்பர்களைத் தானும்வண்ணஞ் செய்து,—அவர் தாம் செய்வினை தன்னால் பிறர் செய்வினை நலமுடனே ஊட்டி ஒழிப்பானாய் - அவர் இயற்றும் வினைகளின் பயனைக்கொண்டு அவர்க்கு இதமகிதங்கள் செய்யும் பிறரது வினைப்பயன்களைக் கருணையினாலே ஊட்டுவித்தொழிப்பவனுமாய்,—வினை அவரை நணுகாமல் நாடிக் காப்பன் - இதமகிதங்கள் அவரைவந்தடையாமே முன்னின்று காத்தருளுவன். ஆகையால்,—உலகினில் என்செயல் எல்லாம உன் விதியே - உலகியலில் நின்று யான் செய்யுஞ் செயல்களெல்லாம் உன் பணியேயாகும்,—நீயே உள் நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும் - நீயே என்னுட் பிரிப்பற நின்று அநுபவித்தும், பிறரினின்று அவராலெனக்கு வினைகளைச் செய்வித்தும், விளையாட்டயர்கின்றா யென்றும், அதனால்,—நிலவுவது ஓர்செயல் எனக்கு இன்று உன்செயலே என்றும் நினைவார்க்கு - உண்மையினுளதாய ஓர் வினையும் எனக்கு இல்லையாக, யாவும் உனது திருவிளை

யாடல்தானே என்னும் கருதும் ஞானியர்க்கு.—வினைகள் எல்லாம் நீக்கும் தானே - ஆகாமியமாகிய வினைகள் யாவும் பயன்தருமாற்றலின்றி ஒழிந்தே விடும்.

குறிப்பு. 1. சலமிலனாய் .....ஒழிப்பானாய்: - இறைவன் சிவஞானியர் செய்யும் வினையைப் பிறர்மாட்டுப் பயன்படுத்துவானென்னில், அந்த அவனைத் தன்னடியார்மாட்டு விருப்பும் பிறர்மாட்டு வெறுப்பும் உள்ளவனாக்க அதனால் அவன் விகாரியுமாவன்போலும் எனக் கூறுவார்க்கு, அன்று அவன் அவ்வாறு பயன்படுத்துவது, தன்னையடைந்தார் தானாகித் தன்பணியினின்ற முறையானே தற்போத முனைப்பின்றியியங்குதலின் அவர்செயல் வினையாகாதொழியவும், அவர் செய்வனவற்றை வினையெனக்கொள்வோர் அவர்மாட்டுச் செய்யும் வினைகள் முனைப்பின்றிச் செய்யப்படாமையின் அவையிற்றைப் பயன்படுத்தாக்காற் சேற்றினும் வன்னிலத்தினும் வீசிய கல்லேபோல் விரிந்தும் பரிந்தும் பிரதிபலிக்கச் செய்யுமாற்றினுபயோகித்தலுமாம் என்பது. (செ. 273. பார்). அவ்வாறு செய்வதும் இறைவன் அத்தகையார்மாட்டுக் கொண்ட கருணையேயாம் என்பார் "நலமுடனேயூட்டி ஒழிப்பானாய்" என்றதாம். இதனானே சிவஞானியர்க்கு ஆகாமியமேறாமை காட்டியதாம். சலம் - விகாரம், விருப்பு வெறுப்பு. நலம் - நன்மை. நாடல்- கருணை.

2. உலகினில் லென்செயலெல்லா முன்விதியே:—சிவஞானியர் செய்வதாக உலகியலிற் பிறர் நோக்கிற் தோற்றுவனவாய செயல்களியாவும், அவர் அரன் பணியினின்றிடவாலே இறைவன் செயலேயாகி அவர்க்குப் பயன் தருமாறின்றாம். உடலோடனுபவித்துக் கழிக்கவேண்டிய பிராரத்த நுகர்ச்சி மாத்திரையானே பயன்தருமாற்றால் 'விதி' எனலுமாம். முன்விதி என்றலு மொன்று. இதுவே சிவஞானப்பேறுற்ற மணிமொழிப் பெருந்தகையாளரும் மாறன்பாற் பரமன் பணியான பொய்யைப் பகர்ந்து தண்டம் பெற்றதனையும், நம்பியாரூரர் அரன்பணியாகச் சத்தியதோடமியற்றிக் கண்ணிழந்து வருந்தியதையும் விளக்குவதும் காண்க. (செ.304.கு..1 பார்).

3. உண்ணின்றும்: - இறைவன் ஆன்மாவில் அந்தரியாமியாக நிற்றலைக் குறித்தது. இது அத்துவித நிலையில் உடனாய்நிற்றலைக் காட்டுவதாம். இதனைச் செய்வித்தும் செய்கின்றாய் என்னும் சொற்களோடு நிரலேகூட்டி, பிறர்பாணின்று என்மாட்டு அவரால் வினைசெய்வித்தும், என்னுள் நின்று செய்தும் நீக்கின்றாய் என உரைப்பர் சிவஞானயோகியர். அந்தரியாமி - உள்ளே செறிந்து அகலாது நிற்பவன்.

4. செய்வித்தும்: - இறைவன் ஆன்மாவில் வேறாகிநின்று வினைப்பயனுகர்ச்சி நிகழச்செய்தலைக் குறித்தது. "பிரியாத சிவன்றானே பிரிந்துதோன்றி" என்றபடி. (செ. 232. பார்). இது அத்துவிதத்துப் பிரிந்து நிற்றலைக்காட்டியதாம்.

5. செய்கின்றாய்: - இறைவன் ஆன்மாவேயாக நின்று திருவிளையாடலாய் வினைகளை நிகழ்த்தலைக் குறித்தது. "அவனிவனாய் ஏகனாகி நின்ற முறை" என்றபடி (செ. 304 பார்). இது அத்துவிதத்து ஏகனாய் நின்ற முறை காட்டியதாம்.

6. நிலவுவதோர் செயல்: - வினையாகிப் பயனுதவுவதாகிய செயல் வினையினுண்மை பயன்கொண்டே விளங்குமாதலின் இவ்வாறு கூறியதாம்.

இச்செய்யுளானே மேற்கூறியவாறு தம்செயலற்றிருக்குஞ் சிவஞானியர்க்கு ஆகாமியமேறா தென்பதொக்குமாயினும், செய்தவினை பயன்படவேவேண்டுமென்பது சித்தாந்தவுண்மையாதலின், ஞானியரது வினைகள் அவர்க்கு வினையன்றாய்ப் பயன்றராவிடினும், வினையெனக் கொள்ளும் ஞானியரல்லாதார்மேற் சென்றடைந்து பயன்படுமாறு விளக்கியதாம். ஆயின் ஒருவர்வினையைப் பிறிதொருவர்மாட்டுப் பயனுறுத்தல் இறைமைக் கிழுக்காதோ என்பார்க்கு அதுவும் அப்பிறர்மாட்டு இறைவன் கொண்ட கருணையின்பாலதாம் என்பதும் காட்டியதாம். எனவே சிவஞானியர்க்கு இதஞ்செய்தார்மாட்டு அறக்கருணையும் அகிதம் செய்தார்மாட்டு மறக்கருணையும் இறைவன் பாலிக்க, இருவகையானும் ஞானியரது தரிசனமும் சேர்க்கையும் வரப்பெற்றார்க்குப் பரகதி கிட்டுமாறுந் தெரிக. இதுவே சண்டேசர் சிவபூசனையைக் குலைத்த தந்தையாரும், வானவரை வருத்திய தானவரும், கதிபெற்றமையை விளக்குவதாம்.

பொழிப்பு. இறைவன் தாம் விகாரமேதுமடைதலின்றித் தம்மோடேகப்பட்டுத் தமது பணியினிற்கும் சிவஞானியரது வினைகளை அவர்க்கு நன்மை தீமைகள் செய்யும் பிறர்மாட்டுக் கருணையோடே செறிவித்தூட்டியொழிப்பன். ஆகையால் உலகியலிற் தாம் செய்வனவெல்லாம் தலைவன்பணியேயென்றும் அவையாவும் அவனே தம்மின் உடனாயும் பிரிந்தும் ஒற்றித்தும் நின்று செய்யும் திருவிளையாடலாமெனவும் கண்டு கருதுவாரை வினைகள் வந்தடையா.

3. சிவஞானியர்க்குப் பிறவியகலுந்தன்மை.

308. நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்துந் தாகமுத றவிர்ந்தும்
நீடுபல காலங்க ணித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையிலார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்துமிறை ஞானம்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்.

(இ - ள்). நாடுகளில் புக்கு உழன்றும் - மூர்த்தி தலம் தீர்த்தவிசேடம் நோக்கி ஊரூராயலைந்து திரிந்தும்,—காடுகளில் சரித்தும் - வனங்களிற் சஞ்சரித்தும்,—நாகமுழை புக்கு இருந்தும் - மலைக்குகையுட் சென்று யோகத்திருந்தும்,—தாகம் முதல் தவிர்ந்தும் - தாகம் பசி முதலியவற்றை அடக்கித் தவசு செய்தும்.—நீடுபல காலங்கள் நித்தராய் இருந்தும் - வாணாளைப் பெருக்கி நெடுங்காலம் மரணமற்றிருந்தும்.—நின்மல ஞானத்தை இலார் - சிவஞானத்தைப் பெறாதார்,—பிறப்பில் நிகழ்ந்திடுவர் - மேலும் பிறத்தலாகிய நிகழ்ச்சியுட்படுவர்,—இறை ஞானம் கூடும் அவர் - சிவஞானங் கைவரப் பெற்றோர்,—எடுதரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் - இதழ் விரியும் மலர்மாலை சூட்டிய கூந்தலையுடைய மங்கையர் கொங்கைகளிடத்தும் இடையிடத்தும் வெறித்த கண்களின் கொடிய கடையிடத்தும் தோய்ந்திருப்பினும்.—கூடரிய வீடும் கூடி - பெறுதற்கரிய வீடுபேற்றினையும் பெற்று,—குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர் - தூக்கி நடனஞ்செய்து நிற்கும் சிவந்த திருவடியையும் கைகூப்பி வணங்கியிருப்பர்.

குறிப்பு. 1. நாடுகளிற் புக்குழன்றும்: - "மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு, வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றபடி புண்ணியதல யாத்திரை முதலியன சற்குருவை நாடி ஞானம் பெற்றுய்தற்குரிய சாதனைகளாம் என்பதறியாது சோம்பலேயுந்தத் தேம்பித் தேசாந்தரமாய்த் திரியும் அறிவிலிகளை நோக்கிக் கூறியதாம். அன்றி, யாத்திரை முதலியவற்றாற் பயனின்றெனக் கொள்ளற்க என்பது போதர உயர்வு சிறப்பும்மை கொடுத்துப் பிரித்தது காண்க.

2. காடுகளிற் சரித்தும்: - மனம் பொறி முதலிய கரணங்கள் வாயிலாய் விடயீகரித்து அகம்புறமாய பற்றுகளைத்தரும் பாச பசுஞானங்கள் ஒழியாவிடத்துக் காடுஞ்சரி நாடுஞ்சரி ஏகாக்கிரசித்தமீயமாட்டா ஞானமும் வருவிக்கமாட்டா என்பதறியாது, கொன்னே காட்டிற் புகுந்து கந்தமூலபலாதிகளையுண்டு பற்றற்றிருக்கும் அறிவிலாத்துறவியரை நோக்கிக் கூறியதாம். அன்றி, மெய்த்துறவை எள்ளியதல்லவென்பது உம்மையாற் காண்க. நாட்டிலுளவாய நாட்டுலக விழைவுகளேபோலக் காட்டிலும் காட்டுலக விழைவுகளுண்டாமே யாதலின், எங்கிருப்பினும் பற்றறுத்தலே பாரமென்பது. இதுவே "அறந்தானியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந், துறந்தானவனிற் சதகோடி யுள்ளத்துறவுடையோன், மறந்தானறக்கற்றறிவோடிருந்திரு வாதனையற், றிறந்தான்பெருமையை யென்சொல்லுவேன் கச்சியேகம்பனே" என்று திருவெண்காட்டடிகள் கூறியதிலுந் தெரிக.

3. நாகமுழை புக்கிருந்தும், தாகமுதறவிர்ந்தும், நீடுபலகாலங்கள் நித்தராயிருந்தும்: - யோகத்தாலும், தவத்தாலும், சித்துச்சாதனைகளாலும் ஞானநிட்டையெய்தப் பெறுவதே முடிபெனத் தெரியாது, உலகினர் வியக்குமாறொழுகிப் பற்றறுக்காதும் மெஞ்ஞானம் பெறாதும் உழல்வாரைநோக்

கிக் கூறியதாம். அன்றிச் சிவயோக சிவபுண்ணிய சிவசாதனைகளை எள்ளியதன்றாம். நீறு கண்டியணிதல், ஆலயசேவை, அஞ்செழுத்தோதல் முதலாய மற்றைய சாதனங்களுக்கு மிஃதொக்கும். என்னை? திருவெண்ணீறு திருவஞ்செழுத்துக்கொண்டு சித்தர்கள் காட்டுமாற்றல் பெற்றுப் பல்லோர் பலவினையீட்டும் மாந்திரியம், வசியம், மாரணமாதி தீத்தொழில்களியற்றிக் கொடுநரகிற்காளாதல் கண்கூடாகையான் என்க.

மேற்கூறிய உண்மைகளைத் தெளியாதார் சிலர், திருமூலர் திருவெண்காட்டடிகள், தாயுமானவர், சிவவாக்கியர், அருணகிரியார், பதினெண்சித்தர் முதலிய மெஞ்ஞானியர் சிலவிடங்களிற் சரியை கிரியை யோக சாதனைகளை உண்மை தெரிந்து உறுபயனோக்கிச் சாந்நக்காரோரை யிட்டுக் கூறிய வாக்கியங்களை அறியுமாறறியாது, கண்டவாறு பொருள்கூறித் தாம் பொய்ப்பட் டிடருறுவதுமன்றித் தம்மை நம்பிய பிறரையும் பவக் குழியில் வீழ்த்துவர். அவர் கூற்றை ஆராய்ந் தெள்ளி உண்மை கடைப்பிடிப்பர் உயர்ந்தோர் என்ப.

4. நின்மலஞானம்: - சுத்தமான ஞானம், திருவடிஞானம், பதிஞானம், சிவஞானம் என்பதுமாம்.

5. ஏடுசெரு மலர்க்குழலார்......கிடந்தும்: - சிவஞானங் கைவரப்பெற்றோர் உலகியலில் மற்றையோர் இழிதக்க வெனக் கொள்ளுஞ் செயலைச் செய்யார் என்பதும், ஒருக்காற் செய்வதாக விரும்பினும் அஃதிழுக்காதென்பதுங் காட்ட எதிர்மறை யிழிவு சிறப்பும்மை கொடுத்துக் கூறியது காண்க. மங்கையர் போகம் கூறவே, மண், பொன் என்ற மற்றைய இக போகங்கட்கும், துறக்கம் முதலிய பரபோகங்கட்கும் இஃதொக்குமென்பது. "பாதகத்தைச் செய்திடினும்" என மேற் கூறியதும் இதுபோன்றதே. அன்றி ஈண்டுக் கூறியவாற்றானே ஞானியர் யாதுசெய்யினும் பற்றற்றுச் செயற்பாலதாம் என விபரீதப்பொருள்கொண்டு, மெய்ம்மையிற் பற்றறுதுள்ள வாசாஞானியர் பலர் மது மாமிச மங்கையர்போக முதலாய தீவினைகளுட்டிளைத்து மாயாவாதப் படுகுழியிற் றதும்பித் தம்மையண்டினோரையும் விழுத்தித் துன்புறுவர். இவர்தமைத் தெரிந்து விலகி மெய்ந்நெறி கடைப்பிடிப்பது உண்மைவிழைவோர்கடனென்க.

6. குஞ்சித்த சேவடியும் கும்பிட்டேயிருப்பர்: - "முத்திதான்ற மலர்ப்பதத்தே நாடு" என உண்மைவிளக்கத்துக் கண்டபடி முத்திநிலையைக் கடைப்பிடித்து உலகியலிற் சலனமற்றிருந்து உடலழிய மேற்பிறவாப் பெரும்பேறு பெறுவர் என்றது. குஞ்சித்தல் - தூக்கிநிற்றல்.

7. இச்செய்யுளானே சிவஞானியர்க்குப் பிறவியில்லையெனக் கூறியதாம். அன்றியும் அவர் பாதகத்தைச் செய்திடினும் பணியாகிவிடும் என்பதும் ஒருவாற்றாற் காட்டியதுமாம். முன் 287-ம் செய்யுளிற் கூறியதும் இதுவுமொன்றாகிக் கூறியது கூறலாமேயென மலையாமைப்பொருட்டு ஆண்டு

"சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்கள்" என உபாயநிட்டை கூடும் அபர சிவன்முத்தரையும், ஈண்டு "நின்மலஞானம், இறைஞானம் கூடுமவர்" என மெஞ்ஞானங் கைவந்த பரமுத்தரையுஞ் சுட்டியது நோக்குக.

பொழிப்பு. சிவஞானப்பேறில்லாதார் யாத்திரை, துறவு, யோகம், தவம், சித்து முதலிய சாதனைகளைச செய்துவந்தாலும் பிறப்பிற்படுவர். சிவஞானியரோ மங்கையர் போக முதலியவற்றுட் டிளைத்திருப்பினும் பிறவியிற்படாது வீடுபேறெய்துவர்.

4. சிவஞானியர்க்கு ஆகாமிய மேறாமையை
உவமைமுகத்தான் விளக்கல்.

303. அங்கித்தம் பனம்வல்லார்க் கனல்சுடா தாகும்
ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்க ளேறா
எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலு ஞானிக்
கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத்
தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோல்
மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கு மெல்லா
மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே.

(இ - ள்.) அங்கித் தம்பனம் வல்லார்க்கு அனல் சுடாதாகும் - அக்கினியைத் தம்பனஞ் செய்ய வல்லவர்களுக்கு அவ்வக்கினி சுடுமோதில்லையாம்,—ஔடதம் மந்திரம் உடையார்க்கு அருவிடங்கள் ஏறா - விடங்களைத் தடுக்க வல்ல மருந்தும் மந்திரமும் பெற்றுள்ளார்க்குக் கொடிய விடம் தலைக்கேறுமாறில்லை, அவ்வாறே,—எங்கு இத்தைக் கன்மமெலாம் செய்தாலும் - எவ்வாற்றானும் தம்பொருட்டன்றியே செயல்களைவற்றையும் செய்யுமாற்றால்,—ஞானிக்கு இரு வினைகள் சென்றணையா - அவற்றாற் சிவஞானியர்க்கு நல்வினைகள் தீவினைகள் ஏறுமாறில்லையாம்,—முற்செய்வினை - ஆயின் முன் செய்யப்பட்டுப் பிராரத்த சஞ்சிதங்களாயிருந்த வினை (அநுபவப்பட ஆகாமிய மேறுதோவெனில்),—இங்கு தங்கிப்போம் பாத்திரமும் குலாலன் வினை தவிர்ந்த சக்கரமும் கந்தித்துச் சுழலுமாபோல் - பெருங்காயம் இருந்தொழிந்த பாத்திரமும் குயவனது வினைதற்றொழிலொழிந்த திகிரியும் தமதியல்பி லுபயோகப் படாதிருந்தும் மணம் வீசுதலும் சுழலுதலும் செய்யுமாறுபோல,—மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் - தன் சக்தி கெட்டுப்போயும் பழக்க வாதனையாற் சிறிது சிறிதாக அநுபவத்திலுழல்விக்கும்,—எல்லா மலங்களும் பின் காயமொடு மாயும் - இவ்வாறு சனமமொழிய, மற்றைய மலங்களுமெல்லாம் பின் உடம்பொழியுங் காலத்து அதனோடு கூட ஒழிந்து கெடும்.

குறிப்பு. 1. அங்கித்தம்பனம் வல்லார்க் கனல் சுடாதாகும்:— அக்கினியின் வெம்மை தம்மே லுறைக்காது மருந்து மந்திரயோகசாதனைகளாற் றம்பனஞ் செய்யவல்லோர் அக்கினியில் மூழ்கிக் கிடப்பினும் அவர் மாட்டு வெம்மை ஏறாதவாறுபோல, ஞானியர் விடயங்களின்மேல அழுந்திக் கிடப்பினும் அவரை அவ்விடயப்பற்றுத் தாக்காதென்றதாம். மருந்துமந்திரயோக வலியினா லக்கினியைத் தம்பனஞ் செய்வார் போலவே திருவெண்ணீறு திருவைஞ்செழுத்துச் சிவோகம்பாவனை வலியாற் சிவஞானியர் விடயப் பற்றை யறுப்பரென்ப. அங்கித் தம்பனம் இறைவனோடவனிவனாய் ஏகனாகி நிற்றற்குவமை; தம்பனஞ் செய்தே தீயினிறங்குவராகலின்.

2. ஔடத மந்திர முடையார்க் கருவிடங்களேறா:—விடந்தீர்க்கும் மிருதசஞ்சீவி முதலிய மருந்துகளும், கருட மந்திரமுதலாய மந்திர சாதனைகளும் பெற்றுள்ளோர்க்கு விடந் தலைக்கேறாத வாறுபோல அருள் வழி நின்றஞ்செழுத் தவ்வியோம்பும் மெஞ்ஞானியரை விடயப்பற்றாகும் வினை தாக்காதென்றதாம். மருந்தும் மந்திரமும் விடம் பற்றிய பின்னும் அது தலைக்கேறாது தடுத்தற்குபயோகமாதலின், இது விடயப்பற்றொருவாறுறினும் இறைபணி நின்றொழுகுதற் குவமையாயினது.

3. எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலு ஞானிக் கிரு வினைகள் சென்றணையா:—ஐம்பொறிகளு ளெவற்றோடு கூடி நின்றும் தம்பொருட்டன்றிப் பிராரத்த அநுபவ நிகழ்ச்சிப் பொருட்டே ஞானியர் செயல்களைச் செய்வராதலால், அவற்றால் அவர்க்கு ஆகாமிய மேறாதென்றதாம். இத்து - தன்பொருட்டன்றி யாதாமொரு காரியத்தின்பொருட்டு உச்சரிக்கப்படுகிற எழுத்து (த. சொ. அகராதி. கதிரைவேற்பிள்ளை) இத்தைக் கன்மம்=இதது+ஐ+கன்மம். ஐ—உவமவுருபு. எங்குஎன்பது எங்கிதத்தை யென மரீஇற்று என்று கொண்டு "எவ்விந்திரியங்களினின்று" எனப் பொருள் கொள்ளுவர் சிவஞானமுனிவர்.

4. முற்செய்வினை இங்குத்தங்கிப் போம் பாத்திரம் கந்திக்குமாபோல் மங்கிப்போய் வாதனையா லுழல் விக்கும்:—பிறவிக்குக் காரணமாயிருந்து ஞானநிலை கூடும் வரையி லநுபவித்தொழியாதே புத்தி தத்துவத்திற் கட்டுப்பட்டு நின்ற பழவினையும் புதுவினையும் ஆகாமியத்தை ஏற்றுதலாகிய செயலையின்றி வலி கெட்டுப் பயன்படுமென்றது. அது பெருங்காயமிருந்து நீங்கிய பாண்டம் தன்னகத்துக் கறிக்குபயோகமாகும் சரக்கில்லாதிருந்தும் மண மாத்திரையானே தனதியல்பு காட்டி நிற்றல் போலும் என உவமை காட்டியதாம். இங்கினது கந்தம் பாண்ட முள்ளளவு மிருத்தலியல் பாதலின் இது உயிரோடு வீடுபேறுவரையுங் கூடி நிற்கும்வாசனா மலத்தைக் குறித்ததென்ப. வாசனாமலம் பயன்றருமாறின்றி வாசனைபோன்று பழக்க மாத்திரையானியங்கு மலம். பாண்டத்திருந்தொழிந்த பெருங்காயம்போ லத்துவ சுத்தி வரையிலிருந்து முற்பிறவிகளினும்இப்பிறவியினுமீட்டியதாகிக் குரு நோக்கா லெரிந்தொழிந்த சஞ்சிதத்தையே இவ்வுவமையாற் காட்டியதெ

னல் சிறப்பு. அன்றித் தீக்ஷைக்கு முன்னிருந்த வலியோடன்றிப் பின் அநுபவிக்கப்படும் பிராரத்தமே வாசனை மலமெனலுமாம். ஆயின் அஃதுடம்பிருக்கும் வரையும் இருப்பதேயாக, அநுபவமும் நிகழ்வதேயாக, அது அழிந்துபட்ட தென்றல் யாண்டுங் கூறியில்லாமையுநோக்க வாசனையாலியங்கும் மலம் பிராரத்தத்துட்படாத சஞ்சிதமேயாமெனல்சிறப்புப் போலும். முன்னுரையாசிரியர் யாவரும் பிராரத்த மாத்திரமேயெனக் கொண்டு இவ்வுவமை தீவிரவாதனைக் குவமை யென்பர்.

5. முற்செய்வினை குலாலன் வினை தவிர்ந்த சக்கரம் சுழலுமாபோல் மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கும்:—பிராரத்தம், ஞானம் கூடமுன் ஆகாமியத்தையுமேற்றி அநுபவிப்பட்டு வந்தது போலன்றி, ஞானம்பெ றெய்திய பின் ஆகாமியத்தை யேற்றாது அநுபவத்திற் காகும் என்றது. அது பாண்டம் வனைதற்பொருட்டுச் சுழன்ற சக்கரம் தொழில் முற்றிய பின்னும் அவ்வாறுபயோகப்படாது முன்னியங்கிய முறையில் சிறிது போழ்து சுழன்று நிற்றல் போலுமென்றதாம். இவ்வுவமை உடலோடு கூடிநிற்கும் பிராரத்தத்தைக் குறித்ததாம். குலாலன் வினைக்குபயோகமாயிருந்த சக்கரம் போல் அது அழிந்து படாமையும், சக்கரத்தின் சுழற்சிபோல் அதன் இயக்கம் குன்றியமையும் நோக்க இது தெரிவுறும். இதனை மந்த வாதனைக் குவமை யெனக் கொள்வர் முன்னுரையாசிரியர்.

6. மங்கிப்போய் என்றதனாற் செயலற்று ஒழிதலும் பெற்றாம் "அக்கினியைச் சேர்ந்த வித்தானது பின் முளையாத வாறுபோல்" என்பர் மறைஞான தேசிகர்.

இதனாற் சிவஞானிக்கு ஆகாமிய மேறா தென்பதனை உவமானங் கொண்டு விளக்கியதாம். வாசனை மத்திரையானே மலப்பயிற்சி சிறிதே யிருப்பினும் அஃதுடலோடழிந் தொழியு மெனக் குறித்து மேலைச் சூத்திரத்து வீடுபேறெய்தலைக் கூறுதற்கு வருவாயு மாக்கியது நோக்குக.

இச் செய்யுளுக்கு ஞானப் பிரகாசர் பிராரத்தம் சுபத்தம், மந்தம், தீவிர மென மூன்று வித மென்றும், சுபத்தம் சிவதன்மத்தொருப்பட் டிருப்பவரை வாதியாது, மந்தம் சிவஞானிகளை வாதியாது, தீவிர மெல்லாரையும் வாதிக்கு மாறுலும் சிவஞானிகளை மிகவும் வாதியாது என்றும் ஆகாமிய மேறாது என்றும் பொருள் கூறியுள்ளார். சிவதன்மத்தொருப்படல் சிவனே தானாய முறையில் ஏகனாகி நிற்றல்.

பொழிப்பு. அக்கினித் தம்பனை வல்லார்க்கு அக்கினி சுடாத வாறு போலவும் மருந்து மந்திரமுடையானுக்கு விடமேறாத வாறுபோலவும் சிவஞானியர்க்கு ஆகாமியம் வந்தணையா. முற்செய்வினைகளும் ஆகாமிய வினைகளைத் தாமே தேகமுள்ளளவும் பெருங்காயமிருந்த பாண்டத்து மணமும் வினைதலொழிந்த குயவன் திகிரிச் சுழல்வும் போலியங்கி நின்று தேகம் அழியும்போது மற்றெல்லா மலங்களுடன் சேர அழிந்தொழியும்.

---

# பதினொராஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் மேல் மெஞ்ஞானந் தலைப்பட மலக்குற்ற நீங்கிப் பிறவிக்கிடமின்றியிருப்பர் எனக்கூறிய சீவன்முத்தர்க்கு உடம்பழிந்து படப் பரமுத்தியாமாறு கூறுமுகத்தானே, அவர்க்கு முதல்வன் பெத்தநிலையிலுயிரோடு உடனின்று இயங்கித் தோன்றுமாபோல முத்திநிலையில் அவரோடு ஒற்றித்து நின்று தன்பொருட்டன்றி யியங்குவானாய் நிற்குமுண்மை செளிவாக, அவர் இகத்தேபோற் பரத்தும் மலஞ்சேட்டியாதொழியச் சிவாநுபூதியிற் றிளைக்குமாறு காட்டி அத்துவிதப் பரமுத்தி இலக்கணங் கூறுகின்றது.

சீவன்முத்தர்க்கு உடம்பழியப் பரமுத்தியாமாறும்
பரமுத்தியத்துவிதப் பேரின்ப வியல்புந் தொகுத்துக்கூறல்.

310 காயமொழிந் தாற்சுத்த னாகி யான்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
ஆயுமறி வுடையவனா யன்பு செய்ய
அந்நிலைமை இந்நிலையி னடைந்தமுறை யாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே.

(இ - ள்). ஆன்மா ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய - ஆன்மா ஆராய்ந்தறியும் பரஞானப் பேற்றினாற் தலையாய வன்புபூண்டு நிட்டையில முந்தி நிற்க,—காயம் ஒழிந்தால் - உடல் அழிவுபெறுமாயின்,—சுத்தனாகி - மலப்பற்றில்லாது பரிசுத்தனாகி,—அந்நிலைமை இந்நிலையில் அடைந்தமுறையாலே - அந்த மலமுத்தநிலையை இகத்தே ஒருவாற்று னடைந்து நின்ற முறையாலே (பரத்தும்),—மாயமெலா நீங்கி - மலசம்பந்தமாயுள்ள மயக்கமெல்லா நீங்கப்பெற்று,—மாறாதசிவாநுபவம் மருவிக் கொண்டே - என்றும் நீங்காத அத்துவிதப் பேரின்பத்தைச் சுவைத்துக்கொண்டு,—அரன் மலர் அடிக்கீழ் இருப்பன் - முதல்வனது மலர்போன்ற சீபாதத்தை யணைந்திருப்பன்,—காட்டக் கண்டிடும் தன்மையுடைய கண்ணுக்கு ஏயும் உயிர் காட்டிக் கண்டிடுமாபோல - அந்நிலையில், காட்டுங்காற் காணுமாற்றலுள்ள துங்க மாய விழிக்கு அதனோடியைந்து நிற்கும் உயிர் காட்டியும் தானே கண்டும் இயங்குமாறு போல,—ஈசன் உயிர்க்குக் காட்டி இத்தைக் கண்டிடுவன் - முதல்வனும் மலநீக்கம் பெற்ற வுயிர்க்குப் பேரின்ப அநுபவத்தைத் துய்ப்பித்துத் தன்பொருட்டன்றித் தானே துய்ப்பவனுமாயிருப்பன்.

குறிப்பு. 1. காயமொழிந்தாற் சுத்தனுகி: - உடம்பொழிய மாயாமல நீக்கும் என மேர்சூத்திரத்திறுதியிற் கூறியதை விளக்கியது. ஆயும் அறிவுடையவனுய் அன்பு செய்து நிற்கவே காயமொழிந்தமையான், இசுத்தே கன்மமும் ஆணவமும் நீங்கிய முறையானே, பரத்தும் அவை யகலாதணேயச் சுத்தனுகி என்றதாம்.

2. ஆன்மா என்றது மேலேச்சூத்திரங்களுள் மெஞ்ஞானந் தலேப்பட்டு நிட்டை கைவரப்பெற்று நின்ற சீவன்முத்தரையாமென்க.

3. காட்டக் கண்டிடுந்தன்மையுடைய கண்: - காணுமாற்றலில்லாத குருட்டுத்தன்மையும், காட்டினுங் காணவிருப்பின்மையாற் காணுமாற்றலில்லாப் பகற்குருட்டுத்தன்மையுமில்லாத தூங்கமாயவிழி என்றது (செ. 290 பார்). உமாபதிசிவாசாரியர்க் குபதேசமொழியாயுற்ற "பகற்குருடு" என்ற வாக்கியமு நோக்குக.

4. எயுமுயிர்காட்டிக் கண்டிடல்: - கண்ணேடியைந்து நிற்கும் உயிர், அதன் வேருய் நின்று அகற்கு விடயத்தைக் காட்டியும். உடனுய் நின்று அதை இயக்கியும், ஒற்றித்து நின்று தானே கண்டும் நிற்றலாகிய அத்துவித இயல்பு.

5. ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடுவாசித்தை:-முதல்வனும் முத்தான்மாவோடு வேருய் நின்று பேரின்பத்தைத் துய்ப்பித்தும், உடனுய் நின்றியக்கியும், ஒற்றித்து நின்று தாமே துய்ச்தும் நிற்பன் என்றது. இத்தை என்றதனுல் முதல்வன் இவ்வாறு இன்ப நுகர்ச்சியிலியங்குவது தம்பொருட்டன்று ஆன்மாவின் பொருட்டேயாம் என்பது வலியுறுத்தியதுவுமாம். இத்து-(செ. 309. கு. 3. பார்). காட்டுதல் - இங்கு ஐந்தொழினிகழ்த்தல் என்னலுமாம். காண்டல் - பொருட்டின்றி நிகழும்லீலேயென்றலுமாம். இதனுனே முத்திநிலேயிற் சிவசமமாகும் என்பார்கூற்று மறுக்கப்பட்டு அத்துவிதப்பரமுத்தியியல்பு தொகுத்துக்காட்டியதாம்.

6. ஆயுமறிவுடையவனுயன்புசெய்ய: - மேல் 8-ம் 9-ம் சூத்திரங்களுட் காட்டிய சன்மார்க்கமாகிய ஞானநிலேயிற் தன்னே இழந்து தலேயாய அன்பு பூண்டொழுக என்றது.

7. அந்நிலேமை இந்நிலேயினடைந்த முறையானே:-நிட்டை கூடிய போதே கன்மமும் ஆணவமு மற்றுச் சீவன்முத்தனு யிசுத்தே யிருந்தமையின் காயமொழியப் பரத்தே யவைவந்தணேயுமாறும் இல்லேயென்றதாம். ஏகாரம் தேற்றம். அந்நிலே. (செ. 286, 291 பார்).

8. மாயமெலா நீங்கி: - தத்துவதாத்துவிதங்களே யொட்டிய மயக்கவுணர்வு யாவுமின்றிப் பரபோகமொன்றையே அறிந்து துய்க்கு நிலேயைப் பெற்று என்றது.

9. மாறுத சிவாநுபவ மருவிக்கொண்டு:-இகத்து வாதனையாற் சிறிதே அலமர நிற்பது போலன்றி, என்றும் நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே அங்குநிலையைப் பெற்று என்றது. (செ. 293). இதனானே பரமுத்தியினி ன்றும் மீட்சியில்லையென்றதும், உபாயநிட்டை கூடியக்காற் சுவாநுபூதிக மாம் என்ற சிவாநுபவம் நிலைத்து நீங்காதமையப்பெறு மென்றதுமாம். (செ. 286).

பொழிப்பு. மெஞ்ஞானம் பெற்று நிட்டைகைவந்த சீவன் முத்தர் உடலழிந்துபட, மும்மலமும் பற்றறத் திருவடிப்பேறுகும் அத்துவிதப்பர முத்தி யின்பந் துய்த்திருப்பர். முதல்வன் அந்நிலையில் உயிரோடு லீலை மாத் திரையானே வேறும் உடனும் ஒற்றித்தும் நின்று சிவாநுபவ நிகழ்த்து வன்.

இச்செய்யுள் இரண்டு கூறுடையது.

1. ஆன்மா ஆயுமறிவுடையனு யன்பு செய்யக் காயமொழிந்தாற் சுத் தனுகி அந்நிலைமை இந்நிலையினடைந்த முறையானே மாயமெலா நீங்கி யிருப்பன். (செ. **311 - 315**).

2. காட்டக் கண்டிடுந் தன்மையுடைய கண்ணுக்கு எயுமுயிர் காட்டிக் கண்டிடுமோபோல ஈசனுயிர்க்குக் காட்டி இத்தைக் கண்டிடுவன். (காண) ஆன்மா அரன்மலரடிக்கீழிருப்பன் மாறுத சிவாநுபவமருவிக்கொண்டே. **(316-321).**

---

## முதலதிகரணம்.

ஆன்மா ஆயுமறிவுடையனு யன்பு செய்யக்காயமொழிந்தாற் சுத்தனுகி அந்நிலைமை இந்நிலையிலடைந்த முறையானே மாயமேலாநீங்கி யிருப்பன். என்பது முதற்கூறு (**311 - 315**). இக்கூற்றானே பரஞானந் தலைக்கொண்ட சீவன்முத்தர்க்கு இகத்தே சன்மமற்றிருந்த முறையாலே, உடம்பழிந்த விடத்து மும்மலப் பற்றுமறப் பரமுத்தி யின்பமாமாறு சாட்டவுற்றுப் பர ஞானத்தியல்பும் பயனும் மும்மலமறப்பெற்ற சிவாநுபூதிச் சிறப்பும் கூறப் படுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்.

1. பரஞானத்தியல்பும் பயனும் (**311**).

2. சிவாநுபூதிச் சிறப்பு (**312 - 315**).

(*a.*) சிவாநுபூதியில் மாயாமலஞ் சேட்டிக்காமை. (**312**).

(*b.*) சிவாநுபூதியிற் கன்மமலஞ் சேட்டிக்காமை. (**313**).

(*c.*) சிவாநுபூதியில் ஆணவமலஞ் சேட்டிக்காமை. (**314**).

(*d.*) சிவாநுபூதியில் மும்மலமுஞ் சேட்டிக்காமையை உவமை முகத்தான் விளக்கல் (**315**).

1. பரஞானத் தியல்பும் பயனும்.

311. பரஞானத் தாற்பரத்தைத் தெரிசித்தார் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞா திருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞான
மாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

(இ - ள்.) பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தார் - மேலாகிய வீடு பேற்றைத்தரும் மெஞ்ஞானத்தாற் சிவனைத் தரிசித்தோர்,—பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் - சிவமொன்றனையே கண்டுகொண்டிருப்பர் ஏனைப் பதார்த்தங்களைச் சிறிதுங் காண்பாரல்லர்,—பார்க்க வரும் ஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம் - அவற்றைக் காணவரும் ஞானங்கள் பலவகை ஞானங்களாயும் அறியாமையோடு கூடி வேறுபாடுடையனவாயும் இருக்கும்,—வாச்சிய வாசக ஞானம் வயிந்தவத்தின் கலக்கம் தரு ஞானம் - சொற்பொருளாலும் சொல்லாலும் உண்டாகும் ஞானம் விந்துவிலே தோன்றி வைகரி முதலிய நால்வகை வாக்கைப் பற்றி நிகழுவதும் ஐயந்தருவதுமாயிருக்கும் ஞானமாம்,—போக ஞாதிரு ஞானம் ஞேயம் தங்கிய ஞானம் சங்கற்பனை ஞானம் ஆகும் - போக அநுபவத்தோடுகூடி ஞாதிருவும் ஞானஞேயங்களும் பொருந்திய ஞானம் சங்கற்பஞானமாம்,—திரு ஞானம் இவை எல்லாம் கடந்த சிவஞானம் - தலைமையாகிய பரஞானம் இவையனைத்திற்கு மேலான சிவஞானமாகும்,—ஆதலாற் சீவன்முத்தர் சிவமேகண்டு இருப்பர் - ஆதலால் இதனைப் பெற்ற சீவன்முத்தர் சிவமொன்றையே கண்டு சிவாநுபூதியிற் றிளைத்திருப்பர்.

குறிப்பு. 1. பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்:—இறைவன் உயிரோடு வேறாயும் உடனாயும் ஒற்றித்தும் நிற்கும் அத்துவித உண்மையைத் தெளிதலாகிய மெஞ்ஞானத்தைப் பெற்ற சீவன் முத்தர் இறைவனைக் கண்டிருத்தலின், அவனையும் அவனியல்பையுமே தெரிந்திருப்பரன்றி, ஏனைப்பதார்த்தங்களைக் காணுவாரல்லர், அது வினையுட்படுத்தும் அபரஞானமே யாதலின் என்றவாறு. பரஞானம் வீடு பேற்றை யடைவிக்கும் மேலான ஞானம். பதார்த்தம் - பதத்தின் அர்த்தமாயுள்ளது, சொல்லாலறியப்படுவது, விடயம் என்றபடி.

2. பார்க்கவருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்:—பொறிகளைக் கொண்டு பதார்த்தங்களை யறியும் ஞானம் காலதேசக் கரணங்களையொட்டிப் பல வகைத்தாய் அபரஞானமாயிருக்கும் என்றது. இதனானே

காட்சி உரை எனப்பட்ட அளவைகளால் நூல்களைக் கற்றும் பிறவயினுன் அநுமானித்தும் அறிவதாகிய கல்வியறிவு அபரஞானமெனக் காட்டிய தாம். "கற்றதனுலாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅ ரெனின்" என்ற திருவள்ளுவர் வாக்கும் இதைக் குறித்தது காண்க.

3. வாச்சிய வாசகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்தரு ஞானம்:— சொல்லின் பொருளைக் கொண்டும் சொல்லைக் கொண்டும் பெறும் ஞானம் விந்துவினின்று தோற்றி நால்வகை வாக்கைப் பற்றி நிகழ்வதாய் ஐயப் பாடு தருவதாயு முள்ளது என்றது. இதனுனே கேள்வியானுகும் ஞான மும் தர்க்கத்தி னிறுத்துவதாய்க் கலக்கமே தருவதாய் அபரஞானமாய் முடியும் என்றதாம். வாச்சியம் - வாசகத்திற்கு இலக்கியமாகவுள்ளது. வாச கம் - சொல். வயிந்தவத்தின் கலக்கம் - விந்துவினின்று மாயை தோற்றுவதும் அதனுல் வைகரியாதி வாக்குக்களும் குணங்களும் தோற்றப் பிரபஞ்சம் விரிவதுமே மார்க்கம் என்பதாம். (செ 39. 293 பார்).

4. போக ஞாதிரு ஞான ஞேயந் தங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞான மாகும்:—போகாநுபவத்திலுறுவதாகியஞானம் காண்பான் காட்சி காட் சிப் பொருளென்ற திரிபுடியோடு கூடியதாய்ச் சங்கற்பம் பற்றி உளதாய் அபரஞானமாம் என்றது. இதனுனே தெளிதலானுகும் ஞானமும் தற்போத மறுக்காது ஒன்றன் மாட்டு நிறுத்திய சங்கற்பத்து நிகழ்வதாதலின், அது வும் அபரஞானமே எனக் காட்டியதாம். பார்க்க வருஞானம், வாச்சிய வாசக ஞானம் என்றதோடொப்பப் போகத்து ஞாதுரு ஞான ஞேயந் தங் கிய ஞானம் எனக் கொண்டதாம். இதனைப் போகத்தங்கிய ஞானம் என எடுத்துக் கொண்டு அக்கலக்கந் தரும் ஞானம் போம்படி அவ்வாறு தங்கிய ஞானம் எனப் பொருள் கொள்வர் சிவஞானமுனிவர். ஞாதிரு ஞானம் ஞேயம் (செ. 274. சூ. 3. பார்). இவைதிரிபுடி எனவும்படும். சங்கற் பனை - சற்பனையோடு கூடியது, மனோபாவனையோடு கூடியது.

5. திருஞான மிவையெல்லாம் கடந்த சிவஞானம்:—சிவாநுபவத்துத் திருவருட்சத்தியோடு நிட்டைகூடிநின்றறியும் சிறந்தபரஞானம், மேற் கூறிய கல்வி கேள்வி தெளிதலாலாகும் பல்வகை ஞானங்களுக்கும் அதீத மாயுள்ளதாய்ச் சிவஞானமெனக் கூறநிற்பதாம் என்றது. திரு - சிறந்த, மேலாகிய; பர என்ற வடமொழிக்கியைபாகும் தமிழ்மொழி. சிவஞானம் - பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றிஞானம், இறைவனடி ஞானம், அடி ஞானம் எனவும்படும் (செ. 274, 279, 280. பார்).

6. சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்:—மேலெட்டாஞ் சூத்திரத் திற் சீவன் முத்தராகித் "தக்கபிரியாப் பிரியமின்றி.....சிவன்றோற்ற மொன்றுமே காண்பர்" என்றதனோடு கூறியதுகூறலன்றென்பது பட ஆண்டு சிவன்றோற்றமென்றும் ஈண்டுச் சிவமே என்றும் கூறியதாம். அது அபர சீவன் முத்த நிலையையும் இது பர சீவன் முத்த நிலையையுங் காட்டிய

தாம். அன்றி இது நின்மல துரியாதீத நிலையைக் குறித்த தெனவுமாம். இவர் அத்துவிதக்கலப்பில் இறைவனைக் காண்டலும் தெளிந்து நோக்குக. (செ. 308. கு. 7. பார்).

பொழிப்பு. பொறிகளைக் கொண்டு அளவையானறியு மறிவும், நூல்களைக் கேட்டலானெய்து மறிவும், அநுபவத்துத் தெளிவதாகிய அறிவும் முறையே பல விகற்பமாயும், மயக்கந்தருவதாயும், சங்கற்ப பூர்வமாயும் இருத்தலினால் அவை அபரஞானமாகும். பரஞானமோ இவற்றினுக்கெல்லா மேலாய் இறைவனடி ஞானமாகித் திருவருளத்துவிதங்கண்ட ஞானமாகும். ஆதலாற் பரஞானம் பெற்ற சீவன் முத்தர் சிவமொன்றையே காண்பாராய்ச் சிவாநுபூதியிற் றிளைத்திருப்பர்.

### 2. சிவாநுபூதிச் சிறப்பு.

#### (a). சிவாநுபூதியில் மாயாமலம் சேட்டிக்காமை.

**312.** அநாதியுட லொன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மா
லாயழிந்து வருதலா லந்த மில்லைப்
பினாதியருள் பெற்றவர்க ணித்தவுரு வத்தைப்
பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே யிதுவு
மினாநிலை யிதுதானுங் காய முண்டே
லிருங்கன்ம மாயமல மெல்லா முண்டா
மனுதிதரு முடலாதி காரியத்தா லநாதி
மலமறுக்கு மருந்தற்றா லுடன்மாயுங் காணே.

(இ - ள்.) உடல் ஒன்றினை விட்டு ஒன்று பற்றிக் கன் மால் ஆய் அழிந்து வருதலால் அநாதி - உடம்பு ஒன்றழியப் பின்னொன்றுறுவதாய் உயிர்களைப் பற்றித் தொடர்ச்சியாய்க் கன்மத்துக்கேற்ப ஆகியும் அழிந்தும் வருதலினாலே அநாதியாம்,—அந்தம் இல்லை - ஆதலின் அதற்கு முடிவுமாகுமாறில்லை,—பின் ஆதி அருள் பெற்றவர்கள் நித்த உருவத்தைப் பெற்று இருக்கை முத்தி எனில் - ஆகவே முதல்வனது திருவருளைப் பெற்றவர்கள் நித்தியமாகிய திவ்விய சரீரத்தைப் பெற்றிருக்கைதானே முத்தியாமென்னில்,—இதுவும் பெறும் பதமே - இப்பேறும் பெறுவதாகிய ஓர் பதமுத்தியாய் அடைவதாகிய வீட்டுநிலையாகா தொழியும்,—இது தானும் இனாநிலை - அன்றியும் இவ்வாறு பெற்ற நிலையுமே துன்பத்தைத் தரும் நிலையாம். எவ்வாறெனில்,—காயம் உண்டேல் இரும் கன்மம் மாயை மலம் எல்லாம் உண்டாம் - சரீரம் உளதாகவே அதனோடு மிக்க கன்மம் மாயை ஆணவமாகிய அனைத்தும் உளவாகும். ஆகவே வீடுபேறாய வாறுமின்றாய் அக்கூற்றுப் பொருந்தாது,—மனுதிதரும் உடல் - மனம் முதலிய வற்றோடு கூடிய உடல்களியாவும்,—அநாதி மலம் அறுக்கும் மருந்து - உயிர்களை அநாதியே பந்தித்திருக்கும் மலநோயைத் தவிர்க்கும் மருந்தாக உற்றமையின்,—காரி

யத்தால் ஆதி - காரணம் பற்றித் தோன்றிய காரியமாதலால் ஆதியாகும்,—மலம் அற்றால் உடல் மாயும் - ஆகவே காரணமாகிய மலஞ் செயலற்றொழியக் காரிய மாகிய உடலும் வேண்டப்படா தொழியும்.

குறிப்பு. 1. அநாதி யுடலொன்றினை......பெற்றிருக்கை முத்தி:—"அநாதிகன்மத்தால் அநாதியே உடலும் உயிரோடு சம்பந்தப்பட்டிருத்தலின் அஃதியாண்டும் ஒழியுமாறில்லை. பின் முத்திநிலையென்பது நித்திய சுத்த மங்கள திப்பிய சரீரம் பெற்றிருத்தலேயாம்" என்பர் சிவசமவாதிகளுள் ஒருசாரார். இவர் கூறும் முத்தி நிலையும் மலப்பற்றை யொட்டிய சரீரப் பேறேயாய் வீட்டின்ப நுகர்ச்சியாகா தெனவும், அநாதிமலநோயை அறுக்க வுற்ற மருந்தாகிய உடல் ஆதியேயாகி, நோயறவே மருந்து வேண்டாமை போன்று மும்மலமுஞ் செயலற்று முத்தியி லொழியத்தானும் வேண்டப்படா தெனவும் கூறி, இவர் கூற்றை மறுத்தது இச்செய்யுள் என்க. அநாதி - உபாதியநாதி, மயக்கத்தநாதி. பின் - அநுவாதத்தை வருவிக்கும் இடைச் சொல்.

2. பெறும்பதமே இதுவும்:—வீட்டின்பம் பாச பசு போகங்களை யெல்லாம் விடுத்துப் பரபோகந் துய்த்தலே யன்றிப் பெறுவதாகிய ஓர் பதவி யாகாது. திவ்விய சரீரம் பெறுதலே முத்தியாமெனில், அதுவும் பெறுவ தோர் பேறாகும் என்றது.

3. இனுதுநிலை யிதுதானும் காயமுண்டே லிருங்கன்ம மாயை மல மெல்லாமுண்டாம்:—எவ்வாற்றானும் உடலிருப்பின் அதுகொண் டநுபவித் தற்குக் கன்மமும், விடயமாகிய மாயையும், அஞ்ஞானமாகிய ஆணவமும் வேண்டப்படும். ஆகவே உடலிருப்பின் பந்தமற்ற வீட்டு நிலை கூடிய தின்றாம் என்றது.

4. மனாதி தருமுடலாதி காரியத்தா லநாதி மலமறுக்கு மருந்தற்றா லுடன் மாயும்:—மனம் முதலிய கரணங்களாலாகிய சரீர வகைகள் யாவும் அநாதி மலநோய் தவிர்த்தற்கு இறைவனு லருளிய மருந்தாய், நோயற மருந்து வேண்டப்படா வாறுபோல், வீட்டு நிலையில் வேண்டா தொழியும் என்றதாம். மனாதி தருமுடல்—பஞ்ச கோசங்கள் (செ. 213. சூ. 1. பார்). காரியத்தாலாதி—யாது காரியப் பட்டதோ அது ஆதியாய் அந்தமு முடைத்து என்றது. பின் அநாதி யென்றல் உபாதியநாதி யென உபசாரம் பற்றியாக லின் என்ப. இக்கருத்து "இருவினை யநாதி யாதி யியற்றலானுகர்வாலந் தம்" என்ற செய்யுளினும் காண்க. (செ. 130. பார்). மலமறுக்கும் மருந்து (செ. 125. 126. பார்).

பொழிப்பு. அநாதி கன்மத்துக் கேற்ப உயிர்க்குத் தொடர்ந்து வரும் உடல்களும் அநாதியாய் அந்த மடையாதாதலின், முத்திநிலை நித்தியமாகிய சரீரம் பெற்றிருத்தலேயாம் என்னில், இத்தகை நிலையும் பெறுதற்குரிய பதமுத்தியாகி வீட்டின்ப நிலை யாகாதாகையாலும் கன்மம் மாயை ஆணவங் களோடு கூடிய பந்தத் துன்பத்தையே கொண்டுள்ளதாய் வீட்டின்ப மாகா

தாகையானும் அது பொருந்தாது. அநாதியான கன்ம நோயை ஒழிக்க வுற்ற மருந்தாகிய தேகமுங் கன்மநோயொழியத் தானும் வேண்டப்படா தொழியும்.

(b.) சிவாநுபூதியிற் கன்ம மலஞ் சேட்டிக்காமை.

**313** தெரிவரிய மெஞ்ஞானஞ் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த னாகு
முரியமல மௌடதத்தாற் றடுப்புண்ட விடமு
மொள்ளெரியி னொளிமுன்ன ரிருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந்
திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயு மன்றே.

(இ-ள்.) தெரிவு அரிய மெஞ்ஞானம் சேர்ந்தவாறே - அறிதற்கரிய உண்மைஞானம் வந்தவிடத்து,—சிவம்பிரகாசிக்கும் - சிவம் பிரகாசியா நிற்கும்,—இங்கு சீவன் முத்தன் ஆகும் - இகத்தே ஆன்மா சீவன்முத்தனாகும்,—உரியமலம் - காயமெடுத்தற்குக் காரணமாயிருந்த கன்மமலம்,—ஔடதத்தால் தடுப்புண்ட விடமும் - மருந்தினாற் றடைப்பட்ட நஞ்சுபோலவும்,—ஒள் எரியின் ஒளி முன்னர் இருளும் - மிக்க அக்கினிப் பிரகாசத்துக்கு முன்னர் இருள்போலவும்,—தேற்றின் வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போல் - தேற்றுமரத்தி லுண்டாகிய வித்துச் சேர்ந்த நீரைப் பொருந்திய கலங்கல் போலவும்,—மாயாதே தன் சத்தி மாய்ந்து - தான் கெடாதே தன் சத்தி கெட்டு,—காயம் திரியும் அளவும் உளதாய் - அவ்வுடம்பு நின்றியங்கு மளவும் உளதாய்,—பின்பு காயம் சேராத வகை தானும் தேயும் - அக்காயம் நீங்கியபின் மற்றொருகாயம் வந்து பொருந்தாதபடி கழிந்தொழியும்.

குறிப்பு. 1. இங்கே:—இப்பிறவியிலே மெஞ்ஞானம் உதித்தபோதே என்பது.

2. உரியமலம்......மாயாதே தன்சத்தி மாய்ந்து......ஒழியும்:—இங்கே உடலெடுத்துப் பிறத்தற்குக் காரணமாகிய உரிமையுள்ள பிராரத்த சஞ்சித ஆகாமியங்களாகிய முத்திறப்பட்ட கன்மமலமுஞ் சீவன்முத்தர்க்கு இகத்தே செயலற்று உடம்புள்ளளவு மொருவாறு நின்று மேலுடம் பெடுத்தற்கிடமின்றாய் ஒழியும் என்றது. மேற் பத்தாஞ் சூத்திரத்தும் இவ்வுண்மையே காட்டியிருப்ப ஈண்டும் கூறியது புனருத்தியாகாதோ எனின், அன்று. ஆண்டுச் சீவன்முத்தரது கன்மாநுபவமுறைமை கூறுமுகத்தான் அவர்க்குப் பிராரத்தநுகரும்போதும் ஆகாமிய மேறாதென்பதை வற்புறுத்த வுற்று மற்றைக் கன்மங்களும் "பின்காயமொடு மாயுமன்றே" எனக்காட்டி விடுத்த

தனை ஈண்டுத் தெளிவாக விளக்கி அவர்க்குக் காயமொழியக் கன்ம முற்று யறப் பரமுத்தியாமாறு காட்டியதாம்.

3. ஔடதத்தாற் றடுப்புண்டவிடம் - ஞானத்தாற் சமபுத்தியோட நுபவிக்கும் பிராரத்துவத்திற்கும், ஒள்ளொளியின் ஒளிமுன்னரிருள் - ஞான வொளியாற் கடியப்பட்ட யான் எனதென்னும் இருள் நீங்கியபின் ஏறு திருக்கும் ஆகாமியத்திற்கும், தேற்றின் வருபரல் சேர் நீர்மருவு கலங்கல் - ஞானத்தாற் பற்றற்றவிடத்தும் பழக்கவாதனையால் வந்து இடையிடை வாதிக்கும் சஞ்சிதத்திற்கும் உவமையாயின. விடம், உண்டதனாற் றலைக் கேறியிருந்தது ஔடதத்தாற் றடுக்கப்பட்டதும்; இருள், ஒளியின்மையா லிருந்து ஒளிவர நில்லாதழிந்ததும்; கலங்கல், நீருக்கியற்கையா யில்லதா ய்ச் செயற்கையால் வருவதாயிருந்து தேற்றாங் கொட்டையைச் சேர்க்க நீங்குவதுமாய வுண்மையை யொட்டி இதனையறிக.

4. மாயாதே தன்சத்தி மாய்ந்து:—இவ்வுலகத்துக் கன்மாநுபவம் நிக ழாதொழிவ தின்மையின் மாயாதும், பற்று இகலின்றிப் புசிக்கப் படுதெ லின் தன் சத்தி மாய்ந்தும் இருப்ப தென்றதாம்.

5. காயஞ் சேராதவகை தானுந்தேயும்:—இகத்துப் புரிந்த ஆகாமிய மே சஞ்சிதத்துட்பட்டுப் பிராரத்துவமாய் மேற்பிறவிக் கேதுவாமாகையாற் சிவஞானியர்க்கு அவர் இறைபணிநிற்கு மாற்றால் ஆகாமிய மேறாமையின் பிறவி ஒழிந்த தென்றதாம். தேயும் என்றமையான் அவர்தம் வினைகளும் பிறர்க்கு இன்பதுன்ப நுகர்ச்சிக் கிடமாக இறைவனு லேற்றூட்டப்படு மாற்றால், அழிந் தொழிந்தனவல்ல வென்பதைக் காட்டியதாம். இதனு னே காயமொழிந்தபின் ஆகும் சிவாநுபூதியிற் கன்மமலம் இன்றுமென்பது வலியுறுத்தியது காண்க.

போழிப்பு. மெஞ்ஞானமுதித்த போதே சிவம்பிரகாசிக்கச், சீவன் முத்தனாகிய உயிர்க்குக் கன்ம மலம் ஒருவாற்றானும் செயலிலதாய்த்தன் சத்திகுன்றி உடலுள்ளளவும் நின்றியங்கி மேலைப் பிறவிக்கிடமின்றாகத் தேய்ந்தருகும். அதனாற் காயமழிந்தபின் பரமுத்தியிற் கன்மலஞ் சிறிதும் சேட்டிப்ப தின்றாம்.

(c) சிவாநுபூதியில் ஆணவமலஞ் சேட்டிக்காமை.

**314.** ஆணவந்தா னநாதியந்த மடையா தாகும்
அடையிலந்த வான்மாவு மழியுமெனிற் செம்பிற்
காணலுறும் களிம்பிரதக் குளிகைபரி சிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே
தாணுவின்றன் கழலணையத் தவிருமலந் தவிர்ந்தாற்
தான்சுத்த னுயிருக்கை முத்தியா னருளாய்

பூணவேண் டுவதொன்று மில்லையெனி லருக்கன்
புகுதவிருள் போமடியிற் பொருந்தமலம் போமே.

(இ - ள்.) ஆணவம் தான் அநாதி அந்தம் அடையாதாகும் - ஆணவ மலமோ அநாதி நித்தமாகி ஆன்மாவோடு கூடியிருக்குமாதலால் அது நாச மடைவதின்றும்,—அடையின் அந்த ஆன்மாவும் அழியும் எனின் - நாசமுறு மாயின் அவ்வான்மாவும் அழிவுறுவதாய் நித்தமென்றற் கிழுக்காமென்னின், அன்று.—செம்பில் காணலுறும் களிம்பு இரதகுளிகை பரிசிக்கக் கழியும் - செம்பினிடத்துக் காணப்படும் களிம்பானது இரதகுளிகை பரிசிக்க நீங் கும்,—செம்புஉரு நிற்கக் கண்டோமன்றே - அங்ஙனம் களிம்பு நீங்கவும் செம்புருவேறு நிற்கக் கண்டோம், அதுபோல்,—தாணுவின் தன் கழல் அணை யமலம் தவிரும் - முதல்வனது திருவடி ஞானம் சார்ந்தபோதே ஆணவமலம் நீங்கும்,—தவிர்ந்தால் தான் சுத்தனாய் இருக்கை முத்தி,—அவ்வாறு நீங்க உயிர் மலமுமின்றி இறைவனோடத்துவிதப் படலுமின்றி வேறாய் நிற்றலே முத்தியாம்,—அரன் தாளைப் பூணவேண்டுவது ஒன்றும் இல்லையென்னில் - ஆகவே மேலும் அரன்திருவடியைச் சேர்ந்து அத்துவிதப்பேறு பெற வேண்டுவதில்லையெனில்,—அருக்கன் புகுத இருள்போம் - ஆதித்தனொளி கண்ணுள் வந்தடைந்திருப்பினே இருள் நீங்கும். அதுபோல,—அடியிற் பொருந்த மலம் போம் - உயிர் முதல்வன் திருவடியிற் சேர்ந்திருப்பவே ஆணவமலம் பற்றறக் கழியும்.

குறிப்பு. 1. ஆணவந்தானநாதி யந்தமடையாதாகும்......கண்டோ மன்றே:—கன்மம் மாயைகள்போல் ஏகதேசாநாதி யாகாது உயிர்த்தன்மை யாய் அநாதியே உடனிற்பதாகிய ஆணவமலம் அழிந்தொழியுமாறில்லை. அழி யுமாயின் உயிரும் அழியுமே. ஆதலால் மலங்கெடாதிருப்பப் பாடாணம் போற் கிடத்தலே முத்தியென்பர் பாடாணவாதசைவர். இவர்க்கு ஆண வத்தினதழிவு இரதகுளிகையிட்ட செம்பினிடத்தழிந்த களிம்புபோலச் செயலற்றிருத்தலேயாம் எனக் கூறி, முத்திநிலையில் ஆணவந்தன் செய லற்றிருக்கும் எனக் காட்டியதாம்.

2. தாணுவின்றன் கழலணையத்தவிருமலம்......பொருந்தமலம் போ மே:—இரதகுளிகைப்பரிசம்பெற்ற செம்பேபோன்று முதல்வனது திருவடி ஞானம் உதிப்பவே மலம் நீங்கச் சுத்தனாய் முதல்வனின் வேறாயிருத்தலே முத்தியாதலமையும். மேல் முதல்வனது திருவடியைப் பொருந்தி அத்து விதப்பேறு பெறல் வேண்டாஎன்பர் பேதவாதசைவர். இவர்க்கு, மெஞ் ஞானம் சார்ந்தபோது ஆணவமலங் கெடுமாயினும், அருக்கனொளியோடு கண்ணொளிகூடியே யிருள்நீக்கமாதல் போலத் திருவடியை உயிர் சென்ற டைந்து அத்துவிதநிலையிற் கலந்தாலேயன்றி மலம் பற்றற நீங்காதெனக் காட்டியதாம். தாணு - சலமற்று நிலையாயிருப்பவன், இறைவன். கழல ணைய என்றது திருவடிபதிதலாகிய சிவஞானம் வந்துதித்தமுறை என்ப தும், அடியிற் பொருந்த என்றது அத்துவிதநிலையிற் திருவடியிற் கலந்து

நிற்குமுறை என்பதும் காண்க. அருக்கன்புகுத என்றது ஆதித்தன் கண்ணொளியோடு கலந்து படிய, எனவே பசுத்துவத்தோடு பதித்துவம் அத்துவிதமாகக் கலந்து நிற்ப என்றதாம். தவிரும் என்றது செயலற்று நிற்கும் என்பதன்றி முற்ற அழிந்துபடும் என்றதன்று.

பொழிப்பு. ஆணவமலமானது உயிர்களோடு அநாதியே கூடியுள்ளதாதலின் அஃதழியுமாறில்லை. அழிவதாயின் உயிருமழிந்ததாகுமே எனின், அன்று. இரதகுளிகையிட்ட செம்பிற் களிம்பின் செயலற்றிருப்பினும் செம்புருநிற்பதுபோல், ஆணவமலசத்தி குன்ற உயிர் சுத்தநிலையில் இருக்கும். மேலும் சிவஞானம்கைவர மலமுமே கழிந்து சுத்தனாய் நிற்பதுவே போதும். அரனடியை அடையவேண்டுவதென்றுக்கெனின், அருக்கனொளியாலிருள் நீங்குவதாயினும், அவ்வொளி கண்ணொளியோடு கலந்திருப்பினே ஒளி பிரகாசமாவதுபோல, இறைவனோடிரண்டறக் கலந்திருப்பினே முத்தியின்பமாகும். ஆதலாற் சிவாநுபூதியில் ஆணவமலம் இன்றாம்.

(*d*). சிவாநுபூதியில் மும்மலமும் சேட்டிக்காமையை
உவமைமுகத்தான் விளக்கல்.

**315.** நெல்லினுக்குத் தவிடுமிக ளநாதி யாயு
நெல்லைவிட்டு நீங்கியவை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடிற் றுகளற்ற வரிசியின்பா லில்லைத்
தொக்கிருந்து மற்றொருநெற் றோற்றி டாவாம்
மெல்லவிவை விடுமறவே யவைபோல வணுவை
மேவுமல முடல்கன்ம மநாதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலினா னசுமுமின் றாமே.

(இ - ள்). நெல்லினுக்கு தவிடு உமிகள் அநாதியாயும் - நெல்லுக்குத் தவிடும் உமியும் (முளையும்) அநாதியாக விளைந்திருந்தும்,—நெல்லைவிட்டு நீங்கி அவை நின்ற நிலை நிகழ்த்தீர் - ஒருக்கால் நெல்லைவிட்டு அவை நீங்கி நிற்பது கண்டாமே. அநாதியென்பது யாண்டாம் எனில்,—சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பால் இல்லை - கூறுங்கால் குற்றநீங்க அரிசியாகத் தீட்டிய நெல்லிடத்து அவை இல்லையாம்,—தொக்கு இருந்து மற்று ஒருநெல் தோற்றிடாவாம் - (இரதக்குளிகை கண்டசெம்பிடத்திற் களிம்பு தோற்றாதிருப்பதுபோல்) இவை அரிசியிடத்துத் தோன்றாது நிற்குமோ என்னில், அன்று. பின்னொருகாலத்தும் அவ்வரிசி நெல்லாகும்படி அவை தோற்றுவதில்லை,—மெல்ல இவை விடும் அறவே - ஆகவே தவிடுமிமுளைகள் நெல்லை மெல்லமெல்லவிட்டு நீங்குவதே முறையாம,—அவைபோல அணுவை அநாதிமேவும் மலம் உடல் கன்மம் நல்ல சிவமுத்தியின்கண் விட்டே நீங்கும் - அவற்றைப்போல உயிரை அநாதியே பந்தித்துள்ள மலமாயை கன்மங்க

ளும் சிவமுத்திநிலையடைய உயிரைவிட்டு நீங்கியேவிடும்,—பெத்தான்மாவை நணுகிநிற்கும் ஆதலினல் நாசமுமின்றமே - முத்திநிலைகூடாத பெத்தர்களை அடைந்துநிற்கும். ஆதலால் நித்தப்பொருளுமாகும்.

குறிப்பு. 1. நெல்லினுக்குத் தவிடுமிகள்.........துசளற்றவரிசியின்பாலில்லை:-தவிடுமிமுளைகள் நெல்லுக்கு அநாதியென்று கூறியிருப்பவும் அவை நெல்லைவிட்டு நீங்கியிருத்தல் காணப்படுதலால் அநாதியென்பது எவ்வாறே என்பார்க்கு, நெல்லநாதியாயதுபோல் நெல்லின் முளை தவிடுமியுமநாதியாமேயன்றி நெல்லு யாண்டும் நெல்லாகவே நிற்றல் என்பதன்று எனவும், அஃதரிசியாய் மாறியவிடத்து முளைதவிடுமிகள் அகன்று நிற்பினும் அரிசியாகாத நெல்லிலென்றும் உளவாதல் பற்றி அநாதியென்றதுவுமாம் எனக் காட்டியதாம். தவிடுமிகள் என்றதனல் இயைபு பற்றி முளையும் கொண்டதாம். "மும்மலநெல்லினுக்கு முளைதவிடுமிபோல்" என்றமையான் (செ. 176 பார்). நெல்லு - பெத்தான்மாவுக்கும், அரிசி - முத்தான்மாவுக்கும் உவமை.

2. தொக்கிருந்து மற்றெருநெல் தோற்றிடாவாம்: - இரதகுளிகை பரிசித்த செம்பிற் களிம்பு தொக்கிருந்து பின்னெருகாலத்துத் தோற்றிச் செம்பின்றன்மை காட்டல்போல, முத்தான்மாவிடத்து மலந்தோன்றது தொக்குநின்று பின்னெருகாற் தோற்றுமோ என ஐயுறவண்ணம் தீட்டிய அரிசியினிடத்துத் தவிடுமிமுளைகள் அகன்றேபோய்ப் பின்னெருகாலத்துந் தோற்றியதனை நெல்லாக்கமாட்டாதவாறுபோல் மும்மல நீக்கமும் முத்தியிலாகுமெனக் குறித்ததாம்.

3. மெல்லவிவை விடுமெறவே:-மெஞ்ஞானஞ் சேர்ந்தமாத்திரையே மலம் பற்றறக் கழியுமென்பாரையும் ஈண்டு மறுப்பான் இவ்வாறு கூறியதென்பர் சிவஞானமுனிவர்.

4. விட்டே நீங்கும் - அகன்றேவிடும் என்றது. ஏகாரம் தேற்றம்.

5. பெத்தான்மாவை நணுகிநிற்குமாதலினுனுசமுமின்றமே:—பெத்தான்மாவினை நணுகிநிற்றலினுலேயே மலம் அநாதியெனவே, சில ஆன்மாக்கள் நித்திய பெத்தராகவே யிருப்பாரோவெனின், அன்று. ஒவ்வோரான்மாவும் முத்தியடைதற் குரியனவேயாம். பின் எல்லாவான்மாவும் முத்தியடைந்தக்கால் மலம் இல்லாது அந்தமாமே எனின், அன்று. "பிறந்தநாண் மேலும் பிறக்குநாள்போலும், துறந்தோர் துறப்போர் தொகை" என்ற திருவருட்பயனுலும், "விண்டவர்கண் மூலமலம் வீற்றிவேர் மீளார், பண்டைமறைநாடல் படைப்பு நிலைமீறுங், கண்டனவிழந்தவுயிர் காரணனிடத்தே, யுண்டுலவிடாதகிழியுற்றபொருளொத்தே" என்ற சிவதருமோத்தரச் செய்யுளானும் அறியக்கிடக்குமாற்றனே, பெத்தான்மா அநந்தமாய் நிற்குமாதலால் அதனைப்பற்றிய மலநும் அநாதியாதல் காண்க என்றதாம். அன்றியும் "மூத்திதனில் மூன்றுமுதலு மொழியக்கேள், சுத்தவநுபோகத்தைத் துய்த்தலனு—மெத்தவே, இன்பங்கொடுத்தலிறை இத்தைவிளைவித்

தல்மலம், அன்புடனே கண்டுகொள்ளப்பா" என்ற உண்மைவிளக்கச் செய்யுட்படி சிவமுத்திநிலையினும் பேரின்பத்தை யநுபவிக்கு மான்மாவிற்குத் தானநுபவிக்கிறேன் என்னுமுணர்ச்சியைத் தருவது மலமாம், என்றுகொண்டு அம்மலந்தான் பாசபசு ஞானத்தைத் தந்து துன்பவிளைவு செய்தலின்றிப் பரஞானவின்பத்தை யுதவி அருட்சத்தி பதிந்த நிலையிற் செயல் கெட்டே நிற்குமெனக் கொள்வதுமாம். அவ்வாறு கூறினும் "மேவுமலமுடல் கன்மமனாதி விட்டே நீங்கும்" என்றதனோடு முரணுமை காண்க. விரிவு சிவஞானபாடியத்தி லத்துவிதங் கூறியவழிக் கண்டுகொள்க. (சி. ஞா. பா. 354 பக்).

பொழிப்பு. நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதியாயிருந்தும் அரிசியிலவை யறவே நீங்கியிருத்தல்போலச் சிவமுத்திநிலையிலும் மலமாயை கன்மங்கள் ஆன்மாவைவிட்டே நீங்கிநிற்கும். அவ்வாறாயினும் பெத்தான்மாக்களநந்தமாயிருத்தலின் அவற்றைப் பொருந்தியிருக்கும் மலமும் அநாதியேயாம்.

## இரண்டாமதிகரணம்.

காட்டக் கண்டிடுந்தன்மையுடையகண்ணுக் கேயுமுயிர்காட்டிக் கண்டிடுமோபோல ஈசனுயிர்க்குக் காட்டி இத்தைக் கண்டிடுவன். (காரண) ஆன்மா அரன் மலரடிக்கீழிருப்பன் மாறதசிவாநுபவமநுவிக்கேயண்டே என்பது இரண்டாங்கூறு. (316-321). இக்கூற்றானே மேற் பரமுத்தியடையுமென்ற ஆன்மா அந்நிலையில் முதல்வனோடு அத்துவிதக் கலப்பிற் சிவாநுபூதியின்பந்துய்க்குமாறு விளக்கவுற்று அத்துவிதப் பரமுத்தியியல்பும் உண்மையும் தடைவிடைகளாற் சாதித்துச் சுத்தாத்துவிதப் பரமுத்திப் பெருமை கூறப்படுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. அத்துவிதப்பரமுத்தி யியல்பு, (316).
2. அத்துவிதப் பரமுத்தி யுண்மை, (317).
3. அவிகாரவாதி பரிணாமவாதி ஐக்கியவாதிகள் கூறும் அத்துவித முத்திநிலை மறுப்பு, (318).
4. சுத்தசைவவாதி கூறும் அத்துவிதமுத்திநிலை மறுப்பு, (319).
5. சிவசமவாதி கூறும் அத்துவிதமுத்திநிலை மறுப்பு, (320).
6. சுத்தாத்துவிதப் பரமுத்திநிலை, (சித்தாந்தம்) (321).

### 1. அத்துவிதப்பரமுத்தி யியல்பு.

**316** எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை
யறிந்தியற்றி டாவுயிர்க ளீசன் றானுஞ்

செவ்விதினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்ரு
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர்போ னின்றிடுவ னுத லானும்
அரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே.

(இ - ள்). உயிர்கள் எவ்விடத்தும் இறை அடியை இன்றி ஒன்றை அமைந்து அறிந்து இயற்றிடா - ஆன்மாக்கள் (பெத்த நிலையில்) யாண்டும் முதல்வனது திருவடியாகிய அருளையின்றி ஒருவிடயத்தையும் பற்றி அறிந்து அநுபவியா,—ஈசன் தானும் செவ்விதினின் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து சேட்டிப்பித்து எங்குமாய்ச் செறிந்து நிற்பன் - (முத்தநிலையில்) முதல்வனே ஆன்மாவினுள்ளே அத்துவிதமாக நின்று வினைகளைப்பற்றியும் அறிந்தும் அநுபவப்படுத்தியும் சராசரமெல்லாவற்றினும் செறிந்து நிற்பன்,—இவ்வுயிர்கள் தோற்றும்போது அவனையின்றித் தோற்ரு - பெத்தான்மாக்கள் ஒடுங்கி மீளத் தோன்றும்பொழுது முதல்வனையின்றித் தோன்ருவாம், அஃதெவ்வாறெனில்,—அம் முதலெழுத்துக்கு எல்லாமாய் நிற்கும் அ உயிர்போல் இவற்றினுக்கு நின்றிடுவன் - அகரத்தை முதற்கொண்டுள்ள எழுத்துக்களுக்கெல்லாம் இன்றியமையாது வேண்டப்படும் அகரவுயிர்போல ஆன்மாக்களுக்கும் இன்றியமையாது முதல்வன் வேண்டப்படும்,—ஆதலால் நாம் அரன் அடியை அகன்று நிற்பது எங்கேயாம் - ஆதலால் நாம முதல்வனது திருவடியை அகன்று நிற்றல் பெத்தம் முத்தம் ஆகிய எவ்விடத்தும் இல்லை.

குறிப்பு. 1. எவ்விடத்து மிறையடியை யின்றி யமைந்தொன்றை யறிந்தியற்றிடாவுயிர்கள் என்றது உயிர்கள் பாசபசு ஞானங்கள் கொண்டு பற்றி யறிந்து அநுபவிக்கும் விடய போகத்தைக் குறித்தது. இது பெத்த நிலையில் உயிர்கட்குண்டாகும் இச்சைஞானக் கிரியைகளில் இறைவன் சாட்ட உயிர் கண்டிருத்தலாகிய முறைமையைக் காட்டியதாகும். அமைத்தல் - பற்றுதல், இச்சை; அறிதல் - அறிவு, ஞானம்; இயற்றல் - அநுபவித்தல், கிரியை.

2. ஈசன்ருனும் செவ்விதினினுளம் புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித்தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்:—உயிர்களுக்கு மெஞ்ஞானங் கூடியவழி, இறைவனே அவற்றினுண்ணின்றும் செய்வித்தும் செய்கின்றுனுமாய் நிற்றலின், ஆண்டு இறைவனது இச்சாஞானக் கிரியைகளே நிகழ, ஆன்மா இறைவனுல அதிட்டிக்கப்பட்டு நிற்கும் என்றதாம். இஃது அபரபரசிவன்முத்த நிலைகளில் அணிமைஞய் எகனுகி யரன்பணியினிற்கு மான்மாக்களுக்கு அந்நிலையில் இறைவனே காட்டிக் கண்டிடுவானுய் நிற்கு மத்,

துவித நிலையை விளக்கியதாம். செவ்விதினில் - நேரே (செ. 305.) உளம் புகுந்து - ஆன்மாவினுள்ளே நின்று (செ. 301, 307.)

3. அம்முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு மவ்வுயிர்போ ளின்றிறைவன்:—அகரத்தைத் தலையாய்க் கொண்டுள்ள உயிருமுடம்புமாய முதலெழுத்துக்களுக்கும் ஏனைச் சார்பெழுத்துக்களுக்குமெல்லாம் அவற்றின் தோற்ற இயக்கங்கட்கு இன்றியமையாது வேண்டப்படும் அங்காப் போசையாய்த் தானே தனித்தியங்குவதுமாய அகரவுயிர்போல, முதல்வனும் சராசர பேதங்கட்கெல்லாம் அவற்றின் தோற்ற இயக்கங்கட்கின்றியமையாது வேண்டப்பட்டுப் பிரிந்தும் ஒற்றித்தும் உடனுயும் நின்றியங்குவன் என்றதாம். "அக்கரங்கடோறுஞ் சென்றிடு மகரம் போல நின்றனன் சிவனுமெங்கும்" (செ. 92 பார்.) "அகரமுதலவெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு" என்ற திருவள்ளுவர் குறளும் பரிமேலழகியாருரையும், "மெய்யினியக்க மகரமொடு சிவணும், மெய்யோ டியையினு முயிரியநிரியா" என்ற தொல்காப்பியச் சூத்திரமும் நச்சினார்க்கினியர் உரையும் நோக்கற்பாலன.

4. யாம் அரனடியை அகன்று நிற்ப தெங்கேயாம்:—பெத்த முத்தமாகிய இரு நிலையினும் முறையே திருவருள் காட்டக் காண்போராயும் இறைவனே காட்டிக் கண்டிடத் தஞ் செயலற்றுத் தாமுமற்று நிற்போராயும் இருத்தலின், இவ்விரு நிலையினும் உயிர்கள் முதல்வனை யகன்று நின்றியங்குதல் இல்லை யென்றதாம். இங்ஙனே பதி பசுக்களது சுத்தாத்துவிதக்கலப்பு விளக்கியதாம். இதனைப் பெத்தான்மாக்களை மாத்திரம் குறித்ததெனக் கொண்டு சுத்தாத்துவிதத்தைப் பிழை படுத்தி விளக்கி முத்திநிலையிற் "சிவசமவாதிசொல்லும் சாமியத்திற்கு வேறாய்ச் சித்தாந்தி சொல்லும் சிவாத்து வைத சாமியம் சிவனே சொல்லியது" என ஆகமத்துக் காட்டெடுத்து இயைபு நோக்காது கூறி யொருவகையான சிவசமவாதங் கற்பிப்பர் ஞானப்பிரகாசர். இவர் கொள்கையை நன்காராய்ந்து மறுத்துப் போந்து, அத்துவித மென்னும் சொல்லின் அகரத்திற்கு இன்மைப் பொருள் கொண்ட சங்கரர், மாயாவாதியராம் கேவலாத்து விதிகளையும், அன்மைப் பொருள் கொண்ட இராமாநுசர், சிவாத்துவித சைவர் முதலாய விசிட்டாத்து விதிகளையும், மறுதலைப் பொருள் கொண்ட மத்துவர் பேதவாதியராகிய துவிதிகளையும் அவ்வவர் நிரையிற் காட்டியடக்கிப் போந்து "அது நீயாகின்றாய்" "அது நானாகின்றேன்" "அது அதுவாகின்றது" என்னும் மகாவாக்கியமூன்றும் "அது என்பது ஒருபொருள். நீ என்பது ஒருபொருள். ஒருபொருள் மற்றொரு பொருளாமாறு யாங்ஙனம் என்னும் ஐயம் நீக்குதற்கு எழுந்தனவாகலின, இது அது வாதற் கேதுவாய் அவ்விரண்டற்கு முளதாய சம்பந்தவிசேட முணர்த்தலே அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருள்" என உணர்த்திச் "சுத்தாத்துவிதம் ஏனையோர் கூறும் அத்துவிதம்போலக் கேவலமென்றாதல் விசிட்டமென்றாதல் மறுதலையென்றாதல் யாதானு மொன்றான் விசேடிக்கப்பட்டு நின்று பொருளுணர்த்தாது சுத்தமாய் நின்றே

பொருளுணர்த்துவதாம்'' என்று சால நீள விரித்து விளக்கியுள்ளார் மாதவச் சிவஞான யோகியர் (சி. ஞா. பா. 311 - 332). அன்றியும் பெத்தநிலையிலத்துவிதம் இரண்டாஞ்சூத்திரத்து ''உலகெலாமாகி'' என வெடுத்துக் காட்டியதையே ஈண்டுக்காட்டல் கூறியது கூறலாமென்பதுங் கொண்டு இங்கே பெத்தத்திற் போலவே முத்திநிலையினும் அத்துவிதமாமாறு காட்டியதாம் எனக் கொள்க.

பொழிப்பு. உயிர்கள் பெத்தநிலையி லிறைவனருளால் விடயத்தைப் பற்றியறிந்தநுபவித்தலானும், முத்திநிலையிலிறைவனோடே அத்துவிதமாகக் கலந்து அவனே தம்மை அதிட்டித்துப் பற்றி யறிந்து அநுபவ நிகழ்த்த நின்றமையானும், எழுத்துக்களெங்குஞ் செறிந்து நின்றியங்கும் அகரவுயிர் போல் முதல்வன் நின்றியக்க அவன் திருவடியை யிருநிலையினும் அகலாதே நிற்கும்.

## 2. அத்துவிதப் பரமுத்தியுண்மை.

317. எங்குந்தா னிறைந்துசிவ னின்றா னாகில்
எல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னில்
இங்குந்தா னந்தகருக் கிரவியிரு ளாகும்
ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்
பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதியலர்த் திடுவதுபோற் பருவஞ்சே ருயிர்க்குத்
துங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

(இ - ள்.) சிவன் எங்குந்தான் நிறைந்து நின்றானாகில் - முதல்வன் எவ்விடத்துமே கலந்து பிரிப்பற நிற்பானாகில்,—எல்லாருங் காணவே வேண்டும் தான் என்னில் - அத்தன்மையை யெல்லாரு மறிந்து முத்தியின்ப மநுபவிக்க வேண்டுமே என்னில் (அன்று),—இங்குந்தான் இரவி அந்தகருக்கு இருளாகும் - இவ்வுலகிலேயே இரவி ஒளியாயிருந்தும் காணுங்கண்ணில்லாக் குருடர்க்கு இருளாகவே தோன்றும். அதுபோல்.—ஈசன் ஒளியாயே அருட்கண்ணில்லார்க்கு இருளாம் - முதல்வன் ஞானவுருக்கனாயிருந்தும் அருட்கண் பெறாதோர்க்கு அறியவரான்,—பங்கந்தான் எழும்பதுமம் பக்குவத்தையடையப் பரிதி அலர்த்திடுவது போல் - சேற்றிலே தோற்றிய தாமரை பக்குவ மடைந்த விடத்து அதனை ஆதித்தன் அலரச் செய்வது போல,—பருவஞ் சேர் உயிர்க்கு - மலபரிபாக பக்குவமடைந்த உயிர்களுக்கு,—துங்க அரன் அருளினாலே ஞானக்கண்கொடுத்து - மாட்சிமையையுடைய முதல்வன் கருணையினாலே ஞானக்கண்ணைக் கொடுத்து,—சோதிக்குள் சோதியாய் தோன்றிடுவன் - அறிவினுளறிவாய் நின்று பிரகாசிப்பன். அதனால் எல்லாருமநுபவிக்காமையின் அத்துவிதப் பரமுத்தி யுண்மைக் கிழுக்கின்றாம்.

குறிப்பு. 1. எங்குந்தான்......என்னி லிங்குந்தான்...... இருளாம்:— பெத்தமுத்தியிரண்டினும் முதல்வன் உயிர்களோடு அத்துவிதமாகக் கலந்து நிற்பன் என்னில், யாவரும் ஒருங்கே ஒரேகாலத்து அவ்வுண்மையைத் தெரிந்து முத்தராகா திருத்த லென்னோ என வினவினோர்க்குக், காட்சியளவைப் பிரமாணத்தானே, காணுங் கண்ணில்லார்க்கு இரவி யிருப்பவும் உலகமிருளேயாகத் தோன்றல் போலப் பக்குவ மில்லார்க் கிவ்வுண்மை தெரிய வாராமையான் அது கூடாதெனக் காட்டியதாம். உம், தான், ஏ என்னுமிடைச் சொற்கள் தேற்றப் பொருள் பயந்தன. அந்தகர்-காணுந்தன்மை யில்லாக் கண்ணுள்ளோர் (செ. 310. கு. 3. பார்).

2. பங்கஞ்சா னெழும்பதுமம்......ஞானக்கண்கொடுத்து:—தாமரைகள் சேற்றினின் றெழுந்தன பல விருப்பினும், பக்குவ நோக்கியே கதிரவனவற்றை யலர்த்துதல்போல, அவிச்சையினெழுந்த உயிர்கள் அநந்த மிருப்பினும் இருமலமொப்பு மலபரிபாக சத்திநிபாத நோக்கியே இறைவன் சிவஞானமுதிப்பித்து வீடுபேறளிப்பன் என்றது. இதனானே இறைவன் விகாரியாவானல்லன் என்பதுவும் காண்க. (செ. 53. பார்.) பெத்த நிலையிலறிவித் துபகரித்தற்கு மிவ்வுதாரணமே காட்டியதாம். (செ. 232. பார்).

3. சோதிக்குட் சோதியாய்த் தோன்றிவென்:—இவ்வடி 8-ம் சூத்திரத்து 290-ம் செய்யுளீற்றடியேயா யிருத்தலினாலும் இச் செய்யுளின் மற்றைய அடிகளிலும் பல மொழிகள் ஒத்திருத்தலினாலும் கூறியது கூறலாகாதோ எனின், அன்று; அங்கு பெத்தநிலையினர் முத்தி வேண்டிச் சாதனைகள் செய்ய வேண்டும் என்பதனை இறைவன் வியாபகத்தை யிட்டெழுந்த தடைவிடைகளாற் சாதித்து வலியுறுத்தி, இங்கு முத்தி நிலையாந்தன்மையை அத்துவிதத்தினிலெழுந்த தடைவிடைகளாற் சாதித்து வலியுறுத்தியதாம் என்க. ஆயினும் இறுதியில் இரண்டிடத்தினும் பரமுத்தியில் இறைவன் திருவருளே கூடுமொறு விளக்க வேண்டிற்றாகலான் ஈற்றடிகள் ஒன்றாயமைந்தவாறுமாம்.

பொழிப்பு. பெத்தமுத்தி யிரண்டினும் அத்துவிதம் உண்மையாமாயின், உயிர்களெல்லாம் ஒரேகாலத்து முத்தராகாதது என்னையெனின், முதல்வன் பக்குவ நோக்கித் தாமரையை யலர்த்தும் அருக்கனே போலக் காணுங் கண்ணுள்ளார்க்கே காட்டி நின்றருளுவன். அதனால் அத்துவித வுண்மைக் கிழுக்கின்றாம்.

3. அவிகாரவாதி பரிணாமவாதி ஐக்கியவாதிகள் கூறும் முத்தி நிலை மறுப்பு.

**318.** சென்றணையு நிழல்போலச் சிவனிற்ப னென்னிற்
சென்றணையு மவன்முதலி சிவத்தையணுந் தொன்றாய்

நின்றதுயிர் கெட்டதெனிற் கெட்டதணை வின்று
நின்றதேற் கேடில்லை யணைந்துகெட்ட தென்னிற்
பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகனீ
பொன்றுகையே முத்தியெனிற் புருடனித்த னன்றும்
ஒன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போ லென்னி
னொருபொருளா மதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே.

(இ - ள்.) சென்று அணையும் நிழல் போல சிவன் நிற்பன் என்னில்- வேனிலான் வருந்தினோர் சென்று அணைவதாகிய மரநிழலைப் போலப் பக்குவான்மாக்கள் சென்று தம்மை அணைய முதல்வன் விகாரமின்றி நிற்பன் என்னில்,—சென்று அணையும் அவன் முதலி - மரநிழலுக்குச் சுதந்தரமிலதாக அணைந்தோர்க்கே சுதந்தர மிருந்தவாபோல முதல்வன் சுதந்தரனாகாது உயிரே சுதந்தரனாகும். ஆதலின் நிழலை யணைந்த பதிதன் போல உயிர் முதல்வனையடைந்து நிற்றலே முத்தி யென்பது பொருந்தாது;—உயிர்கெட்டு சிவத்தையணைந்து ஒன்றாய் நின்றது என்னின் - உயிர்கெட்டே சிவத்தோடணைந்து ஒன்று பட்டு நிற்கும் என்னில்,—கெட்டது அணைவு இன்றாம் - கெட்டபின் ஒன்று பிறிதினை யணையுமாறு செல்லாது,—நின்றதேல் கேடு இல்லை - அவ்வாறணையுங்காற் கெட்டும் பின்னிற்கும் என்னில் கெட்டதென்பது இல்லையாம்,—அணைந்து கெட்டது என்னில் - அணையும் வரையும் நின்று பின்னே கெட்டது என்னில்,—பொன்றினதேன் - அவ்வாறு பின் கெடவேண்டிய காரணம் யாது,—முத்தியினைப் பெற்றவரார் - முத்தியின்பத்தைப் பெற்றது யாது,—புகல்நீ - இவ்வாறு கெட்டணைதற்கியல்பாகிய மூவகையானும் வருங்கடாக்களுக்கு விடை கூறுதி,—பொன்றுகையே முத்தி எனில் - உயிர் கெட்டழிந்தது தானே முத்தியாகு மென்னில்,—புருடன் நித்தம் அன்றாம் - உயிர் நித்தப் பொருள் என்னும் உண்மை பொய்த்து விடும்; ஆதலால் உயிர் கெட்டுச் சிவத்தை அணையும் என்பது பொருந்தாது.—நீரொடு நீர் சேர்ந்தாற் போல் ஒன்றியிடும் என்னில் - நீரொடு நீர் சேருமாப்போல உயிர்முதல்வனோ டைக்கிய மாகும் என்னில்,—ஒருபொருளாம் - அவ்வாறு இரண்டாய் நின்று சேர்ந்த நீர் பொருண்மாத்திரையானொன்றேயாம்,—அதிபதியோடு உயிர் பொருள் ஒன்று அன்றே - அவ்வாறு முதல்வனோடு உயிரும் ஒரு தன்மைத்தாய பொருளல்லவே. ஆதலின் நீரொடு நீர் போலைக்கிய மாவது முத்தியா மெனல் பொருந்தாது.

குறிப்பு. 1. சென்றணையு நிழல்......முதலி:—ஈசுவர அவிகாரவாதியர் "பூமி வெம்மை பொருந்தாதுயர்ந்த, நீழல் வாழு நினைவினர் போலத் திருவடி நீழல் சேர்ந்து, கரவுறு துயரங் களைந்து" உயிரானது முதல்வனிற் பிரிப்பின்றி நிற்றலே அத்துவித முத்தி யெனக் கூறுவர். அவ்வாறாயின் நீழலணைந்தோர் சேதனமாய்ச் சுதந்தரராக, நீழல் அசேதனமாய்ச்

சுதந்தர மிலதாமாறுபோல் உயிர் சுதந்தரனாக முதல்வன் சுதந்தர மிலனாதல் வேண்டும். அது அகச்சமயத்தார் யார்க்கும் ஒவ்வாததாகலின், இவர் கூற்றுப் பொருந்தாதெனக் காட்டி மறுத்தது. (சங் - நிரா. 15 - 16.) முதலி - முதல்வன், சுதந்தரன்.

2. சிவத்தை யணைந் தொன்றாய் நின்ற துயிர் கெட்ட தெனிற்...... புருடனித்தனன்றாம்:—உயிர் தன்னியல் கெட்டு முதல்வனோடணைந்து நிற்பதுவே முத்திநிலையென்பர் சிவசங்கிராந்தவாதி சிவசமவாதசைவன் முதலிய வாதியர். இக்கூற்றிற் கெட்டணைவது என்பதனை நால்வகையானெடுத்து ஆங்காங்கு மறுத்தவாறு. கெட்டபின் அணைந்தொன்றாம் என்னும் சங்கிராந்த வாதிக்குக் கெட்டணைவதென்பது பொருந்தா தெனவும், கெட்டு அணைந்து பின்னிற்கும் என்னும் பரிணாமவாதிக்குப் பின் நிற்குமாயின் முன் கெட்ட தென்பது பொருந்தாதெனவும், அணைந்தபின் கெடும் என்னின் அணைந்தது பின் கெடுதற்கு வேண்டும் புதுக்காரணம் ஒன்றுளதாம்; அன்றியும் முத்தியினை அநுபவிப்பது தான் ஒன்றுமேயில்லையாய் ஏகப்பிரமவாதம் ஆகி அதுவும் பொருந்தாது எனவும், மேலும் உயிர் கெடுவதே முத்திநிலையாமாயின் இவரெல்லார்க்கு மொப்புடைத்தாய உயிரினது நித்தத்தன்மை பொய்க்கு மெனவுங் காட்டிமறுத்ததாம். அணைந்து கெட்டதென்னிற் பொன்றினதேன்—அணையுமட்டுங் கெடாதிருந்தும் பின் கெட்டதெனில் அதற்கோர் புதுக்காரணம் வேண்டும் என்பது. (சங் - நிரா. 13. 14, 11. 12, 19. 20.)

3. ஒன்றியிடு நீரொடு நீர்......உயிர் பொருளொன்றன்றே:—ஐக்கிய வாதியர் நீரு நீருஞ் சேருந் தகைமையி னறிவினோடறிவு செறிவுறப் பொருந்தி ஒன்று நிற்பதே முத்தியென்பர். அவ்வாறாயின் அணைவின் முன்னும் பின்னும் ஒரு தன்மைத்தாயிருக்கும் நீரேபோல் உயிரும் முதல்வனும் என்றும் ஒருதன்மைத்தாயிருக்க வேண்டுமாதலின் அவர் கூற்றுப் பொருந்தாதெனக் காட்டி மறுத்ததாம். (சங் - நிரா. 5-6.) நீரொடு நீர் சேர்ந்தாப்போல் என்பதற்குச் "சிற்றேரியுடைய வந்தநீர் பேரேரி நீரோடே கூடினாற்போல" எனக்காட்டி முன் 8-ஞ் சூத்திரத்து "முன்னிறை நீர் சிறைமுறிய முடுகியோடி முன்னீர் சேர்ந்தன்னீராய்ப் பின்னீங்கா முறைபோல்" என்றதோடு மாறுபடாத முறைமை காட்டவுற்று "அது ஏகதேசியாய்க் கிஞ்சிஞ்ஞனுமாயிருந்த ஆன்மா ஆணவாதி பாசங்கணீங்கச் சிவத்துடன் கலந்து சர்வவியாபித்துவ சர்வஞ்ஞத்துவம் பெற்றுத் தத் சமாசம் ஆவதற்குச் சொன்ன திருட்டாந்தம்" என விளக்கி விரித்துள்ளார் சிவாக்கிர யோகியர். ஒரு பொருளாம்...ஒன்றன்றே என மறுத்தமையான் அதுவே ஆசிரியர் கருத்தாதலும் காண்க.

பொழிப்பு. முதல்வன் மரநீழல் போல் விகாரமின்றி நிற்ப உயிர் அவனைச் சென்றணைந்து இன்புறுவதே முத்தி யென்பார் கூற்றும், உயிர் கெட்டு முதல்வனை அணைவதும் கெட்டணைந்து நிற்பதும் அணைந்து கெடுவ

தும் முத்தியென்பார் கூற்றும், நீருடன் நீர் கலக்குமாபோல ஐக்கியமா தலே முத்தியென்பார் கூற்றும் பொருந்தாது.

4. பேதவாதி சிவசமவாதி கூறும் அத்துவித முத்திநிலை மறுப்பு.

319. செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்
நற்குளிகை போலவர னணுகுமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கும்
அக்குளிகை தானும்பொன் னாகா தாகும்
உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே.

(இ - ள்.) செம்பு இரத குளிகையினால் களிம்பு அற்று பொன் னாய்ச் செம்பொன்னுடன் சேரும் - செம்பு இரதக்குளிகையினாற் களிம்பு நீங்கிய விடத்துப் பொன்னாகிச் செம்பொன்னோடொத்து ஒன்றுதல் போல,—மலம் சிதைந்தால் சீவன் நம்பனுடன் கூடும் எனின் - ஆணவாதி மலமாசு நீங்கிய விடத்து உயிரும் முதல்வனோடொத்து ஒன்றுகும் என் னில்,—பொன்போல் அல்லன் - செம்பினுக்கு ஒரு தொழிலுஞ் செய்யாது நிற்கும் பொன்போலன்றி,—அரன் நற்குளிகைபோல நணுகும் மலம் போக்கி அம்பொன் அடிக்கீழ் வைப்பன் - முதல்வன் இரதகுளிகைபோல் நின்று உயிருக்கியல்பாயுள்ள மலமாசை நீக்கி மாசற்ற பொன்னாகிய தமது திருவடிப் பரமுத்தியைத் தருவன்,—அரும் களங்கம் அறுக்கும் அக்குளிகை தானும் பொன் ஆகாதாகும் - அவ்வாறு செம்பின் களிம்பை நீக்கிய குளி கைதான் பொன்னாகாதவாறுபோல உயிரது மலமாசு நீக்கும் இறைவன் பரமுத்தி யநுபவிப்பவனுமாகான்,—உம்பர் பிரான் உற்பத்தி ஆதிகளுக் குரியன் - ஆகவே தேவாதிதேவனாகும் முதல்வன் சிருட்டியாதி தொழில் களைச் செய்து உயிர்களின் மலத்தை நீக்கும் அதிகாரமுடையன் ஆவன்,— உயிர் தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கும் உரித்தே - முத்தி நிலையின் முதல் வனோடு அத்துவிதமாய்க் கலந்த உயிருமே சிவாநுபவமாய முத்தியின்பத் தைத் துய்த்திருக்கும் அதிகாரம் ஒன்றற்கே யுரித்தாம், ஆகவே செம்பு பொன்னாய்ச் செம்பொன்னுடன் சேர்வதுபோல் உயிரும் முதல்வனோடு சேர்ந்திருப்பது முத்தியா மெனல் பொருந்தாது.

குறிப்பு. இதனானே களிம்பு நீங்கின செம்பு பொன்னேயாய்ப் பொன்னோடொத்திருத்தல்போல இறைவனோடு சேர்ந்த உயிர் இறைவன் போலவே முத்தியினிருக்கும் என்னும் பேதவாதியரையும், இறைவனது பஞ்சகிருத்தியத்திலும் உடனாய் நின்று சமத்துவ மடைந்திருக்கு மென்னும் சிவசமவாதியரையும் மறுத்ததாம். (சங் - நிரா. 9. 10 - 11. 12.) இவர்

கூற்றை மறுத்தவாறு:—செம்பு உயிருக்கு உவமையாதல் ஒக்குமெனினும், பொன்னே நிற்கும் பொன் முதல்வனுக்குவமையன்று. முதல்வன் களிம்பை யகற்றும் இரதக்குளிகைக் கொப்பாவன். பொன்றானே முதல்வனது திருவடி நீழலாம் பரமுத்திக் கொப்பாகும். ஆகவே முதல்வனாகிய குளிகையின் பரிசமாகிய திருவருளிற் பட்டு மலக்களிம்பு நீங்கிய உயிராகிய செம்பு பரமுத்தியாகிய பொன்னை அணைவதாமன்றிப் பொன்போற் றனித்து நிற்பதன்றாமெனக் காட்டிப் பேதவாதியையும்; செம்பிற் களிம்பை நீக்கிய குளிகைதானே பொன்னாகாது பின்னுங் களிம்பு நீக்குந் தன்மையோடே யிருத்தல் போல முதல்வனும் தான் முத்தியின்பந் துய்ப்பதின்றிப் பல்லுயிர்க்காகவும் பஞ்சகிருத்தியஞ் செய்து நிற்பானாக, மலாடி சேர்ந்த உயிர்தானே பரமுத்தியின்பந்திளைத்து இறைவன் றொழிலிற் கலவாது நிற்பதே அத்துவித நிலை யென்வும் காட்டிச் சிவசமவாதியை மறுத்ததுமாம். இதனையே மேல் 314-ம் செய்யுளிலும் ஆணவ நீக்கத்திற் குவமையாக் காட்டிப் பேதவாதியை மறுத்து இரதக்குளிகைப் பரிச மிருப்பினே செம்பிற் களிம்பு அகன்று நிற்பதன்றி இரதக் குளிகைப் பரிச நீங்கிய செம்பு பொன்னாதல் இயையாதென்றதும் நோக்குக. அம்பொனடி - இருபெயரொட்டுப் பண்புத்தொகை, அம்பொன்னாகிய அடியென விரியும். உரியனென முதல்வனது சுதந்தர சேதனத்தையும், உரித்தேயென உயிரினது பரதந்திர அசேதனத்தையும் இணைவேற்றுமை கொண்டு காட்டியதாம். உம்மிடைச்சொல் முற்றுப் பொருளில் வந்தது. சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்தே எனவும் பாடம் (சி. ஞா. பா. 441).

பொழிப்பு. செம்பானது களிம்பு நீங்கிய விடத்துப் பொன்னேயாகிச் செம்பொன்னோடு ஒத்திருக்குமாபோல் மலநீங்கியவிடத்து உயிர் முதல்வனோடொத்துச் சேர்ந்திருத்தலே முத்தி யென்பார் கூற்றும் பொருந்தாது.

5. அருவ சிவசமவாதி கூறும் அத்துவித முத்திநிலை மறுப்பு.

320. சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னிற்
சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்
அவன்றானே யறியுஞ்சித் தாதலினா லிரண்டும்
அணைந்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கும்
இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி
இதுவசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே.

(இ - ள்.) சிவன் சீவன் என்ற இரண்டும் சித்து - முதல்வன், உயிர் என்று கூறப்படும் இருபொருளும் சித்துப் பொருளாதலின்,—ஒன்றுமென்

னின் - எவ்வகையானும் இரண்டும் முத்தியிற் கலந்தபின் ஒரு திறத்தவாய் ஒன்றுமே என்னில்,—சிவன் அருட்சித்து இவன் அருளைச் சேருஞ் சித்து - முதல்வன் அருளாகிய சித்தாம். உயிரோ அவ்வருளைச் சேர்வதாகிய சித்தாம்,—அவன் தான் பவம் கேடு புத்தி முத்தி பண்ணும் சித்து (இவன்) அவற்றிற் படியும் சித்து - முதல்வன் பிறப்பு இறப்பு போகம் மோட்சம் அளிப்பதாகிய சித்தாம். உயிர் இவற்றி னெல்லாம் அழுந்துவதாகிய சித்தாம்,—அவன் தானே அறியும் சித்து இவன்தான் அறிவிக்கப்படும் சித்து - முதல்வன் தானாக அறியுஞ் சித்தாம். உயிர் அறிவிக்க அறியுஞ் சித்தாம்,—ஆதலினால் இரண்டும் அணைந்தாலும் ஒன்றாகாது அநந்நியமாய் இருக்கும் - ஆதலால் அவ்விரு பொருளும் தம்முட் கூடிய வழியும் ஒன்றாகாது அத்துவிதமாய் நிற்கும்,—இவன்தானும் புத்தியுஞ் சித்து - உயிரும் புத்தி தத்துவ மும் சித்தெனப் படினும்,—புத்தி இவனுமே - புத்தித்துவமே உயிராதல் செல்லுமோ,—இது அசித்தென்றிடில் - உயிரைநோக்கப் புத்திதத்துவம் அசித்தாமென்னில்,—அவனுக்கு இவனும் அசித்தாமே - முதல்வனை நோக்க உயிரும் அசித்தேயாய் விடும். ஆதலால் உயிர் முத்தியில் முதல்வ னோடொத்து ஒன்றாய் நிற்கு மெனலும் பொருந்தாது.

குறிப்பு. 1. இதுவும் ஐக்கியவாதி சிவசமவாதிகளை மறுத்ததாம். முதல்வனு முயிருஞ் சித்தேயாதலின் முத்தியினொன்றாதலும் ஒரு தன்மைத்தாய் வேறு நிற்றலும் பெறப்படுமே யென்னும் இவர்கள் கூற்றை இரண்டனது சித்துத்தன்மையும் விளக்கி மறுத்தவாறு, முதல்வன் அருட்சித்தாய்ப் பண்ணும் சித்தாய் அறியுஞ் சித்தாய் நிற்ப, உயிர் அருள் பெறுஞ் சித்தாய் அழுந்துஞ் சித்தாய் அறிவிக்கப் படுஞ் சித்தாய் நிற்றலின், முதல்வ னது ஞானக் கிரியாவிச்சைகள் சுதந்தரமாகியிருப்ப உயிரினது ஞானக் கிரியா விச்சைகள் முதல்வன் கீழ்ப் பரதந்திரப் பட்டிருத்தலின் ஒன்றுதல் கூடாது எனக் காட்டியதாம்.

2. ஒன்றாகா தநந்நியமாயிருக்கும்:—ஒன்றாகாது அத்துவிதமாயிருக்கும் என்றது. வருஞ் செய்யுளில் இது விளக்கியது காண்க.

3. இவன்றானும் புத்தியுஞ் சித்து......இவனும் அசித்தாமே:—உயிரும் சித்தாகப் புத்திதத்துவமும் சித்தாக, இரண்டு மொன்றுதல் அகச்சமயத்தவர் யாவர்க்கு மொவ்வாது. அஃதேபோல் உயிரும் முதல்வனும் சித்தேயாமாயினும் ஒன்றுதல் பொருந்தா தென்றதாம். அதுவும் கீழதைநோக்க மேலது சேதனமாயும் கீழது அசேதனமாயும் நிற்கு முறைமையானும் என்றது.

4. பவங் கேடு புத்திமுத்தி - தோற்றம் ஒடுக்கம் போகம் மோட்சம் ஆகிய இருமைவினைகளை இயற்றுதல். பவம் - உற்பவம் (செ. 278,304).

பொழிப்பு. சிவனும் சீவனும் சித்துப்பொருளேயா மாதலின் ஒன்றுதல் கூடுமெனக் கொண்டு இரண்டுந் தம்முள் ஒத்து ஒன்றுதலே முத்தி யென்பார் கூற்றும் பொருந்தாது.

௬. சுத்தாத்துவிதப் பரமுத்தி நிலை, (சித்தாந்தம்).

321. இரும்பைக்காந் தம்வலித்தாப் போலியைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
அறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே.

(இ - ள்.) காந்தம் இரும்பை வலித்தாற்போல் அங்கு உயிரை இயைந்து - காந்தம் இரும்பினைத் தன்னகத்திழுத்து அதனோடு இயைந்து நிற்றல் போல உயிரினையும் தன்னகத்து வலித்து அதனோடு இயைந்து நின்றும்,—எரி இரும்பைச் செய்வதுபோல் இவனைத்தான் ஆக்கி - தீயானது தன்கண்ணடைந்த இரும்பைத் தன்வண்ணமாக்கி நிற்றல்போல உயிரினைத் தன்வண்ணமாக்கி நின்றும்,—அனல் அரும்பித்து இந்தனத்தை யழிப்பதுபோல் மலத்தை யறுத்து - நெருப்பானது விறகினுட் சூக்குமமாயிருந்த தீயினை வெளிப்படுத்தி விறகாந் தன்மையை யழித்துத் தானேயாக்கி நிற்றல்போல உயிரினது மலத்தை நீக்கித் தானேயாக்கி நின்றும்,—அப்பு அணைந்த உப்பேபோல் அணைந்து - நீரொடு கலந்த உப்பினைப் போலத் தன்வியாபகத்துட்படக் கலப்பித்து நின்றும்,—பொன்னினைக் குளிகை ஒளிப்பதுபோல் விரும்பி அடக்கி - களிம்பு நீங்கிப் பொன்னாகிய செம்பினை இரதக்குளிகை மறைத்து நிற்றல்போல உயிர்களது மலமாசை விருப்பினாலே செயலற அடக்கி நின்றும்,—மேளித்து தான் எல்லாம் வேதிப்பானாகி - மூலிவகையைக் கூட்டி ஒரு லோகத்தைப் பிறிதொன்றாக்கி நிற்கும் இரசவாதிபோல உயிரையும் சிவசமமாக மாற்றி நின்றும்,—கலந்தே - இவ்வாறெல்லா வகையினும் காட்டலாகும் அத்துவித முறையிற் கலந்து நின்று,—அமலன் கரும்பைத் தேனைப்பாலைக் கனி அமுதைக் கண்டைக் கட்டியை ஒத்து இருப்பன் அந்த முத்தியினில் - முதல்வன் கருப்பஞ்சாறு தேன் பால் பழத்திரதம் கற்கண்டு சர்க்கரை யாதிய இவற்றின் சுவைபோன்ற சிவானுபூதிப் பேரின்பத்தை யுதவிப் பரமுத்தியிலுயிரோடியைந்து நிற்பன்.

குறிப்பு. 1. இரும்பைக் காந்தம் வலித்தாற் போலியைந்து:—இரும்பை இழுத்துத் தன்னோடியைவிப்பதாயிருந்தும் தன்னியல்பின் விகாரமடையாத காந்தம் போல முதல்வனும் உயிர்களைத் தன்னகத்திழுத் தியைப்பினும் விகாரியாகான் என்றது. இது "சென்றணையு நிழல்போல" நில்

லாமையால் முதல்வன் விகாரமுறுவனன்றோ என்ற ஈசுவர அவிகார வாதியை உவமை காட்டி அடக்கி அத்துவிதமாமாறு தெரித்ததாம்.

2. எரி இரும்பைச் செய்வதுபோல் இவனைத்தானாக்கி:—இரும்பைக் காய்ச்சித் தன் வண்ண மாக்கினும் தானே யாக்காது வேறே நின்று தன் குணத்தை யதற்குதவும் தீயைப்போல முதல்வனும் பக்குவான்மாக்களைத் தன்வண்ணமாக்கியும் தானே யாக்காது தன்சத்தி மாத்திரையி னிறுத்தி என்றதாம். இது "இவற்றை யணைந் தொன்றாய் நின்றதுயிர் கெட்டு" என்பார்க்குக் கெடாதிருக்கவே அத்துவிதமாமாறு காட்டியதாம்.

3. அரும்பித்து இந்தனத்தை அனல் அழிப்பது போல் மலத்தை யறுத்து:—விறகின் உள்ளடங்கிச் சூக்குமமாயிருந்த தீயை வெளிப்படுத்தி விறகாந் தன்மையை அகற்றித் தன்னோ டொன்றுபடச் செய்யும் அக்கினி போல முதல்வனும் உயிரிற் சூக்குமமாயிருந்த சிவஞானத்தை விளக்கி உயிராந் தன்மையான பசுபாசஞானங்களைக் கெடுத்து ஒன்றுபடச் செய்து என்றதாம். இது "பொன்றுகைமுத்தி" யாமன்றி வேறு ஒன்றாதல் முடியாதென்றார்க்குப் பொன்றுவது மலமாகிய உயிர்த்தன்மையெனவும், நின்றது சிவஞானமாகிய உயிர்த்தன்மை யெனவுங் காட்டி உவமை கொண்டு அத்துவிதமாமாறு தெரித்ததாம். இதனையே திருமந்திரத்தினும் "மரத்தை மறைத்தது மாமதயானை, மரத்தில் மறைந்தது மாமதயானை, பரத்தை மறைத்தது பார்முதற் பூதம், பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்" எனக்காட்டியதாம். அரும்பித்து - அரும்பச்செய்து, மொட்டிற் சூக்குமமாயிருந்த மலரை அலர்த்தியதுபோல வுயிரினின்ற மெய்யுணர்வை விளக்கி என்றது.

4. அப்பணைந்த உப்பேபோலணைந்து:—நீரொடு சேர்ந்த உப்புத்தன் சுவை முழுவதையும் நீருக்காக்கித் தன்னோடொப்பச் சமஞ்செய்யுமாபோல் இறைவனும் உயிர்க்குத் தமது குணங்களை யீந்து சமமாக்கித் தம் வியாபகத்துட்கொண்டு என்றதாம். இது "நீரொடுநீர் சேர்ந்தாற்போலன்றி"ச் சமமாதல் கூடாதென்றார்க்கு உவமைகொண்டு அத்துவிதமாமாறு தெரித்ததாம்.

5. பொன்னினைக் குளிகை ஒளிப்பது போலடக்கி:—மாசகற்றிப் பொன்னாகச் செய்த செம்பினையும் பொன்னோடொன்றாகாது மறைத்து நின்று, பிற செம்பினும் மாசை அகற்றுமாறு நிற்கும் இரதகுளிகைபோல முத்தியினின்ற உயிரையும் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்தாக்கித் தானேந்தொழி னிகழ்த்தி நின்று என்றதாம். இது "களிம்பற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும்" செம்பு போன்றே இறைவன் தொழிலினும் உடனின்றாலன்றி ஒன்றாகாது என்பாரை மறுத்து உயிர்தானும் சிவாநுபவ மொன்றிற்கே உரித்தாதல் உவமையிற் காட்டி அத்துவிதமாமாறு தெரித்ததாம்.

6. மேளித்துத்தானெல்லாம் வேதிப்பானுகி:—இரசவாதி கூட்டிய மூலிகைகளால் ஒரு லோகத்தை மற்றொன்றாக்குதல்போல, உயிர்த்தன் மையை நீக்கிப் பரத்தன்மையைக் காட்டி அத்துவிதமாகக் கலந்தும் பிரிந் தும் நின்று என்றதாம். இதனுனே "சிவன் சீவன் என்றிரண்டும் சித் தொன்றாம்" அல்லவெனின் ஒன்றாதல் சாலாது என்பாரை உவமை கொண்டு மறுத்து அத்துவிதமாமாறு தெரித்ததாம். மேளித்தல் - கூட்டல். (௵ - கூட்டம்.) வேதித்தல் - இரசவாதத்தால் ஒருலோகத்தை மற் றொன்றாகச் செய்தல்.

7. கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியை யொத்திருப்பன்:—இவ்வாறுவகைத் தித்திப்பாய பொருட்களின் சுவை போன்ற பேரின்பத்தை உயிரனுபவிக்கத் தான் சலனமின்றி முதல்வன் இருப்பன் என்றது, இதனுனே அத்துவித நிலையில் உயிர் சிவாநுபூதி யின்பத்திற்றிளைத்து நிற்ப, அவ்வின்பத்தை யுதவி வேறாயும் உடனாயும் ஒற்றித்தும் நிற்பன் இறைவன் எனச் சுத்தாத்துவித முத்திநிலைகாட்டிச் சித்தாந்தப்படுத்தியதாம். இவ்வுண்மையே "கனியிலுங்கட்டி பட்டகரும் பிலும், பனிமலர்க்குழற் பாவைநல்லாரிலும், தனிமுடிகவித்தாளுமரசிலும், இனியன்றன்னடைந் தார்க்கிடைமருதனே" என்ற அப்பர்மறையிலும்; "காரணிகற்பகங் கற்றவர்நற்றுணை பாணரொக்கல், சீரணிசிந்தாமணியணி தில்லைச் சிவனடிக்குத், தாரணிகொன்றை யன்றக்கோர் தஞ்சங்கநிதி விதிசே, ரூருணியுற்றவர்க்கூரன்மற் றியாவர்க்கு மூதியமே." என்ற மணி மொழிக்கோவைமறையிலும் காணலாகும்.

பொழிப்பு. இரும்பை இழுத்து நிற்கும் காந்தம்போல் விகார மின்றி உடனாயும், இரும்பைத்தீயாம் வண்ணம் செய்யும் நெருப்புப் போற் றன்குணமீந்து உயிரைக் கெடுக்காது பிரிந்து நின்றும், விறகினுக்கு விறகாந்தன்மையை நீக்கித் தீயாந்தன்மையைத்தரும் நெருப்பேபோல் மலத்தை நீக்கி ஒன்றாய் நின்றும், நீரொடு சேர்ந்த உப்பேபோல ஒன்றுவித் துத் தன் வியாபகத்துட்படுத்தி நின்றும், பொன்னாய் வந்த செம்பினது செம்பின்தன்மையை மறைத்து நிற்கும் இரத குளிகைபோல் உடனாய் மறை த்து நின்றும், ஒருலோகத்தை மற்றொன்றாய் மாற்று மிரசவாதியே போன்று பிரிந்து நின்றும், கரும்பு தேன் பால் கனிரசம் கற்கண்டு சர்க் கரை முதலியவற்றின் சுவைபோன்ற சிவாநுபவப் பேரின்பத்தை யீந்தும் இறைவன் நிற்ப அவனோடுகலந்து நிற்பதுவே சித்தாந்த மாகக்கண்ட சுத் தாத்துவித முத்தி நிலையாம்.

---

# பன்னிரண்டாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் மேற் சிவஞானப் பேறெய்திக் காய மொழிந்தாற் பர முத்தி யெய்துவரெனக் காட்டிய சிவஞானியர் இகத்தே வாசனு மலந்தாக் குருவண்ணஞ் சாதித்தற் பாலவாய சாதனைகள் கூறுமுகத்தானே, மெய் யன்பர் கூட்டத்துச் சிறப்பும், சங்கமம், இலிங்கம் குரு சேவைகளின் பெருமையும் பயனும் தெரிக்கின்றது.

சிவஞானியர் வாதனுமலம் தாக்காவண்ணம் சாதிக்கற் பாலவாய
சாதனைகளைத் தொகுத்துக் கூறல்.

322 செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
திரிமலங்க ளறுத்தீச னேசரொடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி
எங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோ
மியாவர்க்கு மேலானோ மென்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யாரடியா ரடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

(இ - ள்.) செம் கமலத் தாளிணைகள் சேரல் ஒட்டாத் திரிமலங்கள் அறுத்து - முதல்வனது செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை அணைய விடாது தடுப்பனவாகிய மலமாயை கன்மங்களை வலிகெடுத்து,—எங்கும் யாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம் யாவர்க்கும் மேலானோம் என்று இறுமாப் பெய்தி - அதனானேயாம் உலகி லெங்கும் மலவலியுட்பட்டழுந்து மியாவர்க்கும் எளியரல்லோம் அவரினும் மேலாயுள்ளோம் என்று பெருமி தக் களிப்புற்று,—ஈசன் நேசரொடுஞ் செறிந்திட்டு - அதுகாரணமாகச் சிவபிரானது மெய்யன்பர் கூட்டத்துப் பயின்று,—ஆடிப்பாடி - ஆடல் பாடல் முதலாய பேரின்பக் குறிகளை நிகழ்த்தி,—அங்கவர்தம் திருவே டம் ஆலயங்கள் எல்லாம் அரன் எனவே தொழுது இறைஞ்சி - சிவ னடியார்களது திருவேடப் பொலிவினும் சிவாலயங்களினும் மலத்தை யெரிக்கும் முதல்வன் செறிவையே கண்டு அவற்றைப் போற்றி வணங்கி, —திங்கள் முடியார் அடி ஆர் அடியோம் என்று - பிறையினையணிந்த திரு முடியினையுடைய சிவபிரான் (குருவடிவாய் வந்து நின்று பதித்த) திரு வடி தாங்கும் சிற்றடியர் ஆனோம் என்று;—திரிந்திடுவர் - உலகியலில் இயங்கி நிற்பர்,—சிவஞானச் செய்தியுடையோர் - திருவடிஞானங் கைவ ரப் பெற்று உலகியலிலொழுகும் பெரியோர்.

குறிப்பு. 1. செங்கமலத் தாளிணைகள் சேரலொட்டாத் திரிமலங்களறுத்து:—முதல்வனது சீபாதத்தைச் சென்றணையவிடாது தடுக்கும் மலமாயை கன்மங்கள் சிவஞானியர்க்கு அற்றமை மேற்சூத்திரங்களுட் காட்டியிருந்தும், பின்னும் அவற்றை அறுத்து என்றது வாதனாமலத்தைக் குறித்தாம். இதுவே உடம்புள்ளளவும் பெருங்காயமிருந்த பாண்டத்து மணம்போலவும், வினைதவிர்ந்த குயவன் திகிரிச் சுழற்சி போலவும் மங்கி நின்றுழல்விப்பதாம். (செ. 309. பார்). இதன்வலி ஞானியரை வாட்டாதெனினும் அவர் மாட்டுச் செறியும் மற்றையோர்க்கு உடற்செய் கன்மம் போற் காணப்பட்டு அன்னோர் வினைவிளைவை ஏற்றுமெனக் கூறிய வாற்றானே (செ. 307, 278 பார்.), அதுவும் உயிர்கள் மாட்டுற்ற அன்பு காரணமாக ஒழித்தற்பால தாயினமையின், அதை ஒழித்தற்கு ஞானியர் உடலுள்ளவரையும் சாதிக்கவேண்டிய சாதனை சில வுண்டென்பது.

2. ஈசனேசரொடுஞ் செறிந்திட்டு:—வாதனாமலந்தாக்குறா வண்ணம் மெய்யன்பர் கூட்டத்திருத்தலே சிறந்த சாதனையா மென்றது. "உடையாளுன்ற னடுவிருக்கு முடையாளடுவு ணீயிருத்தி, அடியேனடுவு ளிருவீருமிருப்பதானா லடியேனுன், அடியார்நடுவு ளிருக்குமருளைப் புரியாய்பொன் னம்பலத்தெம், முடியாமுதலே யென்கருத்து முடியும்வண்ணமுன்னின்றே" என்ற மணிமொழியும், "நல்லோரிணக்கம்" "நின்னன்பர் கூட்டம்" "உத்தமர்தமுறவு" "சாதுசங்கம்" எனப்பல மெஞ்ஞானியரும் போற்றி வேண்டி விளந்ததுவும் இதனையே குறித்ததாம்.

3. அங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி:—நீறு கண்டிகை காவி காம்பர தண்டு கமண்டல முதலாயசேர்ந்த சிவவேடப் பொலிவினும், தூல சூக்கும அதிசூக்கும விலிங்கங்களாகிய கோபுரம் திருவுருவங்கள் சிவலிங்கம் முதலியன அமைந்துள்ள சிவாலயச் சிறப்பினும், மலமறுத்தாளும் மங்கைபாகனே வதிந்திருப்பது கண்டு அவற்றைப் போற்றி வணங்கி என்றது. திருவேடத்தையும் சிவாலயத்தையும் வணங்கி மெய்ப்பேறுற்றார் அறுபத்து மூவருட் பெரும் பாலருமென்பது திருத்தொண்டர் புராணத்தறியக் கிடந்தது. அரன் - மலத்தை எரிப்பவன். சர்வசங்கார கர்த்தாவாகி யாவுந் தம்முளொடுங்கத் தனிநிற்கு முதல்வனே அரன் என்ப. இதனை யறியாதார் மூவருளொருவனாய உருத்திரனெனக் கூறியிழுக்குறுவர். (செ. 69. பார்).

இவற்றானே சங்கமசேவையும் இலிங்கசேவையும் ஞானியர்க்கும் இன்றியமையா தென்பது காட்டியதாம்.

4. எங்குமியா மொருவர்க்கு மெளியே மல்லோ மியாவர்க்கு மேலானோமென் றிறுமாப் பெய்தி - சிவஞானியர் திரிமலங்க ளறுத்தவாற்றானே யப்பேறில்லாதார் யாவரினும் மேலாய பேறுற்றவராய்த் தம்மை அத்தகையார்க் கெளியரல்ல ரெனக் கண்டு பெருமிதமாகிய களிப்பிற்றிளைப்பர் என்றது. இப்பெருமிதம் ஏனையோர்க்குள்ள ஆணவத்தடிப்பானாய இறுமாப்பி

ணியல்புடையதன்றென்பது போதரவே எளியோமல்லோம், மேலானேம் என்றும், மேல் அடியோம் என்றும் குறித்தது காண்க. இதனையே அப்பரும் தமது அருந்தமிழ்மறையில் "நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லைத், தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமார்க்கே நாமென்று மீளாவாளாய்க்கொய்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே" எனக் கூறியதுமாம்.

5. திங்கள் முடியார் அடியார் அடியோமென்று:- முதல்வனே குருமூர்த்தியிடமாக நின்று தீக்கை செய்து திருவடி பதித்தவாற்றானே அக்குருவுக்குச் சிவஞானியர் வழியடிமை பூண்டுள்ளார் என்றது. அன்றிச் சிவனடியாரையே குருவாகக்கொண்டு அவர்க்கே அடியராதல் எனலுமாம். இது நம்பியாரூரரை "அடியார்க்குமடியேன்" எனப் பாடுமாறு செய்த விறன்மிண்டர் சரிதத்துக் கண்டதுமாம். இறைவனே "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கொற்றங், குடியார்க்கெழுதிய கைச்சீட்டு" என வரைந்தும், சுந்தரர்க்குத் தூதாகிப் பரவையாரூடல் தவிர்க்க நள்ளிருளில் நடந்தும் பிறவாற்றானும் தம்மை அடியார்க்கடியனெனக் காட்டியிருப்பதனால் அவனடியாரும் அவனேபோல் அடியார்க் கடியராதல் முறையென்பது கூறாதேபோதருமன்றே. இதனாற் குருசேவையின் பெருமை கூறியவாறு.

மேல் இறுமாப்பெய்தி எனவும் பின் அடியோம் எனவுங் குறித்தது சிவஞானியரது அன்பினிலைமையை விளக்கியதாம். என்னை? மலப்பற்றுடையார்மாட்டுப் பரிந்து சேவித்தும், மெய்யடியார்மாட்டுப் பணிந்து சேவித்தும் திரிதல் சிவஞானியர் இயல்பாம் என்றபடி. அன்றி எவரையேனும் எள்ளியிகழ்தலன்று என்பதும் தெளியக்கூட்டி யடுத்துரைத்ததுவாமென்க. மேலானேம் என்றது பரிவுக்குறி, அடியோம் என்றது பணிவுக்குறி.

6. ஆடிப்பாடி......திரிந்திடுவர்:- சிவஞானியர்க்கு உலகவாழ்வு பெரும் விளையாட்டேபோன்றிருத்தலின் அவர் சலனமின்றி யாதுநிகழ்வதாயினும் ஆடிப்பாடி யின்புற்றும், உலகந் தோன்றாது தம் பெரும்பேறொன்றுமே தோன்றலின் அதையுன்னி யிறுமாப்புற்றும், இறைவனைக் குருலிங்க சங்கமத்துக்கண்டு தொழுமாற்றானே பணிவுற்றும், ஒன்றிலும் பற்றுக்கோடின்றி உலகிலியங்குவர் என்றது. திரிதல் - ஒன்றினும் பற்றின்றி உலகிலொழுகுதலைக் குறித்தது. "பாலருடன் உன்மத்தர் பிசாசர்குண மருவிப் பாடலினோடாடலிவை பயின்றிடினும் பயில்வர்" என்றதும் நோக்குக. (செ. 284).

7. சிவஞானச் செய்தியுடையோர்:- நிர்விகற்பசமாதி நீங்கச் சவிகற்பசமாதி சேர்ந்தோர். இதனானே சீவன்முத்தரும் உலகிலொழுகவேண்டிய

நெறிகள் உளவென்பதும், அஃது அன்பின்வழியதன்றிப் பற்றின்வழிய தன்றெனபதும் ஒருவாறு காட்டியதாம். இதனை "ஞாலமதின் ஞானநிட்டையுடையோருக்கு நன்மையொடு தீமையில்லை........பயில்வர்" என்ற செய்யுளோடு (செ. 284.) ஒட்டியுய்த்துணராது, நாம் ஞானியரானோம் எமக்கு எதுவுஞ் சரியேயெனக் கூறித் திரிந்து கொலை களவு கட் காமங் குருநிந்தை யாதியவற்றுட்டிளைப்பர் மெய்நெறிதேரு வீணர் சிலர். இவர் திரிமலமறுக்காதவராய் வாதனை சாதனையாகிய இருவகை மலவலியுள்ளும் பட்டு வருந்துவோர் என்பது அநுபவத்துந் தெளியலாகும்.

பொழிப்பு. சிவஞானியர் வாதனாமலந் தம்மைத் தாக்குறாவண்ணம் தம் பேற்றையுன்னிப் பெருமிதமுற்றோராய் மெய்யன்பர் கூட்டத்துப் பயின்று பேரின்பத்தழுந்திச் சங்கம லிலிங்க குரு சேவைகளைச் சாதித்துச் சிவனடியார்ப் பணிதலுடையோராய் உடம்புள்ளளவும் உலகிற் பற்றின்றி வாழ்வர்.

இச்செய்யுள் மூன்றுகூறுடையது.

1. செங்கமலத்தாளிணைகள் சேரலொட்டாத் திரிமலங்களறுத்து, எங்குமியாமொருவர்க்கு மெளியோமல்லோ மியாவர்க்கு மேலானோ மென்றிறுமாப்பெய்தி, ஈசனேசரொடுஞ் செறிந்திட்டு ஆடிப்பாடித் திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோர் (323).

2. அங்கவர்தந்திருவேட மாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சித் திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோர், (324-325).

3. திங்கள்முடியாரடியா ரடியோமென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோர், (326-323).

---

முதலதிகரணம்.

செங்கமலத்தாளிணைகள் சேரலோட்டாத் திரிமலங்களறுத்து, எங்குமியா மொருவர்க்கு மெளியோமல்லோ மியாவர்க்கு மேலானோமென்றிறுமாப்பெய்தி, ஈசனேசரொடுஞ் செறிந்திட்டு, ஆடிப்பாடித்திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோர் என்பது முதலாங்கூறு (323). இக் கூற்றானே சிவஞானப்பேறெய்திய சீவன்முத்தர் இகத்துத் திரிமலங்களு மறுத்தேயிருப்பராயினும் வாதனையா னுழல்விக்கும் மலச்சேட்டை தம்மைத்தாக்குறாவண்ணம் தம் மலநீக்கத்தையுன்னிப் பெருமிதமுற்றோராய் மெய்யன்பர் கூட்டத்துப் பயின்றாநந்தித்திருப்பர் என்பது குறிக்குமாற்றானே சிவனடியார்ப் பேணாஇழிதகவும் பேணுவார் பெருந்தகவுங் காட்டியதாம்,

*சிவனடியார்ப்பேணா ரிழிதகவும் பேணுவார் பெருந்தகவும்.*

**323.** ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்
பேசுவதென் னறிவிலாப் பிணங்களைநா மிணங்கிற்
பிறப்பினினு மிறப்பினினும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட்
டவர்கரும முன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

(இ-ள்). அடியவர்க்கு அன்பு இல்லார் - சிவனடியார்பால் அன்பில்லார்தவர்,—ஈசனுக்கு அன்பு இல்லார் - முதல்வனிடத்தும் அன்பில்லாதவரேயாவர்,—எவ்வுயிர்க்கும் அன்பு இல்லார் - அவர் பிறவுயிர்கள் யாவற்றினும் அன்பில்லாதவராய்,—தமக்கும் அன்பு இல்லார் - தம்மேலுமே அன்பில்லாதவராவர்,—அறிவிலாப் பிணங்களைப் பேசுவது என் - இத்தகையோர் உயிரோடிருந்தும் அறிவின்மையாற் பிணமேயாவர் (என்பதன்றி வேறு) எவ்வாறு இவரைக் கூறுவது,—இணங்கில் பிறப்பினினும் இறப்பினினும் பிணங்கிடுவர் - இத்தகையரோடு கூடின் மேலும் பிறந்திறந் துழல்வதாகிய துயரத்துட்படுத்துவர்,—விடுநீ - ஆதலால் இவர்களது உறவை யறவேயொழித்து,—ஆசையொடும் அரன் அடியார் அடியாரை அடைந்திட்டு - பேரன் போடும் சிவனடி பேணுவார்க் கடிமைபூண்டொழுகும் மெய்யன்பர் கூட்டத்திற் கலந்து,—அவர்கருமம் உன்கருமமாகச்செய்து - அவர்கள் செயற்பாலவாய பணிகளை யெல்லாம் மெய்ப்பணியாகக் கொண்டு,—கூசிமொழிந்து - பணிவாக அவர்முன்பேசி,—அருள் ஞானக்குறியில் நின்று - தற்போதமேது மின்றி முதல்வனதருளாகும் மெஞ்ஞான உபதேச வழியொழுகி,—கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே - கும்பிடுதல் கைகொட்டல் கூத்தாடுதல் முதலிய ஆநந்தச் செயல்களைச் செய்து மியலுவது சிவஞானியர்க் கியைந்த நிலையாம்.

குறிப்பு. ஈசனுக் கன்பில்லா ரடியவர்க் கன்பில்லார்:—மெய்யன்பர் கூட்டத்திணங்குவதே காட்டவுற்ற திச்செய்யுளாதலின் நிரைமாறிக் கொண்டு கூட்டி, கண்கண்ட சிவனடியார்மாட் டன்புநிகழாவழி அவாங்மனகோசரனாய இறைவன்மாட்டன்பு நிகழ்தல் கூடாதென்றதைக் காட்டியது. இதுவே "சிவனடியாரை வணங்காது செல்லும் வன்றொண்டனும்புறகு, அவனை வலிந்து தடுத்தாட்கொண்ட பரமசிவனும்புறகு" என்று கூறியதாக விறன்மிண்டர்சரிதத்தும் காணவுற்றதாம். இதனைக் "காமுகனுவானொருவன் ஒரு வனிதையிடத்தன்புடையனென்பது, அவளொக்கலைக்கண்டுழி நிகழு மன்புபற்றியே தெளியப்படும்; அதுபோல ஈசனுக்கன்புடைமை அவனடியவரைக் கண்டுழி நிகழு மன்பு பற்றியே தெளியப்படுமாதலான் அடிய

வர்க் கன்பில்வழி ஈசனுக்கன்புடையார்போ லொழுகுதல் நாடக மாத்திரையே பிறிதில்லை" எனக் கூறி விளக்கியுள்ளார் சிவஞானமுனிவர்.

2. எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்கு மன்பில்லார்:—ஈசனுக்கன்பில்லார் எல்லாவுயிர்க்கு மன்பில்லாதவராய்த் தம்முயிர்க்குமே உறுதி செய்து கொள்வாரல்லர். தம்முயிர்க்கன்புபூண்டு அதை நற்கதி சேர்க்க வேண்டுவோர் மன்னுயிர்க்கன்பு பாராட்டற்பாலர். என்னை? "மன்னுயிரோம்பி யருளாள்வார்க்கில்லென்ப, தன்னுயிரஞ்சும்வினை" என்ற முறையினும் (திருக்குறள்). எனவே சிவநேயம், அடியார்நேயமும் மன்னுயிரன்பும் கூடியுள்ளமேதயாம் என்றதாம். இதனையே திருமந்திரத்தும் "அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார், அன்பே சிவமாவ தாரு மறிகிலார், அன்பே சிவமாவதாரு மறிந்தபின், அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே" எனக் காட்டியதாம். "அன்பிலாரெல்லாந் தமக்குரியர்" என்ற திருக்குறள் வேறு கூறியதோவெனின் ஆண்டு 'தமக்கு' என்றது உடம்பை நோக்கியா மென வறிக.

3. அறிவிலாப் பிணங்கள்:—உயிரிருந்தும் மெய்யுணர்வும் மெய்யன்புங் கூடாதார் நடைப்பிணமேயாவர் என்றது (செ-185, 186. பார்.) "அன்பின்வழிய துயிர்நிலை யஃதில்லார்க், கென்புதோல் போர்த்த வுடம்பு" என்னும் திருக்குறளும் இதுவேகாட்டியதாம்.

இணங்கிற் பிறப்பினு மிறப்பினினும் பிணங்கிடுவர்:—ஈசனுக்கன்பில்லாரிணக்கம் மலவாசனையைப் பெருக்கிப் பிறப்பு இறப் பிற்படுத்திச் "செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டா" என்றது காட்டியதாம். பிணங்கிடுவர் - மெலித்தல் விகாரம். "பிறப் பிறப்புக் கேதுவான தர்மங்களைப் பண்ணும் படிக்குச் சொல்லிக் கலகம் பண்ணுவார்கள்" என்பர் சிவாக்கிரயோகியர்.

5. ஆசை - மலவாதனையைத் தவிர்க்கவேண்டுமென்ற ஆசை. அடியார் மாட்டுக் கொள்வதாகும் பேரன்பெனினுமாம்.

6. அரனடியாரடியார்:—அரன் திருவடிபேணுமடியார் எனலுமாம். அடி + ஆர் = அடியைத்தாங்கிய.

7. கூசிமொழிந்து:—மெய்யடியார் முன் வாய்பொத்திப் பணிவுடனின்று அவர் கூற்றுக் கெதிர்மொழிகூறாது பத்தி பண்ணுதல்வேண்டும் என்றது.

8. அருள்ஞானக்குறி:—திருவருளாகிய ஞானப் பேற்றின் இலச்சியத்தை முன்னோக்கி என்றது. ஞானசாரியர் அருளிய குறிப்படி நின்று எனவும், தற்போதமுனைப்பின்றி அருள்வழி நின்று எனவுங் கூறலுமாம். குறி - இலக்கு. (செ. 296, 287 பார்.)

பொழிப்பு:—சிவனடியார்க் கன்பில்லாதார் சிவனுக்கன்பில்லாதவரேயாவர். அவர் உயிர்கண்மாட்டன்பிலராய்த் தம்முயிரையுங் கதியிற் சேர்ப்

பாரலர். அத்தகையர் நடைப்பிணமேபோன்று தம்மையண்டினரைப் பிறப்பிறப்பிற்படுத்துவாராதலின் அவரதிணக்கம் விலக்கற்பாலது மெஞ்ஞானியர் சிவனடியாரோடும் மெய்யன்பிற்கலந்து அவர் பணியில் வழுவாதொழுகி அருள்வழிநின்று இகவாழ்விலியாண்டு மின்பமொன்றனையே கண்டிருப்பர்.

---

## இரண்டாமதிகரணம்.

அங்கவர் தந் திருவேட மாலயங்களெல்லா மானெனவே தொழுதிறைஞ்சித்திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோர் என்பது இரண்டாங்கூறு (**324 - 325**) இக்கூற்றானே வாதனைமலந் தாக்குறா வண்ணம் அன்பர் கூட்டத்துப் பயிலுஞ் சிவஞானியர் மேலும் சிவவேடப் பொலிவிலும் திருக்கோயிற் செவ்வியிலும் மலமறுக்கு முதல்வன் செறிவையே கண்டு அவற்றைப் போற்றித் தொழுது யாதினும் பற்றின்றி ஒழுகுவர் என்பது கூறுமுகத்தானே சங்கமம இலிங்கம் என்னும் இருவகைச் சேவைகளின் பெருமையும் பயனும் காட்டப்படுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. சங்கம சேவையின் பெருமையும் பயனும், (**324**).

2. இலிங்க சேவையின் பெருமையும் பயனும், (திருக்கோயிற் சிறப்பு) (**325**).

### 1. சங்கம சேவையின் பெருமையும் பயனும்.

**324.** அறிவரியான் றனையறிய யாக்கை யாக்கி
அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்
செறிதலினற் றிருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்குமத்தாற் சிவனு மாவர்
குறியதனு லிதயத்தே யரனைக் கூடுங்
கொள்கையினு லரனவர் குறியொடுதா மழியு
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றால்
நேசத்தாற் றொழுதெழுமின் பாசத்தாள் விடவே.

(இ - ள்.) அறிவு அறியான் - பாசபசுஞானங்களால் அறிதற் கரியனாகிய சிவன்,—தனை அறிய - உலகினுள்ளார் தம்மை அறிந்து வழிபட்டுய்தற் பொருட்டு,—யாக்கை ஆக்கி - திருவெண்ணீறு கண்டிகை முதலிய வற்றோடு பொலிந்த தமது திருவேடத்தை அன்பர்க்குதவி,—அங்கு அங்கே உயிர்க்கு உயிராய் அறிவு கொடுத்து - யாண்டும் உயிர்க்குயிராய் நின்று அறிவை விளக்கி,—அருளால் செறிதலினல் - அருளாற் கலந்து நிறைந்திருத்தலினல்,—திருவேடம் சிவன் உருவே ஆகும் - திருவேடம் சிவனுருவமேயாக, அதனைப்

பூண்டார் உருவசிவமேயா யிருப்பர்,—சிவோகம் பாவிக்கும் அத்தால் சிவனும் ஆவர் - சிவமே தாமெனப் பாவனைசெய்யுந் தன்மையினாற் பாவனை சிவமேயாகவும் இருப்பர்,—குறியதனால் இதயத்தே அரனைக் கூடும் கொள்கையினால் அரன் ஆவர் - அருட்குறிவழிநின்று இதயத்தானத்திற் சிவனை இருத்திப் பூசித்தலாகிய தியானம் சாதிக்குந் தன்மையினாற் செயற்சிவமேயாகவும் இருப்பர்,—குறியொடுதாம் அழியும் நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவர் - அவ்வாறு குறித்த குறியு மழிவு பெறத் தம்மையுமே காணப்பெறாது அவனே தாமாந் தன்மைபெற்று நிற்றலாற் சிவமேயாயும் இருப்பர்,—என்றால் - இவ்வாறு திருவேடம் பூண்ட மெய்யடியர்இலயம் போகம் அதிகாரம் சுத்தம் ஆகிய சிவமேயாய் நிற்றல் தெளிவாதலின்,—பாசத்தாள் விட - வாதனை மலத்தை விட்டு நீங்க,—நேசத்தால் தொழுதெழுமின் - மெய்யன்பினாற் தொழுதொழுகவேண்டும்.

குறிப்பு. 1. அறிவரியான் தனையறிய......திருவேடஞ் சிவனுருவேயாகும்:—சுட்டி யறியப் படாத் தன்மையனான இறைவன், ஆன்மாக்கள் தம்மையறிந்து வணங்கி உய்தற்பொருட்டுக் கொண்ட அருட்டிருவுருவத்தையே ஒருவாற்றாற் பூண்டொழுகுதலாலும், எங்கும் நிறைந்து நிற்கும் பரமன் வெளிநின்றுயிர்க் குறுதிபயக்கும் வாயிலாயிருக்குமாற்றாலும், சிவனடியாரும் வடிவாற் சிவமேயாவர் என்றது. இதனால் மெய்யடியார் இலயசிவ மென்றதாம்.

2. சிவோகம்பாவிக்குமத்தாற் சிவனுமாவர்:—திருவஞ்செழுத்து வேள்வியாகிய கிரியா நிட்டையிற் சிவமே தாமெனத் தியானித்தும் பாவித்துமிருத்தலினாற் சிவனடியர் பாவனையாற் சிவமேயாவர் என்றது. இதனால் மெய்யடியர் போகசிவமென்றதாம்.

3. குறியதனாலிதயத்தே யரனைக் கூடுங் கொள்கையினா லரனாவர்:—அந்தரியாகமென்னும் அகப்பூசனை நெறியிற் குருவானுணர்த்திய குறிவழி இதயத்தானத்திறைவனை நிறுத்திப் பூசித்துப் புருவநடுவிற் றியானித்திருப்பதனாற் சிவனடியர் செயலாற் சிவமேயாவர். இதனானே மெய்யடியா அதிகாரசிவமென்றதாம். அந்தர்யாகத்தில் அதிகாரம் பெற்றதென்பது, அது முத்திசாதனமாய் ஆன்மசத்தி நிகழ்த்துமாற்றான், யாவுமிறைவன் மயமாகத் தாமும் அவனேயென்றநிலை ஓரொருகாற் கைவரப் பெறுகையினாலாமென்க.

4. குறியொடுதாமழியு நெறியதனா லரனேயாய் நின்றிடுவர்:—மேற்கூறியவாறு வேடத்தானும், பாவனையானும், தியானத்தானும் சிவமேயாய்க் குறித்துக் காண்பதாய நிலைகளுமே யற்றுச் சதா ஞானநிட்டை கைவரப் பெற்றுத் தம்மையும் தம்மிலிறைவனைக் குறிக்கவுற்ற வேடமாதி குறிகளையுங் கைவிட்டு முதல்வனோடத்துவித நிலை கண்டிருக்கு மாற்றானே சிவனடியர் உண்மையிற் சிவனின் வேறன்றி அத்துவிதமாயிருப்பர். இதனானே மெய்யடியர் சுத்த சிவமேயாயிருப்பர் என்றதுமாம்.

இக்கூறிய வாற்றுற் சிவனடியர் இறைவனோடு அவனிவனென்னும் பிரிப்பின்றி அத்துவிதப்பட்டு நிற்குமாறு காட்டியதேயன்றிச் சிவசமவாதங் கற்பித்ததன்றென்பது சிவஞானுருவேயாகும். சிவனுமாவர், சிவனுவர், சிவமேயாய் நின்றிடுவர் என ஆக்கவினைகூட்டி இடைச்சொற் பெய்ததனுற் றெளிக.

5. பாசத்தாள்:—பாசத்தின் அடிப்படை; நெல்லினருவியறுத்த பின் மழை கண்டால் மேலும் முளைக்கு மாற்றல் கொண்டுற்றதாள் வாதனுமலத்திற் குவமையாயது. பாசத்தார் எனப்பாடங்கொண்டு இழிவின் கண்வந்த உயர்திணைவாய்ப்பாடாக்கிப் பாசங்கள் எனப் பொருள்பண்ணுவர் சிவாக்கிரயோகியர். ஆகுபெயராய்க் கொண்டு பாசப்பற்றுடையாரது பற்று என்பர் சிவஞானமுனிவர்.

பொழிப்பு. பாசபசுஞானங்களாலறியப்படாது நிற்கும் முதல்வன் தம்மை யான்மாக்களறிந்துய்தற்பொருட்டு உருவத்தானும் பாவனையானும் செயலானும் இவையாவுமற்ற சுத்த நிலையானும் சிவனடியார்மாட்டு நிறைந்து விளங்கி யத்துவிதப்பட்டு நிற்றலால் வாதனுமலந் தாக்குறு வண்ணம் யாவரும் மெய்யடியரைத் தொழுதொழுக வேண்டும்.

## 2. இலிங்க சேவையின் இயல்பும் பயனும்

(திருக்கோயிற் சிறப்பு.)

325 திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ னங்கே
உருக்கோலி மந்திரத்தா லேநினையு மவர்க்கு
முள்னெங்கு மில்லனிங் குளனென் பார்க்கும்
இருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோல்
மந்திரத்தின் வந்துதிப்ப னிருஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணுத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே

(இ - ள்.) திருக்கோயில் உள் இருக்கும் திருமேனிதன்னை - திருக்கோயிலின்கண் ஆகமமுறையானமைத்த பரார்த்த மாகிய சிவலிங்கம் முதலிய திருவுருவங்களை,—சிவன் எனவே கண்டவர்க்கு - சிவன் எனக்கொண்டு உருவ வழிபாடு செய்யும் சரியையாளர்க்கு,—சிவன் உறைவன் அங்கே - சிவபிரான் அவ்வுருவங்களிலே வெளிப்படாது நின்று அருள் செய்வன்.—உருக்கோலி மந்திரத்தாலே நினையும் அவர்க்கும் உளன் - திருவுருவங்களை ஆன்மார்த்தமாக எழுந்தருளச்செய்து மந்திர வடிவுங் கூட்டி அத்துவா மூர்த்தியாக்கொண்டு அருவாருவ வழிபாடுசெய்யுங் கிரியையாளர்க்குந் திருக்கோயிலிற் காணுந் திருவுருவங்களில் மந்திரவடிவமாய் நின்று

அருள் செய்வன்.—எங்கும் இல்லன் இங்கு உளன் என்பார்க்கும் - சராசரங்களெங்கும் அருவாய்க் குடிகொண்டு நிற்கும் முதல்வன் தம் தேகத்தில் உள்ளத்தே பாவனையாவடிவமைந்திருப்பன் எனக் கொண்டு அருவ வழிபாடு செய்யும் யோகியர்க்கும்,—மந்திரத்தின் இருப்பு ஆய வடிவாகி இந்தனத்தின் எரிபோல் வந்துதிப்பன் - திருக்கோயிலே தேகம் போன்றிருக்க அதன்கண் அகத்துத் தோன்றுமாறே விறகிற் றோன்றாது நின்ற தீ கடைய வந்துதிப்பதுபோல் பாவனுவடிவத்தோடு வெளிப்பட்டேருள் செய்வன்,—அன்பர்க்கு - மெய்யன்பு கூடி அறிவுமாத்திரையான் அருளுருவில் வணங்கும் ஞானியர்க்கு,—இரும் சுரபிக்கு எங்கும் உருக்காண ஒண்ணாத பால் - மேம்பாடுற்ற கறவைப்பசுவின் உடலெங்கணும் செறிந்திருந்தும் வெளிக்காண முடியாதிருக்கும் பாலானது,—மூலைபால் விம்மி ஒழுகுவதுபோல் வெளிப்பட்டருளுவன் - மூலைவழியாக விம்மிப் பொழிவதுபோற் கருணையின் வெளிப்பட்டுத் தோன்றியருள்செய்வன். (ஆகையால் திருக்கோயில் வழிபாடு யாவருஞ்செய்யவேண்டியதாம்.)

குறிப்பு. 1. திருக்கோயிலுள்ளிருக்கும்......உறைவனங்கே: - திருக்கோயிலிற் சுயம்பாகவும் தேவர் இருடியர் குரவர்களாற் பிரதிட்டையாகவும் அமைந்துள்ள சிவலிங்கம் முதலாய திருவுருவங்களையே சிவனெனக் கண்டு வணங்குவர் சரியையாளர் என்பதும், அவர்க்கு எங்குந்தோன்றாது நிறைந்து நிற்கும் முதல்வன் அத்திருவுருவங்களினும் வெளிப்படாது நின்றே திருவருள் புரிவன் என்பதும் காட்டியதாம். இதனுற் சரியையாளர் புறத்தொழின் மாத்திரையானே உருவ வழிபாடுடைய ராணமையின் அவர்க்குத் திருக்கோயிலிற் கோபுரமாகிய தூலலிலிங்கத்தும், உலாப்போந்தருளும் எழுந்தருளிமூர்த்தியாகிய தூலசூக்குமலிலிங்கத்தும், உள்ளிருக்கும் மூர்த்தியாகிய சூக்குமலிலிங்கத்தும் வெளிப்படாது நின்றே முதல்வன் அருள்செய்வன் என்றதாம். உலகிற் சரியையாளரே மிகப் பெரும்பாலராக, திருக்கோயில் நித்திய நைமித்திகங்களானும் பிறவாற்றானும் திருவுருவங்களையே இறைவனுகக்கொண்டு, மூழுக்காட்டி, உணவூட்டிக், கோலஞ்செய்து, உபசரித்து உலாப்போதல் போன்றமைத்த தூலவழிபாடு அத்தகையர்க்குவந்ததும் உசிதமாயதுமாயினமை காண்க. இஃதறியாதார் விக்கிரகாராதனையென வீண்பேசி அது பாவனுதீத மூர்த்தியைச் சரியையாளர் மனத்துக்கொண்டு பாவித்து மேனிலைகளை யெய்தவுற்ற நன்னெறியும் நல்வணக்கமுறையுமென்பது தேராது பலவும் பிதற்றுப. இவர் "தாபரத்துண்ணின் றருளவல்லான் சிவன்" எனவும் "தூயவிமானமுந் தூலமதாகுமால், ஆய சதாசிவமாகு நற் சூக்குமம், பாயபெலிபீட பத்திரலிங்கமா, மாயவரனிலை யாய்ந்துகொள்வார்கட்கே" எனவும் வருந் திருமூலர் மொழியையும் மற்றுந் திருமுறைகளையும் நோக்குப. இதனுற் சரியையாளர்க்குச் சிவாலயசேவை சிவலிங்கசேவை வேண்டிற்றென்றதாம்.

2. உருக்கோலி மந்திரத்தாலே நினையுமவர்க்கு முளன்: - திருக்கோயிலிற் பரார்த்தமாய் அமைந்த இலிங்கங்களினன்றி, ஆசாரியர் மூலம் மந்தி

ரசிதமாய்த் தமதான்மார்த்தமாக எழுந்தருளப்பண்ணிய சிவலிங்க முதலாய திருவுருவங்களில் இறைவற்கு மந்திரவடிவு கற்பித்து வணங்குவர் கிரியையாளர் என்பதும், இவர்க்கும் திருக்கோயிற் றிருவுருவங்கள் மந்திர சகிதமா யமைத்தவாற்றானும், நித்திய நைமித்திகங்கள் மந்திர சகிதமாய் நடைபெறுவனவாதலானும், அவை ஆன்மார்த்தலிங்கங்கள் போன்று நிற்ப, ஆண்டு மந்திரமூர்த்தியாக இறைவன் வெளியாகி அருள் செய்வன் என்பதும் காட்டியதாம். இதனாற் கிரியையாளர் புறம் அகமாகிய தொழில்களானே அருவுருவ வழிபாடுடையரானமையின் அவர்க்குத் திருக்கோயிலி லமைந்துள்ள திருவுருவங்களில் மந்திரவடிவாகி மறைந்தும் தோன்றியும் நின்று முதல்வன் அருள்செய்யுமென்றதாம். இதனை "உருக்கோலி மந்திரத்தாலென நினையுமவர்க்கும்" எனப் பாடபேதங்காட்டி "சிவபிரான் ஈசானாதி திருமந்திரங்களாற் சிவலிங்க முதலிய திருவுருக் கோலினனெனக் கருதி மந்திர நியாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும்" எனக்கொண்டு மேல் "இந்தனத்தினெரிபோல் மந்திரத்தில் வந்துதித்து" என வைத்து அவ்வெளிப்பாட்டை இவர்க்கருள்செய்யுமுறையாக விளக்கியுள்ளார் சிவஞானமுனிவர். அவர்க்கும் என்ற சிறப்பும்மையால் திருக்கோயில்களல்லாவிடத்தும் வழிபடுமாறியன்ற கிரியையாளர்க்கும் ஆண்டு முதல்வன் அவர்களது வழிபாட்டை யேற்குமுறையி னமைந்துளன் என்பதனு குறித்ததாம். எனவே சரியை தாண்டிய கிரியையாளர்க்கும் திருக்கோயில் வேண்டற்பாலதன்றி ஒருவகையானும் எள்ளற்பாலதன்றெனக் காட்டியதுமாம்.

3. எங்குமில்லனிங்குளனென்பார்க்கும் இருப்பாய வடிவாகி யிந்தனத்தினெரிபோல் மந்திரத்து வந்துதிப்பன்:- ஆன்மார்த்தம் பரார்த்தமாய இலிங்கங்களினன்றிக் குருவருளாலறிந்து சிவோஹம்பாவனை கூடிச் சாதிக்கும் அஷ்டாங்கயோக சமாதியில் உடம்பினகத்தே முதல்வனை இதயத்தானத்தும் பிறவிடத்தும் பாவனாவடிவமாக இருத்தி வணக்கஞ்செய்வர் யோகியர் என்பதும், அவர்க்கும், திருக்கோயில் அமைப்பு முறையானே உடம்புபோன்றிருப்ப, அதன் மண்டபங்களும் பிறவும் உடம்பினுட்காணும் ஆதாரபேதங்களைக் காட்ட. அதன்கணுள்ள மூர்த்தியும் உள்ளத்தமைத்தமைந்த பாவனாவடிவமாக வெளிநின்றருள் செய்வன் என்பதும் காட்டியதாம். இதனால் யோகியர் அகத்தொழின் மாத்திரையானே அருவவழிபாடுடையரானமையின் அவர்க்குத் திருக்கோயிலமைப்பி லாதாரங்கள் காணப்படத் திருவுருவங்களிற் பாவனாவடிவமாக முதல்வன் வெளித் தோன்றியருள் செய்யுமென்றதாம்.

எங்கும் இல்லன் - சராசரங்களிடத்தியாண்டும் செறிந்து உண்ணிற்பவன். இல்லன் - இல்லமாகக் கொண்டவன்.

இங்குளன் (இங்கு உளன்) - தேகத்தில் உள்ளத்திருப்பவன். யோகியர் புறம், அகப்புறமாகிய வழிபாடின்றி அகவழிபாடே யுடையராதலின், அவர்க் கிறைவன் தம் தேகத்துள்ளே பாவனையாற் காணப்படுமென்றபடி

இருப்பாய வடிவாகி - அகவழிபாட்டிலிறைவன் ஆதாரங்களிலிருக்கும் பாவனைவடிவத்தோடென்றது. இதுதான் வடிவமன்றோ? பின் யோகியர் அருவவணக்கஞ்செய்வதென்னும்? எனில், இக் கூறிய வடிவம் பாவனையே யன்றி மெய்வடிவமன்றாக, இங்கியற்றும் வழிபாடும் பாவனையே யன்றிப் புறம், அகப்புறமாகிய கிரியைகளன்றாக, இது அருவவணக்கமானதாம்.

இந்தனத்தினெரிபோல் வந்துதிப்பன் - விறகிலியாண்டும் செறிந்திருந்த தீ கடைந்தவிடத்துத் தோன்றுதல் போல அண்ட பிண்டமெங்கும் நிறைந்த இறைவனும் தியானமுறைத்தவிடத்தே தோற்றும் என்பதும், அதனையே திருக்கோயிலமைப்பினும் நித்திய நைமித்திக முறைகளிலும் தூலப்பொருள் தாண்டிப் பருப்பொருள் தெளியுங்காற் காணலாகும் என்பதும் காட்டியதாம். வந்துதிப்பன் என்றதனாலே சரியை கிரியை யாளர்க்கன்றி யோகியர்க்கே முதல்வன் வெளித்தோன்றுவன் என்றதும், அதுவும் விறகிற் றீபோலத் தியானித்தவழி ஒளிவடிவாய்க் காணும் என்றதும் கூறியதாம்.

மந்திரம் - திருக்கோயில். யோகியரது அகவழிபாட்டிற்குச் சொல்லாகிய மந்திரமாதல் கிரியையாதல் இயையாமையின் இவ்வாறு கொண்டதாம்.

இவ்வடியை "உளனங்கு மெங்குமில னிங்குள னென்பார்க்கு விருப்பாய வடிவாகி" "உள னெங்குமில னிங்கேயுளன்" "இங்குமுளன்" எனவும் மேல் "வந்துதித்து மிருஞ்சுரபி" "வந்துதித்தே யிருஞ்சுரபி" எனவும் பலவாறு பாடபேதங்காட்டி உரையாசிரியர்கள் பொருளாண்டுள்ளார்.

"உளன் எங்கும் இலன் இங்கே உளன் என்பார்க்கும் விருப்பாய...... வந்துதித்தும்" எனக் கொண்டு, யோகிகளுள்ளமெங்கணு மில்லமா வாமுஞ் சிவன் இத்திருமேனியிலுமிருந்து பூசைகொண்டருளுவ னெனக் கருதிச் சாத்தியமந்திரங்களால் வழிபடும் யோகிகட்கும் (கடைந்தவழித் தோன்று மெரியுங்) கறந்தவழித் தோன்றும் பாலும்போல் அவ்வ மந்திரங்களால் அவரவர் விரும்பிய வடிவாய் அத்திருமேனிகளில் அப்போதப்போது தோன்றி நின்றருள்செய்வன் எனப் பொருள் கூறுவர் சிவஞானயோகியர். சரியையாளர்க்கேயன்றிக் கிரியை, யோகம், ஞானம் சாதிப்பார்க்கும் திருக்கோயில் வேண்டிற்றென்பதும், அவ்வவர் முறையிலாய வழிபாடும் அருளும் திருக்கோயிலினியலும் என்பதும் காட்டி, மேனிலையில் நின்றார், திருக்கோயில் சரியையாளர்க்கே வேண்டியது தமக்கின்றெனக் கூறுவண்ணம் அவர்க்குமுண்டெனக் காட்டுமாறு கருதியது இச்செய்யுளாகலின் இவ்வாறுரைகூறியதாம். இதனானே யோகியர்க்கும் சிவாலயசேவை வேண்டற்பாலதன்றி எள்ளற்பாலதன்றெனக் காட்டியதாம்.

4. இருஞ் சுரபிக்கெங்கு முருக்காண வொண்ணாத......அன்பர்க்கே:— ஆன்மார்த்தம் பரார்த்தம் பாவனையென்ற இலிங்கங்களினன்றி அருளாலறிந்து அன்பே சிவமாகக் கண்டு அறிவில் வழிபடுவர் ஞானியர் என்பதும்,

அவர்க்கும் கறவைப்பசுவின் உடம்பெங்கணுஞ் செறிந்திருந்தும் கன்றைக் கண்டவிடத்து முலைவழிப்பெருகும் பால்போல் திருக்கோயிலிற் செறிந்துள்ள திருவுருவங்களினும் மெய்யன்பர் குழாத்தினும் பிறயாவற்றினும் வெளிப்பட்டுக் கருணைவெள்ளமாகவே தோன்றிநின் றருள்செய்வ னென்பதுங் காட்டியதாம். இதனால் ஞானியர் முத்திறத்திருமேனியும் கடந்த அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்த சிவனைப் புறம் அகப்புறம் அகமாய தொழில் யாதுமின்றி அறிவுத்தொழில்மாத்திரையாய் வழிபாடு செய்வராதலின், அவர்க்குத் திருக்கோயிலில் யாவும் அன்பும் அருளுமாகக்காண, முதல்வன் அறிவாய் அருளுவன் என்றதாம்.

திருக்கோயிலிற்கண்ட திருவுருவங்களும் மெய்யடியர்கூட்டமும் அங்கமாகத் திருக்கோயிலே பெரும்பசுவாகிய இறைவனுகக் கன்றைக்கண்டவிடத்து அதன் முலையில் விம்மியொழுகும் பால்போல மெய்ஞானியைக் கண்டவிடத்துச் சிவ இலிங்கத்தினின்றும் கருணைவெள்ளம் பிரவாகிக்குமென்பதும் அவ்வெள்ளத்துணின்று சிறிதேனுந் திளைத்தார்க்கே யனுபவமாதலன்றிக் கூறிவிளக்கற்பாற்றன்று என்பது தில்லையிலும் கதிர்காமத்தும் பிறதிவ்விய தலங்களினும் சென்றுகண்டார்க்குப் புலனும்.

இரும்சுரபி - மேன்மையுற்ற கறவைப்பசு. சகலதேவர்களையும் தன்னுடம்பிற் கொண்டுள்ளதாய் உலகில் யாவர்க்கும் உயிர் நிலையற்பால அமிர்தமளிப்பதாய்ச் சர்வதோஷத்தையும் சுத்திசெய்வதாய் மலநீக்கத் தறிகுறியாந் திருவெண்ணீற்றுக்குபாதானமாய் இறைவனுடற்கு ஆனஞ்சுதவுவதாய் இன்னும் பலப்பல மேன்மைகளுமுடையது பசுவென்பது வேதாகமத்துணிபாம். பசுவின்பெருமையா னுயர்ந்ததே பரதகண்டமென்பதும், பசுவே பசுக்களாகிய எமக்குப் பசுவாந்தன்மைவிளக்கிப் பசுபோதமறற்குரிய சாதனைகட்கின்றியமையாத தென்பதும், புனிற்றுக்கன்றில் அதுகொண்ட பரிவும் அன்பும் பரமன் எம்மாட்டுக்கொள்ளும் தலையாயவருளுக்கும்அன்பிற்கும் உவமையாதலும் புராணங்களுள்ளும் அகத்தநுபவத்துங் காணலாகும்.

உருக்காணவொண்ணுதபால் - உருவம் அருவுருவம் அருவம் என்ற எத்திறத்தும் காட்டவொண்ணுதுநின்ற அறிவைச்சுட்டியதாம். இதனுனே ஞானியர்க்குஞ் சிவாலயசேவை வேண்டற்பாலதன்றி எள்ளற்பாலதன்றென்றதாம். ஞானியர் பற்றற்றருளே கண்டிருப்பினும் இச்சூத்திரத்துக்கூறவுற்ற முறையானே யவர்க்கும் வேண்டியசாதனைகளுள் சிவாலயசேவை முக்கியமாயது காட்டித் திருக்கோயிற் பெருமையும் இலிங்கசேவையின் விரிவும் விளக்கியது இச்செய்யுளென்க.

திருக்கோயில் அமைப்பும் அதனமைப்பு விளக்கமும் அத்துவாவிரிவிற்றெருகுத்து விளக்கியதுநோக்குக. (செ. 262 சூ. 4 பார்) மேல்விரிவு சிவக்ஷேத்திராலய மகோற்சவ உண்மைவிளக்கம், ஞானசித்தி, சிவாகமங்களிலும் காணலாகும்.

## மூன்றாமதிகரணம்.

திங்கண்முடியாரடியா ரடியோமென்று திரிந்திடுவோர்சிவஞானச் செய்தி யுடையோர் என்பது மூன்றாங்கூறு. (326-328). இக்கூற்றானே வாதனை மலந் தாக்குறாவண்ணம் மெய்யன்பர் கூட்டத்துப் பயின்று சங்கமலிங்க சேவைகள் செய்தொழுகற்பாலராகும் சிவஞானியர், மேலும் குருவடிவத்திலே மலமகற்றும் முதல்வன் என்று மியாங்கணும் செறிந்திருக்குமதுகண்டு குருசேவை செய்யற்பாலர் என்பது கூறுமுகத்தானே குருவிலக்கணமும் குருசேவைப் பெருமையும் பயனுங் காட்டப்படுகின்றது.

இக்கூற்றிலடங்கிய விஷயங்கள்:—

1. குருவிலக்கணம் (ஞானகுருவே மெய்க்குரு) (**326**).
2. குருசேவைப்பெருமை (குருவினின்றியமையாமை) (**327**).
3. குருசேவைப்பயன் (அத்துவிதப் பேரின்பப்பேறு) (**328**).

### 1. குருவிலக்கணம்.

**326.** ஞானயோ கக்கிரியை சரியை நாலு
　　நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரியன்
ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்
　　யோகிகிரி யாவான்ற னொண்கிரியை யாதி
ஆனவிரண் டினுக்குரியன் சரியையினி னின்றோ
　　னச்சரியைக் கேயுரிய னாதலினா லியார்க்கும்
ஈனமிலா ஞானகுரு வேகுருவு மிவனே
　　ஈசனிவன் றனென்று மிறைஞ்சி யேத்தே.

(இ - ள்). ஞானம் யோகம் கிரியை சரியை நாலும் நாதன் தன் பணி - ஞானம் யோகம் கிரியை சரியை என்னும் நான்கு சாதனைகளும் சிவனதடிமைத் தொழில்களேயாக. இவற்றி னொழுகுவோரும் சிவனடியார்களேயாவர்,—ஞானி நாலினுக்கும் உரியன் - அவருள் ஞானசாதனை செய்வோர் ஞானம் யோகம் கிரியை சரியையென்னும் நான்குபணிகளையும் பூணற்பாலர்,—யோகி ஊனம் இலா யோகம் முதல் மூன்றினுக்கும் உரியன் - யோகசாதனை செய்வோர் குற்றமற்ற யோகம் கிரியை சரியையென்னும் மூன்று பணிகளுமே பூணற்பாலர்,—கிரியாவான் தான் ஒண்கிரியை ஆதி ஆன இரண்டினுக்கும் உரியன் - கிரியாசாதனை செய்வோர் சிறந்த கிரியை சரியை என்னும் இருவகைப் பணிகளுமே பூணற்பாலர்,—சரியையினில் நின்றோன் அச்சரியைக்கே உரியன் - சரியா சாதனை செய்து வருவோர் அந்தச் சரியைப் பணி ஒன்றுமே பூணற்பாலர்,—ஆகலினால் யார்க்கும் ஈனம் இல்லா ஞான குருவே - ஆகையினாலே முத்திப்பேற்றை விழையும் பக்குவர் யாவர்க்கும்

ஞானகுருவே வேண்டிற்று,—குருவும் இவனே - அத்தகைய மெய்க்குருவா வானும் சிவஞானியே.—ஈசன் இவன்தான் என்றும்-எனவே பக்குவநோக்கி வந்து மலமகற்றும் பரமாசாரியனாகும் சிவனும் இந்த ஞானகுருவே என்று தெளிந்து,—இறைஞ்சி ஏத்தே - அத்தகை ஞானகுருவை வாதனைமலந் தவிர்க்கவேண்டிச் சிவஞானியரும் வணங்கிப் போற்றி யொழுகற்பாலர்.

குறிப்பு. 1. நாதன் றன்பணி - இறைவனது அடிமைத்தொழில், இறைவனால் அருளப்பட்ட நெறி என்பதுமாம்.

2. ஞானி நாலினுக்கு முரியன் - ஞான சாதனையில் நிற்போன் மற்றை மூவகையோரினும் மேலாம் படியில் நிற்றலான் அவ்வவர் பணிகளையுஞ் சாதித்தற்பாலன். எனவே தன்கீழாயோர்க்கு அறப்புகட்டி மேனெறியி லொழுக்கவல்லன் என்றதுமாம். இதற்கு "உலகின் மருவாத இன்பத்துள் வைத்த குருவினுபகாரத்தைக் கருதி நால்வகைத்தொழிலும் ஞானி செய்தலே கடப்பாடென்பது உட்டொழில் செய்வார் புறத்தொழிற்கு முரியரென்னு முறைபற்றியும், ஏனையோர் தத்தந் தொழிற்கே உரியரென்பது புறத்தொழில் செய்வார் உட்டொழிற்குரிய ரல்லரென்னு முறைபற்றியு முணர்ந்துகொள்ளப்படுவன" எனத்தெரித்து விளக்கி இதனானே சரியையாளரைப்போல ஞானி வழிபடுத லெற்றுக்கென்ற ஆசங்கை தவிர்ந்ததாகக் காட்டியுள்ளார் சிவஞானமுனிவர்.

3. ஊனமிலாயோகம், ஒண்கிரியை: - சிவயோக சிவகிரியைகளைப் பிரித்துக்காட்டியவாறு.

4. யார்க்கும் ஈனமிலா ஞானகுருவே - முத்திவேண்டிய பக்குவர் யாவர்க்கும் ஞானமே வேண்டப்படுதலின் ஞானசாதனையில் நிற்கும் குருவே அவர்க்கு வேண்டப்படும் என்றது. இதற்கு ஞானகுருவே குருவும் எனப் பதச்சேதஞ் செய்து "நால்வகைப் பாதத்தினிற்கும் மாணாக்கர்க்கும் ஆசிரியன்மார் உபதேசித்தற்கட்படுமுரிமையு மிவ்வாறே வைத்துணர்ந்து எல்லார்க்கு முபதேசித்தற்குரிய ஞானகுருவே தலையாயகுரு" எனக் கூறுவர் சிவஞானமுனிவர்.

5. குருவும் இவனே - மெய்க்குருவாவான் ஞானியேயன்றி மற்றையோரன்று என்றது. இதனாற் குருவிலக்கணம் கூறியவாறு.

6. ஈசனிவன்றான்-பக்குவநோக்கிவந்து மலநீக்கஞ்செய்யும் பரமாசாரியனாகிய முதல்வனும் இந்த ஞானகுருவே என்றது. இதனானே குருவடிவத்திலிறைவனைக் கண்டு வழிபடல் வேண்டுமெனக் காட்டியது. "அஞ்செழுத்தினுருவாகி யறிவுமாகி யாதிநடுவீறாகி யநாதியாகிச், செஞ்சடையிற் கொன்றை தும்பை யணிந்தோனாகித், தேனாகிப் பாலாகிச் செகமேழாகி, மஞ்சுலவுங் குழலுமையாள் பாகனாகி மகிழ்ச்சியுட னெனையாண்ட குருவுமாகி வஞ்சமறத்தொழுமடியாருளத்தின் மேவும் வள்ளறனைப் பணிந்தேத்தி வண

ங்குவாமே" என்றதுமிது குறித்தது நோக்குக. ஈசனிவனென்றதில் இவன் என்பதைப் பகுதிப்பொருள் விகுதியாகக் கொண்டு திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியைக் குறித்ததாகக் கூறி இச்செய்யுள் "திருவேடமாலயங்களெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சுதற்கட் படும் விசேடம் கூறிய" தெனக் கொள்வார் சிவஞானமுனிவர்.

இச்செய்யுளானே ஞானகுருவே மெய்க்குருவென்றும், அவர் மலபரிபாக நோக்கிவந்தருளும் முதல்வனின் வேறல்லரென்றும் காட்டிக் குருசேவையின் இயல்பு கூறவுற்றுத் "திங்கள்முடியார் அடி ஆர் அடியோம் என்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடையோர்" என்பது விளக்கியது காண்க.

பொழிப்பு. ஞானம் யோகம் கிரியை சரியை என்னும் நான்கும் இறைவனது திருவடிப் பணிகளாக இவற்றைப் பூண்போர் சிவனடியரேயாவர். இவருள் ஞானி நால்வகைச்சாதனைக்கு முரித்துடையன். ஏனையோர் தத்தம் படிக்குக் கீழுள்ளவற்றிற்குரியர். ஆகையால் முத்திவிழையும் யாவர்க்கும் ஞானகுருவே வேண்டப்படுதலால் சிவஞானியையுள்ளிட்ட யாவரும் தத்தம் ஞானகுருவை முதல்வனாகக் கண்டு வழிபடற்பாலர்.

2. குருசேவைப் பெருமை (குருவினதின்றியமையாமை).

**327.** மந்திரத்தான் மருந்துகளான் வாய்த்தவியோ கத்தான்
　　மணியிரத குளிகையினான் மற்று மற்றுந்
தந்திரத்தே சொன்னபடி செய்ய வேத
　　சகலகலை ஞானங்க டிரிகால ஞானம்
அந்தமிலா வணிமாதி ஞானங்க ளெல்லா
　　மடைந்திடுமா சானருளா லடிசேர் ஞானம்
வந்திடுமற் றென்றாலும் வாரா தாகு
　　மற்றவையு மவனருளான் மருவு மன்றே.

(இ - ள்). மந்திரத்தான் - மந்திரங்களாலும்.—மருந்துகளான் - மருந்துகளாலும்,—வாய்த்த யோகத்தான் - சிறந்தயோகத்தாலும்,—மணி இரத குளிகையினான் - மணியாலும் இரசக்குளிகையினாலும்.—மற்றும் மற்றும் தந்திரத்தே சொன்னபடிசெய்ய - வேறு வேறு சாத்திரங்களிலே சொன்னபடி செய்தலாலும்,—வேதம் சகல கலைஞானங்கள் திரிகால ஞனம் அந்தமிலா அணிமாதி ஞானங்கள் எல்லாம் அடைந்திடும் - நான்குவேதங்களை விளக்குமறிவும் சகல கலைஞானங்களைத் தெரியுந் தெளிவும் முக்காலங்களையு மறியும் திருட்டிக்யானமும் இவைபோன்ற பிறஞானங்களு மடையலாகும்.—ஆசான் அருளால் அடிசேர் ஞானம் வந்திடும் - ஆயின் குருவின் திருவருளானே திருவடிப்பேறாகிய முத்திக்குவழியான மெஞ்ஞானம் வந்துதிக்கும்,—

மற்று ஒன்றாலும் வாராதாகும் - வேறொருவகையானும் அது வருமாறில்லை, —மற்று அவையும் அவனருளால் மருவும் அன்றே-முன்கூறிய வேதவித்தை முதலிய ஞானங்கள்தாமும் குருவருளால் வரற்பாலவேயாம். (ஆகையால் யாவர்க்கும் குரு இன்றியமையாது வேண்டப்படக் குருசேவையும் வேண்டிற்று.)

குறிப்பு. 1. மந்திரத்தான் மருந்துகளான் ........எல்லாமடைந்திடும்:- மந்திரம், மருந்து, அட்டாங்கயோகம், மணி, இரதகுளிகை முதலிய யாவும் அறிவு தருவனவேயாயினும் அவை பாசஞானத்தையேயுதவிப் பல்வகைச் சித்திகளில் முடியுமேயன்றிப் பதிஞானம் பயந்து முத்தியின் முடியாவென்றது. வேத அறிவு கலைஞானத்தெளிவு திரிகாலதிருட்டி அணிமாதி சித்தியாவும் பாசஞானமாமென்பது முன் ஒன்பதாஞ் சூத்திரத்துக் கூறியது நோக்குக. (செ. 293 - 294 பார்). மந்திரம் முதலியன தனித்தும் சேர்ந்தும் வேத அறிவு முதலியவற்றைத் தரும் என்பது ஒவ்வொன்றனோடும் ஒட்டி அநுபவத்திலறிதற்பாற்று. மணி - மருந்துக்கல். இரசமணியெனக் கொண்டு மணியாகிய இரசக்குளிகையெனலுமாம்.

2. இச்செய்யுளானே உலகில் அறிவென்றும் ஞானமென்றும் பொதுவில் வழங்கும் அறிவு மெய்யறிவன்றென்பதும், அது சித்திகளையுதவுமென்பதும், அது மந்திரம், மருந்து, யோகம், மணி, இரதகுளிகை முதலியவற்றுள் ஒன்றானும் பலவானும் பெறலாகுமென்பதும் காட்டி, அதன் சிறுமை கூறித் திருவடிஞானமொன்றே முத்திகூட்டுமென்பதும் அது குருவருளாலே பெறற்பாலதென்பதும் தெரிந்து, ஞானகுருவே சித்தி முத்தி யிரண்டற்குமாகிய ஞானமுதவு மாற்றலுளனாகையால் அவனதின்றியமையாமை காட்டியதாம். இவ்வுண்மை, இக்காலத்துக் கல்வியெனவும் கலாசாலையெனவும் புனைந்துரைபடைத்துப் பௌதிக லௌகீக அறிவு மாத்திரமே புகட்டி, பெறுதற்கரிய மானுடயாக்கையைப் பெற்றதன் பயன் அதனைக்கொண்டு நிலையிலா வாழ்வில் நிலையிலாப் பொருளைத்தேடி நிலையிலாவுடலையும் அதன் போக போக்கியங்களையும் பெருக்குவதேயென வெண்ணி, மெய்யறிவும் மெய்க்கல்வியுந் தெளியாது, தெளிந்தவர்வாய்க் கேளாது, கேட்டோரோடு கூடாது திரிந்து வாணாளை வீணாக்கி லௌகிக விற்பத்தி யந்திரங்களேபோன்றுழலும் நம்மனோர் பலர்கரும் அத்தியாவசியம் தெரியவேண்டியதொன்றென்பதும், அவ்வாறன்றி ஞானகுருவை நாடி மெய்க்கல்வி கற்றலே எம்பெருங் கடனுமென்பதும் உய்த்துணரக்கிடந்தது.

பொழிப்பு. மந்திரமாதியவற்றான் வேத அறிவு முதலிய பெறலாம்; திருவடிஞானமோ குருவருளாலேயே பெறற்பாலது. அவனருளால் மற்றைய அறிவுமே வருமாதலின் குரு யாவர்க்கும் இன்றியமையாது வேண்டப்படும்.

3. குருசேவைப்பயன் (அத்துவிதப் பேரின்பப்பேறு.)

**323.** பரம்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்றும்
அரன்றருஞ்சீர் நிலையெல்லா மிவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே யவனிவன்றா னாயே
இரங்கிவா ரணமாமை மீனண்டஞ் சினையை
இயல்பினொடு பரிசித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போற்சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே.

(இ - ள்.) பரம் பிரமம் இவன் என்றும் - அவாங்மன கோசரமாய் நின்ற சொரூபசிவமே இக்குருமூர்த்தி யெனக்கொண்டும்,—பரசிவன் தான் என்றும் - பரையோடு கூடிய சுத்தசிவனே இக்குருமூர்த்தியெனக் கொண்டும், —பரஞானம் இவன் என்றும் - பரையோடு கூடி அறிவாய் விரிந்த இலய சிவனே இக்குருமூர்த்தி யெனக் கொண்டும்,—பராபரன் தான் என்றும்— பரையோடுகூடி இச்சையாய்விரிந்த போகசிவனே இக்குருமூர்த்தி எனக் கொண்டும்,—அரன் தரு சீர் நிலை எல்லாம் இவனே என்றும் - பரையோடு கூடித் தொழிலாய் விரிந்த அதிகார சிவனே இக்குருமூர்த்தியெனக் கொண் டும் கருதி,—அருட்குருவை வழிபடவே - மெஞ்ஞானமருளிய குருமூர்த்தி யைச் சேவைசெய்தொழுகவே,—அவன் இவன் தான் ஆயே இரங்கி - அத் தகைய ஐவேறவத்தையி னறியப் படும் முதல்வனே இக்குருமூர்த்தியை அதிட்டித்து நின்று கருணைபூத்து,—வாரணம் ஆமை மீன் அண்டம் சினையை இயல்பினொடு பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் பரிந்து இவைதாம் ஆக்குமா போல் - கோழியும் ஆமையும் தம்முட்டையையும் மீன் தன் சினையையும் முறையே பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் பரிவினால் ஓடுமுதலிய ஆவரணங் களினீக்கித் தம்வண்ணமாக்குமாறு போல,—பரிசித்தும் சிந்தித்தும் பார்த் தும் தான் - பரிசித்தல் நினைத்தல் பார்த்தலாகிய தீக்கைகளைச் செய்தே மாயாகன்ம ஆணவ ஆவரணங்களை நீக்கி,— சிவமே ஆக்கும் - சிவனும் வண் ண மருளுவன்.

குறிப்பு. 1. பரம் பிரமமிவனென்றும்......நிலையெல்லாமிவனே யென் றும்:—ஈண்டுக் கூறிய சிவபேதத்திற்கு மேற்காட்டியவாறன்றி முன்னுரை யாசிரியர் கூறியவாறு தெரிக்குதும்.

(க.) பரம் பிரமம் - குணநாமக் கிரியைகளொன்று மின்றி நிர்விகற்ப ஞான சொரூபமாகப் பெரிதாய் நின்ற சிவத்துவ அ[illegible]தை (சிவாக்). பரம் - சுத்த சிவன்; பிரமம் - சுத்த சிவமத்திய நிர்த்தசிவம் (ஞானப்). சொரூபசிவம் (சிவஞான).

(உ.) பரசிவன் - பராசத்தி தோன்றிச் சிவனென நின்ற நாலு சத்திகளுந் தன்னிடத்திலுண்டாகச் சுத்தமாக நின்ற அவதாரம் (சிவாக்). இருபர சிவனெனுமிலய சிவன் (ஞானப்). தடத்தசிவம் (சிவஞான).

(ங.) பரஞானம் - ஞானசத்தி மூர்த்திமானு யான்மாக்களுடைய கன்மங்களையு மதின் பக்குவங்களையும் பாரதந்திரியங்களையுங் கண்டு நிற்குமவசரம் (சிவாக்). ஞானக்கிரியாப் பிரவிர்த்திமானாகிய சதாசிவனென்னு மதிகார சிவன் (ஞானப்). ஆகுபெயராய் நின்று பரஞானத்தையுடையோர் (சிவஞான).

(ச.) பராபரன் - பரமாகிய சுத்தா சுத்த மாயைக்கு மேலாய்க் கிரியா சத்தி மூர்த்திமானாய்ச் சுத்த மாயையில் காரியங்களை யுண்டாக்கு மவசரம் (சிவாக்). அநாகத சிவனென்னும் போகசிவன் (ஞானப்). ஏனைத் தாபர மூர்த்தம் (சிவஞான).

(ரு.) அரன் தருஞ்சீர்நிலையெல்லாம் - சதாசிவன் மகேசுவரன் உருத்திரன் என்னு நாமங்களையுடைத்தாய்ச் சுத்தாத்துவ மிசிராத்துவ அசுத்தாத்துவ கிருத்தியங்களைப் பண்ணுவது (சிவாக்). மகேசுரன் உருத்திரன் மால் பிரமன் முதற் சிவபேதமனைத்தும் (ஞானப்). அறுபத்து மும்மை நாயன்மார் முதலிய சிவபத்தர் பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளிமறையும் மூர்த்தங்கள் எல்லாம் (சிவஞான).

இவற்றை எவ்வாறு கூறினும் சிவபேதம்யாவும் குருமூர்த்தத்தி லடங்கியதாகக் கண்டு வழிபடலே இச்செய்யுள் குறித்த தென்பது தெளியக் காண்க.

2. அவனிவன் றானாயே இரங்கி - குருமூர்த்தமிடமாக நின்று கருணையாலருள்புரிவது பரம் பொருளே யென்றது. சகலர்க்குக் கன்ம வொப்பிற் றரையிலாசான் மூர்த்தி யாதாரமாகித் தரித் தொழிப்பன் மலம் (செ 254 பார்.) "மும்மல முடைய சகல னீமொழியி, னம்மல நீக்கி யாட்கொண்டருள, மானைக்காட்டி மான்பிடிப்பவர்போல் மானுடவடிவாய் வந்தனம்" என்ற திருச்செந்தூரகவல் நோக்குக. அவ்வருமைத் திருவகவலிற் சிற்றம்பலநாடிகள் குருவாய் வந்திறைவன் தமக்குபதேசித்த முறை கூறிச் சைவசித்தாந்த வுள்ளுறை விரித்துத் தெளிவாய்க்காட்டியது யாவரும் நோக்கி, அதனை வாசித்து நித்திய உபாசனையாக் கொண்டு தியானமுற்றி மெஞ்ஞானந் தலைக்கொள்ளக் குருவருள் கூடுவது சுலப சாத்தியம் என்பது அநுபவத் துணரற்பாலது.

3. வாரணம் ஆமை மீன்......தாமாக்குமாபோல்:—கோழி முட்டையின்மே லடைகிடந்து பக்குவ நோக்கி முட்டையைப் பிரித்துக் குஞ்சுகளை வெளிப்படுத்துவதும், ஆமை கடலின் கரையிலே சேமித்த தன் முட்டை

யைத் தான் தூரவிருந்து நினைத்திருப்பதனுற் குஞ்சாக்குவதும், மீன் தன் சினையைக் கண்ணுலே நோக்கி நின்று குஞ்சாக்குவதும் கூறியதாம். இவை மூன்றும் ஞானகுருவின்பரிசதீக்கை என்னும் மெய்தீண்டற்கும், மானசதீக்கையென்னும் அகத்திருத்துவதற்கும், சட்சுதீக்கை யென்னும் நோக்கிற் படுத்துவதற்கும் உவமையாயின. "அன்னைதன் சிசுவை யைய ளுமைமீன் பறவைபோலத் தன்னகங் கருதிநோக்கித் தழுவி" என்பர் கைவல்ய நவநீதகாரர். தாமாக்குதல் - தம்வண்ணமாக்குதல் எனவே மூடியிருந்த புறமாசும் அகமாசும் நீக்கித் தீயிரும்பைச் செய்வது போற் தன்வண்ணமாக்குதல் என்றதாம் (செ. 303. பார்).

4. சிவமே யாக்கும் - சிவமாம் வண்ணமாக்கும் என்றது. அத்துவிதப் பரமுத்தி நிலை கூட்டும் எனலுமாம். ஏகாரத்தினுலே சிவகுணசங்கிராந்தி சமுற்பத்தி சமாவேச சிவசம மென்னு மூர்த்திக ளல்லாமல் சிவதாதாமிய மென்ற தென வறிக. (சிவாக்).

இச் செய்யுளானே சிவஞானத்தைச் சித்திக்கு மிம்மெய்ந்நூல் முடிபிலே குருவின் பெருமை கூறிக் குருவே யாவர்க்கும் வேண்டப்படுமெனக் காட்டியவாற்ருல், சிவஞானசித்தி ஞானகுருவானேயா மென்பது தெற்றெனத் தெரித்தது காண்க. மேலு மிவ் வதிகரணத்திலே "வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும்" என்ற தாயுமானவர் திருவாக்குப்படியே சைவராகிய நம்மவரும் மற்று மார்க்கர்களுஞ் சாதிக்குஞ்சாதனைக ளியாவும், தமதுறைப்பின் வண்ணஞ் சித்தவிருத்தி விளைக்க, அவ்விருத்தி உண்மை நாட்டத்தைக் கிளர்த்த, அந்நாட்டத்திடைவிடா தியங்கிவரவே, சற்குரு வாய்ப்பதற்கே யுற்றவாமெனவும், அத்தகைச் சற்குருதான் இறைவன் நம் மனோர்க்கு வார்த்தை சொல்லும் வாயிலாமெனவும், அவ்வாயிலா னன்றிப் பிறிதெவ் வாயிலானும் மெஞ்ஞானம் கூடல் முடியாதென்றும் தெளியக் காட்டியதும், அதுபற்றி யாவர்க்கும் குருவே கண்கண்ட ஈசனுக, அவனைச் சேவைசெய்தலே சிவனடி சேவையாமெனவும், ஞானியரும் தம்மைவாதனு மலந் தாக்குருவண்ணம் குருசேவை செய்து குருவழியொழுகி வருவர் என்பதும் கூறியது நன்குதெளிந்து மெய்கண்ட சற்குருவை நாடிப்புகழ்பாடிக் கொண்டாடிப் பதம் பேணி வாழ்தல் மக்கள் யாவர்க்குங் கடனெனவுங் கொண்டு அவ்வாற்ருனே யத்துவிதப்பரமுத்திப் பேறெய்தற் கிப்பிறவியே போதுமெனவும், இனிப்பிறவி வேண்டிற்றிலவெனவுந் திடங்கொண்டு சாதித்து ஞானநூல்கற்றுக் கேட்டுத்தெளிந்து சிந்தித்து நிட்டைகூடி வாழ்தல் வேண்டுமென்பதும் உய்த்துணர்ந் துய்குக.

பொழிப்பு. சொரூபம் சுத்தம் இலயம் போகம் அதிகாரம் என்னும் ஐவகையானும் அறியக்கிடந்த முதல்வனே குருமூர்த்தமாம் எனக்கொண்டு ஞானகுருவை வழிபட்டொழுக, முதல்வனே அக்குருமூர்த்தியை யதிட்டித்து நின்று பரிசம் மானசம் நயனமாதிய தீக்கையால் மலமகற்றித்தானும் வண்ணஞ்செய்து அத்துவிதப் பரமுத்தியின்பந் துய்ப்பிப்பன்.

சிவஞானசித்தியார் சுபக்கப் புத்துரை முற்றிற்று.

---

அருணந்திதேவர் அடியிணை வாழ்க.

மெய்கண்டசந்தான சிவநெறி மேலோங்குக.

திருச்சிற்றம்பலம்.

---

PRINTED AT THE SOTHIDAPRAKASA PRESS, KOKUVIL, JAFFNA.

# செய்யுண் முதற் குறிப்பகராதி.

## நூற்பொருளகராதி.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 14 | சயமத்தார் | சமயத்தார் |
| 13 | 27 | ஸிற்சத்தி | ஸிற்சத்தி |
| 31 | 4 | காரியமாகை | காரியமாகாமை |
| | 5 | விசேடிப | விசேடிய |
| 45 | 18 | சோர்விலாகிற்பது | சோர்வில்லா...கிற்பது |
| 55 | 2 | அக்காரணம்பற்றி | அவ்வாறு முதற்காரணமாதல் பற்றி |
| 91 | 10 | தீயை | தீமை |
| 111 | 3 | அத்துவிதமாயும் அவற்றின்வேறு யும் | அத்துவிதமாய் [illegible] உடனு யும்வேறாயும் |
| 116 | 14 | (I) | (1) |
| 120 | 11 | எறிடும் | ஏறிடும் |
| 122 | 17 | வினையோ... | "வினையோ... |
| 123 | 36 | முறையோடே | முறைமையோடே |
| 131 | 20 | இலவிடாதிவை | இலவிடாவிவை |
| 137 | 17 | தரணியொடு | தரணியோடு |
| 174 | 16 | குணமும் | குணமும் |
| 176 | 4 | வெள்ளை | வெண்மை |
| ,, | 10 | மாகத | மாகத் |
| 240 | 27 | அற-வீடு | அறவீடு |
| 249 | 11 | சாறு | காறு என்பது முதற்கூறு |
| 270 | 11 | கின்றிடாது | மின்றிடாது |
| 274 | 30 | தீகை | தீக்கை |
| 275 | 2 | யனைய | யணைய |
| 296 | 36 | வந்தவரினீங்கி | வந்து |
| 317 | 19 | சரிகையிற்கிரியை | சரியையிற்சரியை |
| 320 | 19 | மலாத்தரு | மலர்த்தரு |
| 322 | 32 | அருகிய | அருக்கிய |
| 324 | 11 | 372 | 273 |
| 326 | 26 | ழித்தலை | ஒழித்தலை |
| 352 | 11 | உயிரப்பற்றை | உயிர்ப்பற்றை |
| 357 | 26 | மௌனனிலைமேல் | [illegible] |
| 359 | 1 | கீழ்கிற்போரியல்பு | கீழ்மைப்பிணியல்பு |
| 364 | 29 | பான்மயரே | பான்மையரே |
| 366 | 9 | பிரபஞ்சம்மும் | பிரபஞ்சமும் |
| 375 | 12 | னனையரவம் | னணையரவம் |
| 379 | 6 | மானத | ஆக்கினேய |
| 396 | 4 | முடைடனு | முடனு |
| 404 | 34 | அரண் | அரன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 416 | 1 | யாயாமல | எல்லாமலங்களும் |
| 427 | 29 | சுத்தசைவவாதி | பேதவாதி, சிவசமவாதி |
| ,, | 30 | சிவசமவாதி | அருவசிவசமவாதி |
| 452 | 34 | பூமி | பூழி |
| 459 | 2 | குஞ்சாக்குவது | குட்டியாக்குவது |

மேலும் 376 முதல் 383 எனக்காணும் பக்கங்களை 369 முதல் 376 எனத்திருத்தியும்,

452-ம் பக்கத்து 325-ம் செய்யுளின் பொழிப்புரையாக "புறம், அகப்புறம், அகம், அறிவு என்ற மாத்திரையானே முறையே வணங்கும் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நெறிகளில் ஒழுகும் யாவர்க்கும் முறையே தூலம், சூக்குமம், அதிசூக்குமம், அருள் என்னும் வடிவங்களாகத் திருக்கோயிலுள் நின்று இறைவன் திருவருள் செய்யுமாற்றானே, யாவரும் இவ்வகைச் சேவை செய்தொழுக வேண்டும்" என்பதைச் சேர்த்தும் வாசிக்குக.